உ

சிவமயம்.

அருட்பெருஞ்ஜோதி-தனிப்பெருங்கருணை.

திருவருட்பிரகாசவள்ளலாரை

உபாஸனாமூர்த்தியாகக்கொண்டொழுகும்

காரணப்பட்டு-சமரஸபஜனை

ச. மு. கந்தசாமிபிள்ளையவர்கள்

இயற்றிய

# பிரபந்தத்திரட்டு

சென்னை - சமரசஞானசங்கத் தலைவர்

ஸ்ரீ-சண்முகானந்த சுவாமிகளால்

பார்வையிடப்பெற்று

புதுக்கோட்டை சமஸ்தானம், இராமசந்திரபுரம்

ஸ்ரீமான்,

தி. நா. முத்தையா செட்டியார்

F. R. S. A. அவர்களின் பேருதவியால்

சென்னை 'சூளை - ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

ரிஜிஸ்டர் செய்தது.] 1923 [ரூபா 2.



தீ. நா. முத்தையா செட்டியார்.

சிவமயம்.

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

# நூற்பிரிவு.

திருவருட்பிரகாச வள்ளலார் அருளிச்செய்தது.



ச-மு-கந்தசாமி பிள்ளையவர்கள் இயற்றியன.

| பெயர். | பக்க |
|---|---|


## இப்புத்தகம் விலைக்குக் கிடைக்கு மிடங்கள்.

சமரஸபஜனை.

காரணப்பட்டு-ச-மு-கந்தசாமி பிள்ளை,
நல்லாத்தூர் போஸ்டு,
புதுச்சேரி மார்க்கம்.

எஸ். பி. ராஜாராம்,
ஸன் ஆப் இந்தியா பிரஸ், சூளை,
சென்னை.

உ

சிவமயம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை.

ஒழிவிலொடுக்கநூலின்

# சிறப்புப்பாயிர விருத்தியுரை.



வெண்பா.

வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன்
வள்ளன்மலர்த் தாடலைமேல் வைத்துரைத்தா—னுள்ளத
தழிவிலடுக் குந்தேனை யன்பரெலா முண்ண
வொழிவி லொடுக்கநூ லோர்ந்து.

இச்செய்யுள் கருதிற்றியாதோவெனின்
இந்நூன்முகத் தாசிரியர் பெயர் முதலியவற்றைக் குறித்து
நிற்றலிற் சிறப்புப்பாயிர வொழுக்க முணர்த்தல்
கருதிற்றென்க.

வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன் - வள்ளன் மலர்த் தாடலைமேல்வைத்து - எ-து. வள்ளலாரென்னுந்திருப் பெயருடையவர் ஞானசாரிய நிருபராகிச் சமையவாதிகள் தருக்கச்செருக்குகள் பிற்பட்டொழியப்பேரருணெறியான் வெற்றிகொண்டு சீகாழியென்னுந் திருநகர்க்கண்ணே, மெய்ந்நெறிவிளங்க வீற்றிருந்தருளிய, திருஞானசம்பந்தப் பிள்ளையாரது, வள்ளற்றன்மையுடைய மலர்போலுந் திருவடிகளைத், தமது நன்முடிக்கண் ணேர்பொன் முடியாக வணிந்து.

ஓர்ந்து - உள்ளத்-தழிவிலடுக்குந்தேனை யன்பரெலாமுண்ண-வொழிவிலொடுக்க நாலுரைத்தான்—எ - து. அத்திருவடிகளினருட்டுணையாற் றத்துவங்களைத்துஞ் சடமென்றோர்ந்துணர்ந்தவற்றைக்கடந்து தற்காட்சியோடு திருவருட்காட்சியுஞ்செய் தங்கனம் வாதனையா னசைந்தெழும் போதந்தோற்று ததனை யத்திருவருளொளியினடக்கியாண்டு, மேன்மேலுமெழாநின்ற சிவானந்தத் தேனைத் தாமநுபவஞ் செய்தவாறதன் கணன்புள்ளபக்குவருஞ் செய்தற் பொருட்டச் சிவானந்தாநுபவ வந்தரங்க மெல்லாம் வெளிப்பட்டு விளங்க வொழிவிலொடுக்க மென்றோ ருபதேச முறையை யுரைத்தருளினர் என்றவாறு.

(வள்ளலென்னும் பெயர்.)

ஆசிரியர்க்குத் தாமுன்னிருந்த கிரியாசாரிய நிலைக்கண்ணவ் வாசாரிய மரபின்வழித்தாய் வந்தகாரண வபிடேகச் சிறப்புப்பெய ரென்க. அல்லதூஉம் பின்னர் ஞாநாசாரிய நிலைக்கட்டமதருண் ஞானநோக்கானியைந்த கண்ணுடைய வென்னுங்காரணவிசேடண மேற்கொண்டுநின்ற, விவ்வள்ளலென்னும் பெயரீண்டவ்விசேடண மிசையெச்ச நிலையினிற்ப நின்றதெனினு மமையுமென்க. இஃது வினைபண்பு முதலிய வடுத்ததொகைநிலைச் சொற்றொடராகாது தொகாநிலையாய்த்தனைத்தொடர் பயனிலையண்மைப் பொருளுணர்ச்சியின்றி யிடையிட்டுநிற்கத்தான் செய்யுண்முதற் கட்டனித்திருந் தமையி னூற்றலின்றாலோ வெனின்? அற்றன்று-கொடைமடங் குறித்தகுணங்காரணமாக வந்தவிவ்வள்ளலென்னும் பெயர் தன் னுறுப்புகளுட்கொடை குணம் புகழுழுகுவளமென்னு நல்வகை குறித்த பல்பொருடபகுதியாய வண்மையென்னு முதலுறுப்பா ஞசிரியர்க்குளவாய வக்கொடை முதலிய வருட்குணங்களைக்குறிப் பிற்புலப்பட விரித்தலிற் பொருளாற்றலுண்டென்க. அல்லதூஉம், இப்பெயர் உயர்பொருட்கிடனு யுடனிலைக் கூட்டாய் ஒருநெறி யசைத்தா யோரினந்தழுவிப் பல்வகைக் குறிப்பிற்படர்ந்து முற்றி யையு வண்ணப்பெருஞ்சொல்லாக நிற்றலிற் சொல்லாற்றலு முண் டென்க.

ஆயினிவ் வாசிரியர் பெயரிச்செய்யுளினிடைகடைகளினொன்றி னிறுத்தாது முதலடிமுதற்சீ ரெதுகைத் தொடைக்க ணிறுத்ததிற் குறித்ததி யாதோவெனின்? ஒன்றிரண்டெனக் கொண்டுறுமறை யாகம நன்றிருமுடியினடுநிலை நடாஅப்புலம்பெறுதத்துவ நியதி யிற்போந்துண் மலந்தெறுமறிஞர் வாழ்த்திப்பரவும் ஆசிரியர் சன் மார்க்கமுதலிய மார்க்க நான்கனுட் டலைமையிற் றலைமையாய வுத்தம சன்மார்க்கத்தின ரென்பது குறித்ததென்க. இங்ஙனமுத் தம சன்மார்க்கத்தின ரென்பதை யாசிரியர் கூறிய "இதுவென்ற தெல்லாம் போய் யென்று" னென்னுந் திருவெண்பாவாற் காண்க. இஃதின்னும் விரிக்கிற்பெருகும்.

குருராய னென்பது - திருஞானசம்பந்தப் பிள்ளையார்க்குச் சிறப்பிற் சிறப்பாய காரணப் பொராய் நின்று ஓதியுணர்ந்து பன் னூட் பலசாதனங்களின் முபன்று முபன்றுசாரியத்தன்மை யொரு வாறறிதிற்கிடைப்பப்பெற்று மோரோர் காலங்களினவத்தையைப்

பட்டு மயங்கு மற்றையாசாரியர்போலா தோதாமல் வேதாகமாதி களை முற்றுமுணர்ந் திறைப்போது மோர்சாதனங்களின் முய்ன்ற தின்றி ஞானசாரியவருளிலக்கணங்க ளனைத்துந் தாமே தம்பா னிரம்பிநிற்ப வமர்ந்தன ரென்பதூஉம் ஓதியுணர்ந்த வவ்வாசாரி யர்க் கெல்லா மவரவரறிவின்க ணருளுருவாய் நின்றறிவித்து மாசாரியவுருவாய் வெளிநின் றனுக்கிரகித்தும் நின்றனரென்பதூ உம்—திருநோக்கஞ் செய்தன்முதலிய வறுவகைத் தீக்கையானு மன்றித் தமது திருவுருவைக்காண்டல் நினைத்தன் மாத்திரையே பக்குவரல்லாரும் பக்குவராய்ப் பயன்பெறநின்ற திருவருட்பெரு மையுமென்பதூஉங் குறித்ததென்றுணர்க. இங்ஙனம் ஓதாமல் வே தாகமாதி யுணர்ந்தமை முதலியவற்றை யாசிரியர் கூறிய "தன் மையு முன்னிலையு" மென்னுந் திருவெண்பாவாற்காண்க.

அல்லதூஉம் - குருநாயனென்பது வாதுவென்ற சம்பந்தனேன் பதற்கு மேனிற்கவைத்த விதப்புக்குறிப்பாற் பிள்ளையா ரிவ்வவதா ரத்தின் மேனின்ற வவதாரத்தினுங் குமாரசற்குருவா யரனுர்க்கு மகத்தியனுர்க்கு முபதேசித்தருளிய வாசாரியத்தலைமையுங் குறி த்ததெனக்கொள்க.

(அருணகிரிநாதர்)

கட்டளைக் கலித்துறை.

> "தென்னவ னங்கனஞ் சூழ்காத் திரிநக சூலகரத்
> தென்னவ னங்கனந் தப்பத நீட்டினன் செல்வமுன்பின்
> றென்னவ னங்கநன் னீற்றுற் றிருத்திய தென்னவின்னந்
> தென்னவ னங்கனங் கைச்சிலைக் கூனையுந் தீர்த்தருளே."

என்றதனுற் பிள்ளையா ரிவ்வவதாரத்திற்கு மேனின்ற வவதாரத் திற் குமாரசற்குரு வென்பது காண்க.

கல்லாடம்—

பாடல்.

> உழன்மதிற் சுட்ட தழனகைப் பெருமான்
> வணங்கிநின் றேத்தக்
> குருமொழி வைத்தோய் குறுமுனிதேற
> நெடுமறை விரித்தோய்.

சித்தியார்—

பாடல்.

அருமறை யாகம மங்கமருங்கலை நூறெரிந்த வகத்தியனுக்கோத் துரைக்கு மருட்குருவாங்குருனை"—

என்பனவைகளா லரனுர்க்கு மகத்தியனுர்க்கு முபதேசித்த வாசா யத் தலைமையை யுணர்க.

ஆயிற் குருவேந்தனென்னுது குருராயனென்ற தெதுகுறித் தற்கோ வெனின்? நான்கன் வேற்றுமையா னடுத்து மிக்குயர் நெறிப் பொருண்மையின்வந்த காரகச்சிறப்பொருதலைத் தொடர் மொழிப் பெயராய விக்குருராய னென்பதன்கட் குருவென்பதின் முதனிலையெழுத்துத் தமிழியல்விதிப்படி மொழிக்கு முதலாகியும் ராயனென்பதன் முதனிலை யெழுத்துத் தமிழியல்விதியின்றி யாரிய வியல்விதிப்படி மொழிக்கு முதலாகியும்வந் திருவகையியலுங் கோடலி னிதனைத் தம்பெயராகவுடையபிள்ளையாருந் தமிழ்நூல் வடநூலென்னு மிருவகைநூற்கு முரியாரென்பதுகுறித்தற்கென்க. ஆசிரியர் மறைப்புலவன் தமிழ்க்குரிசில் சீகாழிச்சம்பந்த னென்ற தனு லிருவகைநூற்கு முரியாரென்பது காண்கவென்க. அல்லதூஉம் பொருள்வேறுபடாது சிறிதே வடிவு வேறுபட்டுநின்ற குருராயனென்பது தன்னையுள்ளூன்றி நோக்கினர்க் கிலைமறைகாய் போல் ஜாவென்னு முயிர்மெய்யோ டிருந்த தன்முன் வடிவமுட் கொண்டு விளங்கக்காட்டி நிற்கின்றதாகலி னிதனை யுடைய பிள்ளையாருந் தமது கடவுட்டன்மை வேறுபடா துத்தமபுருட வுருவங் கொண்டு நின்றதம்மை யன்பானுள்ளூன்றி நோக்கினுர்க்குக் குமாரசற்குரு வென்னும் பெயர்கொண் டளவிகந்த சூரியருதயம் போன் றொளிவீசுந் தம் முன்னுருவாய் தெய்வத்திருவுரு வுட் கொண்டு விளங்கக் காட்டி நின்றனரென்று குறித்தற் கென்பது மாமென்க.

(ஆளுடைய பிள்ளையார் புராணம்.)

## விருத்தம்.

மறையவர் திருவே வைதிகநிலையே வளர்ஞானப்
பொறையணிமுகிலே புகலியர்புகலே பொருபொன்னித்
துறைபெறுமணியே சுருதியினொளியே வெளியேவந்
திறையவனுமையா ளுடனருடரவெய் தினையென்பார்.

என்று மூவாண்டிற் பிள்ளையார் திருவருள் வடிவைக்கண்டு சீகாழி யுள்ளார் வியந்து கூறிய வாறுய விச்செய்யுளால் உள்ளூன்றி நோக்கினர்க்குத் தம்முன்னுருவைக் 'காட்டிநின்றன ரென்பது காண்கவென்க.

இனி யின்றியமையாக் காட்டுளதேற் காட்டுவதன்றி மற்றைய விரிப்பிற் பெருகும் என்க.

அல்லதூஉம்-குரு வென்பத னீற்றுயிர் மெய்யோடு ராயன் என்பதின் முதலுயிர்மெய் புணராப் புணர்க்கை யாய் நின்றதாகலி னிங்ஙன மானந்த வடிவராகிய பிள்ளையாருந் தாங்கொண்டருளிய மானிடத்திருவுருவோடு புணராப் புணர்க்கையாய் நின்றனரெனக் குறித்தற்கென்பது மாமென்க.

அல்லதூஉம் - குறிலிணைக் கெதிர் நெடில் குறிலெண்ணீடாக நிற்பவு மீற்றி னவ்வெண்ணீடின்றி யொற்று நிற்பவுந் தொடர்ந்த மொழியாகலிற் பிள்ளையாரும் பக்குவர்க்கு மறைப்பொருளாயு மதிபக்குவர்க் கநுபவப்பொருளாயு மிவ்விரண்டினுங் கலவா ததீதப் பொருளாயு நின்றனரென்று குறித்தற் கென்பது மாமென்க இங்ஙனம் குருராயனென்பதிற் கு வ்வென்பது இருள் ரு வ்வென்பது அருள் ராயனேன்பது விளங்கச்செய்கின்றேன் பொருளாம். இதனால் கு வ்வென்னு மசுத்தாவத்தையில் நின்றோரை ரு வ்வென்னுஞ் சுத்தாவத்தையிற் றும்நின்றவண்ண நிறுத்துகின்றோர் குருவாவர். இச்சுத்தாவத்தைக் காதாரனாகியு மதீதனாகியும் விளங்கி யிவ்வவத்தையினின்று மக்குருவாயினோர் தாழாதவண்ணம் அருள் செய்துநின்று அதீதப்படுத்துகின்றோன் ராயனவன் ஆகலி னித னுணு முணர்கவென்க

எழுந்தாதிப் பல்வகைக்குறிப்பிற் பொருணெறிப்பற்றி நின்ற நோக்கஞ் செறிவு நுட்ப மிங்கித மின்பங் கம்பீரஞ் சிறப்புறுதி முதலிய நற்குணந் தழீஇப சொற்புண ரீதென்றே யாசிரியரும் சரிதாதி நான்கினுக்கு மென்னுந் திருவெண்பாவி னிடைக்கட் குருராயனென் றிதன்பெருமை தோன்ற வைத்தனரென்க. இஃது இன்னும் விரிக்கிற் பெருகுமென்க.

வாதுவென்ற சம்பந்த னென்பதிற் பொதுவானே வாது வென்ற வென்ற தென்குறித்தோ வெனின்? எண்வகைக் குன்றத் தெண்ணாயிரவ ராய பாயுடுக்கைப் பறிதலைச்சமணர்க ளொருங்கே கூடித் தென்மதுரைக்கட் செந்தமிழ்ப் பாண்டியனை முன்னிட்டுச் செருக்காற் செய்த சுரவாதம் அனல்வாதம் புனல்வாதங்கள் பிற்படத் திருநீற்றானுந் திருவாக்கானும் வென்று திறல்கொண்டமை யன்றியும் பரசமய கோளரி, யென்று தானே யொலித்த திருச்சின்னத்தின் றெய்வப்பேரொலிகேட் டுளம்பொறு தெதிரிட்டு

மறித்த போதிமங்கைப் புத்தநந்தியின் பொய்த்தருக்கமும் புழுத் தலையும் பொடிபட்டழியவும் பின்னருள்ளதுபோன் றில்லதைப் பற்றிச் சாக்கியக் குழுவுட் டலைவனாய சாரிப்புத்தன் சிற்சிலவகை யாற் செய்த சமயவாதந் தலைதடுமாறவுஞ் செந்தமிழ் வேதத் திருமுறைதாங்கி மேம்படு மறிஞரான் வெற்றிகொண் டமையும் திருவோத்தூரின்கண் ணரனுக்கிடுபனை யாண்பனை யாயிற்றேயென் றசதியாடிய வமணக்குழூஉக்களின் வாய்வாதங் கண் மண்பட் டொழியத் தாந் திருவாய்மலர்ந்த திருக்கடைக்காப்பு ளோர் மொழியானே யவ்வாண்பனை பெண்பனையாகச் செய்து விறல் கொண்டமையுங் குறித்ததென்க.

அல்லதூஉம்-வாதென்ப திலக்கணையாகக்கொண்டு பெருமண நல்லூரின்கட் டிருமண நல்விழாவைத் தரிசிப்பான் வந்த மக்கட் கெல்லாந் தொன்று தொட் டிடைவிடா துடனிழற்போற் சூழ்ந்துள பிறவிப் பெருவாதுகளனைத்தும் வென்றதூஉம்-திருப்பாச்சிலாச்சிராமத்தின்கண் மழவன் மகளார்க் கடுத்த முயலக வாது வென்ற தூஉம் - மருகற்கண் ணோர்வசியனுக் கடுத்தவிடவாது வென்றதூஉம்-இவைமுதலியனவுங் குறித்ததெனினு மாமென்க. வெற்றிகொண்ட பொருட்டிறன் முதலியவற்று ளொன்றேனுந் தோன்றக்கூறா திலேசான வாது வென்ற தென்குறித்தோ வெனின்? பிறர்க் கிங்ஙனம் வேறல் தம்மானுந் துணைமையானும் பற்பலநாட் பற்பலவகையின் முயற்சிசெயினு முற்றா தெனினும் பிள்ளையார்க்குச் செந்தமிழ்மொழியுந் திருவாக்கானே யாண்டாண் டவ்வேறன் முற்றியதென்பது குறித்தென்க. வாது என்பது குரு ராயன் என்பதனோடுஞ் சம்பந்தனென்பதனோடுஞ்சாராது நடுநின்ற மையின் அத்துவிதநெறியினுஞ்சேராது துவிதநெறியினுஞ்சாராது நின்ற பதிதவாதிகளது பயனில் வாதமெனினு மமையுமென்க. எதிரேற்கப்பட்டெதிர்வினை கீழ்ப்பட மேற்கொள் வினையெழுச்சிப் பொருளின் வந்த வெல்லென்னும் பிறவினைப்பகுதியீ றடுத்த வென்ற வென்னும் பெயரெச்சஞ் சம்பந்த னென்னும் பெயர் கொண்டு முடிந்து இங்ஙனம் வெற்றிகொண்ட பருவம் பிள்ளையார்க் கிளங்குமாரப் பருவமெனக் குறித்ததென்க. என்னை; எச்சமென்ப திளஞ்சேய் மேற்றாகலின்.

சம்பந்தனென்பது பிள்ளையார்க்கு மூவாட்டைக்கண் மூவுலகம் புகழப்பொற்பொடு புணர்ந்த வற்புதத்திருப்பெயராகலின் ஆண்டு

பெருமான்றருளப் பிராட்டியா ரளித்த சிவஞானத் தெள்ளமுதருந்தியச் சிவஞானத்திற் குரிமை பூண்டமை குறித்ததென் றுணர்க. ஆயிற் சிவஞான சம்பந்தனென்னது சம்பந்தனென வைத்ததென் கொலோ வெனின்? சிவஞானமு மன்றிச் சிவானந்தமானந்தாதீத மென்பவைக்கு முரிமைபூண்ட தலைமை பற்றியும் அவற்றை யுலகுயிர்க் கிங்ஙன மென்றுணர்த்தி யுரிமை செய்விக்கு மாட்சிபற்றியு மங்ஙனம் வைத்ததென்க.

அல்லதூஉம் - சுருங்கச் சொல்லுதல் வனப்பினாற் சம்பந்தனெனவே சிவஞான சம்பந்தனென வுரிமைச் சிறப்பு வழக்காற்றானே தோன்றுமென வைத்ததெனினு மாமென்க. எங்ஙனமெனின்? இந்திரனென்பது இறைமைச்சிறப்பு வழக்காற்றேவேந்திரனையும் உடையானென்பது பொருட்சிறப்புவழக்காற் பொன்னுடையானையுங் குறிக்குமாகலினென்க. வள்ளன் மலர்த்தாளேன்னும் ஒருவகை வனப்பிருவகைச்சந்தி மூவகை மொழித்தொகைச் சொற் றொடர்க்கண் வள்ளலென்னுங் குணிப்பெயர் வினைமுதற் றொழிற்பயனுறப் படுமுடைமைக் குணப்பெயராய் நின்று பிள்ளையாரது திருவடிக டம்மை யடைந்தோர்க்கு வரையா தானந்தப் பேற்றையளித்து அவரைத் தாங்கிக் கோடலைக் குறித்ததென் றுணர்க.

அஃதே லானந்தப் பேற்றைத் தருதற்குந் தாங்கிக்கோடற்குங் கருத்தர் பிள்ளையாரன்றோ வங்ஙன மிருப்பத் திருவடிகட் கிங்ஙனங்கூற லெங்ஙனமெனிற்? றிருவடிகடம்மை வழிபடுவோர்க் கிரங்கி யின்பமீதற் பொருட் டெழுந்தருளும் பிள்ளையாரது படர்ச்சி நிகழ்ச்சிக் கருவியாய் நின்று அவரை யவ் வழிபடுவோர் பால் வருவித்தலானும் ஞான தீக்கை பண்ணுங்கா லவர்சென்னியிற் சூட்டப்பட் டைக்கியம் வருவித்தலானு நித்தியானந்தப்பேறு வாய்க்கு மாகலி னிங்ஙனமென்க.

அல்லதூஉம் - வாட்டமி லருளுங் கோட்டமில் குணனுமசையா நிலையு நசையாமனனும் வெகுளாப் பண்பும் விடாப்பேரன்புஞ் செவ்வியின் மரீஇ யெவ்வெவ ரெவ்வகை வேட்டன ரவ்வகை விருப்பொடு குறிப்பின் வரையா தீதல் வள்ளற்றன்மை என்ப வாகலி னிவ் வள்ளற்றன்மையைத் தம்பாலடைந்தோரிடை யுடைவித் தருளுங் கருணைபற்றி யங்ஙனங் கூறியதெனினு மமையுமென்க. அஃதேல் , வள்ளற்றன்மை வழங்கு மலர்போலுந் திருவடி யென்றன்றோ வுரைவிரித்தல்

வேண்டு மங்ஙன மின்றி வள்ளற்றன்மை யுடைய மலர்போலுந் தாளென விரித்திருக்கின்றதே யெனின்? அங்ஙன மடைவித்தலும் வள்ளற்றன்மையே யாகலினு முடைய தொன்றன்றே யுதவப்படு மாகலினு மிங்ஙனம் விரித்த லங்ஙனங் கூறற்கு மமைதியாமென்க.

அல்லதூஉம்-அருளின்றி யமையாத வள்ளற்றன்மைக் கவ் வருளே முதற்காரணமா மாகலின் ஆனந்தவடிவராகிய பிள்ளையா ரவ்வானந்தப்பேற்றை யளிக்கும் வள்ளற்றன்மைக்கு முதற்காரண மாகிய திருவருட் சத்தியே திருவடி யென்று குறித்தற்குக் கார ணத்தைக் காரியமாக வீண் டுபசரித்த தெனினு மமையு மென்க.

அல்லதூஉம்-எமது திருவடிகளை வழிபடின் வீட்டின்பமெளி திற் றருவேமென்று பிள்ளையார் விதித்தருளிய வருள் விதிப்படி யறிந்து வழிபடி னவ்வழிபாட்டா னவ்வீட்டின்பந் தரப்பெறுத லுண்மையாகலி னவ்வுண்மைநோக்கி யீண்டு கூறிய தெனினும் பிள்ளையார் திருமேனி முற்றுந் தெய்வத்தன்மை பூரணமாகலின தனை யறிவிக்க வீண்டு கூறியதெனினு மமையுமென்க. திருவடி கட்கு அடையாய வள்ளலென்பதூஉம்-ஆசிரியர் பெயராய வள்ள லென்பதூஉம் - அடியிணை எதுகைத் தொடையாய் எழுத்தசை சீரொலி பொருளாதிகளா னொற்றுமை கொண்டு நின்று பிள்ளை யாரது திருவடித் தீக்கைக்கு மாசிரிய ரதிபக்குவத் தன்மைக்கு முள்ள வொற்றுமைப் பொருத்தம் விளக்கின வென்க.

வள்ளலென்பது-பிள்ளையார்க்குக் காரணச் சிறப்புப் பெய ராகக் கொண்டு பொருள்கூறுவாறு முளர் அங்ஙனங்கூறி னித் துணைச் சிறப்பின் றென்று மறுக்க என்னெனின்? அவயவச்சிறப் பா னவயவிக்குணம் வெளிப்படுத்தலே பெரும்பாலு மின்பமாகலி னென்க. இதனைப் "போற்றிமானன்முகனுங் காணாதபுண்டரீகம்" என்பதனாற் காண்கவென்க. வள்ள மலர்த்தாளெனப் பாடமோதி வள்ளம் போலுங் குவிந்த வாய்மலரென மலர்க்கடையாக வுரை விரிப்பாரு முளர் அங்ஙனம் விரித்தலி னித்துணைப் பெரும்பய னின்றென மறுக்க இங்ஙன மின்னும் விரிக்கிற் பெருகுமென்க.

மலரென்பது-வள்ளற்றன்மையி னருகுவைத்தமையின் ஈண்டு நிறைதலுங் குறைதலுமாயுள்ள நீர்நிலைக்கட் டோன்றியு மழிந்தும் விரிந்துங் குவிந்தும் வாடியு நின்று வண்ணமு நறையும் வாசமுஞ் சிறிதே சிறுபோது கொண்டு பறித்தலாதிய சிறு தொழிற் படு மலர்களை நீக்கி ஆண்டு திரிபிலாத் தெய்வத் தெண்ணீர் நிலைக்கண்

ணுழியா மலர்ச்சியு மழியா மணமும் பொன்னிறப் பொலிவும் இன்னற வொழுக்கு மென்மையுந் தண்மையும் வியப்புறு முருவுங் கண்டோர் சுண்கவர் காட்சியு மாட்சியுங் கொண்டு முக்காலமுங் குன்று மலரைக் குறித்தமை காண்க. என்னெனிற் பிள்ளையார் திருவடிகள் மெய்ஞ்ஞான விளக்கமா யருண்மணம் வீசிப் பொன்னிறம் பொலிந்து ஆனந்த மொழுக்கி மெல்லென வுற்றுத் தண்ணெனக் குளிர்ந்து தரிசிக்கின்றோர் வியப்புறு முருவா யவரதுவிருப்ப நோக்கம் பரவ வென்றுமொரு தன்மையவா யிருக்கின்றமையி னென்க. ஆயின் மலர்போலுந் தாளென் றுவமை விரிந்தபடி நிற்றற் கிடங்கொடாது மலர்த்தா ளென்ற தென்னெனின்? அத்தெய்வத் திருமலர்தனைக் கண்டோர்க்குச் சிறிய விடயானந்தந்தருதலே யன்றித் திருவடிபோற் சிவாநந்தந் தரமாட்டாச் சிறுமை நோக்கி யென்க.

அல்லதூஉம் சுபவடிவாய் எவ்வகைச் சுபங்கட்கு முன்னின் றதனை விளங்குறச் செய்வதாய் மகிழ்வுடையோர் யாரு மேற்கொண்டணியப்படுவதாய் நிற்கு நன்மலர் போலுமெனக் கூறினு மமையும் என்னெனின்? திருவடிகள் அருள்வடிவா யானந்தப் பேற்றிற்கு முன்னின் றளிப்பதா யறிவுடையோர் தந்தலைமேற் கொண்டணியப்படுவதாய் நிற்றலினென்க.

அல்லதூஉம்-மலரையடைந்த வண்டுக ளதனது தேனுண்டு களிகொள்ளுதல் போற் றிருவடிகளை யடைந்தோரும் அருளானந்தம்பெற் றிறுமாத்தலி னிங்ஙனங் கூறியதெனினு மமையுமென்க. இதனைத் தொகையுவமை யணியாகக் கூறலின்றி வள்ளன் மலர்த்தா ளெனக்கூட்டி யற்புதத் தொகை யுவமை யணியாகக்கொண்டு பொருள் கூறுவாரு முள ரவர்கூறுங் கூற்றிற் பெரும் பயனின்றென மறுக்க. இஃதின்னும் விரிக்கிற் பெருகுமென்க.

தாள் என்பது அடிகட்கன்றியும் முயலுதற்கும் உண்ணின்ற பொருள் வெளிப்படாமைக்கு மதனை வெளிநின்றோ ருட்சென்று கவரப்படாமைக்குங் காப்பாகக் காப்பினிற்குங் கருவிக்கு மணிதற் கணியி னிருகடையு மிணைத்து நிற்கு மிடைப்பூட்டிற்கு மிடனுகி வந்த பலபொரு ளொருசொல் லாகலின் திருவடிகள் தம்மை யடைந்தோரை யானந்த நிலையுட் சேர்த்தலு மங்ஙனஞ் சேர்ந்தோர் மீட்டு மவ்வானந்த நிலையினின்றும் போத வசைவுதோற்றி வெளிப்படாமைக்கு மவத்தைகளுட் சென்று தாக்கிக் கவரப்படா

மைக்கும் காப்பாக வருளுருவா யதன்முன்னிற்றலுஞ் சிவத்தாடன் சிவனை யிடைநின்று கூட்டுவித்தலுங் குறித்தது காண்க. இக் குறிப் புணர்த்தவன்றே மலர்க்காலென்னாது மலர்த்தா ளென்ற தென் றுணர்க.

தலைமேல் வைத்து என்பது - ஆசிரியர் தம்மாசாரியராகிய பிள்ளையார் திருவடித்தீக்கை செய்யத் தாம்பெற்றமை குறித்தது காண்க. அஃதேல் வைக்கப்பட்டு எனச் செயப்பாட்டுவினை யெச் சத்தா னிருத்தற் பாலதன்றோ வெனின்? ஆசிரியர்க் கத்திருவடிக் கண்ணே யுள்ள பிரியத்தொடர்ச்சியின் பெருமை தோன்ற விங் ஙன நின்றங்ஙனங் குறித்ததென்க. இதற்கு இவ்வாறன்றித் தலை மேற் பாவனையான் வைத்தெனக் குறித்ததென்று கூறுவாருமுள ராலோ வெனின்? அவ்வாறு கூறிற்-பிள்ளையா ரிந்நூலாசிரியர்க்கு ஞானசாரிய ரென்பது மிவர் ஞானதீக்கை யுடையாரென்பதூஉம் விளங்குதலின்றி மற்றையாசிரியர்போ லெடுத்தநூ லினிதுமுடிதற் பொருட்டுப் பாவனையான் வழிபடுகடவுட் பழிச்சினரென் றிலே சிற் கருதப்படுமாகலி னங்ஙனங் கூறன் மரபன்றென்க. தலையில் வைத்து என்னாது தலைமேல்வைத்து என்றமையான் மறைமுடிக் கண்ணே வயங்காநின்ற வச்செல்வத் திருவடியின் சீர்மை தோன் றிற் றென்க.

ஓர்ந்து என்பதில்-ஓர் என்னும் பிறவினை முதனிலை அறிவு தனக்கெதிரிட்ட வுணர்ச்சிப் பொருட்கண் ணெதிரிடுவதுபோன் றெதிரிடா துள்ளாழ்ந்த வப்பொருட்டிற னெதிரிடப் பெயருப் புடைபெயர்ச்சியு மெதிரிட்ட பின்னர் விகற்பியா தெதிர்க்குந் தோறுமெதிரிடப் பெயரும் புடைபெயர்ச்சியுங் கோடலிற் கருவித் திறனுந் தன்றிறனும் அருட்டிறனும் உற்றுணர்ந் தவ்வுணர்ச்சி விகற்பியாது தேறி நின்றமைமையைக் குறித்தது காண்க இக்குறிப் புத் தோன்றவன்றே திருவள்ளுவ நாயனாரு மோர்த்துள்ளமுள்ள துணரி னொன்று றென்றறிக.

உள்ளத் தழிவி லென்பதி லுள்ள மென்பதன் பகாப்பதனி யீற்றுப்பகுபதப் பொருளினிட வாகுபெயரா யனுப்பொருட் கண் வந்த வுள்ளென்னும் பகுதி யுட்புறத்து மப்போத மெழுஞ் சிற்றசைவும் பேரசைவுங் குறித்தது காண்க.

உள்ளமென்பது வாதனையா னுள்ளெழும் போதத்திற் காகு பெயராயது-வள்ளலென்பது போன் றெழுகிளைசயாய் வரவுள்ள

வழிவிலென்னுது பொறுத்திசையாய் வர உள்ளத் தழிவிலென்ற தென்கொலோவெனின்,வேற்றுமை வழிபாகலினும் போதவன்சவு சார்பின்றி யமையாமை குறிக்கவேண்டு மாகலினும், சாரியை யோடு புணர்த்தி யங்ஙனங் கூறியதென்க. அழிவு என்பதில் அழி யென்னும் பொதுவினைப் பகுதி முன்னர்த் தோற்ற நிகழ்ச்சிப் பின்ன ரோர்காலத்து மோரிடத்து மின்றிக் கெடுதற் பெயர்ச்சிக் கண் வந்ததாகலி னப்போத நிகழ்ச்சி பின்ன ரெக்காலத்தும் உட் புறமென்னு மெவ்விடத்துந் தோற்ற நிகழ்ச்சி யின்றி யொடுங் கியவாறு குறித்ததென் றுணர்க. இங்ஙன மன்றி உள்ளத்தழிவி லென்பதற்கு மனத்தி னசைவற்ற விடத்தெனப் பொருள்கூறு வாருமுளராலோ வெனின்-மனத்தி னசைவு போத வசைவறிற் றனே யறுமாகலினு மஃதறுத விடத் திஃதெவ்வாற்றனு மறுதா கலினு மது பொருந்தாதென்க இதனை ஆசிரியர் கூறிய "பற்றுது போதும் பதறு" மென்னுந் திருவெண்பாவாற் காண்க வென்க.

அடுக்குந் தேனென்பதி லடுக்குமென்பது அடுத்தலென்னுந் தொழிற் பெயர்க்கட் டல்விகுதி தன்னொற்றுச் சந்தியொடு நீங்க வெதிர்காலப் பெயரெச்ச விடைநிலை யும்மை ககரமெய்ச் சாரியை யூர்ந்து தன்னொற்றுச் சந்திபெற்றுண்டு நின்றிறையு மிடப்பாடு தோற்றது செறிதற் பெயர்ச்சியும் அடுக்கலென்னுந் தொழிற் பெயர்க்கண் ணல்விகுதி நீங்க வவ்வெதிர்காலப் பெயரெச்ச விடை நிலை யும்மை விகுதி நீங்க நின்று தன்வரவு கண்டோடிய குற்றுகர மூர்ந்த மெய்க்கண் ணேறி நின்றிறையு மிடைப் போதின்மை படாது பன்முறைமேன்மே லுறுதற் பெயர்ச்சியும் பொருளாகக் கொண் டிருவகைப் பகுதி யொருவகை யெச்சமாக நிற்றலின் சிறிது மிடத்தானுங் காலத்தானும் பிரிவுதோன்றுது செறிந்து பன்முறை மேன்மே லெழு மானந்தத் தேனென்று குறித்ததென் றுணர்க.

உள்ளத்தழிவிலடுப்பது ஆனந்தமாகலிற் றேனென்பதை யுவ மக்குறிப்பாற் சிவானந்தத் தேனென்றதென் றுணர்க.

தேனுண்ட வண் டசைவின்றி யத்தேன்மயமா யிருத்தல் போல - ஆனந்தானுபவத்தர் போத வசைவின்றி யிவ்வானந்த மயமா யிருத்தலி னுவமையாகக் குறிக்கப்பட்ட தென் றுணர்க.

* இதனை யொப்புமைக்கூட்ட மொட்டாதிகளாகக் கூறுவாரு முளராலோ வெனி னவ்வாறு கூறினும் பொருள் சிதையாமையி

ஞொருவா றமையுமென்க. போதவகையின்கட் டோற்றல் விட்யானந்த மாகலிற் போதவொழிவின்கட் டோற்றல் சிவானந்தமெனக் குறித்தற் குள்ளத் தழிவி லடுக்குந் தேனென்ற தென்றுணர்க. எங்ஙனமெனின்? உள்ளத்தழியாமையி னடாத்தேனென்றெதிர்மறுக்கப் படுதலினென்க. மதுரம் பற்றித் தேனை யானந்தத்திற் குவமை கூறுவாரு முளராலோ வெனின்? அது நாவிடையமா யிறைப்போது நிற்றலி னித்துணைச் சிறப் பின்றென்க.

அன்பரெலா முண்ண வென்பதில் அன்பர். பொருள் புகமுதியைக் குறித்துப் பயில்வோரை நீக்கிச் சிவானந்த மெந்நாளடைதுமென் றிடைவிடா ததனையே விரும்பிப் பயில்வோரைக் குறித்த தென்றுணர்க. எலாமென்பது-சரிதாதி கன்ம மார்க்கங்களைக் கூறும் பிறநூல்களெல்லாம் பருவநோக்காது சாதிசமயாசார விகற்பங்களை நோக்கிச் சிலரை நீக்கியுஞ் சிலரை நிறுவியு மதிகரித்தல் போலாது அச்சாதி சமயாதிகளி னுயர்ந்தோர் தாழ்ந்தோ ரியாரேனும் பருவத்தராயி னிந்நூற் குரியராவ ரென்பது குறித்ததென் றுணர்க.

உட்கொள வென்னும் பொருளுட் கொண்டு பொருட்டுப் பொருளிற் போந்த உண்ணவென்னும் வினையெச்சம் ஆனந்தானுபவத்திற்கு விடாத விலக்கணை யாயிற்றென் றுணர்க. என்னையெனில்? உண்ணலிற் பசிநீங்கல் போல் ஆனந்தாநுபவத்திற் பசுத்துவ நீங்கலினென்க. பயன் காரணம் பற்றி வந்த வொழிவிலொடுக்கநா லென்பது ஒழிவிலொடுக்க மென்னு நூல் ஒழிவிலொடுக்கந் தருநாலென விருவழிக்கும் பொதுவாய சந்தியான் வந்தமையிற்றன்னை வேதாந்தத்திற்குஞ் சித்தாந்தத்திற்கும் பொதுவென்று குறித்ததென் றுணர்க.

ஒழிவி லொடுக்கநா லுரைத்தா னென்பதில் வேற்றுமை சாரியை யுருபு முதலிய வொன்றும் விரியாது நிற்றலின் ஞானசார மன்றிக் கருமாசார மொன்றும் விரியாத விந்நூலி னின்மலத் தன்மை தோன்றிற் றென் றுணர்க.

உரைத்தா னென்பது-ஒருவர் மதிநுட்பத்தாற் றாங்கண்டறிந்த மாற்றுயர்ந்த பொன்னின் றன்மையைப் பிறரு மறிந்து பயன் கோடற்குக் கட்டளைக் கல்லினுரைத்துக் காட்டல் போற் சுருதி குரு வநுபவத்தாற் றாமநுபவித்தறிந்த சிவானந்தப் பேற்றின் றன்மையைப் பக்குவரு மறிந்து பயன்கோடற் பொருட்டு நூற்கணுரைத்துக் காட்டினு ரென்று குறிப்புமுத்திற் றென்றுணர்க.

என்னெனி லுரையென்பது பொன்னுரையும் பொருளாகக் கோடலி னென்க. உரைத்தான் என்னும் பயனிலை - செயப்படு பொருளி னிறுதியி னியையாது செயப்படுபொருட்குங் கருவிப் பொருட்குமேற் றடலைமேல்வைத்து என்பத னிறுதியிற் றொடர்ந்து நின்றதென்னெனிற்? சிவஞானத்தீக்கை யுடையரா யுரைத்தா ரென்பது மன்றித் தமதாசாரியர் திருவடி சான்றாகத் தாங்கண்ட வநுபவத்தை விளங்க வுரைத்தா ரென்பதுங் குறித்தற் கென்க என்னை ?

தாடலைமேல் வைத்து எனவே சான்றாக வைத்து என்பது தானே யமையுமாகலின்-தலைமேல்வைத்து என்பதன்பின் னிற்கக் கடவதாகிய ஓர்ந்து என்பது செயப்படு பொருட்பி னிறுதிநிலை யாய் நின்ற தென்னெனின் ? இந்நூல் கற்றோர்க்குக் கருமங்குறைந்து ஞானமேலிடுத லுண்மை குறித்தற்கென்க. எங்ஙனமெனின்? அவ்வோர்ந்து என்பது வினைக்குறை யாகலி னென்க. உள்ளத் தழிவி லடுக்குந்தேனை யன்பரெலா முண்ண வொழிவி லொடுக்க நூலோர்ந் துரைத்தான் எனக்கொண்டு போதவொழிவின். கண் ணடுப்பதாய வானந்தத்தை யன்பரெல்லா மநுபவிக்கும் பொருட்டு வேதாகம முடிபான ஞானநெறியை யாராய்ந்து ஒழிவி லொடுக்கமென் றோர்நூலை யுரைத்தார் எனப் பொருள் கூறுவாரு முளர். அங்ஙனங் கூறின் ஆசிரியர் பரஞான முடையாரென்பது தோற்றாது. அபரஞான முடையாராகப் பொருள் படுமாகலி னும் அபரஞானத்தாற் கூறப்பட்ட நூல்மிகச் சிறவாமை யானு மது பொருந்தா தென்க.

இந்நூ லியற்றற் கேற்ற நற்பொரு ளுடைமையுஞ் சிறப்புப் பாயிர விலக்கணத்து ளாக்கியோன் பெயரே யென முதனிறுத்தப் பட்ட நிமித்தகாரணச் சிறப்புடைமையும் இச்செய்யுண் முடிபுக் கெழுவாயாந் தலைமையுடைமையும் பற்றி வள்ளலென முதனிறுத் திய தென்க. இந்நூலாசிரியர்க்காசிரிய ரிவரென்பது தோன்றற்கு அவ்வள்ள லென்பதன் புடை குருராய னென்பதை நிறுத்திய தென்க. இங்ஙனம் ஆசாரிய ரென்பவர் பிள்ளையார் என்பது தோன்றற்கு ஞானசம்பந்தனென வைத்தல் வேண்டு மாகலின் அந்தஞானத்தைக்குறிக்கும் பாசவெற்றியாய வாதுவென்ற வென் பது முன்கூட்டிச் சம்பந்தனென வதன்புடை நிறுத்திய தென்க.

இரண்டா மடிக்கட் பிள்ளையார் தாள்க ணிறுத்தத்தொடங்கி முன்னர் அத்தாள்களி னியற்கை யருளென்று குறிக்க வள்ள

லென்றும் அதன்வடிவ மானந்தமென்று குறிக்க மலரென்று முறையே வைத்து வள்ளன்மலர்த்தா ளென நிறுத்திய தென்க. தாள்க ளன்றியும்-பிள்ளையாரும் அருளியற்கையரே யென்பது குறிக்கச் சம்பந்த னென்னுஞ் சத்தந் தோற்றியவுடன் வள்ளற் சத்தந்தோன்ற நிறுத்திய தென்க. இங்ஙனம் நிறுத்தியவை-சொற் பொருண் முறைநிலை-தாளென்பதற்குத் தலையென்பதற்கு முள்ள சொற்பொருட் சம்பந்த வின்பம் பற்றி தாடலையென்றும் தலை யென்பதற்கும் மேலென்பதற்கு முள்ள உரிமை நோக்கம்பற்றித் தலைமேலென்றும் மேலென்னு மிடப்பொருட்கு வைத்தற்றொழில் சிறந்தது பற்றி மேல்வைத்து என்பதற்கும் உரைத்தா னென்ப தற்கும் இறுதியு முதலு மினமாதல் பற்றி வைத்துரைத்தா னென் றும் முறையே நிறுத்திய தென்க. இங்ஙனம் நிறுத்தியவை சொன் முறை நிலையும் சொற்பொருண் முறைநிலையு மாம்.

இங்ஙனம் முற்று முறைநிலை கூறப்புகின் மிகப்பெருகுமாகலி னொருவாறு காட்டினம். மற்றையவு மிவைகொண்டுணர்க வென்க. இச்செய்யுட் பொருள் ஆசிரியர தருளறிவின் மாட்சிமையை வெளிப்படையானுங் குறிப்பானும் விளங்க விரித்தலின் வாகைத் திணையுட் சால்பு முல்லைப்பொருளின் பாற் பட்டதென்க. என்னை சால்பு முல்லைப்பொருள்-வான்றோயு மலையன்ன சான்றோர்தஞ் சால்புரைத்தன்று என்பவாகலின் இச்செய்யுள் தன்னுட் செயப் படுபொருளாய் நின்ற நூற்சிறப்பைத் தன்னானுந் தன்னுறுப்புக் களானுங் குறிப்பாற் குறித்து நின்ற நன்னோக்குடைச் செய்யு ளென் றுணர்க. அங்ஙனங் குறித்தவை யெங்ஙன மெனின்? இச் செய்யுள் தான் கலிப்பா வஞ்சிப்பா ஆசிரியப்பா வென்னு முப்பா வினுஞ் சிறந்த வெண்பா வாகலி னிக்குறிப்பால் இந்நூல் சரிதை நூல் கிரியைநூல் யோகநூல் என்னு மூந்நூலினுஞ் சிறந்த ஞான நூலென்று குறித்தற்கென்க. தான் ஈரசையானுசிட் டிருவகைத் தளை தழீஇ யொழுகிசைச்செப்பலோசையான் வந்ததாகலின் இக் குறிப்பால் இந்நூல் ஆகமமுடிவும் வேதமுடிவுங் கூறு மிருவகை நெறியு மொருவகை நெறியாத் தழீஇக்கொண்டிருந்தமை குறித்த தென்க.

தான் ஒற்றடுத்த விரட்டை முப்பத்தி ரெழுத்துக்களைக் கொண்டு நிற்றலி னிக்குறிப்பானிந்நூல் பாசமொன்றடுத்த தத் துவ முப்பத்தாறென்றும் முப்பத்தாறன்றன்மையிவை யென்றும்

பகுத்தறிதல் வகையு முணர்த்துவ தெனக் குறித்த தென்க. தான் நான்கடுத்த முப்பத் தாறசைகளை யசைத்து நிற்றலி னிக் குறிப்பா னிந்நூல் அத்தத்துவ முப்பத்தாறனையு நியதிகளோ தன் முறைமையை யுணர்த்துவ தெனக் குறித்த தென்க. அஃ தேன் முப்பத்தாறன்மே னான்கடுத்த தென்னெனின்? ஆன்ம தத் துவத்தின் வன்மைதோன்றற்கோரசையும் வித்தியாதத்துவத்தின் வலிதோன்றற் கோரசையு நாததத்துவத்தின் பெருமைதோன் றற் கீரசையு மிருந்தன வென்க. தான் பதினைந்துசீர் சீர்கொள நிற்றலினிக்குறிப்பா னிந்நால் ஆசாரியத்தன்மை சீடத்தன்மை பதித்தன்மை பசுத்தன்மை பாசத்தன்மை உபதேசத்தன்மை பக் குவத்தன்மை யோகநிவர்த்தி கிரியைநிவர்த்தி சரிதை நிவர்த்தி விரத்திவிளக்கந் துறவுத்தன்மை யருளவத்தைத் தன்மை வாதனை மாண்டார் தன்மை நிலையியல்பு என்னு மிப்பதினைந்தனையுஞ் சீர்பெறக் கொண்டதெனக் குறித்ததென்க.

தானெழுவகைத் தளையி னியைந்ததாகலின் இக்குறிப்பா னிந்நூல் ஆன்ம தரிசனம் அருட்டரிசனம் பரைதரிசனம் பரை யோகம் பரையோகநீக்கம் போதவொழிவு இன்பப்பேறு என்னு மெழுவகை நிலையு மறிவிப்ப தெனக் குறித்ததென்க. தான்-தனிச் சொல் பெற்று நான்கடியுட னடந்ததாகலி னிக்குறிப்பா னிந்நூல் கூறு மொப்பற்ற ஞானமும் சுத்தச்சரிதை சுத்தக்கிரியை சுத்த யோகம் சுத்தஞானம் என நான்கு பாதத்தோடு நடப்பதெனக் குறித்ததென்க. தான்-ஒரூஉத் தொடையொடு முத்தொடையா னியன்றதாகலி னிக்குறிப்பா னிந்நூற் சுருதி குரு அநுபவ மென்னு மூன்று மொத்தியன்ற தெனக் குறித்த தென்க.

அல்லதூஉம்-இச்செய்யு ளடி நேரடியாய் விதித்த வெழுத் தெல்லையி னிகவாதுநிற்றலி னிக்குறிப்பா னிந்நூல் மெய்வீட்டி னெறித்தாய் அவ்வீட்டி னெறிக் கெல்லையாய ஞானத்தினிகவாது நின்றதெனினுமாமென்க. எல்லை என்னெனிற்? பத்தெழுத்தென்ப நேரடிக்களவே யொத்த நாலெழுத்தோற்ற லங்கடையே யென்ப வென்க. இங்ஙனங் குறித்தற்கன்றே இச்செய்யு ளீற்றடியி னூற் பெயரை வேறடை கொடாது தனிமையி னிறுத்தியதென்க.

இச்செய்யுள் சிறப்புப் பாயிரத்ததாயி னப்பாயிரத் திலக்கண மிதனு ளிருந்தவா றெங்ஙன மென்னின்? வள்ளலென்பதனு லாசிரி யர் பெயரும் குருராயன் வாதுவென்ற சம்பந்தன் வள்ளன் மலர்த் தா டலைமேல்வைத் துரைத்தா னென்பதனுன் ஞானசாரியராகிய

பிள்ளையா ரருளுபதேச வழித்தென வுட்கொளப் படுதலின் வழி யும் இந்நூற்றொடர் தமிழ்த்தொடராகலினித்தமிழ் வழங்குநிலமே யிந்நூல் வழங்கு நிலமெனக் கருதப் படுதலி னெல்லையும் ஒழிவி லொடுக்கநூ லென்பதனு னூற்பெயரும் ஒழிவிலொடுக்க மென அன்மொழித் தொகைப்பெயர் மாத்திரையி னில்லாது நூலென விரித்தமையி னிந்நூலுந் தொகை விரியுடைய தெனக் கருதப்படுத லின் யாப்பும் உள்ளத்தழிவி லென்பதனுற் கருதிய பொருளும் அன்பரெலா முண்ண வென்பதினுல் அன்பரெலா முணற்பொருட் டிஃதியற்றுக வென் றுள்ளெழுந் தெதிரிட்டு நின்ற தாசிரியரது பெருங்கருணை யெனக் கருதப்படுதலிற் கேட்போரும் உள்ளத் தழிவி லடுக்குந் தேனென்பதனுற் பயனும் புலப்படுமாகலி னவை யிருந்தவா றிங்ஙன மென்க.

இப்பாயிரச் செய்யுள் முற்காலத்ததூ.

இவ்வுரை-சிதம்பரம் இராமலிங்கபிள்ளையவர்களாற் செய்யப்பட்டது.

---

இந்நூலுரை பாடத்திற் சிலசில இடங்களினுள்ள மறைசொற் பொருட்டுத் தெளிசொற் பொருள்.

௧ பவுரிக்கூத்து—வலமிடமாகச் சூழ்ந்தாடுங் கூத்து.

உ-குறுமன்னியர்—சிலராலறிந்து மதிக்கப்படும் பிரபுத்துவ முடையோர்.

௩ மகாமன்னியன்—பலராலு மறிந்து மதிக்கப்படும் பிரபுத்துவ முடையோன்.

பிரளயாகலர்—மும்மலங்களு ளொருமல நீத்தோர். அவர் பிரமன்முத லானோர்.

ஞாதுரு—காண்பான்; ஞானம்-காட்சி, ஞேயம்-காணப்பட்டது.

சூக்குமைவாக்கு—வார்த்தைதோன்றற்கு முதற்காரணமா யுந்தியிலே நாதவடிவாய் நிற்குமொருசத்தி-பரஞானம்-அநுபவஞானம் அபரஞானம்-வாசகஞானம்.

பகடிக்கூத்து—உள்ளதுபோன் றில்லாததைக்காட்டும் வெளிவேடம் அல்லது அகசியக்கூத்து.

அரிப்பானன்—குப்பை முதலிய விடங்களிற் பொன் முதலிய அரித் தெடுக்கின்றோன்.

கொழுந்தாடை—கரும்பி னுனித்தழை.

சாயாபுருடன், தந்நிழலைப் பார்த்துப் பின்னுகாயத்தை யுற்றுநோக்கு நின்றார்க்கு அவ்வாகாயத்தின்கட் புருடவடிவம்போற் றோன்று மந்நிழற் காட்சி.

பைமறித்தல்—உள்ளிருந்த சரக்கு வெளிப்படப்பை வாய்தொட்டு உட்புறமேற்பட்டும் வெளிப்புற முட்பட்டு மடங்கமடக்கல்.

கிண்கிணவாய்ச்செய்தலர்தல்—வட்டவடிவாக முகங்கொண்டு மலர் தல்.

பலிறுளை—பலதுளை.

பற்ற—பார்க்கிலும்.

அருகித்தோற்றல்—சுருங்கித்தோற்றல்.

பிரேரகம்—காரியப்படுத்தல்.

பிரதிபலிதம்—எதிர்விம்பம்.

சகசமலம்—ஆணுதியாகியமலம்.

கடா—வினு.

விட்டிசையா திசைத்தல், நடுவேசில்லாம லொலித்தல்.

நக்கினம்—நிருவாணம்.

தேறிட்டநீர்—தேற்றாங்கொட்டையாற் றெளிவிக்கப் பட்டநீர்.

கவுசனை—யாதாயினுமோர் பொருளை யுள்வைத்து மறைய மேன் மூடிக் கட்டுமேற்கட்டு.

சுழல்விறிசு—கொள்ளிவட்டம்போற் சுற்றுவதாய ஒருவகை மருத்து வாணம். இத்தேயத்திக்காலத்தில் சுழல்புறிசு என்று வழங்குகின்றது.

அநன்னியம்—அன்னியமல்லாமை.

நெற்பொலி—தூற்றுநெல்.

தும்புசெறித்து—தும்புஅவிழ்த்து.

அநுபவிக்கச்சிதைக்கும்—அநுபவிக்க வறிகின்றபோதும்.

அவித்தியாகதம், அஞ்ஞானமயம் பெறுவீடர் அநுபவிப்பதற்கில்லா மையால் விட்டோர்போன் றிருப்போர் கறண்டல்களால் நெருக்கிப் புரண்டுதல்.

சேட்டித்தல்—தொழிற்படுத்தல் அல்லது குணக்கேடான தொழில் விளைத்தல்.

சிங்கி—விலங்கு.

நாங்கூழ்—நாகப்பூச்சி யென்னுமோர் கிருமி.

விகளம்—மௌனம்.

மடலெடுப்பு—பனைமடலாற் குதிரைசெய் தேறுதல்.

முடிகளசமுத்தி—முடி-சிரசு, களகம்-நீக்கம், முத்தி-வீடு.

வாசியென்ற வார்த்தை—இது செய்க விடுக வென்று நியாயமாகக் கூறும் வார்த்தை.

வியாபகம்—கலப்பு. வியாத்தி-கலக்கப்படுவது.

விசர்க்கரித்தல்—விடுத்தல்.

ஐவரரசர்—பாண்டு மக்களாகிய தருமன் முதலிய ஐவர்.

மந்தகாசப்பிரகாசம்—புன்னகைப் பிரகாசம்,

## அமைத்துக் கொளல்.

காப்பின்கண் ஈண்டு இத்தோத்திரச் செய்யுட்க ளென்றவையுள் - ஆனைமுக னறுமுகனென்னுஞ் செய்யுளை யொழித்து வேறுகொள்க.

(பொதுவிலுபதேசம் 4 - வது பாட்டு) இக்கதையை யிப்பொருளுக் கென்றதை - அக்கதை யிப்பொருளுக்கெனக் கொள்க. இங்ஙனமின்னும் சிலவிடங்களிலுள அவற்றையு மங்ஙனங் கொள்க.

(4 - வது பாட்டு) மாறுபாடாய்க்கருதி என்பதில் செய்து என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சமாய ஆய் என்பதை - செயவென்னும் வாய்ப் பாட்டு வினையெச்சமாய ஆகவெனக் கொள்க. இங்ஙனமின்னுஞ் சிலவிடங் களிலுள. அவற்றையு மங்ஙனங்கொள்க. வடசொற்களுள் ஞாநம் ஞானம் ஆநந்தம்-ஆனந்தம் எனத் தமிழிற்குப் பொதுவுஞ் சிறப்புமாய நகரனகரங் கள் சிற்சில விடங்களில் விரவிநின்றன. அவற்றைத் தமிழ்ச்சிறப்பு வழக்கு நோக்கி யமைத்துக்கொள்க.

(பொதுவிலுபதேசம் 8 - வது பட்டுரை). "அங்ஙனஞ் சொல்லுவது மிங்ஙனங் கேட்பதுஞ் சம்பிரதாயம்"—இருப்பதுமன்றி அங்ஙன நின்று கேழ்க்குமொழி பிரமோபதேச மொழியாகவினென்பதும்-சிருவுரை பாடங் களினுண்டு.

சத்திநிபாதத்துத்தமரொழிவு (6-வதுபாட்டுரை). "ஞானத்திலின்பை நசிப்பித்து நானதுவா மூனத்தையா ரொழிவிப்பார்" என்பதற்கு சுவாநு பவத்தான் ஞானாநந்தத்தைப் பெறாது அதனை விடயச்சேற்றாற் கொடுப் பித்து விடயச்சேற்றி லழுந்திநின்று அவ்வாநந்தத்தை யடைதற்கேது வாய்க் கூறும் ஞானசாத்திரங்களைக் கேட்டறிந்த மாத்திரத்தினால் அவ்வா நந்தமயனென்று கூறும என்பது சிலவுரைபாடங்களிலுண்டு. இதுவுரை வேறுபாடு,

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை.

# தொண்டமண்டல சதகம்.

ஒருவாறிதனிலக்கணம்விரிக்கின்றாம். *

இஃது,

மூவகை மொழி - இருவகைச்சந்தி - முத்திறத்தொகை ஒருதலைநோக்க - மூந்நிலை யிலக்கணைச் செந்நிலைத்தொடர்.

முற்பாட்டுயர் பொருட்டலைமையுடையதி னிலைமை, இடைப்பாட் டுடைய துரிமை யுடைமை நிலைமை, பிற்பாட்டுடைமை யுரிமையுடைய துடைமையாய, இத்தொடரைச் சொற்றிறந்தோன்றத் தொடர்பின்மைசெயின் - தொண்டன் - மண்டலம் - சதகம் - என்றுசெய்க.

இதனுள்.

தொண்டனென்பதூஃ

வழக்கியற்பாடு-ஒற்றுமைச்செறிவு
வேற்றியற்கரணம் - குறிப்புயர்நோக்கம்
பொருள்விரியாக்கம் - குற்றியல்வண்ணம்
இடைப்பல்வயிற்றொகை

முதலிய சொல்லியற்பாகுபாட்டி னமைந்த முதறொகைச் சிறப்புயர்திணைக் காரணப்பொருட்பெயர்.

மண்டலமென்பது:

வடசொன்ஞேக்கியற்காரணப்பண்பு கோளிடப்பெயர்.

சதகமென்பது:

வடசொற் பாட்டியற் காரணவெண்ணிலைக்குழூஉக்
கோட்பெயர்.

இத்தொடர்க்கண்

இயைபினமையிற் பொருள்கொளின்,

தொண்டன் - ஆதொண்டன், மண்டலம் - வட்டம், சதகம் - நூற்றினலாயகூட்டம்-என்றுகொள்க.

---

* இற்றைக்கு 67 வருஷத்திற்கு முன் ராக்ஷசஞூத்தில் எழுதப்பட்டது.

இஃது

செய்யுண்முதலிய பல்வகைவழக்கினும்பயின்று வருதன் முதலிய இச்சதகயாப்பின்கண்ணும் காஞ்சிமான்மியத்தைக்குறித்த காப்பியமுதலிய வற்றின்கண்ணும் - பாடைவழக்குத் தேயவழக்கு நகர்வழக்கு முதலிய வழக்கியற்கண்ணும்-பல்வகைபெயர்க்குமிலக்கணம் புலப்படுத்தற்கருவியாய முந்துநூன் முதலியநூன்முடிபின் கண்ணும்-வழக்குணர்ச்சிக்கண்ணுங்காண்கவென்க.

அற்றேற் கூர்ந்தறிகவென்றவகப்பாட்டிற்செய்கைமுடிபு முதலிய விளங்கப்புலப்படுத்துகவெனின்;

பயன்றரூஉந்தொழிலதுபுடைபெயர்ச்சிக்கண்ணுரிமைதோற்றி யுரிமையுடைமைக்கு முதலாய முதற்பொருளெஞ்சி நிற்ப - அம் முதலாய முதற்பொருட் டொழின் முடிபிடனேற்ற தன் றொழிற் பயனுறுதற் கிடனுய செய்பொருளம் முதற் பொருளோக்கிய லொருபுடை யொப்பத் தொழிற் பயன் றோற்றற் கிடனுயதாப் பொருள்வேற்றுரிமை யேற்றுத் தன்றொழின் முடிபின் முற்றிப் புடை பெயர்ச்சியி னுரிமை பெற்ற முதற்பொருண்மையினைப் புமை பெற்றுந் தன்புடை பெயர்ச்சியினுரிமையேற்று வேற் றுரிமை முதற்பொருட்காணத் தொழிற் பயனுறப்படூஉஞ் செய் பொருளைத் தன்கருமத் தொழிற் பயனுறப்படூஉஞ் செய்பொரு ளாப் புடைபெயர்ந்ததனுரிமையேற்ற முதலாய முதற்பொருட் பாடுபெற்றும்-வந்த விரிசொற்றொரிநிலைவினைமுற்றுனணைந்த பெய ர்க்கோணிலைநோக்காய-ஆதொண்டந்தழைபிற்கிடத்தப்பட்டவன் ஆதொண்டந்தழையானு மலரானுமியற்றப் பட்டமாலையைத்தரித் தவன்-என்பன - தன்வினைமுதற்றொழிற் பயன்றோற்றுமிடனுந்தன் றொழிற்பயனுறப்படூஉஞ்செய் பொருளுமிடனுக - ஆதொண்டந் தழையன்-ஆதொண்டைத்தழையன்-என விரிசொற்.குறிப்பு வினை முற்றுனணைந்தபெயர்க்கோணிலை நோக்காய்ப்-பின்னர்-இடப்பொ ருளவயவியுங்கருவிப் பொருளவயவியுமிடனுகப்பெற்று, ஆதொண் டையென் பதனீற்றைகாரங்கெட்டஃதூர்ந்தமெய்ம் மேல் விகுதி அன்னூர்ந்து ஆதொண்டன்-எனக்குறுந்தடியுஞ் செம்பட்டுமாய வாறு போற்றொகைநிலை பேற்றுப்பெயரேயாய்நின்றது.

அல்லதூஉம் ஆசிரியர்தொல்காப்பியர்கூறிய

'பணையு மரையு மாவிரைக் கிளவியு
நினையுங் காலை யம்மொடு சிவணு
மையெ னிறுதி யரைவரைந்து கெடுமே
மெய்யவ ணொழிய வென்மனார் புலவர்.'

என்னுஞ்சூத்திரத்து 'னினையுங்காலை' யென்பதனாற்றமையென்னுஞ் சொல்வந்துழி - தொண்டையென்னுஞ் சொல்லிறுதியை காரங் கெட்டஃதூர்ந்தமெய்ம்மே லம்முச்சாரியை யூர்ந்து நின்றதன்றே. அங்ஙனம்-உயர்திணையாண்பாற் படர்க்கைவிகுதியாய-அன்னென் பதனையேற்குமிடத்தத்தமை யென்பதெஞ்சி யத்தமையிற்கிடத்தப் பட்டவனென்றறிந்து கோடற்குறியாத்தமையாற்போந்த அம்முச் சாரியையின்-மகரவொற்று நீங்கநின்ற அகரத்தின்பின்னர் - அவ்வு யர்திணை யாண்பால்விகுதி அன்னென்பதி னகர நீங்க நின்றனகர வொற்றடுத்து ஆதொண்டன் என்றாயது எனினுமமையும்.

இதனை

முதனிலை-இறுதிநிலை-இடைநிலை - முதலியபல்வகை யுறுப்புக் களிற்பல்வகை நோக்குடைப்பல்வகைப் பெயரும்-செறிப்பிற்றிறப் பட நெறிப்படூஉம்வழக்கிற்பல்வகைவிகாரத்தாற் செந்நிலைபெறாஉ மெனவிதித்த வுணர்வுடையோருயர்நெறிவழக்கா லுய்த்துணர்க.

இங்ஙனம்

ஆதொண்டனென்னும்பெயர்-முதற்பொருண்முடிபுதன்முடி பிற்பெற்றதன்றொழிற் பயனுறப்படூஉஞ் செய்பொருட்டன்மைய கப்பாட்டினும்-உடைப்பொருட்பிறிதி னுரிமையுடைமைத்தன்மை புறப்பாட்டினும்-உயர்பொருளடைச் சிறப்பிடப்பெயர் அவ்விருவ யினும் பொருந்தநின்ற மண்டலமென்பதனோடு மருவும்வழி-மேல் வகுத்த வண்ணந்தன்னீறுமுதலுந் தொகுத்தலைப்பெற்றதென்க.

அல்லதூஉம்,

முதலெஞ்சிநின்ற - இப்பெயர் - மண்டலத்தோடணைந்தவழி விகுதி-அன்-எஞ்சி-அம்முச்சாரியைப் பெற்றுவருமொழிநோக்கி மகரமொழியத்தொண்டமண்டலமென்றாயதெனினுமமையும்.

இதனை

ஆசிரியர்தொல்காப்பியர் கூறிய - அப்பெயர் மெய்கெடுத்தன் கெடுவழியு, நிற்றலுமுரித்தேயம் மென்சாரியை, மக்கண்முறை

தொகூஉ மருங்கினை - என்னுஞ் சூத்திர நோக்கத்தாற் காண்க வென்க.

ஆதொண்டனென்பது - தென்சொன்னோக்கு, மண்டலமென்பது-வடசொன்னோக்கு-தம்முட்செறிவானொத்தவேனும்பாடையானொவ்வாமைபெறலின்-அங்ஙனம் பெறுமை நோக்கியும் - முந்நிலையாய வந்நிலைக்குப்பின் னிலையாயவிந்நிலைக்குநிலைச்சினையாதனோக்கியும்-விசேடணவிசேடியச் செந்நிலைமரபு நோக்கியும்-இங்ஙனமுதலுமீறுந்தொகுத்தலைப் பெற்றதெனினும் - முதனிலைவண்ணவொற்றுமை-இசையொற்றுமை-உருபொற்றுமை நோக்கியும்-இறுதிநிலை சிறப்புநிலை இனவொற்றுமை நோக்கியுந் தொகுத்தலைப்பெற்றதெனினு மமையும்-இஃதின்னுங்கூறிற் பெருகும்.

ஆகலின்.

ஆசிரியர்தொல்காப்பியர்கூறிய-உணரக்கூறிய புணரியன்மருங்கிற், கண்டுசெயற்குரியவைகண்ணினர்கொளலேஎன்னுஞ்சூத்திரக்கருத்தானமைகவென்க- அன்றி- ஆதிநாராயணன்புரம்-நாரணபுரம் ஆபூதன்மங்கலம்-பூதமங்கலம்-பெரும்பற்றிறைற் புலிப்பாதன்பூசித்தவூர்-பெரும்பற்றிறைற்புலி பூசித்தவூர்-பெரும்பற்றப்புலியூர், புலியூர், முதலிய பெயர்க்கோள்களையும் - புள்ளம் பூதன்குடி - பூதங்குடி, கொற்றன்குடி, கொற்றங்குடி - சாத்தன்குடி - சாத்தங்குடி, கொற்றன்மங்கலம்-கொற்றமங்மலம் - சாத்தன்மங்கலம் சாத்தமங்கலம், வேடன்மங்கலம் - வேட்டமங்கலம் வேடன்குடி-வேட்டங்குடி, சாத்தன்மங்கை-சாத்தமங்கை, விஜயன்மங்கை விஜயமங்கை, கண்ணன்மங்கை-கண்ணமங்கை, கண்ணன்புரம், கண்ணபுரம், கண்ணன்குடி-கண்ணங்குடி, சீராமன்விண்ணகரம்-சீராமவிண்ணகரம், வரகுணன்மங்கை-வரகுணமங்கை, ஐயைபுரம்-ஐயபுரம், முதலிய பெயர்க்கோள்களையும், நந்தன்மண்டலம் நந்தமண்டலம், சேரன்மண்டலம்-சேரமண்டலம், சோழன்மண்டலம் - சோழமண்டலம், முதலிய பெயர்க்கோளையும் பற்றுகக்கொண்டமைகவென்க, இதனைப் பிற்காலத்து மரூஉவழக்கென்று கொள்வாருமுளராலோவெனின் அங்ஙனம்-கொள்வது மரபன்று கொள்ளினுங்கொள்கவென்க.

இத்தொண்டமண்டலமென்பது - பல்வகைப் புணர்ச்சிக்கும் பல்வகைவழக்கியற்கும் - இயற்பாடின்னோசைமுதலியவற்றிற்கும் ஒத்ததிலையென்க.

இங்ஙனமன்றி,

தொண்டை மண்டல மென்பாரு முளராலோ வெனின்.

அங்ஙனமாறு படக்கூறுவோர்-நுண்ணிய அறிஞர் கண்ணிய நிலையும்-மாற்றம் பொருளுறாஉ மாற்றனிலையும்-பல்வகைப் புணர்ப்பிற் செல்வகைநிலையுங்-கடிபுகோணெறியின் முடிபுறாஉநிலயும்-பிழுக்கறாஉம் பல் வகைவழக்கியனிலையு-மொருவாற்றானுமோர்ந் துணர் கிலராய்ப்-போலிபியனிலை கோலுநரென்க. என்னை, இலக்கண நுட்பங் கூர்ந்துய்த் துணர்தற்றன்மை யுளரேலங்ஙனங் கூறற்கியையாராகலின்.

அவர்சிலவாறுஉநெறி வழக்குப் பற்றிக் கூறுதன்மாத்திரையரன்றி விவகரிக்கக் கடவரல்லர்.

ஆபினும், அவர்க்கு மற்றவர்க்கும்-அவ்வழக் கழிவழக்கேயன்றி யிழிவழக்குமா மென்றுணர்ச்சி தோன்றற்கியாமே-அத்தலைக் கண்ணின்றவர் கூற்றாக விவகரித்ததனை மறுக்கின்றாம்.

அவர்கூற்றாகவிவகரித்தல்.

தொண்டைத் தழையானு மலரானுமியற்றிய மாலையணிந்தவனன்ட மண்டலமாகலின்-தொண்டைமண்டல மெனல்வேண்டும்.

அதனைமறுத்தல்.

தொண்டைமண்டலமெனின்,

கொவ்வைத் தூற்றையுடைய மண்டலமென்றும் - ஒருவாறு ஆதொண்டைத் தூற்றையுடைய மண்டலமென்றும்-தெளிவின்றிக் கருதப்படுவதன்றித்-தொண்டைத் தழையானு மலரானு மியற்றிய மாலையணிந்தவனு லாளப்பட்ட மண்டலமென்று கருதப்படுவதன்று

அல்லதூஉம்,

சேரன்மண்டலம்-சேரமண்டலம், சோழன்மண்டலம்-சோழமண்டலம், என்பனபோலிம் மண்டலத்திற்கு-முன்னர் துண்டீரனுலாளப் பட்டமையின்-துண்டீரன்மண்டலம் - துண்டீரமண்டலம், துண்டீரன்புரம்-துண்டீரபுரம்-என்றும்-பின்னர் -தண்டகனுலாளப் பட்டமையின்-தண்டகன்-நாடு - தண்டகநாடு-தண்டகன்புரம்-தண்டகபுரம்-என்றும்-பெயர்வழங்கின-அவைபோல் - அதன்பின்னர்,

ஆதொண்டனலாளப் பட்டமையின் - ஆதொண்டன்மண்டலம்-
ஆதொண்டமண்டலம்-.தொண்டன்மண்டலம் - தொண்டமண்டல
மென்றே மரபுவழுவாமை வழங்கல் வேண்டும்.

இதற்குப்பிரமாணம்.

முக்கணுன் கணநாதர்க்கு முதன்மைத் துண்டீரனுண்டு
மிக்கதுண்டீரனுடாய்த் தண்டகவேந்தன்றங்கித்
தக்கதண்டக னன்னுடாய்த் தபனன்மா குலத்துச் சோழன்
றெக்க தார்த்தொண்டமான் காத்தாயது தொண்டனுடே.

இங்ஙனம், பல்காப்பியங்களினும் பலபிரபந்தங்களினும் - பிர
பலவித்துவான்களாக முன்னிருந்த-ஔவையார்.கம்பன் - ஒட்டக்
கூத்தன்-முதலானோர்கள் - பல்வகைக்காரணங் குறித்துச் செய்த
பல்வகைச் செய்யுட்களினும் - ஈண்டு - முன்னும் பின்னும் வகுத்த
மைக்குப் பிரமாணங்களிருக்கின்றன-அவைகளைவிரிக்கிற்பெருகும்
ஆகலின்-அவற்றைத் தனித்தனி காண்டொறு மாங்காங்குணர்ந்
தமைக.

அங்ஙனமன்றித் தொண்டைமண்டலமெனின்,

சான்றோர்வழித்தாய மரபுவழுவிமயங்குவதூஉமன்றிக்-காஞ்சி
விருக்க முடைமையா னந்நகருடைவளாகத்திற்குக் - காஞ்சிமண்
டலமென்று வழங்கிற்று - அங்ஙனமே - தொண்டைத்தூறுடைமை
பற்றித்தொண்டைமண்டலமென்று வழங்கிற்றிஃதே துணிபென்று
திரிபுதோற்றும்,

அன்றித்,

தொண்டைத்தழையானு மலரானு மியற்றப்பட்ட தொங்கல
ணிந்த வோரரையனலாளப்பட்ட மண்டலம் - அவ்வரையனுக்குரி
மை தோன்றநிற்றலின்றிப் பரம்பரையானன்றி யிடைப்பாட்டாற்
பெற்ற அத்தொண்டையை வேற்றுரிமையாகப்பெறற்கு-எவ்வாற்
றினும்-பொருத்தமின்று - இதனைக்கல்வியிற் சாதாரணத்தன்மை
யுடையோரும் -வாதராயண சம்பந்தத்தினினம் போலுமென்று-
எள்குவர்- அன்றிக்- குமரியைக்கொண்டவனைவிட்டுக் கூடவந்தவ
னோடு கூட்டியனுப்பியதுபோலு மென்றசதியாடுவர் - என்னின் -
கற்றுவல்லோர்முகப்பின்.

இஃதன்மை

இதன்கண்-உரிமைமலைவு-பொருண்மலைவு-மரபு மலைவு-வழக்கு மலைவு தகுதிமலைவு-உணர்ச்சிமலைவு-யூகமலைவு-நியாயமலைவு-கருத்து மலைவு-முதலியமலைவின்றொகையே புலப்படுகின்றன.

ஆகலின்-தொண்டைமண்டல மெனலமைவன்று.

தொண்டமண்டலமெனல்வேண்டும்.

அவர் கூற்றுக விவகரித்தல்ஃ

அஃதேல்,

அற்றன்று-பாண்டியன் மண்டலம்-பாண்டிமண்டல மென்று யதுபோல்-தொண்டையன் மண்டலம்-என்பது-விகுதி அன்கெட்டுத் தொண்டைமண்டல மென்றுயது-ஆகலிற்-றொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனைமறுத்தல்,

பாண்டியன் மண்டலம் பாண்டிமண்டல மென்றுயது - மரூஉ வழக்கு - இஃதன்னமன்று மரூஉவழக்காயினும் - பாண்டியென் பது குடிப்பெயர்க் கோளாய்-அவ்வரையனையும் ஒற்றுமை யுரிமை யாலம் மண்டலத்தையு மன்றி வேறுகுறித்தலின்றி நிற்றலி னறி ஞாாலமைத்துக் கொள்ளப்பட்டது - தொண்டைமண்டல மென் பதை - மரூஉவழக்கினமைத்துக் கொள்வே மெனின் இங்ஙனங் குறித்தலின்றிப்-பல்வகையானும் வேறுகுறித்துவழூஉ நிலையைப் பெறுகின்றது. என்னை? தொண்டைத்தழையானு மலரானுந்தொடுத்த தொங்கலணிந்தோனை-தொண்டையன்-எனின்-பிற்காலத்தின் மக்கள்-வரலாறுணராமையின் பெருந் தொண்டையனைத் - தொண் டையனென்று வழங்கினர்கொல் - அன்றிப் புழைக்கை யுடைமை யாற்றும்பி முகத்தவன்கொல்-என்றையுறுதற்கும் - தொண்டு-ஐய னென்று பிரித்தேற்ற பெற்றி கோடற்கும்-ஒருவாற்றாற் கேள்வி யுடையோருங் கொவ்வைத் தழையிற் புனைந்த மாலையுடையன் கொல்- ஆதொண்டைத் தழையிற் கிடத்தப் பட்டவன் கொல்-என்றையுற்று மயங்குதற்கும் இடனாய்ச்சொல்வலி - பொருள்வலி-இன்னிசை வண்ணமுதலிய சிதைவுறநின்று வழூஉ நிலையைப் பெற்று-மண்டலத்தோடணைந்து-ஐயம்-மயக்கம் - கவர்கோண்முதலிய-இழுக்கினையேற்று வழுவினும் வழுவாய் நிற்றலானும் இங்ஙனம்

வழங்கல் அறிஞர் வழக்கன்றாகலானும் இதனை வழூஉ கிலையென்று இஃது இட்டற்றாய்மை கருதி நீராட்டு வந்துசென் றுண்டனாற்றின ௲த்திய தொக்குமென்றெள்கு தற்கிடனன்றிச் சிறிது மமைத்து கோடற்கிட னன்று. ஆகலின், தொண்டைமண்டலமெனலலை வன்று; தொண்டமண்டலமெனல்வேண்டும்.

அவர்கூற்றாகவிவகரித்தல்:

அற்றேல்,

தொண்டை யென்பது - ஆகுபெயராய் நின்று அரையனை புணர்த்தி யுரிமைதோற்றி மண்டலத் தொடுபுணர்ந்து தொண்டை மண்டல மென்றாயிற்று - அதனால் - தொண்டை மண்டல மென வேண்டும்.

[illegible]தல்:

டைப் பாட்டினியதி யிலையின்றிவந்த - கடம்பூர்-என்பது கடம்ப விருக்கத்தையுடைய வூரென்று தன்னளவே புலப்படுத்த மன்றி-ஆகுபெயராய்க கடப்ப மாலையைத் தரித்தவ னூரென்று பிறிதளவு புலப்படுத்துவதன்று - என்னை? ஆகுபெயர் - ஒன்றன் பெயரானதற்கியை பிறிதைத் தொன்முறையுரைப்ப தாகலின்-அங் ஙனமே-பரம்பரை யானன்றி - இடைப்பாட்டி னியதியியைபின்றி வந்த-தொண்டை - மண்டலத்தொடு புணர்ந்துழி தொண்டைடை யுடைய மண்டலமென்று தன்னளவுணர்த்து மன்றித் தொண் டையையுடையான் மண்டலமென்று பிறிதினளவுணர்த்தற் கோர் வகையானும் வலியின்று.

இஃது யூகமின்றி

ஒன்று குறித்தொன்று வரையவொன்று பட்டதென் னு முலக வழக்கினினம் போலுமென்றெள்குதற்கிடனும் ஆதலிற்றொண்டை மண்டலமென லைமைவன்று-தொண்ட மண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றாக விவகரித்தல்:

அற்றேல்,

தொண்டை யுடையனு லாளப்பட்டது தொண்டையென்று- ஈறு கெட்டை விகுதியேற்றுச் சிறப்புப்பெயராய் மண்டலத்தொடு புணர்ந்து-அங்ஙனமாயிற்று. ஆகலிற் றொண்டைமண்டல மெனல் வேண்டும். அதனை மறுத்தல்:

ஐயீற்றின் ஐகார விகுதி போந்து கெட்டுப்புணரிற்-குறியீட்டின் மையிற் சிறப்பன்று-இங்ஙனம் புணர்த்தல்-இயற்பாடுமன்று-அறி ஞர் மரபுமன்று-அங்ஙனமாயினும் - தொண்டையையுடைய தென்

ருகுமன்றித் தொண்டை யுடையனு ளாளப்பட்ட தென்றெரு வாற்றுனு மாவதன்று-அன்றிச் சோழமண்டல முதலியவற்றோடு முரணும்.

அங்ஙன மமைதியின்றிக் கூறினுஞ் சந்தியின்பத்தான்-நாகை பட்டினம் - நாகபட்டினமென்று யதுபோல் - தொண்டை-மண்டலம் - தொண்டமண்டலமென் றுதலேவேண்டும்-இதனை முன்னர் விலக்கியவற் றுட்காண்க - இஃது - பல்வகை யிழுக்கினுஞ் செல்வகைத்து-இரும்பொற் பூண்டு ரீச்சென்று - கரும்பொற் றளைகை புகுத்திய தினினமென் றெள்குதற்கிடனும் - ஆகலிற் றொண்டை மண்டலமென லமைவன்று-தொண்டமண்டல மெனல் வேண்டும்.

அல்லதூஉம்

இங்ஙனம் - தொண்டையென்பது பல்வகைப் பொருட் கிடனுய பெயர்த்திரி சொல்.

ஆதொண்டை யென்பது-தன்னளவே யுணர்த்தும் பெயரி யற்சொல்.

இங்ஙனம் - திரிசொல்லாற் சிறப்புப் பெயர்க் காரணக்குறி செய்தல் வழக்கறிந்தோர் மரபன்று.

இயற்சொல்லாற் காரணக்குறிப் பெயரமைத்தலே யவரது மரபு. இஃது,

ஆதொண்டச் சக்கிரவர்த்தியென்று வழங்கும் அறிஞர் வழக்காலறியப்படும்.

அவர் கூற்றுக விவகரித்தல்:

அற்றேல்,

ஆதொண்டையன்-என்பது - மண்டலத்தொடு புணர்ந்துழி-முதலுமீறுங்கெட்டு-அங்ஙனமாயிற்று - ஆகலின்-தொண்டை மண்டலமெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்:

ஆதொண்டையன்-எனின்

தொகையின்பமும்-இசையின்பமும் - செறிவுகோளுமின்றிப் புல்லென்கை யானும்-சுருங்கியற் பேரின்பங்குறித்து - முன்னும் பின்னுந்தொகை செய்தலமைத்த சான்றோர்-ஓரெழுத்தா னீட்டியற் பெயர்ப்பாற் படுத்தி முடிபு வழூஉச் செயற்கையை யாராகலினும்-இங்ஙனம் தொகுக்கப்படின் - பொருளாட்சி முதலிய குன்றலின்

றிச்செந்நெறியிற் பெறும் பயன்றரலானும் அங்ஙன மமைத்தல்-வழூவேயாம்.

இஃது

ஆதொண்டையன் சக்ரவர்த்தி-ஆதொண்டையச் சக்ரவர்த்தி யென்றது-ஆதொண்டன்சக்ரவர்த்தி - ஆதொண்டச் சக்ரவர்த்தி யென்று வழங்கும் அறிஞர் வழக்காலறியப் படும்.

அவர் கூற்றாக விவகரித்தல்: ஈண்டு,

ஆதொண்டைச் சக்ரவர்த்தியெனின் வழூவென்னெனில்,

அதனை மறுத்தல்:

அங்ஙனம் பெறில்,

அவ்வரையற்கு ஆதொண்டையாற் காரணக்குறிப்பெயரமைப் பான் கருதியவன்றே கருதிய தாதல்வேண்டும் - அங்ஙனமின்றிப் பின்னர் - செங்கோன்மை ஆண்மை முதலிய வண்மை யுடைமை ப்ற்றி முகமனுவமைக்கப்பட்டது-ஆகலின் வழூஉ-இங்ஙனமென்க.

ஈண்டு - ஆதொண்டன்சக்ரவர்த்தி - ஆதொண்டச்சக்ரவர்த்தி யென்பது - புடைப்புள கன்னிப் பொற்குலைக்கண்ணே இடைப் பிளவியையா விரட்டைப் பழம்போன்றொரு பொருட் கிருவயி னெழுந்திடைப் பிளவறியாச் சிறப்பினைப்பெயர் - ஆதொண்டன் சோழன்-ஆதொண்டச் சோழனென்பது மது.

இதனை,

தசரதன் சக்ரவர்த்தி-தசரதச்சக்ரவர்த்தி-நளன்-சக்ரவர்த்தி-நளச்சக்ரவர்த்தி-புரூரன் சக்ரவர்த்தி - புரூரச்சக்ரவர்த்தி-சோழன் ராஜன்-சோழராஜன் - சேரன் ராஜன் - சேரராஜன் - பாண்டியன் ராஜன்-பாண்டியராஜன்-சோழன் மஹாராஜன்-சோழமகாராஜன்-சைவன் சோழன்-சைவச்சோழன் குலோத்துங்கன் - பாண்டியன் குலோத்துங்க பாண்டியன் - சோழன் மன்னன் - சோழமன்னன்-சேரன் மன்னன் - சேரமன்னன் எனவழங்கும் பல்வகை முடிபு வழக்குகளாற் றெளிந்தமையப்படும்.

ஆகலின், ஆதொண்ட னெனல் வேண்டும்.

ஆதொண்டைய னெனல் இழுக்கு.

இங்ஙனம்-இழுக்காய-ஆதொண்டைய னென்பது முதலு மீறுங் கெட்டு மண்டலத்தொடு புணர்ந்து தொண்டைமண்டலமென்றாயிற் றெனினும் மேற்குறித்த பல்வகை வழூஉக் கட்கும் பேரிடனாகத்

தகஷது - இடனறிந்து பிறண்டாத்தின வுண்ணியெரிவிற் புழுங் கிற்று-என்பதற்கும் கருத்தறியாமற் கலப்பான் புகுந்து - அருத்த மிழுக்குமா லென்பதற்கு மினமென்று எள்குதற்கிடனும். ஆகலிற் றொண்டை மண்டலமெனல் வழூஉ. தொண்டமண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றுக விவகரித்தல்:

தொண்டைக் காடுடைமை யாற் றொண்டைமண்டலமெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்: இங்ஙனம், தொண்டமண்டல வரலாற்றை வகுக்குங் காப்பியத்திற் கண்டதேயன்று. இவ்வாறுண்டென்றறி ஞரானிது காறியாங்கேட்டதுமின்று-ஆகலின் வழுவாம்.

இஃது வழியறியாக் கன்று குழிவழியாச் சென்றென் பதற் கினம். இங்ஙனம் வழியறியாது மொழியினும் பொய் கூறினும் பொருந்தக்கூறுக வென்னு மிழந்தோர் வழக்கின் கண்ணு மேற் புடைத்தன்று. என்னை யெனின், காஞ்சி, தில்லை என்னுமரப்பெயர் கள் ஒற்றுமை யுரிமை குறித்து - காஞ்சியைக்கண்டு தில்லையை யடைந்தானென்று வழங்கப்படுகின்றது. அங்ஙனம் தொண்டை யைக்கண்டு என்று எவ்வகை வழக்கினும் வழங்கப்பட்ட தின்று கலினென்க. இதனானுந் தொண்டமண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றுக விவகரித்தல்:

தொண்டைமான்-என்னும் பெயருள் வேற்றோரரை யனிருந் ததிகரித்தமையின் - தொண்டைமான் மண்டல மென்பது மான் கெட்டு அங்ஙன மாயிற்று. ஆகலிற் றொண்டை மண்டல மெனல் வேண்டும். அதனை மறுத்தல்: இங்ஙனம் புணரினும் மேற்குறித்த வழூஉநிலைகட்கிடனும். அன்றி,

தொண்டைமானென்பதேவழூ-என்னை-தொண்டைமானென் பது தனிமொழி தொடர்மொழி யென்பவற்று ளெய்மொழி.

விடை. தனிமொழி.

வினா: தனிமொழியாயின் - இதற்கு முதனிலை - இறுதி நிலை, இடைநிலை என்னை?

விடை. தொண்டை முதனிலை-ஆன் கடைநிலை, மகரம் இடை நிலையாம்.

அதனை மறுத்தல். என்னின், முதனிலைக்கும் - இறுதிநிலைக் கும் இடைப்பாடொத்துநிற்பது - இங்ஙனம் வரூஉம்பெயர்கட்கு

இடைநிலை ஈண்டு முதனிலையீற்றைகாரக் குறுக்கம விலைங்கப பெற்றுத்திசைப்ப விடைப்பாடின்றி யிறுதிநிலை யோடிணைந்து வேறு குறித்த லினிடை நிலையியலமை வின்று.

அன்னீறன்றி - ஆனீறு - ஆறிறந் தன்றியைந் திறந்தியையுந் தொடர்மொழிப் பெயர்க்கன்றி இங்ஙனம்-உரித்தாவதன்று-நயப் பாடின்மையின்-ஆகலின்-இறுதி நிலையியலு மமைவின்று-விகாரத் தால் வேறு குறித்தலின் முதனிலை யியலுமமை வின்று.

அல்லதூஉம். இஃதிடைநிலை யாயின்-கோமான் என்பதற் கும் அங்ஙனம் இடையிலை யாகல் வேண்டும். அங்ஙனமாயின், கோம் - ஆன், இவற்றுள் கோ - அரையன் என்னின் ஆன்-விகுதி அதிகரிப்பின்றி மூங்கைபோலும் யானையுண்ட கனிபோலும்-பெய ர்ச்சியும் பயனு மின்றி வற்றன் மரனி னின்றது. ஆகலின் இஃது இங்ஙனமன்று-ஆகலின் அஃது அங்ஙனமன்று-இஃது கைபடலறி யான் பொய்படலொன்றோ வென்பதற் கினம்.

ஈண்டு தொடர் மொழியாய்க்-கோன்-மான் - கோமான்-என நிலைமொழி யீறுகெட்டு வருமொழி முதனீண்டது. இதனை வழுதி மன்-என்னுங் காப்பிய வழக்கானுங் கண்டுணர்க. அன்றிகோன்-மஹான் கோமான் என நிலைமொழி யீறுகெட்டுவரு மொழி வட மொழியாதலின் விகாரம் பெற்றுக் கோமான் என்றாயது. அன்றி, கோன் - மான் என நிலைமொழி யீறுகெட்டுக் கோமானென் றாயது இங்ஙனமே தொண்டன்மன் தொண்டன்-மஹான்-தொண் டன்-மான் என்பன தொண்டமானென்றாயது - மன் மஹான்-மான் என்பவைக்கு பெருமை யுடையவனென்பது பொருள்.

ஆகலின்

தொண்டைமானெனல் வழு - தொண்டமானெனல் வேண் டும். இங்ஙனமே-சேரன்-மான் சேரமான், மலையன்மான் - மலைய மான், முதலியவுங் காண்க. ஆகலின் மண்டலத்தோடு கூடியவழி தொண்டமண்டலமெனல் வேண்டும். அன்றி தொண்டனாடெனல் வேண்டும். தொண்டைநாடெனல் - வழூஉ என்னை? சேரன் நாடு-சேரனாடு, சோழன் நாடு சோழனாடு, பாண்டியன் நாடு-பாண்டிய னாடு, மலையன் நாடு-மலையனாடு-என்பது போல் தொண்டன் நாடு-தொண்டனாடு எனல் மரபு.

ஆகலின்

தொண்டனாடு எனில்-அடியனென்ன முதல்வேறு குறிக்குமே யெனின் அங்ஙனங் குறிப்பதில் ஆற்றலு மின்று - பயனுமின்று

என்னை-ஆவென்பது - காணவிட்யமாக நின்று உரியானைக் குறிக்கின்ற தாகலின் அன்றி உடையானை யன்றி உடைமை குறித்தலின் றாகலி னென்க.

இங்ஙனம் பல் வகையாற் சொல்வகை செய்தலென் தொண்டை மண்டல மெனின் மேற்குறித்த வண்ணம்-உரிமைமலைவு-பொருண் மலைவு-மரபுமலைவு-வழக்குமலைவு-தகுதிமலைவு - உணர்ச்சிமலைவு-யூக மலைவு-நியாயமலைவு - கருத்துமலைவு - ஐயங்கவர்கோள் - மயக்கம்-வேற்றுக் குறிப்பு-வேற்றுரிமை நிலைமை - நியதியின்மை இயை பின்மை-சொல்வலிச் சிதைவு - பொருள்வலிச் சிதைவு - பொய்க்கோள் அனர்த்தம் - இன்னிசைவண்ணச்சிதைவு - பிளவுபாடு-முதலிய பல்வகை வழுக்கட்கிடனாம்.

அன்றி.

ஆதொண்டையென்பத னீற்றை காரக்குறுக்கங் குற்றலகே பெற்றது—தொண்டை யென்பத னீற்றைகாரக்குறுக்கங் குற்றலகோடொற்றலகுபெற்றது.

என்னை,

ஆதொண்டை-ஆ-தொண் - டை-ஈரலகு - ஓரலகு-அரை யலகு முதலிடைப்பாடு இருகலை-நடுவிடைப்பாடு-காற்கலை-கடையிடைப் பாடு-முக்காற்கலை-ஆகலின் ஆதொண்டை யீற்றைகாரக் குறுக்கங் குற்றலகே பெற்றது.

தொண்டை-தொண்-டை-ஓரலகு அரையலகு முன்னிடைப் பாடு-காற்கலை. பின்னிடைப்பாடு-அரைக்கலை, ஆதலின்தொண்டை யீற்றை காரக்குறுக்கங் குற்றலகோ டொற்றலகும் பெற்றது.

இங்ஙனம்-தொண்டைமண்டலத்தோடு புணருங்கால்-மண்டலம்-ஓரலகு, அரையலகு ஓரலகு அரை யலகு நான்கிடைப்பாடு கால் கால்-அரை-அரை பெற்று வேற்றிசைவிரவி நிற்றலின் புணர்ச்சி யிடை ஐங்கலையைப் பெற்றுப்பிரிந்து வேறு குறிக்கின்றது. ஆகலினும், தொண்டைமண்டலமெனல் வழு. தொண்டமண்டலமெனல் வேண்டும்.

இங்ஙனம்.

பெயர்க்கோள்கட்டு,இயற்சொற்பெயர் முதலிய,சொல்விரிப்பெயர் முதலிய,செஞ்சொற்பெயர் முதலிய, சாதி கூற்றுப் பெயர்முதலிய ஒருமொழிப்பெயர் முதலிய உயர்திணைப் பெயர் முதலிய, பாற் பெயர் முதலிய பொதுவிற்பொதுப் பெயர் முதலிய, தன்மைப் பெயர் முதலிய, வழக்குப்பெயர் முதலிய, வெளிப்படைப் பெயர்

முதலிய, வனைரயியனடைப்பெயர் முதலிய, உயருரிமைப்பெயர் முதலிய, சிறப்புநிலைப்பெயர் முதலிய, சித்துப்பொருட்பெயர் முதலிய, இடுகுறிப்பெயர் முதலிய, மரபுநிலைப்பெயர் முதலிய, எழுத்துத் தொடர்ப்பெயர் முதலிய, பொருணிலைப் பகுபதப்பெயர் முதலிய, பெருஞ்சொல்லாட்சிப்பெயர் முதலிய, முதனூல்வாய்பாட்டுப் பெயர் முதலிய, இவைமுதற்பெயர்ப் பாகுபாடுகளினிலக் கணங்களும், எழுத்துப் புணர்ச்சி, பதப் புணர்ச்சி, தொடர்புப் புணர்ச்சி, பொருட் புணர்ச்சி, வண்ணப் புணர்ச்சி, அளபுப் புணர்ச்சி, இயைபுப் புணர்ச்சி, சமநிலைப் புணர்ச்சி, கலவைப் புணர்ச்சி, தெரிநிலைப் புணர்ச்சி, குறிப்புப் புணர்ச்சி, வேற்றுமைப் புணர்ச்சி, ஒற்றுமைப் புணர்ச்சி, சிறப்புடைப் புணர்ச்சி, பொதுவுடைப் புணர்ச்சி, இருமைப்புணர்ச்சி, முதலிய புணர்ச்சி யிலக்கணங்களும் கூர்ந்துணரார்க்குத் தொண்டமண்டல மென்பத னிலக்கணமும், புலப்படுவதன்று.

இங்ஙன முணர மாட்டதார்,

ஆதொண்டச் சக்ரவர்த்தி யென்பவர்தா மரசு செய்புங்காலத்தில், தம்மாற்கட்டுவித்த ஆலயங்களிற் றம்பெய ரிலச்சினை சிலையின்கட் பொறிப்பித்தனர். ஆண்டும் ஆதொண்டவென்றே இலக்கணவமைதி பெற்றிருக்கின்றது.

இதனை, திருவலிதாயம், திருமுல்லைவாயல், முதலிய சிவதலங்களிற் சென்றேனுங் கண்டு தெளியக்கடவர். இஃதின்னுங் கூறிற் பெருகும்.

தொண்ட மண்டல மென்பதை தொண்ட மண்டல மென்று இச்சென்னை நகரிலிருக்கின்ற வித்துவான்களிற் சிலர் மாறுகவழங்க அதுகுறித்துச் சில பிரபுக்களும், வித்துவான்களும் உபாத்தியாயர்களும், இவ்விரண்டில் இலக்கணவமைதியும் உலகவழக்குமுள்ளது யாது அதனை யொருவாறு தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டபடி.

சிதம்பரம்

இராமலிங்கப்பிள்ளை யவர்களாற்

றெரிவிக்கப் பட்டது.

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

# தமிழ்.

## திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் ராமலிங்கசுவாமிகள் எழுதியது.



தமிழ் என்பது, த்—அ—ம்—இ—ழ் என்னும் 5-அலகு நிலை யுடைத்து த், ம், ழ், ஜடசித்கலை. அ, இ, சித்கலை, அ - அகண்டா கார சித்தைவிளக்கும், ஓங்கார பஞ்சாக்கரத்துள் பதிநிலையக்கர மாம். இ.பதியைவிட்டு நீங்காத சித்தைவிளக்கும், வியவகாரத்தால் அனந்தாகார வியஷ்டிபேதங் காட்டும் ஜீவசித்கலையக்கரமாம்.

பதி சிதாத்ம கலைகளுக்காதாரமாகி, உயிரினுக் குடலையொத் துக் குறிக்கப்படும்.

த், ம், ழ், எழுத்துகளுக்குரை.

த்-ஏழாவது மெய்; ம்-பத்தாவதாகும்; ழ்-15-வது இயற்கை யுண்மைச் சிறப்பியலக்கரமாம்:—ஐந்தலகுநிலையும் உபயகலைநிலை யும், மூன்று மெய் நிலையும் அமைந்துள்ளதும்; சம்புபக்ஷத்தாரால், அனாதியாய் சுத்தசித்தாந்த ஆரிஷரீதிப்படி கடவுள் அருளாணை யால் கற்பிக்கப்பட்டதும்; எப்பாஷைகளுக்கும் பிதுர்பாஷை யென்று ஆன்றோர்களால் கொண்டாடப்பட்டதும்; இனிமை யென்று நிருத்தம் சித்தக்கப்பெற்றுள்ளதுமான தமிழ் என்னும் இயற்கையுண்மைச் சிறப்பியல் மொழிக்குச் சுத்தசிந்தாந்த பத உரை:—

த்—அ-தத்வரூபாதி சிவபோகாந்தமான தசகாரிய இயற்கை யுண்மைக்கட்டளை நிலையில் முன் அலகுநிலைப்பொருள்கூறியவிடத் துக்குறித்த ஏழாவது நிலையாகிய த்-என்பது சிவரூப இயற்கை யுண்மைக் கட்டளையாம்:—

அ—அகண்டாகார சித்கலாரூப ஓங்காரத்துட்பொருட் பிர தம விலக்கிய வியக்தியக்கரம் ;— பன்னீருயிர்நிலையிற் றலையாய முதலக்கரமாதலில், அதுவே பிரமாதி பரசிவாந்த நவநிலைக்கும் அனாதியாதி காரணமாயுள்ள வியற்கையுண்மை பரிபூரணப் பொரு ளிலக்கரம்:—

என்னவே; சிவரூபமாகும். தகராகாசத்தில் சுத்தசிவமாகும் அருட்ஜோதியினைந்துள்ள பூரணானந்த ஸ்வரூப பரபதி வியக்தமாயிற்று:—

ம்—இ சங்காரப்ரணவமாகிய மகாரம்—முக்தான்மாக்களுக்கு ஒளிவண்ணச் சதானந்தமாயும், பெத்தான்மாக்களுக்கு இருள் வண்ண மலரூபமாயும் இருந்து, கற்பாந்தப்பிரளய முடிவின் சிருஷ்டி திதியாதிகளில், சிதான்மசக்தியாகிய ஜீவனுக்கு, அதிகரணமாகவும், முற்குறித்த பத்தாவது நிலயமாகிய ஆன்மாதாரமாகியுமுள்ளதெனப் பொருளாம்;—

இ—பன்னிருயிர் நிலைகளில் மூன்றும் நிலையுயிராகிய இகாரம் திரிகலா ஆன்மவருக்கத்தில், அபரமாகிய சகலாகலரையும், பரமாகிய பிரளயாகலரையும் கீழ்ப்படுத்தி, அவ்விரு கூட்டத்தாருக்கும் மேற்பட்டு நின்ற சுத்தவிஞ்ஞானகலராகிய சிதாத்மாக்களைச் சுட்டுகின்றதாம்.

என்னவே, ஆதார ஆதேயக் கூட்டுறவால் என்றுந் தோன்றி விளங்கும் சிதான்ம வருக்கங்கள், பரபதிலக்ஷியமாகிய பூரணானந்தத்திற்கு அநுபவிகளாக வுரியவர்களெனக் குறிக்கொள்ளல் வேண்டும்.

ழ்-இந்தச் சிறப்பியலக்கரம், பதினெண் மெய்களில், பக்ஷமுடிபின் எண் குறிப்பில் நின்று, சிவயோக பூமியாகிய பரதகண்டத்தில் பௌராணிக தத்துவத்தாற் குறிக்கப்பட்ட ஐம்பத்தாறு தேசங்களுள் சுதேசந்தவிர மற்ற ஐம்பத்தைந்து தேசபாஷைகளிலுமில்லாததாயும், பதினெண்ணிலமாகக் குறிக்கப்பட்ட செந்தமிழ், கொடுந்தமிழ் என்னும் இருமைக்கும் ஒற்றுமையுரிமையாயும், முத்துறைத் தமிழுக்குள் முதன்மைத் துறையானதும், இருக்கு யஜுர் சாமமென்னும் சமஸ்கிருத வேதத்திரயப்பொருள் அனுபவத்தை யெளிதில் கற்றுணர்ந்து தெளிந்து அநுபவிக்கிறதற்குப் பரமேசுரனது திருவருளைப் பஞ்சாக்ஷர முத்தொழிற் காரியமான பஞ்சதசாக்கரியால் பிரத்தியக்ஷாநுபவம் சித்திக்கச் செய்யும் நிலயமானதும்:—

ஸ்ரீ மணிவாசகர், சம்பந்தர், நாவரையர், சுந்தரர், திருமூலர் முதலிய மகாபுருஷர்களால் சாத்திர தோத்திரங்களாக அருளிச் செய்யப்பட்டிருக்கும் திருவாசகம், தேவாரம் திருமந்திரம் என்னும் பரமார்த்த ரகசியங்களை யுடையதும்,—பலநாள் நைஷ்டிக அதிகாரணம் பூண்டு போதகாசாரியர் சந்நிதியில் தாழ்ந்து சக

பாடிகளோடு சூழ்ந்து சுர ஒலிபேதங்களைத் தேர்ந்து, உழைப் பெடுத்து ஓதினாலும் பாடமாவதற்கு அருமையாயும், பாட்டினா லும் பாஷியம், வியாக்கியானம், டீக்கா, டீக்கா, டிப்பணி முதலிய உரைகோள்கருவிகளைப் பொருள்கொள்ளத் தேடவேண்டியதா யும், அவ்வவைகளையும் தேடிக்கைவரினும், அக்கருவிகளால் போத கம் பெறவேண்டியதற்கு பாஷியகாரர்கள், வியாக்கியானகர்த்தர் கள், டீக்காவல்லபர்கள், டீக்கா சூசகர்கள் முதலிய போதக உப போதகாசாரியர்கள் கிட்டுவது அருமையில் அருமையாயும் இருக் கிற ஆரியம், மகாராட்டிரம், ஆந்திரம், என்ற பற்பல பாஷை களைப் போலாகாமல் பெரும்பாலும் கற்பதற்கு எண்ணளவு சுருக் கமாயும், ஒலியிலேசாயும், கூட்டென்னுஞ் சந்தி அதிசுலபமாயும், எழுதவும், கவிசெய்யவும் மிக நேர்மையாயும், அக்ஷர ஆரவாரம், சொல்லாடம்பரம் போதுபோக்கு, பெருமறைப்பு முதலிய பெண்மை அலங்காரமின்றி எப்பாஷையின் சந்தசுகளையும் தன் பாஷையுள்ளடக்கி ஆளுகையால், ஆண்டன்மையைப் பொருந்திய தான தற்பாஷைக்கே அமைவுற்ற ழ், ற், ன், என்னும் முடி நடு அடி சிறப்பியலக்கரங்களில் முடிநிலை இன்பாநுபவசுத்த மோனா தீதத்தைச் சுட்டறச்சுட்டும் இயற்கை யுண்மைத் தனித்தலைமைப் பெருமைச் சிறப்பிய லொலியாம்.

உரைகூறிப்போந்த சுத்த சித்தாந்த ஆரிடரீதி முப்பதவுரைப் பொழிப்பு: மருளியற்கைமல இருளைப்பரிபாக சத்தியால் அரு ளொளியாக்கி, அதற்குள்ளீடான சிதாத்ம சிற்கலாசக்தியென் னும் சுத்த ஆன்மாவை, தகர, ககன, நடன, அருட்பெருஞ்ஜோதி யென்னுஞ் சுத்த சிவானந்த பூரணத்தைச் சுத்த மோனாதீதவிய லால் அநுபவிக்கும் இயற்கை யுண்மையே தமிழ் என்னும் சொற் பொருள் சுட்டினவாறு காண்க.

இதன்கருத்து யாதெனில், தமிழ்ப்பாஷையே அதிசுலபமாகச் சுத்த சிவாநுபூதியைக் கொடுக்குமென்பதாம்.

## வள்ளலார்பாடிய தனிப்பாடல்.

தத்தா தனத்தைத்தாவென் றரங்கன் றனிடித்தாய்
தத்தா தனத்தைத்தாவென் றரங்கன் றனிடித்தாய்
தத்தா தனத்தைத்தாவென் றரங்கன் றனிடித்தாய்
தத்தா தனத்தைத்தாவென் றரங்கன் றனஞ்செல்லுமே,

சிவமயம்.

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை:

# ஜீவகாருண்ய வொழுக்கம்.

## (இரண்டாம் பிரிவு.)

உலகத்தில் உயர்பிறப்பாகிய மனிதப்பிறப்பைப் பெற்றுக் கொண்டவர்கள் இந்தப் பிறப்பினால் அடையத்தக்க தலைப்பட்ட ஆன்ம இன்பசுகத்தைக் காலமுள்ள பொழுதே விரைந்து அறிந்து அடையவேண்டும். அந்தத் தலைப்பட்ட ஆன்ம வின்பவாழ்வு எத்தனை வகையென் றறியவேண்டில் இம்மை யின்ப வாழ்வு, மறுமையின்ப வாழ்வு, பேரின்பவாழ்வு என மூன்றுவகை யென் றறியவேண்டும்.

அவற்றுள், சிறிய தேககரணங்களைப் பெற்றுச் சிறியமுயற்சி யால் சிறிய விடயங்களைச் சிலநாள் அனுபவிக்கப்படுகின்ற இன் பத்தை இம்மை யின்பவாழ்வு என்றறியவேண்டும. இம்மை யின்ப லாபமாவது மனிதப்பிறப்பில் தேகத்திலும், கரணங்களி லும், புவனத்திலும், போகங்களிலும்குறைவின்றி நல்லறிவு உடை யவர்களாய்ப் பசி பிணி, கொலை முதலிய தடைகளில்லாமல் உறவி னர், சிநேகர், அயலார் முதலியருந் தழுவ சந்ததி விளங்கத்தக்க சற்குணமுள்ள மனைவியோடு விடயங்களைச் சிலநாள் அனுவிக் கின்றதை இம்மையின்ப லாபமென் றறியவேண்டும். மறுமை யின்பமாவது யாதெனில், உயர் பிறப்பில் பெரிய தேக கரணங்க ளைப் பெரிய முயற்சியால் பெரியவிஷயங்களைப் பலநாள் அனுப விக்கின்ற இன்பத்தை மறுமை யின்பவாழ்வு என்றறியவேண்டும்.

மறுமை யின்பலாபம் எதுவென்னில், உயர் பிறப்பைப் பெற்று இம்மை யின்பலாபத்தைக் குறிக்கப்பட்ட நற்குணங்க ளெல்லாம் பொருந்த உயர்நிலையில் சுத்தவிடயங்களைப் பலநாளனு பவிக்கின்ற இன்பலாபத்தை மறுமை யின்பலாபமென் றறிய வேண்டும். மறுமை யின்பலாபத்தை யடைந்தவர் பெருமை யாதென் றறியவேண்டில் அன்பு, தயை, முதலிய சுபகுணங்களைப்

பெற்றச் சுத்தவிடய வின்பங்களை எண்ணியபடி• தடைபடாமல் முயன்று பலநாளனுபவித்துப் புகழ்பட வாழ்தலென் றறிய வேண்டும்.

பேரின்பமாவது எல்லாத்தேகங்களையும், எல்லாக்கரணங்களை யும், எல்லாப்புவனங்களையும், எல்லாப் போகங்களையும், தமது பூரண வியற்கை விளக்கமாகிய அருட்சத்தியின் சந்நிதி விசேடத் தால் தோன்றி விளங்க விளக்கஞ்செய்விக்கின்ற பூரண வியல், இயற்கையுண்மை வடிவினராகிய கடவுளின் பூரணவியற்கை இன் பத்தைப் பெற்று எக்காலத்தும், எவ்விடத்தும், எவ்விதத்தும், எவ்வளவும் தடைபடாமல் அனுபவிக்கப்படுகின்ற ஒப்பற்ற அந் தப்பெரிய இன்பத்தைப் பேரின்பவாழ்வென் றறியவேண்டும். பேரின்பலாபம் யாதெனின், யாவுந் தாமாய்விளங்குவதே.

இம்மை இன்பத்தையடைந்தவர் பெருமை யெதுவென்றறிய வேண்டில் அன்பு,தயை,ஒழுக்கம், அடக்கம்,பொறுமை,வாய்மை, தூய்மை முதலிய சுபகுணங்களைப்பெற்று, விடய வின்பங்களை வருந்தி முயன்று, அனுபவித்துப் புகழ்படவாழ்தலென் றறிய வேண்டும். பேரின்ப லாபத்தை யடைந்தவர் பெருமை யெது வென் றறியவேண்டில், தோல் நரம்பு என்பு தசை இரத்தம் சுக் கிலம் முதலிய அசுத்த பூத காரியங்களும், அவற்றின் காரணங்களா கிய அசுத்த பிரகிருதி அணுக்களுமாகிய தேகத்தைமாற்றி மாற்று இவ்வளவு என்றறியப்படாத உயர்ந்த பொன்னாகிய சுத்த பூதகா ரிய தேகத்தையும் பொன் வடிவாகத் தோன்றுதல் மாத்திரமே யன்றி ஆகாயம் போல் பரிசிக்கப் படாத சுத்த பூதகாரண தேகத் தையும் தோன்றப் படுதலுமின்றி, ஆகாயம் போல விளங்குகின்ற ஞான தேகத்தையும் பெற்றவர்களா யிருப்பார்கள். உள்ளே மண் ணினது திண்மையால் தறிக்கப்படார்கள். புறத்தே மண் கல் முத லிய வற்றால் எறியினும் அவை அவர் வடிவில் தாக்குவனவல்ல. உள்ளே நீரினது தண்மையால் குளிர்ப் படார்கள். புறத்தே நீரி லழுத்தினும் அவர் வடிவம் அழுந்தாது. உள்ளே நெருப்பினது வெம்மையால் சுடப்படார்கள். புறத்தே நெருப்பிற் சுடினும் அவர் தேகத்தில் சூடும் வடுவும் தோன்றுவன வல்ல. உள்ளே காற்றினது ஊக்கத்தால் அசைக்கப்படார்கள். புறத்தே காற்று அவர் வடிவைப் பரிசித்தசைக்கமாட்டாது. உள்ளே ஆகாயத்தின் தலைப்பினால் அந்தரிக்கப் படார்கள். புறத்தே ஆகாயம் அவர் தேக

தைத அநந்தாக்க மாட்டாது. ஆதாரத்தி லன்றி நிராதாரத்திலும் அவர் தேகம் உலாவும் அவரது கண்கள் முதலிய கரணேந்திரியங் களும், வாக்கு முதலிய கர்மேந்திரியங்களும் பார்த்தல் முதலிய பேசுதல் முதலிய விஷயங்களையும் பற்றுவனவல்ல. தயையினால் விஷயங்களைப் பற்றவேண்டில் சுவர், மலை, முதலிய தடைகளும், அவர் கண்களை மறைப்பனவல்ல. அண்ட பிண்டங்களில் அகம்புற முதலிய எவ்விடத்துமுள்ள விடயங்களை அவர் கண்கள் இருந்த விடத்திருந்தே கண்டறியும். அண்டபிண்டங்க ளெவ்விடத்திருந்து பேசினும் அவர் செவிகள் இருந்த விடத் திருந்தே கேட்டறியும். எவ்விடத்தி லிருக்கின்ற ரசங்களையும் அவர் நா இருந்த விடத்திரு ந்தே சுவைத்தறியும். எவ்விடத் திருக்கின்ற பரிசங்களையும் அவர் மெய் இருந்த விடத்திருந்தே பரிசித்தறியும். எவ்விடத் திருக்கின்ற கந்தங்களையும் அவர் மூக்கு இருந்த விடத்திருந்தே முகந்தறியும். எவ்விடத்தி லிருக்கின்றவர்களுக்கும் அவரதுகைகள் இருந்தவிடத் திருந்தே கொடுத்தல் கூடும். எவ்விடத்திலும் அவரது கால்கள் இருந்த விடத்திருந்தே நடத்தல் கூடும். அவரது வாக்கு எவ்விட த்தி லிருக்கின்ற எவ்வெவர்களோடும் இருந்தவிடத்திருந்தே பேசு தல் கூடும். மற்ற இந்திரியங்கள் இருந்தவிடத் திருந்தே எவ்விட தும் ஆனந்தித்தல் கூடும். அவரது மன முதலான கரணங்கள் எப்படிப்பட்ட விஷயங்களையும் பற்றுவனவல்ல. தயவினால் பற்றத் தொடங்கில், எல்லா உயிர்களினது எல்லாச் சங்கற்ப விகற்பங்களை யும் ஒரு நிமிடத்தில் ஒருங்கே நினைத்து விசாரித்து நிச்சயித்துக் கொள்ளும். அவரறிவு ஒன்றையும் சுட்டறியாது. தயவினால் சுட்டி யறியத் தொடங்கில் எல்லா அண்டங்களையும், எல்லா வுயிர்களை யும் எல்லாப் பண்புகளையும், எல்லா வனுபவங்களையும் எல்லாப் பயன்களையும் ஒருங்கே ஒரு நிமிடத்தில் சுட்டி யறியும். அவர்கள் நிர்க்குணத்த ராவார்கள் அல்லது சாத்துவிக தாமச இராசத முத லிய முக்குணங்களாலும் உள்ளே விகாரப் படார்கள். புறத்தே அவரது குணங்கள் கரணங்களைப் பற்றுவனவல்ல. உள்ளே பிரகி ருதியினால் மூடப்படார்கள். புறத்தே அவரது பிரகிருதி குணங் களைப் பற்றுவனவல்ல. உள்ளே கால தத்துவத்தால் வேற்றுமைப் படார்கள். புறத்தே காலத்தால் அவரது திருமேனி தடைபடாது உள்ளே நியதி அளவால் அளக்கப்படார்கள். புறத்தே நியதியால் அவரது திருமேனி யரைபடாது. அன்றிக் காலம், வித்தை, ராகம்,

புருடன், முதலிய மற்றை தத்துவங்களும் தத்துவ காரியங்களும் அவர்களுக் கில்லை. மாயையால் பேதப்படார்கள். சுத்த மகா மாயைக் கடந்து அதன்மே லறிவுருவாக விளங்குவார்கள். ஆகாரம், நித்திரை, மைதுனம், பயம், என்பவைகளால் தடை படார்கள். அவர்கள் தேகத்திற்குச் சாயை, வியர்வை, அழுக்கு, நரை, திரை, மூப்பு, இறப்புமுதலிய குற்றங்கள் உண்டாவனவல்ல. பனி, மழை, இடி, வெயில் முதலியவற்றாலும், தேவர், முனிவர், மனிதர், நாகர், மிருகம், பறவை, ஊர்வன, தாபரம் என்பவைக ளாலும் எவ்விடத்தும், எக்காலத்தும் அவர் தேகம் வாதிக்கப் படாது. வாள், கத்தி, முதலிய கருவிகளாலும் கண்டிக்கப்படாது. எல்லா அண்டங்களும் அணுக்கள்போலச் சிறியதாகத் தோற்றி லும் எல்லா அணுக்களும் அண்டங்கள்போலப் பெரிதாகத்தோற் றிலும், அவர் தேகத்திற்கு உரித்து. இறந்தோரை யெழுப்புதல் வார்த்திபரை வாலிபராக்கல் முதலிய கரும சித்திகளும், யோக சித்திகளும், ஞானசித்திகளும், அவர்சந்நிதியில் விளங்கும். சிருஷ் டித்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அனுக்கிரகித்தல் என் கிற கிருத்தியங்களும், அமர் நினைத்த மாத்திரத்தில் நடக்கும். பஞ்சகர்த்தாக்களும் அவர் கடைக்கண்பார்வையால் தங்கள் தங் கள் தொழில் நடத்துவார்கள். அவர்கள் அறிவு கடவுளறிவாக யிருக்கும். அவர்கள் செய்கை கடவுள் செய்கையாக இருக்கும். அவர்கள் அனுபவம் கடவுள் அனுபவமாயிருக்கும். சர்வ சத்தி யுடையவர்களாய் எக்காலத்தும் அழிவில்லாதவர்களாய் ஆண வம், மாயை, கர்மம் என்னும் மும்மலங்களும், அம் மலவாதனைக ளும், இல்லாதவர்களாய்ப் பேரருள் வண்ணமுடையவர்களாய் விளங்குவார்கள். சடமாகிய ஒரு துரும்பும் அவரது திருநோக்கத் தால் உயிர்பெறும், பஞ்சகிருத்தியங்களும் செய்யும். அவரது பெருமை வேதாந்த சித்தாந்த கலாந்த போதாந்த நாதாந்த யோகாந்தம் என்கின்ற ஆந்தங்களிலும் விளங்கும். அவற்றைக் கடந்தும் விளங்குமென்று அறியவேண்டும். இவை பேரின்பத்தை யடைந்தவர்கள் பெருமையென்று அறியவேண்டும்.

இம்மூவகை யின்பலாப வாழ்வையும், எதனால் பெறக்கூடு மென் றறியவேண்டில், கடவுளின் இயற்கை விளக்கமாகிய அரு ளின் ஏகதேசத்தைக்கொண்டும், அருட் பூரணத்தைக் கொண்டும் அடையக்கூடுமென் றறியவேண்டும். மூவகை யின்பங்களில் அரு

ளின் ஏகதேசத்தைக்கொண்டு அடையத்தக்கவை யெவை? அருட் பூரணத்தைக்கொண்டு அடையத்தக்கவை யாது? என்றறியவேண்டில், இம்மை யின்பலாபம், மறுமை யின்பலாபம், என்கின்ற இரண்டையும் அருளின் ஏகதேசத்தைக்கொண்டு அடையக்கூடுமென்றும், பேரின்பலாபமென்கின்ற ஒன்றையும் அருட்பூரணத்தைக்கொண்டு அடையக்கூடுமென்றும் அறியவேண்டும். கடவுளின் இயற்கை விளக்கமாகிய அருள் எந்த வண்ணம் உடையது என்றறியவேண்டில், சொல்லுவார் சொல்லும்வண்ணங்களும் நினைப்பார் நினைக்கும்வண்ணங்களும், அறிவார் அறியும்வண்ணங்களும் அனுபவிப்பார் அனுபவிக்கும் வண்ணங்களும் ஆகிய சர்வசத்தி வண்ணங்களும், தனது ஏகதேச வண்ணங்களாக விளங்க விளக்கி விளங்குகின்ற பூரணவிளக்க வண்ணத்தையுடையது என்று அறியவேண்டும். அந்த அருள் எவ்விடத்து விளங்குகின்றதென் றறியவேண்டில், நோக்குவார் நோக்குமிடம், நோக்கப்படுமிடம், கேட்பார் கேட்குமிடம், கேட்கப்படுமிடம், சுவைப்பார் சுவைக்குமிடம், சுவைக்கப்படுமிடம், முகருவார் முகருமிடம் முகரப்படுமிடம், பொருந்துவார் பொருந்துமிடம் பொருந்தப்படுமிடம், பேசுவார் பேசுமிடம் பேசப்படுமிடம், செய்வார் செய்யுமிடம் செய்யப்படுமிடம், நடப்பார் நடக்குமிடம் நடக்கப்படுமிடம், விடுவார் விடுமிடம் விடப்படுமிடம், நினைப்பார் நினைக்குமிடம், நினைக்கப்படுமிடம், விசாரிப்பார் விசாரிக்குமிடம் விசாரிக்கபடுமிடம், துணிவார் துணியுமிடம் துணியப்படுமிடம், தூண்டுவார் தூண்டுமிடம் தூண்டப்படுமிடம், அறிவார் அறியுமிடம் அறியப்படுமிடம், அனுபவிப்பார் அனுபவிக்குமிடம் அனுபவிக்கப்படுமிடம், முதலிய எவ்விடங்களிலும், எக்காலத்தும் விளங்குகின்றதென்று அறியவேண்டும். அந்த அருளை எதனாற் பெறக்கூடுமென் றறிய வேண்டில் ஜீவகாருண்ய ஒழுக்கத்தினாற் பெறக்கூடுமென் றறியவேண்டும். அன்றியும் தனக்கென்று சுதந்தரமாக நித்தியமாகிய அருட்டேகத்தைப்பெற்றுக்கொண்டால் பின்பு வேறொரு தேகத்தில் குடிபோக மாட்டாதென்றும் அறியவேண்டும். சிலர் முன்தேகம் எடுத்தும் பின் தேகம் எடுப்பதும் இல்லை. இப்பொழுது எடுத்ததேகம் அழிந்தால் தேகியும் அழிந்துவிடுவானென்றும் சிலர் முத்தியடைவானென்றும் சிலர் பர்வ புண்ணியங்களை எக்காலத்தும் அனுபவிப்பானென்றும் சிலர் தேகம் இல்லாமல் தேகம் அழிந்த விதத்திருப்பானென்றும் பலவாறு வாதிப்பது எதனாலென்றறியவேண்

டில் அவரவர்களும் தேகமே ஆன்மாவென்றும் போகமே முத்தி யென்றும் கொள்ளப்பட்டவர்களாதலால் மூடமாகிய தேகத்தில் அறிவாகிய ஆன்மா ஒருவன் உண்டென்றும் அவனுக்குப் பந்த முத்தி உண்டென்றும் முத்தியடைகின்ற பரியந்தம் பந்தவிகற்பத்தால் வேறு வேறு தேகம் எடுப்பானென்றும் பிரத்யட்ச அநுபவமான பிரமாணங்களால் உண்மையை அறிந்து கொள்ளப் படாதவர்களென்றும் அவர்கள் கொள்கைக்குப் பிரமாணமும் யுத்தியும் அநுபவமும் இல்லையென்று அறியவேண்டும். ஜீவர்கள் தங்கள் சுதந்தரத்தாலே தேகபோகங்களை யடைகின்றார்களென்றால் தங்கள் இச்சைக்கடுத்த தேகங்களையும் போகங்களையும் அடையவேண்டும் அப்படியின்றிச் சிலர் இச்சைக்கடுத்த பழுதற்ற அங்கமுள்ளவர்களாகவும் சுகங்களை யனுபவிக்கின்றவர்களாகவும் சிலர் இச்சைக்கு அடாத பழுதுள்ள அங்கமுள்ளவர்களாகவும் துக்கங்களை அனுபவிக்கின்றவர்களாகவும் இருக்கின்றார்கள். ஆகவில் ஜீவர்கள் தேக போகங்களைத் தங்களிச்சையால் அடைந்தவர்களல்லவென்றும், அப்படி அடைவது இயற்கை யென்றால் இயற்கையென்பது எக்காலத்தும் வேறுபடாமல் ஒரு தன்மையாக இருத்தல் வேண்டுமென்றும் அப்படி ஒரு தன்மையாக இராமல் பல வேறு வகைபடுதலால் இயற்கை யல்லவென்றும் கடவுள் இச்சையென்றால் கடவுள் கருணையும் நீதியும் உடையவராதலில் எல்லாச் சீவர்களுக்கும் ஒரு தன்மையாகச் சுக அநுபவங்களையே அடைவிக்கவேண்டும் அப்படி அடைவிக்காமையால் கடவுள் இச்சை யல்லவென்றும் கடவுளருளால் சிருஷ்டித்தமுதல் சிருஷ்டியில் தமது இயற்கை அநுபவிக்கும்படி விதித்த விதிகளைப் பழகாமையால் முயற்சி தவறினபடியால் அந்த அஞ்ஞானமல வாசனையின் முயற்சி பேதங்களால் பின் பல பல தேக போகங்கள் இரண்டாவது சிருட்டியில் நேரிட்டதென்றும் பிரமாணித்தறிய வேண்டும். எடுத்துக்கொண்ட தேகம் தவறினால் வேறு தேகம் எடுப்பதில்லையென்றால் முதல் சிருஷ்டி தொடங்கி இதுவரையில் அழிந்த தேகங்களுக்கு அளவில்லை; அப்படியே ஆன்மாக்களுக்கும் அளவில்லை. ஆகவே இனி ஆன்மாக்கள் தேகங்களை எடுக்காமல் இருக்கவேண்டும். அப்படியில்லை தேகங்களை எடுத்துக்கொண்டே யிருக்கிறார்கள் ஆயின் ஆன்மாக்களை நூதனமாகச் செய்து அது வருவதற்கு நூதன நூதனமாகத் தேகங்களை வருவிப்பதென்றால் நூதன நூதனமாகத் தேகமாத்திரம் செய்யக்கூடும், தேகத்திலிருக்கிற ஆன்

மர்வை நூதன நூதனமாகச் செய்யப்படாது. ஆன்மா எக்காலத்தும் உள்ளதாய் விளங்கப்பட்டது. அதுதோன்றுதலும், அழிதலுமில்லை; அதை ஆக்கவும் அழிக்கவும்படாது ஆன்மாக்களும் குடத்தைப்போல செய்யப்படுவதானால் சுகதுக்கங்களை அநுபவிக்க அறியாது புண்ணிய பாவங்களை அடையமாட்டாது. குடம் அழிவதுபோல் அழிந்துபோய்விடும். அழியுமானால் பந்தமுத்திகளும் இல்லை. புண்ணியபாவங்களுமில்லை. ஆதலால் குடம் உடைகின்றபோது குடத்தினுள் இருந்தகாற்றும் ஆகாயமும் உடையாமல் இருந்தது சிறுவர்களுக்கும் தெரியும். ஆகலில் தேகம் அழியும்போது தேகத்தினுள் இருக்கின்ற ஆன்மவிளக்கமும் கடவுள் விளக்கமும் அழியாதென்றும், ஆன்மாக்கள் முயற்சிபேதத்தால் தேகபோக பேதங்களையடைவது உண்மையென்றும் யுத்தியால் அறியவேண்டும் ஒருதாய் தந்தைகளுக்கு ஒருகாலத்தில் இரட்டைப்பிள்ளை பிறக்கின்றது. அவற்றுள் ஒருபிள்ளை சிவத்தது. ஒருபிள்ளை கறுத்தது. ஒருபிள்ளை அங்கப்பழுதுள்ளது ஒருபிள்ளை அங்கப்பழுதில்லாதது. ஒருபிள்ளை பால்குடிக்கின்றது. ஒருபிள்ளை பால்குடிக்கில் சத்தம்பண்ணுகின்றது. ஒருபிள்ளை வியாதியுள்ளது. ஒருபிள்ளை வியாதியில்லாதது. ஒருபிள்ளை இரண்டு வயதில் பேசுகின்றது. ஒருபிள்ளை பேசத்தெரியாமலிருக்கின்றது. இந்த பேதம் எவ்விடத்தில் யாதொரு ஏதுக்களுமில்லாமல் வந்ததை யூன்றி விசாரிக்கில் முன்பிறப்பில் எடுத்த தேகத்தின் கர்மமாகிய முயற்சி பேதங்களென்றும், இந்த இரட்டைப்பிள்ளைக்கு மூன்று வயதில் விளையாடும்போது தனித்தனி தாய்தந்தைகள் கொடுத்த தின் பண்டங்களை வைத்துத் தின்றதருணத்தில் இவ்விரண்டு பிள்ளைகளும் தவிர வேறு பிள்ளை யொன்று வந்தால் அதைக் கண்டு இவ்விருவரில் ஒருபிள்ளை தன்கையிலிருக்கின்ற தின்பண்டத்தைக் கொடுக்கின்றது. மற்றொரு பிள்ளை கொடுக்கப்படாதென்று தடுக்கின்றது. ஒருபிள்ளை புத்தகத்தை எடுத்துச் சிறுவர் படிக்கின்றதுபோல் படிக்கின்றது. மற்றொருபிள்ளை புத்தகத்தைப் பிடுங்கி யெறிந்து படிக்கப்படாதென்று அடிக்கின்றது. ஒருபிள்ளை பயப்படுகின்றது மற்றொருபிள்ளை பயப்படாமலிருக்கின்றது. இப்படியே இந்தப்பிள்ளைக்கு தயை, அன்பு, செய்கை முதலியவைகள் தாய்தந்தையர்கள் கற்பிக்காத காலத்திற்றானே உள்ளதாகவும் இல்லாததாகவும் எப்படி வந்ததென்று விசாரிக்கத்தொடங்கில், இந்த இரண்டு பிள்ளைகளுக்கும் முன்பிறப்பில் எடுத்த

தேகத்திலிருந்த வாசனை இந்தப்பிறப்பில் இந்தத்தேகத்தில் கற்பியாமல் வந்ததென்றும் அனுபவத்தால் கருதியறியவேண்டும். இப்படியறிந்தால் ஜீவர்களுக்கு முன்னும் பின்னும் தேகமுண்டென்பது நன்றாகத்தெரியும். இப்படி யறியமாட்டாமையால் பிறப்பில்லை என்கிறார்களென் றறியவேண்டும். அன்றி, இந்தத்தூல தேகம் அழியாமலிருக்கின்றபோதே சொற்பனத்தில் ஆன்மா வேறு வேறு தேகமெடுத்துப் பலபல விசித்திரங்களை யனுபவிக்கின்றதானால் இந்ததேகம் நீங்கும்போது வேறு தேகமெடுத்து வாசனைக்கடுத்த அனுபவங்களை அனுபவிக்குமென்பதைச்சொல்ல வேண்டுவதில்லை. அன்றி, சித்தி விசேஷத்தால் இந்ததேகத்தி லிருந்த ஒருவன் இந்த தேகத்தைவிட்டு வேறு தேகத்திற்குப் பிரவேசிக்கிறான் என்றால் இந்த தேகம் அழியும்போது இதிலிருந்த ஆன்மா கன்மபேதத்தால் வேறுதேகத்தில் பிரவேசிக்க வேண்டுமென்பதைச் சொல்லவேண்டுவதில்லை.

அன்றி, ஒருபட்சியானது காலவேற்றுமையாலும் குணவேற்றுமையாலும், முன் முட்டை என்கின்ற ஒரு தேகத்திலிருந்து பின்பு குஞ்சு என்கின்ற மற்றொரு தேகத்தினால் வருகிறதானால் ஆன்மாக்கள் கர்மபேதத்தால் இந்தத் தேகத்திலிருந்து வேறு தேகத்தில் வருமென்பது சொல்லவேண்டுவதில்லை.

அன்றி, ஒரு குளவியால் ஒரு கிருமி புழுவென்கிற தேகத்திலிருந்து குளவியென்கிற தேகத்தில் வருமானால் கருமத்தினால ஒரு ஆன்மா ஒரு தேகத்திலிருந்து மற்றொருதேகத்தில் வருமென்பதைச் சொல்லவேண்டுவதில்லை.

அன்றி, ஒரு ஆன்மா ஒருபிறப்பிற்றானே சிசு தேகத்திலிருந்து பாலதேகத்திலும், பாலதேகத்திலிருந்து வாலீபதேகத்திலும், வாலீபதேகத்திலிருந்து வார்த்தீபதேகத்திலும் வருமானால் அந்த ஆன்மா கன்மபேதத்தால் வேறு பிண்டதேகத்தில் வருமென்பதைச் சொல்லவேண்டுவதில்லை. அன்றி, மந்திர தந்திர பேதத்தால் ஒரு பிறப்பிற்றானே பெண் தேகத்திலிருந்து ஆண்தேகத்திலும் ஆண்தேகத்திலிருந்து பெண்தேகத்திலும், ஆன்மாக்கள் வருமானால் கர்மபேதத்தால் வேறுதேகம் எடுக்குமென்பது சொல்ல வேண்டுவதில்லை.

இதுவடலூர் இராமலிங்கசுவாமிகள் எழுதிவைத்திருந்த குறிப்பினுட்கண்டது.

---

# ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள்

## திருவாய் மலர்ந்தருளிய உண்மைநெறி.

நாம் பெறும் புருஷார்த்தம் நான்கு.

1. ஏமசித்தி.
2. சாகாக்கல்வி.
3. தத்துவநிக்கிரகஞ்செய்தல்.
4. கடவுணிலையறிந்தம்மய மாதல.

இவை பெறுவதற்கொழுக்கம் நான்கு வகைப்படும.

1. இந்திரியவொழுக்கம்.
2. கரணவொழுக்கம்.
3. ஜீவவொழுக்கம்
4. ஆன்மவொழுக்கம்

### 1. இந்திரிய வொழுக்கம்.

கொடியசொல் செவிபுகாது, நாதமுதலிய ஸ்தோத்திரங்களைக் கேட்டல்; அசுத்தபரிசஞ் செய்யாதிருத்தல்; குரூரமாகப் பாராதிருத்தல்; உருசிவிரும்பாதிருத்தல்; சுகந்தம் விரும்பாதிருத்தல்; இன்சொல்லாடல்; பொய்சொல்லாதிருத்தல்; ஜீவ ஹிம்சை நேரிடுங்காலத்தில் எவ்வித தந்திரத்திலாவது தடைசெய்தல்; ஜீவோபகாரநிமித்தமாய் சாதுக்கள் வாசஸ்தானங்களிலும், திவ்ய திருப்பதிகளிலுஞ் சஞ்சரித்தல்; நன்முயற்சியிற் கொடுத்த லெடுத்தலாதிசெய்தல், மிதாகாரஞ்செய்தல்: மிதபோகஞ்செய்தல்; மலஜலோபாதிகளைக் கிரமமாய் ஒழித்தல்; காலபேதத்தாலும் உஷ்ணபாசத்தாலுந் தடைநேர்ந்தால் ஒஷதிவகைகளாலும், பௌதிக மூலங்களாலும், சரபேத, அஸ்தபரிசதந்திரத்தாலும், மூலாங்கப் பிரணவத்யான சங்கற்பத்தாலுந்தடைதவிர்த்துக்கொள்ளல்;(மந்தரானுக்கு) சுக்கிலத்தை அக்கிரமாதிக்கிரமத்தில் விடாதுநிற்றல்; (தீவிரதானுக்கு) எவ்வகையிலுஞ் சுக்கிலம் வெளிப்படாமை நிறுத்தல்; இடைவிடாது கோசத்தைக் கவசத்தால் மறைத்தல்; இதுபோல் உச்சி, மார்பு முதலிய அங்கங்களையுமறைத்தல், சஞ்சரிக்குங் காலத்தில், காலிற்கவசந்தரித்தல்; அழுக்காடையுடுத்தாதிருத்தல் முதலியவாம்.

### 2. கரணவொழுக்கம்.

மனத்தைச் *சிற்சபையின் கண்ணே நிறுத்தல்: அதாவது முதலில், புருவமத்தியி னிற்கச்செய்தல்; துர்விஷயத்தைப் பற்றாதிருக்கச் செய்தல்; சிவதோஷம் விசாரியாதிருத்தல்; தன்னை மதி

யாதிருத்தல்; இராகாதிநீக்கி இயற்கைச்சத்துவமயுமாதல்; தனது தத்துவங்களை அக்கிரமத்திற் செல்லாது தண்டித்தல் முதலியனவாம்.

3. ஜீவவொழுக்கம்.

ஆண்மக்கள், பெண்மக்கள் முதலிய யாவர்களிடத்திலும் ஜாதி, சமயம், மதம், ஆசிரமம், சூத்திரம், கோத்திரம், குலம் சாஸ்திரசம்பந்தம், தேசமார்க்கம், உயர்ந்தோர் தாழ்ந்தோரென்னும் பேதநீங்கி எல்லவருந் தம்மவர்களாய்ச் சமத்திற் கொள்ளுதலாம்.

4. ஆன்ம வொழுக்கம்.

யானைமுத லெறும்பீறாகத் தோன்றிய சரீரங்களிலுள்ள ஜீவான்மாவே திருச்சபையாகவும், அதனுள் பரமான்மாவே பதியாகவுங் கொண்டு, யாதும் நீக்கமற, எவ்விடத்தும் பேதமற்று எல்லாந் தானாக நிற்றலாம்.

இவ்வண்ண நின்றால், மேற்குறித்த அரும்புருஷார்த்தங்கைகூடும்.

---

* சிற்சபை, விந்து, அறிவு, பாலம், முச்சுடர், முச்சந்தி, முப்பாழ், நெற்றிக்கண், கபாடம், சபாத்துவாரம், மகம்மேரு, மூலம், சாகாத்தலை முதலிய ஒரு பொருட் கிளவியாம். (பரிபாஷை.)

---

## சப்த தாதுக்களின் விபரம்.

ஆணில் 3. பெண்ணில் 4. ஆணில் மூன்றாவன ஆகாசம் பிரகிருதி ஆன்மவுணர்ச்சி இவைகளொருமித்துச் சுக்கிலமாகக்கோசத்தடியில் செம்பரத்த பூவிதழ் மூன்று மொன்றாயடிப்பதுபோலிருக்கும். பெண்ணிடத்தில் நான்காவன பிருதிவி, அப்பு,தேயு, இயமானென்னும் வாயு ஆக நான்கும் ஒருமித்துப் பல்லி முட்டைபோல் நான்காகப் பிரிந்து ஒரே வண்ணமாய் யோனிக்குள்ளிருக்கும். ஆக 7-வும் கூடி ஒருமித்துச் சுக்கில சுரோணித சம்பந்தப்பட்டுப் பிண்டமாம். இது சப்ததாது, ஷை தாதுக்களின் பெயர்: தோல், அஸ்தி, தசை, மூளை, சுக்கிலம், இரத்தம், இரசம் ஆக ஏழு.

ஷை சத்துக்கள் ஆணிடத்துள்ள இடங்கள் மூளை, தொப்புள் லிங்கத்தடி, பெண்ணுக்குள்ள இடங்கள் மூளை, தொப்புள், உபஸ்தத்தடி. ஸ்தன்னியத்தின்மேல் புணர்ச்சிகாலத்தில் இந்த சத்துச் சேர்ந்து வெளிப்பட்டால் கர்ப்பமுண்டாம்.

பிண்டலட்சணம்:—தலை அண்டம், மார்பு முதலானவை பிண்டம். அண்டத்திற் பிண்டம் புருவமத்தி. அண்டத்திலண்டம் பிரமரந்திரம். இதில்சோமசூரியாக்கினி பிரமவிஷ்ணுக்கள் இருக்குமிடம்: நேத்திரம், புருவமத்தி, அண்ணு, பிரமரந்திரம். இதில் பிரகாசமாயும் அறிவாயும் பிராணவாயு இருக்கின்றது. பிண்டத்திற் பிண்டம் இடுப்புக்குக் கீழ்பாதபரியந்தம் பிண்டத்தி லக்கணம். பீசம், பிண்டம், வயிறு, ஷை பிண்ட ஸ்தானத்தில் கர்த்தர்களிருக்குமிடம் கோசம், தொப்புள், மார், இவர்கள் வண்ணம் நாடி, உஷ்ணம், காற்றுகுறி முதலிய பேதங்களாம். ஆதலால் பிரம, விஷ்ணு, ருத்திரதேவர்கள் அனந்தகோடி யண்டத்தைப் பார்க்கிலும் பிண்டவிசால முள்ளது. இதுபோலவே பிரமாண்ட ஞாயம்.

இந்தத் தேகத்தில் ஜீவனிருக்கிற ஸ்தானம் 5. அதில் முக்கிய ஸ்தானம் 2. கணம், சிரம் சிரத்திலுள்ளது பரமாத்மா வென்னுஞ் சாமான்ய ஜீவன். இஃதிறப்பதன்று, கண்டத்திலுள்ள ஜீவாத்மா வென்னும் விசேஷ ஜீவன், இஃதிறக்கும். ஷை தேகத்தில் பிரம்ம பேதம் கீழும் மேலும் இருப்பதால் நாமடையவேண்டிய பதஸ்தானங்கள் யாதெனின் கண்டமுதல் உச்சிவரையில் அடங்கியிருக்கின்றன. ஷை பதங்களாவன சுவர்க்க பூர்வமாக சதாசிவபதமீறாக வுள்ளன. இதற்குமேல் நாதாதி சுத்தமீறாகவுள்ளது கைலாசாதி பதங்கள். உந்திக்குமேல் கண்டமீறாகவுள்ளது இது சாதாரண பாகம். நரக இடமாவன, உந்தி முதல் குதபரியந்தம் கர்மஸ்தானம் குதமுதல் பாதமீறாகவுள்ளது, இவைகளில் பிரம்மாதி பிரகாச முள்ளது. அநுபவிப்பது கண்ணிடத்தி லிந்ததேகத்தில் எமனிருக்குமிடம் குதமாகிய நரகஸ்தானத்திற்கு இடதுபாகம் ஷை தேகத்தில் ஆன்மா தனித்திருக்கும். ஜீவன் மனம் முதலிய அந்தக்கரண கூட்டத்தின் மத்தியிலிருக்கும்.

பிண்டத்தில் பூர்வம் என்பது தலை உத்தரம் என்பது கால் (பூருவம்) என்பது பூர்வசம்பந்தத்தால் வந்த பெயர். பூர்வஞான மென்பது நெற்றிக்கண்ணால் பார்த்தல். பிண்டத்திற்குக் கிழக்கு முகம் மேற்கு கால் வடக்கு வலதுகை தெற்கு இடதுகை தொப்புளடி கொடிமரம். ஷை மரத்தின் அளவு உள்ளுக்குக் கொடி புருவம் சதிக்குள்ளிருக்கும்வரை தொப்புள் பலிபீடம், நந்தியென்பது பசு, ஆணவமலம் மூலாதாரத்தினது உள்ளங்கமே சிவலிங்கம்

வாய் விசால், புருவமத்திசமை, அறிவேபதி, ஆடுகால் அகர்தி தலை, கீழ்தலை மேல்கால் ஆதலால் பூர்வம் பூர்வ பூர்வம் உத்தரம் உத்தரோத்திரம் என நான்கு.

இதில் பூர்வமென்பது புறப்புறமாகிய நட்சத்திரம்போன்ற இந்திரியக்காட்சி. பூர்வ பூர்வம் புறமாகிய சசிபோன்ற கரணக் காட்சி. உத்தரம் அகப்புறமாகிய பரிதிபோன்றஜீவகாட்சி. உத்த ரோத்தரம் அகமாகிய அக்கினிபோன்ற ஆன்மகாட்சி. ஆதலால் அகம், அகப்புறம், புறம், புறப்புறம், என்னும் நான்குமே மேற் குறித்த பூர்வாதி உத்தரோத்திர மென வழங்குவது. ஆணுக்குள் பெண்ணும் பெண்ணுக்குள் ஆணுமிருக்கும் விதம் எவ்வாறெ னின் பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், பிரகிருதி ஆன்மா என்னும் இவ்வேழும் கூடிச் சுக்கிலசுரோணித சம்பந்த சப்ததாது வாய் சிருட்டிக்குக் காரணமாச்சுது. ஆதலால் ஆண்பாகஞ்சேராது பெண்ணுருவமாகாது பெண்பாகஞ் சேராது ஆணுருவமாகாது. மேலும் மேலும் ரூபபேதத்தைப் பெண்ணென்பது அறியாமை.

மேலும் அறிவின் உயர்வு தாழ்வினாலும் சிருட்டிக்குக் காரண மான வித்துத் தங்குதற்கு க்ஷேத்திரமானதாலும் ஒருவாறு உருவத்தால் கொள்ளலாம். அநுபவத்தால் கொள்ளலாகாது. அறிவின் உயர்வு தாழ்வு என்பது ஜீவ அறிவாகிய மன அறிவு பெண்ணினும் ஆன்மவறிவாகிய அறிவு ஆணிடத்தும் உள்ளது. மேலும் மனவறிவு புத்தியறிவு யென்னுஞ் சொல்லக்கூடும். ஆத லால் உருவங் குறிப்பது அவசியமல்ல. மேலும் ஆகாசத்தில் பிரு துவி தோன்றுவது போல் ஸ்திரிபாகமாக்கிய பிருதுவியில் ஆகாச மும் தோன்றும். ஆனதால் அநுபவத்தில் தெரியும்.

---

முத்துகிருஷ்ணபிரம்மம் அச்சிட்ட நிஷ்டானுபூதியின் உரைக்குப் பிள்ளைப்பெருமான் அருளிய சாற்றுகவி.

நலங்கொள்சிவ யோகமண நாற்றிசையு மணக்கும்
ஞானமணங் கந்திக்கு மோனமணநாறும்
விலங்கலில்சித் தாந்தமணம் பரிமளிக்கு மின்பா
வேதாந்த மணங்கமழும் வேதமணம்வீசும்
தலங்கொளுமெய் யத்துவிதத் திருமணமும் பரவும்
தனிமுத்துக் கிருட்டினப்பேர் தங்கியநம் பிரமம்
வலங்கொளுநன் னிட்டானு பூதியெனுநூற்கே
வாய்மலர்ந்த வுரையெனுமோர் மாமலரி னிடத்தே.

---

உ

சிவமயம்.

இது

சிதம்பரம் தூக்குடி ஆடூரில் சத்குணாகரதயாம்பரசாமிகள்
சபாபதி சிவாசாரிய சாமியவர்கள் சுபகுண நடன
விபவ சந்நிதிக்குப் பார்வதிபுரத்திலிருந்து வருவது.

---

சத்தியக் கியானானந்த சொரூப சாக்ஷாத்கார சுத்த சிவகுல சிவாசார சிவாநுபவ சிவப்பிராமணோத்தம சிவத்துவபோதக சிகாமணிகளாகிய சுவாமி அவர்கள் பரம கருணாம்பர பத்மபாதயுகள சந்நிதிக்கு அடிமை பக்தி பூர்வகமாக அனந்தமுறை தண்டனிட்டுச்செய்துகொள்ளும் விண்ணப்பம். சுவாமிகள் கடாக்ஷித்தருளிய நிருபத்தைப் பூசித்து வாசித்தறிந்தேன். அந்த நிருபத்திற் குறித்தபடி சிவ புண்ணியத் திருவிழாவைத் தரிசிக்கும்படி பிரயாண சித்தனாயிருந்தேன். இத்தருணத்தில் இந்தப்பார்வதிபுரத்தில் பிராமணர் இருவர்களுக்கு இராஜாங்கவிவகாரவழியில் ஒருபெரிய ஆபத்து நேரிட்டு அவர்களைப் பிடித்துக்கொண்டுபோயிருக்கிறார்கள். அவர்கள் இந்தத் தருணத்தில்சிறிது சகாயம் செய்தால் உயிர்வாழ்வோம் இல்லாவிடில் உயிரிழந்து விடுவோமென்று பரிதபித்து எழுதிய கடிதம் வந்து சேர்ந்தபின் நான் அவ்விடம் வரும் பிரயாணம் ஆலசியப்பட்டது. இங்கு கூடியவரையில் அவர்கள் விஷயத்தில் சகாயம் செய்யவேண்டுவது கருணைக்கு இலக்ஷியமாகலில் என் மனது இவ்விடம் வருவதற்கும் அவ்விடம்போவதற்கும் துணிவு தோற்றாமல் ஊசலாடுகின்றது. சிறிது துணிவு பெற்றபின் நான் வருகின்றேன். தற்காலம் அடிமைவந்திருப்பதாகவேசாமிகள் திருவுளங்கொண்டு மேற்குறித்த சிவபுண்ணியத் திருவிழாவைச் சிறப்பாக நடத்துவிக்க வேண்டுமென்றும் சுவாமிகள் திருவடிகளைச் சிந்தித்துப் பிரார்த்திக்கின்றேன். மற்றவைகளை நான்சந்நிதியில் வந்து விண்ணப்பஞ்செய்து கொள்ளுகிறேன். அடிமையின்மேல் கருணாநிதியாகிய சாமிகள் திருவுள்ளம் வேறுபடா தென்கிற துணிவுபற்றி இங்ஙனம் விண்ணப்பம் செய்து கொண்டேன். சாஷ்டாங்க தெண்டனம்.

விபவஸு வைகாசிமீ ௨௧ }

இங்ஙனம்,
சிதம்பரம்-இராமலிங்கம்.

திருச்சிற்றம்பலம்.

# சமரசவேத சன்மார்க்க சங்கம்

என்பதற்குப்பொருள்: எல்லாச் சமயங்களுக்கும்

பொதுவாகிய அறிவுநூல் முடிபான நான்காவது மார்க்கத்தை

அநுஷ்டிக்கின்ற கூட்டமென் றுணர்க.

மேற்படி மார்க்கம் நான்காவன: தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம் சன்மார்க்கம் என நான்கு.

ஷடாந்தசமரச சுத்தசிவ சன்மார்க்கம் என்பதில் ஷடாந்தம் என்பது யாது: வேதாந்தம், சித்தாந்தம், போதாந்தம், நாதாந்தம், யோகாந்தம், கலாந்தம் ஆக ஆறு.

மேற்படி அந்தங்களின் அநுபவம், காலம், இடம் முதலிய வேறுபாடு களால் அநுபவம் ஏறிக்குறையும். ஆதலால் ஷடாந்தமும் வியாபகமில்லாமல் வேதாந்த சித்தாந்தத்தில் நான்கந்தமும் வியாப்பியமா யிருக்கின்றன. ஷை அந்தம் நான்கின் ஐக்கிய விபரம். வேதாந்தத்தில் போதாந்த யோகாந்தமும் சித்தாந்தத்தில் நாதாந்த கலாந்தமும் அடங்கியிருக்கின் றன. இந்த ஐக்கியம் பற்றி வேதாந்த சித்தாந்தமே இப்போது அநுபவத் தில் சுத்தவேதாந்த சுத்தசித்தாந்தமாய் வழங்குகின்றது.

இதற்கு அதீதம்: சுத்த வேதாந்த சித்தாந்த அந்தாந்தமாகிய சமரச சுத்த சன்மார்க்கம். நித்தியமார்க்கம். மேற்குறித்த மார்க்கத்திற் குச் சம்மதங்களாகிய சன்மார்க்கங்கள் அன்னியமாய் விளங்கும். ஷை சமயமத மார்க்கங்களியாதெனில் சமயசன்மார்க்கம் மதசன்மார்க்கம் என இரண்டு. இதற்குள்ளடங்கிய சன்மார்க்கம் அநந்தம். அதில் சமயசன் மார்க்கத்தில் வகையாறு, தொகையறுபத்தாறு, விரி அறுகோடி. இது போல் மதத்திலும் வகைதொகைவிரி உள்ளது. மேற்குறித்த சமயமத சன்மார்க்கங்களில் [illegible] அந்த [illegible] மத மார்க்கங்களின் தலைமையாகிய கர்த்தர், மூர்த்திகள், பிரமம், [illegible] முதலிய தத்துவங்களின் காலப்பிரமாண பரியந்தமிருக்கும். அதற்கு மேலில்லை.

அனுபவ காலத்தை அறுபத்திநாலாயிரத்தில் (64000) பெருக்கிய கால அளவு எவ்வளவோ அக்கால அளவு சுத்த மகா சதாசிவானுபவத்தைப் பெற்றுச் சுத்த தேகியாயிருப்பது. சத்தென்பது பரிபாஷைக் குழூஉக் குறிப்பெயர். அது அனந்த தாத்பர்யங்களைக்கொண்டு ஓர் வாக்கிய பதமாய் நின்றது. மார்க்கம் என்பது யாதெனின் துவாரம், வழி. வழியென்பது சத்தென்னும் பொருளின் உண்மையைத்தெரிவிக்கிற மார்க்கம். ஆதலால் எவ்வகையிலும் உயர்வுடையது பாவனாதீதாதீதம், குணாதீதாதீதம், லட்சியாதீதாதீதம், வாச்சியாதீதாதீதம், ஆகிய சுத்த சன்மார்க்கம்.

மேற்படி மார்க்கத்தின் ஏகதேசம் அடியிற் குறிக்கும் அநுபவங்கள். எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எவ்வகைத் தடையும் வாராத சுத்தமாதி ஞானதேகசித்தியும் அண்டாண்ட தத்துவங்கள் சுதந்தரத்தில் நடத்தும் தனிப்பெரும் வல்லபமும் ஏம சித்தி பிரேத ஜீவிதாதி சித்தியும் வஸ்து பிரத்யக்ஷானுபவ சித்தியும் ஒருங்கே அடைவது மேற்குறித்த மார்க்கத்தின் முடிபு.

ஒருவாறு சத் என்னும் சொல் பரிபாஷை என்பதற்குக் குழூஉக் குறியாக இதன் கீழ்வரும் சில மந்திரவாசகபத வர்ணாதிகளை உணர்க. காரண மாத்திரமாய் விளங்காநின்ற விந்துநாத முதலியனவும் காரிய காரண மாத்திரமாய் விளங்காநின்ற அம், அங், சிங், வங், மங், சிவா, வசி, ஓம் முதலியவும் காரியமாத்திரமாய் விளங்காநின்ற ஹரி, சச்சிதானந்தம், பரிபூரணம், ஜோதியட் ஜோதி, சிவயவசி, சிவயநம, நமசிவய, நாராயணாயநம, சரவணபவாயநம, இவ்வண்ணம் குறித்த பரிபாஷைகளின் உண்மை ஆன்ம அநுபவத்திலும் வகாரதகார வித்தையினும் விளங்கும்.

மேலும் மேற்குறித்த வண்ணம் தத்துவங்களை உபாசித்தும், அர்ச்சித்தும், தத்துவாதீதா தீதத்தைத் தியானித்தும் இடையில் ஜெபித்தும் கிரணலயமாகச் சமாதிசெய்தும் தத்துவச் சேட்டைகளை அடக்காநின்ற விரதமிருந்தும் சாதாரண யோகபாவத்தில் மூச்சடக்கியும் சாத்தியர்கள் மேற்குறித்த வண்ணம் செய்வார்கள். சாத்தியர்கட்கே கேட்டல் சிந்தித்தல், தெளிதல் நிஷ்டைகூடல் என்னும் நான்கும் கடந்து ஐந்தாநிலையினிற்பதால் சாதனமொன்றும் வேண்டுவதில்லை.

மேல்படி சாத்தியர்களே சுத்ததேகிகள். அவர்கள் அநுபவத்தை விரிக்கில் பெருகும்.

## சாகாத்தலை வேகாக்கால் போகாப்புனல்.

என்பதற்குப் பொருள் யாதெனில் அடியில் வருவனவேயாம். சாகாத் தலையென்பது ருத்திரபாகம் ருத்திரத்துவம், வேகாக்கால் என்பது மகேஸ்வரபாகம். மகேஸ்வரத்துவம், போகாப்புனல் என்பது சதாசிவ பாகம். சதாசிவத்துவம், இவை மூன்றும் சாகாத கல்வியைத் தெரிவிக்கும் ஆத்மதத்துவாதி ஜீவகரணம் 36. நிர்மலகுரு துரியாதீதம் 7-ஆக நிலைகள் 43, இந்த 43-நிலைகளில் ஒவ்வொரு நிலைகளிலும் மேல் குறித்தது உளது. மேலும் இவை மூன்றும் பிண்டத்தில் நாலிடத்திலும் அண்டத்தில் நாலிடத்தி லும் உளது. அவைகள் பிண்டாண்ட ருத்திர சதாசிவ பேதம். சாகாக்கல்வியைக்குறித்த 43-நிலைகளில் முதல் நிலை அநுபவத் தைப் பெற்றுக்கொண்டவன் பிரமன். அவனது காலம் ஒரு கல் பம். இப்படி 3-நிலைகளையுமேறி அநுபவத்தைப்பெற்றவன் காலங் கடந்த காலாதீதன், மேற்குறித்த மூன்றும் பரமார்க்கமாகிய ஞானயோக காட்சியில் உண்டாகும்.

யோகானுபவங்களின் உண்மைப் பொருள்: அபரமார்க்கத் தில் சிலர் உப்பு வகைகளின் பேதமென்றும் ஔஷதிபேதமென்றும் பூதபேதமென்றும் சொல்லுவது, உபாயமார்க்கம். ஆக அநுப வமே உண்மை. உபாயவகையாகிய அபரமார்க்கம் தேகபூஷ ணாதிகாமிய சித்தியைத்தரும். உண்மை நீக்க மற்ற சொருப ஞானத்தைத் தருமென்றறிக. ஷை உபாய வகைகளை ஒருவாறு தெரிவிப்பதும் சைவசமயங்கள் தவிர வேறு எவ்வித சமயங்களிலு மில்லை. அப்படியிருப்பதாகச் சொல்லியிருப்பதும் ஏகதேசமென் றறியவும். ஷை ஏகதேசங்கள் மந்திரங்களிலும் ஷை மூன்றும் வழங்குகிறபடியால் ஒன்பது மாற்றுக்கு மேற்பட்ட தங்க ரேக் கில் பஞ்சாக்ஷரத்தை யடைத்து விக்கிரகத்தினடியில் வைக்க மகத்துவங்களுண்டாகும்.

மேலும், ஷை உயர்வுடைய தங்கத்தில் விக்கிரகஞ்செய்து வைத்து ஔஷதியாதி லவணங்களை அதற்குச் சேர்த்துவைத்தால் விசேஷ சித்திவிளங்கும். இது கிரியைகாட்சி. சுத்தசன்மார்க் கத்திற்கு உபாயவகைகளான அபரமார்க்க காட்சிகூடாது. பர மார்க்கமாகிய அக அநுபவமே உண்மை. ஷை மூன்றையும்

லக்ஷியமாகவே கொள்க. உபாயவகையான வாச்சிய திரிசிய காட்சிகள் பரோபகாரம் ஆதலால் சாகாத்தலே வேகாக்கால் போகப்புனல் என்பது இரண்டுபுரத்திலும் உள்ளது. உபாய வகையை நம்புதல்கூடாது. உண்மையை நம்புதல் வேண்டும்.

இஃது ரகசியம்.

---

## சமயசூக்கும பஞ்சாட்சரம்

சமய சூக்கும பஞ்சாக்ஷரத்தின் தாத்பரியம் நான்கு. அதன் அக்கரம் ஐந்து.

சிவாயநம. இதன் தாத்பர்யம் நான்குவகை. பூர்வம், பூர்வ பூர்வம், உத்தரம், உத்தரோத்தரம் என்பனவாம். சிவனை நமஸ் கரிக்கின்றேன் என்பது பூர்வத்தின் அர்த்தம். அநாதியில் மலமின் றியும் எல்லாமுடைய சிற்சத்திக்கு எனது கரணங்களைச் சமர்ப்பிக் கின்றேன் என்பது பூர்வபூர்வத்திற்குத் தாத்பரியம். உத்தரம் உத்தரோத்தரத்தை அனுபவத்தாலறிக. இதுபோல் மதசன்மார்க் கத்திற்கும் ஷை அக்ஷரமே. மேல்குறித்தபடி இதற்கும் நான்கு தாத்பரியமுள்ளது. பூர்வத்தின் தாத்பரியம் சி என்பது-பதி; வா என்பது சக்தி; ய என்பது ஜீவன்; ந என்பது-திரோதை; ம என் பது-மஹாமாயை. ஆதலால் மஹாமாயை திரோதைநீங்கி ஜீவ பேதமற்று அருள்வடிவாய்ச் சிவமாவது.

பூர்வ பூர்வத்தின் தாத்பரியம். சி என்பது-எல்லாமுடையது. வா என்பது-அபின்னமாகிய அருள்; ய என்பது ஆன்மசிற்சாயை; ந என்பது-ஜீவன்; மஎன்பது-பசு; ஆதலால் பசுத்தன்மைக்கெட்டு ஜீவபேதம்போய் ஆன்ம இயற்கை வடிவாய்ச் சத்துவமயமாய் எல்லாமுடையதுவாய் பூரணமாய்நிற்றல். ஒருவாறு அனுபவத் தில் பரவிந்து பரநாதம் பரத்திலும், அபரவிந்து அபரநாதம் பூர் வத்திலும் வழங்கும் இவ்வளவும் செபமூலமாய்க் கரணசுத்திவந்து அக்ஷரம் உன்னுதலைவிட்டு அறிவாகிருதியாய் கருணையுஞ் சிவமே பொருளென்னும்படி நின்றார்க்கு முதற்றுவாரமாம்.

மற்ற உத்தரத்தில் ஏமசித்தியும் உத்தரோத்தரத்தில் தேக சித்தியும் சொல்லும். இஃது, மத சன்மார்க்கவனுஷ்டானம். இதுபோல் சமயத்திலும் தேகசித்தி, ஏமசித்தியுளது. மேற் குறி

த்த.சமயமதங்களில் விரிவு அனந்தகோடி. அந்தச்சித்திகள் யாவற்றும், அவ்வச்சமய மதங்களின் கர்த்தாமூர்த்தி, தலைவன், தலைவி, முதலியவர்கள் பதப்பிராப்தி வரையிலும் நிற்கும். ஆதலால் மேற்குறித்த இரண்டு சித்தியும் எக்காலத்தும் அழிவுறாதிருப்பதாகச் சொல்வது சுத்த சன்மார்க்க பூர்வோத்தரம். ஏமசித்தி தேகசித்தி மேற்குறித்த சூக்கும பஞ்சாக்கரத்தில் சொல்வதற்குப் பிரமாணம. "சிவாயநமவெனச் செம்பு பொன்னாய்விடும்" "சிவாயநம வெனச் சிந்தித்திருப்பார்க்கு அபாய மொருநாளுமில்லை" ஆதலால் மேற்குறித்த அக்கரத்தை மகான்கள் குழூஉக்குறி வடிவமாய்ச் சுட்டினார்கள். இதைச் சுகவநுபவிகள் தத்துவார்த்தங்களையறிந்து அநுசந்தானஞ் செய்வார்கள். சாதகிகளுக்கு நாவினாலன்றிக் கரணமோய்ந்தால் தத்துவாநுசந்தானஞ் செய்யக்கூடும். உலகிகள் நாவினா லுன்னத்தங்கள் மனோரதம் சித்திக்கும். வகரவித்தை யுடையவர்கள் மேற்படி அக்கரத்தினுண்மையைப் பௌதிகம், உலோகம் ஓஷதி, லவணம், முதலியதிற் சேர்த்து வகரத்தை முடிப்பார்கள். தகரத்தை யுடையவர்கள் அதுபோலவே யலைமத்துக்கொண்டு தேகத்தை நீடிக்கச் செய்வார்கள். ஆதலால் மேற்குறித்த வக்கரங்கள் பரிபாஷையாக இருந்தது. உண்மையாவற்றும் சுத்தசன்மார்க்க சகஜசாத்திய ஞானநுபவிக்கு விளங்கும்.

மேலும் சி-என்னும் எழுத்துக்குப் பொருள்: ஒருவாறு இதிலடங்கிய பீஜம்-ஐந்து அவை யாதுதோன்றி யசைதலாகிய விந்து ஒன்று, அதன்புடை பெயர்ச்சி ஒலியாகிய நாதம் இரண்டு, அதன் வர்ன்னவடிவமாகியவரி அக்கரத்தின் சகரமெய்யென்னும் இச் மூன்று, அதனது குணங்களை வெளிப்படுத்தும் ஆதி அக்கரமாகிய பிரணவமூல ஆகாசம நான்கு இவைதத் தன்வண்ணச்சுபாவத்தோடு வெளியில் தோன்றச் செய்வித்து விளக்கும் அருட்பிரணவமாகிய இகாரம்ஐந்து. ஆக, கூடியவிந்துக்கள் ஐந்தும் ஒருருவமாய்ச் சிகரமாயிற்று. இத்தனிலக்கணம் விரிக்கிற்பெருகும் அநுபவத்தாலறிக.

---

சுத்த அமுததாரனங்கள் ஐந்து: (1) முதல் அமுதம் நாக்கின் அடியில் இனிப்புள்ள ஊற்றுச்சலமபோல் இருக்கும், (2) உள்நாக்குமேல் இளகிய இனிய சர்க்கரைப் பாகுபோல் இருக்கும், (3) மூக்கின் முனை-குழம்பின் சர்க்கரைப்பாகுபோல் இருக்கும், (4) நெற்றியின் நடுவில் முதிர்ந்த சர்க்கரைப்பாகுபோல் இருக்கும், (5) மகா இனிப்புள்ள மணிக்கட்டியாக இருக்கும்.

இந்த ஐந்தாவது அமுதங்கிடைத்து உண்டவர் என்றுஞ் சாகாநிலையைப் பெற்றோர்.

குளிகை மணி ஒன்பதின் விவரம்: (1) பரம்பரமணி-அண்டமும் அண்ட வஸ்துக்களையும் காட்டுவது, (2) பராபரமணி-பிண்டமும் பிண்ட வஸ்துக்களையும் காட்டுவது, (3) அரும்பெறன்மணி - நினைத்ததை நினைத்தபடி யருளுவது, (4) ககனமாமணி - விண்ணுலக வஸ்துக்களை யாட்டிவைக்கும், (5) சரவொளிமணி-மண்ணுலக வஸ்துக்களை யாட்டிவைக்கும், (6) கலைநிறைமணி-எல்லா உலகத்தும் உலாவுதல், (7) வித்தகமணி-சர அசர வஸ்துக்களிடம் விளங்குவது, (8) சித்துசெய்மணி - மகா சித்திகளை நடத்துவது, (9) வளரொளிமணி - அழியாவாழ்வு அளிப்பது. (இன்னும் பல குறிப்புகள் உள்ளன.)

---

திருவருட்பா

ஆகமாந்தமும் வேதத்தி னந்தமு மறையும்
பாகமாம்பர வெளிநடம் பரவுவீர் உலகீர்
மோகமாந்தருக் குரைத்திலேன் இதுசுக முன்னும்
யோக * மாந்தர்க்குக் காலமுண் டாகவே உரைத்தேன்.

---

* யோகம்—ஞானயோகம்; கர்மயோகம் அன்று.

---

அன்பொரு வடிவாய் அருளொளி உயிராய்
அளவிலா இன்பமே உணவாய்த்
துன்பறு துரியங் கடந்தசிற் சொருபத்
தூய்சிவ போகமே திளைத்த
என்பொலா மணியாம் இராமலிங் கப்பேர்
எந்தையை அநந்தனைத் திளைத்தே
என்பெலாம் உருக இசைக்கவி சாற்றும்
எழில்கந்த சாமிதாள் போற்றி.

மோ-கந்தசாமி முதலியார் B. A.
Supdt, of Vernacular Studies,
Pachaiyappa's College

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை.

# சிறப்புப்பாயிரம்.

---

உத்தரஞானசிதம்பரமென்னும் பார்வதிபுரத்துவசிக்கும்
சத்திய ஞானானந்தேந்திர சரஸ்வதி யதீஸ்வரர் அருளிச்செய்த

வெண்பா.

குருராம லிங்கமெனக் கூறியுல குய்யப்
பெருராம லிங்கம் பிறங்குந்—திருநாமத்
தோத்திரத்தைப் பூரியிட்ட சுத்தசிவ சித்தாந்த
மாத்திரத்தன் கந்தகுண வான். 1

சீர்சான்ற பத்திசெய்யுஞ் சித்தகந்த சாமியுள்ள
நேர்சான்ற ராமலிங்க நித்தியன்றன்—பேர்சான்ற
ஆனந்தக் கண்ணியினா லாகரிவித் தோங்குமுண்மை
தானென்றுந் தோன்றுசா தம். 2

விருத்தம்.

திருவருட்பிரகாசனேதனதுமுகமுறச் செய்யவருள்வசமாகியே
செப்பினானந்தாதிமாலை கண்ணிகள்பல சிறக்குமானந்த சுத்த
மருவுசமரசமேவுசன்மார்க்க மரபினின் வாழையடி வாழையாக [ற்றோன்
வந்தெழில்கொள்கந்தசாமிப்பெயர்ச் சற்குணன்வள்ளல்தாள் தஞ்சமு
தெருவமிகுநலமோங்குகாரணப்பட்டினிற் சித்விலாசம்புரக்குந்
திறலுளோன்வேதாந்தசித்தாந்தசமரசந் திகழுநன்னிலையினின்றே
கருவமில்லாமலேகாருண்யமில்லறக்காட்சியிற்புரிமாட்சியோன்
காரணக்கடவுணிலைகாரியம்பெறுபத்தி கைகண்டகருணீகனே. 3

சதுர்வேதசித்தாந்தத்துவமெய்ப்பொருளைச்
சங்கரநாராணரிருவர்சமரசமெய்ந்நெறியாற்
பொதுவாகச்சூத்திரபாடியத்தாலேவடசொற்
பூரியிட்டசுத்தவியலாரியத்தைத்தமிழாற்
றுதியாக்கிநூற்பொருளுள்ளீடாக்கிச்சொற்ற
சுகமயமாந்திருவருட்பாச்சூழ்தருநாமத்தை
விதிவழியாவளியாக்கிப்பஜனைசெயவளித்தான்
வித்தகமெய்க்கந்தசுவாமிப்பெயரோன்மாதோ.

முருகதாசசுவாமிகளென்றும், திருப்புகழ் சுவாமிகளென்றும்

விளங்கிய

ஸ்ரீமத்-தண்டபாணிசுவாமிகள் அருளிச்செய்த

நேரிசை வெண்பா.

வடலூரா னன்பர்களில் வாய்மைகல்வி ஞானத்
திடமார்ந் தவிர்தருமோர் செல்வன்—கடல்சூழ்
பாருலக முய்வதற்காப் பாடுமிசைப் பாடலமு
தாருமவர்க் குண்டே யருள்.

அந்தண் வடலூரா னன்பர்களிற் சீரியனாங்
கந்தசுவாமிக் கவிப்புலவ—னிந்த
வுலகத் தினர்மகிழ வோதுமிசைப் பாட
லிலகற்குஞ் சாட்சிதெய்வ மே.

திருக்கைலாயபரம்பரை. காஞ்சி. ஸ்ரீஞானப்பிரகாசசுவாமிக

ளாதீனத்து மகா வித்வான்,

சித்தாந்த சரபம்-அஷ்டாவதானம்

சிவஸ்ரீ பூவை கலியாண சுந்தரயதீந்திர சுவாமிகளியற்றிய

ஆசிரியவிருத்தம்.

பன்னுபஞ்சகிருத்தியங்கட்கதிபதியாயுமைகளிக்கப்பார்புரக்கப்
பகருமணிமன்றினிடம்பயிலுமொருநடராஜப்பரமனென்றும்
மன்னுபுகழ்தில்லைமருங்கமர்மருதூர்ராமலிங்கமகிபனார்தம்
வழங்குதிவ்யசரித்திரக்கீர்த்தனங்களொடுகலித்துறைவெண்பாவந்தாதி
துன்னுகொலைமறுத்தலைமபயமறனல்விருத்தப்பாமாலைதெய்வத்
ஆயகுருப்பிரசாதமகிமையாதியபலவுந்துலங்கச்சொற்றான்
பொன்னுமணியும்போலவுயரியகாரணப்பட்டுபொற்பின்வாய்மை
பொருந்தியநற்கந்தசாமிப்பெயர்கொள்புனிதனெனும்புலவன்றானே. 1

குருமொழியேயிலக்காகக்கொண்டுசன்மார்க்கநெறிகுலவித்தெய்வ
வருணிலையினிற்றிலோக்குங்கந்தசாமிப்பெயரோனருளிச்செய்த
திருவளர்சற்குருவெண்பாவந்தாதிபலவினையுந்தேர்ந்துஞான
மருவியசிற்சபையொளிரும்வடலூர்நன்முனிவரனேமகிழ்வன்மாதோ. 2

உலகதனிலொருஞானதிலகமெனமுன்னாளிலோங்குமெங்கள்
உயர்தாயுமானவனல்லவதாரமாவந்திங்கோங்கும்பத்தி
ரலமருவுகாருண்யமேயிலகுந்திருமுறைகணல்கியாண்ட
நங்களருட்பிரகாசவள்ளலெனவிளங்குகுருநாதன்றனைத்

தலைவிதயந்தனில்வைத்தெந்நாளுஞ்சண்மதத்தினர்கடமுவியேத்தச்
சமரசாதீதசித்விலாசநாமாவளியைச்சாற்றினுல்
புலனீசைகருணைபொறைகுணவாய்மையருட்செல்வம்பொருந்திவாழும்
புகழ்பெறுமென்கண்மணிநேர்கந்தசுவாமிப்பெயர்கொள்புலவன்றனே.

வெண்பா.

கூறுமொரு நாவினிக்குங் கொள்ளுமிரு காதினிக்குந்
தேறுமுளா மென்றுந்தித் திக்குமே—பேறுபெறு
நல்லவரெல் லாம்வாழ்த்து நங்கந்த சாமியெனும்
வல்லவன் சொன் னுமா வளி.

---

சென்னை யோகநந்தாசிரமம் சமரச ஞானசங்கத் தலைமை
சிவஸ்ரீ சண்முகானந்த சுவாமிகள் அருளிச்செய்த
ஆசிரியப்பா.

மலர்தலையுலகின் மாசிருளறவே
பலர்புகழ்பரிதிப் பான்மையிற்றோன்றிப்
பீடுறுமானிடம் பெரும்பயன்கொள்வான்
தாடருதேசிகன் தனிவரவழிபா
டாதியபணிபுரிந் தன்பகந்ததும்பச்
சாதியாதிமெய்ச் சதுர்க்குணத்தனுகிக்
காணுததனைக் காணுபுவருட்கண்
தோணுதுதவியித் துணையுடலழியா
தருள்மயமாகநல் லமுதமாசித்தியு
மொருமலமாயை யொழிக்குந்தகவுடன்
மணிமந்திரமு மருந்தொடுகற்பமுந்
திணியுறத்தடைவிடத் தெளிவித்தேகத்
தானுறும்பேற்றைச் சகலருமடைவான்
வானுயர்கருணையின் வகுத்தெமக்குரைத்தே
பிருட்பானுயிர்படு மிடுக்கண்மாய்ந்திடவே
யருட்பாவுதவிய வமுதசித்தருவே
கருணையைநினைதொறுங் கனைக்குமுளுருரு
மருவலுதேசார் மாணிக்கமலையே
சிவகாருணியத் தீஞ்சுவைக்கடலே
நாவலோர்வழுத்துமெய்ந் நாவலரேறே
அருளோமுடிநடு வடியெனுமுண்மைப்
பொருளையெவர்க்கும் புகன்றசற்குருவே

சாந்தமாமதியே தண்ணருட்கடலே
போந்தவர்வினைதீர் பொக்கருங்கனலே
யாக்கமுஞ்சாந்தமு மன்பெனக்கட்டுரை
போக்கும்புனிதப் பூரணப்பொருளே
அளக்கரும்புகழ்சே ரருமறைக்கனியே
களக்கமொன்றில்லாக் கனகமார்வரையே
யென்பெரும்பதியே யென்பெருங்கதியே
யென்பெருந்தவமே யென்பெருஞ்சுகமே
யொப்புயர்வில்லா வொருதனியரசே
யிப்புவியடியே னிறங்குமுன் மறைந்தாந்
சராசரமனைத்துந் தங்கியங்கருள்பொழி
இராமலிங்கப்பே ரிசைந்திடுமற்புத
கள்ளக்கருத்தன் கவலையைமாற்றுதல்
வள்ளற்பெருமநின் மாண்பினுக்கழகே

அதாஅன்று

சொல்லருஞ்சீர்சார் தூகளிலாவாசான்
மல்லன்மாணடிக்கே மகிழ்பணிபுரிந்து
நன்னலம்யாவு நானிலத்தமைந்த
கன்னல்முக்கனிதேன் கலந்தெனச்சுவைமிகும்
பண்பார்ந்தொளிர்தரு வெண்பாவந்தாதி
தண்ணருளவாக்கலித் துறையந்தாதி
களிப்புளத்தூதாங் கிளிக்கணியிரங்குஞ்
சுளிப்பிலிராமலிங் கக்கண்ணிதூய்தாஞ்
சற்குருபுலம்பல் சரித்திரக்கீர்த்தனை
பொற்பதத்தர்ச்சனை புன்மைதீர்சமரச
நாமாவளியவ னற்கரத்தாற்றருஞ்
சேமார்பூதியின் றிறமுநன்னிமித்தந்
தூற்குணமாய்த்துத் துரியவாழ்வருளுஞ்
சற்குருமாலையுஞ் சாற்றினனன்பா
லுத்தரஞான சித்திபுரமெனுஞ்
சத்திவல்லவோர் தனிவடற்சபையி
லெம்மதமெக்குல மேதுமிலனைவருந்
சம்மதமாய்க்கொளச் சடாந்தசமரச
சங்கந்தனக்குந லங்கத்தவனுய்த்

துக்கசபராசத் தூயபஜனையை
நடத்தியனைவரு நன்னெறிநடக்கத்
திடத்தியலன்பாய்ச் செவிக்குணவமுதா
நயந்தினிதுதவியி னானிலத்தோர்க்குஞ்
சயந்தருசீவகா ருண்ணியந்தன்னைப்
பற்றிடவின்மொழி பகருநற்சீலன்
கற்றறிந்தடங்குங் காட்சியாளன்
சிவனடியார்தமைச் சிவமெனக்காணுந
தவமேற்கொள்ளுஞ் சதுரனநற்குரு
பரனடிக்கேவல் பரிவாற்புரிந்துஞ்
சிரனெடுங்காலஞ் சீவித்தமுத
சித்தியுமணியு மருந்துசெம்மனுவு
முத்தியும்விரும்பு முபற்சிமிக்குடையோன்
சகவிருப்பில்லாத் தண்ணளியான்மெய்ச்
சகவிருப்புடையனற் சுகுணபரணன்
சந்ததமன்பேய் தகைமைக்
கந்தசாமியெங் கண்மணியானே.

---

சமரசவேதசன்மார்க்க சங்கவித்வான்களி லொருவராகிய

புராணிகர்

பொன்னேரி சுந்தரம்பிள்ளையவர்களியற்றிய

ஏகத்தாலொருகை ஆசிரியப்பா.

மணிகடற்சுலவைந் திணைநிலமுடித்த
பஃறலைப்பாயல் வெஃகுபுநெடுங்கண்
வளர்ந்தருட்புடவி யளந்தவானவன்வரிச்
சிறையளிக்குழாங்க ளுயபதத்துளரப்
புரிமுறுக்குடைந்து நறவுகொப்பளிக்கு
முள்ளரைமுளரி வள்ளவாய்தளிமப்
பண்ணவன்முதலா நண்ணுபுத்தேளிரும்
பவப்பிணிகழன்று சிவப்புறுமுத்தித்
திளைப்புறப்பிறங்கு மளப்பருஞ்சீர்சால்
வான்றொடுகுடுமி யான்றபொற்குன்றின்
தக்கணத்தரிய விக்கருமத்தலத்
தவிர்சைசயிகந்தொளிர் தவச்செயலினருங்

கண்டகநாட்டுந் தண்டகநாட்டுள்
பூம்புனற்பொய்கையிற் கும்பாம்பலின்மொட்
டிளவனப்பேட்டைக் கொளவலர்வனசத்
தளிகள்பண்ணிசைக்க வொளிகொள்பூம்பணைமிசைக்
கிள்ளைதன்பெடையுடன் பள்ளியிற்கண்வளர்
நல்வளம்பலபெறு தொல்லையர்தலமாய்ப்
பரையுளமகிழ விறையருணடனம்
வயக்கியதிருவருண் முயக்கமருவுத்
தில்லைப்பதியி னெல்லைக்கணித்தாய்
விளங்குபல்லுயிர்க்குங் களங்கமில்ஞானோ
தயமெழத்திருவரு ளியலியதாமெனு
நிறைமதிநிலாவு முறையமைவளாகத்
துங்கநிகேதனந் தங்குவானவரினைப்
பரிந்துபசரித்தே விருந்தெனவிளிக்குந்
திருவூர்வளமை மருதூருவந்து
தேமாமரைபுனை யாமாத்தியர்குலத்
தவமெனவெழுந்து நவவடிவிறந்த
சிவபரஞ்சுடரே பவந்தெறவமைந்தெனத்
தராதலம்புகழுறு மிராமலிங்கப்பெயர்
பூண்டுசிற்சபைநடத் தாண்டவனருளாற்
சொப்பனக்காட்சியி லற்புதந்திளைப்பச்
சாற்றியமாற்ற மாற்றருமுறையெனு
வெல்லையின்மலக்கட் டொல்லையினறுக்குந்
தானமாமுத்தர ஞானசிதம்பர
சிற்சபையமைத்தாங் கற்புதம்பலபலக்
காட்டியேயருணெறி நாட்டியவள்ளல்
சுத்தமெய்ஞ்ஞான சத்தியமார்க்க
மருவியதிருவருட் பிரகாசவள்ளல்
பொன்னடிக்கன்பே மன்னியவாழ்வுறுஞ்
சீரணவுந்திருக் காரணப்பட்டிற்
சமரஸபஜனைக் குமரனெனப்புகழ்
கந்தசாமிப்பெயர் நந்தங்கோமான்
சுந்தரவிநாயகர் சுந்தரமாலை
நாடருங்குருபரன் சோடசவெண்பா

புலவர்க்கரிய புலியெனப்புகழும்
நாவகமுறுவெண் பாவந்தாதி
பெருநேசமாளுக் குருநேசவெண்பா
நிறைநலம்பெறக்கலித் துறையந்தாதி
கூற்றுவன்பயமறச் சாற்றுநன்மாலை
கற்பவர்க்கினிக்கும் அற்புதமாலை
வேதிசெய்சற்குரு பூதியின்மகிமை
தலைநெறிவிளக்குங் கொலைபுலைமறுத்...
சொல்லிக்காட்டும் பல்லிக்காதல்
தானந்தமில்லா ஆனந்தக்கண்ணி
பெருங்களிப்படைய வருங்கிளிக்கண்ணி
நலம்பெறவிரங்கும் புலம்பற்கண்ணி
கருத்திறமறக்குஞ் சரித்திரக்கீர்த்தனை
தேர்ச்சிசெய்குருபா தார்ச்சனைக்கீர்த்தனை
அருட்குருசரித்திரச் சுருக்கவசனம்
சண்மதசமரஸ நண்ணுறுமதீத
சித்துவிலாச முற்றநாமாவளி
தோத்திரஞான சாத்திரமாதி
னியற்றினனதனியல் வியக்கற்பாலதே
கற்பகாலத்தும் பொற்புறுசெல்வம்
கல்வியேமுதலா நல்லொழுக்கத்துடன்
வாழி வாழி வாழி வாழியவே.

---

போளூர் வித்துவான் ஆ. தா. அரங்கசாமி நாயகரவர்களியற்றிய

ஆசிரியப்பா.

அத்தனமல னறுமுகத்தொருவ
னித்தனடியை நிதமும்பரவி
மானுடமைந்தர் மாசறுத்தின்பந்
தானுகர்ந்துய்யத் தமிழினிலொருபேர்
அருட்பாவென்னுமரும் பெருநூலருள்
அருட்பிரகாச னடிமலர்க்கர்ச்சனை
பண்பார்கலித்துறை வெண்பாவந்தாதி
விண்பார்புகழ்பல விதநூற்செய்தான்
அவனுரென்னி லறைந்திடக்கேண்மின்

பவமேயழிந்த தவமேநிறைந்த
நண்ணியவளமார் புண்ணியர்வாழும்
கண்ணியநகராங் காரணப்பட்டில்
ஓதிமமுயர்த்த வுத்தமக்கோமான்
நீதிசேர்கோத்திர னிலவொழுகரையான்
தயவுறுமாபஸ் தம்பசூத்திரன்
நயகுணசகித னற்கருணீகன்
முத்துச்சாமி முனம்புரிதவத்தால்
இத்தரைவந்த வெழிலார்புனிதன்
இல்லையென்பவருக் கில்லையென்றேதோன்
தொல்லைவினையைத் தொலைக்குமதியோன்
கருமருவாத கனசாதகத்தைக்
குருவருளாணை கொண்டொளிர்சாந்தன்
வன்மொழியில்லா வின்மொழியாளன்
துன்மனநீங்கத் தோத்திரம்புகல்வோன்
பாவகாரியஞ்செய் பலரைத்திருத்திச்
சீவகாருண்யச் செயலுறச்செய்வோன்
சொல்வன்மைதங்கிய சுகப்பிரசங்க
நல்வகையெல்லா நாடெங்குநவிலும்
பொருள்சேர்கல்வியும் புத்தமுதருந்துந்
தெருள்சேர் ஞான சித்தியும்பெறுவான்
உள்ளமுருகு முயர்கந்தசாமிப்
பிள்ளையென்னும் பெரும்புலவோனே.

---

சம்பத்கிரி பிரமபீடம் ஸ்ரீமத் அச்சுதானந்த சுவாமிகள்

மாணவர் வல்லநகர் வித்துவான்

ஸ்ரீமான் வைத்திலிங்கப் பிள்ளையவர்களியற்றிய

நேரிசையாசிரியப்பா.

திருவள ரகலத் தொருபெருங் கடவு
ளுந்தியம் போதின் வந்தவன் பயந்த
மக்கண் முயன்ற மிக்க வாண்றவப்
பயனு மென்ன நயனுற வுதித்தே
யும்ப ரமுதிற் பம்பிய வுவட்டாக்

கொழுஞ்சுவை மலியுஞ் செழுந்தமி ழதனிற்
பற்பல பாக்க ளற்பு தமாகப்
புனைந்தருட் பாவெனக் கனிந்தவங் கருதி
நல்கியுற் றவரை யல்கலி லின்ப
முற்றுயற் செய்த பெற்றிய னளவாக்
கலைவரம் புணர்ந்து நிலைபெறு நிபுணன்
கலக்கந் தரூஉம் புலக்குறும் பெறிந்தோன்
யானென தகன்ற ஞான சூரியன்
காரண காரியங் கடந்த வகண்ட
பூரண சுபாவம் பூத்த புனிதன்
இருட்பட லந்தீ ரருட்பிர காச
வள்ள லாரெனத் தெள்ளியோர் தெரிக்கு
மிராம லிங்கவெம்பெரு மான்றன்
கருவடி களையுந் திருவடிக் கொருபா
மாலையுள் ளுருகி யேலத் தொடுத்துக்
கற்றதன் பயனைப் பெற்றனன் பெரிதே
மற்றவன் யாரெனிற் சொற்றவப் பெரிய
னடியார் தம்முண் முடியாத் திகழ்வோன்
தோரணத் தொகுதிக் காரணப் பட்டின்
னோர்குலாவிய சீர்கரு ணீகன்
முத்து சாமியா முத்தமன் பயந்தோன்
மேதகை மேய வோதிம முயர்த்த
கோமான் கோத்திர பூமா னுபத்
தம்ப சூத்திரன் றகுமொழு கரையா
னுசறு பரமாங் கோசோ பநிடன்
விழுப்பந் தருநல் லொழுக்க முடையா
னேற்றவர்க் குரிய மாற்றருங் கொடையா
னந்தலின் ஞான நலஞ் சேர்
கந்த சாமியாங் கவிஞர் பிரானே

---

ஆரணி ஜாகீர் காமக்கூர் தமிழ்ப் பண்டிதர்
ஸ்ரீமான், மு. சுந்தரமுதலியார் மாணுக்கரி லொருவராகிய
போளூர் தாலுக்கா சேதாம்பட்டு கர்னம் முனியநகர்
ஸ்ரீமான்-ந. சந்திரசேகரம் பிள்ளையவர்கள் இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பார்புகழுந் திருத்தில்லைப் பதிதனக்கு வடபாலிற்
பரவி யோங்கும்.
பார்வதிமா புரமேவிப் பத்திவிதை தனைத்தூவிப்
பண்பா யாருஞ்

சீர்பெறவே திருவருட் பாவெனுமறையைச் செய்தளித்த
சித்த ரான
ஏர்பெறுமி ராமலிங்க சுவாமிகள்மீ தன்புமிகு
மெழிற் பாமாலை.

மணமருவு மலைத்தமிழில் வனைந்துபிர பந்தமென
மாந்தர் போற்றக்
குணமருவு நூலளித்த கோதிலான் யாவனெனிற்
கூறக் கேண்மின்
கணமருவு கழுகுவளர் காரணப்பட் டினிலுதித்துக்
கலைக டேர்ந்தோன்
வணமருவு வணமுயர்த்த கோமான்கோத் திரம்விளங்க
வாழுஞ் சீலன்.

தந்திரஞ்சேர் கருணீக குலமணியா யவதரித்த
தக்கோ னான
சந்திரசே கரன்மகனா கியமுத்துச் சாமியருள்
சார்த மேலோன்
மந்திரஞ்சேர் மகதேவன் மலரடியைப் பணிகின்ற
மதியின் மிக்கக்
கந்தமுறுங் கவின்கந்த சாமிவே ளானவருட்
கவிஞன் மாதோ.

---

திருநதிக்குன்றம் ஸ்ரீ தண்டபாணி சந்நிதி
ஸ்ரீ சண்முகாநந்த நிலயம் சீர்கருணர்
ஸ்ரீ சுப்பராயப்பிள்ளை குமாரர் உபாத்தியாயர்
ஸ்ரீமான்-சு. அரியபுத்திரப்பிள்ளை யவர்களியற்றிய
ஆசிரிய விருத்தம்.

ஆதிபர மானசிவ யோகநிதி யாகவந்
தாநந்த வாரியாகி
அம்புவியி னன்பாகு மமைதியுற முயாவா
னருட்பெருஞ் ஜோதியியலைத்
தீதகல வேயருட் பாவெனும் பெயராற்
றெரித்தருளி ராமலிங்கச்
செந்தமிழ்க் குருமூர்த்தி திருவடிப் பாமாலை
செய்தணிர் தான்யாரெனில்

ஒதிம முயர்த்தகோ மானெழிற் கோத்திரத்
துயராபஸ் தம்பசூத்ரன்
ஒளிர்பரம வங்கோச வுபநிடன் சீர்கருணை
ஞெழுகரைய னற்றண்டலைத்
தாதிலகு காரணப் பட்டீரில் வாழ்வுறுஞ்
சற்குணன் முத்துசாமி
தவமிகுஞ் சேயனுங் கந்தசா மிப்பிள்ளை
சமரசக் கவிராஜனே.

---

சென்னை கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப்பண்டிதரும்
பண்டிதமித்திர யந்திரசாலாதிபருமாகிய
வித்வான்-ஈ. இரத்தினமுதலியா ரவர்கள் இயற்றிய
வெண்பா.

சற்குருவி ராமலிங்க நாதன்மே லற்புதமாய்ச்
சற்குருவெண் பாவாதி சாற்றினன்—சற்குருவின்
தாண்மலரை யேபொருளாச் சார்சமர சப்பஜனை
மாண்கந்த சாமிமகி பன்.

வள்ளற்பாச் சொல்ல வருங்கந்த சாமிநங்கோன்
வள்ளற்பாக் கத்துநா மாவளிகள்—வள்ளற்பா
வைங்கரன்சேய் மாதவன்மா லந்தணனென் மாபொதுமா
சங்கரிக்கு நன் குரைத்தான் சார்ந்து.

---

திருமிழிசை-கந்தசாமிமுதலியார்குமாரரும்
சொக்கபுரம், இ-இராமலிங்கத்தம்பிரானவர்கள் மாணாக்கருமாகிய
வடிவேலுமுதலியாரவர்ளியற்றிய
அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

வேதாக மங்கள்விதித் திட்டவறு சமயத்தின் மேவுவோரு
மாதாக மொடுபஜித்தற் கியைநாமா வளியொன்று மருவுமன்பி
னோதாக ரந்தானீ தெனப்பாவ லோர்பலரு முவக்குமாறு
சேதாகன் றிற்கிரங்குஞ்செயல்போல வியற்றின னற்சிந்தையானே.

மற்றவன்யா ரெனின் வடலூர் வளரினருட் பிரகாசவள்ளலென்னும்
சொற்ற குமெம் மிறைவனுய ரிராமலிங்கப் பெயர்கொடேயோனன்ப
னற்றமிலாக் கருணீக குலோற் பவன்முத்துச்சாமி யறிஞனீன்ற
நற்றமிழ்தேர் சமர சபஜனைக் கந்தசாமியெனு நாவலோனே.

வெண்பா.

வடலூர்சற் போல வரும்பிறவி மாற்றும்
வடலூரி ராமலிங்க வள்ளல்—திருவருளாற்
கற்றவர்கல் லார்களிக்கக் கந்தசாமி வேள்சொற்றுன்
நற்றவநா மாவளியிந் நாள்.

மகாவித்வான்-காஞ்சீபுரம், சபாபதிமுதலியார் குமாரர்
கா. பாலசுப்பிரமணிய முதலியா ரவர்கள் இயற்றிய
நேரிசை வெண்பா.

செய்தோ ரிசைஞானஞ் சேர்ந்தன்பிற் பாடியே
மைதோய் பவமறுசன் மார்க்கசங்கத்—துய்வாரால்
நாமா வளிமேவு நங்கந்த சாமிசொற்ற
நாமா வளித்தெரிச னம்.

சித்தாந்த சரபம்
அஷ்டாவதானம் பூவைகலியாணசுந்தர யதீந்திரசுவாமிகள்
மாணுக்கருளொருவராகிய வண்ணக்களஞ்சியம்
காஞ்சி-நாகலிங்க முதலியா ரவர்கள் இயற்றிய
விருத்தம்.

பண்மறைமுடிவி லெழுந்தருளொருவன்
பாதபங்கேருக மதனின்
மண்மறையணுக்க ணீங்குருப்பத்தி
வளம்பெறப் பற்பலவிதத்து
முண்மையேதொடுத்துக் காரணப்பட்டி
னோங்குறு கந்தசாமிக்கோன்
சண்மதாதீத சமரசநாமத்
தனியிசை சாற்றினன்மாதோ.

சித்தாந்த சரபம்-அஷ்டாவதானம்
பூவை கலியாணசுந்தர யதீந்திரசுவாமிகள்
மாணுக்கரு ளொருவராகிய
வல்லை-சண்முகசுந்தர முதலியா ரவர்கள் இயற்றிய
பதினான்குசீர் விருத்தம்.

கருணைவள ருண்மையறி வானந்த வடிவினைக் காட்சியிற் கண்டதன்மேற்
காணுறு மதீதா நுபவநிலையை யெவருங் கலந்துய்ய வருளினோங்குந்
திருவருட் பிரகாச வள்ளலா ரிணைகழற் றினமுமற வாதவன்பன்
செல்வநனி மலிகார ணப்பட்டி லுறைதருஞ் சீர்கந்த சாமிநிபுணன்

மருளிகந்தான்மகோ டிகளெலாம் பேரின்ப வாழ்வடைந் தொளிரவேசண்
மதசமர சாதீத சித்விலாசப்பொருள் மலிந்தநா மாவளியினைப்
பொருணயஞ் சொன்னயம் பொலிதரப் புவியுளோர் புங்கவரு மதிசயிப்பப்
புகலிசைத் தமிழினி லியற்றினன் புகழ்பெறூஉம் புண்ணியம் வாய்ந்து
[ளானே.

நேரிசை வெண்பா.

நங்கந்த சாமியெனு நற்கவிஞன் சண்மதச்சீர்
தங்கு நாமாவளியைச் சாற்றினு—னெங்குந்
தெருட்பிரகா சம்பெறவே தேர்ந்தருட்பாச் சொற்ற
வருட்பிரகா சன்றுணையி னுல்.

---

சித்தாந்தசரபம் அஷ்டாவதானம்

பூவை-கலியாணசுந்தர யதீந்திரசுவாமிகள்

மாணுக்கரு ளொருவராகிய

புழலை-திருநாவுக்கரசு முதலியா ரவர்களியற்றிய

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

சீர்மணக்குந் திருவருட்பாத் திருமுறைக ளாறுந்
திகழ்மரங்கல் லாதிகளுங் கசிந்துருகச் செய்த
பேர்மணக்கு மருட்பிரகா சப்பெருமான் றுளேப்
பீடுபெறத் தன்மனத்து ளோதிறுவுஞ் சீர்த்தித்
தார்மணக்குங் கந்தசுவா மிக்கவிஞ னெங்கோன்
சமரசா தீதநா மாவளி யென் றோர்நூ
லேர்மணக்குஞ் சண்மதத் தர்பாடி வியந்தாடி
யின்பமையும் பேறுபெற வியற்றி மகிழ்ந்தனனுல்.

---

காமக்கூர் தமிழ்ப் பண்டிதர்-ஸ்ரீமத்-சுந்தரமுதலியா ரவர்கள்

மாணவர், கீழ்நகர்

ஸ்ரீமான் வேணுகோபாலநாயக ரவர்களியற்றிய

நிலமண்டிலவாசிரியப்பா.

அருட்பெருஞ்ஜோதி யாண்டவன்மீது
அருட்பாவென்னு மறுமுறையமுதைத்
திருவருட்பேற்றால் தினந்தினஞ்சொரிந்து

கருவிடைப்புகாது கதியிடைப்புகுந்த
தனியிராமலிங்கன் றாளிணைசார்ந்து
நனியவனருளால் நன்னிலையடைந்து
நன்றிமறப்பது நன்றன்றென்ற
பொன்றுமறையைப் புனிதப்படுத்த
குன்றேயனையவக் குருநாதன்மேல்
துன்றியஞானந் துய்த்தலாந்திருவடிப்
பாமாலையென்றொரு பனுவல்பொருள்
ஆமாறுசொற்றான் அவனுரென்னில்
இல்லையென்பாருக் கில்லையெனுதளிக்குந்
தில்லையம்பதிக்குத் திகழ்வதுவடபால்
ஆதியன்ஜோதி யருட்டிறன்விளங்கும்
பாதிரிப்புலியூர்ப்பாங்க ருள்ளதும்
ஆரணமோது மான்றோர்நிறைந்த
காரணப்பட்டாங் கடிநகருறைவோன்
மந்திரநன்மணி மாநீறணியும்
சந்திரசேகரன் சாந்தபவுத்திரன்
அத்தனருளேயே அனுதினந்துதிக்கும்
முத்துச்சாமி முதிர்தவப்புதல்வன்
ஆறந்தமுமே மாறந்தமென்று
பேறந்தமாகும் பேதமின்மையைச்
சாரமாக்கொண்ட சமரஸபஜனை
பேரதாக்கொண்ட பெரும்புகழ்ச்சீலன்
மருட்பேய்மாந்தர் மனத்திருளகல
அருட்பாவின்னயம் அன்பர்க்குரைப்போன்
உருப்படுமுழை யுருப்படச்செய்தோன்
தெருட்பெருஞ்சீலந் தேர்ந்தமதியுடைச்
சீர்கருணீகச் சீர்குலம்வந்தோன்
நீர்பெறுவடலூர் நித்தியன்சிற்சபைப்
பேர்பெறவணங்கும் பெட்புடைப்பெற்றியன்
ஏர்பரமாங்கோச வெழிலுபநிடதன்
ஓதிமமுயர்த்த கோமான்கோத்திரன்
சோதியாபத்தம்ப சூத்திரஞ்சேர்ந்தோன்
உழுவலன்பன் ஒழுகரையுடையான்

தொழுதகுவாய்மைத் தொன்னூலாய்ந்து
பந்தமைந்தும் பாழ்பொருளென்று
அந்தமொன்று மறுதிசாந்தமே
நந்தாப்பொருளென நன்றுயறிந்த
கந்தசாமிக் கவிவல்லோனே.

---

வித்வான்-புதுவை-பெரியசாமிபிள்ளையவர்கள்
மாணுக்கரிலொருவராகிய-புதுவை-ஒர்லெயான் பேட்டை
ஸ்ரீமான்-ஜோ. வெங்கடாசல நாயகரவர்களியற்றிய
ஆசிரியப்பா.

புனல்பெருகுலகிற் புகழொடுதோன்றுக
வெனவள்ளுவனு ரெடுத்துரைவாக்கிற்
கிலக்கியந்தானே யிலக்கியவள்ளலார்
அடலார்பிறவிவெங் கடற்குக்கலனும்
வடலூர்வளநக ரிடம்வாழ்வள்ளலார்
இச்சகவினிய விச்சையையொரீஇப்
பிச்சுப்பிச்செனப் பேசும்வள்ளலார்
தத்துவங்கடந்தவோர் வத்துவினியலைத்
தான்கண்டுணர்ந்த தனியநுபவமே
வான்கண்டொக்க மதுரமாக
வஃறிணையுந்தம் மகந்தெளிந்துய்ய
பஃறிறத்தானும் பகர்ந்திடும்வள்ளலார்
அம்மவோவுலகீர் வம்மினெனக்கூஉய்த்
தண்ணளிசுரக்குங் கண்ணிணைவள்ளலார்
பண்ணலம்பாநல மெண்ணிறைறயேனுந்
தேராவொருவன் றெற்றித்தெற்றிப்
பாராவோதப் பாங்கரினின்றிடு
மன்பொன்றுக வன்பரோர்செவியிற்
பண்டிழைதவத்தா னண்டினவ்வொலி
வைரச்சிலையையும் வயங்கொண்மனக்கலை
யன்றேயுருக்கி நின்றேவியமாக்
கண்ணீர்வார வெண்ணம்வேறு
யானந்தத்தே னருந்தினராகி

மோனந்தனையே முற்றுறச்செய்யும்
பெற்றித்தாய பேரருட்பாக்க
டெற்றெனவோதுஞ் செந்நாவள்ளலார்
தன்னகமிற்றென வுன்னவெண்கலையால்
விளக்கிக்காட்டும் களக்கமில்வள்ளலார்
மண்ணென்றுகடமுத லெண்ணிற்பலபோல்
உன்னுவுயிராய் வானுய்நிலனு
யனலாய்வளியாய்ப் புனலாய்ப்பெண்ணு
யாணுயலியாய்க் காணுக்காட்சியா
யெல்லாந்தானு யில்லாதனுவாய்
நேசித்தெனது நினதென்றொழியாப்
பூசல்கொளச்செய் பொருளாயருளா
யெங்கும்வியாபித் தேகமாய்நின்று
தங்கச்சபையிற் றனிநடஞ்குயிற்று
மொருநின்மலன்வர மிருதயவள்ளலார்
எல்லாவுயிரினு மிரக்கநனிமரீஇக்
கொல்லாவிரதங் கொண்டவள்ளலார்
உலகோருயிர்க்கொலை யொருங்கொழிந்தின்புற
இலகாப்பெருந்தவ மிற்றெனவினிதாம்
பலசாத்திரத்தின் பயனைத்திரட்டி
நலபோதகந்தரும் ஞானவள்ளலார்
உறவும்பகையு வொப்பநோக்குந்
துறவுபூண்ட தூயவள்ளலார்
சத்தாஞ்சைவ சன்மார்க்கத்தரு
வித்தாரங்கொடு மேலாத்தழைப்ப
முன்னுளுதித்த நன்னல்வருமே
இந்நாளோருரு வெடுத்தனரோவென்
றெண்ணியெண்ணி யிறும்பூதெய்தும்
புண்ணியமெய்யை நண்ணும்வள்ளலார்
திருமறைமுடியிற் றிகழ்செம்பொருளைத்
தருவியளந்திடுந் தூய்மதிவள்ளலார்
ஐம்புலக்குறும்பாம் வம்பரையடக்கி
யாறுதார வடுக்கிவர்ந்தப்பாற்
பேறுய்விளங்கொளிப் பிழம்பைக்கண்ணுறீஇச்
சகந்தோன்றுது சுகம்பெறுவள்ளலார்

மோனசத்தி முயங்கியேழ்வெளியினும்
ஞானசித்திகொ ணுதவள்ளலார்
என்னுமிராம லிங்கவள்ளலார்
தன்னைப்பாடெனச் சாற்றச்சுட்டி
நிட்டைநினைவிலந் நெறிமையக்கடைப்பிடித்
திட்டமருதிய லிசைநாடகமெனு
மிம்மூன்றுவிராய் வினிமைபயத்தலிற்
பெம்மானவநடம் பிறங்கமும்மூன்றும்
வண்ணங்காரண காரியவியலாற்
திண்ணந்தேரத் திறவறிவோர்கள்
சும்மாதிருக்குந் தூய்மையைக்காட்டிச்
சும்மாவிருக்குஞ் சுகந்தருவித்தலின்
மருளையகற்றியின் னருளைவிளக்கலின்
வாரியின்றேன்று மாமருந்தேயோ
வீரியந்தோன்று மெய்வித்தமேயோ
காண்டற்கருந்தூண் டாவிளக்கேயோ
யாதோவுவமை யென்றறிந்தகட்
காதோன்கண்டுடல் காலாய்கோணிமு
னிற்பநாணுறீஇ நிலம்போயொளிப்ப
ஆறந்தமேலா மகப்பொருளநுபவ
வீறெலாமமைந்த வெண்பாவந்தாதி
அற்புதமாலையா னந்தக்கண்ணியென்
றொருநூல்முதலிய வொருபதாமழகு
மொருவாதிலங்க வுரைத்தனன்புலவீர்
அன்னவனெவனெனிற் பன்னுதுங்கேண்மின்
பிடிநடைமடவார் பிரசங்கூர்மலர்க்
கொடிபடர்தலத்திற் குடைதனினலைகள்
வெள்வளையுயிர்த்த தெள்ளியமணிகளை
யள்ளியள்ளி யாண்டுறுமணைமிசை
யெறிந்திடவவைகள் செறிந்துநகைப்பதை
யம்பரநெகிழ வளகஞ்சோர
விம்பராட்டயரு மெம்முருவனைத்துங்
குலைதான்கண்டு குறுநகைசெய்வதென்
றிலைவேல்விழியா ரெண்ணிவெருண்டு
நீமிசைப்போந்து நிதிப்யான்கடுப்பத்

தாமிசைந்தேறித் தண்ணெளிவிரிக்கு
மத்தாளங்கொட் டத்தத்திருத்தித்
தத்தஞூரற்குச் சரிபார்த்தொவ்வா
திருப்பக்கண்டிகழ் மருக்குழலாரொடு
சீரணவிடுமெழிற் காரணப்பட்டி
லேய்ந்தவன்பைந்தமி ழாய்ந்துதேர்ந்தவன்
அம்மைப்பண்ணெடு பாவிடவல்லவன்
விழிமணிநீரெடு தமிழியவங்கன்
கற்பனசுற்று நிற்பவனந்நெறி
யம்புவிதன்னி லெம்பெருமக்கள்
தொண்டில்வழாதோன் கண்டனமொழியான்
முன்னர்க்கிளத்திய முதிரறிவாலே
தன்னைத்தானே தரிசனஞ்செய்யுஞ்
சுத்தவித்தக வுத்தமவண்ணலைக்
குருவாக்கொண்டப் பெருமான்மலரடி
சித்தஞ்சிரத்தினும் வைத்துப்பழிச்சுவன்
அற்பமுங்கல்வி யறிவில்லாமல்
புற்புதவாழ்வே பொருளெனமதித்து
நானெனென்று நாத்திகம்பேசு
நாநாணடைந்து நடுங்கச்செய்வோன்
சன்மார்க்கசாதகஞ் சகத்துளோர்தேர
நன்மார்க்கநவிற்று நல்லிசைப்போதகன்
பொருந்துமன்புந் திருந்தியஞானமு
மொழுக்கமும்வாய்மையு மொப்பில்சாந்தமும்
பழுத்தசைவப் பத்தியடக்கமுங்
கற்றோர்கேண்மையுஞ் சொற்றேறாண்மையும்
பிறநலன்மற்றும் பிறங்கவுற்றோன்
சுந்தரசுகுணத்தோன்றல்
கந்தசாமிப்பேர் சுவிவல்லோனே. 1

வெண்பா.

அந்த வருட்பிர காசவள்ள லார்க்கன்பன்
கந்தசா மிப்புனிதன் கண்டனன்வேற்—கந்தனண்ணான்
மாதா சிவன்பிரமன் மாலென்மூா வர்ணிபொது
மாதாரிந் நாமூா வனி. 2

கட்டளைக் கலித்துறை.

தெருட்பிர காச முடையோ ரெனப்புவி செப்புதிரு
வருட்பிர காச மிருவள்ள லார்தமக் கன்புடையோன்
பொருட்பிர காச முறுகந்தசாமிப் புலவன்சொற்றுன்
மருட்பிர காச மிலாசித்வி லாசநா மாவளியே. 3

நகராமலை-ஸ்ரீமான், நா. இராமலிங்கம்பிள்ளை யவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருமருதூ ருலகுய்ய வவதரித்த ராமலிங்க தேசிகன்றன்
மருமலர்ச்சே வடிசித்த மனதினில்வைத் தக்குருமேல் விருத்தமாலை
குருமகிழ்சேர் பிரசாத மகிமையொடு தனிப்பாடற் குலவுகிள்ளை
கருமருவா வகைபுலம்ப லானந்தக் கண்ணிபல்லிக் காதனூலே. 1

சீர்மருவு பாதார்ச்சனைச் சரிதக் கீர்த்தனைக டிகழும்வெண்பா
ஏர்மருவு கலித்துறையந் தாதியுட னெமபயசீக் கினியனன்பா
பேர்மருவு சரிதமொடு சமரசநா மாவளிசெய் பெரியசீலன்
கார்மருவு காவுடைய காரணநன் னகர்தன்னுட் களித்துவாழ்வோன். 

கோமேவு பொருவிலொழு கரையுடையான் பொன்னெனினை முயர்த்தகோ
பாமேவு கோத்திரனு பத்தம்பச்சூத் திரத்தான் பரமாங்கோசத் [மான்
தாமேவு முபநிடத மாராய்ந்தோன் முத்துசாமித் தோன்றன்மைந்தன்
பூமேவு சமரசநற் பஜனைசெயுங் கந்தசாமிப் புலவன்றனே. 3

கட்டளைக்கலித்துறை.

பூமலி காவுறு நன் மருதூரன் புலமைமிக்கோ
னுமலி பாவலர் போற்றெற்றி நாதனுன் ஞானமுற்றேன்
தேமலி சன்மார்க்க சங்கத்தைத் தாபித்த தேசிகன்சீர்
மாமலி கந்த சுவாமியே யன்றியார் வாழ்த்துவரே. 4

நேரிசை வெண்பா.

இராமலைவு நீங்க வெழிலருட்பா தந்த
இராமலிங்க சற்குருவி னேற்றம்—விராவு
தமிழினிற் கந்தசாமி தந்தான் சரித
மமிழ்தினு மின்பா மது.

நகராமலை-ஸ்ரீமான், ஆ-ஆனந்தப்பிள்ளை யவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

திருவோங்கு மருதூரி லவதரித்த விராமலிங்கச் செம்மலின்மே
லுருவோங்கு மந்தாதி முதற்பனூ லியற்றினனு லுலகர்வாழ்த்துந்
தருவோங்கு காரணப்பட் டதனிலமர் கருணையுள தக்கோன்ஞான
மருவோங்கு சமரசநற் பஜனைகந்த சாமிப்பேர் வாய்ந்தோனன்றே.

இந்நூலாசிரியர் மாணாக்கரு ளொருவராகிய

வனதடாகபுரம் அ-வெங்கடசுப்புபிள்ளை இயற்றிய

நிலமண்டில வாசிரியப்பா.

சீரார்பொன்னித் திருநாட்டுயர்ந்த
பேரார்புலியூர் பெரும்பதிக்கணித்தாய்
அந்தரமளாவு மணிபொழிஞுப்பண்
பைந்தளிர்க்கொடிபல படர்ந்தழகமைந்து
மட்டூர்வனச மலர்நிறைவாவித்
தொட்டேகுடைதரு தோகையர்கூந்தலி
ஞனம்புனற்பட நாற்றிசைமணக்கவுந்
தானம்பலபுரி சதுர்விதவருணமுந்
தன்னிடங்கொண்ட தாய்த்தவளமாடங்கள்
பொன்னெடும்புரிசை புனற்றாழ்கிடங்கு
மற்றுளவளனு நால் வரம்பிகவாதொளிர்
நற்றலமாமரு தூர்ப்பதிநண்ணிவாழ்
மாண்பினன்முளரி வானவனனையோன்
சேண்படுதிங்களின் றிருநிறமுடைய
வாடையன்கருணி காணிமரபினன்றென்
பாடையிற்றேர்ந்த பண்டிதசிரோன்மணி
இராமையப்பெய ரிருந்தவத்தலைவன்
பராவிமுற்செய்த பயனெலாந்திரண்டு
வந்ததொப்பாமென வாழ்க்கைத்துணையாஞ்
செந்திருநிகர்த்திடு சின்னம்மைப்பெயர்ப்
பொலம்பூங்கொம்பிடை பூவுலகுய்ந்திட
நலமாயுதித்திடு நம்பிமும்மூன்றாண்
டெனப்புகல்வயதி னிலிலைநெடுங்கதிர்வேற்
றினைப்புனங்காக்குஞ் சிறுமியைமணந்திடு
மையனையுள்கியே யாறுமுகவெனச்
செய்யுண்முற்கொண்ட சிறப்புறுபதிகங்
கருங்கன்மனமுங் கனற்படுமெழுகா
யுருகிடச்சொற்றிடு மொப்பிலாப்புலவன்
பாம்பொடுபலிக்காற் பண்ணவர்காணத்
தேம்படுமலர்ச்சடை செறிதரவொருகான்

'முயலகன்புரிதவத் தர்லவன்முதுகிடை
யியற்பெறலூன்றி யிணையெனக்கொள்ளுங்
கஞ்சமுநாணுங் கால்தைதத்தூக்கிப்
பஞ்சின்மெல்லடிசேர்ப் பாவையுண்ணுணச்
சிலம்புசத்திக்கத் திசைமுகன்றாள
நலங்கொடுதாக்க நாரணன்றண்ணுமைச்
கொட்டத்தேவர் குழாங்கற்பகமல
ரிட்டபூர்த்தியெலா மெமக்கருள்செய்வாய்
சங்கரசம்போ வென்றவன்றளிற்
பொங்கமாயருச்சனை புரிந்திடமன்றினு
ளானந்தத்தாண்டவ மாடிடும்பெருமா
னேன்காணு விணையடிப்பெருமான்
கல்லாலின்கீழ்க் கடந்தயோகியர்க்குச்
சொல்லாநிலையரு டோன்றலையுள்கி
யானந்தக்கணீ ராருமொழுக
வானம்புவிகீழ் மாலோகத்திலு
மிவ்விதம்பாடி யிறைஞ்சினோருளரென
லொவ்வுயோவொவ்வா துயர்புலவீர்கா
ளென்றுசன்மார்க்க ரிசைத்திடவருட்பா
நன்றருளிச்செய் நாவலன்றீயோ
ராயினுமவன்புக ழனுதினநினைவரேற்
றாயினுமினிய தயாநிதிச்செம்மல்
ஓதாதுணர்ந்த வுத்தமனுலகெலா
மீதானம்பெற மிகவிழைந்திடுவோன்
ஒருநாட்கனவி லுயர்பளிக்காற்செய்
திருமாளிகையிற் றெள்முகநோக்கி
யரதனபீடத் தமர்ந்தெனைவலிந்தே
வரவழைத்தடியேன் மத்தகந்தனிலே
செங்கரமமைத்துத் திருச்செவிவலத்தே
பொங்கமாயொளிர்மனு புகன்றினியுலாவாத்
தேகமுற்றிடவுஞ் சித்திகளெல்லா
மாகவுஞ்சிலமருந் தருளிச்செய்தே
காந்திடுமொருவன் கருணையேயுருவன்
புரம்பொடிசெய்த புண்ணியனினிதம
ரொற்றிப்பதியில்வ் வுமாபதிதானே

கற்றைச்சடைமுடி கரந்தருட்குருவாய்
வலுவில்வந்தாண்ட வள்ளலெவ்வுயிருஞ்
சிலுகுறற்காணு ஜீவகாருண்யன்
பூதசுத்தி புரிந்துநல்விடங்கம
லாதனமேவி யகமுகக்கண்ணுற்
கண்டிடுமனுபவங் காட்சிக்கண்ணியாய்
விண்டினிதருளும் வித்தகவள்ளுவர்
தோன்றிற்புகழொடு தோன்றுகவென்ற
வேன்றசொற்கிலக்கிய மெடுத்துரைபுனிதன்
தமிழெனுமொழியித் தாரணிதன்னி
லமிழ்தெனச்சுலவுத லறிஞர்களியாரு
மிற்றெனத்தெரிந்து கொண்டிடவதனியல்
தெற்றெனக்காட்டிய சிறப்புறுமேலோன்
தணிகைப்பதிவளர் சண்முகஞான
மணியருள்பெற்றிடு வாய்மையன்மாருத்
தனுவொடுதிகழ்தரு சத்திபெற்றவன்முன
மனுமுறைகண்டிடு வாசகம்பகர்ந்தோன்
இளங்கவிப்புலமை யாலிலக்கணமிருதென
வுளந்தனினினைந்த வொருவர்க்காக
விலக்கணவியலெலா மெழில்பெறவமைத்துத்
துலக்கமாமிருபங் தொழூவுருபய
காலாநிதிவேலா யுதப்பெயர்கண்ணியன்
சொலாலவர்நாணத் தொகுத்தனுப்பியதோர்
மாண்புறுமருட்பிர காசவள்ளற்பெயர்
பூண்பெருமானிப் புவியெலாம்புகழ்வோன்
இராமலிங்கப்பெய ரெந்தைதன்சரித்திரம்
விராவுநற்கீர்த்தனை வெண்பாவந்தாதிக்
கலித்துறையாகக் கழறுமந்தாதி
சொலித்திடுசொற்சுவை துன்னுநற்பாட
லிருநூற்றிருபஃ தின்னுயிர்க்கொலைமறுத்
தொருவுநற்பாட லோரைம்பஃது
மெழுபயமறனு மெழிலுறுவிருத்தக்
கமழுறுமாலையுங் கவின்குருப்ரசாத
மகிமையும்பல்லியின் மாண்பெறுகாதலும்
பகிர்முகந்தன்னிலும் பண்பாய்க்கேட்போர்க்

கானந்தந்தரு மருமைசால்கண்ணியு
மோனந்தருவா யெனமுழுமனதொடும்
புலம்பற்கண்ணியும் புனக்கிளிக்கண்ணியும்
நலந்தருபாத நான்மலர்மீதே
யருச்சனையாக வணிந்தகீர்த்தனங்களும்
குருச்செலுநெறியிலை தெலுங்குறிப்புணர்த்துஞ்
சமரசநாமா வளிகளுஞ்சரித்திர
மமைவுறுவசனச் சுருக்கமுமழாகா
யியற்றினனியாரெனி லிருங்கடல்வைப்பி
னுயத்தருநெறிகொண் டோங்குதற்கிடனைப்
சொற்றுணைவேதியன் சோதிவானவனென்
றற்றமில்பதிக மன்புடன்புனைந்துக்
கற்றாண்டெப்பமாய்க் கரைதனிலப்ப
ருற்றபாதியுப்புலி யூர்க்கணித்தாகச்
சீரெலாம்பொலிந்து திகழ்தருகின்ற
காரணப்பட்டோர் கருணிகர்குலத்தில்
ஒழுகரையுடையவ ளேதிமமுயர்த்தப்
பழுதிலாக்கோமான் கோத்திரம்படைத்தோன்
ஆபத்தம்பமென் றமைசூத்திரத்தோன்
கோபந்தணிந்த குணக்கடலனையோன்
பரமாங்கோசே பசிட்டதம்பயிலுங்
திரமாநாவினன் திசைமுகன்வழியோன்
எத்திசையும்புக ழெண்ணெழுத்தறிந்த
முத்துசாமித்தவ முயன்றினிதளித்த
காண்முனைஜீவ காருணியக்கட
லூன்றினுவோரை யுபாயமாய்த்திருத்தி
நன்னெறியுய்த்தி டுநல்விரதம்புனை
சொன்னயன்ருன்புவி தோன்றுநாடொடங்கி
யின்னுட்காறு மிராமலிங்கேந்திரன்
பொன்னடிக்கடிமை செய்புனிதன்புவியிற்
றனக்கென்றுறுபொரு ளெல்லாந்தக்கா
ரினத்திற்செலவிடு மெழிலுறுகுணத்தன்
சந்தமார்ந்தொளிர்தரு சமரசபஜனைசெய்
தந்தசாமிப்பெயர் கவிவலோன்றனே,

இந்நூலாசிரியர் மாணவர்களி லொருவராகிய
புதுவைமாநகரம் அகத்திய நாடிஜோசியம்
முத்து பாலகிருஷ்ணபிள்ளையவர்களியற்றிய
ஆசிரியப்பா.

அருட்பெருஞ்ஜோதி அரியமாமந்திரம்
இருட்பெருமூலமெலாம் எழிலுறுமெய்யருள்
பெறவுகந்தருளிய பிள்ளைப்பெருமான்
சிறந்தசன்மார்க்கந் திகழவமைத்தோன்
மங்கலமமரும் பணமிகுமெண்டிசை
எங்கணுமிரக்கம் இலங்ககவினத்தர்
எல்லவரும்புகழ் இராமலிங்கேந்திர
வல்லவன்கழலிணை மலரடிக்கடியன்
அக்குருநாதன் அரியமெய்யருளால்
எக்குவலயமும் ஏத்திப்புகழ்ந்திடச்
சற்குருவெண்பா தனியந்தாதி
நற்குருநேசம் நவிலும்வெண்பா
அற்புதகலித்துறை அந்தாதிமாலை
பொற்புறுஞ்சற்குரு பூதிமான்மியம்
நன்னிமித்தப்பெற நாடிடும்பல்லி
சொன்னிலைதருநூல் சுகத்தின்கண்ணி
எமபயநீக்கம் இசைத்திடுமாலை
சமரசமாகச் சாற்றுநாமாவளி
தலைநெறியாகத் தரணியோர்தழுவும்
கொலைபுலைநீக்கும் குணந்தருமுதனால்
நாதாந்தந்தெரி நற்குருதிவ்ய
பாதார்ச்சனையாய்ப் பகருங்கீர்த்தனை
இருட்பிணிதீர்த்திடும் எல்லாம்வல்ல
அருட்பிரகாசன் அரியசரித்திரம்
அருட்பெருஞ்ஜோதி அகவலினுண்ணிறை
அருட்பொருள்விளங்கும் ஆனந்தக்கண்ணி
நலம்பெறச்சற்குரு நாதனருள்பெறப்
புலம்புறுவகைதெரி புலம்பற்கண்ணி
உரித்தெனச்சமரசம் உரைத்தசற்குருவின்
சிரித்திடாதுரைத்த சரித்திரக்கீர்த்தனை

இவையெலாஞ்சற்குரு எழிலுறுபத்தியின்
சுவையெலாந்தெள்ளிதிற் சொல்லினன்யாரெனின்
பந்தமதகற்றும் பரசிவன் மைந்தனும்
சுந்தரவிநாயகன் சுகந்தரவிளங்கும்
ஆரணமாகமம் அறிந்தவர்பரவும்
காரணப்பட்டினிற் கருணீகர்மரபிற்
உதித்தவனேறிமம் உயர்த்தகோமான்
துதிபெறுகோத்திரன் சுகம்பெறுமாபஸ்
தம்பசூத்திரன் தகுபரமாங்கோச்
செம்பதம்விளக்கும் செழுமுபநிடதம்
முத்துச்சாமிமால் முன்செய்தவத்தால்
சத்துச்சித்தாந் தகவருள்புதல்வனுய்
கந்தமார்சுந்தரக் கந்தசாமிப்பேர்
சொந்தமாக்கொண்ட சுகுணப்புலவன்
என்னையின்றென்ன் றெனக்கறிவித்த
சொன்னயமுடையவென் தூயசற்குரு
நாதன்புகன்றருள் நன்னூலருமை
மாதவர்புகழ்வரிம் மாநிலந்தனிலே.

---

இந்நூலாசிரியர் மாணாக்கர்களி லொருவராகிய

கிளியனூர்-கர்ணம்

சுப்பராயப்பிள்ளை யியற்றிய

நேரிசையாசிரியப்பா.

கடல்புடையுடுத்த காசினிமகளாந்
தடமுகம்போன்று தயங்குசீர்மலிந்த
ஆடகச்சபையி னருந்தவர்காண
நாடகமியற்று நம்பன்வாழ்புலியூர்க்
குத்தரதிசையி லோங்கிடும்வடலூர்
சித்திபுரந்திகழ் திண்ணியன்மருதூர்
பெரும்பதிதன்னுட் பிறங்குசீர்கருணர்
அருங்குலந்தோன்றி யவனியிற்பலகலை
கற்றுணரிராலிம யப்பெயர்கண்ணியன்
நற்றவந்தன்று னகைமலர்க்கொடியாஞ்

சின்னம்மைப்பெயர் சேயிழைவயிற்றில்
இங்கில்த்தோருய வெழில்பெறவுதித்தோன்
கண்டொருசீனியுங் கரும்பின்சாறும்
விண்டுதேன்சொரியும் வேர்ப்பலாச்சுளையும்
வாழைக்கனியு மாம்பழம்பிழிந்த
பீழையில்சாறும் பிறங்கற்றேனும்
ஆவின்பாலு மாச்சியமொடுதயிர்
நாவின்மட்டேசுவை நல்குமாலெம்மான்
திருவாய்மலர்ந்த திருவருட்பாவின்
ஒருபாசுரமே யோதிடினாவோ
உடம்பினிலுள்ள வுறுப்பெலாமினித்துத்
தடங்கண்வழியாய்த் தாரையர்கப்
பொங்குமென்மயிர்க்கா றோறும்பொடித்துத்
தங்குமெய்யின்பஞ் சாற்றற்கரிதாம்
எனவுலகெல்லா மிசைக்குமாறருளாற்
பனுவல்பல்லாயிரம் பாடியேதந்தோன்
சீர்பெறுகாழியிற் சிவபாதவிரதர்
பேர்பெறப்பயந்த பிள்ளையுமந்நாள்
திருவாரூரிற் றிலதவதியெனும்
பெருமாதவம்புரி பெண்ணினல்லாளோ
டன்பிற்பிறந்தே யலைகடலிடத்தே
வன்கற்றூண்மிதந் தேறுவாக்கரசும்
அருமறைநான்கு மாகமாதிகளுந்
திருநெடுமாலுஞ் சென்றுகாண்பரிய
சேவடிவருந்தச் சிவபிரான்றன்னை
மாவடுவகிர்புரை மதர்நெடுங்கண்ணி
பரவையின்புலவி தீர்த்திடப்பானாள்
இரவினிற்றூதா யேகுமாறிசைத்த
ஒருவனுங்கூடி யோருருவாய்ப்புவித்
தெருமரறீர்ப்பான் சிந்தையுணாடி
இராமலிங்கப்பெய ரெடுத்துவந்தானெனத்
தராதலம்பரவுஞ் சற்குணன்சரித்திரக்
கீர்த்தனைவெண்பா கிளரந்தாதி
பார்த்தவர்பலரும் பழிச்சுசீர்கொண்ட

கலித்துறையாகக் கழறுமந்தாதி
பொலிதனிப்பாடல் புலைகொலைமறுத்தல்
எமபயநீங்குதற் கினிதுறுமாலை
அமர்விருத்தத்தா லாகியமாலை
குருப்பிரசாத குணமிகுமாலை
ஒருபல்லிக்காத லோங்குமானந்த
மருவுங்கண்ணி மதிபெறப்புலம்பல்
தருமுறைக்கண்ணி தகுஞ்சுகக்கண்ணி
பாதார்ச்சனையாய்ப் பகருங்கீர்த்தனை
மேதாவியர்புகழ் மிகுநாமாவளி
அருட்டருஞ்சற்குரு வரியசரித்திரம்
பொருட்டரவசனமாய்ப் பொருந்தநிகழ்த்திச்
சொன்னயம்பொருணயந் தொடைநயம்பொருந்தப்
பன்னகஞ்சுமந்த பாரிலுள்ளோரெலாம்
அந்தரசுர ரணிகொள்பாலாழியான்
மந்தரமலையில் வாசுகிபிணித்துக்
கடைந்தநாடோன்று கடிகமழமுதவிண்
குடஞ்சுட்டுதவுங் கோதிலாவுணவுங்
கயக்குமாலெனச்சொலக் கழறினன்யாரெனிற்
றியக்கமொன்றில்லாச் செல்வம்பொருந்தி
தம்மனையடைந்த தளர்பசியோரை
வம்மினென்றெழிலார் மலர்முகங்காட்டி
ஆதனத்திருத்தி யறுசுவையுணக்கள்
போதவேயூட்டிப் புகழ்பெறுமாக்கள்
மன்னுங்காரணைப் பட்டெனும்வளநகர்
தன்னிலேகருணிகர் தலைவனுதித்தோன்
ஓதிமந்தன்னை யுயர்த்தகோமானென
நீதியாய்ப்புகலுங் கோத்திரநிபுணன்
முத்துசாமிப்பெயர் மூதறிவாளன்
பத்தியாய்ச்செய்தவம் பலித்தினிதீறன்
சந்ததஞ்சமரச பஜனைசெய்
கந்தசாமிப்பெயர் கவிவல்லவனே.

---

இந்நூலாசிரியர் மாணாக்கர்களி லொருவராகிய
தைலாபுரம்-கர்ணம்,
து. வெங்கடாசலப்பிள்ளை யவர்களியற்றிய
நிலமண்டில வாசிரியப்பா.

உலகமுண்டவன்ற னுந்தியிற்பூத்தொளிர்
மலரவனருளால் வகுப்புறுமுலகில்
இகலிற்பலவுயி ரிழைத்திடுஞ்செயல்கள்
சகலமுந்தெரிந்து சண்டர்க்குரைத்திடுஞ்
சித்திரகுப்தராஞ் சீர்கருணீகர்
உத்தரமரபி லுதித்தருள்குரவன்
பதந்தரவோங்கிய பரமனடஞ்செயுஞ்
சிதம்பரமாதலத் தினுக்கணித்தாயுறும்
மருதூரென்னும் வளம்பெறுநகரில்
குருவாய்த்தோன்றிய குணம்பெறுபுனிதன்
மோனமாதவரு முனிவரும்வழுத்தும்
ஞானபானுவா நலந்தருசற்குரு
உத்தரவடலூர் ரோங்கியவாசான்
சித்திவளாகச் சீர்நகர்சித்தன்
வள்ளற்பெருமான் மலரிணையடிக்கே
உள்ளன்புடனே யுரைத்தபாமாலைகள்
குருவின்சொப்பனக் குறிப்பினுரைருளலை
ஒருவகையுன்னி யுரைக்குதும்புலவீர்
பந்தமதகலும் பலன்பெறப்புகன்ற
சுந்தரக்கணபதி தோத்திரமாலையும்
தேறுமெய்ஞ்ஞானந் தெரிக்குங்குகன்றன்
ஆறுதலந்துதி அரியவெண்பாக்கள்
மேதகுசற்குரு வெண்பாவந்தாதி
நாதமுங்கடந்த போதமதகற்றுங்
கோதகலுளநிறை குருநேசவெண்பா
தீதறுமாவடற் சிற்சபைமாலை
பயன்பெறநவிலும் பல்லிக்காதல்
வியன்றருசற்குரு விபூதிமகிமை
விற்பனர்வியக்கும் விருத்தப்பாமாலை
கற்பவர்க்கினிக்குங் கவின்சுகக்கண்ணி

'அற்புதநிறைவுறும் ஆனந்தக்கண்ணிகள்
பொற்புறமுறைசெயும் புலம்பற்கண்ணிகள்
சண்மதமவைமேற் சமரசாதீதத்
திண்மைவிளக்கந் திகழ்நாமாவளி
போதாந்தமோனப் புவிதருஞ்சற்குரு
பாதார்ச்சனையாய்ப் பகருங்கீர்த்தனை
படுவதையறியாப் பாவமேசெய்யும்
கொடுமையைநீக்குங் கொலைமறுத்தலையும்
பொற்புறவிளங்கப் புத்தமுதந்தரும்
சற்குருவற்புதச் சரித்திரக்கீர்த்தனை
தேசிகன்றிருவடி தினமுந்துதிக்கும்
ஆசிகலன்பா லருளினன்யாரெனில்
விழுமியர்வாழ்வுற விளங்குநகரெனும்
ஒழுகரையுடையா ருலகோர்புகழும்
உயர்வுறுமோதிம முயர்த்தகோமான்
மயர்வறுகோத்திர வானெனுந்தக்கோன்
ஆத்திகர்திலக வாபஸ்தம்ப
சூத்திரமுடையோன் சுகந்தருபரமாங்
கோசோபநிடதக் கோதறுநாலோன்
மாசோரணுவு மருவாமதியோன்
சீரணவுந்திருச் செல்வவளம்பெறுங்
காரணப்பட்டிற் கருணீகர்மரபில்
முத்துச்சாமியை முறையொடுவழிபடும்
முத்துச்சாமியின் முற்றவத்துதித்தோன்
எந்தசாமியுமொன் றெனுமென்குருவாங்
கந்தசாமிப்பேர் கவிவல்லோனே

விருத்தம்.

எல்லையிலாச்சீ ரருட்பிரகாசவள்ளற் சீடர்களுள்ளி னிதுவாழும்
வல்லவ னெங்குரு கந்தசாமியன்பா லிராமலிங்கவள்ளன்மீது
நல்லதமிழ்ப்பாசுரங்க ணவனவமாய் நண்பினொடு நவின்றானந்தச்
சொல்லருமைசேடனுக்குஞ்சொலவரிதென்றலடியேன்சொல்லற்பாற்றோ

---

திருமழிசை வீரசிம்மாசனமடம்
ஸ்ரீலஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகளாதீனம்
வித்வான்-சிவப்பிரகாசையரவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நிலம்பூத்த வடந்தில்லைக் குற்றாலநீபம்வேய் நிலவுங்கானத் [பேர்
தலம்பூத்த சபையைந்துஞ் சடசபையென் றிகந்தரவுத்தர ஞானப்
வலம்பூத்த சிற்சபையே நற்சபையென் றருணடனம்வயங்கக்கண்ட
நலம்பூத்தசிதம்பரமிராமலிங்கேந்திரன்புகழேநவின்றுவாழ்வோன்.
சமரசவே தசன்மார்க்க சங்கத்தன் பருக்கன்பன் சாற் றஞ்ஞானத்
திமரமற நாளுஞ்சண் மதசமர சபஜனையைச் செய்யுந்தொண்டன்
பமரமுறப் பூம்பொழில்சூழ் காரணப்பட் டினிவிலகும் பண்பனல்
கமலைவளரு நாவனெழிற் கந்தசா மிக்கவிஞன் களிப்பயாரும். [வெண்
மன்னுதிரு வருட்பிரகா சக்கோமான் வலிந்தருளும் வாய்மைதன்
துன்னுதுரி யத்தவிசி னின்றுணர்ந்தே யவனருளாற் சொற்றதாயச் [னைத்
சொன்னயமுந் தொடைநயமு நடைநயமுந் துதைந்தெஞ்ஞான்றும்
பன்னுமடி யவர்க்கிருமை பயக்குநா மாவளியைப் பகர்வர்மாதோ.

---

புதுவை வித்வான்
பு. அ. பெரியசாமிபிள்ளை யவர்கள் இயற்றிய
எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

உலகெலாங்கடந்த வொருபரம்பொருளி
னுண்மையை யுள்ளவாறறிந்து
நலமுறும்ராமலிங்க தேசிகன்மே
னவிலருமற் புதமாலை
யிலகுமானந்தக் கண்ணியந்தாதி
யினியதே னொழுக்கியதென்ன
மலைவறப்புகன்று மங்கலம்பெற்றுன்
மற்றவனெவ னெனிற்பகர்தும்
மதுமழைபிலிற்றும் பொதும்பர்கள்சுலவும்
வளமலி காரணப்பட்டின்
மதிவலோர்நன்கு மதித்திடவாழ்வோன்
மன்றுளேதனி நடங்குயிற்றும்
பதியருட்புகழைப் பண்ணொடுபாடிப்
பத்தர்களுளத் தினினிறைப்போன்
சதுருடையன்பே யுருவமாங்கந்த
சாமியென்றோதுமே தையனே.

மகாவித்வான் சித்தாந்தரத்நாகரம் அரன்வாயில்
வேங்கடசுப்புப்பிள்ளை யவர்களியற்றிய
நேரிசை வெண்பா.

சீமான் வடலூர் திருவருட்பா வள்ளலருட்
கோமா னுணர்த்துங் குறிப்புணர்ந்தே—மாமாட்சி
நாமா வளிதந்தா னங்கந்த சாமிபின்ப
மாமா றிசைப்பண் ணமைத்து.

கட்டளைக்கலித்துறை.

செயனந் தரியங்கு சன்சேய் நபோமணி செம்பொன்வெண்பொன்
னயனந் தரியரன் மேற்பொது நாடி யருந்தமிழி
னயனந் தரியநன் னுமா வளிநல்கி நண்ணினன்மெய்ப்
பயனந் தரியலர் சூழ்கந்த சாமிநற் பாவலனே.

---

அரன்வாயில் வித்வான் தங்கவேலுபிள்ளை யவர்கள் இயற்றிய
நேரிசை வெண்பா.

கந்த சுவாமிக் கலைவலோ னுன்மறைசூழ்
எந்த சுவாமிக்கு மிசையாமென்—றிந்த
மணத்தமிழ்நா மாவளிப்பா மாலைதந்தான் பாடிக்
குணத் தமிழ்நா மாதருளிற் கொண்டு.

விருத்தம்.

பூமணக்கும் பாமணக்குந் திருவருட்பா வள்ளலருட் புனிதனெங்கோன்
றாமணக்குந் திருவருட்பாற் கடன் மூழ்கி வருங்கந்த சுவாமிவல்லோன்
மாமணக்குஞ் சீருடையா னருண்மணக்கத் தருநாமா வளியைப்பாடு
நாமணக்குங் கேட்டுணரும் புலன்கரண மணக்குமுண்மை நாவலோரே.

கடல்புடை யுடுத்த காசினி யதனிற் களித்துறு மன்பர்கடமக்கு
மடமைநீத் தருள்சீ ரருட்பிரகாச வள்ளலார்க்குகந்த மெய்யடியான்
தடநில மெச்சுங் கலைகளிற் றேர்ந்து தழைத்தவன் கந்தசாமிக்கோன்
வடகிரி யினுர்ந்தன் புகழுற நாமா வளிபுகன் றன்புவிக்கினிதே.

வெண்பா.

காரணப் பட்டமருங் கந்தசுவா மிக்குரிசில்
காரணப் பட்டவைவேற் கையன்முதற்—காரணர்மேற்
பத்துவித மாக்பப் பகர்ந்தா னருட்ஜோதி
வத்துணர்த்து நாமா வளி.

இசைநூலில் வல்லா னெழிற்கந்த சாமிக்
குசைமேந்த யன்புலவர் கோமான்—திசையெங்குஞ்
சென்றுதிகழ் சீர்த்தியான் செப்பிப் பயனடைந்தான்
மன்றுபுகழ் நாமா வளி.

இந்நூலாசிரிய ரான்மநேயராகிய

கூடலூர்-ஸ்ரீமான்-சிவ, துரைசாமி தேசிகரவர்கள் இயற்றிய

ஆசிரியப்பா.

வாழியநலனே வாழியநலனே
ஆழிசூழுலகினி லன்பர்கள்பலரும்
எழிசைக்கிழவ னினிதுபயந்த
கோழிக்கொடியெங் குருபரனருளால்

---

வாழியநலனே வாழியநலனே.

உலகெலாம்பரவு மொருதனிக்கடவுள்
இலகுமோருருவா யிவணெழுந்தருளிய
அருட்பிரகாச ரருட்பெருஞ்சித்தர்
தெருட்பிரகாசத் தெய்வமெய்ஞ்ஞானி
வடலூர்சிற்சபை வளம்பெறவமைத்த
கடலூர்பலபுகழ் கண்யசிகாமணி
செப்புஞ்சடாந்த சமரசச்செந்நிலை
வைப்பெனக்காட்டிய மாமணிமேரு
திருமுறையாறுந் திருவாய்மலர்ந்த
குருபரனிராம லிங்கக்கோமான்
உடலுக்குயிர்போ லுலகுக்கொருவன்
அடலுற்றிடுமோ ரருட்பெருஞ்ஜோதி
என்றுபல்லுயிர்க ளெளிதினிலுணர்ந்து
நின்றிடநன்னெறி நிறுவியநிமலன்
எழுதிரைநீக்கி யிலகுமோர்ஜோதியை
வழுவறக்காட்டிய வள்ளற்பெருமான்
ஓதரியவனைத்தையு முணர்விக்குமுத்தமன்
பாதாதிகேச பரியந்தமாக
சந்தாதியுற்ற சற்குருவெண்பா
வந்தாதியென்னு மருண்மணிமாலையும்

வந்தாதியென்னும் மருண்மணிமாலையும்
நலித்துறையறியார் நண்ணுதெய்வீகக்
கலித்துறையென்னுங் கவின்மணிமாலையும்
விரித்துரைபகரு மேதகுவள்ளற்
சரித்திரக்கீர்த்தனை சரணமாலிகையும்
அடிமைத்திறமும் யமபயநீக்கமுங்
கடிகமழ்பாதார்ச் சனைக்கீர்த்தனையும்
ஆனந்தக்கண்ணிக ளற்புதமாலை
கானந்தருபசுங் கிள்ளைக்கண்ணிகள்
நிமித்தம்பராவல் நிகழ்பல்லிக்காதல்
அமைத்தபுலம்ப லருங்கண்ணிசற்குரு
நித்தியவிபூதி நிகழ்மருத்துவமொடு
தத்துவஞான சரித்திரசண்மத
சமரசாதீத தனிச்சித்விலாச
விமரசநாமா வளிமென்றொடையும்
வள்ளல்சரித்திர வசனச்சுருக்கமும்
எள்ளலில்லாம லெங்கும்பரவ
பாடலூர்நாவலர் பற்பலர்பயிலுங்
கூடலூர்வடபால் கோமகட்குலவுங்
காரணப்பட்டிற் கருணீகமரபில்
வாரணமுரித்து வள்ளலைப்பரவும்
வழிவழித்தொண்டர் மன்னர்க்கமைச்சர்
ஒழுகலாரயுடையா ரோதிமுயர்த்தோன்
கோத்திரராபஸ் தம்பசூத்திரத்தோர்
சாத்திரசமாதி சட்கசம்பத்தோர்
பரமாங்கோசம் பகருபநிடதர்
திரமாய்ப்படிக்குஞ் செவ்வியசெயலோர்
செய்தவமனைத்துந் திரண்டோர்வடிவாய்
மைதவழ்மலையென மாநிலத்துற்றோன்
சித்துசாமிப்பெயர் சேயினைவணங்கு
முத்துசாமிப்பெயர் மூதறிவாளன்

புண்ணியப்புதல்வன் புலமையிற்சிறந்த
கண்ணியனங்கந்த சாமிநற்கவிஞன்
அருட்பாதிருமுறை யாறுந்தெரிந்தோன்
இருட்பாடிலாத வெனக்குயிர்நேயன்
கானப்பிரியன் காணற்கரியன்
வானெனநற்கவி மழைபொழிந்திடுவோன்
பத்தியிற்பழுத்துப் பழிச்சியபலவகைக்
கொத்துகளதனிற் குழுமியவின்சுவை
தேனென்கேனோ பாகென்கேனோ
வானவரருந்து மருந்தென்கேனோ
கதலியென்கேனோ கண்டென்கேனோ
முதிர்சுவைவருக்க முற்றுமென்கேனோ
என்னெனப்புகல்வேன் யாதெனநினைவேன்
தன்னிலையறிந்த தகும்புலவீரே.

---

ஆரணிஜாகிர் காமக்கூர் தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமத் மு. சுந்தரமுதலியாரவர்க ளியற்றிய
நிலமண்டில வாசிரியப்பா.

அருட்பா வென்னு மாறு திருமுறை
மருட்பா வலர்கள் மயங்கும் வண்ணம்
அருளிச்செய் ததி லற்புதம் பலவும்
தெருளாய்க் காட்டிய தேசிக னமலன்
மாட்சிமை தங்கிய வடலூரிற் பெருங்
காட்சி யளிக்குங் கவின்கரு ணாகரன்
கனத்திரு வருட்பிர காச வள்ளலார்
எனப்பெயர் கொண்ட விணையறு முத்தன்
இருட்பட லந்தெறு மெழின்மந் திரமாம்
அருட்பெருஞ் ஜோதி தனிப்பெருங் கருணை
யென்னும் பெருமொழி யிசைத்தெவ ருங்கதி
மன்னும் படியருள் வைத்தநற் பெருமான்

சுவிராம லிங்க சுவாமிக ளடியிற்
செவியாம் ப்ரபந்தஞ் செய்துசூட் டினனால்
தென்னாற் காட்டைச் சேர்ந்த கூடலூர்
மன்னுங் காரணப் பட்டுள் வாழ்ந்தொளிர்
சீர்கரு ணீகத் திருமர புவந்தோன்
பேர்சந்த்ர சேகரப் பிள்ளையின் பெயரன்
முத்துச் சாமியின் மெய்தவப் புதல்வன்
பத்துத் திசையிலும் பரவும் புகழான்
கோதிலா வோதிமக் கோமான் கோத்திரன்
சாதுவா மாபத் தம்ப சூத்திரன்
பரமாங் கோச வுபநிட தங்கொள்
ஞரமா கியவர வொழுகரை யுடையான்
திருமுறை யாகுந் திருவருட் பாக்களை
ஒருமுறை யாக வோதுசெவ் வாயன்
சைவசித் தாந்த சாத்திரங் கற்ற
மெய்யுணர் புலவன் விற்பன சம்பனன்
பூதி மணியைப் புனைந்தைந் தெழுத்தை
யோதி நைந்துருகு முளங்கொள் புண்ணியன்
பத்தி வலையிற் பரமனைப் பிடிக்கும்
சத்தி யைக்கொண்ட சற்குண நிபுணன்
பண்ணொடு பாடும் பாக்கியன் ஞானக்
கண்ணொடு விளங்குங் கலைக்கடல் கடந்தோன்
பன்மார்க் கத்தரும் பார்த்துநெஞ் சுருகச்
சன்மார்க் கந்தருஞ் சமரஸ பஜனையில்
எந்த சாமியு மெங்கோ னெனத்தொழுஞ்
சந்த சாமியாந் தனிநட ராஜனைச்
சொந்த சாமியாய்த் துதிக்குநல் வினைசெய்
கந்த சாமியாங் கருதுநா வலனே.

சென்னை அருட்பிரகாச ஸமாஜத்தலைவர்

திரு. சாம்பசிவமுதலியா ரவர்கள் இயற்றிய

அகவற்பா.

உலகுயிர்வகுத்த வலகிலாத்தனிப்பெருங்
கடவுளங்கருணைக் கிடமெனத்தெளிந்த
மூதறிவாளர் ஓதியஞானப்
பெறுநெறியதனைக் குருவழியுணர்ந்த
வழுகறையணையா ஒழுகரையுடையார்
ஆதிமத்யாந்த ஓதிமமுயர்த்த
கோமான்கோத்திர மாமாண்புடையோன்
உம்பர்தோயாபஸ் தம்பசூத்திரத்தோன்
வரமார்கேச பரமாங்கோச
உபநிடதச்சீர் தபசாத்திரத்தான்
நேமிவாழ்முத்துச் சாமிப்பிள்ளை
இல்லறம்பண்ணு மைல்லறத்துணைவி
மயிலையற்செழுமு தயிலம்மாள்பயந்த
பகலோனிகர்த்த மகவாண்மைந்தன்
பன்மார்க்கத்துயர் சன்மார்க்கசங்க
பக்தாபிமான யுக்தாரோபன்
வாரணப்பேட்டமர் காரணப்பட்டூர்
வரும்பெருங்குரிசி லரும்பெருங்கலைஞன்
சமரஸபஜனை விமரிசையாளன்
கந்தசாமிப்பேர் முந்துவிற்பன்னன்
தெருட்சுவையுறுந்திரு வருட்பிரகாச
வள்ளலின்மகிமை யுள்ளுறக்கொண்டு
அவூரவறுத்துய்யுஞ் சுவாநுபூதி
நிலையினனவன்றுள் கலைகொடுதுதிக்கத்
தரித்திரமோட்டுஞ் சரித்திரக்கீர்த்தனை
நாவலந்திலகுவெண் பாவர்தாதி

சுறையமுத்தாட்கலித் துறையந்தாதி
தங்குலகத்துயிர் வெங்கொலைமறுத்தல்
விலக்கருஞ்சாமி மலைக்கடவுண்மேல்
நீடியயாப்புயர் சோடசவெண்பா
சமயத்துயிர்கவர் எமபயமறல்மற்
றருத்தியவிசைசூழ் விருத்தப்பாமாலை
நீதகுருப்பிர சாதமகிமை
சொல்லிற்குகந்த பல்லிக்காதல்
போனந்ததும்பும் ஆனந்தக்கண்ணி
அலம்பியமனத்துப் புலம்பற்கண்ணி
ஆழ்பிரலாபக் கேழ்கிளிக்கண்ணி
நினைவுறுபாதார்ச் சனைகீர்த்தனைகள்
தாமார்சமரச நாமாவளியொடு
தெரித்தகும்வாய்மைச் சரித்திரச்சுருக்கமும்
யாப்பணிமுறையாற் பாப்புனைந்ததனை
தாத்திரிமீது தோத்திரத்திரட்டென
அளித்தான்வரக்கடற் குளித்தனன்பிறவித்
துன்பநீங்குற வின்பமூழ்கினன்
என்னுளவன்பிற் றுன்னியகண்யன்
கற்குநர்மதிக்குஞ் சற்குணோத்தமனே.

---

போளூர்தாலூக்கா குன்றத்தூரெனவழங்கும்
இராஜகம்பீரநல்லூர் ஸ்ரீமான் சண்முகம்பிள்ளை குமாரரும்,
களஓர் போர்டு ஸ்கூல் ஹெட்மாஸ்டருமாகிய,
ஸ்ரீமான்-பழனிவேற்பிள்ளையவர்கள் இயற்றிய
அறுசீரடியாசிரிய விருத்தம்.

மானமுயர் செங்கரும்போ கற்கண்டோ முக்கனியோ வடித்ததேனோ
வானவர்க ளந்நாளின் வார்கடலை மந்தரத்தான் மதித்துப்பெற்ற
வானமுதோ விம்மொழியென் றேவருமன் புருவாகி வழுத்தாநின்ற
ஞானவமு தூற்றெடுக்குந் திருவருட்பா வென்னுநூல் நல்குமேலோன்
பொன்மார்க்க யோகியற்றிப் பற்பலவா மற்புதங்கள் பொருந்தவாற்றிச்
சன்மார்க்க சங்கமுல கினிற்பரவ வடலூரிற் றாபித்தோன்சீர்
இன்மார்க்க மிலையிலையாம் விழித்திருமி னுலகியலீ ரெனவியம்பி
நன்மார்க்க மருள்புனிதன் பொதுநடத்தான் மான்மியமே நவிலுவாவன்

மருவடியார் சூழ்ந்தொளிருஞ் சிதம்பரவி ராமலிங்க மகானின்பொற்பார
குருவடியி லன்புகொண்டு செந்தமிழி னயம்பலவுங் கொண்டுகோதில்
திருவடிப்பா மாலைதொடுத் தணிந்திருமை நலனுற்றான் றீங்கேயோங்குங்
கருவடியின் றொடக்கற்றா னப்பெரியா னியாவனெனிற் கழறக்கேண்மின்

சுந்தரமெய்ப் பத்தியினா னெவ்வுயிர்க்கு மிதம்புரிவோன் றூய்மையார்ந்த
சிந்தையினா னைந்துபொறிவென் றவனற்குணம்பலவுஞ் செறியப்பெற்றோன்
எந்தையருட் பிரகாச வள்ளலா ரிணையடியை யிதயங்கொண்டு
சந்ததமும் வழிபடுவோ னவ்வடிக ளரும்புகழே சாற்றுநீரான்

காரணப்பட் டெனும்பதியான் கருணீக குலதிலகன் கனிவேவாய்ந்த
பூரணவின் னிசைப்புலவன் புகழ்முத்துச் சாமிதவப் புதல்வனுய்ந்த
ஆரணத்துட் பொருட்சைவ சித்தாந்த சாத்திரநன் கறிந்தோன்றோய்ந்த
நாரணவு மதுரகவி கவின்கந்த சாமியெனு நாவலோனே.

---

களம்பூர் பாரதப் பிரசங்கம்-வித்துவான்,

ஸ்ரீமான்-சே. செல்லப்ப முதலியா ரவர்களியற்றிய

பதினான்குசீர் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

திரைகடற் பாருலக மிசையினிப் பாகியுறு திருவருட் பாவருளுநஞ்
செப்பருமி ராமலிங் கப்பெயர்வ ரோதயன் றிப்பியத ஞரியன்சீர் [பவம்
புரைதபக் கீர்த்தனம தெனவுரைத் தார்த்தியொடு பொருவறக் கேட்டவர்
பொன்றிடவ ஞேன்மீதினுஞ்சிலநன் மாநூல்புகன் றறிவிலார்நெஞ்சமுங்
கரைவுறத் திருவடிப் பாமாலை யெனுமோர் கவின்பே ரளித்தளித்தான்
காரணப் பட்டில்வளர் கருணிக குலாதிபன் கனமுத்து சாமிபுதல்வன்
உரையிடற்கரியபொலனேத்துளா னேதிம முயர்த்தகோமான்கோத்திரன்
உசிதவா பத்தம்ப சூத்திரன் கலைமுற்று முணர்கந்த சாமிவேளே.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை,

திருவருட்பிரகாச வள்ளலார்

என்னும்

## சிதம்பரம்-இராமலிங்கசுவாமிகள்

# சரித்திரக் குறிப்புகள்.

உலகின்கண் உயிர்கள் உய்யும்பொருட்டு எல்லாம்வல்ல முழுமுதற் செழும்பொருளாகிய சிவபெருமான் ஆங்காங்குத் திருப்பதிகளில் எழுந்தருளித் திருவருள் பாலித்து வருகின்றார் என்பது நம் நாடு முழுவதும் விளங்கும் சிவாலய விசேடத்தால் அறியக்கிடக்கின்றது. அங்ஙனம் எழுந்தருளியிருக்கும் ஆலயங்களுள் பஞ்சபூத ஸ்தலங்கள் மேம்பட்டனவென்று சைவர்கள் கொண்டாடுகின்றனர். அவை திருவாரூர் அல்லது காஞ்சிபுரம், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம் என்பன. இவ்வைந்தனுள்ளும் சிதம்பரம் மிகச் சிறப்பாகப் போற்றப்படுகின்றது. சைவர்கள் சிதம்பரத்தைக் 'கோயில்' என்றே குறிக்கின்றதால், எல்லா உயிர்களையும் ஆட்டுவிக்கும் குஞ்சிதபாதமுடைய தனித் தலைமைப்பெரும் பதியாகிய நடராஜப்பிரபு எழுந்தருளி யிருப்பதே கோயில் ஆகும். கோ-அரசன், இல்-வீடு: அரசன் வீற்றிருக்கும் வீடு. ஈண்டு அரசன் அல்லது ராஜன் என்பது நடராஜன் என்பதைக் குறிக்கும். அன்றியும், பஞ்சபூத ஸ்தலங்களிலும் சிதம்பரம் என்னும் ஆகாயஸ்தலமே சிறந்த வழிபாட்டிற்கு உரியது என்பதும் உணரக்கிடக்கும். ஆகாயம் என்பது வெளி. சித் ஆகாயம்-ஞானவெளி. எல்லாப் பொருள்களோடுங் கூடியும் அப்பொருள்களிற் பற்றில்லாதிருக்கும் பொருள் அகண்ட வெளியாயிருத்தல் வேண்டும். 'எல்லாம் வெளியே யென்ன எச்சமயத்தவர்களும் வந்திறைஞ்சா நிற்பர்' என்னும் ஆன்றோர் மொழியால் இது விளங்கும். கடவுளை வழிபாடுசெய்ய எண்ணிய வுடனே பொதுவான உணர்ச்சியுடையவர்களுக்குக் கடவுள் என்ற

துடன் சிதம்பரஞ் சென்று குழந்தையைக் கையில் ஏந்திய வண்ணம் நடராஜ தரிசனஞ் செய்தனர்.

சிவகாமவல்லி மகிழ்ந்து ஒருபால் விளங்க கனகசபையின் கண்ணே ஆனந்த நடம்பயிலும் நடராஜப்பெருமானது அருளமுதம் ஒழுகும் திருமுகத்தை ஐந்துமாதத்திய கைக்குழந்தை கண்டவுடன் உவகைபூத்த உள்ளமுடையதாய்க் கண்ணிமைகொட்டாது கலகலவென நகையாடியது. இவ்விள நகையைக்கண்டு சித்தமகிழ்ச்சியடைந்த அப்பையதீக்ஷிதர் என்னும் பிராமணர், உடனே குழந்தையை உற்றுநோக்கித் தந்தையாரைப்பார்த்து "இப்பிள்ளை நும்பிள்ளையன்று, நடராஜாவின் பிள்ளையே" எனச் சிறப்பித்து இராமையபிள்ளையைக் குடும்பத்துடன் தன்வீட்டில் உபசரித்து அனுப்பினர். தீக்ஷிதர் கூறியதை வருங்காலத்து நிகழும் திருவருட்செயலைத் தெரிவிக்கும் நடராஜமூர்த்தியின் வாக்கே என்று கொண்டு இராமையபிள்ளை வீட்டுக்குத் திரும்பினர். தீக்ஷித சுவாமிகள் அன்று கூறியது பின்பு சிதையாதுபலித்தது. குழந்தை பிறந்த ஆறும்மாதத்தில் இராமையபிள்ளை சிவனடி அடைந்தனர். எட்டாம்மாதத்தில் குடும்பத்தில் மூத்த பிள்ளையாகிய சபாபதிபிள்ளை தன் சகோதரர்களுடன் மருதூரைவிட்டு நீங்கிப் பொன்னேரியிலுள்ள அவரது பாட்டியார் வீட்டுக்கு வந்து சில நாள் தங்கி, பின் சென்னையம்பதியை அடைந்தனர்.

அக்காலத்தில் பிரபல வித்வானாக விளங்கிய உரையாசிரியர் மஹாவித்வான் காஞ்சிபுரம் சபாபதி முதலியாரிடம் சிதம்பரம் சபாபதிபிள்ளையும், அவர்தம்பி பரசுராமபிள்ளையும் கல்வி பயின்றனர். சபாபதிபிள்ளை புராணப் பிரசங்கஞ்செய்து பொருளீட்டிக் குடும்பத்தைப் பாதுகாத்துவந்தனர்.

பிறகு, சபாபதிபிள்ளை தன்தம்பி இராமலிங்க பிள்ளைக்கு ஐந்தாம்பிராயத்தில் வித்தியாப்பியாசம் செய்வித்தனர். பிறகு சிலகாலம் பொறுத்து, சபாபதிபிள்ளை தன் தம்பியைத் தன் ஆசிரியரான காஞ்சிபுரம் சபாபதி முதலியாரிடம் அழைத்துக் கொண்டுபோய்க் கல்வியறிவு வளர்க்கும்படி வேண்டினர். நாலைந்துநாள் பாடஞ்சொல்லி வரும்போதே மாலையில் நாள்தோறும் பிள்ளைப்பெருமான் சென்னையில் கந்தசாமிக்கோயிலுக்குச்சென்று அருமையான பாடல்களைப் பாடிவருவதைக் கேள்வியுற்ற சபாபதிமுதலியார் பிள்ளைப் பெருமானது அதிதீவிர பக்குவத்தை

பாராய்ந்து சாக்குபோக்குகள் சொல்லிப் பாடஞ்சொல்லாமலே காலதாமதஞ் செய்தனர். பிறகு, பிள்ளைப்பெருமான் ஆலய வழிபாட்டிற் றிளைத்தலின் அருமை உணராது லௌகிக முயற்சியிலேயே பெரிதும் உழன்றுகொண்டிருந்த சபாபதிபிள்ளை தன் தம்பி படிக்காமல் திரிகின்றார் என்று சிலரிடம் குறைகூறியதை வள்ளலார் எழுந்தருளியிருந்த வீராசாமிப்பிள்ளைவீதி, 38-இலக்கமுள்ள வீட்டிலுள்ள அம்மையார் நட்பின் உரிமையால் வள்ளலார்பால் அறிவித்தனர். அன்று மாலைமுதல் படிப்பதாகக் கூறிப் போய், கண்ணாடி ஒன்று, பூ, பழம், தேங்காய், ஊதுவர்த்தி முதலிய வாங்கிவந்து அவ்வீட்டின் மெத்தை அறையில் கண்ணாடியைச் சுவற்றில் மாட்டிவிட்டு மலர்சூட்டிப் பழம்படைத்துத் திருவிளக்கு ஏற்றிவிட்டு நெடுநேரம் அக்கண்ணாடியை நோக்கின வண்ணமாய்த் தியானித்தனர். அன்று அக்கண்ணாடியில் முருகப் பெருமான் திருவுருவம்தோன்ற அன்றுமுதல் அவ்வுருவ உபா தொடங்கினர். முருகக்கடவுள் உபாசனையால் கலைஞானம் அனைத்தும் ஓதாதுணர்ந்தனர்.

இங்ஙனமாக, ஒன்பதாம் பிராயத்திலேயே தோத்திரப்பாக்கள் மிகவிரைவாய்ப் பாடிக்கொண்டே வந்தனர். உண்மையான கவிதாசக்தி வாய்ந்த மேதாவியர்கள் மிகச்சிறுவயதிலேயே பாடினர் என்பது மேனாட்டுப்புலவருள்ளும் கண்டதேயாம். இங்ஙனம் ஆலயவழிபாட்டிற் றிளைத்துப் பாடிவருங்கால், இவரது அருள்திறம் அறியாத சபாபதிபிள்ளையவர்கள் சென்னையில் சனிவாரந்தோறும் தாம்செய்துவரும் பெரியபுராணப் பிரசங்கத்திற்கு ஒருநாள் உடம்பு சுகமில்லாமையால் போகத்தடையாகவே சபையார்க்கு இச்செய்தியை அறிவித்து இரண்டொருபாடல் படித்துவிட்டு வரும்படி தம்பியை அனுப்பினர். பிள்ளைப்பெருமான் அவ்விடஞ்சென்று அறிவிக்க, வந்திருந்தவர்கள் வழக்கத்தை நிறுத்தாமலிருக்க பிள்ளையவர்களையே இரண்டொரு பாசுரம் பிரசங்கிக்க வற்புறுத்தினர். அன்று நடைபெறவேண்டியது வள்ளலாரது அருட்குருவாகிய திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம் முன் தமையனார் விட்டவிடத்திருந்து தொடங்கிப் பிள்ளைப்பெருமான் இரவு 12-மணி வரையில் பிரசங்கித்தும் ஒருபாட்டும்முடியவில்லை. செவியின்பங்கொண்ட சபையார் வள்ளலாரே புராணத்தைப் பூர்த்திசெய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க, அதற்கிசைந்த சபாபதி

பிள்ளையும் வெளிப்புறத்திருந்து தவத்தம்பியார் நிகழ்த்தும் பிர சங்கத்தைக்கேட்டு உள்ளம் மலர்ந்தவராய் வீட்டுக்குத் திரும்பி வந்து தன்மனைவியைப் பார்த்து "இதுவரையும் தம்பியென்றிருந் தேன், இனி தம்பியல்ல அம்முருகக்கடவுளே என்று கொண் டேன். நாம் பெற்றபேறு என்னே" என்று பெருமகிழ்வெய்தி அதிசயித்தனர். அன்றுமுதல் தமையனார் மனைவியார் செய்யும் பக்தியைக்கண்டு பிள்ளைப்பெருமான் தாங்கப்பொறாராய்க் குடும் பத்தில் கலப்பதைவிட்டனர்.

## திருவொற்றியூர்ச் சிறப்பு,

தவராஜசிங்கமாய் முற்றுந்துறந்த பட்டினத்தடிகள் ஞான சமாதிக் கொலுவீற்றிருந்தருளும் க்ஷேத்திரம் திருவொற்றியூரா கும். சென்னைக்கு அணித்தாயுள்ள அத்தலம் ஆளுடைய பிள்ளை யார், ஆளுடையவரசுகள், ஆளுடைய நம்பி எனும் மூவர் தேவார மும் பெற்றுள்ளது. சகமார்க்கம் விளக்கிய சுந்தரமூர்த்திசுவாமி கள் சங்கிலிநாச்சியாரைத் திருமணஞ்செய்த பேறுபெற்றது. மாணிக்கத்தியாகர், இளமைதந்த தியாகராயர், எழுத்தறியும் பெருமான், வியாகரணேஸ்வரர் முதலிய சிறப்புப்பெயர்கள் வழங் கும் ஸ்தலமூர்த்தியை யுடையது. மகிழமரமும், அத்திமரமும், ஆகிய ஸ்தலவிருக்ஷயமும் பிரமதீர்த்தமும் உடையது. * தம்மை யுணர்ந்த பெரியோர்களுக்குக் காவணங்களெல்லாம் கணநாதராக வும் மணலெல்லாம் வெண்ணீறாகவும் விளங்கித்தோன்றும் பெரு மையுடையது. கல்மனமுடையாரையும் கசிந்துருகச் செய்வது. பலபடவிரிந்த மனங்குவிய ஒருதந்திரம் தேடுவார்க்கு அங்கையில் நெல்லிக்கனிபோல் சித்தசாந்தம் பிறப்பிப்பது. தவநெறிதழைத்து பவநெறிகாய்த்து அருட்பழம் பழுத்திடும் சீரது. இத்தகைய மகி மைவாய்ந்த ஒற்றியூரின்கண் உடையபெருமானைப் பிள்ளைப்பெரு மான் இடைவிடாது அகத்தும் புறத்தும் அருச்சனைசெய்துவரும் நியமம்பூண்டவராய்ப் பலதிறப்பட்ட இலக்கியச்செறிவு வாய்ந்த தோத்திரங்களைப் பாடியாடிக்களித்து ஊன்முகப் பார்வைவிட்டு

---

* நந்தியம் பெருமானுக்குச் சிவனார் அருள்சுரந்த அற்புதமு முடையது.

உண்முகப் பார்வைகொண்டு திருவருளே துணையாக ஒழுகிவந்தனர். திருவொற்றியூரில் தியாகராயர் மூலஸ்தானத்தை வலம் வரும்போது பிராகாரத்திலுள்ள சுப்பிரமணியசுவாமியை நெடுநேரம் வள்ளலார் அங்குநின்று தியானிப்பது வழக்கம். சிற்சில சமயங்களில் சில அன்பர்களும் உடன்செல்வர். அக்காலத்தில் ஒற்றியூர்க்கு வழி மணல்குவிந்தநிலமே. தரிசனார்த்தமாகச் செல்வது கஷ்டசாத்தியம்.

வள்ளலார் எழுத்தறியும் பெருமானைப் பாடிக்கொண்டிருக்கு நாளில், உலகபோகங்களில் மனம்படியாமல் திருவருளைவழுத்தும் இன்பவுரையே தமது திருவிளையாடலாகக் கொண்டார். சிறுபோதுமுதல் இச்சையாதி விஷயங்களைத் துச்சமாகக் கொண்ட பெரியோர் என்றும், தீவிரமாகவும் செம்பாகமாகவும் பாடும்செந்நாப்புலவர் என்றும், அடக்கமே பொருளெனத்தேர்ந்த அருளாளரென்றும் பலர் பிள்ளையவர்கள்பால் அதிசயித்த உணர்வினராய்ப் பழகி வந்தனர்.

வெள்ளாடை முழங்காலுக்கு மேல் தரித்து ஞானதீபமொத்திலகும் தேகம் தெரிய வொட்டாது மூடிக்கொண்டு பிறர்க்குத் தன்பால் இச்சைசெல்ல வொட்டாதபடி முக்காடிட்டு மறைத்த மேனியுடையராய் வீதிகளில் ஓரமாய்ச் செல்வர். திண்ணையிலாவது உயர்ந்த ஆசனத்திலாவது காலின்மேல் கால் போட்டாவது உட்கார்ந்து வீண்வழக்குப் பேச ஒருவருடனும் ஒருப்படார். உபிரக்கமும் ஆன்ம வுருக்கமும் கொண்டொழுகுவர். இச்சமயங்களில் சிவநேச வெண்பா, நெஞ்சறிவுறுத்தல், மஹாதேவமாலை, இங்கிதமாலை முதலிய பிரபந்தங்கள் பாடினர்.

## போதகாசிரியராயது.

சென்னையிலிருந்த வித்வான் தொழுவூர் வேலாயுத முதலியார் கடுந் தமிழாக நூறுபாட்டுச் சிலேடையாகப்பாடி, பழைய ஏட்டில் எழுதி யிருந்ததாகச் சங்கச்செய்யுளென்று வள்ளலாரிடம் காட்டவே, அதைக்கொண்டு பிள்ளைப் பெருமான் 'இது சுற்றுக்குட்டிப் பாட்டு சங்கப்பாட்டல்ல; சங்கப்பாட்டாயிருந்தால் இவ்வளவு குற்றமிராதென்று கருணையினால் தொழுவூர்-முதலியார்க்குப் பக்குவும் வருவிக்கும் நிமித்தம் தட்டிளையிடவே, இதுவரையும் நேரில்

பழகாதிருந்த தொழுவூர் முதலியார் அன்று முதல் அடிமை பூண்டு இலக்கண இலக்கிய சித்தாந்த நுண்பொருளும் வடமொழி நூல்களும் கற்றுத்துறைபோய நாவலரேறாக விளங்கினர். மாண வர் திறத்தை நோக்கி வள்ளலார் உபயகலாநிதிப் பெரும் புலவர் எனும் பட்டம் அருளினர்.

சென்னையிலிருந்த நரசிங்கபுரம் வீராசாமி முதலியார், பொன் னேரி-சுந்தரம் பிள்ளை, முதலிய பக்குவர் சிலரும் அடிமைபூண்டு நூற்கேள்வியில் தெளிந்தவரானார்கள். ¶

தமிழ் நாட்டில் திகழ்ந்த புலவர் பலரும் புண்ணியர் பலரும் தத் தமக்கு நிகழ்ந்த ஐயப்பாடுகளைப் பிள்ளைப்பெருமானிடம் நீக் கிக் கொண்டனர் என்பது பிரசித்தம்

## நூலாசிரியரானது.

காஞ்சிபுரம் சபாபதி முதலியார் சிறுவர்க்குப் பயன்பட வசனநூலியற்றும்படி விரும்ப, பிள்ளைப்பெருமான் 'மனுமுறை கண்ட வாசகம்' எனும் நூலைச் செந்தமிழ்ச்சுவை விஞ்சும்படி எழு தித் தந்தனர். விதிவாதத்தை மதிவாதமே வெல்லும் எனனும் உண்மையை அச்சரிதம் புகட்டும். சில புலவர்களுக்குத் தொண்ட மண்டலமா தொண்டை மண்டலமா என ஐயம் நிகழ, பிள்ளைப் பெருமானை அப்புலவர்களும் பிரபுக்கள் சிலரும் இலக்கண நுணுக் கம் அறிவிக்கவேண்டினராக, பிள்ளைப்பெருமான் 'தொண்டமண் டலம்' என்று வழங்குதல் நியாயம் என்று தொல்காப்பியத்திலிரு ந்து பிரமாணங்காட்டி நிறுவினர்.

ஒழிவிலொடுக்க நூலுக்கு உரை யெழுத விரும்பிய பிள்ளைப் பெருமான் திருப்போரூர்ச் சிதம்பரசுவாமிகள் முன்னரே உரை எழுதி யிருத்தலால் தாம் அந்நூலின் சிறப்புப் பாயிர வெண் பாவுக்கு விருத்தியுரை யொன்று வரைந்து சில அருஞ் சொற் றொடர்களை விளக்கி அச்சிட்டுபகரித்தனர்.

---

¶ கிரியாயோக சாதகராய பண்டார ஆறுமுகவையா என்ப வர் விநாயகபுராணம் முழுவதும் பாடக்கேட்டனர்.

வள்ளலாரது தமையனார் மருகர் பொன்னேரி சுந்தரம் பிள்ளை என்பவரிடம் வள்ளலாரது தமையனார் புதல்வர் வடிவேற் பிள்ளை முதலாயினோர் படித்துக்கொண்டிருந்தபோது அச்சுந்தரம் பிள்ளை மாணவர்களை அடித்ததைக் கேள்வியுற்ற பிள்ளைப்பெருமான்

"படிப்பதுநன் றெனத்தெரிந்த பாங்குடையாய்
மன்றுள்வெளிப் பரம னன்பே
தடிப்பதுநன் றெனத்தெரிந்த சதுருடையாய்
அறநவின்ற தவத்தாய் வீணில்
துடிப்பதிலாத் தூயமனச் சுந்தரப்பேர்
உடையாய் என்தோழ கேள்நீ
அடிப்பதுமச் சிறுவர்களை யடிப்பதுநன்
றலவென்மேல் ஆணை யாணை" (சரித்திரக் கீர்த்தனை-30)

என்னுஞ் செய்யுள் வரைந்து விடுத்தனர்.

ஒருநாள் லக்ஷ்மணப்பிள்ளையும் திருமழிசை கந்தசாமி முதலியாரும் ஒற்றியூர்க்கு வள்ளலாருடன் செல்ல மோகினிவந்து அவ்விருவரையும் தாக்க வள்ளலார் 'பிச்சி' என்றவுடன் அது மறைந்து விட்டது. இருவர்க்கும் விபூதி யளித்தனர். (சரி-கீர்-31)

ஒருநாள் சில அன்பருடன் ஒற்றியூர்க்குச் சென்று தரிசித்து மண்டபத்தில் அயர்ந்து நித்திரைசெய்து விழித்தபின் பசியால் இளைத்து வருந்தவே குருக்கள்போல் ஒருவர் வந்து அன்னமளித்துவிட்டுப் பின்பு மறைந்தனர். வந்த குருக்கள் எங்கேயென்று வீட்டில் விசாரித்ததில் ஊருக்குப்போய் இரண்டு நாளாயிற்று என்று தெரியவந்தது. (சரி-கீர்-32)

ஒருநாள் பிள்ளையவர்கள் ஒற்றியூர் சத்திரத்தில் ஓரிரவில் படுத்துக்கொண்டிருக்கும்போது ஒருகள்வன் அவரது வலதுகாதிலுள்ள கடுக்கனைக்கழற்ற, பிள்ளைப் பெருமான் இடது காதினையும் காட்டவே இரண்டையும் கள்வன் எடுத்துக்கொண்டு ஏகினன்.

வைணவ சகோதரர்கள் சிலர் பிள்ளையவர்களைச் சில அருமையான விஷயம் எழுதித்தர வேண்டவே பிள்ளைப்பெருமான் குரு பரம்பரை ப்ரபாவம் விளக்கிக் காட்டினர். (சரி-கீர்-33)

சென்னையில் சோமு செட்டியார் வீட்டில் பிரசங்கஞ்செய்த காலத்தில் பொருள் கொடுத்தால் பிள்ளையவர்கள்வாங்கி நட்டின

மேலும் தெருவிலும் எறிவர். இச்செய்தியை யறிந்து செட்டியார் பிள்ளையவர்கள் தமையனார் வீட்டில் பொருளைச் சேர்ப்பிப்பர். (சரி-கீர்-37)

சென்னையில் வறுமையில் வாடிய செங்குந்த மரபில்தோன்றிய கந்தசாமி முதலியார் பிள்ளையவர்களைப் பணிந்து குறையிரந்து பிரபுக்களுக்குச் சீட்டு தரும்படி வேண்ட பிள்ளைப்பெருமான்

"எட்டாலுங்கே ளயலென்பாரை நான்சிரித்
தென்னை வெட்டிப்
போட்டாலும் வேறிடங் கேளே
னென்றுணைப் புறம்விடுத்துக்
கேட்டாலு மென்னையுடையா னிடஞ்சென்று
கேட்ப னென்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ்
சொல்லி நிறுத்துவனே."

என்று பாடிக்கொடுத்து உடைய பெருமானிடத்தே கேட்கவேண்டும் என்று உண்மை போதித்தனுப்பினர். (சரி-கீர் 36)

சோமுசெட்டியார் சில அன்பர்களுடன் பிள்ளையவர்களோடு ஒற்றியூர்க்குச் சென்றபோது வழியில் விடாப் பெருமழையால் ஏனையோர் வருந்த வள்ளலார் ஒரு சந்து வழிகாட்டிக் கணப்பொழுதில் எல்லாரையும் ஒற்றியூரிற் சேர்த்தனர். ஆண்டு தரிசன முடிந்தபின் பசியினைப்பால் இவர்கள் வருந்தி வாகன மண்டபத்தில் தூங்கி விழித்தபின் அம்மன் சந்நிதிக்குச்சென்று அம்மன் அருளால் உணவு பெற்று மகிழ்ந்தனர். வடிவுடையம்மன் செய்த அருளை வியந்து 'வடிவுடை மாணிக்கமாலை' பாடினர். (சரி-கீர்-50)

சென்னையில் செங்குந்த மரபினராகிய சபாபதி முதலியார் தன் வீட்டுக் கலியாணத்திற்குப் பிள்ளையவர்களை விஜயஞ் செய்யும்படி கேட்டுக்கொண்டதற்கிணங்கிப் பிள்ளையவர்கள் தலைப்பாகை தரியாது சென்றபோது வாயிற்படியில் இருந்த சேவகன் தடுப்பானென்றெண்ணி எதிர்வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்ததை அடுத்த வீட்டார் கண்டு விவாகத்துக் குரியாரிடம் அறிவிக்கச் சென்றவுடன்

"சோடில்லை மேல்வெள்ளைச் சொக்காயில்லை
    நல்ல சோமனில்லைப்
பாடில்லை கையிற் பணமில்லை தேகப்
    பரும னில்லை
வீடில்லை யாதொரு விருப்பு மில்லை
    விவாகமது
நாடில்லை நீநெஞ்சமே யெந்தவாறினி
    நண்ணுவையே."

என்று பாடி விவாகத்துக்குரிய தலைவர்க்குச் சில உண்மை புகட்டினர். (சரி-கீர்-43-44)

திருவொற்றியூரில் பட்டினத்தடிகள் ஆலயத்தில் தொண்டு செய்துவரும் அம்மையார் ஒருவர் ஒரு குடிசைபோட்டுக்கொண்டு யோகம்செய்து வந்தனர். வள்ளலார் சென்று குளக்கரையில் உட்காரவே, அவ்வம்மையார் வந்து வணங்கினர். வள்ளலார் பிடி மணல்வாரி அவ்வம்மையார் கையில் கொடுத்தனர். கையை மூடித் திறந்தவுடன் மணல் சிறு சிவலிங்கங்களாய்த் தோன்றின. (சரி-கீர்-41)

ஒருகால் வடிவாம்பிகைச் சந்நிதி தரிசிக்கச் சென்றபோது வள்ளலார் திரு முன்பு ஒரு பிராமணர் தோன்றி 'சதுர்வேத தாரசங்கிரகம்' எனும் ஏட்டுச் சுவடியைத் தந்தருளி மறைந்தனர். (சரி-கீர்-45)

## திருமணம்.

உலகபோகங்களில் மனஞ்சுழலாது திருவருளிலேயே திளைத்துக்கொண்டிருக்கும் பிள்ளைப்பெருமானுக்குத் திருமணம் நடத்திக் காணவேண்டுமென்று தாயாரும், தமையன் மார்களும், தமக்கையாரும் நண்பர்கள் பலரும் பலமுறை நிர்ப்பந்தித்துக் கூறியும் பிள்ளைப்பெருமான் வரம்புகடவாது தடுத்துச் சிலவாண்டுகள் கழித்தும் மீண்டு மீண்டும் ஒரு சிவயோகியரைக்கொண்டு வற்புறுத்தவே உலக நடிப்பாகச் சம்மதித்தனர். தமக்கையாராகிய உண்ணுமுலை யம்மையின் மகளாகிய தனம்மாள் என்னும் உத்தமியைப் பிள்ளைப்பெருமானுக்கு மணஞ் செய்தார்கள். (சரி-கீர்-38-39)

அதிதீவிர பக்குவமுடைய பிள்ளைப்பெருமானது திருவுள்ளப் பாங்கையாரறிவார்? இயற்கை வசதியாக ஏற்பட்ட குடும்பத்திற் பிறந்த சகோதர சகோதரிகள் பிள்ளைப்பெருமானது தெய்வம் பரவல், பாடிப்பணிதல், பத்திசெய்திருத்தல், இச்சையின்றி நகர்

தல், திருக்கூட்டம் விழைதல் முதலிய அருட்குணங்களை அறிய வல்லாரோ? பிள்ளைப்பெருமானுக்கு ஒரு நல்லநாளில் வதுவை முடித்து நிஷேதத்திற்கு மணமக்களைக்கூட்டி அனுப்பினர். தோத்திரங்களிற் சிறந்த திருவாசகத்தை இடைவிடாது மெல்லென ஓதுகின்ற நியமமுடைய பிள்ளைப் பெருமான் அன்றிரவும் அத்திருவாசகத்தையே தம்முடன் எடுத்துக்கொண்டு உட்சென்றனர். சென்றதும் அப்பெண்மணியாரை நோக்கிப் பிள்ளையவர்கள் அங்குள்ள திருவிளக்கைத் தன்னிடம் கொண்டுவரக் கட்டளையிட்டார். நாணத்தால் அவ்வம்மை மௌனஞ்சாதிக்கவே பிள்ளைப்பெருமான் தாமே திருவிளக்கை எடுத்து வைத்துக்கொண்டு திருவாசகம் ஓதத்தொடங்கினர். பொழுதுவிடியு மளவும் கண்ணீர் அருவிபாய, திருவாசகமென்னுஞ் தேனைத் தெவிட்டாது உண்டனர். இங்ஙனமே சிலநாட் கழியவே குடும்பத்தினர் தாம்செய்த முயற்சி பயனில் முயற்சியாய் முடிந்ததே யென்று வருந்தினர். பிள்ளைப் பெருமான் தாம்கொண்ட நிஷ்டையில் அழுந்திய மனத்தராய் அமர்ந்தனர்.

உலகத்துள்ள மேதாவிகளின் சரித்திரங்களை ஆராய்ந்து அறிவார்க்கு இவ்வுண்மை புலனாகும். மேதாவிகள் அவ்வக்காலத்திய உலகநடைப் போக்குக் குட்பட்டவராய்ச் செல்லாது தாம் அரிதிற் கொண்ட கொள்கையை நிறைவுறுத்துவதே ஆயுள்வரையு மமைந்த பெருந் தொழிலென்று துணிந்து ஒழுகுவர். சாதாரண மக்கள் கொள்ளும் இன்ப துன்பங்களிலே அவர்கள் மயங்காமல் பேரறிவுவண்ணமாய்க் காலங்கடந்தவர்களாய்த் திகழ்வர். அத்தகைய மேதாவிகளைச் சிற்றின ஆன்மாக்கள் தம் அறிவாற்றல் கொண்டு அளக்க ஆரம்பிப்பது எள்ளளவும் முடியாத காரியமாகும்.

ஒருகால் இராமலிங்க சுவாமிகள் திருத்தணிகைக்குச்சென்று சுவாமி தெரிசனஞ்செய்யும் சமயத்தில் ஓரன்பன் வேண்டுகோளுக்கிணங்கித் திருவாய் மலர்ந்தருளிய பாக்கள்.

வெம்புமுழிருக்கோருறவாய் வேளைநமனும்வருவானேல்
தம்பிதமையன் துணையாமோ தனையர்மனைவிவருவாரோ
உம்பர்பரவுந்திருத்தணிகை யுயர்மாமலைமேலிருப்பவர்க்குத்
தம்பக்குடலைபெடுக்காமற் றக்கவுடலை யெடுத்தேனே. 1

தொல்லைக்குடும்பத் துயரதனிற்றேலைத்தேனந்தோகாலமெலாம்
அல்லலகற்றிப்பெரியோரையடுத்து மறியேனரும்பாவி
செல்லத்தணிகைத்திருமலைவாழ் தேவாவுன்றன்சந்நிதிக்கு
வில்வக்குடலையெடுக்காமல் வீணுக்குடலையெடுத்தேனே. 2

அவலவயிற்றைவளர்ப்பதற்கே யல்லும்பகலுமதினினைவாய்க்
கவலைப்படுவதன்றிசிவகனியைச் சேரக்கருதுகிலேன்
திவலையொழிக்குந்திருத்தணிகைத்திருமான்மருகன்திருத்தாட்குக்
குவளைக்குடலையெடுக்காமற் கொழுத்தவுடலையெடுத்தேனே. 3

வள்ளலார் திருவொற்றியூர்க்குச் செல்லும்போ தெல்லாம் நேராகத் தேரடித் தெருவழியாய்ச் செல்லாது தென்னண்டை மாடவீதியிலுள்ள நெல்லிக்காய்ப் பண்டாரச்சந்துவழியாய்த் தரிசனார்த்தம் செல்வது வழக்கம். (நெல்லிக்காய் ஊறுகாய் மிகப் பக்குவமாய்ச் செய்து அச்சைவபண்டாரம் அன்பர்களுக்கு இடுவர். பிள்ளைப்பெருமானும் அவரது அன்பர்களும் அச்சைவர் வீட்டிலேயே உண்பது வழக்கம்.) ஒருநாள் பிள்ளைப்பெருமான் தேரடி வீதியாய்ச் சென்றனர். அங்கு நெடுநாளாகத் திண்ணைமீதிருந்த நிர்வாணசந்நியாசி யொருவர் அவ்வழியே போக்குவரவுள்ள ஜனங்களைக் கண்டு 'கழுதை போகிறது, மாடு போகிறது' என்று இகழ்ந்துகொண்டிருப்பர். பிள்ளைப்பெருமான் அந்நாள் தன்னெதிரே வருவதை உற்று நோக்கி அந்நிர்வாண சந்நியாசி "இதோ உத்தம மனிதன் வருகிறான்" என்று கூறிவிட்டு, உடனே தன் கையால் தன் தேகத்தை மறைத்துக் கொண்டனர். பிள்ளைப் பெருமான் சில வார்த்தைகள் கூறினவுடன் சந்நியாசி அன்றிரவே அவ்விடம் விட்டுச் சென்றனர். (சரி-கீர்-46-47)

மக்களுள் விலங்கனையாரும் உளர், மனிதர்களும் உண்டு, தேவர்களும் உண்டு. இம்மையின்ப வாழ்வு ஒன்றனையே கருதுவோர் விலங்கனையார். இம்மை மறுமை இன்பவாழ்வைக் கருதுவோர் மனிதராவர். பேரின்பவாழ்வைக் குறிப்போர் தேவராவர். இன்னோர் முறையே ஊன் நோக்கம், உணர்ச்சி நோக்கம், அருள் நோக்கம் உடையராவர். உத்தம மனிதரே தேவராவர். அவர்கள் காலங்கடந்த பெரியார்கள். இதன் நுண்ணிய கருத்தை த்திநூல் வல்லுநர்பால் கேட்டறிக.

சென்னையில் அக்காலத்தில் ஒருமுறை சங்கராசாரியர் வந்திருந்தனர். சமஸ்கிருதநூலில் சில சந்தேகந்தெளிய சமஸ்கிருத

வித்வான் உளரோ எனக்கேட்டனர். ஒருபிராமணர் பிள்ளைப் பெருமானைச் சுட்டிக்காட்டினர். அச்சங்கராசாரியர் விரும்பியபடி பிள்ளைப் பெருமான் தமது பிரதம மாணவராகிய தொழுவூர் வேலாயுதமுதலியாருடன் அங்குசென்றனர். சந்தேகங்கொண்ட நூலைப் பிள்ளைப்பெருமானிடம் சங்கராசாரியார் கொடுக்க, ஒரு முறை பார்த்துவிட்டுத் தொழுவூர் முதலியாரைநோக்கி "நீர் சொல்லும்" என்று கட்டளையிட்டனர். ஆசிரியர் கட்டளையைச் சிரமேற்றாங்கி முதலியார் சங்கராசாரியர் கொண்ட சந்தேகங்கள் நிவர்த்தியாகுமாறு விளக்கிக் காட்டினர். (சரி-கீர்-48-49)

வித்வான் கண்ணுடி-சுப்பராயமுதலியார் பல ஆண்டுகளாய்த் தம்மை வருத்திய பிணியைக்கூறிப் பிள்ளைப்பெருமானிடம் விண்ணப்பித்து விபூதிபெற்றுக் குணமடைந்தபோது, (சரி-கீர்-52)

" அகத்தியனே வான்மிகியோ ஆதிசேடன் றானே
மகத்துவமாஞ் சம்பந்த மாலோ—சகத்திலகுஞ்
சச்சிதா னந்தத்தின் தண்ணளியோ என்னென்பேன்
மெச்சுமதி ராமலிங்க வேள்" என்று பாடிப் பரவினர்.

ஒருநாள் திருவைந்தெழுத்தின் உண்மை புலப்பட விளக்கும்படி வள்ளலாரைத் தொழுவூர்-முதலியார் வேண்ட, "ஆவியீரைந்து..." என்னும் பாசுரம் பாடித்தந்தனர்.

வள்ளலார் ஒருகால் திருவொற்றியூருடையாரைத் தரிசித்து அர்த்தஜாமங் கழித்து அவண்வீட்டுக்குச்செல்ல அங்குள்ள தமது தமக்கையார் தூங்கிவிடவே, கதவைத்தட்டாமல் ஒட்டுத்திண்ணையில் பசியிளைப்பால் கண்ணயர்ந்தனர். வடிவுடையம்மையார் அவ்வீட்டிலுள்ள தன் தமக்கைபோல்வந்து தாமரை இலையில் வெண்பொங்கல் கொடுத்துவிட்டு மறைந்துவிட்டார்.

அப்பால், சிறிதுநேரங் கழித்துத் தமக்கையார் விழித்துக் கொண்டு எழுந்துவந்து இவரை எழுப்ப, சிறிது நேரத்திற்குமுன் அன்னம் கொடுத்தனையே என்றுகூறி அங்குக்கிடந்த தாமரை இலையையுங்காட்டினர். பிறகு உண்மைதெரிந்து ஆனந்த பரவசராயினர்.

"நெஞ்சறி வுறுத்த" லில்

" அன்றொருநாள் நம்பசிகண் டந்தோ தரியாது
நன்றிரவிற் சோறளித்த நற்றாய்காண்" என்று வியந்து துதித்தனர். (சரி-கீர்-56)

ஒருகால் பிள்ளைப்பெருமான் தமையனார் மருகரும் தமது மாணவருமாகிய புராணிகர் சுந்தரம்பிள்ளை தனது வறுமையை எடுத்துக்கூறி வருந்தினின்றனர். (சரி-கீர்-42)

பிள்ளைப்பெருமான்

" திருவோங்கு பொற்சபையுஞ் சிற்சபையு நம்பெருமான்
செய்யா னின்ற
உருவோங்கும் ஆனந்தத் தாண்டவமுங் கண்டினிதாங்
குறைக யானுந்
தருவோங்கு தில்லைநகர்க் கோரிருபா னுள்வரைக்குட்
சார்கின் றேன்நம்
இருவோங்கள் குறையுமிறைக் குரைத்தகற்றிக் கொளலாநீ
யினையே லையா" என்று பாடித்தேற்றியனுப்பினர்.

ஒருகால் சில நண்பர்களுடன் சென்னைக்கடுத்துள்ள வியாசர் பாடிக்கு மாலைவேளையிற்சென்று சிவசரிதம் சொல்லித் திரும்புங் கால் இராக்காலமாகலான் பெரியதோர் பாம்பு இவர்களை நோக்கி வரவே கூடவந்தவர்கள் பயந்து ஒவ்வொருவரும் தனித்தனி ஓடி ஒளித்தனர். பிள்ளைப்பெருமான் சிறிதும் அசைவிலா நெஞ்சத்த ராய் மௌனநிலையில் நின்றனர். பாம்புவந்து வள்ளலாரது காலைப் பின்னிக்கொண்டு இரண்டொரு நிமிஷம் இருக்கவே பிள்ளைப் பெருமானார் சர்ப்பத்தைநோக்கிப் போம்படி ஏவினர். ஒரு சிறி தும் ஊறுசெய்யாது விலகிவிட்டது. பாம்பை அணிந்த பர சிவப் பிரபுவின் அடியார்களுக்குப் பாம்பு துன்பம் விளைக் குமோ? *

இனி, திருமுல்லைவாயிலுக்குச் சென்று தரிசித்தபின் பாடி யென்றுவழங்கும் திருவலிதாயத்தில் சுவாமி தரிசனஞ் செய்த போது அழுக்குக்கந்தை சுற்றி யிருந்ததைக்கண்டு மனம்பொறா ராய்க் "கந்தைசுற்றியதென்கொலோ" என்று உள்ளம் நைந்து பாடினர். பிறகு அவ்வாலயம் மிகப்பிரபலமாகிவிட்டது. அங் ஙனமே சென்னையில் உள்ள கந்தப்பெருமானைத் தெய்வமணி மாலையாகத் தோத்திரஞ்செய்யத் தொடங்குங்கால் வள்ளலார்

* இதனை நமக்கு அறிவித்தவர் அன்று வள்ளலாருடன் சென்றவருள் ஒருவரான மஹாவித்வான் - திருமயிலை-தணிகாசல முதலியார்.

"திருவோங்கு" என்று தொடுத்துப் பாடியபின்னர் அக்கந்தசாமிக் கோயில் மணியாலும் பொன்னாலும் இழைக்கப்பட்டு உற்சவச் சிறப்பில் தென்னாடுமுழுதும் நிகரில்லாததாய் விளங்குகிறது என்பது யாவரும் அறிந்ததே.

அன்றியும், பிள்ளைப் பெருமான் அமர்ந்திருந்த சென்னை ஏழுகிணற்றுக்கடுத்த வீராசாமிபிள்ளைவீதி)யிலுள்ள ஒரு அன்பர் அருகிலுள்ள துலுக்காணத்தம்மன் மீது தோத்திரம்பாடித் தரும்படி வேண்ட, பிள்ளைப் பெருமான்

சீர்வளர் மதியுந் திருவளர் வாழ்க்கைச் செல்வமுங் கல்வியும் பொறையும்
பார்வளர் திறனும் பயன்வளர் பரிசும் பத்தியு மெனக்கருள் பரிந்தே
வார்வளர் தனத்தாய் மருவளர் குழலாய் மணிவள ரணிமலர் முகத்தாய்
ஏர்வளர் குணத்தாயிசைதுலுக் காணத் திரேணுகை யெனுமொருதிருவே

உலந்தொரு காசு முதவிடாக் கொடிய வுலுத்தர்தங் கடைதொறு மோடி
அலந்தனி லலையா வகையெனக் குன்றனகமலர் தருளுதல் வேண்டும்
நலந்தரு மதிய நிவந்தபூங் கொடியே நலந்தரு நகைமணிக் கோவை
இலந்தொளிர்பசுந்தோளிசைதுலுக்காணத்திரேணுகையெனுமொருதிருவே

விருந்தினர் தம்மை யுபசரித் திடவும் விரவுறு முறவினர் மகிழத்
திருந்திய மனத்தானன்றிசெய் திடவுஞ் சிறியனேற் கருளுதல் வேண்டும்
வருந்திவந் தடைந்தோர்க் கருள்செயுங் கருணை வாரியே வடிவுறு மயிலே
இருந்திசை புகழு மிசைதுலுக் காணத்திரேணுகை யெனுமொரு திருவே.

புண்ணியம் புரியும் புனிதர்தஞ் சார்பும் புத்திரர் மனைவியே முதலாய்
நண்ணிய குடும்ப நலம்பெறப் புரியு நன்குமென் றனக்கருள் புரிவாய்
விண்ணிய கதிரி னொளிசெயு மிழையாய் விளங்கரு ளொழுகிய விழியாய்
எண்ணிய வடியர்க் கிசைதுலுக் காணத் திரேணுகையெனுமொருதிருவே.

மனமெலி யாமற் பிணியடை யாமல் வஞ்சகர் தமைமரு வாமற்
சினமிலை யாமலுடல்சலி யாமற் சிறியனேனுறமகிழ்ந் தருள்வாய்
அனமகிழ் நடையாயணிதுடியிடையா யழகுசெய் காஞ்சன வுடையாய்
இனமகிழ் சென்னையிசைதுலுக் காணத்திரேணுகையெனுமொரு திருவே.

என்ற பஞ்சகம்பாடித் தந்தபின்னர் அம்மாரியம்மன்கோயில் பலிமுதலிய நீங்கிச் சிவாலயமாக விர்த்தியடைந்து ஆதிசைவர் பூசைகொண்டுள்ளதாயிற்று என்பது பிரசித்தம்.

மதுரைத் திருஞான சம்பந்தசுவாமிகள் ஆதீனம் சிதம்பர சுவாமிகள் "வானாடரு மாதவர்நாடரும்" என்று தொடங்கும்

ாப்புச்செய்யுளை முதலாகவுடைய 'சிதம்பரபுராணத்தை' இற்றை
க்கு 67 - வருஷத்துக்குமுன் (இராக்ஷச௵) அச்சிட்டபோது
ிள்ளைப்பெருமாள் சாற்றுகவியாக பின்வரும் அகவற்பாவும்
ஒந்து விருத்தமும் பாடியுள்ளார்.

சிதம்பரபுராணம் இதம்பெறத்திருத்திய
சிதம்பரமுனிவன் பதம்பரவியது.

செம்மலர்ச் செம்மலுந் திருத்தகு திறத்தனும்
அம்மலர்க் கரத்திற் கம்மலர் கடவுளும்
படைத்திடன் முன்னுப் பயனுறு பெருந்தொழி
னடைத்திற மூன்று நடாஅய்ப் பிறங்கிய
தத்தந் தலைமையிற் றாழ்வின்றி யோங்குபு
சித்தந் திரமுறத் திருவருட் சார்த்திச்
சின்மய வடிவிற் சிதாகா யத்திடைத்
தன்மய வின்பத் தனிநடம் புரியுங்
காரண வெண்குணு கார வகண்ட
பூரண பராபர புனித சிற்பர
சிவநிலை யிஃதெனத் தெளிவித் தழியா
நவநிலை ஞாங்கர் நண்ணிய வநுபவத்
தனிச்சிவ ஞானந் தன்னை மூவாண்டிற்
பனிப்பறச் சிவைமுலைப் பாலொடு மளாஅய்
ஊட்டிட வுண்டிவ் வுலகெலாந் தழைப்ப
வாட்டமி லமுத வாய்மலர் மலர்ந்து
தோடுடை யெனுமறைச் சொல்லமு தளித்து
நாடுடைத் தாதையை நயப்பித் தருளிப்
பற்பல சைவப் பதிதொறு மணுகிச்
சொற்பல பதிகச் சுருதிகள் புனைந்து
பொற்றிருத் தாளமும் புதுமணிச் சிவிகையுங்
கொற்றவர் புகழ்மணிக் குடையுஞ் சின்னமுஞ்
சுந்தரக் காளமுஞ் சந்தநற் றரையுஞ்
சிந்தரும் வெண்மணிப் பந்தருங் காசும்
பரம்பர னளிக்கப் பண்புடன் பெற்றோன்
வரம்பெறு மழவன் மகட்பிணி சவட்டி
மருகலில் வசியன் வலவிடந் தீர்த்து
அருநெறி பற்பல யாத்திரை புரியாத்

கூடலிற் றென்னன் கூனுங் குற்றமும்
வாடலி லமணர்தம் மதமும் வாழ்க்கையும்
எளிதினின் முருக்கி யியல்புறு மாண்பினை
யளியுறு பெண்பனை யாகக் காட்டியொண்
மயிலையி னென்பினை மங்கை யாக்கியுள்
அயர்வறு திருமணத் தடைந்தவர் தமக்கெலாம்
பெறலருஞ் சோதிப் பேருரு வளித்திவ்
வையமும் வானமு மறையுஞ் சைவமும்
உய்ய வோங்கிய வொருபெருங் குரவன்
ஞான சம்பந்த நாயக னருளால்
ஈன சம்பந்த மெல்லா மொழித்தோன்
நரைவரு மென்றெணி நல்லறி வாளர்
இரைவுறு குழவி யிடத்தே துறந்தார்
என்னு நாலடிக் கிலக்கிய மானவன்
மன்னுமா தவரெலாம் வழுத்து மருந்தவன்
எல்லா வுயிர்க்கு மிதஞ்செய லன்றிப்
பொல்லாமை யொன்றும் புணராப் புண்ணியன்
வாய்மையு மாண்பும் வயம்பெறு மனனுந்
தூய்மையுந் தெளிவுஞ் சுற்றமாக் கொண்டோன்
கனவினு முலகைக் கருதாக் கருத்தினன்
நனவினிற் சுழுத்தி நண்ணிய திறத்தோன்
முப்பொருட் டிறனு முழுதுணர் முனிவன்
எப்பொருட் கண்ணுமெய்ப்பொரு ளுணர்ந்தோன்
சிவமலா தொன்றுஞ் சிந்தைவைத் தறியான்
பவமிலா நெறியே பற்றிய நிலையினன்
காமம் வெகுளி மயக்கெனுங் கரிசினை
நாமங் கெடவுண் ணலிவித்த வித்தகன்
துறவிற் றுறவன் சுத்தமெய்ஞ் ஞானி
அறவரி னறவ னன்பரி னன்பன்
திகழ்சிவ யோகி ஜீவன் முக்தன்
புகழிகழ் வொன்றும் பொருந்தாப் புனிதன்
இஃறான் முழுதுந் தெளிந்த தத்துவன்
பஃறான் மறந்தும் பாராத் திறலோன்
என்போன் றவர்க்கு மின்னருள் புரிவோன்
தன்போன் றவரிலாச் சாந்த வேந்தன்

சைவம் பழுத்த தனித்தரு நங்குல
தெய்வமா மதுரைச் சிதம்பர தேவனை
புண்ணிய சிதம்பர புராணந் தன்னை
நுண்ணிய வறிவா ளுக்குபு திருத்தம்
ஏர்பெற வியற்றி யாவரும் பயின்றுயப்
பாருறு மச்சிற் பதிப்பித் தருளிய
வுதவியை நினைந்துள முவந்து முப்பொழுதும்
பதமரு ளவனருட் பதமிறைஞ் சுதுமே.

ஆசிரிய விருத்தம்.

உலகெலாம் புகழுஞ் சிதம்பர வரலா
றுயிரெலா முணர்ந்துவீ டடைவான்
அலகுறு மடற்க ணெழுதுறு வெழுத்தி
னமைவித்த வருட்பெருங் கடலே
இலகுசீர்க் கூடன் மடாலயத் தமர்ந்த
வெழிற்றிரு ஞானசம் பந்தத்
திலகசற் குருவி னருள்பெறும் பொருளே
சிதம்பர மாதபோ நிதியே. 1

சிதம்பர வரலா றுலகெலா முணரத்
திருத்தியெம் போன்றவர் தமக்கும்
இதம்பெற மழியாப் பதம்பெற வளித்த
இன்பமே யென்றனி யன்பே
கதம்பெறு மதங்க ளதம்புறப் புரிந்த
கவுணியற் கினியவுட் களிப்பே
திதம்பெறு ஞான முதந்தரு மதுரைச்
சிதம்பர மாதபோ நிதியே. 2

சத்திறை யுயிர்தான் சத்தசத் தாகுந்
தடைமல மசத்திவற் றிடைநீ
இத்திறை யபர நோக்கல பரநோக்
கெய்துதி யிறைநிறை வுறைவாய்
புத்தியி தெனவென் புத்தியைத் திருத்தும்
போதநின் மயவொளி மணியே
சித்தியெண் வகையும் பெறத்தரு மதுரைச்
சிதம்பர மாதபோ நிதியே. 3

மறைநெறிப் பொதுவு மாகமச் சிறப்பும்
வகுப்பது சிவத்தொடு மருவிக்
குறைநிறை வகலக் கூடுத லிதனைக்
குறிப்பறக் குறியெனக் குறிக்கக்
கறைமிடற் றொளித்துச் சடைமுடி யோடுங்
காட்சிதந் தருள்செழுங் கதிரே
சிறைமல மகற்றி யருடரு மதுரைச்
சிதம்பர மாதபோ நிதியே. 4

ஒன்றெனி லிரண்டாங் குறுமய லதனு
லொன்றெனக் குறித்தலு மொழித்தே
நின்றனை யெனினீ நின்றனை யறிதி
நெறியிதென் றுணர்த்திய நிறைவே
மன்றிலா னந்த வாரிவா யமுதம்
வாரியுண் டெழுஞ்செழு முகிலே
தென்றிசைக் கணிகொண் டோங்கிய மதுரைச்
சிதம்பர மாதபோ நிதியே. 5

ஈண்டு குறித்த சிதம்பரசுவாமிகள் "தண்ணீர் விளக்கெரித்த தன்மைபோன்..." என்று வெண்பா இயற்றித் திருவருட்பா மாட்சி தெரிவித்தவர்.

வித்வான் சுவாமிகள் என்றுவழங்கும்

திருவாவடுதுறை ஆதீனத்துத் தாண்டவராயசுவாமிகள்

சென்னையில் வதிந்தகாலத்தில் பிள்ளைப்பெருமான் அவர்பால்

மிக்க அன்புபூண்டு எழுதியனுப்பிய சீட்டுக்கவி:—

அணிவளரும் உயர்நெறிகொள் கலைகள்நிறை மதிமகிழ்வை
அடையும்ஒளி யுடைய சடையோய்
அருளொழுக அமுதொழுக அழகொழுக இளநிலவின்
அளியொழுக ஒளிர்மு கத்தோய்
அமலநிலை புறவுமுறு சமயவலை யறவுமுணர்
வருள்கருணை மிகுகு ணத்தோய்
அடியர்வினை அகலவொரு பரமசுக நிலையருளு
மதுகருது திருவு ளத்தோய்

அநகசுப விபவசுக சரிதரக சிரகமன
வதுலவது விதப தத்தோய்
அகிலசர வசரவப ரிமிதமித வணுவுமணு
வணுவுமிவை யெனவு ரைத்தோய்
அகிதவித விவிதபரி சயசகல விகலஜக
வரஸரஜ தளமி ழைத்தோய்
அகளமன ரமணவபி நிகடவபி நிபிடதட
வநதிசய சுகம ளித்தோய். $\frac{1}{8}$ 1

அணுபக்ஷ மிதுசம்பு பக்ஷமிது காண்கவென்
றன்புடன் உரைத்த பெரியோய்
அதிக்கிராந் தத்தியல்பு திக்கிராந் தத்தியல்பி
னமதியிஃ தென்ற அறவோய்
அதிகார போகவில யங்களிரு வகையியல்
அறிந்திட வுணர்த்தும் உணர்வோய்
அருவமிஃ துருவமிஃ தருவுருவ மிஃதென
அறைந்தறி வுறுத்தும் அறிவோய்
அபேதசம் வேதன சுயஞ்சத்தி யியலெலா
மலைவற விரித்த புகழோய்
அநமிய பரிக்கிரக சத்திவினை வெல்லாங்கை
ஆமலக மெனஇ சைத்தோய்
அத்துவா நெறியாறும் ஒத்துவா னெறியா
றடைந்திடுக என்ற பரிசோய்
அவுத்திரியி னுத்தாமு னக்கிசைவு றுத்துதும்
அமர்ந்திடுக என்ற இனியோய். $\frac{1}{4}$ 2

பணிவளரு நிபுணகண பணகரண பரணவண
பாதயுக சரண புரண
பரம்பர சிதம்பர திகம்பர நிரந்தர
பராந்தர விளங்கு பரம
படகபட தடவிகட கரடகட கரியுரிகொள்
பகவவர கர வென்னவே
பவன்றரு சிவன்றனை யுவந்தனை சுவந்தனை
பகர்ந்திடுக என்ற அமுதே
பகரகர வுகரபர மகரகுண குணிகளுறு
பரிசறிய உரைசெ யரசே

பயன்றருவ யிந்துவ துவர்திகழ் சிவப்புகல்
  பதந்தெளிய வருள்செய் இறையே
பதிசிகர வகாரெறி யகரசுக ரமகரவு
  பயவபய நிலைசொன் மலையே
பவுந்தெற் றவர்தருகு வம்பரிப வம்பொடி
  படும்படி யெனும் புனிதமே. $\frac{8}{8}$ 3

பதியுதவு பதிதனது பரிசுமஃ தடையுமொரு
  பசுவியலு மருள்செய் பொருளே
பந்தமிலை யந்தமிலை யிந்தமிலை யென்றுபர
  பந்தமொழி தந்த மணியே
படியுமிடர் வடியுமிருள் விடியுமணி மொழிமறைகள்
  படியுமென நொடிம ருந்தே
பஞ்சமல கஞ்சுகமு மெஞ்சும்வகை பஞ்சமிலை
  பஞ்சமக மென்ற நிதியே
பதிதநெறி விடுகவொரு பதிதனெறி தொடுகவொளி
  படரும்வகை யெனும்ள னுறவே
பங்கமற வங்குமுள விங்குமுள எங்குமுள
  பண்டைவெளி யென்ற வொளியே
பலிதவறு சிதவுசித யுகளவிக பரமிரவு
  பகலென விளம்பு வளமே
பன்னிலையு முன்னிலையு நின்னிலையு மென்னிலை
  படிந்துவிடு கென்ற நன்றே. $\frac{1}{2}$ 4

திணிவளரு மறிவுகொடு தொடர்வரிது பெரிதுபர
  சிவமது வெனுஞ் செல்வமே
சிவசா தனம்பெறார் பவசா தனம்பெறுவர்
  தெளிகவெனும் அளிகொள் குருவே
திருநீறு காணினது கருநீறு காணுவது
  தேர்ந்துணர்க வென்ற தெளிவே
சிவமேவு சமயமது தவமேவு சமயமிது
  சித்தமென வோது முதலே
சிவனடியை வாழ்த்தாத வாயூத்தை வாய்கொடிய
  செவ்வாய் எனச்சொல் நிறையே
சிவமான்மி யம்புகாக் காதுகா தென்னுந்
  தெறுங்கமொழி யென்ற வொன்றே

ணடிவ ணங்காத தலைசிதலை யவன்கிழாத்
தெரிசியாக் கண்கள் புண்கள்
ளைதினை யாக்கின்றை கிந்தையா மிதுகமது
சித்தாந்த மென்ற திருவே. 7/8 5

ம்பரம னடவும்விடை மனையினமும் அவன்முனோர்
செறிதமரின் அமுதுண்ட நாள்
ர்வுறவி டேலென்ற வொருமரக் கறியுமச்
சிவபிரான் விடய மாகத்
நவாத வூரடிகள் திருவாய் மலர்ந்தருள்
திருக்கோவை யார்செய் கையுஞ்
ப்புகவெ னக்கடாஅய் நின்றவர்க் கிறைமொழி
தெரிக்குஞ் சிறப்பு வாய்ந்த
ரைந்தெ ழுத்தினு விலகுநக ரின்கணோர்
திருவைந் தெழுத்தி னோங்குந்
நசிகத் தண்ணமுத வான்கடல் படிந்தருள்
தெள்ளமுதம் உண்டு தேக்கிச்
றிபவக் கோடையற அருண்மழை பொழிந்தொளி
சிறந்தோங்கு சீர்க் கொண்டலே
ய்யதாண் டவராய தூயவாழ் வேகினது
திருவடிக் கன்பு கொண்டே. $\frac{3}{4}$ 6

ணிவளர் விராகமது பெற்றிலேன் காமரந்
தானுமறி யேன் றன்பினைத்
தஞ்செ யேன்மங்கு லங்கொண்டு னகபதந்
தன்னிற் பருத்து வினையைத்
ங்குசும் மாடாயி னேன்அவ்வி ராகமுதல்
சாற்றுசும் மாடு மட்டுஞ்
ங்குமொழி முதலையுடை யேன்முதற் கயலில்
தய்ங்குமொரு நாமம் உடையேன்
துமுறைக் கைடமூன்றி னுஞ்சுவசி யுற்றிலேன்
சதுரிலேன் பஞ்ச கயவேன்
டியி விரண்டிறைன் றேய்ந்திலேன் ஒன்றுபோற்
றுனைத் தமது வென்றேன்

தண்டனு பிரமிட்டு வைக்கும்வின் னப்பமது
 தானென்னை யெனினு மடியார்
சைவ்யோ கஞ்செய்வர் யானுமொரு காற்போன
 சைவயோ கஞ் செய்குவேன். 7

தட்டுறு ஞானமுடை யார்நினது தொண்டர்யான்
 றானுமது சுட்ட வுடையேன்
சாந்தநெஞ் சுடையர்நின தன்பர்யான் மணம்வீசு
 சாந்தநெஞ் சதுவு முடையேன்
சகசநிய மம்பெறுவர் நின்னடியர் அடிமையுஞ்
 சகச நியமம் பெற்றுளேன்
தனிவீடு விழைவர்நின் னன்பர்யான் பலகூட
 சாலையுள வீடு விழைவேன்
சார்புலக் கள்வர்வரின் அஞ்சுவர்நி னடியர்யான்
 தனிவரினு மிக அஞ்சுவேன்
தாழ்பொறிய டக்குவர்நின் னன்பர்யா னுயர்பொறிகள்
 தமையக மடக்க வல்லேன்
தமியனேன் றன்னைநீ கைவிடேல் விடினுநின்
 றன்னைநான் விடுவ னல்லேன்
தருவழக் கிட்டெனினு நின்பா லெனக்குமொரு
 சார்புறச் செய்கு வேனே. 1 8

வெண்பா.

பண்டு குலம்பேசப் பரிந்ததில்லை யீண்டென்னைக்
கொண்டு குலம்பேசக் குறிப்பானோ—தொண்டுசெய
நீண்டவரா யப்பெருமா னீக்குந் திருத்துறைசை
தாண்டவரா யப்பெருமான் தாள்.

கட்டளைக்கலித்துறை.

வானே ரமரர்வருந் திக்கடைந்த மருந்துவந்து
தானே யொருசிறுநாய்க் குக்கிடைத்த தகவெனஎம்
மானேர் துறைசைநற் றண்டவராய மணியெனது
பானேர் கிடைத்தும் பயன்கொள்கிலேன் வெறும்பாவியனே.

மின்னேர் சடைமுடித் தாண்டவராய வியன்றவநின்
றன்னேரடைதற் கெளிதாக நான்பெற்றுந் தாழ்த்துகின்றேன்
பொன்னே கொடுத்துமெனு நாலடியின் பொருட்கிலக்கா
யென்னே யிருந்துழலென் னேழைவன்மதி யென்மதியே.

* வித்வான் சுவாமிகள் கருணைகூர்ந்த பிள்ளைப் பெருமானுக்கு எழுதியனுப்பிய பாக்கள் கிடைக்கவில்லை.

### திருவருட்பிரகாசவள்ளலார், திருமழிசை வைத்தியலிங்கதேவர் குமாரர் முத்துசாமிமுதலியார் பாடிய தோத்திரங்களைக் கண்ணுற்றுப் பாடியருளிய சாற்றுகவி.

ருவகைப் பொருடெரித் துயவுநீர் மறைகனுன் கொன்றுவாழ்க
வுயரரன் றருமெழு நான்கதா மாமக மூலகின் மல்க
திருவகைப் பவமொழித் திலகும்வெண் ணீற்றின மெங்குமோங்க
வினையினல் லறமுனும் பயனெரு நான்குமீ டேறிவெல்க
பொருவலற் றரையரெத் திசையுளு நீதியாற் பொலிக யாரும்
புகழ்சிவாத் துவிதசித் தாந்தமெய்ச் சரணரெண் புல்கநாளுந்
திருவருட் பனுவல்சொற் றிடுமவர்க் கெண்டிரு சேர்க வாதைச்
செப்புமுத் துச்சுவா மிக்கவிக் குரிசில்சீர் செழிக மாதோ.

வள்ளலார் கருங்குழிக்கிராமத்தில் விளங்கியகாலத்தில் இம்
த்துசாமிமுதலியார் தமக்குச் சென்னையில் விவாகமானபோது
ள்ளலாரது திருக்கரத்தால் அச்சமயம் விபூதிபெறுவதற்கில்லையே
ன ஏக்கங்கொண்டனர். இதை அறிந்த வள்ளலார் அம்முத்து
ாமி முதலியாருக்குப் பெரியதோர் அகவல் எழுதி சீனிவாசவர
ாசாரியரிடம் சென்னைக்குக் கொடுத்தனுப்பினர்.

அவ்வகவல் முத்துசாமி முதலியார் மனப்பாடஞ் செய்து
வைத்தலைதக்கூற, அதைக் காஞ்சி-நாகலிங்கமுதலியார் தாம்வெளி
ட்ட 'தொழிற்கல்வி' எனும் பத்திரிகையில் 'குடும்பகோரம்'
னும் பெயரால் ஆனந்த வரு ஆடி ஆவணிமாதங்களில் அச்சிட்
ருக்கின்றனர். 400-அடிகளுக்கு மேலுள்ளன.

அகவலிற்கூறிய கருத்துக்கள் மிக அற்புதமாயுள்ளன. வள்ள
ார் சென்னையில் அம்முத்துசாமி முதலியார் கலியாணத்திற்கு
ரத்தடையா யமைந்தவைகளை விரித்துக் கூறியுள்ளார்:—அதன்
ருக்கம்.

தடைபல சாற்றில், ஆயிரங்கோடி நாவாயினும் முடியா?
ழுதவென்றாலும் ஏட்டுக்கடங்கா. ஆணவமாகிய முதல்மனைவி
ுகாதியில் பிடித்துக்கொண்டனள். அஞ்ஞானம் எனும் பிள்ளை
றந்தது. பின்பு யாரோ பசுபதி என்றொருவர் மாயையென்னும்
ாதினைக் கொணர்ந்து சிறுகாக்கையின் கழுத்தில் பனங்காய் கட்
யவாறெனக் கட்டிவிட்டனர். அம்மாயைக்கு மனம், புத்தி, சித்
ம், அகங்காரம் எனும் நான்கு பிள்ளைகள். இவ்விரண்டாம் மனை

வியாகிய 'மாயை' மாற்றுக்காருக்கு மறுதாலாகக் 'காமியம்' என்னும் கட்டவஞ்சகியை மூன்றுந்தாரமாகக் கலியாணஞ்செய்தனள். அக்காமியம் எனும் மனைவிக்கு 'முக்குணங்கள்' எனும் மூன்று பிள்ளைகள் பிறந்தனர். இம்மூன்று மனைவியருடனும் இப்பிள்ளைகளுடனும் இருந்து குடித்தனஞ்செய்யத் 'தேகம்' என்னும் குடிக்கூலி வீடுபெற்றனர். அதற்குப் 'பிண்டம்' என்னும் பெருங்குடிக்கூலி அன்றைக்கன்றே செலுத்தவேண்டும். இவ்வீட்டுக்குத் தலைவர் வாத பித்த சிலேஷ்மம் என மூவர். இவைபோதாவென, மதவாதிகள் வருகின்றனர். வேதாந்தம் சிலரும் சித்தாந்தம் சிலரும் பேசுவர். சிலர் இதிகாசம் இசைப்பர். சிலர் இலக்கணம் இயம்புவர். சிலர் சமயநூற்சாற்றுவர். வாய்ப்போருக்கு வந்தவர்போலச் சிலர் விவகாரங்கள்பேசுவர். சிலர் மததூஷணை பேசுவர். விழற்கு நீரைவிடுவார்போலச் சிலர் வீண்கதை பேசுவர். இவர்களுக்கு ஏற்ப, குரல்கம்மிடவும் நாக்கு உலரவும், அழலைபெழவும் சமயோசிதமாய்ப் பேசி அயர்ந்தபின் நித்திய கர்மங்களைச்செய்து ஊன் பிண்டத்திற்கு உறுபிண்டமீந்து நித்திரைப் பரத்தையை சேர்ந்து கூடவும் பொழுதுஞ் சரியாய்ப் போகின்றதுவே என்பது,

பின்னர், சிதம்பர தரிசனஞ்செய்யப் பேரவாக்கொண்டு அப்போது ரெயில் இல்லாமையால் சிதம்பரசுவாமிகள், சடைச்சுவாமிகள், வீராசாமிநாய்க்கர், தொழூவூர்-வேலாயுதமுதலியார் முதலிய அன்பர்களுடன் வண்டிபாதையாய்ப் புறப்பட்டு இடையிலுள்ள ஸ்தலங்கள் சில தரிசனஞ் செய்துகொண்டு புதுச்சேரியிலுள்ள சிசுவாசதய்யர் முதலிய பல அன்பர்கள் விரும்பியவண்ணம் சில நாள் புதுவையில் தங்கினர். அரியபெரியவிஷயம் பல கேட்டதற்குத் தக்கவிடைகள் கொடுத்தமையால் கூட்டம்பெருகியது. சீனிவாச வரதாசாரியர் என்பவர், தருமலிங்கசெட்டி என்பவருக்குப் பாடஞ் சொல்லிக்கொண்டிருந்தபோது அவர்கள் விருப்பத்தின்படி வள்ளலார் பலவிஷயங்களை விளக்கினர். (சரி-சிர்-56-59)

புதுவையில் சிலநாள் தங்கியபின், சிதம்பரஞ்சென்றடைந்தனர். பத்திச் சுவைததும்ப திருவம்பலமுடைய பெரியபெருமானைத் துதித்த நடராஜபதிமாலை, அம்மை திருப்பதிகம் முதலியன பாடினர்.

மாளிகையில் ஒளிவிட்டு விளக்கும் திருவம்பலமுடையார் திருவாயிலை அடைந்து அஞ்சலிசெய்தனர். எவ்வுயிர்க்குஞ் சிக்

ிய பதிகைக்கண்டார், விழுந்தார், எழுந்தார், விம்மினர், களித்தார், கலந்தார். இங்ஙனம் தனிப்பெருந் தலைவரது தனிப்பெருங் கத்தினைக்கண்டு தத்துவங்கள் குழைந்து தழைந்து தெள்ளாமுத சாரமயமாகி அருள்நெறிவிளங்க மதுரவாக்கால் துதித்தனர்.

அதிவர்ணாசிரமம்பூண்ட கோடகநல்லூர் - சுந்தரசுவாமிகள் சிதம்பரத்தில் கிழக்குச் சந்நிதிவீதிச் சத்திரத்தில் அன்பர்களுடன் எழுந்தருளி யிருந்தகாலத்தில், வடக்குச் சந்நிதிவீதியி லிருந்த வள்ளலார் சுந்தரசாமிகளிடம் சிலரை அனுப்பிச் சமயம்பார்த்து வரக் கட்டளையிட்டனர். அன்பர்கள் சென்றவுடன் சுந்தரசுவாமிகள் அறிந்து "இங்கா சமயம்பார்க்கச் சொன்னது" என்றுகூறி, உடனே புறப்பட்டு அன்பர்கூட்டத்துடன் சிவநாமம்புகன்று கரகோஷத்துடன் வள்ளலாரிருந்த இடத்திற்குச்சென்றனர். உடனே வள்ளலாரும் சுவாமிகளும் ஒருவரையொருவர் இறைஞ்சிப்போற்றினர்.

வள்ளலார் சுவாமிகளைப் பலமுறை எதிரில் உட்காரச்சொல்ல வள்ளலார் திருமுன்பு உட்காராமல் வள்ளலார்க்கு ஒருபால் அமர்ந்தனர். ஞானவிஷயமாய் இருவரும் மூன்றுநாள் வார்த்தையாடியதில் சுந்தரசுவாமிகள் தோல்வியடைந்து மனம்சோர்ந்ததைக்கண்டு வள்ளலார் உபசரித்துவிட்டு மறுபடியும் தோல்வியடைந் தோர்பக்கமாக மாறி வாதநிகழ்த்திச் சுந்தரசுவாமிகளைக் களிப்பித்தனர். அப்போது அங்கிருந்த வேலூர் நாகப்பிள்ளை மஹாதேவமாலையில் சிலகவிசொல்ல, சுந்தர சுவாமிகள் "யார் பாட்டு" எனக்கேட்க 'வள்ளலார் பாடியது' என்று குறிக்க, சுவாமிகள் "இப்படியெல்லாம் பாடியோ என்னை" அலக்கழித்தது. என்று கூறினர். சுவாமிகளைநோக்கி வள்ளலார் எவ்வளவு இங்கு படித்திருக்கிறதோ அவ்வளவும் அநுபவத்தில் வந்தால்விசேஷம்" என்றனர். சுந்தரசுவாமிகள் விபூதிகேட்க, வள்ளலார் தர இசையவில்லை. ஆயினும் சுந்தரசுவாமிகள் தம்மிடமிருந்த வாழைப்பட்டையிலுள்ள விபூதி சிறிது எடுத்து வள்ளலார் நெற்றியில் இட்டு அந்த விபூதியை தன் பட்டையிலுள்ள விபூதியிற் கலந்து தாமும் இட்டுக்கொண்டு யாவர்க்கும் கொடுத்தனர்.

அப்பால், அச் சுவாமிகள் கிழக்குச்சத்திரஞ் சென்றபோது விடுதிப்பேரிருந்த அன்பர்கள் வள்ளலார் திருமுன்பு உட்கா

ராமைக்குக் காரணம்வினவ, வள்ளலார் தம் எதிரில் உட்காரு வோர் சக்தியை அப்போதே இழுத்துக்கொள்ளும் ஆற்றல் மிக்க சித்தர் என்று சுவாமிகள் விடையளித்தனர். வள்ளலார் "இன் னும் ஆறுமாதத்தில் சாமிதேகம் விழும்" என்று கண்ணீர் விட்ட னர். அங்ஙனமே ஆறும்மாதத்தில் சாமிகள் சிவனடியடைந்தனர். (சரி-கீர்-142-150)

பின்னர், சீர்காழிக்குச்சென்று அம்மன்கோயிற் பந்தலில் பிரசங்கஞ்செய்தனர். பல ஆண்டுகளாகக் குன்மநோயால் வருந் திய ஒருவர்வணங்க வள்ளலார் விபூதிகொடுக்க நோய்நீங்கியது. வைத்தீசுரன் கோயிலுக்குச்சென்று தரிசித்தபோது அவ்வாலய தருமகர்த்தராகிய வித்வான்-உலகநாத தம்பிரான் வள்ளலாரிடம் சுவாமிமீது பதிகம்பாடி அதில் தன்பெயரும் அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ள வைத்தியநாதர் பதிகத்தில் "தவசிகா மணி உலகநாதவள்ளல், மகிழவருவேளூரில் அன்பர் பவரோக மற வளர்வயித்தியநாதனே" என்றுத் தம்பிரான் அவாவை பூர் த்தி செய்தனர். அப்பால் தம்பிரான் சைவ ஒழுக்கத்தில் சிறந்தவ ராயினர். (சரி-கீர்-153-154)

மதுரைக்குச் சென்று தரிசித்தனர். அப்போது பாடிய பாடல்கள் கிடைக்கவில்லை.

அப்பால் கருங்குழி எனும் கிராமத்தில் வந்துசேர்ந்தனர். சிலநாள் கழித்துத் தமையனார் பரசுராமபிள்ளை அரனடியடைந்த னர். கருங்குழிக் கிராமத்திலுள்ள வெங்கடரெட்டியாரும், அவர் மனைவியார் முத்தலம்மாளும் மிகுந்த பக்திபாராட்டி அங்கேயே தங்கவேண்டுமென்று விரும்பினபடியால் வள்ளலார் அநேகநாள் தங்கினர். (சரி-கீர்-63-64)

அந்த ரெட்டியார் வீட்டில் பிள்ளைப்பெருமான் புசிப்பதும், இரவில் பதிகங்கள்பாடி எழுதுவது வழக்கம். அதற்காக நாள் தோறும் ஒருமாடத்தில் விளக்கேற்றிவைப்பர். ஒருநாள் ஒருசுப பிரயோஜனத்திற்குச் செல்லவேண்டியிருந்ததால், முத்தலம்மாள் புறப்பட்டுபோகும் அவசரத்தில் மாலைக்காலத்தில் விளக்கிற்கு எண்ணெய் வார்த்து வைத்துவிட்டு மேற்கொண்டு எண்ணெய் வைக்கவேண்டியதற்காக வழக்கம்போல் வைக்கும் எண்ணெய்ச் செம்பு ஓட்டைபூராய் விட்டபடியால் ஒரு புதுப்பாத்திரம் புதுக்

குவதற்கு அதில் நீர்நிறையவார்த்து மாடத்தருகே வைத்துவிட்டு வேறு ஒருபாத்திரத்தில் வழக்கம்போல் வைக்கவேண்டிய எண்ணெயை வைக்க மறந்துவிட்டனர்.

வள்ளலார் பாடிக்கொண்டே வழக்கம்போல் அங்குவைத்துள்ள பாத்திரத்திலுள்ளதை நீரென்று ஆராயாமல் வார்த்துக்கொண்டே பாடிக்கொண்டிருந்தனர். மாறுநாள் அவ்வம்மையார் திரும்பிவந்து கவனித்ததில் மகிமைவெளியாயது. (சரி-கீர்-71) வள்ளலார் இதனை,

" மெய்விளக்கே...

சென்னைநகர் நன்பர்களே செப்பக்கேளீர்" என்று வரைந்துவிடச் சில அன்பர்கள் சென்னைக்குத் தபால்மூலமாய் அதைத் தெரிவித்தனர்.

கருங்குழிக் கிராமத்தில் புருஷோத்தம ரெட்டியாருடைய அம்மான் பாலு ரெட்டியார்க்குள்ள குஷ்டத்தை வள்ளலார் விபூதி அருளிக்குணமாக்கினர். முத்துநாராயணரெட்டியார் என்பவர்க்கு நேர்ந்த கண்குற்றத்தை வள்ளலார் விபூதிகொடுத்து குணமாக்கினர். இம்முத்து நாராயணரெட்டியார் தமது சொத்துயாவையும் வள்ளலார்பேரால் எழுதிவிட வள்ளலார் அவ்வூர்ச் சீனிவாசப் பெருமாள்கோயிலுக்கு எழுதிவிடும்படி கட்டளையிட்டனர். அங்ஙனம் ரெட்டியார் செய்தனர். (சரி-கீர்-70)

ஒருநாள் மாலையில் சில அன்பருடன் வள்ளலார் வெளியேயுலாவச்சென்றனர். பெருமழை வந்து அன்பர்கள் நனைந்தனர். வள்ளலார் திருமேனி நனையவில்லை. (சரி-கீர்-72)

கருங்குழிக் கிராமத்திலுள்ள கல்லாங்குளம் என்னும் குளக்கரையில் வள்ளலார் உலாவிக்கொண்டிருக்க, திடீரென ஒருவன் ஓடிவந்து உபதேசம்பண்ணும்படி வேண்டினன். அத்தக்ஷணமே வள்ளலார் ஒருமைல் தூரத்திற்கு அப்பால் தோன்றிடக்கண்டான். (சரி-கீர்-217)

சித்தர் நூலின் உண்மையைச் சிலர்க்கு விளக்கிக்காட்டச் சில மூலிகைகளைக்கொண்டு செம்பு, பொன்னாக்கிக் காட்டி அதைக் குன்றிலெறிந்தனர். குன்றில் எறியுங்காரணம் கேட்டபோது "பொருள் வேண்டியபோது கடவுள் கொடுப்பார்" என்று உறுதிபடத் தாம்கொண்ட உண்மை விளக்கினர்,

ஒருகால், திருச்சிற்றம்பல ஞானியார் வள்ளலாரிடம் மிகுந்த அன்பு பாராட்டித் தனக்கு உபதேசஞ்செய்யும்படி வேண்டினர். துறவறம்பூண்ட ஞானியர்க்கு வெள்ளைவேட்டிக்காரராகிய பிள்ளைப்பெருமான் தாம் உபதேசம் செய்தல்கூடாது எனத் தடுத்தும் மீண்டும் ஞானியார் கேட்கவே,

> நின்னிலையை என்னருளால் நீயுணர்ந்து நின்றடங்கில்
> இன்னிலையே யந்நிலையை யெய்துதிகாண்—முன்னிலையி
> னிற்குருவி ளுட்டாதே யென்றுரைத்தான் ஏரகம்வாழ்
> சற்குருவென் சாமிநா தன்.

என்று பாடியருளினர். (சரி-கீர்-73)

ஒருநாள் கருங்குழிக் கிராமத்திலுள்ள சிறுவனொருவன் குடும்பத்தில் மனவருத்தத்தால் கோபித்துக் கொண்டு வெளியேபோய் விட்டான். போனவிடம் தெரியாது விசாரிக்கையில் அவன் மதுரையில் இருப்பதாகக் கேள்விப்பட்ட அவனுக்கு உரியார் பிள்ளைப்பெருமானை மதுரை மடத்திலிருந்த திருச்சிற்றம்பல ஞானியார்க்கு ஒருகடிதம் விடுக்கும்படி வேண்டினர். பிள்ளைப்பெருமான் மிகச் சாதாரண நடையில் சமாச்சாரக் கடிதமாதலால் சாமான்யரைப்போலவே ஞானியார்க்கு எழுதினர். * (சரி-கீர்-74)

மதுரையில் திருச்சிற்றம்பல ஞானியார் கணக்கிலவதானி-தேவிபட்டினம் முத்துசாமி பிள்ளையிடம் வார்த்தையாடிக்கொண்டிருந்தபோது இக்கடிதம் தபாலில் கிடைத்தது. உடனே படித்து அங்குள்ள அவதானியாரிடத்தில் காட்ட அதைப் படித்துவிட்டு "இவ்வளவு மேதாவியெழுதின கடிதத்தில் இலக்கண இலக்கிய விசேடம் ஒன்றும் இல்லையே" என்று பதறினர். ஞானியார் "வள்ளலார் வார்த்தையாடிக்கொண்டிருக்கும்போது சிந்திய இலக்கணம் இந்த உலகில் பரவி யிருக்கிறது." என்றனர். "அங்ஙனமாயின் ஓர் இலக்கண அருமை நிரம்பிய ஒருகடிதம் வரவழையுங்கள்" என்று அவதானியார் விரும்பினர். உடனே ஞானியார் இக்கருத்தைத் தெரிவித்த கடிதத்தைக்கண்டு வள்ளலார் 'பிச்சு' என எழிந்தனர். அங்குள்ளோர் அக்கடிதத்தை எடுத்துத் தொழுவூர் வேலாயுத முதலியாரைக்கொண்டு 'இலக்கணப் பத்திரிகை' எழுதியனுப்பினர். (சரி-கீர்-75-76-77)

---

* லௌகிக நிலையிலுள்ள தமது நண்பர்களுக்கு எழுதும் கடிதங்களைப்பெரும்பான்மையாய் மற்றையர்போலவே சாதாரண நடையில் எழுதுவது வள்ளலார்க்கு வழக்கம்.

## அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை.

## இலக்கண வியனடை வழக்கப்பாடுறுத்து விக்கும் பத்திரிகை.

---

உணர்ந்தோரானியல் வகையவின்ன வென்றவற்றிற் பின் மொழிமதிக்கு முன்மொழிமறைக்கு முதலீறுவிளங்க முடிப்பதாய பின்மொழியடைசார் முன்மொழிஞாங்கர் விளங்கியஞானிகட்கு.

பொய்யற் கெதிர்சார்புற்ற மூலிபொன்றுவளைத்து வணக்கஞ் செய்த ககனநீரொழிலென்றும் வான்வழங்கு பண்ணிகாரமென்றும் நாகச்சுட்டு மீனென்றும் வேறு குறிப்பதொன்று.

அண்மைச்சுட்டடுத்த வேழாவதன் பொருண்மை யும்மையடுத்த பல்லோர்வினைப் பெயர்ப் பொருள் குறிஞ்சியிறைச்சிப்பொருளொன்றனோடு புணர்ப.

சேய்மைச்சுட்டடுத்தவத்திறத்தியல்யாது.

இரண்டனுருபொடு புணர்ந்த தன்மைப்பன்மையாறுவதன் பொருட்டாக்கினார்க்குய்த்த கற்பியலதிகரிப்பின் வருந்தலைமகட் பெயரவிரண்டனோ டிரண்டிரண்டேகக் கழிவிலைப்பெயரவு மாகாரவீற்று முதனிலைத்தனிவினைச்செயவென் வாய்ப்பாட்டு வினையெச்சத்தனவாகக் கலம்பகச்செய்யுளுறுப்பாற் சிறத்தும்.

இருவகை முதற்பொருளொன்றன் பாகுபாட்டுறுப்பிற் குறித்தவைம்பெரும் பூதத்தோர் விசேடணத் தெதிர்மறை நடுக்குறையியற் சொற்பெயரவுயிர்ப்பெயராகவெதிர்காலங் குறித்துநின்றது.

சிலவினைச்சார்பான்விலங்குகுடியவரைவில் வெளியாம்.

இதனோடிருவகைப்பட்டவோர்சார்புதுநிலஞ்செலவுய்த்தனம்.

வேண்டுழிவேண்டியாங்குய்க்க. மற்றைய பின்னர் வரைதும்.

இற்றேவிசும்பிற்கணைச்சலம்.

பார்வதிபுரம்<br>சக்கில் ஸ்ரீ<br>துரை வீ உரை

இங்ஙனம்<br>சங்கோச்சேரயுன் வீரமணிச்<br>குடியார் திருவாணைப்படிக்கு அடிமை<br>தொழுவூர் - வேலாயுதம்.

அப்பத்திரிகையை ஞானியார் கண்ணுற்றபின் அவதானியார் கையில் கொடுத்தனர். பொருள் விளங்காமையால் "வேறு மொன்று ஒருவித்வான் பூட்டுபோட்டால் அந்த வித்வான்தான் திறக்கவேண்டும்" என்று அவதானியார்கூற, ஞானியார் "ஆயின், நீர் ஒரு பூட்டுப்போடும்" என்றனர்.

அவதானியார்,

வெண்பா.

தகரவரிக் கூந்தலர்கா மாதிமுந்நீர் தாழும்
தகரவரி நாலைந்து சாடும்—தகரவரி
மூவொற்றி யூர்பொருளை மூன்றுமங்கை யேந்துமொரு
சேவொற்றி யூரானைச் செப்பு.

என்றுவரைந்து விடுத்தனர். (சரி-கீர்-78)

தகரவரி-மைச்சாந்தணிந்த, கூந்தலர் - மயிரையுடையபெண்கள், காமாதிமுந்நீர்-காமம் வெகுளிமயக்கம் என்னு முக்குணத்தில் மூழ்கும்படியான, தகரவரி நாலைந்து-'த' எனும் எழுத்துவர்க்கத்தில் நாலாவது ஐந்தாவது எழுத்துக்களை (தீது)

சாடும்-ஒழிக்கும், தகரவரி மூவொற்று-த், க், ர், இ-இகர எழுத்து, ஊர்பொருளை மூன்றும் - சேர்ந்தபொருள் மூன்றும். திகிரி, த்+இ, க்+இ, ர்+இ, தி, கி, ரி, இந்தத் 'திகிரி' என்னும் சொற்குப்பொருள் மூன்று: திகிரி-மலை, சக்கரம், மூங்கில், ஈண்டு மலை-கோவர்த்தனகிரியைத் தாங்கினது, சக்கரம் - கையில் ஏந்தியுளது, மூங்கில்-புள்ளாங்குழல், ஆகிய இம்மூன்றையும், அம்கை ஏந்தும்-அழகிய கையில் ஏந்தும், ஒரு-விசேஷமான, சே-(விஷ்ணு மூர்த்தியாகிய) ரிஷபத்தை, ஒற்றியூரானை - (உடைய) திருவொற்றியூர்த் தியாகேசரைச், செப்பு-துதி, திருவொற்றியூரனைத் துதித்தால், காமம் வெகுளி மயக்கம் நீங்கும் என்றவாறு.

இவ்வுரையால் முத்துசாமிபிள்ளை கொண்டகருத்தை வள்ளலார் வெளியிட்டார். முத்துசாமி பிள்ளைக்கு விளங்காத மற்றுமோர் விசேஷ உரை எழுதியனுப்பினர் (அது கிடைக்கவில்லை.)

இதனையறிந்த அவதானியார் உடனே கருங்குழிக்கு வந்து வள்ளலார் வீற்றிருக்கும் தெருவின்கோடியில் வண்டி விட்டிறங்கி வீதியின் வெளியில் நமஸ்காரம் பண்ணிக்கொண்டேவந்து வள்ள

ார் திருமுன்பு மூர்ச்சையாய்விழுந்தார். வள்ளலார் உபசரித்த ின் தெளிவடைந்து எழுந்து நமஸ்கரித்து "மன்னிக்கவேண்டும், ித்துவான் என மதித்தேன் 'பரிபூரணஞானி'யென உணர்ந்தி லன்" என்று அதிசயித்த உணர்வினராய்க் கற்றதனாலாய பயன் பெற்றார். (சரி-கீர்-79-80)

மாணுக்கர் நாயனுரெட்டியார் விரும்பியபடி ஒருபாத்திரத் ில் நீர்வார்த்து ஒருபொட்டள மருந்தை அதில்போட்டு வள்ள ார்கையில் வைத்திருந்து கொடுத்துவிட்டபின் மறுநாள்திறந்து ார்க்க, தங்கச்சுண்ணமாயிருந்தது. பிறகு அதைத் தெருமண ிற் கொட்டிவிட்டனர். (சரி-கீர்-81)

இங்ஙனமாகப் பல ஆண்டு கருங்குழிக்கிராமத்தில் விளங்கி ார். இடையிடையே பிறஸ்தலங்களுக்குச் சென்று தரிசித்து ிட்டு வருவதுவழக்கம். இங்கு நடந்த அற்புதச் செயல்களைச் கேள்வியாலறிந்த கூடலூர்-அப்பாசாமிச் செட்டியார் வந்தடுத்துத் நம் தலைமயனூர்க்குள்ள நாவில் உண்டாகிய புற்றைப்போக்கியருள ேவண்டுமென்று பிரார்த்திக்க, மூன்றுவேளை விபூதிகொடுத்துக் குணமாக்கினர். பிறகு கூடலூர்க்கு வள்ளலாரை அச்செட்டியார் அழைத்துச்சென்றனர். (சரி-கீர்-82)

இதற்கு மூன்றுவருடத்திற்கு முன்பே, தேவநாயகம் பிள்ளை ின் தந்தையார் போகியாயிருந்து தேகவியோக சமயத்தில் மக ூர்க்கு "யார் மூக்காடுபோட்டுக் கையில் பிரம்பு வைத்துக்கொ ண்டு இதுதான் உன்தகப்பன் வியோகஸ்தானம் எனத் தட்டிக் காட்டுவாரோ அவரையே நீ ஆசாரியராகக்கொள்' என்று கட் டளையிட்டிருந்தனர். கூடலூர் வந்துசேர்ந்தவுடன் பிள்ளைப் பெரு மான் அப்படியே தட்டிக்காட்டினர். வள்ளலாரை அத்தேவநாய கம்பிள்ளை குருவாகக்கொண்டு பணிந்தனர். அத்தேவநாயகம் பிள்ளை ரசவாதத்தில் பணஞ்செலவிட்டவர். வெள்ளி, செம்பு, ஈயம் ஆகிய இவைகளைப் பலமுறையால் சுட்டும் கரிந்துபோயின. அத ூல் இருந்தபொருளைப் பெரிதும் செலவிட்டனர். பிள்ளைப்பெரு மான் இதையறிந்து இரும்புத்தகட்டை ஒருமூலிகையால் இரண்டு [illegible] கொண்டு நெருப்பிட்டுத் தங்கமாக்கிக்காட்டி, [illegible] "இது இச்சையற்றவனுக்குக் கிடைக்கும் இனி இத் [illegible] உபதேசித்தனர். (சரி-கீர்-84-87)

பிறகு ஒருகால் தேவநாயகம்பிள்ளையை அழைத்துச் செஞ்சி (Gingee)க்குப்போய் வள்ளலார் மலைமீது பலபக்கமும் சுற்றித் திரிந்தனர். தேவநாயகம் பிள்ளைக்குப் பெரும்பசியுண்டாகவே செடியின்கீழிருத்தி வள்ளலார் பெரியலட்டும் சொம்புதண்ணீரும் கொடுத்தனர். சொம்பைக் கொடுத்துவிட்டு வரவேண்டுமென்று சிறிதுதூரம் போய்த்திரும்பினர். (சரி-கீர்-88)

கண்ணோயால் மூன்றுமாதம் வருந்திய ஒருவனுக்கு வள்ளலார் ரஸ்தாளி வாழைப்பழம் கட்டச்சொன்னார், கண்ணோய் குணமாகியது. (சரி-கீர்-94)

ஒருநாள் கூடலூர் அப்பாசாமிச்செட்டியார் வீட்டுத்திண்ணையில் வித்வான்கள் பலர்கூடியிருந்தனர். ஒருவித்வான் (A) 'அவனன்றி யோரணுவும் அசையாது' என்றனர். மற்றொரு வித்வான் (B) கைவல்யத்தில் வந்துள்ள "இந்தச்சீவனால் வரும்..." என்னும் பாட்டை எடுத்தோதினர். ஒருமணிநேரம் வாதம் நிகழ்ந்தும் தீர்மானம் ஏற்படவில்லை. வீட்டினுள்ளிருந்த பிள்ளைப்பெருமானைக்கேட்க உட்சென்றனர். வள்ளலார் வித்வான்களை நோக்கி "என்காணும் வாதம் வந்துவிட்டதோ?" என்றுகூறி, உட்கார வைத்துப் பின்வருமாறு விளக்கினர்.

"சாஸ்திரப்பிரமாணம் சொன்னால் உங்களுக்குச் சந்தேகம் நிவர்த்தியாகாது. ஒரு கதை சொல்லுகிறேன் கேளும். தெருவில் நிர்வாண சந்நியாசி ஒருவர்போக, ஒருவன் அவர்க்கு ஒரு சீப்பு வாழைப்பழம் கொடுத்தான். இன்னொருவன் ஸ்திரீகள் இருக்கும் தெருவில் நிர்வாணமாய்ப் போகிறாயென்று கோபித்துக் கல்லால் அடித்தான். மற்றொருவன் இவ்விருவரையும் சாமியாரையும் அழைத்துக்கொண்டு நியாயாதிபதியிடம் சென்றான். சென்று நீதிபதியிடம் இருவரையும் காட்டி 'இந்தப் புண்ணியவான் பழம் கொடுத்தான். இந்தப்பாவி கல்லால் அடித்தான்" என்றான். நீதிபதி சாமியாரை "உம்மையார் அடித்தது" என்று கேட்க, சாமியார் "வாழைப்பழம் கொடுத்தவன் அடித்தான்" என்று கூறினர். நீதிபதி "யார் வாழைப்பழம் கொடுத்தது" என்று வினவ, சாமியார் "கல்லாலடித்தவன் வாழைப்பழம் கொடுத்தான்" என்று விடையளித்தனர். நீதிபதி "[illegible]" என்று கேட்க சந்நியாசி "இட்டுக் கொண்டு [illegible] அடித்தான்" என்று விடையளித்தனர். [illegible]

மயங்கி நீதிபதி "இவர் மேற்படியிலுள்ளவர்" என ஒருவாறுணர்ந்து அடித்தவனைச் சிக்ஷை செய்தார். ஆகையால் இத்தகையார் யாரோ அவர்களுக்கு "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்பது பொருந்தும். அதுவன்றி, பழம் கொடுத்தவன் இவன். கல்லலடித்தவன் இவன் என்று பேதங் கொண்டவர் யாரோ அவர்க்கு "இந்தச் சிவனால் வரும்...என்னும் பாட்டு பொருந்தும்." அப்பால் வித்வான்கள் உண்மை தெளிந்து சமாதானமாயினர். (சரி-கீர்-102-106).

மஞ்சக்குப்பத்திலிருந்து ராமகிருஷ்ணபிள்ளை இரவில் தினமும் கூடலூர்க்கு வந்து வள்ளலாரது பிரசங்கம் கேட்டுத் திரும்புகாலையில் இரவினால் அஞ்சும்போது துணையாக ஒருமனிதன் அவர்க்கு முன்பே ஏகி, உற்றுநோக்கில் அம்மனிதன் மறைந்து விடுவன். (சரி-கீர்-90)

கூடலூர் அப்பாசாமிச் செட்டியார் கிடங்கில் விசேஷமாய்ப் பேயன்வாழை உண்டு. அங்கு பிள்ளைப் பெருமான் சென்றபோது இலையில் உள்ள பாம்பு வள்ளலாரை உச்சியில் தீண்டவே சிறிது இரத்தம் தோன்றியது. விபூதி அப்பினதைச் சிலர் கேட்க, வள்ளலார் "சர்ப்பம் தான் மரணமடையச் சிறிது தீண்டிற்று" என்றனர். அங்ஙனமே போய்ப் பார்த்ததில் சர்ப்பம் இலைமீது மடிந்து கிடந்தது. (சரி-கீர்-91)

அப்பாசாமிச் செட்டியார் வீட்டில் பங்குனி உத்தரத்தில் இரவில் சித்தர் ஒருவர் தோன்றிட புதுவை துரைசாமிப் பிள்ளை உடன் செல்ல, அச்சித்தர் மறைந்தனர். உடனே உட்சென்று பார்க்க லட்டுவைத்திருந்தது. கடலை அளவு பிள்ளைப் பெருமான் வாயில் போட்டுக்கொண்டு "பிட்டு வாணிச்சி கொடுத்தது இப்படித்தா னிருந்ததோ" என வியந்து பலர்க்கும் பங்கிட்டனர். வந்தவர் [illegible] எனத் துரைசாமி பிள்ளை கூறியபோது, வள்ளலார் "அவர் இச்சேரம் காசியிலிருப்பர்" என்று சித்தர் நிலை அறிவித்தனர். (சரி-கீர்-95-96)

திருப்பாதிரிப்புலியூரில் அக்ஷயவருஷத்தில் [illegible] [illegible] பிரமசபை [illegible] பிரசங்கித்தனர். [illegible] வேண்டவே, பிள்ளைப் பெருமான் [illegible] விரும்பி [illegible] வைத்த மகாசபைப்

பொருந்திய பிரம்மசமாஜத்தார் அவர்களுக்கு விக்கிரக ஆராதனை மறுப்பது தகுதியல்ல" என்று பத்திரிகை எழுதித் தந்தனர். விரும்பா விருப்பம் என்பதற்குத் தாவிருப்பம் எனப் பொருள் கொண்டு சிதர நாய்க்கர் பதில் பத்திரிகை யெழுதினர். (விரும்பா விருப்பம் என்பது 'தூங்காமல் தூங்கி' 'சொல்லாமற் சொல்லி' என்பன போன்று நிறைந்த விருப்பம் எனப் பொருள்படும்.) பிறகு 'நடந்தவண்ணம் உரைத்தல்' என்னும் நூலில் குறித்தபடி சிதராயக்கருக்கு வள்ளலார் உண்மை தெளிவித்தனுப்பினர். (சரி-கீர்-92-93)

மஞ்சகுப்பம் தாசில்தார் வெங்கடசுப்பு அய்யர் வள்ளலார் பிரசங்கம் கேட்க வருவர். தாசில்தார் வெளியே செல்லுங்கால் ஒரு சக்கிலி வளைந்த ஊதுகொம்பு இவர்க்கு முன்பு ஊதிக்கொண்டு போவது வழக்கம். அங்ஙனம் நிகழுநாளில் ஒருநாள் அச்சக்கிலி மிகவேகமாய் ஓடிவர நேரிட்டது. பசியால் அவனது தேகம் முழுவதும் நடுங்கியது. அன்றையதினம் ஐயர் பிரசங்கத்திற்கு வந்தவுடன் ஐயரைப் பார்க்கிற வழக்கம்போல் பிள்ளைப் பெருமான் அப்போது பார்க்கவில்லை. சிறிதுநேரம் கழித்துப்பார்த்து "இந்த வாழ்வு எத்தனை நாளைக்கு இருக்கும். கொம்புக்காரனைப் போக வேண்டிய ஊருக்கு முன்னமே அனுப்பி அவ்வூர்க்குச் சிறிதுதூரத்தே ஊதினால் போதாதோ" என்று இரக்கநெறி புலப்படுத்தி வள்ளலார் உடனே அச்சக்கிலிக்குப் பசியாற அன்னமளிக்கச் செய்வித்தனர். (சரி-கீர்-97-98)

ஒருபகல் கூடலூரில் இரிசப்பசெட்டியார் மெத்தையின்பேரில் திருவெழுந்தூர் சுப்பிரமணியன், திருப்பாதிரிப்புலியூர் முத்துவீரன், திருவைந்திரபுரம் பொன்னன் ஆகிய மூன்று நாகசுரக்காரர்கள் பிள்ளைப்பெருமான் திருமுன்பு வாசித்து நமஸ்கரித்தனர். அப்போது வள்ளலார் அவர்களை நோக்கி "நீமணியே, நீமுத்தே, நீபொன்னே" என்றுகூறிச் சந்தோ அருமைபாராட்டி விபூதி கொடுத்தனர்.

ஒருநாள் சேலத்திலிருந்து கூடலூர்க்கு வந்திருந்த வியாபாரியின் பரிசாரகன் [illegible] வள்ளலாரிடம் விபூதிபெற்றுக் குணமடைந்தனன். (சரி-கீர்-101)

இவ்வணம் அன்பர்கள் கூட்டமாகவந்து தங்கள் குறைகளை விண்ணப்பிக்க அவைகளைத் தாம் நீக்கியருளும் நிலையுடையாராய் விளங்குகின்ற காலத்தில், பசியால்வருந்தும் ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னமளிக்க ஒருபொது இடம் தருமச்சாலையாக அமைக்கத் திருவுளங்கொண்டார். அவ்வாறு கட்டப்படும் தரு மச்சாலை நாலுபக்கத்து ஜனங்களுக்கும் போக்குவரவுக்குரிய நடுப் பாங்கில் அமையவேண்டும் என்று கட்டளையிட்டனர். பல அன் பர்கள் பலப்பல இடம் குறித்தனர். ஒருகால் வள்ளலார் தாமே சென்று வடலூர்ப் பெருவெளியில் நின்று இங்கே அமைத்தல் வேண்டும் என்று ஆஞ்ஞாபித்தனர். அவ்விடத்தைக் குறித்ததற் குக் காரணம் சிதம்பரத்தின் நான்குகோபுரங்களும் அவ்விடத்தே நின்று நோக்குவார்க்குத் தரிசனமாதலே என்பது,

* திருவருட்பா - ஆரூர்திருமுறை, நெஞ்சொடுகூறல், 8-ம் பாசுரம்:

> நடிப்பார் வதிதில்லை நற்கோபு ரத்தின்
> அடிப்பார்வை யும்வடக்கே யார்ந்து—கொடிப்பாய
> நின்று வளர்மலைபோ னெஞ்சேபார்த் தாற்றெரியும்
> இன்றெவ் விடத்தெனிலிப் பாட்டு. என்ற பாசுரத்தால்

விளங்கும்.

சிதம்பரம், கூடலையாற்றூர், விருத்தாசலம், திருவதிகை, திரு இரும்பை மாகாளம், திருப்பாதிரிப்புலியூர், தியாகவல்லி முதலிய ஸ்தலங்களுக்கு மத்திய இடமாயும் தென்பெண்ணையாறு, கெடிலநதி, வெள்ளாறு, மணிமுத்தாநதி முதலிய நதிகளால் சூழப் பட்டதாயுமுள்ள வடற் பெருவெளியாய்ச் செல்வார்க்குப் பசிதீர்த் தனுப்புதற்கு வசதியுள்ள தருமச்சாலை உண்டாக்குவதும் காரணமாம். மேலும் நகரவாசனையைவிட்டு ஏகாந்த ஸ்தானத்தி லிருந்து அருணிலையிலேயே திளைக்க வேண்டுமென்று வள்ளலார் கொண்ட பேரவாவுமாம்.

அவ்வடலூரில் பிள்ளைப் பெருமான்மீது அன்பர்கள் எண் பதுகாணியிலும் பட்டாசெய்தனர்.

ஒருகாலத்தில் மின்னலூர்ச் சாலையில் பிள்ளைப்பெருமான் யோகஞ்செய்துகொண்டிருக்கும்போது அம்பலபுரத்தில் வசிக்கும் பாக வதர் வேம்பையர் கண்டு "யார்" என, பிள்ளைப்பெருமான் "நீல

வியாபாரி" என்றனர். சிறிதுதூரம் விரைவாகச்சென்று அவர் கண்ணுக்கு மறைந்தனர். அன்பர்கள் சிலர் நீலம்-மாயை, அஞ்ஞானம், உலகத்திலுள்ள அஞ்ஞானத்தை வாங்கவந்தோம் என்று அத்தொடர்க்குப் பொருள்செய்தனர்.

வேட்டவலம் ஜமீன்தார் அப்பாசாமி பண்டாரியார்க்கு மனைவியர் இருவர். ஒருவரை பிரம்மராக்ஷசி பற்றிக்கொண்டிருந்தது, மற்றொருவருக்கு மகோதரம். இத்துன்பங்கள்நீங்க மந்திரவாதிகள் கூறுகின்றபடி உயிர்க்கொலை பலசெய்தும் குணமாகவில்லை. வள்ளலாரது மகிமையைப் பிறாலறிந்த பண்டாரியார் தக்க முதியோரை வள்ளலாரை அழைத்துவரும்படி அனுப்பி தன் மனத்தில்தோன்றியபடி இரண்டு ஒரேமாதிரியான நாற்காலிகளை அமைத்து அவ்விரண்டில் தான் குறித்த நாற்காலியில் உட்காருவராயின் மஹான் எனத் தீர்மானிக்கலாமென்று எண்ணியிருந்தனர்.

வள்ளலார் வீட்டிற்குள் நுழையத் தெருவாயிற்படியில் வரும்போதே பிரமராக்ஷசி பிடித்தமனைவியார் வந்துவணங்கி "உத்தரவு கொடுக்கவேண்டும் நான்போய் வருகிறேன்" என்று கூறி விபூதி பெற்றனர். வள்ளலார் உட்சென்று பண்டாரியார் மனத்தில் எண்ணிய நாற்காலியில் அமர்ந்தனர். பண்டாரியார் இவரே உள்ளபடி மஹான் எனத்தெளிந்து தன் துன்பங்களை முறையிட்டனர். வள்ளலார் அவரது இளையமனைவியர்க்கு மூன்று வேளை விபூதி கொடுத்துக் குணமாக்கினர். அன்றியும் அக் குடும்பத்தாரைச் சுத்த போஜனமுடையாராய்ச் செய்தனர். (சரி-கீர்-111-114)

அங்குள்ள பிடாரனொருவனுக்குச் சம்பளம்கொடுத்து ஊரிலுள்ள பாம்பு, தேள்முதலிய விஷஜீவஜெந்துக்களைப் பிடித்துக் கொண்டுபோய் ஊர்க்கு வெளியில் விட்டுவரும்படி ஆக்யாபித்தனர். காளிபூசைக்கு வழக்கமாகக் கொடுக்கும் பலியைமாற்றிப் பால்பொங்கல்செய்யக் கட்டளையிட்டனர். (சரி-கீர்-116)

கூடலூர்-தேவநாயகம்பிள்ளை, தொழூர் - வேலாயுதமுதலியார் முதலிய அன்பருடன் வள்ளலார் விருத்தாசலம்சென்று [illegible] "ஆறுமுக..." எனும் தொடக்கத்தைப் [illegible]. திருமுதுகுன்றத்தில் [illegible] ஐயா [illegible] [illegible] [illegible] வேண்டும் [illegible] [illegible]

பார் இருந்தனர். வள்ளலார் அவர் எண்ணப்படி அங்குச்சென்று அவர்க்குச் சட்சுதீக்ஷைசெய்து அழைத்துக்கொண்டுவந்து வடலூரில் ஓலைக்குடிசையொன்றில் அமர்த்தினர். சத்திய தருமச்சாலையில் பிரசங்கஞ்செய்கிற காலங்களில் கல்பட்டு ஐயாவுக்குப் பயன்படக்கூடிய விஷயம்நடக்கிற சந்தர்ப்பங்களில் அவரைப்பிரசங்கத்துக்கு அழைப்பர். (சரி-கிர்.117-118)

வடலூரில் இரண்டுபிராமணர்மீது குற்ற விசாரணை நடக்கிறபோது அவர்கள் வள்ளலாரிடம் விண்ணப்பிக்க அவர்கட்கு விபூதி கொடுத்து விசாரணைத் தலத்திற்கு உள்ளே போகும்போது இவ்விபூதியைத்தரித்துக்கொண்டு போம்படிகூறினர். அங்ஙனமேசெய்யக் குற்றம் தள்ளப்பட்டது. (சபாபதி குருக்களுக்கு வள்ளலார் வரைந்த கடிதத்துட் குறித்ததிதுவே.)

சத்திய தருமச்சாலையில் பிரபவ௵ வைகாசி௴ 11௳ குருவாரத்தன்று பிரவேசமாகி சன்மார்க்க விளக்கத்தின் முதற்பிரிவாகிய ஜீவகாருண்ய வொழுக்கத்தின் முதற்பாகத்தை வள்ளலார் வரைந்து தந்து வெங்கடசுப்புத் தீக்ஷிதரைக்கொண்டு பூசைசெய்து வாசிக்கச் செய்வித்தனர். சமரசவேத பாடசாலை ஸ்தாபித்தனர். நாளொன்றுக்குப் பதினாயிரம்பேர்க்கு அன்னதானம் மூன்றுநாள் நடைபெற்றது. அவ்வமயம் வள்ளலார் தமது அன்பர்களுக்குச் சத்தியதருமச்சாலையில் பசித்துத் தவித்துவந்தோர்க்கு என்றும் தடையின்றி அன்னம் அளித்திடும்படி கட்டளையிட்டனர். எந்நேரமும் அடுப்பு புகைந்துகொண்டேயிருக்கவேண்டும் என்றருளியவண்ணம் நடந்து வருகின்றது. வள்ளலார் கட்டளைப்படி சாலையை வலம்வந்தும் நோய்களைப் போக்கிக்கொண்ட நோயாளிகள் பலர். (சரி-119-121)

வள்ளலார் சித்தநூலின் உண்மையை விளக்கிக்காட்டச் செம்பு, ஈயம் முதலிய லோகங்களை, ரஸவாதஞ்செய்து, குளிகையும், ஔடதமும் முடித்துக்காட்டிக் கிணறுகளிலும், குளங்களிலும் எறிவர். வள்ளலார் இவ்விதம் பொன்செய்து காட்டும்போது உபயோகித்த சில வஸ்துக்களை உணர்ந்த அம்பாபுரத்து வேம்பய்யர் பிறர்பார்க்க எடுத்துக்கொண்டுபோய் அருந்திவைத்து ஊது [illegible] புகைமோதி இரண்டுகண்களும் அவிந்தன. சில [illegible] குணமடையாது, வள்ளலாரிடம் வந்து நடந்ததுண்மை [illegible] வள்ளலார் [illegible]கொண்டு அய்யர்கண்

கனை அலம்பி கண்கள்தெரியும்படி அனுக்கிரகித்தனர். (சரி-கீர்-124-125)

புதுச்சேரிக்கும் மஞ்சகுப்பத்திற்கும் இடையில் சுங்கம் வசூல்செய்யும் ரெட்டிச்சாவடியில் அமீனு உத்யோகத்தி லிருந்த மாயூரம் சிவராமய்யர் பொருள்மிகுதியாகவிருந்தும் பிள்ளை இல்லாக்குறையால் மனம்வருந்தினர். மனைவிக்கு கிரகதோஷம்உண்டு வடலூர்க்குவந்து வள்ளலாரிடம் விண்ணப்பித்தனர். வள்ளலார் "பண் ஊருட்டிக்கும், வடலூருக்கும் மத்தியில் பெண்ணையாற்றின் கரையிலுள்ள கன்றகோட்டைப் புலவனூரில் ஒருசத்திரம் கட்டுங்கள். ஆண்பிள்ளைபிறக்கும்" என்று அருளினர் அங்ஙனமே நிகழ்ந்தன. (சரி-கீர்-127-128)

சித்திரைமாதவெயிலால் தருமச்சாலைக்கு வந்தவர்களிற் பலர் மழையில்லாக்குறையால் துன்புற்றதைத்தெரிந்த வள்ளலார் ஒரு சொம்பு தண்ணீர்கொண்டு வரச்சொல்லித் தம்காலில் விடச்சொன்னார். சிறிதுநேரத்திற்குள் நான்குசெவி மழைபெய்தது.

இதைக்கேட்ட புதுப்பேட்டை ஊரிலுள்ளார்வந்து வள்ளலாரைத் தம்வூருக்கு அழைத்துக்கொண்டுபோய் அங்கு உள்ள கிணறுகள் இரண்டில்நீர்சுவையும்சுரப்பும் அற்றுப்போயிருத்தலைக் காட்டிக் குறையிரந்தனர். உடனே ஐந்துகுடந்தண்ணீர் எடுத்துத் தமது சிரசில்விடக்கட்டளையிட்டனர். உடனே பெருமழைபொழிந்தது. இன்றைக்கும் அக்கிணறுகளில் நீர்சுவையாயும் மிகவும் மேல்நீராயும் இருக்கிறது.

இவ்வூரிலேயே இரத்தினம்மாள் வீட்டுக்கு எதிர்வீட்டில் நெருப்புப் பிடிக்க வள்ளலார் தமது வேஷ்டியால் வீச நெருப்பு அடங்கிவிட்டது அன்பர் ஒருமூங்கில் புதரை தருமச்சாலை உபயோகத்திற்கு அடியோடே வெட்டிவிட அது மறுபடியும் தழைத்தது; நாளைக்கும் அவ்வூரார் தருமச்சாலைக்கு அடிமையாய் வேண்டியபணி செய்துவருகின்றனர். (சரி-கீர்-172-174)

ஒருநாள் மாலையில் பெருமழை பெய்தபோது வெளியில்வர, கூடியிருந்தவர் வத்திரங்கள் முற்றும் நனைந்தன வள்ளலார் மீது ஒருதுளியும் படவில்லை.

நயனுசெட்டியார் வேண்டுகோளுக்கிணங்கி வள்ளலார் அவர் பக்கம்சென்று அவர் மனைவியின் [illegible] விபூதி கொடுத்தனர். அவர்க்குள்ள சுவாசத்தின் [illegible]

ஒருகுவளையில் மணலிட்டு தண்ணீரிட்டுச்சிறிதுநேரம்கையால் மூடி வைத்திருந்து வீதியிலெறிய, பொன்துகளாய் விழுந்தது. இச்செய்கையற்றோர் மலமும் பொன்னுமென்று அவர்கொள்கையை மாற்றினர். (சரி-கீர்-135)

விருத்தாசலம் வக்கீல் வெங்கடேசய்யர் என்பவர் ஞாயிற்றுக் கிழமைகளில் காலையில் வடலூருக்குவந்து பிரசங்கம் கேட்டுவிட்டு இரவிற் போய்விடுவர். வள்ளலார் அனுக்கிரகத்தால் அவர் வடலூரிலேயே தங்கினர்.

தருமச் சாலையில் ஒருநாள் இரவில் அன்னமிடும் சமயத்தில் திடீரென நூறுபேர் வந்தனர். வேலூர் சண்முகம் பிள்ளை என்பவர் வள்ளலாரிடம் சமையலான உணவு மிகச்சிறிதே உள்ளது என அறிவிக்க, வள்ளலார் உடனே எழுந்து 'பிச்சு இலைபோடும்.' என்று கூறித் தமதுகையால் யாவர்க்கும் பரிமாறினர். சாப்பிட்ட பிறகும் முதலில் சமைத்த அன்னம் செலவாகாமல் இருந்தது. (சரி-கீர்-199)

ஒருகால் திருவாதிரை தரிசனத்திற்குச் சிதம்பரம் சென்றபோது வழியில் குன்மநோயால் வருந்திய ஒருவன் வணங்க அவனுக்குத் துளசியும் நீரும் கொடுக்கக் குணமாயது.

ஒருகால் சாஸ்திரிகள் நால்வர் சாமவேதத்தில் சில சந்தேகங் கேட்க வடலூர்வந்து சேருகிறபோது அவர்களுக்குச் சந்தேகம் நிகழ்ந்த பாகத்தையே வள்ளலார் அச்சமயம் பிரசங்கித்துக் கொண்டிருந்தனர். சாஸ்திரிகள் உண்மைதெளிந்து இன்பக்கடலில் மூழ்கினர்.

திருப்பாதிரிப் புலியூர் இயற்றமிழாசிரியர் சிவசிதம்பர முதலியார் ஒருபதிற்றுப்பத் தந்தாதிபாடி வள்ளலாரது சாற்றுகவிபெற விரும்பினர்.

பின்னைப் "பெருமான், முதலியார் பாடியபாக்கள் சிலவற்றைத் தள்ளிப்பார்த்து இன்னின்னசொல் இன்னின்ன இடங்களில் இருந்தால் நன்றாயிருக்கும் என்று அன்புடன் குறிப்பித்தனர். முதலியார் வள்ளலாரது பெருமை உணர்ந்து பாக்களைத் திருத்திக் கொண்டனர். வள்ளலார் சாற்றுகவி யளித்தனர். அது கிடைக்க [illegible]. ([illegible]-189-140)

தாசில்தார் முருகேசபிள்ளை மாமனாராகிய மிராசுதார் மணலூர் நடராஜபிள்ளை தமது புன்செய் நிலங்களை நன்செய் நிலங்களாக்க அதிகாரிகளுக்குப் பலமனு கொடுத்தும் பயனிலதாய்க் கிடக்கவே வள்ளலாரிடம் விபூதிபெற்றுச் சென்றபின் நன்செய்கையாகநேர்ந்தது. (சரி-கீர்-175)

விருத்தாசலத்திலுள்ள ஓரன்பர் வள்ளலார்க்கு அமுதளிக்கும் புண்ணியம்பெற நெடுநாள் ஆசைகொண்டிருக்க ஒருநாள் வள்ளலார் திடீரெனச் சென்று, அங்குள்ள பருப்புத் துவையலும் ரச அன்னமும் உண்டு மகிழ்ச்சிதந்தனர். (சரி-கீர்-176)

வள்ளலார் சென்னை, புதுச்சேரி, சிதம்பரம், கூடலூர், கருங்குழி ஆகிய இவ்விடங்களில் விளங்கிய காலத்தில்பாடிய பிரபந்தங்களையும், பதிகங்களையும் சிலர் தனித்தனி சிறுபுத்தகங்களாய் அச்சிட்டுப் பிழையாய் வழங்குவதைக்கண்டு, சமரசவேத சன்மார்க்க சங்கத்தை யபிமானித்த புதுவை - வேலுமுதலியார், சிவானந்தபுரம் - செல்வராய முதலியார், இறுக்கம் - இரத்தின முதலியார் முதலிய அன்பர்கள் தொழுவூர் - வேலாயுத முதலியாரை அப்பாடல்களை ஒன்றுய்த்திரட்டி அச்சிடும்படி வேண்டினர். அங்ஙனமே உபயகலாநிதிப் பெரும்புலவராய முதலியார் அவ்வண்ணம் திரட்டி நான்கு திருமுறைகளாக வகுத்துத் திருவருட்பா எனும் பெயருடன் அக்ஷயவருடத்தில் அச்சிட்டு வெளியிட்டனர்.

அப்பதிப்பில் திருவருட்பா வரலாறு ஒன்றுமுதலியார் இயற்றிச்சேர்த்தனர். அன்றியும் 'இனி யச்சிற் பதிப்பிக்கப்படுபவை' எனப் பல பிரபந்தங்களைக் குறித்தனர். அவற்றுட்சில பின் அச்சாயின. மற்றவையாகிய கலாந்தவிளக்கம், யோகாந்தவிளக்கம், போதாந்த விளக்கம், வேதாந்தவிளக்கம், சித்தாந்தவிளக்கம், அண்டவிளக்கம், பிண்டவிளக்கம், சுத்தசிவராசியம், பரமசிவராசியம், மந்திரக்கொத்து, மகாவாக்கியவகை, பொதுவேதம், தத்துவவிருத்தி, பிரகிருதிவிருத்தி, இயல்வகை, அளவைவகை, ஞாயவகை, இலக்கணவிருத்தி, தருக்கவிருத்தி, தென்மொழிவிளக்கம், வடமொழிவிளக்கம், கலைமரபு மூலிகை ஔஷதஅகராதி முதலிய பலப்பல பிரபந்தங்கள் எப்போது வெளிவருமோ அறியேன். அச்சிட்ட புத்தகத்தில் திருவருட்பிரகாச வள்ளலார் என்று பிள்ளைப் பெருமானுக்கு வழங்கியதை வள்ளலார் பார்த்து உபயகலாநிதியை நோக்கி "பிச்சு, என்னாலும், திருவருட்பிரகாச வள்ளலாரென்று

டம்மையார் போடச்சொன்னது'' என்று அதட்டிக்கேட்க, நடுநடுங்கினராய் வாய்புதைத்து வள்ளலாரது திருவடிகளையே சிந்தித்தவண்ணமாய் நின்றனர். ஐந்துநிமிஷம் சென்றபிறகு, "திருவருட்பிரகாசவள்ளல் (பதி) ஆர் என்னும் சிதம்பரம் - இராமலிங்க பிள்ளை'' என்று பிரித்துக்காட்டித் தமது அடியார்களுக்கு அறிவுறுத்தினர். சுத்தசன்மார்க்க லக்ஷியானுபவப் பெருக்கத்தில் மக்கள் பக்குவமடையும்வரையில் ஏனைய பிரபந்தங்களாகிய 6-ந்திருமுறை அச்சிடவேண்டாம் என்றும் கட்டளையிட்டனர் (சரி-கீர்-131-132)

ஒருகால் மஞ்சகுப்பம்கோர்ட்டு சிரஸ்தாதார் இராமச்சந்திர முதலியார் என்பவர் வடலூர்க்குவந்து வள்ளலாரைத் தம்மூருக்கு வரும்படிவேண்ட, இரவில் வண்டியில் புறப்பட்டுக் குள்ளஞ்சாவடியருகே போகும்போது இரண்டு திருடர்கள்வந்து அஞ்சாமல் வண்டியைநிறுத்தச் சொல்லினர். வண்டிக்காரனும் சேவகனும் பயந்து முந்திரித்தோப்பில் மறைந்தனர். திருடர்கள் பின்புறம்வந்து வண்டிவிட்டிறங்கச் சொல்ல, இறங்கினவுடன் முதலியாரது கையிலிருந்த வைரமோதிரம் கழற்றும்படி அதட்ட, வள்ளலார் "அவசரமோ'' என, திருடர்கள் தடியாலடிக்கக் கைதூக்க, கை அங்ஙனமே அசையாது நின்றுவிட்டது. திருடர்களுக்குக் கண்பார்வையும் நீங்கியது. அவர்கள் வருந்தவே, வள்ளலார் 'பிச்சு' என்றவுடன் அவர்கள் சுகப்பட்டு வணங்கிச்சென்றனர். (சரி-கீர்-155-156)

ஒருநாள் இருண்டபின்னும் எட்டுமணிவரையும் விளக்கில்லாமலே வள்ளலார் எழுதிக்கொண்டுவர, வந்தவர்கள் விளக்கில்லையேயென, 'ஆமாம் கொண்டுவாருங்கள்' என்றனர், (சரி-கீர்-162)

சொங்கராயபாளயத்தி லிருந்துவந்த 96-வயதுள்ளகிழவி நடுக்கம் பெரிதும் உடையளாகி வள்ளலாரைத் தரிசிக்கவே அந்நடுக்கம் நீங்கியது. (சரி-கீர்-169)

புதுச்சேரி கிருஷ்ணசாமி முதலியார் வீட்டில் ஓர்பெண்ணை பிரமராக்ஷசி பிடித்துக்கொள்ள,வடலூர்க்குச் செல்லகுணமாயது.

குறிஞ்சிப்பாடி ஹெட் விஜயராகவலு நாயுடு பிறர்வைத்த சூனியத்தால் மெலிவடைந்து வள்ளலாரிடம் குறையிரந்து கூற, ஸ்ரீராமபாசப்பதிகம் படித்தொகைக்கப் பாராயணஞ்செய்யக் குணமடைந்தனர். (சரி-கீர்-168)

மேற்கிலுள்ள செவலைக்கிராமத்திலிருந்து பன்னிரண்டுவருடமாகக் குன்மநோயால் வருந்தியசெட்டியார் ஒருவர் வள்ளலாரைத் தன்பிணிநீங்க வணங்கிக்கேட்க, வள்ளலார் சுவாமியைத்துதிக்கும்படி கூறினர். அதற்கு அச்செட்டியார் "சுவாமி தேவரீர் தான்" என்று தன் உறுதியை வெளியிடவே, வள்ளலார் விபூதி கொடுத்துக் குணமாக்கினர். (சரி-கீர்-178)

பிள்ளைப்பெருமானர் அன்பர்கள் வேண்டிக்கொடுக்கும் சகலாத் பாதரக்ஷையை உபயோகிப்பது வழக்கம்.

வள்ளலார் சுத்ததேகமுடைய 'ஞானியின்' பாதரக்ஷயில் லிங்கம்வைத்தால் நெருப்புக்கு நிற்குமெனக்கூற, சபாபதிகுருக்கள் வள்ளலார் உபயோகித்த பாதரக்ஷயில் 4-பல லிங்கத்தை வைத்து ஒருபட்சம் வைத்திருந்துபார்க்க அவ்வண்ணமாயிற்று.

ஒரு கர்மசித்தன்வந்து வள்ளலாரிடம் "சித்துப் புருஷனயிருந்தால் ரஸத்தைக் கட்டக்கூடுமல்லவா" என்றுகூற, வள்ளலார் ரஸத்தை உள்ளங்கையில்விட்டு மூடிச் சிறிதுநேரங் கழித்துக் கீழேவிட ரஸமணியாக ஆய்விட்டது. அச்சித்தர் வந்தனஞ்செய்து "எல்லாஞ் செய்யவல்லவர்" எனக்கூறிச்சென்றனர். (சரி-கீர்-181)

ஆடூரில் வேதாகமக்கடலைத் தமது பேரறிவால் கடைந்தெடுத்த சிவஞான அமுதருந்தும் சாதகத்திலிருந்து பலபிரபல சாஸ்திரிகளால் மதிக்கப்பெற்று விளங்கிய பிரம்மஸ்ரீ, சபாபதிசிவாசாரியார் அவர்களை நிருபத்தால் வரவழைத்துத் தனிமையில் காயத்திரியின் மெய்ப்பொருளை விளக்கி இருக்கச்செய்தனர்.

கூடலூர் தேவநாயகம் பிள்ளையின் புதல்வர் ஐயாசாமிபிள்ளை வியாதியால் கஷ்டப்பட்டு உயிர்க்குக் கஷ்டம் வரும்போலிருந்தது. தேவநாயகம் பிள்ளை இரவில் மிகவருந்தியிருக்கிற தருணத்தில் வடலூரில் பிரசங்கஞ்செய்து கொண்டிருந்த வள்ளலார் அத்தருணமே சென்று கதவைத்தட்ட தேவநாயகம்பிள்ளை கதவு திறந்தனர். வள்ளலார் உட்சென்று விபூதிதடவி கண்விழிக்கச்செய்து சிறிது நேரத்திற்குள் உட்காரச் செய்துவிட்டு உடனே அவ்விடம் விட்டு நீங்கினர். மறுநாட் காலையில் தேவநாயகம் பிள்ளை ஐயாசாமிப் பிள்ளையை வண்டியில் அழைத்துக்கொண்டு வடலூர்வந்து சேர்ந்தனர். தருமச் சாலையில் பிரசங்கம் செய்து கொண்டிருந்த வள்ளலார் வெளியில்வந்து விபூதிகொடுத்து "ஆண்டவன் செய்த

திருவிளையாட்டே ஆதலால் அதை வெளியிட வேண்டாம்" என்றுகூறி உட்புகுந்தார். இரவுமுழுதும் வள்ளலார் அன்று சாலையிலே, பிரசங்கஞ்செய்து கொண்டிருந்த செய்தியை அறிந்து அவரது சிவானுபவப் பெருக்கை வியந்து துதித்தனர். அப்பால் வேட்டவலம் ஜமீன்தார் முதலிய அன்பர் பலரும் அங்கேயே குடியிருக்கலானார்கள். (சரி-கீர்-185-186)

ஞானசபை பிரதிஷ்டை செய்தது.

வடலூரில் நாற்பதுகாணி அளவுள்ள இடத்திற்கு உத்தர ஞான சிதம்பரம் எனத் திருவருளியலால் நாமஞ்சூட்டி அந்தச் சாலை வெளியில் பிரஜோற்பத்தி௵ ஆனிமாதந் தொடங்கித் தைமாதத்திற் குள்ளாக அஷ்டகோணமாகத் தாமரைபுஷ்பம் போன்ற திவ்ய ஆகிருதியில் ஒரு ஞானசபைகட்ட வள்ளலார் திருவுளங் கொண்டார். பிறகு அன்பர்கள் பலவாறுவற்புறுத்த சபைநிர்மாணப்படம் வள்ளலார் திருக்கரத்தாலேயே எழுதித்தந்தனர். 'இந்நிர்மாணப்படம்' இரண்டு மூன்று வருடத்திற்கு முன்னும் வடலூரில் காணப்பட்டது. இப்போது காணப்படவில்லை.) அச்சபை ஒரு அருமையான புதிய மாளிகைபோல் விளங்குகிறது. திருவம்பலத்தைத் திருமாளிகை யென்றும் திருவம்பல முடையாராகிய நடராஜபதியைத் திருவளரொளி யென்றும் தெய்வச் சேக்கிழார் ஆங்காங்கு கூறியுள்ளதை ஓர்ந்துணர்தல் வேண்டும்.

அங்ஙனம் சபை கட்டடவேலை தொடங்கினவுடன் வள்ளலார தருமச்சாலையை விட்டு நீங்கி வடலூர்க்கு இரண்டுமைல் தூரத்திலுள்ள மேட்டுக்குப்பம் எனும் மேட்டில் சிறு குடிசை ஒன்றில் தனித்து இருக்கும் நிலையுடையராயினர்.

ஒரு நாள் கண்ட்ராக்டர் ஆறுமுகமுதலியார் சபையின் கொடிமரத்திற்கு வேண்டிய மரம்வாங்கச் சென்னைக்கு ரெயில் அக்காலத்தில் இல்லாமையால் தபால் வண்டியில் வந்தனர். மரவாடி (மரத்தொட்டி)க்குச் சென்று விலைவிசாரித்ததில் அதிகவிலையா யிருக்கவே வடலூர்க்குத் திரும்பிச்சென்று வள்ளலாரிடம் விண்ணப்பிக்க "நீர் போயிரும் நான் வருவேன்" என்று கூறியனுப்பினர். அங்ஙனமே உடனே முதலியார் சென்னைக்குவந்து மரவாடிக்குச் சென்றபோது எம்மரம் சபையின் கொடிமரத்திற்குப் பொருத்தமோ அம்மரத்தின் மீது வள்ளலார் உலாவிக்கொண்டிருந்ததைக்

கண்டார். உடனே அதிசயித்த உணர்வினராய் மாத்தின் விலை கேட்டவுடன் கடைக்குரியார் பட்டியைக் காட்டினர். மாம்வாங்கியபின் வள்ளலாரைத் தன்வீட்டிற் கழைத்துவர எண்ணியிருக்கிகையில் 'நீர்போய்வாரும்' என்று முதலியாருக்கு உத்தரவு கொடுத்துவிட்டுத் தாம் அதேக்ஷணத்தில் வடலூர்க்குச் சென்றனர். ஆறுமுக முதலியார் வடலூர்க்குச் சென்றபின்பு அங்கு அதே காலத்தில் வள்ளலார் வழக்கப்படி பிரசங்கஞ்செய்து கொண்டிருந்தனர் என்று அன்பர்களால் அறிந்து வள்ளலாரிடம் பணிந்து நின்றபோது வள்ளலார் "இது ஆண்டவன்செயல் வெளிப்படுத்த வேண்டாம்" என்று கட்டளையிட்டனர். (சரி-கீர்-166)

கட்டடவேலை நிறைவேறுங்காலத்தில் பல அற்புதங்கள் நிகழ்ந்தன.

ஞானசபையில் அமைப்பதற்குச் சென்னையிலிருந்து ஐந்தடி உயரமுள்ள சீமைக் கண்ணாடியை வரவழைத்து 'சித்திவளாகம்' எனப் பெயர் வாய்ந்த அக்குடிசையில் வைத்திருந்து ஒரு மண்டலம் பூஜை செய்தனர். அதன் பின்பு சபாபதி சிவாசாரியரைக் கொண்டு அதையும் திருவிளக்கு ஞானசபையில் வைத்து அவைகளுக்குச்செய்யவேண்டிய பொதுவும் சிறப்புமான பூஜைகளின் விவரங்களை அவர்க்கு உணர்த்தினர். வள்ளலார் தாம் கூறிய விவரப்படியே முதல்வருடத் தைப்பூச தரிசனம் அன்பர்களுக்குச் செய்வித்தனர். (சரி-கீ-208-212)

மாதந்தோறும் பூச நக்ஷத்திரத்தில் ஞானசபையைத் தரிசித்தால் பிணி முதலியனவாரா. தைமாதத்தில் வரும் பூசம் மிகவும் சிறப்புடையது. அண்டபிண்ட காட்சியை விளக்கும் அந்தப் பூசத் தரிசனத்தை ஒவ்வொருவரும் கண்டு களித்தால் இஷ்டசித்திகளைப் பெறுவர் என்பது இன்றும் உள்ளபடியே யன்றோ. இத்தகைய தைப்பூசதினத்தில் தரிசனஞ் செய்தால் தேகம் முச்சித்தியடையும். (சரி-கீ-211)

அத்தைப்பூசத்தன்று வடலூர் ஞானசபையில் அமைந்துள்ள பெரியதோர் கண்ணாடியின் எதிரில் ஜோதியாகிய திருவிளக்கு எரிந்துகொண்டிருக்கிறது, அச்சோதியைத் தரிசிப்பதற்குத் தடையாயமைந்துள்ள திரைகள் ஏழும் ஒவ்வொன்றாக நீக்கப்பெற்றால் ஜோதிதரிசனம் கிடைக்கிறது. ஆன்மப் பிரகாசத்தை மறைக்கும் மாயா சக்திகளாகிய ஏழுதிரைகள் வருமாறு:—

கறுப்புத்திரை-மாமாயை. நீலத்திரை-மாயாசக்தி, பச்சைத்திரை-கிரியாசக்தி, செகப்புத்திரை-பராசக்தி, பொன்மைத்திரை-இச்சாசக்தி, வெண்மைத்திரை-ஞானசத்தி, கலப்புத்திரை - ஆதிசத்தி, பிண்ட ஒளி-அண்ட ஒளி, ஆன்ம ஒளி-அக்கினி ஒளி, ஜீவ ஒளி-சூரிய ஒளி, மன ஒளி-சந்திர ஒளி, கரண ஒளி - நட்சத்திர ஒளி.

திசைகளுள் கிழக்கும் வடக்குமே சிறந்தன. கிழக்குத்திசை தேவர்களுக்கு உரியது. வடக்கு உருத்திரமூர்த்திக்கு உரியது. தெற்கு பிதிர்களுக்கு உரியது. மேற்கு மானிடர்களுக்கு உரியது. போககாமிகள் கிழக்குத் திசைநோக்கியும் மோக்ஷம் விரும்புவோர் வடக்குத்திசை நோக்கியும் ஜெபதபஞ் செய்வது நியாயம். ஆகவே சூரியன் வடதிசையில் சஞ்சரிக்கின்ற உத்தராயண காலம் விசேடமானது. அப்போது சூரியன் விசேஷப் பிரகாசத்துடன் விளங்குகிறான். உத்தராயணத்தில் தைமாதம் முதல்மாதமாதலாலும் தேவர்களுக்கு அது உதயகால மாதலாலும் சிறப்புடையது. தைமாசத்திய புஷ்பநட்சத்திரத்தில் நடராஜப்பிரபு வியாக்ரமபாதருக்குத் தரிசனம் அருளியது. (பௌர்ணிமை வருகிற நட்சத்திரத்தின் பெயரால் பெரும்பாலும் மாசங்கள் பெயரடைகின்றன) 'தைப்பூசங் காணுதேபோதியோ பூம்பாவாய்' என்று திருஞான சம்பந்த பரமாசாரிய பரம்பொருள் ஓதியிருப்பதை உணரவேண்டும்.

பிண்டசித்திக்குரியது சந்திரன் நாள். தைமாதத்தில் கடகலக்கினத்தில் புனர்பூசம் பூசம், ஆயிலியம் என்பவைகளுள் நடு நட்சத்திரமாகிய பூசத்தில் சந்திரன் பூரணமாய் தன்வீட்டில் பிரகாசிக்குங் காலத்தில் கடவுளை வழிபடில் தேகசித்தி உண்டாகும் என்பது ஆன்றோர்கொள்கை.

"உடம்பாரழியில் உயிரா ரழிவர்"

என்றும் "உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்" என்றும் திருமூலரும்,

"அறந்தானியற்றும் அவனிலும் கோடி" என்று பட்டினத்தடிகளும்,

"தேகம் யாதேனும் ஒருசித்திபெறல் ஜீவன்முக்தி
பாருநெறி நல்லநெறி ஐபராபரமே"

சித்திகள் : உருவச்சித்தி-(சுத்ததேகம்), அருவச்சித்தி-(ஞான தேகம்), உருவருவச்சித்தி - (பிரணவதேகம்)

"முத்தியிலும்தேகமிசை மூன்றுவித சித்திபெற்றோர்
எத்தனைபே ரென்றுரைப்ப தெந்தாய் பராபரமே" என்றும்,

"உலகநெறிபோற் சடிலமோய உயிர்முத்தி
இலகுமெனல் பந்தவியல்பே பராபரமே"

என்றும், "இன்னும் பிறப்பதற்கிடம் என்னில்" என்றும் திருவருட் பெருஞ் செல்வராகிய தாயுமானாரும்,

"கூகாவென மக்கள்கூடி அழாவகையே" என்று அருணகிரிநாதரும்,

வள்ளலார் மணிவாசகரைத் துதிக்குங்கால் "மன்புருவ கடு முதலா" என்ற பாட்டில், அன்புருவம் (சுத்ததேகம்) அருளுருவம் (பிரணவதேகம்) இன்புருவம் (ஞானதேகம்) என மூவகைச் சித்திகளைக் குறித்தலுங்காண்க.

"ஒவுறுத்துயர்..." "பொத்திய மலப்பிணி" "சாகாதகல்வியே" "மெய்யுணர்ந்த வாதவூர்மலையை..." "கருவெளிக்குட்புறனாகி..." "கற்பூரமணக்கின்றது என்மேனி முழுதும்" "திருக்கதவந் திறவாயோ" முதலிய பாசுரங்களால் திருவருட் பிரகாச வள்ளலாரும் கூறியுள்ளதை ஓர்ந்துணர்க.

பெருங்கூட்டத்தில் காகிதம் ஆடுவாருட்சென்று பிள்ளைப்பெருமான் ஆடுவதாக நடித்தும், சொக்கட்டான்காய் ஆடுவதிலும் நடித்து, சதுரங்கம் ஆடுவோருடன் நடித்தும் செயமடைந்தனர். அதனால் விளையாட்டை நிறுத்தினார்கள்.

சென்னையிலிருந்த காலத்தில் ஒரு ஏழைக்குடும்பக் கிறிஸ்தவருக்குத் தினம் இரண்டு ரூபாய் வெள்ளி ஆகும்படி கற்றுக்கொடுத்தார். ஆசை அளவுபடாதாகவே அவர் பொன்செய்ய எண்ணங்கொண்டு வடலூருக்குவந்து மௌனமாய் சந்நிதி சமீபத்தில் நிற்க வள்ளலார் அக்கிறிஸ்தவர்செய்த வெள்ளியில் அமைந்த பூண்கட்டிய தடியைவாங்கி வெள்ளிப்பூணைத் தட்டி எடுத்துத் தம் கையில் ஐந்து நிமிஷம் வைத்திருந்து தங்கமாகக் காட்டித் தரும சாலைக் கிணற்றில் எறிந்து "போய்வாரும் எல்லாம் சித்தியாகும்" என்றனுப்பி விட்டனர். (சரி-சீர்-190-191)

சென்னைக்குத் திரும்பிவந்து முன்போல் வெள்ளி செய்யத் தொடங்கியபோது அது வெள்ளி ஆகவில்லை.

வடலூரில் சன்மார்க்க பாடசாலைவைக்க எண்ணி வள்ளலார் படித்தவர்களைக் கூட்டித் தொழுவூர் வேலாயுதமுதலியாரை அவர்களுக்கு உபாத்தியாயராக அமைத்துத் திருக்குறள் பாடம் நடத்தக் கட்டளையிட்டனர். மூன்றுமாத மாகியும் மூன்றதிகாரம் நடவாமையால் படிப்போர்கள் வள்ளலாரிடம் குறைகூற, வள்ளலார் "மூடமுண்ட வித்வானைக் கூப்பிடும்" என்றுகூற, முதலியார் வந்து வாய்புதைத்துப் பின்புறத்தே கைகட்டித் தூசஒதுக்கி நிற்க, வள்ளலார் 'பிச்சு மூன்றுமாதமாகியும் மூன்று அதிகாரந்தானும் நடக்கவில்லையாம்; பாடசாலை வேண்டாம். வித்வான்களே! உங்களுக்குத்தானுகவே கல்விவரும்' என்று கூறிப் பாடசாலையை நிறுத்தி விட்டனர் (மூடமுண்ட வித்வான் என்பதற்குச் சிலர் பிள்ளைப்பெருமான் தம் பேச்சைக் கேட்டு முதலியாரை மூடம், முண்டம், வித்வான் எனத்திட்டினர் என்று கொண்டார் போலும், மூடம்-அறியாமையை-உண்ட-விழுங்கிய வித்வான் என்பது கருத்து. (சரி-கீர்-203-204)

ஒருநாள் வித்வான் ஒருவர் வள்ளலாரிடம் திருக்குறளில் முதற்குறளிலேயே 'முதற்றே யுலகு' என்பதில் ஏகாரம் ஈற்றசையாயின், 'கடுகைத் துளைத்தேழ் கடலைப்புகட்டி...' 'என்று கூறியது எங்ஙனம் பொருந்தும்' என்று கேட்க, வள்ளலார் 'முதல்தே எனப் பிரித்தால் தோஷமென்ன' என்று குறிப்பித்தனர்.

ஆடூர் சபாபதி குருக்கள் ஒருநாள் தன் கூரைவீட்டுத்திண்ணையில் ஒழிவிலொடுக்க நூலைப்படித்துக் கொண்டிருக்க, வள்ளலார் வந்து 'என்ன புத்தகம்' என்று கேட்க' 'ஒழிவிலொடுக்கம்' என்று குருக்கள் கூற, வள்ளலார் "இப்புத்தகத்தை நெருப்புப் போட்டுக் கொளுத்தும் காணும்" என்று சொல்லிப்போயினர். உடனே குருக்கள் சந்தேகந்தீர்க்குந் தாமுள்ள கல்பட்டுசாமியைக் கேட்க அவர் 'நீர் இப்புத்தகத்தைத்தொட அருகரலர்' என்று கருத்தை விளக்கினர். (சரி-கீர்-138)

சமஸ்கிருதத்திலும் தமிழிலும் வல்ல சாஸ்திரியார் ஒருவர் வள்ளலாரிடம் வந்தபோது, சமஸ்கிருதமே முதற்பாஷை எனக்

கூறினர். உடனே வள்ளலார் 'தமிழ்' என்னு மொழியைக்குறித்து ஒருவிருத்தியுரை வரைந்து கொடுத்தனர்.

ஒருநாள் சாலையிலுள்ளாருள் பதினொருபேர் சித்திரைமாதத்திய வெப்பத்தால் சுரமடைந்தனர். வள்ளலார் "அப்பா, சுரத்தை எனக்குக்கொடுத்து விடுகிறையா" என்று ஒவ்வொருவரையும் கேட்டுக்கொண்டே சென்று ஒரு அறையில் ஐந்து நிமிஷம் அனல் மயமாய்க் காட்டிப் பின்வெளிவந்தனர். உடனே சுரம் நீங்கியது. (சரி-கீர்-184)

செட்டியார் ஒருவர் குறிஞ்சிப்பாடியிலிருந்து செவ்வாய்க்கிழமை தோறும்வந்து வள்ளலாரைத் தரிசனம்செய்வதுவழக்கம். ஒருநாள் ஞாயிற்றுக்கிழமை விடியற்காலை குளக்கரையில் களாச்செடியருகே காலைக்கடனுக்காக உட்கார, ஒரு சர்ப்பம் செட்டியாரைத் தீண்டியது. 'இராமலிங்கமேலாணை' என்றனர். அப்பால் அப்பாம்பு இரையெடுக்காமல் புற்றின்வாயிலில் வாயைத்திறந்து கொண்டிருந்தது. அன்று பிரசங்கஞ் செய்யுங்கால் இடையில் வள்ளலார் "ஐயோ, என்ன செய்கிறது, ஒரு உயிர் பட்டினியாயிருக்கிறது" என்று குறித்தனர்.

வழக்கம்போல் அடுத்த செவ்வாய்க்கிழமை அச்செட்டியார் வரவே வள்ளலார் "பிச்சு, ஓர் உயிர் மூன்றுநாளாகப் பட்டினியாயிருக்கிறது போய் ஆணையை விடுதலைசெய்" என்று கட்டளையிட்டனர்.

புதுச்சேரி தந்தி ஆபீஸ் மானேஜர் பிநாகபாணி முதலியார் (எழெட்டு பாஷையில் வல்லவர்) "வெறுங்கும்பல் சேர்ந்து சும்மா சாப்பிட்டுவிட்டுப் பொழுது போக்குகின்றார்கள்" என்று சாலையிலுள்ள கூட்டத்தாரைச் சிறிது இகழ்ந்தனர் என்ப. அவர் வள்ளலாரிடம் வருவதற்கு முன்னரே வள்ளலார் 'ஒருவர் புத்திசொல்ல வருகிறார்' என்றனர். முதலியார் வந்து அரைமணிநேரம் அவ்விஷயமாகவே பேசியபின் வள்ளலார், தொழூவூர் முதலியாருடைய மகனாகிய திருநாகேச்சரம் என்னுஞ் சிறுவரைத் தன்கையாற் பிடித்து முதலியாரெதிரே நிறுத்தி 'உமக்கு எத்தனை பாஷை தெரியும்' என்ன, ஐந்தாறுபாஷை தெரியும் என்றனர். வள்ளலார் 'எந்தப் பாஷையில் எந்த விஷயம் வேண்டுமானாலும் இந்தப்பிள்ளையைக் கேளுங்கள்' என்றனர். முதலியார் மூர்ச்சையாகி ஊமையாயினர்.

அரைமணி நேரம்கழித்து மன்னிக்கவேண்டுமென்று நினைக்கவே வள்ளலார் 'பிச்சு, என்ற வுடனே முதலியார் மூர்ச்சைதெளிந்த னர். (சரி-கீர்-222-225)

வள்ளலார் மேட்டுக்குப்பத்தில் அமர்ந்திருந்த, ஒருநாள் வையாகரணி தார்க்கிகியாகிய இரண்டு வித்வான்கள் வள்ளலாரை யடைந்து "திருவாசகத்தில் முதல் அகவலுக்கு உரை சொல்ல வேண்டும்" என்றுகேட்க, வள்ளலார் "சொல்லுவோம் கேட்கத்திறம் உண்டோ?" என்று கூறி, 'ந' சத்தம் உண்டாவதை இரண்டுமணிநேரம் பேசுங்கால் இடையில் முதலியாரப்பா கைவிட்டார் என்றனர். அதாவது தொழுவூர் முதலியார் அதற்குமேல் உணரமுடியாதவர் என்று கருத்தாகும். (சரி-கீர்-236)

ஒருநாள் அகரத்திற்கு 64 லக்ஷணம் வள்ளலார் பிரசங்கித்தனர்.

அகரத்தைப் பற்றிய 45-உசாக்கள் வருமாறு:—

அகரவுயிர் என்பது யாது?

அகரவுயிர்க்கு:

வரிவரலாறு, ஒலிவரலாறு, தன்மைவரலாறு, உணர்ச்சி வரலாறு, உண்மையனுபவ வரலாற்றின் இலக்கணக்கள் என்னை ?

வரியுரு, ஒலியுரு, தன்மையுரு, உணர்ச்சியுரு, உண்மையனுபவுருவின் இலக்கணங்கள் என்னை?

வரிச்சொருபம், ஒலிச்சொருபம், தன்மைச்சொருபம், உணர்ச்சிச் சொருபம், உண்மை யனுபவச்சொருப விலக்கணங்கள் என்னை?

வரிச்சுபாவம், ஒலிச்சுபாவம், தன்மைச்சுபாவம், உணர்ச்சிச் சுபாவம், உண்மையனுபவச்சுபாவ இலக்கணங்கள் என்னை?

வரிச்செயற்கை, ஒலிச்செயற்கை, தன்மைச்செயற்கை, உணர்ச்சிச்செயற்கை, உண்மைச்செயற்கை இலக்கணங்கள் என்னை?

வரியதிகாரம், ஒலியதிகாரம், தன்மையதிகாரம், உணர்ச்சியதிகாரம், உண்மையதிகார இலக்கணங்கள் என்னை?

வரிப்பொது, ஒலிப்பொது, தன்மைப்பொது, உணர்ச்சிப்பொது, உண்மைப்பொது இலக்கணங்கள் என்னை?

வரிச்சிறப்பு, ஒலிச்சிறப்பு, தன்மைச்சிறப்பு, உணர்ச்சிச்சிறப்பு, உண்மைச்சிறப்பு இலக்கணங்கள் என்னே?

வரிக்குணம், ஒலிக்குணம், தன்மைக்குணம், உணர்ச்சிக் குணம், உண்மைக்குண இலக்கணங்கள் என்னே? என்பன முதலாகக்கொள்க.

அன்றியும் வள்ளலார் ஜோஸ்யம், மந்திரம், வைத்யம், மூலிகை, இலக்கணம், வேதாந்தம், சித்தாந்தம், குளிகைமணி முதலிய விஷயங்களில் சபையார்கொண்ட எண்ணத்தையறிந்து அவ்விஷயத்தையே அபாரமாக நாள்முழுதும் பிரசங்கித்து விரிக்கிற் பெருகும் என்பர்.

கண்ட்ராக்டர் ஆறுமுக முதலியார் குளிகையைப்பெற விரும்பினர். வள்ளலார் இரண்டு மிளகு அளவுள்ள குளிகையைக் கொடுக்க, கையில் தாங்கமுடியாது முதலியார் கீழேவிட்டு விட்டனர். சேர்சுவற்றின்மேல் காகிதத்தில் எழுதி ஒட்டிவைத்திருந்த உண்மை நெறியைக் காட்டி "இதைப்பெற்றுக்கொள்ளுங்க" ளென்றார்.

குருக்கள்சுவாமிகள் வள்ளலார் வைத்திருந்த குளிகையைப் பெற்றுக் கொண்டால் பெரும்பொருள் பெறலாம் என்றெண்ணியிருந்ததை அறிந்த வள்ளலார் ஒரு இரும்புப் பெட்டியின் மீது தம்குளிகையைவைத்து 'இதைக்கையால் எடும்' என்றுகூற, குருக்கள்சாமிகள் அக்குளிகையைத் தொட்டவுடன் அது அவர்கையை வலிவாகப் பிடித்துக் கொண்டதால் வள்ளலாரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டவுடன் தம்கையால் அதை எடுத்துக்கொண்டனர்.

சூரிய உபவாசனைவல்ல இரண்டு பிராமணர்கள் அபரமார்க்கம் என்பது இரும்பு பொன் முதலானவை கையில்வைத்தால் உருகிக் கீழேவிழும் என்றும், பரமார்க்கம் என்பது சூரியனைப் போலவே ஆகாயத்தில் செல்லலாம் என்றும் சாஸ்திரத்தில் சொன்னபடி உபாசித்தும் சித்திகிடைக்கவில்லை என்றுகூற வள்ளலார் ஒருரூபாயைக் கையில் ஏந்தி சிலநிமிஷம் கழித்துக்காட்ட அது உருகிக் கீழேவிழுந்தது.

பிராமணர் 'ரஸம் கட்டமுடியாது மனங்கட்டலாம்' என்ன, வள்ளலார் 'மனம் அடக்கமுடியாது ரஸத்தைக் கட்டலாம்' எனக் கட்டிக்காட்டினர்.' (சரி-கீர்-194-196)

இருபது வயதுள்ள துலுக்கப்பையன் உடம்பில் எண்ணெய் தடவிக்கொண்டு பஞ்சை அப்பி வேணு'மென்றே வள்ளலாரிடம் சென்று 'சிரங்கு' என்றுகூற, வள்ளலார் 'சிலநாள்பொறுத்துக் குணமாகும்' என்றனர். அப்படியே சிரங்கில்லாத உடம்பு முழுதும் பெருஞ்சிரங்காகியது. பின்பு வருந்த, மேட்டுக்குப்பக்கேணியில்மூழ்க, குணமாகியது.

செம்படவர் சிலர் மீன்பிடிப்பதைக்கண்டு வள்ளலார் அறிவு புகட்டிப் பயிரிடுந்தொழிலில் அவர்களைச் செலுத்தினர்.

துலுக்க வைத்தியன் ஒருவன்வந்து தன்னிடம் இரகசியம் உள்ளது என்ன?

வள்ளலார் 'என்ன ரகசியம்' என்றுகேட்க, துலுக்கன் 'ரஸ பஸ்பத்துக்கு இன்னமூலிகை' என்று பிறர் கேட்காமற்படிகூற, வள்ளலார் ரஸபஸ்பத்திற்குப் பல மூலகைகள் உண்டு என்று உரத்தகுரலாய்க் கூறினர்.

மேட்டுக்குப்பத்தில் பிரசங்கிக்கும்போது நொண்டி ஆட்டுக்குட்டி ஒன்று இடதுகாதைச் சாய்த்துக்கேட்கும். பிரசங்கம் முடிந்தவுடன் மற்றவர்களோடு மேட்டுக்குப்ப வளாகத்தைச் சுற்றி வந்துபோகும் (சரி-கீர்-218)

வள்ளலார்க்கு வழக்கமாகக் கருங்குழியிலிருந்து வரும் சாப்பாட்டை மேட்டுக்குப்பத்திலுள்ள நொண்டி வாத்தியாருக்கும் இந்நொண்டி ஆட்டுக்குட்டிக்கும கொடுக்கும்படி வள்ளலார் கட்டளையிட்டனர்.

மறைச்சாமிகளும் சபாபதி குருக்களும் வள்ளலாரிடமுள்ள மூப்பூ உட்கொண்டு தேகத்தை வஜ்ஜிரதேகமாக்கிக் கொள்ள விரும்பினர், வள்ளலார் துடைப்பத்தின் வேர்க்கட்டையில் ஒரு துளி ரஸம்வைத்து முள்ளங்கியும் அத்துடன் வைத்துக் காட்டினர். அன்று மாலையில் அவைகளை எடுத்துப் பார்த்தபோது துளி ரஸம் முள்ளங்கியைக் கரைத்துவிட்டது. இதனால் இவ்வளவு உஷ்ணமான மருந்து இவர்கள் தேகத்தை அக்கினி மயமாக்கிவிடும் என்று வள்ளலார் விளக்கினர். (சரி-கீர்-179)

ஒருநாள் உச்சிப்பொழுதில் வள்ளலார் சாலையிலிருந்து வெளிப்பட்டுச் சென்றனர். குறித்தநேரம் வரையில் எதிர்பார்த்தும் இன்னும் வள்ளலார் திரும்பிவரவில்லையே என்று வேலூர்-சண்முகம்

பிள்ளை கவலைகொண்டு வெளியேபோய்ப் பார்க்க, வள்ளலாரது அவயவங்கள் வேறு வேறு துண்டுகளாகத் தோன்ற அவைகளைப் பார்த்துப் பயமுற்று மயங்கி விழுந்தனர். உடனே வள்ளலார் எதிர் தோன்றி "இனிமேல் இப்படிவாராதீர்" என்று கட்டளையிட்டுச் சாலைக்குத் திரும்பினர். (சரி-கீர்-189)

உச்சிப்போதில் வள்ளலார் வெயிலில் உட்கார்ந்து நிஷ்டை கூடுங்கால் தருமச்சாலையிலிருந்து அன்பர்கள் பார்த்தால் வள்ளலார் இருக்கும் இடத்திற்கும் சூரியனுக்கும் இடையே ஒரு அக்கினி ஸ்தம்பம்போல் தோன்றும்.

வடலூரிலுள்ள பறைச்சேரிக்குத் தலைவன் அமாவாசை என்பவனுக்கு வள்ளலார் இறந்தமாடுகளைத்தின்னுமல் மண்ணில் புதைக்கும்படி கட்டளை யிட்டனர். அவன் அங்ஙனமே சிலகாலிருக்க ஒருநாள் வள்ளலார் "இனி மாமிசந்தின்னுதே" என்று கூற, அவன் 'செலவுக்கு அரை ரூபாய் வேண்டுமே பங்குவருகிற மாமிசமும் உண்ணவேண்டாம் என்றால் என் செய்வது' என்ன. உடனே வள்ளலார் ஒரு அரைரூபாயை ஒரு மஞ்சள் துணியில் முடிபோட்டுக் கொடுத்து அவன் பெட்டியில் வைக்கும்படி உத்தரவிட்டனர். அன்று முதல் அவன் தினம் எட்டு அணு வரும்படி பெற்றுச் சுகமாயினன். (ச-கீ-197-198)

ஒருகால் கூடலூரிலிருந்து குள்ளஞ்சாவடியண்டை வந்து தங்க, ஹெட் சாயப் ஒருவன் புது வஸ்திரம் பிள்ளைப்பெருமானுக்குக் கொடுத்து அணியும்படி வேண்டினன். அங்ஙனமே அணிந்து படுத்திருக்குங்கால் கள்வன் ஒருவன் மெதுவாய் அதை இழுத்தனன். வள்ளலாரும் பக்குவமாகச் சாய்ந்தனர். அப்போது சாயப் திருடனை அதட்ட, பிள்ளைப்பெருமான் சாயப் சகோதரரைச் சாந்தப்படுத்தினர். (சரி-கீர்-201)

மேட்டுக்குப்பத்தில் சித்திவளாகத் திருமாளிகையில் வள்ளலார் பிரசங்கஞ்செய்யுங் காலங்களில் நூற்றுக்கணக்காய் அன்பர்கள் திரண்டுவந்து கேட்டுத் தம்மை மறந்தவர்களாய் அனுபவிப்பார்கள். *அங்ஙனம் நிகழுநாட்களில் ஒருநாள் நூறு அவதானம் செய்யும் ஐயங்கார் ஒருவர் பிரசங்கம் நிகழும்போது சபையோர் முன் வந்து நின்றனர். மதுவுண்ட வண்டுபோலவும் காந்தங்கவரும் ஊசிபோலவும் அன்பர்கள் வள்ளலார் திருமுன்பு ஒன்றுங்

தான்ருது நின்ற நிலையினராய் இருந்ததால் அய்யங்காரை யாரும் வனித்திலர். உடனே அவதானியார் வள்ளலாரைநோக்கி "வித் தயிலும் ஞானத்திலும் சாமிக்குள்ளதுபோலவே சபையும் என கு இடந்தரவில்லையே" என்றபின் சிலரால் இடம் தரப்பெற்ருர். றகு அவதானியார்மெதுவாய் வள்ளலாரிடம் நெருங்கினவுடனே ள்ளலார் "இடம் தந்ததோ என்ன" அவதானியார்"அப்போது லை" என்று விடைதந்தனர். பின்பு வள்ளலார் 'அப்போது என் து எக்காலம்' என்று கேட்க, அவதானியார் 'இறந்தகாலம்' ன்றனர். வள்ளலார், இறந்தகாலம் எவ்வளவு காலம்' முதலிய கள்விகளைவிடுக்க, விடைதர முடியாது அவதானியார் அயர்ந்த ர். வள்ளலார் 1008-ச் செந்தாமரை யிதழ்களை அடுக்கி ஒரு ஊசியை அழுத்தியகாலம்-ஒரு கால அளவு என்றுவிளக்கி அய்யங் ார் உட்கார்ந்தது இறந்தகாலத்திலேயே என அறிவித்தனர்.

இவ்வருமையுணர்ந்த அவதானியாராகிய அய்யங்கார் வள்ள ார்க்கு விசிறியினுல் உபசரித்தனர். வள்ளலார் தடுத்தபோது அய்யங்கார் "என்னிடம் ஒளித்தல்கூடாது" என்று கூறி இரண்டு ாழிகையளவு அத்தொண்டு செய்தனர். (சரி-கீர்-213-216)

ஒருநாள் கொங்கண தேசத்திலிருந்து வந்த இருவர் வெண் ருங் குஷ்டத்தால் வருந்துவதை வள்ளலாரிடம் விண்ணப்பிக்க, ந்துவேளை விபூதிபெற்றுக் குணமடைந்தனர். (சரி-கீர்-249)

வடலூரிலும் சுற்றுக் கிராமங்களிலுமுள்ள புலாலுண்போரைச் த்த போஜனமுடையராக வள்ளலார் திருத்தினர். (சரி-கீர்-251)

ஒருகால் அன்பர்கள் வள்ளலாரது திருவுருவத்தைப் புகைப் டத்தில் (**Photograph**) பிடிக்கவேண்டுமென்றுவிரும்ப, சென் ாயில் பிரசித்தியாயிருந்த மாசிலாமணி முதலியார் என்பவர் ட்டுதரம் பிடித்தும் திருமுகமும் திருக்கரமும் திருவடிகளும் தில் விழாமல் வெள்ளை வேட்டி மாத்திரம் விழுந்ததைக்கண்டு னம் வருந்தினர். வள்ளலார், நடக்கிற காலங்களில் அடிச்சுவடு ள் தோன்ரு. நடந்துபோகும்போது குறுக்கேயுள்ள சப்பாத்தி ள்ளின்மீது சாதாரணமாய் நடந்துசெல்வர். நடக்கும்போது நிழல் தெரியாது. இவைகளால் பிரணவதேக இலக்கணம் புலனு ற்று. (சரி-கீர்-252)

வள்ளலாரிடத்தில் மிக அழுந்திய பற்றுடைய நடராஜபிள்ளை ஒருகால் ஒருபாம்பைத் தூக்கிப் பிடிக்கச் சென்றபோது அது அவரது வலக்கையில் சுற்றிக்கொண்டது. உடனே அவர் வள்ளலார் திருமுன்பு தன்கையைச்சுற்றிய பாம்புடன் வந்துகாட்ட, வள்ளலர் "ஆனந்த நடராஜன் நீ" என்று கூறியருள அப்பாம்பும் விட்டோடியது, விஷமும் தாக்கவில்லை. (சரி-கீர்-239)

திருவொற்றியூரிலுள்ள இராஜகோபாலபிள்ளை என்னும் யாதவர் வடலூர்க்குச் சென்று வள்ளலாரைத் தெரிசித்தபோது வள்ளலார் பசுவின் மகத்துவத்தைக்குறித்துப் பிரசங்கம் செய்துகொண்டிருந்தனர். பின்னர் திருவொற்றியூர்க்குத் திரும்பிவந்து அவ்விராஜகோபாலபிள்ளை தம்முடைய பசுக்களைச் செவ்வனே போஷித்துவந்தனர். ஒருநாள் வெயிலில்கட்டியிருந்த தம் பசுவை அவிழ்த்திடுங்கால் அப்பசு அவரை முட்டித்தள்ளிவிட அவர் வருந்திய போது அன்றிரவு வள்ளலார் அவர் கனவிற்றோன்றி "மறுநாள் இரண்டு மல்லகச்செட்டிகள் வந்து உமது நோக்காட்டைக் குணப்படுத்துவர்'' என்று கூறியருளினபடியே மறுநாள் நிகழ்ந்தது. (சரி-கீர்-248)

காரணப்பட்டுக் கந்தசாமிப்பிள்ளை மெய்ம்மயக்கந் தாங்காது வடலூர் வள்ளலாரிடம் சென்று குறையிரந்தபோது, வள்ளலார் விபூதி கொடுத்தருளி "தக்க உத்தியோகந்தருவோம்" என்று அருளிச் செய்தனர். அன்று திருவருட்பிரகாச வள்ளலார் சாற்றியருளிய கட்டளையே இன்று வள்ளலாரது திவ்விய சரித்திரம் எழுதுதற்கு அருள் துணையாயிற்று. (சரி-கீர்-241)

வள்ளலார் 'உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்' என்னும் அடியில் "உலகெலாம்" என்பதற்கு விரிவுரையாக (2202) உலகங்களை எழுதியும் முடித்தாரிலர்.

அன்றியும் 'குடும்பகோஷம்' என்னும் இயலறநூலை வள்ளலார் 21-படலமாகப்பாட உத்தேசித்துக் 'குருதரிசனப்படலம்' 'முயற்சிப்படலம்' என்னும் இரண்டு படலங்களையும் பாடிவிட்டனர். பின்பு அன்பர்கள் வேண்டுகோளின்படி தாம்பாட உத்தேசித்திருந்த படலங்களின் பெயர்களை, தந்தையாதியர் வருபடலம், விடைகொடுத்த படலம், தந்தையாதியர் புலம்புறு படலம், நகர்காண் படலம், விண்ணப்பப் படலம், குடும்பகோஷம், தேசசஞ்சா

ரப் படலம், துயருறு படலம், தூஷணைப் படலம், உலகியற் படலம், பெண்சமுகப் படலம், ஆண்சமுகப் படலம், துறவுப் படலம், சாதுசங்கப் படலம், நிராசைப் படலம், மகிழ்ச்சிப் படலம், உபதேசப் படலம், என்று வரைந்து கொடுத்துத் தொழுவூர் வேலாயுத முதலியாரை மற்றைய படலங்களைப் பாடி அன்பர்கள் வேண்டுகோளைப்பூர்த்தி செய்யும்படி கட்டளையிட்டனர். முதலியார் முடித்திலர். திருவருள் செயல் இங்ஙனம் இருந்தவாறு.

திருநெல்வேலியில் சைவவேளாண் மரபில் உதித்து ஒன்பது வயதுமுதல் முருகப்பெருமானைச் செந்தமிழ்ச்சுவை பொலிந்த திருப்புகழ்களால் தம்காலம் முழுவதும் துதித்த தண்டபாணி சுவாமிகள் என்ற வழங்கும் முருகதாசர் ஒருகால் வடலூர்க்கு வந்து வள்ளலாரிடம் சிலநாள் தங்கி முருகரது திருவருளை வியந்து கொண்டிருந்தனர். முருகதாசர் தாம்பாடிய திருப்புகழ்களை வள்ளலார்க்கு எடுத்துக் காட்டிக்கொண்டேவர, வள்ளலார் ஏடுகளை ஒரு சிறிது தள்ளினர். அதனால் அலட்சியங் கொண்டதாக அவர் எண்ணவே, வள்ளலார் முருகதாசரை அருணகிரிநாதரே என்று சிறப்பித்துப் பேசினர். எனினும் அவர்க்குத் திருப்தியில்லை. ஏடுகளைத் தள்ளினதால் கணக்கிலாமற்பாடிக் கொண்டிருப்பதோடு அநுபவஞானம் இருத்தல் வேண்டும் என்று வள்ளலார் எண்ணினரோ என்று அவர் ஐயமுற்றனர். பின்ஒருகால் முருகத்தியானத்தி லிருந்தபோது வள்ளலார் தாயுமானவரே யென்று அவர்க்கு விளங்கியது. ஒருநாள் முருகதாசர் உஷ்ணவாயுவால் சிறிது அபக்குவம் அடைய, வள்ளலார் கேட்க, வினையால் விளைந்தது என்றனர். வள்ளலார் "இங்கேயும் வினையுண்டோ?" என்று முருகதாசர்க்குக் கூறிச் சந்நியாசிகளை வினை தாக்குமோ என்பதைக் குறித்துப் பிரசங்கஞ் செய்தனர். வள்ளலாரைக்குறித்து விஞப்பதிகமும் அநுபவப் பதிகமும்பாடி ஜீவகாருணிய மூர்த்தியாகிய முருகதாசர் தமது நூல்களில பல விடத்தும் ஜீவகாருணியம் விளக்கவந்த வள்ளலாரைப் புகழ்ந்திருக்கின்றனர்.

தற்கால கம்பரென்று பாராட்டப்படும் திருவாவடுதுறையாதீனத்து மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளை மாயூரம் வேதநாயகம் பிள்ளை இயற்றிய நூல்களுக்கு வள்ளலாரிடமிருந்து சாற்றுகவிபெற வடலூர்க்குச் சென்றனர். வள்ளலார்

சாற்றுகவி கொடுத்தனர். இங்ஙித மாலையைப்பற்றி விளக்கும்படி மகாவித்துவான் கேட்க, வள்ளலார் முதற்பாட்டிற்கு மட்டும் பலவுரை நான்குமணிநேரமாகச் சொல்லிக்கொண்டுவந்து,இங்கே முதலியாரப்பாவும் கைவிட்டார் (இனிக் கூறப்படும் அனுபவ உரை தொழுவூர் வேலாயுத முதலியாருக்கும் விளங்காது) என்று கூறிப் பேரின்பவுரை சொல்லிக்கொண்டேபோக மகாவித்துவானும் மற்றவரும் ஒன்றுந் தோன்றமல் இருந்தனர். அப்போது மீனாட்சி சுந்தரம்பிள்ளை யவர்கள் வள்ளலாரைப் பெரிதும் புகழ்ந்தனர்.

வடகலை வைணவர் ஒருவர் தேசிகர் அருளிய

"மூன்றி லொருமூன்று மூவிரண்டு முந்நான்கு
தோன்றத் தொலையுந் துயர்"

என்னும் குறட்பாவுக்கு உரைகேட்க, வள்ளலார பௌராணிக மதவுரை, சமயவுரை, சமயாதீதவுரை, மற்றுமோர் உரை என நான்கு உரைகூறினர்.

ஸ்ரீமுக வருஷத்தில் மார்கழி மாதம்முதல் வள்ளலார் சித்திவளாகத் திருவறைக்குள் சென்று சிலநாள் கதவை மூடிக்கொண்டு இருப்பதும் பிறகு வெளிவந்து பிரசங்கஞ் செய்வதும், மறுபடியும் சிலநாள் தாளிட்டுக்கொண்டு உள்ளே இருப்பதும், பின்னர் வெளிவந்து பிரசங்கஞ்செய்வது மாகிய அருட்பெரு நெறியில் நிகழ்ந்தனர். (சரி-கீர்-254)

அங்ஙன நிகழுநாட்களில் ஒருநாள் அன்பர்களை நோக்கி "கடையை விரித்தோம். கோள்வார் இலலை. கட்டிவிட்டோம். நீங்கள் அருள் அடைவதற்கு இந்தத் தீபத்தினைக் கடவுளெனக் கொண்டு ஜீவகாருண்யமுடையராய்ச் சிந்தித்துக் கொண்டிருங்கள். இனி இரண்டரை கடிகைநேரம் உங்கள் கண்ணுக்குத் தோன்ற மாட்டோம். இவ்வுலகத்திலும் மற்றெங்கும் இருப்போம். பின்னர் அருட்பெருஞ்சோதி ஆண்டவர் வருவர். அப்போது இவ்வுருவுடன் சித்திகள் பலநிகழ்த்துவோம் நாம் திருக்கதவை மூடியிருக்குங்கால் அதிகாரிகள் திறக்கும்படி ஆஞ்ஞாபிக்கின் ஆண்டவர் அருள் செய்வார்." என்று கட்டளையிட்டுச் சித்தசார்தம் உண்டா

க்கி ஸ்ரீமுகவருஷம் தைமாதம் புனர்ப்பூசத்தன்று இரவு 12-மணிக்கு மேட்டுக்குப்பத்தில் சித்திவளாகத்தில் திருக்காப்பிட்டுக் கொண்டனர். (சரி-கீர்-255-256)

வள்ளலார் தோன்றுந் துணையாயிருந்த காலத்து' நிகழ்ந்த சரித்திரக் குறிப்புகள் ஒருவாறு கிடைத்தவரையில் திரட்டியவாறு காண்க.

## வள்ளலார் தோன்றுத்துணையாய்ச் செய்தருளும் திருவிளையாடல்.

சித்திவளாகத்தில் வள்ளலார் திருக்காப்பிட்டுக் கொண்டபின்பு சிலநாட்கழித்து, கலெக்டர், பெரிய டாக்டர், தாசில்தார் ஆகிய மூவரும் வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொண்ட விஷயம் அறிய வந்தனர். அவர்களுள் தாசில்தார் வெங்கடராம அய்யர் என்பவர். பெரியடாக்டர் ஒருகிறிஸ்தவர் வெங்கட்டராம அய்யர் திருக்கதவைத் திறந்திடும்படி கடுமொழி சிலகூறி அங்குள்ளவர்களைத் திறவுகோல் கேட்டனர். கிறிஸ்தவராகிய டாக்டர் பெரியோர்கள் எம்மதங்களிலும் உளர் என்று தேர்ந்து குடிசையை இரண்டொருமுறை சுற்றிவந்து பார்த்து ஆக்ஷேபத்திற் கிடமாக யாதொன்றும் காணப்படாமையால் வள்ளலார் நிஷ்டையிலிருப்பரென்று தீர்மானித்தார். கலெக்டர் துரை "நீங்கள்செய்யும் வேலை யாது" என்று கேட்க அவ்வன்பர்கள் "நாம் குருவாணையின்படி அன்னதானஞ் செய்தலும் கடவுளை மெல்லெனத் துதித்தலுமாகிய தொண்டுபுரிகின்றோம்" என்று விடைகூறினர்.

அப்பால் இரண்டு துரைமார்களும் தம்பெயர்களால் அன்றை பத்தின அன்னதானம் நடத்த இருபதுரூபாய் கொடுத்துச் சென்றனர். சென்றபோது பின்தங்கிய தாசில்தார் ஆகிய ஐயரை அவர் குதிரையிரண்டு முள்ளில் தள்ளிவிட்டது. முன்சென்ற இருதுரைமார்களும் ஐயர் வாராமையால் திரும்பிவந்து பார்த்துச் சித்தரை வைதபலன் இதுவென்று கூறி இவரை ஒருகட்டை வண்டியில் ஏற்றிக்கொண்டு சென்றனர்.

காரணப்பட்டு-கந்தசாமிபிள்ளை கண்வலியால் துன்பப்பட்டபோது வடலூர்க்குச் செல்லும்படி கனவில் உத்தரவு பிறந்தது. அன்றுணமே செல்ல ரஸ்தாளி வாழைப்பழம் கண்ணுக்குக் கட்டும்

படி ஓர் அன்பர் கூறினர். அங்ஙனமே செய்ய கண்ணோய் நீங்கியது. அன்றியும் அந்தாதி, நாமாவளி, கண்ணி முதலிய பிரபந்தங்கள் பாடும் படியும் திருக்கோவலூரில் உத்தரவாகியது.

ஒருகால் ஷை பிள்ளையவர்களோடு வடலூர்க்குச் சென்ற கூனன் என்னும் ஒரு வேலையாள் பூச உத்சவத்தில் அதிர்வெடி போட, அது வெடிக்கத் தாழ்த்தமையால் அருகிற்சென்று அவன் பார்த்தபோது, திடீரென வெடித்து அக்கூனனை ஆகாயத்தில் எறிந்தது. அவன் கீழே விழுந்தும், இம்மியளவும் உடம்புக்குக் கெடுதியில்லை.

கோட்டகம் என்னும் ஊரிலுள்ள பள்ளிக்கூடத்தான் என்பவருடைய சொப்பனத்தில் வள்ளலார் தோன்றி "நாளை அரவம் தீண்டி மூன்றுநாள் மயக்கம் உண்டாக்கும். மருந்து கொள்ள வேண்டாம் பின்பு குணமாகும்" என்று அறிவித்தனர். அங்ஙனமே நடந்தது.

போஸ்ட்மாஸ்டராயிருந்த பெங்களூர் வேணுகோபால்பிள்ளை என்பவருக்கு நிகழ்த்திய அற்புதம்பல. ஒருகால் தாய்தம்பியர்களுடன் வடலூர்க்குவந்து தரிசித்தபின் சிதம்பரம் போவதற்கு வண்டியேறப் பின்னலூர்க்குச் செல்லும்போது வழிதப்பிப் போயினர். சாயுங்காலம் ஒரு அணைக்கட்டு குறுக்கிட்டதால் பெரிதும் நிலைகலங்கினர்.

ஒருகிழவி தோன்றித் தன்னுடன் வரும்படி அணைக்கட்டைத் தாண்டி அழைத்துச் சென்று இதோ அந்தக் கிராமம் என்று சுட்டிக்காட்டி மறைந்தனள்.

வேணுகோபால் பிள்ளை வீட்டில் விவாககாலத்திலும், ஒருகால் நடந்த இளைப்பால் அயர்ந்த காலத்திலும் தன்சகோதரன் பெண் காலமாய்விட்ட காலத்திலும், இன்னும் பலசந்தர்ப்பங்களிலும் வள்ளலார் பல அற்புதங்கள் நிகழ்த்தினர்.

காரணப்பட்டு-கந்தசாமிபிள்ளை இவ்வேணுகோபால் பிள்ளையோடு திருவருட்பாவிலுள்ள சிலபாசுரங்களின் பொருளை ஆராயுங்கால் ஐயம்நிகழ அவர்வீட்டு நடையில் ஒரு பரதேசி தோன்றி

பட்டினத்தார் அருளிய "மந்திக்குருளை" என்னும் பாட்டைக் கூறி மறைந்தனர். அப்பாட்டால் வள்ளலாரிடத்துப் பற்றுவைத்த இவ்விருவரும் சந்தேகந் தெளிந்தனர்

ஒருகால் காரணப்பட்டு-கந்தசாமிப்பிள்ளையவர்கள் மாயூரந் துலாஸ்நானத்திற்குச் சென்றபோது மயூரம்-வித்துவான் நடராஜ பிள்ளையுடன்செல்ல மீனாட்சி சுந்தரம்பிள்ளை கந்தசாமிபிள்ளையைப் பார்த்து "கையிலுள்ளது என்னபுத்தகம்" என்றுகேட்க,கந்தசாமி பிள்ளை "திருவருட்பா" என்றனர். உடனே மகாவித்வான் அதனைப்பெற்று மகாதேவமாலையில் "கருணைநிறைந்து" எனும் பாசுரத்தை அங்குள்ள வித்வான்களிடம் காட்டி விளக்கும்படி கேட்டனர். ஒவ்வொருவரும் தத்தமக்குத் தோன்றிய நயங்களை எடுத்துக் கூறினர். மகாவித்வான் எழுந்து திருவருட்பாவைத் தன் தலைமீது வைத்துக்கொண்டு போற்றி ஆனந்தித்தனர். திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்வான் அங்ஙனம் திருவருட்பாவை வியந்து பாராட்டியதற்குக் காரணம் ஆழ்ந்த கருத்துக்களை யுடையதாயும் அனுபவ மேலீட்டால் வெளிவந்த ஞான பொக்கிஷமாய் அமைந்த பாசுரங்களை உடையதாயு மிருத்தலே ஆகும். மகாதேவமாலைக்கு விருத்தியுரை எழுதிய சித்தாந்த ரத்னாகரம் அரன்வாயில் வெங்கடசுப்புப்பிள்ளையவர்கள் இப்பாட்டில் அமைந்த கருத்தைச் சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரங்களையும் பிரமாணமாகக் காட்டி நன்கு விளக்கினர் என்பது பிரசித்தம்.

திருக்கோவலூரைச்சார்ந்த கோட்ட மருதூரிலுள்ள மூத்து வெங்கடாசலம்பிள்ளை என்னும் கருணீகர்கணபதிபூஜையும் வள்ளலார் வழிபாடும் செய்தும் வறுமை மிகுந்தபடியால் பொருள் தேடுதற்காக வள்ளலாரைத் தியானித்துக்கொண்டே புதுச்சேரிக்குச் சென்றனர். வழியில் தவளகுப்பஞ் சாவடிக்கருகில் ஒரு பரதேசிதோன்றி "இந்த எழுத்தைமுதலாக உடைய பஞ்சாக்ஷரத்தை ஜெபித்துக்கொண்டேவா. ஜோசியம் வெகு விமரிசையாய்ச் சொல்லவரும்" என்று உபதேசித்து மறைந்தனர். பிறகு பிள்ளை புதுவையில் மிகப் பிரபலராயிருந்த ஷண்முக வேலாயுத முதலியாரிடம் தம் வறுமையைக் குறித்துச்சொல்லி •முதலியார்க்கு நடக்கப்போகும் பல சுபசெய்திகளை எடுத்துக்கூறினர். முதலியாரிடம் சிறிது பொருள்பெற்றுத் தம்மூர்வந்து சேர்ந்து ஜோசியத்தால் பெரும்பொருள்பெற்றுச் சுகமடைந்தனர்,

ஊற்றங்கால் மங்கலம் எனும் கிராமத்தில் வள்ளலாரிடத்தில் பக்திமிகுந்த ரெட்டியார் ஒருவருக்கு ஒருநாள் ஆலமரத்தடியில் காட்சிகொடுக்க மலர்கொண்டு அவர் அர்ச்சித்தவுடன் வள்ளலார் மறைந்தனர்.

•

நாகூரிலிருந்து சுவாமிநாதசெட்டியார் முதலிய சிலர் வடலூர்க்குவந்து தரிசித்து ஊர்க்கு இரவிற்செல்லும் வள்ளலார் பதினாறுவயதுடைய சிறுபிள்ளைபோல் திருடர்பயம் உள்ள இடம் வரையில் வண்டியின் பின்புறத்தே சென்றனர். வண்டியிலுள்ளார் கேட்கத் தம்மூர் மருதூர் என்றுசொல்லி மறைந்தனர். உடன் வந்த மருதூராளி வள்ளலாரே என்று அறிந்து அதுமுதல்நாளது வரையும் தைப்பூசத் திருவிழாவில் ஆயிரக்கணக்கான அடியார்களுக்கு அன்னதானஞ் செய்கின்றனர்.

இங்ஙனம் பல இடங்களில் பல அன்பர்களுக்குப் பல வேறு சமயங்களில் வள்ளலார் பலதிறமாகத் திருவருள் பாலித்துவருகின்றனர் என்பது பிரசித்தம். அச்சரிதங்களைவிசாரித்து எழுதுதல் முடியாத காரியமாகும். திருவருளின்செயலை அறுதியிட்டு ஆணையிட்டுக் கூறுதல் இயலுமோ ?

---

திருவருட்பாவில் 'அருள்' எனும் மொழி 3738-முறை வந்துள்ளது.

இச்சரித்திரக் குறிப்புக்கள் அடியிற் குறித்துள்ள அன்பர்கள் நேரிற் கூறியவற்றையும் தம் குறிப்புக்களில் எழுதிவைத்தவையுங் கொண்டு விரிவஞ்சி மிகச் சுருக்கி எழுதப் பெற்றன: முருகதாசர், சிதம்பரம் சபாநடேச தீக்ஷிதர், வெங்கடசுப்பா தீக்ஷிதர், தொழூவூர்-வேலாயுத முதலியார், பொன்னேரி-சுந்தரம் பிள்ளை, வீராசாமி நாய்க்கர், கூடலூர்-கனகசபைப் பிள்ளை, தேவாரம்-முத்துசாமி முதலியார், இறுக்கம்-இரத்தின முதலியார், திருமழிசை-முத்துசாமி முதலியார், பாளையம்-சோ. கோதண்டராம செட்டியார், சேலம்-பொன்னு ஞானம்பாள் அம்மாள், தாசில்தார்-கன்னிபுத்தூர்-அப்பாசாமி முதலியார், திருமயிலை-தணிகாசல முதலியார், டிப்டிகலெக்டர்-வெங்குபிள்ளை, அமிர்தலிங்க ஜோஸ்யர், மயிலை-சிக்கட்டி சோமு செட்டியார், அஷ்டாவதானம்-கலியாணசுந்தர யதீந்திரர், அவர் மாணவர் கின்றை - தங்கவேலு முதலியார், புரசை - சின்னையா பிள்ளை, சிந்தா-ஆ. வேதாசல முதலியார், புதுவை - திருவாசமுதலியார், சிற்றம்பலச் செட்டியார், இரத்தின செட்டியார், சதாசிவச்செட்டியார், பாலகிருஷ்ண முதலியார், பெங்களூர் - வேணுகோபாலப்பிள்ளை, கூடலூர்-

தேவநாயகம் பிள்ளை, ஐயாசாமி பிள்ளை, அப்பாசாமிச் செட்டியார், காஞ்சிபுரம் - வரதராஜ முதலியார், கருங்குழி - முத்துநாராயண ரெட்டியார், புருஷோத்தம ரெட்டியார், பாலு ரெட்டியார், ஆலப்பாக்கம் - நயினு ரெட்டியார், வேட்டவலம்-ஜமீன்தார் அப்பாசாமி பண்டாரியார், விருத்தாசலம் வெங்கடேசய்யர், வேலூர்-பத்மநாப முதலியார், நாகப் பிள்ளை, வடலூர்-சத்யஞானனந்தயதி, ஆடூர்-சபாபதி குருக்கள், வளவனூர்-சண்முகசாமி,முத்தமிழ்க்கவியரசு-தஞ்சை-சண்முகம் பிள்ளை, விசுவநாதய்யர், கொரந்தமூர்-சீனிவாசவரதாசாரியர், மதுரை-சிதம்பரசாமிகள், சிற்றம்பல ஞானியார், கணக்கிலவதானி-முத்துசாமி பிள்ளை, முதலிய அன்பர்களுக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

"வைதிக சைவ சண்ட மாருதம்"

சென்னை - சோமசுந்தர நாயகர் செய்த துதி.

சீர்பூத்த மறைமுனிவ ரகம்பூத்த நலம்பூத்த
திறத்தி ஞனிப்
பார்பூத்த மயல்பூத்த வெனதுளத்திற் பூத்தநசை
பாறப் பூத்த
வேர்பூத்த வருணயன விணைபூத்த விருந்தவனிங்
கிறைமை பூத்த
பேர்பூத்த போதசிதம் பரராம லிங்கனடி
பேணி வாழ்வாம்.

(வேதபாஹ்ய சமாஜகண்டனம். விபவஹ ஆவணிமீ.)

குறிப்பு;—இனி அச்சிடவேண்டியவை: வள்ளலார் பிரசங்கித்த காலங்களில் அன்பர்கள் எழுதிவைத்த பற்பல அருமையான குறிப்புகள்.

வள்ளலார்மீது பாடிய பிரபந்தங்கள்.

முருகதாசர் : விஞப்பதிகம், அனுவப்பதிகம்.

தொழுவூர்-வேலாயுதமுதலியார்

அருட்பிரசானர் சந்நிதிமுறை. வள்ளலார் திருவடிப்புகழ்ச்சி அச்சில்வரவில்லை.)

பொன்னேரி - சுந்தரம்பிள்ளை

'வள்ளலார் பிள்ளைத்தமிழ்'

அரன்வாயல் : வெங்கடசுப்புப்பிள்ளை
'வள்ளலார் பதிற்றுப்பத்தந்தாதி'

சென்னை : சோமசுந்தரநாயகர்
'வள்ளலார் தோத்திரம்'

அஷ்டாவதானம் - கலியாணசுந்தர யதீந்திரர்
'வள்ளலார் நிந்தாஸ்துதி'

வருஷந்தோறும் அன்பர்கள் பலர் தைப்பூசத்தில்
பாடி வெளியிடும் பாமாலைகள்.

---

திருவருட்பா

ஆன்மநேய உரிமை.

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிருந் தம்முயிர்போல்
எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார் யாவர்அவர்
உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடமெனநான்
தேர்ந்தேன் அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன் சிந்தைமிக
விழைந்த தாலோ.

திருவருட்பிரகாசவள்ளலார் திருவடிகளே சரணம்.

---

இச்சரித்திரக் குறிப்புக்களுட் சிலவற்றையும் இந்நூலிலுள்ள பிரபந்தங்களுக்கு ஆங்காங்கு அமைந்த குறிப்புக்களையும் எழுதிய **Professor. M.** கந்தசாமி முதலியார் **B. A.** அவர்களுக்கு வள்ளலார் திருவருள் புரிவாராக.

சென்னை சூளை, ஸன் ஆப் இந்தியா பிரஸில், பதிப்பிக்கப் பெற்றது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

ஸ்ரீ மத்

திருவருட்பிரகாச வள்ளலார் என்னும்

சிதம்பரம்

# இராமலிங்கசுவாமிகள்

திவ்விய

# சரித்திரக் கீர்த்தனை.



## சித்திக்கணேசர் - வெண்பா.

சீர்சான்ற ராமலிங்க தேசிகனார் தஞ்சரிதம்
பேர்சான்ற கீர்த்தனமாப் பேசுவதற்—கேர்சான்ற
வெத்திக்கி லெவ்வெவர்க்கு மீசன்முன மீன்றவடற்
சித்திக் கணேசவருள் செய்.

## முருகக்கடவுள்.

அன்பர்பணி ராமலிங்க வாரியனா ரின்சரித
மின்பமுறக் கீர்த்தனமா வேத்துதற்கு—நன்கருளும்
விண்முகக்கண் ணின்றுதித்து விண்ணோர்க்கு வாழ்வளித்த
சண்முகனார் செம்பதுமத் தாள்.

## கலைமகள்.

நண்பாரி ராமலிங்க நாதன் றிருச்சரிதந்
திண்பாரிற் கீர்த்தனமாச் செப்புதற்குப்—பண்பார்
தலைஞான நாற்கவியுந் தந்தருளுஞ் சர்வ
கலைஞானத் தோகைபதங் காப்பு.

## பரசிவம்.

இருளொழிக்கும் ராமலிங்க வெந்தை சரிதந்
தெருள்விளக்குங் கீர்த்தனமாச் செய்ய—வருளு
மபாய மகற்றியரு ளம்பரமார் ஞான
சபாநாய கன்கமலத் தாள்.

## உமையவள்.

சீர்பூத்த ராமலிங்க திவ்யகுரு வின்சரித
மேர்பூத்த கீர்த்தனமா வேத்துதற்கு—நார்பூத்த
வந்தரிமா கௌரியுமை யம்மைசிவ காமிசிவ
சுந்தரிபொற் பாதந் துணை.

## குருநாதன்.

சித்திதரும் ராமலிங்க தேசிகனார் நற்சரிதம்
பத்தியுறக் கீர்த்தனமாப் பாடுதற்குப்—புத்திதரு
மிற்குருவி னட்டாதே யென்றருளு மற்புதவிச்
சற்குருவின் றெய்வமலர்த் தாள்.

## அவையடக்கம்.

கொம்பினிற் றேன்கண்டு கொளமுயலு நொண்டியைப்போ
லும்பரறி தற்கரிய வுண்மையரு—ளம்பரம
சித்தகுரு ராமலிங்க தேசிகனார் மெய்ச்சரித
மித்தரையிற் சொல்லவுவந் தேன். 1

சேற்றில் விளைந்ததென் றச் செந்தா மரையைநீக்கா
தேற்றுகொள்வார் போன்றுரைக்கு மென்கவியு—நாற்றிசை
போற்றிடுமி ராமலிங்க புண்ணியனார் மெய்ப்புகழே [யும்
சாற்றியதாற் கொள்ளத் தகும். 2

சிவமயம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை.

## ஸ்ரீமத் திருவருட்பிரகாச வள்ளலார் திவ்ய

# சரித்திரக் கீர்த்தனை.

இராகம்-அட்டாணா-தாளம்-சாப்பு.

பல்லவி.

கதிபெற்றுய்யக் கடைக்கண் பாரையா—ஸ்ரீராமலிங்கையா
கருணைசெய்ய வெமக்கிங்காரையா கதி

அநுபல்லவி.

மதிதருவடற் சபைஸ்தாபக
மகிதலம்புகழ் பெறுவியாபக கதி

சரணங்கள்.

1 விதிவாதமுற்று மொழிக்கவிளங்கிய
விராட்புருட னெனப்பன்னும்
விமலர்க்கிதயாம் பரமெனமாமறை
விளம்புமெய்ப் புகழ்மன்னும்
வியாக்கிரபாதனு மனந்தனுநிதம்
மிகுந்தபத்திசெய் திலகுயர்பதம்
வேண்டிப்பெற்றஞானாகாயத்தலமென்னு
மேன்மையுற்றெமது மாயப்புலன்வென்று கதி

2 நதிசேர்சடையணி நடனசபேசர்
நடிக்குஞ் சிதம்பரஞ்சார்ந்த
நற்றவர்சூழ் மருதூரிற் குருலிங்க
நல்லடியார் பத்தியார்ந்த
நாடுங்கல்வியறி வொழுக்கமும்பெற்ற
நவிலருங்கரு ணீகர்குலத்துற்ற
நாடாவிராமைய லிராமைய னென்னும்
நாமமுள்ளோன்றவ நேமநெறி யுன்னும் கதி

3 நாயகியாரைவர் சென்றபின்பொன்னேரி
 நகரிற்கற்பிற் சின்னம்மை
நண்ணுமருந்ததி பொறுமையினிற்புவி
 நாயகியென்னுஞ் சின்னம்மை
  நன்மனையாட்டியாய் மணஞ்செய்துபற்பல
  நாளறஞ்செய்த தவப்பயனாற்சில
  நாட்கழிந்திரண்டாண் பெண்களையும்பெற்று
  நல்லோர்கள்வாழ்த்திட வெங்களுள்ளன்புற்றுக் கதி

4 இல்வாழ்வான்றென் புலத்தார்துறந்தார்க்கு
 மென்னுங்குறட் பாவுக்கிணங்கி
யீசுரபத்தி யிரக்கமெய்யன்புட
 னெந்தையடி யரைவணங்கி
  யின்புடன்சபா பதிபரசுராம
  னெழிலுண்ணாமுலை சுந்தரநாம
  மேற்குமீரிரண்டு பிள்ளைகளோடும்
  இசைந்துவாழ்ந்தேங்க ணருளிருளோடும் கதி

5 இல்லறவாழ்க்கை யெள்ளளவுந்தவறும
 லியற்றிவரு கின்றநாளில்
எண்ணடங்காச் சிவயோகியொருவர்தம்
 மில்லம்வர வவர்தாளில்
  இன்புடன்பணிந் தம்மையன்னமளிக்க
  எந்தையடியர் பசிநீங்கிக்களிக்க
  ஈந்தவிபூதியுட் கொண்டதனாற்பெற்ற
  எங்கள்குருவென்று கண்டதனாலுற்றக் கதி

6 கலிநான்கொன்ப திரண்டைந்திற்சுபானு
 கன்னியிரு பத்தோர்நாளில்
கதிர்ப்பகன்மீனவி லக்கினத்தினலாங்
 காலினிற் சித்திரைக்கோளில்
  கவினிறைபூர்வ பக்கத்துத்துதிகையில்
  கருதிருபத்தொன்பதே முக்காற்கடிகையில்
  கருணீகருலதிலக ரெனச்சாற்றும்
  கனமிகுமிரா மையற்குப்போற்றும் கதி

7 இலக்கினத்ததிப னொளிநிற்கேந்திரம்
இரண்டோன்செம் பாம்பைந்தினிலே
இரவியுஞ்சுங்கனு மின்னிற்பொருந்திட
இந்துபுந்தி துலாத்தினிலே
இலகிடமானிற் கரும்பாம்புந்தனி
இருக்கவிடபத்தி னட்பாகுஞ்சனி
இசைந்தவிச்சுப தினத்திலுதித்த
எந்தையென்றறிந்த வெமக்குவிதித்த கதி

8 திருவவதாரஞ் செய்தவஞ்ஞான்று
திவ்யபல விழாத்தெரிந்து
செய்துவேதியர்க்கு மற்றவர்க்குமறை
செப்புமுறைப் படிபுரிந்து
சிவயோகியார்நற் கடாட்சத்தினாற்பெற்ற
திருமகற்கி ராமலிங்கமெனவுற்ற
சிறந்தநாமஞ்சூட்டிப் பூசனைகள்மற்றும்
செவ்வையுறச்செய்து நேசமுறப்பற்றும் கதி

9 கருதுந்திங்களைந்திற் சிதம்பரதரிசனங்
கண்டிடுந் தந்தைதோண்மீது
கண்களசைக்காது கலகலவென்னக்
களித்து நகைத்திடும்போது
கற்றவர்நற்றவர் கண்டுநெகிழ்ந்து
கலியிதென்றன்பு கொண்டுமகிழ்ந்து
காணுமிப்பிள்ளையைப் பெற்றோர்கள்பண்ணிய
கனத்தவமீதென்னக் கேட்டயாம்புண்ணியக் கதி

10. அன்பறிவாதி பெறுநலம்போதிக்கும்
அப்பைய தீக்ஷிதர்பின்னே
அமர்ந்துநோக்கப் பெருஞ்ஜோதியாத்தோன்ற
ஆச்சரியங் கொண்டுமுன்னே
அடைந்துபார்த்துள்ளக் களிப்பின்வருத்தி
அழைத்துப்போய்த் தமதில்லத்திலிருத்தி
ஆதரவுசெய்த விந்தையன்பர்சொற்ற
தறிந்தசிற்றடியேம் பந்தவன்பதற்றக் கதி

11 ஆறுவதுமாதக் கடைசியினிலும
தரும்பெருந் தவத்தந்தை
யரன்றிருமல ரடியடைந்திட
அறிந்துமற் றவர்சிந்தை
'அயர்ந்துபுலம்பித் தெளிந்துசமாதி
அமைத்துமோக்ஷ தீபக்கன்மமாதி
அடைவுடன் செய்துபெற்றவர்க்குரிய
அறமுமுடித்திட நற்றவர்க்கரிய கதி

12 எட்டாவதுமாத முடிவின்மருதூர்விட்
டெல்லோரும் பொன்னேரிசேர்ந்தே
இருந்துசிலநாட் சென்றபின்னிங்கிருந்
தென்செயற்பால தென்றோர்ந்தே
எழிலுறுஞ்சென்னை நகரினிற்கற்றவ
ரிடஞ்சென்றுகல்வி நன்குறப்பெற்றவ
ணிருந்துவாளுள் கழிக்கநறும்முன்னவ
ரெண்ணங்கொண்ட படியடியேநன்னவக் கதி

13 ஆவல்கொண்டேர்பெறும் பொன்னேரியூரைவிட்
டகன்றுநும் முடன்சென்னை
அடைந்துன்றமையன் பேர்கொண்டமுதலி
யாரிடத்திற் சென்றுதன்னை
அறிவுறுத்துங்கல்வி பயிற்றிடுவீரென்ன
அடங்கிக்கேட்கவவர் கற்பித்திடவுன்ன
அருங்கல்விபயின் றுபாத்தியாயர்பட்ட
மடைந்துவாழ்ந் திருக்கப்பவவன்பட்ட கதி

14 பெரியதமையனுமக் குபாத்தியாயராய்ப்
பிறங்கிட வேழாமாண்டு
பிரியமாயாவுந் திருவருளாற்கற்றுப்
பேசரும் பெருமைபூண்டு
பேரன்படக்க மிரக்கந்தவமின்சொல்
பெற்றெவ்ருமெக் கலையினு நும்பின்செல்
பெற்றிநல்வெற்றியு நிறைந்தமகவென்று
பெரியருஞ்சொல்ல வறிந்தவெண்மையின்று கதி

5 எட்டாவதாண்டிற் சிவாநுக்ரகம்பெற்றே
இருவர்முன் னவர்மொழிக்கே
இணங்கித்தீக்கைபெற் றிளையபிள்ளையார்
இணையடி யருள்வழிக்கே
இசைந்துமுன்னிலை விட்டகமுகத்தில்
இரவுபகலில்லிடத் தூற்றிகத்தில்
இருப்பவரென நடித்துமிருந்த
எந்தையென்றறிந்த வெங்களைத்திருந்த கதி

6 தருமமிகுஞ்சென்னை மாநகரினுந்தன்
தமையன்சபா பதிப்புலவன்
தனதரியபிரசங்கத் தைக்கேட்பவர்
தம்மன முருக்கும்வலவன்
தம்பியாமும்மைக் கையேடுபடித்திடச்
சாற்றியவண்ணமே செய்துநடித்திடச்
சத்காலங்கழித்ததின் வருவாய்கொண்டு
சந்தோடமாக வாழப்பவநோய்விண்டு கதி

7 சென்னையினும்முன்னோன் புராணப்ரசங்கம்
செய்துவந் திடவோர்தினத்தில்
தேகவொற்றுமை யில்லாதும்மைப்பாடல்
செப்பிவா வென்றிடமனத்தில்
திருப்தியுடன்சென்றும் முன்னோன்முன்னுட்சொற்ற
செய்யுட்கேவிரிந்த பொருள்சொல்லிக்கற்ற
சிலர்க்குமிக வியப்புண்டுபண்ணிய
செய்தியையறிந்த வெங்கட்குப்புண்ணிய கதி

8 தக்கவர்சென்று நந்தமையற்கவ்வற்புதம்
சாற்றிட மிகவும்வியந்து
தானேரிற்கேட்டா னந்திக்கவடுத்தநாள்
தம்பியா மும்முடனயந்து
சாயுங்காலத்துஞ் சென்றுரைத்துவாவென்ன
சம்மதங்கொண்டு நேற்றிரவினிற்சொன்ன
தனிக்கவிக்கே பொருள்புகலத்தெரிந்து
சந்தோஷிக்கப் பவமகலப்புரிந்து கதி

19 அன்பறிந்தேதிருத் தணிகைக்கடவுள்
ஆரியராய்த் தோன்றியகன்ற
அப்போதேமும்மூன்றின் முன்னவர்பின்னவர்க்
கானபதி கங்கள்புகன்ற
அற்புதமும்புனித முற்றிடுமூவர்
அடைந்துபாடிப் பெற்றிடுந்தேவர்
அமர்ந்ததிருவொற்றி யூர்தினம்போற்றும்
ஆனதென்றறிந்த வெம்மனந்தேற்றும் கதி

20 சிறுபோதுமுதற் சுத்தசத்துவாகாரம்
சிற்றுணவாக் கொண்டுகழித்தும்
தெள்ளியவெள்ளாடை முழங்காற்குமேன்மெய்யைத்
தெரியாமற்பூண் டென்றும்விழித்தும்
திண்ணையிலுயரா சனத்துட்காராதும்
திண்புவிநடையேது முற்றுப்பாராதும்
திருக்கரங்களை வீசாமனடக்கும்
திறமறிந்தோமைப் பேசாமற்கிடக்கும் கதி

21 எவரிடத்துமின் சொல்லாடியுமெக்காலும்
ஈசுரபத்தி காருண்யம்
இரக்கம்பசுபதி பாசவிவகாரம்
இயம்புநற் பதிபுண்யம்
இத்தகையசத் விசாரஞ்சாதுக்களோ
டிரவுபகல்போக்கி வீண்வாதுக்களோ
ரிலேசுமில்லாது செய்துவந்தவருமை
இயலறிந்தோ முய்யவந்தபெருமை கதி

22 சீர்திகழுந்திருத் தணிகைத்தலத்திற்குச்
சிறுவ ரிருவர்சேர்ந்து
செல்லக்காவடிகள் கொண்டவரைக்கண்டு
திருவாய்மலர்ந் தன்பார்ந்து
சிவகுருவின்மேல் வாருமென்றபதம்
செய்யக்கொம்மிப் பாடல்செய்திட்டவற்புதம்
தெரிந்தவரின்றுமிக் கன்புடன்பாடும்
செய்தியையறிந்த வெம்பவமோடும் கதி

23 பச்சையப்பன்பள்ளி முற்பண்டிதர்சபா
பதிமால்மு தற்கற்றோரும்
பலவினவவ தற்குத்தக்கவிடை
பகரக்கேட்ட மற்றோரும்
பயமுமன்புங்கொண் டடங்கிப்பின்னும்
பகரிலக்கிய விலக்கணம்பன்னும்
பலமெய்ப்பொருள் கேட்டானந்தித்தாரென்னும்
பான்மையுணர்ந்து பொய்யினந்தக்காதுன்னும் கதி

24 சென்னையிற்பச்சை யப்பன்பாடசாலையிற்
செந்தமிழ்ப் பண்டிதராகும்
சீர்த்திமிகுங்காஞ்சி சபாபதிமால்
சிறுவர்க்குப யோகமாகும்
செவ்வியவசன நடையிலோர்நூலைத்
தெரித்தருளமிக வேண்டவக்காலை
சிறந்தமநுமுறை கண்டவாசகம்
செய்ததறிந்தோமைக் கொண்டதேசகம் கதி

25 தடையின்றிப்பற்பல விற்பனர்வினவிய
சந்தேகந் தீர்ந்திடப்புரிய
தக்கவராற்கேட்ட வேலாயுதமாலுந்
தரத்தைநன் குறத்தெரிய
தன்னன்பனோடா லோசித்துப்பொருள்சொல்ல
சாதாரணமா யெவர்க்குங்கூடாவல்ல
சதக்கவிகள் சிலேடையாய்வரைந்து
சதிருடனென்மனங் கூடியேகரைந்து கதி

26 தக்கசமயந்தெரிந்து தன்னன்பனும்
தானுஞ்செருக் குடன்துணிந்து
சமுகம்வந்துகூழைக் கும்பிடுபோட்டு
தற்போதங் காட்டாதுபணிந்து
சதக்கவிகளை நம்முன்னர்காட்டி
சங்கக்கவிகளா மீதெனநாட்டி
தக்கபொருளறியோ மெனச்சாற்றும்
தன்மையுணர்ந்தடியே மிகப்போற்றும் கதி

27 புன்சிரிப்போடக் கவிகளைக்கண்டுற்றுப்
புதியபாடல்களென்றும்
பொருளிலக்கணந் தேறக்கற்றுக்குட்டிப்
புகன்ற கவிகளென்றும்
பொருள்பிழை பலதிருத்திக்காட்டிப்
போதுவிண்கழித் திரெனநாட்டிப்
புரிந்தவினயம தறிந்துநடுங்கி
புலமைநன்குணர்ந் தெங்கரணமொடுங்கி கதி

28 பணிந்துதனக்குக் கற்பிக்கவேண்டிய
படித்திரு வுள்ளங்கொண்டு
பாடஞ்சொல்லிவர நரசிங்கபுரம்
பத்தன்வீரா சாமிகண்டு
பரிந்துவணங்கி வந்துவாசித்திடப்
பார்த்துசுந்தரப் பிள்ளைநேசித்திடப்
பயின்றுபாவல ராகப்புகழ்பெற்ற
பான்மையுமறிந்த நாயேமிகழ்வற்ற கதி

29 உற்றவேலாயுத முதலியாரைநம
துரியசீட னென்றுவந்ததும்
உபயகலாநிதிப் பெரும்புலவரென்
றுலகம்புகழப் பேர்தந்ததும்
உயர்சிவஞானக் கதியுறச்சிற்பர
உண்மைதருங்குரு பரசடாக்கர
உபதேசஞ்செய்த துஞ்சங்கத்திலரிய
உத்தமர்சொற் கேட்டவெங்களுக்குரிய கதி

30 பொன்னேரிசுந்தரம் பிள்ளைமாணுக்கர்க்குப்
போதிக்குந் தருணத்தடிக்கப்
போந்தமாணவச் சிறுவர்களவ்வடி
பொறுக்கமாட் டாமற்றுடிக்கப்
பொறுதுபடிப்ப தென்னும்பாசுரத்தைப்
புத்தியிரக்கம் பெறத்தரச்சிரத்தைப்
பூண்டவ்வண்ண நடந்ததைக்கேட்டும்
புன்மையேம்வல்வினை யகன்றிடவோட்டும் கதி

31 சென்னையினும்முடன் திருவொற்றியூர்க்குத்
தெரிசிக்கப் போகுமோரிரவில்
செல்வன்கந்தசாமி லக்ஷ்மணப்பிள்ளையும்
சேர்ந்து நடந்திடக்கரவில்
சிறுபெண்தோன்றிட முன்னவன்வியந்து
சீக்கிரந்திரும்பிப் பின்வரப்பயந்து
செப்பநம்பூதியாற் போக்கியவரிய
சித்தியைத்தெரிந்த வெங்களுக்குரிய கதி

32 திருவொற்றியூர் தியாகராஜர் சந்நிதியில்
தெரிசித்து மண்டபஞ்சேர்ந்து
சிந்தித்திருக்க வத்தருணம்பசியினாற்
றிளைத்தயர்ந்து மெய்சோர்ந்து
சிற்போதுநித்திரை செய்திருக்கமுன்னம்
திருக்கோவிற் குருக்கள்போல்வந்தேயன்னம்
திருப்திகொள்ளக் கொடுத்துப்பின்புமறைந்த
செய்தியுங்கேட்ட நாயேமன்புநிறைந்த கதி

33 இன்றியமையாத வல்லமையறிந்தே
இன்புடன் வைணவர்போற்ற
எழிற்குருபரம்ப ரப்ரபாவம்
என்னும் வசனநூல்சாற்ற
ஈதரியவோர்மகிமை நூலாமென்ன
ஏத்திப்பெற்று விடைகொண்டுமகிழ்ந்துள்ள
எங்குமெவ்விதத்து மிக்கப்புகழ்பெற்ற
இயலுமறிந்த நாயேங்கட்கிகழ்வற்ற கதி

34 காஞ்சிசபாபதிக் குரிசில்முதலிய
கல்வியிற் பெரியர்குழுவில்
கருதுந்தொண்டை தொண்டமண்டலமென்னும்
கலக்கம் வந்திடவழுவில்
கணக்கறிந்தநம்மை வலுவிற்கொள்ளக்
களித்துத்தொண்ட மண்டலமென்விள்ளக்
கண்டவர்சம்மதங் கொண்டவோர்பெருமை
கற்றவர்சொல்லவுங் கண்டயாமருமைக் கதி

35 சென்னையிற் றனவந்தர்களிற்சோமு
செட்டியார் மயிலைநகரில்
சிக்கிட்டிச்சோமு செட்டியார்முதலிய
சிறந்த விவேகிகணிகரில்
சீர்த்திபெறுநும்மை மதித்துவணங்கி
செவிவிருந்திடத் துதிக்கவிணங்கி
செய்தபிரசங்க மாமகிமைபுகலும்
செய்தியுணர்ந்தவெம் வல்வினையகலும் கதி

36 சென்னையின்மெய்யடியார் பத்திநிறைந்த
செங்குந்தரின் மிகக்குறைந்த
செல்வமுமில்லாக் கந்தசாமிமுதலிதன்
சிந்தைவறுமைத் துன்புறைந்த
செய்தியைத்தேவரீர் சந்நிதிக்கண்வந்து
தெரிசித்துவிண்ணப்பஞ் செய்திடவுவந்து
தெரிந்தே "யேட்டாறு" மென்றகவிசொற்ற
திறமுமறிந்தநாயேம் பெறும்பேறுற்ற கதி

37 விட்டுச்செலவுக் காரேனும்பொருள்தரில்
வேண்டாமெனு தனைக்கண்டே
வெறுப்படையாவண்ணம் பிரியமுள்ளார்போல
விரைந்து வாங்கிக்கொண்டே
விருப்பின்படி வெளியினிலெறிந்து
வேகமாய்ச் செல்வதைச்சிலரறிந்து
வியந்ததைநல்லோ ரிடத்துக்கேட்டும்
விவேகமுறுத வெம்மடத்தையோட்டும் கதி

38 பெரியதமையன்மார் தாயார்முதலிய
பெரியர்மற்று மன்புடையோர்
பிரியமோடுமக்கு மணஞ்செய்யவெண்ணிப்
பேசிமகிழ்ந்து நும்புடையோர்
பேராவல்கொண் டுரைக்கமிகப்பயந்து
பிணங்கிமாற்ற மொழிந்திடக்கயந்து
பின்னும்வருந்திடச் சம்மதிபுரிந்த
பெற்றியறிந்தோமை யுண்மதிதெரிந்த கதி

39 உகந்தமெய்யன்புள்ள தமக்கையராகிய
உண்ணாமுலை யம்மையாரின்
உத்தமபுத்திரியாந் தனத்தம்மாளை
உரியநேயப் பெரியாரின்
உரைப்படிமண மாத்திரம்புரிந்தே
உளத்தினிற்பற்றை யனைத்தும்பிரிந்தே
உற்றசிவயோகத் தன்மையுமகத்தில்
உணர்ந்தவராலறிந்தோ மையிவ்விகத்தில் கதி

40 சென்னையிற்சில வித்வான்களடிக்கடி
சேர்ந்துவா தங்கள்புரிந்து
தீராமையாலுமை யடைந்துசந்தேகம்
தெளிந்ததைப் பலர்தெரிந்து
தினமுந்தொந்தரை கொடுக்கவிடுத்துத்
திருவொற்றித் தலப்புரத்தையடுத்தூர்
செறிந்ததோப்பின் மனைமேட்டு லுறைந்த
செய்தியறிந்த வெங்கட்கன்புநிறைந்த கதி

41 திருவொற்றியூர் பட்டினத்தார்திருக்கோவிற்
றினமும் பணியுமோர்மாது
தெரிந்துமைவணங்க மண்கொடுத்துக்கையைத்
திறந்து பாரென்றபோது
சிவலிங்கஞ்சிறி தனேகந்தோன்றத்
தியங்கிநும தருளாலுணர்ந்தான்ற
சித்தரென்றேநும்மைப் பணிந்துசீர்பெற்ற
திறமறிந்தநாயேம் பெறும்பேறுற்ற கதி

42 சீரோங்கும்பொன்னேரிப் பிள்ளைதன்குடும்பச்
சேற்றி லழுந்தியதுன்பம்
தெரிந்தவர்க்குச் சமபுத்தியுஞ்சிவன்
செயலுமென்றுணரின்பம்
சேரத் "திருவோங்கு சிற்சபையு" மென்னும்,
செய்யகவியொன்றைத் தெரித்திடயன்னும்
செவ்வியநிலை பெற்றதுயரழிந்த
செய்தியறிந்தவெம் பொய்ப்பவமொழிந்த கதி

43 தனமும்பத்தியு நிறைந்தவத்திப்பேடு
சபாபதி மால்தன்னுடைய
சகோதரிமணத் தெழுந்தருளவெண்ணித்
தக்கநூஞ் சந்நிதியடைய
'சம்மதித்துச் சாதாரணமாய்ச்சென்றிடத்
தலைப்பாகையில் லாமையினானின்றிடத்
தடுத்திடநேர்ந் திடுமெனத்தெரிந்து
தக்கணநேர்திண்ணையிற் சென்றுபரிந்து கதி

44 இருந்தெழுத்தாணியைக் கொண்டோரோலையில்
எழுதிக்கொண் டிருக்கத்தெரிந்தே
எதிர்வீட்டன்பன் மணவில்லினுழைந்
தெசமானுக் குரைக்கப்பரிந்தே
இருவரும்வந்துடன் மிகவணங்கிநின்றே
இருக்கச் "சோடில்லை" யெனும்பாட்டீந்துட்சென்றே
எழிலுறுமணத் திறஞ்சிலபுகன்ற
இயலுமறிந்த நாயேம்பவமகன்ற கதி

45 சற்சனர்சூழொற்றியூர் வடிவாம்பிகைத்
தாயார்சந் நிதியையடுக்க
சதுர்வேதசார சங்கிரகச்சுவடி
தன்னையோ ரந்தணர்கொடுக்க
தக்கணமத்தலப் பின்புறம்போகத்
தந்தவரைக்காணத் தேவரீரேகத்
தன்னுருக்காட்டா துடன்மறைந்ததன்மை
தக்கவராலறிந்தோ மைப்பெருநன்மைக் கதி

46 ஒற்றியூரில்மௌன நிர்வாணசந்நியாசி
ஒருத்தர் தெருவிற்கிடக்க
உடலபிமானஞ் சற்றுமில்லாததை
ஓர்ந்து பலருநடக்க
உம்மைக்கண்டொருநா ளச்சமுற்றொடுங்க
உற்றவர்மிகவியப் பெனநடுங்க
உத்தமமனித ரென்றும்மைமொழிந்த
உண்மையையறிந்த வெம்போதமழிந்த கதி

47 தேவரீர்சமீபம் வரத்தெருத்திண்ணை
சேர்ந்திருக்க மூலையடுத்தே
சிந்தைகொண்டவரை யிவ்வணமாகத்
தெருவிற் கிடப்பதைவிடுத்தே
செறிந்தமலக்குகை காட்டுக்குநடக்கச்
செப்பிச்செல்லமுன் போற்றெருவிற்கிடக்க
தினங்கழியமறு நாளவர்சென்ற
செய்தியறிந்த அடியேம்பவம்வென்ற கதி

48 உவப்புடன்சங்கரா சாரியார்சென்னை
உற்ற தருணத்திலிங்கே
ஒப்பற்றவாரிய பாஷையிற்கவிஞர்
உண்டோ வென்றருளவங்கே
ஒருவிற்பனன் தேவரீரதுபெருமை
உரைத்திடவுணர்ந் துடனும்மருமை
உணர்ந்தோரைக்கொண் டும்மையழைக்கப்புகன்ற
உண்மையறிந்த வந்தழைப்பதகன்ற கதி

49 உள்ளமுவந்துஞ் சீடருடன்செல்லவங்
குற்றவொரு நூலைக்காட்ட
உபயகலாநிதிப் பெரும்புலவரை
உரைத்திடக் கையைநீட்ட
உரியநும்மருளினுற் பொருள்பொருந்த
உளதியம்பவதி சயித்தங்கிருந்த
உத்தமரெல்லோருங் கொண்டாடத்துலங்கும்
உண்மையுமறிந்த நாயேங்களிலங்கும் கதி

50 போகமென்று மழியாதுபொருந்திடப்
புங்கவர் நிதம்பூச்சொரிந்து
போற்றுந்திருவொற்றி நகர்க்குமழையாற்
போகக்கூடா மையைத்தெரிந்து
புலவரைச்சோமு செட்டியார்மற்றவரைப்
புதுவழிச்சந்தொன்றைக் காட்டிநொடியரைப்
போதினிலத்தலத் தேகச்செய்ததன்மைப்
புகலவுமறிந்த நாயேமுய்யுநன்மைக் கதி

51 ஒற்றியூர்வாகனக் கொட்டாயிற்புலவர்
உறக்கங் கொண்டதைத்தெரிந்தே
ஒழிந்தபாதி யிரவினிலெழுப்பி
உமைசந் நிதியிற்பரிந்தே
உவந்துவிளக்கை நீரைவிட்டெரித்தே
உணவுக்கினிய போனகம்வரித்தே
உரியநால்வ ரோடுண்ணவும்பணித்த
உண்மையுணர்ந்தோமை மெய்யன்பர்கணித்த கதி

52 சுகமிகுஞ்சென்னை வித்வான்கண்ணுடி
சுப்பராயக் குரிசில்வாதம்
தொந்தரையாற்பல சிகிச்சைகள்செய்தும்
தொலையாதிருக்க வவ்வேதம்
சொல்லுங்கணத்தினும் பூதியாலொழியத்
தொழு "தகத்திய" னெனும்பாமொழியச்
சூழ்ந்தவரன்புகொண் டுரைத்திடக்கேட்டும்
தோய்ந்தவின்பின்மனங் கரைத்திடக்காட்டும் கதி

53 செல்வர்நிறைசென்னை மாநகரிலொரு
செங்குந்த னன்பொடுவணங்கி
சீர்பெறும்பஞ்சாக் கரத்தின்மகிமையைத்
தெரிவிக்க வேண்டிடவிணங்கி
திகழைந்தக்கரத்தோர் வகைசொல்லக்கொண்டு
சிந்தித்திடச்சித்தர் வரவதைக்கண்டு
திகைக்கமறைந்ததை யன்பர்கள்புகன்ற
செய்தியையுணர்ந்த வெம்பவமகன்ற கதி

54 சிறந்தவிற்பனர் பற்பலர்வேண்டச்
சென்னைப் பதியினின்று
திருமுல்லைவாயிற் றிருவல்லிதாயத்
திவ்ய தலங்களிற்சென்று
தெரிந்தோர்தெரியாதார் மனநெகிழும்
திருப்பாடல்கள் புகன்றதைமகிழும்
திறமுணர்ந்தோராற் றெரிந்துநண்ணிய
சிற்றடியேங்கள் பெரும்பதிபுண்ணியக் கதி

55 உபயகலாநிதிப் பெரும்புலவருக்
குற்றமுதுகில் வன்பிளவை
ஒருசிகிச்சையிலுஞ் சுகம்பெறுதுள்
ளுடைந்தும் மகிமையினளவை
உணர்ந்தவராகவி னுன்றன்சமுகத்தில்
உரைத்தவுடன்சுக மொன்றவுமிகத்தில்
உஞற்றியநம்பெருங் கருணையின்செம்மை
ஓர்ந்திடற்கேலாத வெங்களையுமிம்மைக் கதி

56 திருவொற்றியூரினின் றல்லினில்லம்வந்து
திண்ணையி லுறங்கக்கண்டு
தேவியார்நந்தாய்போ லுருவெடுத்தங்கையில்
திவ்யோதனந் தெண்ணீர்கொண்டு
தெருத்திண்ணையில்வந் தெழுப்பிக்கொடுத்துச்
செல்லப்பின்னரன்னை யுண்ணெனத்தடுத்துச்
சிற்போதுமுன்னன்னந் தந்தாயெனச்சொல்லச்
சிந்தைகளித்தது மோர்ந்தோமெமைநல்ல கதி

57 திருவொற்றித்தியாகேசர் திருவடிமலர்க்குச்
சிறந்தபா மாலைகள்சாற்றி
சிறியதமையன் பரசுராமபிள்ளைக்குத்
திருநீற்றின்ற் பிணியாற்றிச்
சிதம்பரதெரிசனஞ் செய்வித்திடமன்னும்
சீருற்றிருந்த சடைச்சாமிகளென்னும்
சிதம்பரசாமி வீராசாமியோடும்
சேர்ந்துபுகழ்ந்திடு மெய்யன்புநீடும் கதி

58 விசுவாசமுள்ள விசுவநாதையராம்
விற்பனர் தம்மொடுஞ்சேர்ந்து
மிக்கவளங்கொண்ட புதுவைநகருக்கு
விரும்பி வந்ததையோர்ந்து
வித்வசிரேஷ்டர் பலர்வந்தெதிர்கொண்டு
வியந்துமகிழ்ந்து வந்துநம்மைக்கண்டு
வேண்டியுபசரித்துச் செய்தபெருமை
மேலவர்சொல்லவுங் கேட்டயாமருமைக் கதி

59 விசித்திரமாளிகை விடுதிசெய்திட
மேவி யிருந்திடமகிழ்ந்து
மிக்கமெய்யன்புடன் தக்கவர்சூழ்ந்து
விளங்கிட மனநெகிழ்ந்து
மேதக்ககொந்தமூர் வரதாசாரியாரும்
மேன்மைசேர் தரும லிங்கசெட்டியாரும்
வினவியவைக்குத் தக்கவிடையளிக்க
வியந்ததுமறிந்த வெம்முள்ளங்களிக்கக் கதி

60 அங்குசிலபக லிருந்துதிருச்சிற்
றம்பலத்தில் வந்துசேர்ந்தே
அனுதினஞ்சிற்சபா நாதனைத்தரிசித்
தானந்த பரவசமார்ந்தே
அன்புடன்கேட்டவர் போதமொழிந்திட
ஆனந்தக்கண்ணீர் துளும்பிவழிந்திட
அனந்தவருட் பாசுரங்கள்மொழிந்த
அருமையறிந்த வெந்தரங்களொழிந்த கதி

61 சின்னாளிருந்து விடைகொண்டுநீங்கிச்
சீகாழியாதி நற்பதிகள்
தெரிசித்தருட்பா மாலைகள்சாற்றிடச்
செவியுற்றிட மெய்விதிகள்
தேர்ந்தவர்தமது தீவினைமாற்ற
செயல்பலநல மோர்ந்தவர்போற்ற
தெரிந்தோர்வணங்கிடுங் கனஞ்சிறந்த
செய்தியுமறிந்த வெம்மனமிறந்த கதி

62 சத்துவர்சூழும் பிரமபுரத்தம்மன்
சந்நிதி நேரினிலுவந்து
சன்மார்க்கப்பிரசங்கஞ் செய்திருக்கவந்த
தருணத்தோர் நோயாளன்வந்து
தனதுபெரும்பிணி தீரவேண்டிநின்ற
தக்கணம்பூதிதந் தக்கணமேசென்ற
தன்மையறிந்தவ ரச்சமுமன்புற்ற
தகவுமுணர்ந்தவெம் பொய்ச்சகலன்பற்ற கதி

63 நற்றலங்கள்பல தரிசிக்கவுள்ளன்பு
நண்ணிடுஞ் செல்வர்கள்சூழும்
நகரெனுங்கருங் குழியிலமர்ந்து
நல்லோர் வணங்கிடவாழும்
நாளிற்பரசுராமப் பிள்ளையிறந்திட
நன்குறுஞ்சமாதிக் கிரியைசிறந்திட
நடத்திப்பின்னுந் தலயாத்திரைசெய்யும்
நாட்டத்தைக்கொண்ட தறிந்துநாயேமுய்யும் கதி

64 பத்திநிறைவெங்கட ரெட்டியாருந்தம்
பத்தினி முத்தலம்மாளும்
பரிந்துமிக வேண்டிடவப்பதியில்
பன்னா ளமர்ந்திடநாளும்
பற்பலவிற்பனர் மற்றோர்கள்சந்தேகம்
பாறும்படிச்செய்து வேதாந்தத்திற்சோகம்
பாவனையுரைத்த வுண்மைதனைச்சொற்ற
பான்மையுமறிந்த வெங்கள்வினையற்ற கதி

65 சித்தர்நூற்பற்பல பார்ப்பவர்போன்று
தேர்ந்தபொன் வினைஞரோடு
சின்னாள்பாஷாண வுலோகமுறையுடன்
சிறந்த மூலிகையிடு
சேர்த்தரைத்துப்புட மெரித்துமுருக்கியும்
செய்ததைக்கிணற்றி லெறியத்தருக்கியும்
தெய்வமேகொடுக்கும் வேண்டும்போதென்றிடும்
செய்தியுமறிந்த வெம்போதங்குன்றிடும் கதி

66 இவ்வற்புதங்களைக் கேட்டுப்பற்பல
இரச வாதிகள்கூடி
இழைத்திடும்பெருந் தொழிலைத்தெரிந்தி
தென்னவித்தை யெனநாடி
எண்ணரும்பல வினவத்தக்கவிடை
ஈந்திடக்கண்டிவ ரெவற்றையுந்தடை
யின்றிச்செய்வாரென மிகவுந்துதிக்கும்
இயலறிந்தோமை யெச்சகமுமதிக்கும் கதி

67 இவ்வண்ணங்காலங் கழிப்பவர்போன்றே
இருந்திடக் கருங்குழியில்
இணையிலன்பராம் புருஷோத்தமரெட்டி
யென்பா ரருங்குலவழியில்
ஏற்குமம்மான்பாலு ரெட்டிகருங்குட்டம்
எவ்விதத்துமொழியாத பெருங்கட்டம்
ஏகவிபூதியாற் கருணைபுரிந்துற்ற
இதனையுணர்ந்த வடியேம்பவஞ்செற்ற கதி

68 மற்றோர்முத்துநாரா யணரெட்டிக்கண்களில்
மாறான தோற்றத்தையெண்ணி
மாண்புறுநஞ்சந்நிதி வந்துமுறையிட
மகிழ்வெய்து தீர்ந்திடநண்ணி
மகத்தாம்பூதியை யளித்துமூன்று
மணிக்குள்சௌக்கிய மாக்கியஞான்று
வதிந்தவரச்சுற் றடங்கியவரிய
வண்ணமுமறிந்த வெங்களுக்குரிய கதி

69 பணிந்துதனது செல்வமெலாநும்
பணிவிடைக் காகவேண்ட
பாங்குடன்சீனிவாசப் பெருமாளுக்குப்
பரிந்து செய்யெனத்தூண்ட
பகர்ந்தவண்ணமா யுள்வரைபயந்து
பணிவுடன்செய்தே பரனடிநயந்து
பரமபதத்தை யடைந்தனரென்னும்
பண்பறிந்தோமை யுவந்திடமன்னும் கதி

70 செல்வக்கருங்குழி சுப்பிரமண்ணியச்
செல்வன் றனக்கிருமாதம்
தியசுரம்வர வைத்திலிங்கபத்தன்
தேர்ந்தமருந் தீந்துமேதம்
தீராமற்பூதி யணுவினிற்பாதி
திரிவேளை யளித்திடவுபாதி
தெற்றெனவன்றே யழிவுறக்கேட்டும்
திடபத்தியில்லா வெம்மிழிவறநாட்டும் கதி

71 இரவும்பகலு நித்திரையொழிந்தே
இருக்கவு மோர்தினத் தல்லில்
எழிலார்கற்புடை முத்தலம்மாள்நிதம்
எண்ணெய் வைத்திடுமோரில்லில்
ஏற்றவோர்புதுப் பாத்திரத்திற்சலத்தை
இட்டிடவெண்ணெய்க்குப் பழக்குநலத்தை
எண்ணுதண்ணீரால் விளக்கெரித்ததன்மை
இருந்தவர்சொல்லவு மறிந்தவெமைநன்மைக் கதி

72 பத்தர்கள்பற்பலர் கூடிவெளியிலோர்
பகலின் மாலையிலேக
படபடெனப் பெருமழைபெய்திடப்
பலரும் விரைந்துபோக
பருமழைநும்மேற் றுளியும்படாதவோர்
பான்மையுணர்ந்து பணிந்துவிடாதசீர்
பரவுஞ்சங்கத்தவர் பணிந்தேயுருகும்
பயனையுமறிந்த வடியேம்பெருகும் கதி

73 கல்விநிறை யன்பொழுக்கநிரம்பிய
கருணீகர் மரபிலுதித்த
கனமிகுந்திருச்சிற் றம்பலஞானியாங்
கவிஞன் பலவாறுதுதித்த
காரணத்தால் "நின்னிலை" யெனச்சொல்லும்
கவியொன்றுபதேசித் தேழ்பவம்வெல்லும்
கருத்தினைக்காட்டிய தாலானந்தம்பெற்ற
கணக்குமறிந்த நாயேங்களுக்கன்புற்ற கதி

74 கருங்குழியிலோர் சிறுவன்றனக்குற்ற
கடுங்கோபத் தினினின்று
கனமிகுந்துவாத சாந்தத்தலமெனக்
கருதும் கூடலிற்சென்று
கணிப்பருஞான சம்பந்தர்தம்மடத்தில்
களித்திருப்பதாக வறிந்தும்மிடத்தில்
கடிதம்வாங்கியங் கனுப்பச்சிற்பகல்
கழியவெம்மை நற்றவர்மிக்கப்புகல் கதி

75 நற்சீடரில்ஞானி யாரைக்கூடற்றிரு
ஞானசம்பந்தர் தம்மடத்தில்
நாவலன்தேவி பட்டினமுத்துச்சாமி
நன்குறக் கண்டவரிடத்தில்
நவின்றிடும்போதங்கு வந்தவக்காகிதம்
நண்புடனேக்கிடத் தேவரீர்லிகிதம்
நயந்தம்மடத்துச் சுவாமிகளன்புடன்
நண்ணவதானிகை கொடுக்கவின்புடன் கதி

76 படித்தவுடனீ திலக்கணங்தெரியாத
பாலரெழுத் தெனப்பதற
பகருங்காற்சிந்திய விலக்கணமிந்தப்
பாரிலெனச் சீடருதற
பாங்கெனில்வேறென் றிலக்கணத்தோடே
பார்க்கச்செய்யுமென வக்கணத்தூடே
பரிந்தஞ்ஞானியார் பணிவோடெழுதிடும்
பான்மையையறிந்தே யடியார்தொழுதிடும் கதி

77 தேவரீரக்கடிதத்தை விருப்பின்றித்
திறந்துபார்த் துப்பிச்சேன்று
செப்பிவிடைதரச் சற்றுமனமின்றித்
தெருத்திண்ணை யினின்று
சிறுநகைசெய் தெறிந்ததைத்தெரிந்து
சீடராகும்வேலா யுதமால்பரிந்து
செவ்வனேநோக்கிய வுடன்வரைந்திடும்
சிந்தைகொண்டு நாயேமனங்கரைந்திடும் கதி

78 உம்மிடம்வணங்கி மிகப்பிரார்த்திக்க
உளங்கொண்டு சிலவரிதீட்ட
உத்தரவான்முற்று முதலியாரெழுதி
உடனே தபாலினிலோட்ட
ஊணராமல் "தகரவரி" யெனும்வெண்பாவின்
உற்றபொருள்சொல வனுப்பிடவப்பாவின்
உரையும்வேறுரையும் விடுக்கத்தெரிந்தே
உருகிவணங்கியே படித்துப்பரிந்தே கதி

79 தென்பாலுறுந்துவாத சாந்தத்தலமென்னும்
திருக்கூடற் பதியையகன்றே
சீர்மிகுஞ்செல்வக் கருங்குழிநகர்க்குத்
தேவரீர் திருநாமம்புகன்றே
தீவரமாய்வந்தவ் வீதியைப்பார்த்துத்
தெண்டனிட்டேவர மெய்யெலாம்வேர்த்துச்
செய்யகணக்கிலவ தானிநெகிழ்ந்து
செருக்கழிந்தடங்கி யகமகிழ்ந்து கதி

80 அருட்பிரகாசவள்ளாலுஞ் சந்நிதிமுன்னே
அடியற்ற மரமெனவிழுந்தே
அன்பொடுபன்முறை வணங்கியேத்திட
அருள்செய்திடப் பெற்றெழுந்தே
அடியேன்பிழைபொறுத் தாட்கொண்டருள்செய்யும்
அருளரசேகுருவே யெனவவருய்யும்
ஆதரவோடருள் செய்யவுமளவில்லா
ஆனந்தங்கொண்ட தறிந்தோமைக்களவில்லா கதி

81 சீடராநாயணு ரெட்டியார்காணச்
சிறுவெண்கலப் பாத்திரத்தில்
தெண்ணீருடனொரு பொட்டளமருந்தைச்
சேர்த்தெடுத் துமதுகரத்தில்
சிக்கெனப்பிடித் தடுத்தநாள்திறக்கத்
திகழ்தங்கச்சுண்ண மாகவேசிறக்கத்
தெருமணலிற்கலந் தெரிந்துவிட்ட
திறமுமறிந்தவெம் மூலமலங்கெட்ட கதி

82 அங்குபதினுறுண் டிருக்கக்கூடலூர்
அப்பாசாமி செட்டியாரும்
அற்புதச்செயல்கேட் டுமதுசந்நிதி
அடைந்து பன்முறையாரும்
அன்புடன்பணிந்து தன்தமையற்குள்ள
அரும்பெருநாவின் பிணியதைவிள்ள
அறிந்தவர்க்கிரங்கி யிணங்கியிருந்த
அன்பையறிந்தடி வணங்கிப்பொருந்த கதி

83 கூடலூரினில்வாழு மப்பாசாமிக்
குரிசில் தமையனுரும்
குணவான்ராமசாமி செட்டியினுவிற்
கொண்ட பிணியினுனேகும்
'கொடுமையொழிக்க மூன்றுவேளைபூதி
கொடுத்தத்தன்பத்தை நீக்கியவேதிக்
குணங்தெரிந்துதம் மூர்க்குவிஜயஞ்செய்யக்
கோரியபடிசென் றிருக்கவும்யாமுய்யக் கதி

84 சீர்த்திமிகுங்கூடலூர் யோகியொருவர்தங்
தேகாந்த காலத்தைத்தெரிந்து
செல்வன்தேவநாயக மாலையழைத்தித்
திங்களி லிவ்வுடல்பிரிந்து
செல்வோமிவ்வாக்கையை முன்சொன்னதானத்தில்
செவ்வனேசமாதி செய்யென்றுமோனத்தில்
சிற்போதிருந்து விழித்திடப்போற்றிச்
சிறியேற்குநற்கதி யேதெனத்தேற்றிக் கதி

85 குமரன்தேவநாய கனுக்குப்பிரம்பு
கொண்டு வந்திவ்விடநின்று
குலவுன்தந்தைவி யோகத்தானமிதோவென்று
கூறுவோர் நின்குருவென்று
குறித்தவண்ண மடைந்திடச்சமாதி
கொள்ளவுமோக்ஷ தீபக்கன்மமாதி
கோதிலாமற்செய் தன்போடுமிருந்திடக்
குணமறியாவெந்தற் போதந்திருந்திடக் கதி

86 சீர்பெறுங்கூடலூர் செல்வனப்பாசாமி
செட்டியார் வீட்டினினின்று
செல்வமிகுந்தெய்வ நாயகமாலின்
செய்ய மாளிகைமேற்சென்று
திருக்கரத்தினிற் பிரம்பொடுநின்று
செய்யதந்தைவி யோகத்தானமிதோவென்று
செப்பியநம்மை யக்குமரன் வணங்கும்
திறந்தெரிந்து சிற்றடியேமிணங்கும் கதி

87 இருநிதிசெய்யும் விருப்பினிற்றனத்தை
ஏராளமாய்ச் செலவழிக்கும்
இனந்தெரியா வத்தேவநாயகனுக்
கௌிதிலவ் வெண்ணமொழிக்கும்
இச்சைகொண்டிரும்பின் மூலிகைச்சாற்றை
யெடுத்துச்சுருக்குக் கொடுத்துமாற்றை
யீரெட்டின்மேலாகக் காட்டியபெருமை
யின்னதென்றுணரா வெங்களையருமைக் கதி

88 தேவநாயகனைச் சீடனாகக்கொண்டு
செஞ்சிமலையின் மேல்விடுத்ததும்
தீப்பசிக்கோர்செம்பிற் றெள்ளியநன்னீரும்
தெவிட்டும்லட் டொன்றுகொடுத்ததும்
தீவரமாய்ச்செம்பை விடுத்ததும்பின்பு
சேர்ந்துபோய்க்கூட லூரடுத்ததுமன்பு
செறிந்திடுந்தக்கவர் புகலவுங்கேட்டும்
தெரிந்தவெம்மைமல மகலவுங்காட்டும் கதி

89 மஞ்சக்குப்பத்தி லிருந்திராமகிருஷ்ண
மகிபனி ரவிற்றினமும்
வளநிறைகூட லூருக்குறுஞ்சந்நிதி
வந்துபணிந் திடமனமும்
வாக்குமடங்கி முறைப்படிநுந்திரு
வாய்மலர்ந்தருளும் பிரசங்கத்தின்பெரு
மகிமைதனைச்செவி விருந்தாயருந்தி
வரவறியாப்பிணி மருந்தாய்ப்பொருந்திக் கதி

90 இராமகிருஷ்ணப்பிள்ளை கூடலூரிலிருந்
திரவின்மஞ்ச குப்பம்போக
இருட்டிற்றுணையா வோர்மனிதனிதம்
இவர்க்கு முன்னதாயேக
இன்னாரென்றறிய முயன்றுந்தெரிய
வேலாதவகையாய் மறைந்தவரிய
இதமறிந்துபல்லோர் தினஞ்சொல்லும்
இயல்புணர்ந்த நாயேம்வினைவெல்லும் கதி

91 மகிபனப்பாசாமி செட்டியார்கிடங்கு
வாழைத் தோட்டத்துக்குணேக்க
மரத்திருந்தரவங் கடித்திடவுள்
வந்து விபூதியைத்தாக்க
மற்றதையறிந்தோ ரென்னெனநாக
மாயக்கடித்த தென்னவவரேக
மறித்தசர்ப்பங்கண்டே யுள்ளநெகிழ்ந்திடும்
மகிமையறிந்தநா யேங்கள்மகிழ்ந்திடும் கதி

92 சென்னையிற்பிர்ம சமாஜத்தைச்சேர்ந்த
சிதரநாயக னுகந்து
திருப்பாதிரிப்புலியூரில் விக்கிரகத்தைச்
சேவிக்கக்கூடாதென்றிகந்து
தேர்ச்சியில்லாத மனிதரைக்கூட்டிடத்
தினமும்பிர்மோபாசனையைநாட்டிடத்
திகழுஞ்சகுணோபா சனையைச்செய்யும்
சிலரேமாறிட நாயேந்தம்மையுய்யும் கதி

93 திருநாவுக்கரையரைக் கடற்கரைசேர்த்த
திருப்பா திரிப்புலியூரில்
செப்பிடுமக்ஷய வருடத்திலாற்றுத்
திருவிழா மண்டபநேரில்
தேர்ச்சியிலாச் சிதரனுக்கெதிர்சென்று
செய்தபிரமப்பிர சங்கக்கொள்கைவென்று
சேர்ந்தபெருங்கூட்ட மகிழ்ந்திடச்செய்த
திறமுணர்ந்தவெமை நெகிழ்ந்தின்பமெய்த கதி

94 சீர்பெறுமப்பா சாமிசெட்டியார்நடைத்
திண்ணையினில் விவகாரம்
செய்திருக்கும்போ தொருவன்கண்வலியுடன்
தெருவிற்செல்ல வந்நேரம்
தெரிந்தவனையழைப் பித்துநோக்கிச்
சிறுரஸ்தாளிப் பழத்தினுற்போக்கிச்
சிந்தைகளித்திடச் செய்தவோரருமைத்
திறமுமறிந்த நாயேம்பெறும்பெருமைக் கதி

95 பத்தனப்பாசாமிக் குரிசில்கிரகத்துட்
பங்குனியுத் திரத்திரவில்
பகாருஞ்சித்த ரொருவருட்புகுந்து
பரிந்துபேசிப் பின்விரைவில்
படபடெனச்செல்லப் பார்க்கமறைந்திடப்
பன்னரும்லட்டொன்றி யார்க்குமிறைந்திடப்
பகிர்ந்துகொடுக்க வின்பார்ந்திடவுண்ணும்
பான்மையுங்கேட்ட சிற்றடியேங்கணண்ணும் கதி

96 செல்வமார்புதுவைத் துரைசாமிப்பிள்ளை
தேவரீர் சந்நிதிநின்று
சிற்போதுபேசி நடந்தவரைநாங்கள்
தீவரமா யுடன்சென்று
தெரிந்துகொள்ள நடந்தோடியுந்தோன்றாத
திறமாகவேமறைந் திட்டனரென்றோத
சிரித்திந்நேரங் காசியிலிருப்பாரென்னும்
சித்திபுகன்றதுமறிந்த நாயேமுன்னும் கதி

97 சுகமிகுங்கூடலூர் தாசீல்தார்வெங்கட
சுப்பையர்வந்துன் சந்நிதியைத்
துரிதமாய்க்காண மஞ்சகுப்பத்திருந்து
தொடர்ந்துகொம் பூதும்விதியைத்
துன்பமறியா திரவிற்செல்லநாடச்
சொன்னபடிகொம்புக் காரனாதியோடச்
சோர்ந்துகுறட்டில் வந்துறங்கிடவந்தச்
சோகமறிந்தெம்மைத் தூயவருவந்த கதி

98 தம்மெதிர்வந்து நின்றிட்டவவ்வையரைச்
சற்றுநேர நோக்காது
தயவினுலிருக்கச் செய்துகொம்புக்காரன்
தவித்தன னீதேற்காது
தங்கள்வரவையெவ் வூர்க்குமுன்காட்டிட
சக்கிலியைப்போயங் கிருக்கநாட்டிடத்
தகுமெனுந்திருவாய் மொழியின்றன்மை
சம்மதங்கொண்டிட வோர்ந்தவெமைநன்மை கதி

99 உடன்தனியேசமையற் கட்டுக்குட்சென்றங்
குள்ளானைக்கண் டோர்பாத்திரத்தில்
ஓதனங்குழம்புஞ் சேர்த்துவைப்பாயென்ன
உவப்பொடு வைத்தமாத்திரத்தில்
உகந்துகொம்புக் காரனுக்குக்கொடுக்க
உரைத்தவனஞ் செய்தவன்பசிகெடுக்க
உற்றதனிப்பெருங் கருணையின்றன்மை
ஓர்ந்ததுமுணர்ந்த நாயேம்பெறுநன்மை கதி

100 சேலத்திருந்துசெல் வக்கூடலூரினில்
சேர்ந்துஜவுளி வியாபாரம்
திருவேங்கடஞ்செட்டி பரிசாரகற்குண்ணு
செறிந்துநீள நோயபாரம்
செய்யவெந்தச் சிகிச்சையினுந்தீராது
திகைப்படைந்தப் பெருந்துன்பம்பேராது
தேவரீருந்திருச் சந்நிதியின்றன்மை
தெரிந்துசிற்றடி யேங்கள்பெறுநன்மைக் கதி

101 செல்வமிகுங்கூட லூரிலப்பாசாமிச்
செட்டியார் கிடங்கில்வந்து
சேர்ந்துநாக்கினோ டுண்ணுக்குநீண்டதைத்
தெரிவிக்க வுள்ளமுவந்து
திருநீறெடுத்து மூன்றுவேளைபோடச்
சிறிதுநோயின்றி யத்துன்பமோடச்
சிந்தைகளித்து வணங்கியவருமை
செவ்வனேதெரிந்த வெங்கட்குப்பெருமை கதி

102 அன்பனப்பாசாமி கிடங்குவீட்டுத்திண்ணை
அமர்ந்திருந்த சங்கத்தோர்
“அவனன்றியிந்தச்சீவ” னெனுமிருகட்சி
அடைந்துநஞ் சமூகத்தோர்
அல்லினிற்சொல்லிக் கொள்ளவதற்கோர்கதை
ஆகநும்பருவத் துக்கருள்வோமதை
அறிந்தடங்கிச்சம்மதங் கொள்வீரென்னும்
ஆன்றமொழிப்படி யிருந்திடமன்னும் கதி

103 தெருவிற்செல்லுகிர் வாணசந்நியாசியைச்
சீலனொருவ னேர்கண்டு
சீப்புவாழைப்பழங் கொடுக்கவாங்கித்
தின்றுபோகப் பிரியங்கொண்டு
கீறறியாத்துட்டன் கல்லினாலடிக்கச்
சிரத்திற்பட வேறொருவன்துடிக்கத்
தீயனைமற்றோனைச் சாமியையுஞ்சேர்த்துச்
சென்றுநீதித்தலத் தரசனைப்பார்த்துக் கதி

104 இந்தச்சந்நியாசி வீதியினிற்போய்க்கொண்
டிருக்கவிவன் வாழைக்கனியை
ஈந்தனனிப்பாவி தலையிற்கல்லாலடித்
திரத்தம்வரு வித்தனியை
என்கண்ணாற்கண்டு சகிக்காமலேயுன்ற
னெழிற்சமுகம்வந்து விண்ணப்பித்தேனென்ற
இக்கொடுமொழியைக் கேட்டுமுன்தோன்று
மொருவைக்கண்டுள்ளம் பதைத்தஞ்ஞான்று கதி

105 கனம்பெறுமந்திர் வாணியைநோக்கிக்
கல்லாலடித் தாராரென்ன
கனிகொடுத்தவ ரென்றிடக்கேட்டுக்
கனிதந்தா ரெவரென்ன
கண்டழைத்து வந்தவனெனப்புகன்ற
கணக்கறிந்திவர் பேதமதகன்ற
காட்சியரென்றந்தத் தீயனைச்சிக்ஷித்துக்
கருத்தடங்கிட வெம்மையிரக்ஷித்துக் சுதி

106 ஆதலினா "லவனன்றி" யெனுந்தாயு
மானவராப்த மொழியை
அநுபவித்தவச் சந்நியாசிமூவரும்
அவனேயென்று ரவ்வழியை
அறியாப்பேதவாதி கட்கும்மனித
ராகமுத்தொழிற்குத் தோன்றிடும்புனித
அருத்த "மிந்தச்சீவ" னென்றகவிக்கென்னும்
அருங்கதையருளச் சம்மதிக்கமன்னும் கதி

107 சிலமாதங்கூட லூரினில்வசிக்கத்
திரள்திர ளாகப்பல்லோர்
சேர்வதோர்ந் தெவர்க்குந்தருமச்சாலை
செய்விக்குங் குறிப்பைநல்லோர்
'தெரிந்திடப்புகன் றுடன்பல்வேறு
திவ்யதலங்களின் மணிமுத்தாறு
திகழ்மருங்கினூர் தேடிவடல்வெளி
தேர்ந்ததுமறிந்த நாயேமுருவெளி கந்

108 மாண்பெறுங்கூடலூர் தாலூக்காவைச்சேர்ந்த
வடலூர்பார் வதிபுரத்தை
வந்துகுறிஞ்சிநில வெளியைப்பார்க்க
மற்றவ்வூரி லுள்ளார்சிரத்தை
வாய்ந்துடனெண்பது காணியைநம்மீது
வழங்கும்பட்டாவாச் செய்விக்கவப்போது
மாதேவன்றிருவுள்ள மாமெனமகிழும்
வாய்மையறிந்த நாயேமனநெகிழும் கந்

109 அம்பாபுரத்தில் வசிக்கும்பாகவத
ராகிய வேம்பையர்நம்மை
அடுத்தவடல்வெளிப் பாதையினிற்கண்
டாரென வினவநம்மை
அரியநீலவியாபாரி யென்பாரென்றே
அறைந்துவிரைந்து நடக்கப்பின்சென்றே
அணுகப்பார்த்துங் காணுவகைமறைந்த
அதிசயமோர்ந்த நாயேமன்புநிறைந்த கந்

110 நவில்கல்லக்குறிச்சி நமச்சிவாய
நயினார்தெரி சித்துவணங்கி
நண்ணும்வேட்ட வலத்துக்கெழுந்தருள
நாடிடவவ் வன்பர்க்கிணங்கி
நுணுகச்சமீன்தா ரோர்மனைவிநெடு
நாள்பிர்மராட்சசன் செய்யுந்துன்பம்விடு
நாளிதுவென்ன நடத்தியவருமை
நல்லோர்சொலவு மறிந்தயாம்பெருமைக்

111 வேட்டவலம்பண் டாரியார்வள்ளனின்
  வியன் மகிமையைத்தெரிய
மிக்கவெழிலுள்ள விருநாற்காலிகள்
  விடுதியினில் வைத்துரிய
    மேன்மைபெறுமிந் நாற்காலியில்வதியில்
    மேலோரென்றெண்ணி யிருக்குமத்ததியில்
    விரும்பியவண்ணமுட் கார்ந்திடவணங்கும்
    விதமுமறிந்தோமைச் சேர்ந்திடவிணங்கும் கதி

112 மந்திரவாதிக ளெவரையும்வீட்டுக்குள்
  வாராதவகையாய் விரட்டி
வாய்விடவொண்ணு வலங்கோலக்கோரணி
  மனஞ்சென்ற வழியரட்டி
    மருட்டிவரநும் பூதியினலேக
    மற்றோர்மனைவியின் வல்வினையும்போக
    மகிழ்ந்துபண்டாரியா ரடிமையாகப்பெற்ற
    மகிமையறிந்தவடி யேம்பவமற்ற கதி

113 மிக்கவளநிறை செல்வர்கள்வாழும்
  வேட்டவலத் ததிபதியாம்
மேதகுவேங்கட்ட ராயபண்டாரியார்
  வேண்டிக்கொள்ள ஞானநிதியாம்
    வித்தகநுந்திரு வுள்ளங்கொண்டாங்கு
    வீற்றிருக்கபுலைப் யொழுக்கமீங்கு
    விளைந்திருப்பதைத் தெரிந்துமாற்ற
    வேண்டுமென்றெண்ணி யெங்களுக்கேற்ற கதி

114 சீர்பெறும்பண்டாரியா ரிடமன்போடு
  ஜீவகாருண் யத்தின்பெருமை
சிற்போதநன்று யுட்பதியப்போதிக்கத்
  தேர்ந்தொடங்கி யிவ்வருமை
    தீனனேற்கும்பெருங் கருணைகூர்ந்து
    செப்பவுமெத்தவஞ் செய்தேனென்றோர்ந்து
    தேவரீரைவலம் வந்தடிவணங்கும்
    தீவரமறிந்து மெய்த்தவரிணங்கும் கதி

115 இன்றுமுதலொன்றுங் கொல்லாவிரதங்கொண்
டெழிற்சைவ நெறியிலங்க
எங்கணுநின்றேயத் தென்றிடவவ்வணம்
இசைந்தவ் வொழுக்கந்துலங்க
'எல்லாத்தேயத்திலும் பறையறைந்திட
எல்லவருந்தம்பாற் சைவநிறைந்திட
இருக்கச்செய்து குருநெறியினின்ற
இதமறிந்த வெம்பவமதகன்ற கதி

116 கொடுந்தேளரவு முதலியவுயிரைக்
கொல்லாத வகையிற்றடுத்துக்
கூலியைப்பெற்றுப் பிடித்துவிடுந்தொழிற்
கொண்ட பிடாரனைவிடுத்துக்
குலதெய்வத்துக்குப்பாற் பூசையைச்செய்யும்
கொள்கைவிளங்கிடச் செய்வித்துத்தாமுய்யும்
குணநிறைந்த பண்டரியார்பெருமை
கொண்டதறிந்த வடியோமையருமைக் கதி

117 செல்வர்கள்சூழுந் திண்ரங்கோட்டைமலையிற்
சேர்ந்திருந் தஞ்ஞானமேக
சிறந்தகற்பட் டிராமலிங்கப்பிள்ளை
சிவயோகம் பண்ணுளாகச்
செய்திருந்துந்தன்னைத் தலைவனைவிளக்கும்
செய்யகுருவலிந்தே வந்துகிளக்கும்
சிந்தைமேற்கொண்டிருக்கப் பலர்மதிக்கும்
திறமறிந்தோமைத் தக்கவர்விதிக்கும் கதி

118 வடலூரிலிருந்த வர்க்கருள்செய்ய
வரத்திண்ரங் கோட்டைமலையின்
வசித்தகற்பட் டிராமலிங்கையர்நும்
வரவெதிர் சென்றுதலையின்
வணங்கவவரை யன்போடுபரிந்து
வடலூர்க்குடன்வந் தருளப்புரிந்து
மகிழ்ந்தன்னந்தருஞ் சத்தியதருமச்சாலை
வதியநினைந்த நித்தியமொழியப்பாலைக் கதி

119 சாற்றும்பிரபவ விடபம்பன்னொன்றில்
தருமச்சாலை ப்ரவேசம்
தரிசிக்கவந்த வொருபதினாயிரம்
சான்றோர்கள் பற்பலதேசம்
தாராளமாய்முத் தினமன்னமருந்தத்
தங்கியநண்பர்க்காறு திங்கள்பொருந்த
சாமானிருந்தசித்தி கண்டோரகத்தில்
சந்தோடங்கொண்ட தறிந்தோமையிகத்தில் கதி

120 கவினுறுஞ்சாலைப் பிரவேசத்தன்றுஜீவ
காருண்ய வொழுக்கமென்னும்
கணிப்பருஞ்சிறு வசன நாலினைக்
கனகசிதம் பரமன்னும்
கனவெங்கடசுப்பா தீக்ஷிதரைக்கொண்டு
கலைவல்லோர்சூழ்ந்த வரங்கேற்றிடல்கண்டு
கற்றவர்மற்றவர் புகழ்ந்திடப்பெற்ற
கணக்கறிந்தோமை மகிழ்ந்திடவுற்ற கதி

121 சத்தியதருமச் சாலையிற்பசித்துத்
தவித்து வந்தவர்க்கென்றும்
தடையின்றியன்ன மளித்திடக்கட்டளை
தந்தருளியவா றின்றும்
சரிவரவுஞ்சாலையை வலஞ்செய்திடச்
சகலபிணியுமகன் றின்பமெய்திடத்
தகுமென்றபடி நடக்கவுங்கண்ட
தமியேமவத்தைக் கடக்கவுங்கொண்ட கதி

122 சத்துவர்சூழும்பாபுரம் வேம்பையரைச்
சத்திய தருமச்சாலை
சார்ந்துசன்மார்க்கப் பஜனைசெய்யவருள்
தந்தவண்ண நிதங்காலை
சாயுங்காலத்துமங் குள்ளாருடன்கூடச்
சாற்றியபடியே யுள்ளன்புடன்பாடத்
தம்மனமுருகி நின்றவப்பெருமைத்
தரமுமறிந்த வெங்களையருமைக் கதி

123 தருமச்சாலை யறைக்குளிரவெலாம்
தனியாகச் சீமைதுருத்தி
தானேவூதப்பெற்றுச் செம்பியம்பாஷாணச்
சரக்குவகைகள் வருத்தி
'தங்கம்வெள்ளிக்குரு குளிகையுமௌடதம்
தக்கசித்துப்பெரு நூற்படியேசிதம்
சரிசெய்தெறிந்தும் விழித்துமிருந்த
தன்மையறிந்த நாயேமன்புபொருந்தக் கதி

124 அந்தவேம்பையர் தருமச்சாலையறைக்குள்
அடைந்தார்க்குந் தெரியாமல்
அருஞ்சிற்பொருள்கொண் டம்பாபுரத்திற்சென்
றடைவொன்றும் புரியாமல்
அவைகளைத் துருத்தியைக்கொண்டூத
அனன்மிகவெடித்துப் புகைமோத
அக்கணமிரண்டு கண்களுமவிந்த
அதிசயமுங்கேட்ட வெம்மனங்குவிந்த கதி

125 எச்சிகிச்சைசெய்துங் கண்கள்தெரியாமல்
இருந்துவருத்த மடைந்தே
எந்தைநுஞ்சந்நிதி வந்துநடந்ததை
இயம்பிமன முள்ளுடைந்தே
இருக்கக்கருணைகூர்ந் தங்கைச்சலத்தால்
இசையத்தடவிச் சிரித்தநலத்தால்
இருவிழிடத்தினிற் சுகமதுபொருந்த
இயற்றியதறிந்த வெம்மனந்திருந்த கதி

126 மாதவர்சூழ்வடற் பதியில்வாழ்ந்திடும்
வைத்திநாத வய்யர்தமது
மகத்துவத்தந்தை சிரார்த்தத்துகந்த
மறையவ ரில்லாதுநமது
மாண்பெறுஞ்சந்நிதி முன்வந்துபுகன்று
மயங்கிநின்றிட வுடனேயகன்று
மறுநாழிகைக்குள்ளவ் வேம்பையரைக்கூட்டும்
மகிமையறிந்தோமை வல்வினையையோட்டும் கதி

127 மாயூரஞ்சிவரா மையர் தனக்கொரு
மைந்தனில்லாது துன்படைந்து
மதலைப்பட்டி லிருந்துநின் சந்நிதி
வந்துவணங்கி யுள்ளுடைந்து
மனக்குறையைச் சொல்லவதற்குத்தரம்
வளம்பெரும்புலவ னூரிற்சத்திரம்
வழங்கக்கட்டி வையுமெனப்புகன்ற
வண்ணஞ்செய்ய வறிந்தோமைவன்பகன்ற கதி

128 அவர்மனைவியின் சங்கத்தோட நீங்கிட
ஐந்துவேளை பூதிகொடுத்தே
அடுத்தசந்திர திசையினிற்பெண்ணை
ஆற்றங்கரை யினிலடுத்தே
அமர்கணபதியா லயக்கீழ்ப்புறம்
ஆண்பிறக்குநமக் கென்றிடுந்திறம்
அருளியபடி நடந்தவோராருமை
அறிந்தசிற்றடி யேம்பெறும்பெருமைக் கதி

129 அன்பறிவாதி சுபகுணம்யாவும்
அமைந்த வெங்கடேசய்யர்
அருந்திருமுது குன்றினில்வக்கீல்
ஆகுந்தொழிற் செய்யுமெய்யர்
அற்புதநின்றிருச் சமுகத்தின்பெருமை
அறிந்துதெரிசித்துப் பெற்றவோராருமை
ஆர்ந்துவாரந் தோறுஞ்சனிக்கிழமை
அல்லினில்வந்திட வெங்கட்குப்பழமைக் கதி

130 அன்பாய்ச்சனிவாரந் தோறுமங்கிருந்தவ்
வையர்வடல் வருமிரவில்
அவியாமலிரண்டு தீவர்த்திகள்கூட
ஆளறிய வொண்ணுக்கரவில்
அடுத்துவந்தேவடற் கருகாமையில்
அவரைவிட்டகலச் சற்றுந்தீமையில்
லாதுநிகழ்ந்த மகிமையைக்கேட்டும்
ஆணவநீங்காத வெம்மலமோட்டும் கதி

131 பாரிற்படிப்பவர் கேட்பவர்பண்டிதர்
பாமரர் தம்மனமுருக
பாடல்பல்லாயிரம் பகர்ந்துதிருவருட்
பாவெனுமெய்ப் புகழ்பெருக
படியேறயார்க்குஞ் சோபானமாய்விரித்துப்
பாங்குடனைந்து முறையாகப்பிரித்துப்
பண்புடனச்சிடு வித்ததின்பெருமை
பல்லோருஞ்சொல்ல வறிந்தோமையருமைக் கதி

132 ஆயிரமற்புதா னந்தாதீதப்பொருள்
அமைந்த பாடலைமதித்தே
ஆறுவதுமுறையாக வருத்ததை
அச்சிடாத வண்ணம்விதித்தே
ஆறந்தாந்தநெறி சேரவரும்வரை
அன்பர்சேமித்துவைத் தன்முறையென்றுரை
அரியசெயலினை யான்றவர்புகன்ற
அடைவுமறிந்த நாயேம்பவமகன்ற கதி

133 அருட்பாக்களைச் சேர்த்தைந்துதிருமுறை
அச்சிடுவித்த புத்தகத்தின்
ஆதியிற்றிருவருட் பிரகாசவள்ள
லாரென்றமைத் ததையகத்தின்
ஆற்றுதுடன் "வள்ளல் ஆர்" எனப்பிரித்தல்
ஆமெனவிற்பனர்க்குப் பொருள்விரித்த
அற்புதமறிந்தோர் பேரானந்தம்பெற்ற
அடைவுமறிந்தோமை யாராதவின்புற்ற கதி

134 நல்லோர்வாழாலப் பாக்கத்திலன்புநிறை
நாயனு ரெட்டியாரை
நாணமிலாதவ்வூர் சீனிவாசனென்போன்
நாற்பது பேர்தீயாரை
நட்டிரவடிக்க வருவித்துநோக்கி
நணுகவவ்ரையங் கில்லாதுநீக்கி
நண்பிலானைச்சிட்சை யடையவுமெண்ணிய
நலமடைந்த துணர்ந்தயாம்புண்ணியக் கதி

135 பத்தியினிறைந்த நாயனுரெட்டியார்
பத்தினியைப் பன்னுளாகப்
பற்றியபிர்ம ராக்ஷசைப்பூதியைப்
படைத்து விரைவிலேக
பணித்தவவ்வம்மையின் மூர்ச்சையைப்போக்கிப்
பாலகனில்லாக் குறையையுநீக்கிப்
பலருங்களித்திடச் செய்தவோர்பெருமை
பகரவுங்கேட்ட நாயடியேமருமைக் கதி

136 தக்கணத்திருந்து நான்குசாஸ்திரிகளுங்
தரத்தைச் சோதிக்கநினைந்து
சாலைக்குவரும் வழியினில்வேம்பையர்
தன்னைக்கூட்டி வந்துமுனைந்து
சந்திக்கநினைத்த வேதத்தினுண்மையைச்
சாற்றிக்கொண்டிருக்கக் கேட்டதன்வண்மையைத்
தக்கணஞ்சென்றதைத் தக்கவர்புகன்ற
தன்மையுமுணர்ந்த வெம்வினையகன்ற கதி

137 சத்தியதருமச் சாலையில்வசித்த
சனங்களுக் கன்னமருந்தச்
சாலாதிருந்ததை யங்குள்ளோர்நும்முனம்
சாற்றிட வெழுந்தங்கிருந்த
சகலர்க்குநுந்திருக் கைகளாற்பரிந்து
சரிசெய்தபின்னு மீந்திருக்கப்புரிந்து
சந்தோஷிக்கச்செய்த தன்மையைக்கேட்டும்
தாமறியாவெங்கள் வல்வினையோட்டும் கதி

138 சற்சனர்சூழம்பா புரத்துக்கடுத்தவூர்
தங்கவன்று மத்தியல்லில்
தன்குன்மநோயா லொருவனழல்கேட்டுச்
சகியாது சென்றவனில்லில்
சடுதியிற்றுளசி நீர்குடிக்கப்புரிந்து
சற்றுநேரத்துக்கு ணீக்கிடத்தெரிந்து
சந்தோடங்கொண்டதைத் தக்கவர்சொல்லவும்
தாமறியாதவெம் வல்வினைவெல்லவும் கதி

139 சிவபத்தியார்சிவ சிதம்பரநாவலர்
திருப்பா திரிப்புலியூர்க்குச்
செய்தவந்தாதிக் காகச்சாற்றுக்கவி
தேவையினால் வடலூர்க்குச்
சேரநுஞ்சமுகத்தி லொரேரிமிடத்தில்
திறங்தேட்டைத் தள்ளியிருபதிடத்தில்
சிலமொழிகளை மாற்றவருள்தந்த
சித்தியுமறிந்த நாயேங்கட்குகந்த கதி

140 சிவசிதம்பர முதலியார்நும்மொழி
சிரங்கொண் டவ்வணமாற்றி
சிந்தைகனிந்து வணங்கிச்சாற்றுக்கவி
செய்தருளு மெனப்போற்றித்
திருச்சந்நிதிமுன் னிற்கவிருந்திடச்
செப்பியோர்கவி யதற்குப்பொருந்திடத்
திருவுளங்கொண்டரு ளப்பெற்றுமகிழ்ந்து
சென்றதுணர்ந்த வெங்கன்மனநெகிழ்ந்து கதி

141 சிதம்பரங்கிழக்குச் சந்நிதிவீதிசத்
திரத்தி லன்பர்களுடனே
சீர்மிகுஞ்சுந்தர சாமிகள்விஜயஞ்
செய்திருக் கின்றனருடனே
சென்றவர்சமயந் தெரிந்துவாருமென்று
தேவரீர்வடச் சத்திரத்தினின்று
திருவுள்ளம்பற்றநும் மடியார்விரைந்து
சேர்ந்துபார்த்திட வெந்தீவினைகரைந்து கதி

142 அதிவர்ணுசிரமம் பெற்றவப்பெருமான்
அவரை நீவிராரென்ன
அருட்பிரகாசவள்ள லடியர்தேவரீ
ரதுதற் சமயமென்ன
அறிந்துவர விடுத்தாரெனப்புகல
அக்கணமெழுந்தவ் விடம்விட்டகல
அங்குசிரவணஞ்செய் திருந்தோர்யாவரும்
அவருடன்விரைந் தெவருந்தாவரும் கதி

143 சிவகாமம்பல புகன்றுகரகோஷம்
செய்துவீதி வரும்போது
தெருவிற்பல்லோர் மனங்கசிந்துருகி
சேர்ந்து மகிழ்ந்திங்கிது
சிறந்தகாட்சி யென்றேவரத்தெரிந்து
தெருவாயிற்படி யருகிற்பரிந்து
செல்லவிருவரு மிறைஞ்சிப்போற்றும்
சீர்மையுணர்ந்த வெம்பிறவிமாற்றும் கதி

144 சத்திரத்துற்றுரை யிருக்கப்புரிந்து
சாமியை யுட்காரப்புகல
சந்நிதானத்தெதிரி லுட்காருவது
சரியல வெனவகல
சாற்றிடவும் பற்பலதரமுமது
தரமறிந்தவ ராதலிற்றமது
சம்மதம்போன்று சற்றொதுங்கியிருந்த
தன்மையுணரா வெமைநலம்பொருந்தக் கதி

145 சுந்தரஞ்சேர் கோடகநல்லூர்ச்சுந்தர
சுவாமியுடன் பெருந்தரத்தில்
சுத்தசித்துச்சித சித்தையிரண்டுநாள்
சோர்வறப் பேசச்சத்திரத்தில்
துலங்குஞ்சத்துநும் முன்வென்றிபெறுது
தோல்விபெறவவர் தம்மனம்பொறுது
சோகங்கொள்ளவுப சரித்துமீட்டும்
சுகம்பெற்றிடவெம் வல்வினையோட்டும் கதி

146 சோர்வுற்றவாதத்தை மூன்றுதிமிடத்தில்
துலங்கிட மாற்றிமொழியச்
சுந்தரசுவாமி மிகவும்வியப்புற்றுச்
சுகமுறுங் கண்ணீர்வழிய
சோகமுற்றெழுந்து விபூதிகொடுக்கச்
சொல்லியும்பன் முறைநயந்துதடுக்கச்
சூழ்ந்தவர்துஞ்சந் நிதானத்தின்பெருமை
சொல்லவறிந்த நாயேம்பெறுமருமைக் கதி

147 தம்மிடமிருந்த பூதியைநம்முடைத்
தனிநெற்றி யினிற்றரித்துத்
தடவிப்பூதியிற் கலந்துகொண்டுமுன்
தரித்தியா வர்க்கும்பிரித்துத்
தரநாகப்பிள்ளை மகாதேவமாலை
சாற்றவுத்தரவாற் கேட்டந்தநூலைத்
தம்மைமறந்து பேரானந்தமுற்றிடும்
தரமறிந்தநாயேம் போதமற்றிடும் கதி

148 சுருதியினுள்ள பிமதநன்குணர்ந்த
சுந்தர சுவாமியைநோக்கிச்
சொற்பொருளிலக்கணந் தேர்ந்ததைப்போன்று
தோய்ந்த வநுபவமாக்கிச்
சுகம்பெறின்மிக நன்றெனமொழிந்த
சொற்றிறங்கேட்ட வுடன்போதமழிந்த
சூழ்ச்சியறிந்தவர் தம்மனந்தயங்கும்
துறையறிந்தோமை யுண்முகம்வயங்கும் கதி

149. சாமிமனைவியா ரைத்திருவாசகம்
சாற்றிடச் சொல்லவெல்லோரும்
தத்தமன முருகிடமூன்றுநாள்
சாயுங்காலம் வரநேரும்
தருணம்விடை பெற்றெழுந்துபோகச்
சாமியுருவாறு திங்களிலேகத்
தகுமென்றபடி நடக்கநேர்ந்த
. தன்மையுங்கேட்ட வெம்பவந்தீர்ந்த சுதி

150. செல்லுஞ்சாமியுடன் சிலரையனுப்பிடச்
சென்றவர் வணங்கிநின்று
தேவரீரெங்குருநேரி லுட்கார்ந்திடச்
சித்தங்கொள்ளாத தென்னென்று
செப்பவெதிர்நின்றோர் சத்தியீர்த்துக்கொள்ளும்
சித்தியுள்ளபெருஞ் சித்தரெனவிள்ளும்
செயலறிந்தன்பு மச்சமும்பெற்றிடும்
திறமறியாத வெம்பவமற்றிடும் கதி

151 மாறுகொண்டாறு முகநாவலர்சொற்ற
மாண்பறு நாமத்தைநோக்கி
மன்னுமரியவான் றோர்களின்பற்பல
மகத்துவ மொழிகளாற்றேக்கி
மகிமைசேர்மூவரை நாயனுரென்றிடும்
மதத்தைமறுத்துச் சுவாமிகளென்றிடும்
மாட்சிமைமிறைந்த பேரதைப்புகன்ற
வண்மையுமறிந்த வெம்வினையகன்ற கதி

152 சீர்மிகுங்குறுமுனி முதலியோர்பூசனை
செய்தொளிர் வேளூரிலிலங்கும்
தேவனைத்தெரிசனை செய்திடுதற்கெண்ணிச்
சென்றிடவத் தலந்துலங்கும்
திருத்தொண்டுசெய்யுந் தருமகர்த்தர்உமைத்
திருப்தியுடன்கண்டு செவ்வனேயருமைச்
சிரத்தையுடன்வைத் தியநாதரின்மேற்றுதி
செய்யவேண்டு மடியோமைப்பெரும்பதிக் கதி

153 புள்ளிருக்கும்வேளூர் கோயிலிற்றருமம்
புரியுமுலக நாதவள்ளல்
பொருந்துந்தம்புகழு மிருக்கவேண்டுமெனப்
புகன்றிடவு மவர்துள்ளல்
போகப்பன்னிரண்டு பாமாலையருளப்
பொருளறிந்தென் செய்தோமெனமருளப்
புன்மைதொலைத்திடத் திருவுளங்கொண்ட
புதுமையறிந்தோ மைப்பெருநலங்கண்ட கதி

154 அன்றுமத்தியிரவ தனிலவ்வள்ளல்
ஆர்க்குந் தெரியாமலுவந்தே
அரும்பெருஞ்சிரு றுஞ்சமுகத்தில்
அடைவொ டெதிரில்வந்தே
அடங்கிமன்னித்திட வேண்டிக்கொள்ள
அன்புடன்தேவரீ ரும்வணங்கியுள்ள
மார்ந்தபடியன்று முதலாய்நடந்த
அதிசயமறிந்த வெம்போதங்கடந்த கதி

155 மஞ்சக்குப்பம்கோர்ட்டு சிரஸ்தேதார்
வடனுஞ் சந்நிதிவந்து
வணங்கித்தேவரீரைத் தமதூருக்கு
வரவேண்டிட வுவந்து
வண்டியில்வரும்போ திரவிற்குள்ளஞ்சா
வடியிலிரண்டு திருடர்களஞ்சா
வண்ணமவ்வண்டியை நிறுத்தெனச்சொன்ன
மாத்திரத்தில்வண்டிக் காரன்பயந்துன்னக் கதி

156 சேவகனுமுந்திரித் தோப்பின்மறையத்
திருடர் நெருங்கவுன்னச்
சீக்கிரம்வண்டிவிட் டிறங்கவைரமோ
திரமவி ழெனச்சொன்ன
தீமொழிகேட்டவ சரமோவெனநோக்கச்
சிறுதடியைக்கொண் டடித்திடக்கைதூக்கத்
திகைத்தசையாது நின்றிடவுன்னிய
திறந்தெரிந்தநாயே மின்பமன்னிய கதி

157 பத்தன்ராமச்சந்திர முதலியாரிவர்களைப்
பற்றிப்போக வுளத்துன்னப்
பரமசிவன்செய்த திருவிளையாட்டுநம்
பாலெனத் தேவரீர்பன்னப்
பணித்தபடிவண்டி யேறிச்சென்றிடப்
பார்வையற்றேயத் திருடர்கணின்றிடப்
பார்த்துள்ளிரங்கிப்பிச் சென்றவுடன்சென்ற
பான்மையுணர்ந்த வெம்பவ்வமதகன்ற கதி

158 அப்போதத்திருட ரச்சமுற்றேடிட
ஆரிடத்துஞ் சொல்லாவண்ணம்
அருளியிருநாளங் கிருந்துமகிழ்ந்தே
அகன்றுவட லூரைநண்ண
அச்சித்தியைச் சேவகனுலுத்யோகஸ்தர்
அறிந்தடிக்கடி மற்றும்விவேகஸ்தர்
அரியநுஞ்சந்நிதிக் கேவரவிருந்த
அருமையறிந்தநாயே மன்புபொருந்தக் கதி

159 திருத்தகுதிருவ திகைமேவவத்
திருநகர் குழாஞ்சேர
செறியுநெருக்கஞ் சகியாதருகினிற்
சிறிய தோப்பினுநேரத்
திருவுருவிரண் டிடத்துந்தெரிய
சேவித்தமார்ந்தார்கள் பிரியமாப்பிரியத்
திரும்பவுமோரிடமே யமாருமை
செப்பவறிந்த நாயேம்பெறும்பெருமைக் க

160 அன்பனொருவனைக் குறிஞ்சிப்பாடியில்
அரவங்கடிக்க வக்காலை
ஆணை நம்மேலிடத் தாம்இதந்தோபழி
ஆமெனமூன்று நாட்காலை
அவன்வடனுஞ் சந்நிதிமுன்னின்றிட
ஆணைவிடுத்துப்பா லீந்துவாவென்றிட
அவ்வணஞ்செய்ய நாகம்புற்றினுழைந்த
அடைவுமறிந்த நாயேம்பற்றிவிழைந்த க

161 அரியசங்கீதவித்வான் கிருஷ்ணையர்திரு
அருட்பாவி லோர்பாசுரத்தை
அபுருபராகத்திற் பழகிநுஞ்சமுகம்வந்
தடைவுடன் பாடியதிறத்தை
அறிந்தவரிலு மதிகவின்னியாச
மாகப்பாடத்தெரிந் தொன்றுமேபேச
அறியாதச்சங் கொண்டேமயங்கியிருந்த
அதிசயமுமறிந்தோ மன்புபொருந்தத் கதி

162 திருவருட்பாடனுந் திருக்கரத்தாற்றீட்டுந்
தினத்திற் பொழுதுபோகத்
பயின்றியெழுதிக் கொண்டிருந்ததைத்
தெரிந்த சிலருக்காகச்
சீக்கிரம்விளக்கேற் றிடச்செய்தெழுதும்
சித்திதெரிந்தோ ரச்சங்கொண்டுதெர்ழுதும்
திரும்பவுமங்கு செல்லாமலுமிருந்த
செய்தியறிந்த நாயேம்பலன்பொருந்தக் கதி

163 வடலூரென்னும் பார்வதிபுரத்தினும்
மகிமை பலராற்றெரிந்த
மறையவர்கொங்கரா பாளையத்திருந்து
வந்துதன் துன்பத்தைப்புரிந்த
மாத்திரத்திலவர் கழுத்திலோராட்சுமை
வதிந்ததைப்பூதியான் மாற்றியதாலுமை
வணங்கித்துதித்துச் சென்றமகத்துவ
வண்ணமுமறிந்த வெங்களைத்தத்துவக் கதி

164 சீர்பெறுமாடூர் மாதவச்சபாபதி
சிவாசாரி யாரைப்பரிந்து
சென்றழைத்துவந் தங்கிருத்திக்காயத்ரி
செம்பொரு ணன்குறப்புரிந்து
சித்திபுரத்தி லிருந்திடவுத்தரம்
செய்தவண்ண மமர்ந்திடவத்தரம்
தெரிந்தமற்றவ ரன்போடுவந்திட்ட
திறமுமறிந்த வடியேமவங்கெட்ட கதி

165 இரண்டொன்றென்னுச் சமரசநூலெனும்
எழிலுறும் ஒழிவிலொடுக்கத்
திலகுமுதற்பாவுக்கு விருத்தியுரை
இயற்றி யச்சினிலடுக்க
எண்ணியபடி நடத்தியிவ்வுலக
மெங்கணும்பெரும் புகழுற்றேயிலக
இழைத்தரும்மரிய மகிமைதனைச்சொற்ற
இயலறிந்தவெம் பவமதனைச்செற்ற கதி

166 சற்சனர்சூழ்வட லூரினிற்சத்திய
தருமச்சாலை யிற்செம்மைத்
தரமிகுஞ்சென்னை நகர்மரவாடி
தன்னிலு மோர்பகலும்மைத்
தக்கவாறுமுக முதலியார்மற்றவர்
தம்மொடுகண்டு வியந்ததைநற்றவர்
சாற்றிடவச்சுற் றன்போடுதுதித்திடும்
தன்மையறிந்தோமைச் சான்றோர்மதித்திடும் கதி

167 மருவளர்வட லூரில்வசித்திடும்
வைத்திநாத வையர்தமது
வன்மதியாற்குற்றப் பத்திரிகைப்பெற்ற
வகையினை வள்ளாலுமது
மகத்துவச்சந்நிதி வந்துபுகன்றிடும்
வணமறிந்துபூதி தந்தேயகன்றிடும்
வாய்மையிதென்ற படியேநடந்திட்ட
வகையுமறிந்த வெம்பவமேகடந்திட்ட கதி

168 விற்பனர்சூழ்குறிஞ்சிப் பாடிபோலீஸ்ஹேட்
விஜய ராகவன்வந்து
வேண்டித்தனக்குற்ற பார்வைக்குணத்தினல்
விளைந்த துன்பத்தாறொந்து
மிகுந்தகட்டமடை கின்றேனென்றிட
விரைந்தவர்படும் வருத்தம்பொன்றிட.
விரும்பிராமநாமப் பதிகம்புகன்றிட்ட
விநயமறிந்த வெம்பவமதகன்றிட்ட க

169 வர்த்தகர்சூழ்கொங்க ராபாளையந்தன்னில்
வயதுதொண்ணூற் றுறுகொண்ட
வார்த்திகக்கிழவி நடுக்கமிக்குண்டாகி
வந்துநின் சந்நிதிகண்ட
மாத்திரத்திலந்த வம்மையினடுக்கம்
மாறிடக்கண்டவர் மிக்கவன்பொடுக்கம்
வாய்க்கப்பெற்ற தறிந்தோர்சொல்லக்கேட்டும்
மனமடங்காத வெம்வினையோட்டும் க

170 சத்தியதருமச் சாலையில்வசித்த
சற்சனர் சித்திரைமாதம்
சகத்தின்மாரியில் லாமையினால்வெப்பம்
சகிக்காமற் றமதேதம்
சாற்றிடநுமது சந்நிதியின்முன்னர்
தமதடியினீர்விடச் செய்துபின்னர்
தரைகுளிரமழை பெய்திடவுஞ்செய்த.
தன்மையுமறிந்த வடியேமின்பமெய்தக் க

171 செல்வப்புதுவைவாழ் குப்புசாமிமாலின்
செல்வியை வன்முனிதொடுத்துச்
சிகிச்சைபற்பல செய்துந்தீராமனுந்
திருச்சந்நிதி வந்தடுத்துச்
செயல்யாவையு மியம்பிடத்தெரிந்து
சிலகாலமங்கிருந் திடப்புரிந்து
திருக்கரத்தாற் பூதிதரச்சுகமுறச்
செய்ததுமறிந்த வெங்கள்பவமறக் கதி

172 அடுத்தபுதுப்பேட்டை யூரிற்கேணிச்சலம்
அனேகநாளாக மிகுந்த
ஆழத்திருக்கநும் மகிமையுணர்ந்தே
அவ்வூரிலுள்ளோ ரிற்றகுந்த
அன்பர்கள்சாலைக்கு வந்தும்மைவணங்கி
அச்சமுமன்புங்கொண் டழைக்கவிணங்கி
அவர்களுடனே யவ்வூருக்குச்சென்ற
அருளுமறிந்த வெம்பவத்தினைவென்ற கதி

173 அங்குற்றக்கிணற்றைக் காட்டக்கண்டகத்தில்
அவர்துன்ப முற்றுமொழிய
ஆறுதுடங்தண்ணீர் மேல்விடச்செய்திட்ட
அப்போதே நன்மழைபொழிய
அன்றமுதன்மேனீர் பொருந்திடக்கண்டே
அகமகிழ்ந்தடிமைக ளாக்கொண்டே
அமர்ந்தின்றும்வாழ்ந் திருக்கும்பெருமை
அறிந்தவெம்மை யடைவிக்குமருமை கதி

174 இப்புதுப்பேட்டையோர் வீதியில்வரிசையாய்
இருந்த கூரைசேரகத்தில்
ஈரிரண்டுவீட்டை யக்கினிமேற்பற்றி
எரியும்போ தறிந்தகத்தில்
எங்கும்பற்றுவகை யெண்ணிவத்திரத்தை
எடுத்தமர்த்திய தானின்றதிறத்தை
எல்லோருங்கண்டச் சுற்றுமனமகிழ்ந்திடும்
இயலும்றிந்தசிற்றடி யேங்களுய்ந்திடும் கதி

175 மணலூர்நடராஜப் பிள்ளையினுள்ளன்பின்
வாய்மையினா லங்குசென்று
வதியவவர்வணங்கிப் புன்செய்நன்செய்
வயலாக வேண்டிடவன்று
வளம்பெறவருள் புரிந்திடப்புன்செய்
மாநிலமெல்லாம் பின்பமைந்திடநன்செய்
மாட்சிமையாலள விகந்தசந்தோட
மருவியதுங்கேட்ட வெம்வினைநைந்தோடக் கதி

176 பங்கயன்போற்றுஞ் சீர்பழமலைவாழுமோர்
பத்தனுஞ் சந்நிதிவணங்கிப்
பலவாகத்தன்வீட்டுக் கெழுந்தருள்செய்யப்
பரிவுட னழைக்கவிணங்கிப்
பகலிலோர்தினத்திற் றனியேசென்றிடப்
பார்த்தவ்வேழைமிகப் பயந்தேநின்றிடப்
பகிர்ந்தன்னத்தைப் படையெனவுண்டிடும்
பண்பையுணர்ந்த நாயேமின்பங்கொண்டிடும் கதி

177 வடற்பெருவெளியினில் வெய்யலில்
மகிழ்வுடன் தூரஞ்சென்று
வதியச்சாலையி லிருந்துபார்த்திட
வானிலிரவியி னின்று
மகத்தாமக்கினித் தம்பமொன்றோங்கிட
மருங்குபோனவர் காணுமலேங்கிட
வயங்குறும் முருக்காட்டியசீரும்
வழங்கவறிந்த வெம்மயல்தீரும் கதி

178 வர்த்தகர்சூழுஞ் செவலையிலோரேழை
வணிகனுக்குப் பன்னிரண்டு
வருடங்குன்மநோய் தீராதிருந்திட
வடலூர் வந்தும்மைக்கண்டு
வணங்கியேத்தித்தன் பெருந்துன்பஞ்சொல்லி
மனமிரங்கிப்பூதி தந்திடநோய்செல்ல
மகிமையோர்ந்துபலர் தந்தம்பிணிநீங்க
வாய்த்ததுமறிந்த வெங்கள்தவமோங்கக் கதி

179 மழைச்சாமிகுருக்கள் சாமியுநம்மிட
மாண்பெறு முப்பூவைவிரும்ப
மகிழ்ந்தொருதுளி துடைப்பவேர்கட்டையில்
வைத்துமுள்ளங்கி யிற்றிரும்ப
"வதியச்செய்வித்துச் சாயுங்காலநோக்க
மருந்தக்கிழங்கை முழுவதும்போக்க
மனந்தளர்ந்ததைக் கண்டவர்புகன்ற
வண்ணமறிந்தவெந் தொல்வினையகன்ற கதி

180 உத்தரஞான சிதம்பரவெளியில்
உலவத்தனியிற் போம்போது
உள்ளவர்கூடச் செல்லவிருமென்ன
உரைத்துஞ் சென்றவப்போது
ஓடியுமிகவும் விரைந்துநடந்தும்
ஒற்றிச்சென்றமை யாலேங்கிக்கிடந்தும்
உளங்கலங்கியே சாலேக்குவந்திடும்
உண்மையுந்தெரிந்த நாயேமுவந்திடும் கதி

181 சித்திநூற்பறபல தேர்ந்தோரெனிற்சுத்த
தேகம்பெற்றுப் பஞ்சலோகம்
திருக்கரத்திலரை நாழிகைவைத்திடத்
தெண்ணீராகுந் தவவேகம்
தெரிந்துகொள்வோமென்றோர் சித்தன்வரநம்முன்
சிறுவெள்ளித்துண்டைக் கைக்குள்வைத்தோர்நொடிப்பின்
தெளிந்தவெண்ணீரா யுருகச்செய்தசித்தி
தெரிந்தோர்சொல்லத் தெரிந்தவெம்மைச்சித்தி கதி

182 அடியார்கணுந்திரு வடிகளின்மண்பட
லாகாதென வெண்ணிப்பொருந்த
அழகியசகலாத்சோடு கொணர்ந்ததை
அணிந்திட வணங்கிவருந்த
அன்புடன்கொண்டிட வாறுமாதஞ்செல்ல
அதற்குள்ளொருசேரி லிங்கமதைப்புல்ல
அழுத்திவைக்கக்கட்ட வைம்மூன்றுநாளில்
அருண்மையறிந்த சிற்றடியோமைக்கோளில் கதி

183 தாம்ச்சிடுவித்த நூலையாடேர்சிவா
சாரியா ரன்பொடுபடிக்கத்
தரியாதெதிர்வந் தங்கியிற்சுடுமென்று
சாற்றிய தான்மனந்துடிக்கத்
தக்கணங்கற்பட்டுச் சிவயோகியரைச்
சார்ந்துபுகலவம் மொழிக்குமெய்யுரை
தக்கவர்நீ ரலரென்றுபுகன்றிடும்
தன்மையறிந்த வெம்போதமகன்றிடும் கதி

184 வடலூர்சத்திய தருமச்சாலையில்
வதிந்தபதின் மர்க்கொருங்கே
வன்மைச்சுரம்வந்து துன்புற்றதறிந்து
வந்தொவ் வொருவர்மருங்கே
மனமிரங்கிச் சுரநோயைநுமக்கீய
வாங்கியவ்வவரின் துன்பமதுமாய
வலிநுந்தேகமுறச் செய்துநீக்கும்
வண்மையுணர்ந்த நாயேமின்பந்தேக்கும் கதி

185 கூடலூர்வாழ்தேவ நாயகமாலின்
குமரன் அய்யா சாமிக்குற்ற
கொடும்பிணிக்குச் சிகிச்சைசெய்துஞ்சனி
கொண்டிறக்குங் காலம்பெற்ற
குறிப்பினுற்றந்தை நும்மைமனதிற்கொள்ளக்
கூடலூர்வந்து கதவைத்தட்டமெள்ளக்
குருவென்றுமத்தி யிரவிற்றிறந்திடக்
கொண்டபடிகண்டெம் பந்தமிறந்திடக் கதி

186 அடியற்றமரமென வடியில்விழுந்திட
அன்போ டெழுந்திடப்புரிந்தே
அய்யாசாமிச்சிறுவன் பக்கலுட்கார்ந்தே
அரிய விபூதியைப்பரிந்தே
அங்கமெலாநுந் திருக்கரத்தாற்பூசி
அக்கணமேயவ் வினைநீக்கிமாசி
லாவகைசெய்தும் வடலிலுமிருந்த
அதிசயமறிந்த வெம்மனந்திருந்த கதி

187 விற்பனர்சூழ்வா னாருதவிதாசில்தாரர்
வேங்கட சாமிமாலும்
மேன்மையறியா திருவாரத்துட்ஜெயில்
மேவ விதித்திடவேலும்
'விதஞ்சொலவவர்க் கக்கணமேயாக
விளைந்தவினையை யறிந்துற்றார்நோக
வித்தகரானன் கறிந்திடமற்றவர்
மிகவச்சங்கொண்ட தறிந்தோமைநற்றவர் கதி

188 சிதம்பரஞ்சென்று சிற்சபாநாதரைத்
தெரிசிக்க வந்தோரைக்கூட்டித்
தெரிசனத்தன்று காலையிற்சாலையில்
திரைக்குள் யாவையுங்காட்டிச்
சேவித்தபின்திரை திறக்கப்புரியச்
சித்திபுரவடற் சாலையேதெரியத்
திகைத்துப்பிரமை கொண்டடியார்துதிக்கும்
செய்தியறிந்தநாயே மன்பர்மதிக்கும் கதி

189 பலகிறைவேலூர் சண்முகம்பிள்ளையோர்
பகலின் வடலின்மேற்புறத்தைப்
பார்த்திடநும்ம வயவம்வேறாகப்
பகுந்திருந் தவத்திறத்தைப்
பயமுற்றங்ஙனே மயங்கிக்கிடக்கப்
பண்புடனெழுந்து தேவரீர்நடக்கப்
பணிந்துவிரைந்து சாலையிற்சேர்ந்த
பான்மையுமறிந்த நாயேமன்பார்ந்த கதி

190 தாமிகுஞ்சென்னையி லுற்றவோரேழைதன்
சங்கடநும் முன்னர்விள்ளத்
தக்கவுழைப்பொருநாண் முழுதுஞ்செய்யிற்
சரியாயிரு வெள்ளிகொள்ளத்
•தகுமெனக்கட்டளை புரிந்திட்டவண்ணம்
தன்வறுமைத்தொலைத் திருந்தும்பேரெண்ணம்
தனக்குண்டான விதத்தினைற்பொருந்தத்
தாமறியாத வெம்மனத்தைத்திருந்தக் கதி

191 தருமச்சாலையினும் பெருமகிமைத்
தாம்பலர் சொலவோர்ந்து
தங்கஞ்செயப்பெறச் சென்னைவிட்டுவடற்
சாலைதனுஞ் சந்நிதிசேர்ந்து
சாற்றுதுகிற்கத்தன் வெள்ளிப்பூண்கைத்தடி
தாவெனக்கொண்டு பொன்னுக்கிக்கிணற்றடி
தங்கவெறிந்துமுன் செயலுமழித்திடும்
தன்மையறிந்தவெம் புன்மையொழித்திடும் கதி

192 தருமச்சாலையபி மானிகளெல்லோரும்
தங்கடங்கள் பிணியாவும்
சற்றுமிராதொழிந் திடறுஞ்சந்நிதி
தன்னில்வந் துரைக்கமேவும்
தருணம்பலமூலி கையைச்சேர்த்திடச்
சாற்றிக்கடாவந்து தின்னுமற்பார்த்திடச்
சாலையுள்ளோர்க்குக் கட்டளைசெய்துளங்கொண்டு
தனியேகருங்குழிக் கேகநாயேங்கண்டு கதி

193 சத்தியதருமச் சாலையிலிருந்த
தக்கவ ரடுத்ததினத்தில்
சந்தோடத்தாற் கடுதாசியாடவதைத்
தனிக்கடாத் தின்னமனத்தில்
தணியாததுன்பங்கொண் டென்செயலாமென்று
தவித்திருக்குந் தருணத்தெதிர்நின்று
தங்கட்குநற்கால மிலையெனப்புகன்ற
தன்மையறிந்தோ மைப்பவவினையகன்ற கதி

94 விசாகப்பட்டினத்தி லிருந்திரண்டு
விப்பிரரென்று பாசனையில்
மிக்கவர்வந்துஞ் சந்நிதியிலீரெட்டு
விதத்த பரத்தின்முனையில்
விந்தையாயிரதங்-கட்டலாம்பரத்தில்
மேலூர்த்தரேத சாயாக்கினர்கரத்தில்
விரைவினிற்கட்டலாந் தேவரீரிடத்தில்
விளங்குமோவென வெமைஞானத்திடத்தில் கதி

195 அப்போதேயிரதங் கொண்டுவரப்பணித்
தங்கையினில் வாங்கிமுடி
அரையிடத்திற் றிறந்துகட்டியாய்
ஆக்கிய சித்தியைநாடி
ஆச்சரியங்கொண் டிரதத்தையிப்படி
ஆக்கமுடியாது மனத்தையப்படி
ஆக்கலாகுமென்ற வந்தத்தவமுநி
யார்தமைநோக்கி யடியேநவதிநி கதி

196 அரியசுருதியுத்தி யநுபவத்தோ
டருளிச்செய் திவ்விரதத்தை
அக்கணங்கட்டலா மனத்தினைக்கட்ட
லாகாதென வவர்மதத்தை
அடக்கவந்தன ரிருவருநம்மை
ஆசாரியராக வணங்கியேதம்மை
ஆட்கொளத்துதித்து விடைகொள்ளக்கண்டவர்
அறைந்திடக்கேட்ட வெங்களைவிண்டவக் கதி

197 வடலூரமாவாசிப் பறையனுக்கிறந்த
மாடுகளைப் புதையென்று
மாமிசந்தின்ற திருந்திடவுந்திரு
வாய்மலர்ந் தருளவன்று
மற்றவனவ்வணஞ் செய்யிலணைவெட்டு
வருவாய்ப்போய்விடு மென்னவின்றுதொட்டு
மனப்படிவரு மெனவேயிருந்த
வண்மையறிந்தோமை மேற்படிபொருந்தக் கதி

198 அப்பறையன்றனற் பத்தியையறிந்தே
அரைரூபா யினையெடுத்தே
அதைமஞ்சள்துணியிற் கட்டிப்பெட்டியில்வைக்க
அன்றமுதற் கொலைவிடுத்தே
அடைவுடனிருக்கி லரைரூபாய்நித்திய
மடைவரென்றுரைக்க வதனைச்சத்திய
மாகக்கொண்டவவ்வண மநுபவிக்கப்பெற்ற
அதிசயமறிந்த வடியேமவமற்ற கதி

199 சத்தியதருமச் சாலையிலோர்தினந்
தண்டுல மில்லாமலிருந்த
சமையத்தினுந்திருச் சந்நிதியில்வந்து
சண்முகப் பிள்ளைவருந்த
தக்கணமோ ரிடத்தினிலுட்கார்ந்து
சந்தர்ப்பம்யாவு நம்முள்ளத்திலோர்ந்து
தனிக்கவியொன்றை மெல்லெனப்புகன்ற
தன்மையுமறிந்த வெம்வினையகன்ற கதி

200 அன்றிரவிற்றிருத் துறையூரினிலோர்
அன்பர்தனக்குச் சொப்பனத்தில்
அருளியபடி மூவண்டியிலரிசியும்
ஆனமற்று மிருதினத்தில்
அன்போடுசாலைக்குக் கொண்டுவந்தளிக்க
அங்குள்ளோர்வியந்து பயந்துகளிக்க
அறிந்ததைத்தெரிந்தோர் நன்குரைத்துஞ்சற்றும்
அருளறியாதசிற் றடியேந்தவமுற்றும் கதி

201 வர்த்தகர்சூழ்கூட லூர்விட்டுக்குள்ளஞ்சா
வடியிற் றேவரீர்வரவில்
மகிழ்ந்துஹேட்சாய்ப் பன்பொடுபுதிய
வத்திரமீய வன்றிரவில்
வதியத்திருடனவ் வத்திரமீர்க்க
மாறிலாமலதைத் தந்திடப்பார்க்க
வன்குணத்தோனுக்கே கொடுக்கப்புகன்ற
வண்மையுமறிந்த வெம்போதமகன்ற கதி

202 சத்தியஞான சபையுஞ்சன்மார்க்க
சங்கம் வளர்திருத்தலமும்
சமரசவேதபாட சாலைவயித்திய
சாலையு மேலதனலமும்
சத்துவமிருத்தச் சித்திக்கணபதித்
தலமுந்தாபிக்க வேண்டுமிந்நற்பதி
தன்னிலெனவருள் செய்தமகத்துவத்
தன்மையறிந்தயா முய்யுமோர்சத்துவக் கதி

203 சமரசவேத பாடசாலையைமுன்னர்
தாபகஞ் செய்ததற்குரிய
தன்மைமிக்குள்ள வுபயகலாநிதித்
தனிப்புலவரை யரிய
தலைமையுபாத்தி யாயராகமதித்திடத்
தக்கோர்க்குக்குறள் கற்பிக்கவிதித்திடச்
சார்ந்தவரோர்திங்கள் படித்துவந்திடத்
தரமறியாத நாயேமுவந்திடக் கதி

204 ஓர்பாடலுக்கொரு பானுரைபுகன்ற
உண்மை கொள்ளவறிவில்லா
ஒவ்வொருவருநுஞ் சந்நிதியைபடைந்
துபாத்தியாயர் மனமில்லா
ஊற்றபொருள்பல புகன்றுரைவையொன்றும்
உணர்ந்திலோமென வதுகேட்டுநீரொன்றும்
ஓதாதுணர்வீ ரெனப்பாடசாலை
ஒய்ந்திடப்புரிந்த துணர்ந்தயாமேலைக் கதி

205 அட்டகோணச்சபை கட்டிடுங்குறிப்பின்
ஆறுமுகமாற் கவ்வகையை
அறைந்தவண்ணஞ்சில விடத்தில்யாசிக்க
ஐயாயிரங் கொண்டதொகையை
ஆதாரமாக்கட்ட வாரம்பமாக
அங்கிருந்துமேட்டுக் குப்பத்திலேக
அன்புகொண்டங்கமர்ந் திருந்ததுந்தன்மை
அறியாதசிற்றடி யேங்கள்பெறுநன்மைக் கதி

206 உத்தரஞான சிதம்பரசிற்சபைக்
கோரிலக்கம் ரூபாயை
ஒப்புடன்சிறிது சிறிதாயனுப்பி
உதவவரும் வருவாயை
ஒருவருமறியாமற் செய்துவந்த
உன்னலருபெருஞ் சித்தியினையிந்த
உலகிற்கண்காட்சி யாகத்தரப்பெற்ற
உண்மையறிந்த நாயேங்கள்சிறப்புற்ற கதி

207 உத்தரஞான சிற்சபையிலெழிலார்
உச்சியி லுயர்விதானம்
ஒழுங்கிற்பொருந்தக் கட்டும்போதுசாரத்
திற்றவோர் மரகிதானம்
ஒழிந்துகீழ் நழுவியபோதங்குள்ள
ஒருவர்மேலும் விழாதவகைவள்ள
லும்முடையபெருந் தயவானடந்த
உண்மையுணர்ந்த வெந்தற்போதங்கடந்த கதி

208 சென்னையினின்றோர் கண்ணாடி தருவித்துச்
சித்திவளாகத் துள்ளறைக்குள்
சேர்ந்தொருமண்டலம் பூசைசெய்துவடற்
சிற்சபையில் வைத்தேழ்திரைக்குள்
சிவாசாரியாருக் கருட்பெருஞ்ஜோதி
செய்யபூசனைகள் செய்துவருநீதி
தெரிவித்தவண்ணமே நடத்தியேவரும்
திறமுமறிந்தசிற் றடியேந்தவப்பெரும் கதி

209 வடற்சிற்சபையிற் றினமுஞ்சிறப்பில்
மாதந்தோறும் பூசத்தன்றும்
மகாதைப்பூசத்திற் சிறப்பிற்சிறப்பாய்
வழிபட வேண்டுமென்றும்
மாண்பெறுமத்துவா வொழிந்தவநுபவம்
வயங்கவாறுகாலத் துஞ்செய்யப்பவம்
மாய்ந்திடுமென்றுந் திருவாய்மொழிந்திடும்
வண்மையறிந்தோமைப் பேதமழிந்திடும் கதி

210 மாதந்தோறும்பூச தினத்திற்றெரிசிக்கும்
மாந்தருக் கெவ்விதநோயும்
வாராதுவரினுமந் நியமமேமருந்தாக
வாய்ந்தெப் பிணிகளுமாயும்
வகைசெய்யுமென்றண்ட பிண்டத்தின்காட்சியை
மதியினிற்கொண்டிடு விரிந்தசூழ்ச்சியை
வாய்மையிதென் றருள்புரிந்தபெரிய,
வண்மையறிந்த நாயேம்பெறலரிய கதி

211 செப்பருந்தைப்பூச தினத்திற்றெரிசிக்கத்
தேகமுச் சித்தியுநேரும்
திரமண்டத்திற் பூரணவிந்திறைட்சி
செய்யக் கடகத்திலாகும்
திகழும்பிண்டமு மவ்வண்ணம்பூரணம்
சிறந்தநித்திய மாமெனுங்காரணம்
திருவாய்மலர்ந்த வணமேநடந்திடும்
சீருமறிந்தோமை நாதங்கடந்திடும் கதி

212 செப்புமாமாயைக் கறுப்புநீலம்பச்சை
செம்பொன் வெண்கலப்புத்திரையும்
சேரரசுயிர்பர சித்துப்பொருள்பதி
திருக்காட்சி மறைவெனும்வரையும்
திண்புவியோரதை நீக்கிடுமுறையைத்
தெளிவிற்றீட்டி வைத்தோமாறுமுறையைத்
திறந்துபாரென்ற செம்மொழிசுகமுறச்
செப்பவுங்கேட்ட வடியேம்பவமறக் கதி

213 சித்திவளாகத்தி லுமதுபர்நியாசந்
தின நடந்திடுங்காலைச்
சீர்பெற்றநூறவ தானியார்நம்புகழ்
தெரிந்துவந்தோர் நாண்மாலை
சேரவுட்காரவிட மின்றியேசற்றும்
தேவரீர்திவ்யசமு கங்காணப்பெற்றும்
சிறந்தஞானம் போன்றிடமில்லையென்று
செப்பிடத்தெரிந்த சிற்றடியேமின்று கதி

214 அச்சபையிற்சிலர் நோக்கியவர்க்கிடம்
அமைந்திருந் திடவகல
அறிந்திருக்கவிடந் தந்ததோவென்ன
அப்போ திலையெனப்புகல
'அப்போதெக்கால மிறந்தகாலமென்ன
ஆகிலெவ்வளவுவெம் மட்டுமெனப்பன்ன
அறையத்தியங்கி நும்மிடமின்றிடும்
அடைவுமறிந்தவெம் வல்வினைபொன்றிடும் கதி

215 ஆயிரத்தெட்டுச் செந்தாமரையிதழ்களை
அடுக்கியூசியை யழுத்தி
அதிற்பொருந்திய நேரமோர் நாலத்
தளவையாகு மெனவழுத்தி
அவ்விறந்தகால மின்னுமிருந்திட
அதைவிட்டுநிகழ் காலம்பொருந்திட
லாகாதெனவு மியம்பிடச்சந்தோ
மடைந்ததறிந்த நாயேம்பவனைந்தோடக் கதி

216 எதிர்நின்றுவிசிறத் தடுத்துங்கேளாமலென்
னிடமொளிக்கக் கூடாதென்றே
இருநாழிகைவரை யப்பணிசெய்திட
இசைந்திருந் திடவுநன்றே
இகத்தினனவிற் சுழுத்திகொள்முத்தரும்
எண்ணியவாறுசெய் சித்தரும்பத்தரும்
எங்கும்புகழ்ந்துகொண் டாடியாங்காங்கும்
இயம்பவுமறிந்து பணிந்தயாமோங்கும் கதி

217 கருங்குழிச்சித்தி வளாகத்திடையிற்
கல்லாங் குளத்துக்கரையில்
கண்டுநம்மையொரு செங்குந்தன்றனக்குக்
கதிபெறக் கேட்கவத்தரையில்
கருதத்தூரம்போ யிருக்கப்பார்த்துக்
கசிந்துருகியச்ச முற்றுவேர்த்துக்
கண்கலங்கிக் கருங்குழிக்குச்சென்றிடும்
கணக்கறிந்த நாயேம்பவம்வென்றிடும் கதி

218 சித்திவளாகத்தி னெண்டித்தகரொன்று
தினநுஞ்சந் நிதிசேர்ந்து
செவியுறநும்மரு முபந்நியாசத்தைச்
செவ்வையாக விருந்தோர்ந்து
திருமாளிகைவலஞ் செய்யும்பத்தருடன்
சேர்ந்துவந்து முடிந்தபின்னரன்புடன்
சென்றுவருவதைக் கண்டவர்நடுங்கும்
சீருமறிந்தநாயே மனமொடுங்கும் கதி

219 சீர்பெறும்ராமசாமிப் பிள்ளையோதனந்
தினங்கொண்டுவரநோக்கிச்
சேர்ந்திருந்தநொண்டித் தகருக்குமுபாத்
தியாயருக்குந் திருப்தியாக்கிச்
செய்துவரவொரு வருடம்வரையிற்
சிறிதுமுணவிலாம லித்தரையிற்
சிறந்திலங்குமருஞ் சுத்தசித்துருவில்
செறிந்திருந்த திறமறிந்தயாமுருவில் கதி

220 சித்திவளாகத் திருவறையின்கண்
சிவஞான யோகசமாதி
சேர்திருந்திட மருங்கிருப்புச்சட்டிச்
சிமைக்கரித் தீயிற்பாதிச்
சித்தியார்நுந்திரு மேனியிற்சாய்ந்திடச்
சிறிதுமசையாம லிருக்கவாய்ந்திடச்
சிறந்தவாடைமட்டு மெரியவுமாகத்தில்
தீச்செயற்றுக்காத தறிந்தோமித்தேகத்தில் கதி

221 சுத்ததேகம்பெற்ற வுண்மையெவருக்கும்
தோன்றவிருப்புப் பாத்திரத்தில்
தோய்ந்தகரித்தீ சபாபதிகுருக்கட்குச்
சோர்வினல் மேல்விழக்கரத்தில்
துடைத்தவிடம் புண்ணுகநுந்தேகத்தில்
துன்பஞ்செய்யா திருந்திடவிவ்விகத்தில்
சொற்கடங்காப்பெருஞ் சித்திகண்டெவரும்
சொல்லவுமறிந்த நாயேம்பெறவரும் கதி

222 செந்தமிழாரிய மற்றுஞ்சிலபாஷை
தெரிந்தவனு னெச்செருக்கும்
தீரன்பினுகபாணி மாலுஞ்சமுகம்
திறலொடு வந்தங்கிருக்கும்
சிறுவர்முதலிய யாவருமுயற்சி
செய்யாமலுண்டு வீண்கழிக்கும்பயிற்சி
செவ்வையாமோவெனப் பலவாய்ப்புகன்ற
திறமறிந்த நாயேமலமகன்ற க

223 எழிலாரும்புன்சிரிப்பிற் கேட்டுப்பிச்சென்றே
  இயம்பித் தம்முகமொளிர
ஈரிரண்டுவய துள்ளபுலவரின்
  இனையமைந்தனை முன்மிளிர
    இசையநிறுத்தி யிக்குழந்தையைத்தெரிந்த
    எப்பாஷையிலேனுங் கேளெனப்புரிந்த
    இருநிமிடத்துள் வாய்திறவாதிருந்த
    இயலுமறிந்த வெங்கன்மனந்திருந்த கதி

224 இவ்விதமிரண்டு நாழிகைமௌனமாய்
  இருக்கவதற் குணயந்தே
எழுதரங்கேட்கத் தூண்டியும்வாய்திறப்
  பின்றியிருந் திடப்பயந்தே
    இருந்தமற்றவரே தாமேவென்றெண்ண
    இரங்கிப்பிச்சென் றவர்சோர்வறநண்ண
    இளம்பிள்ளையைப் பின்னிருந்திடச்செய்த
    இயலறிந்தநாயேங்க ளின்பமெய்தக் கதி

225 தியக்கநீங்கிச்சுவாசம் வரக்கண்விழித்துத்
  தேவரீர் மகிமையையொன்றும்
தெரியாமலபசார மிழைத்தவெனது
  தீவினை நீக்குகவென்றும்
    திருவடியிலடியற்ற மரமென்னச்
    சேவித்தவுடனெழுந் திடுவீரென்ன
    திருத்தியோடெழுந்து பூதிபெற்றுச்சென்ற
    சித்தியறிந்த நாயேங்கள்போதம்பொன்றக் கதி

226 கன்மசித்தர்நால்வ ரோரிரவிலும்மைக்
  கண்டு தெரிசிக்கவுவந்து
கருத்தடங்கி வரும்போதிளங்காளி
  கடிய சினத்தோடுவந்து
    கவலைகொள்ளும்படி துரத்தவகன்று
    கண்டிப்போந்திரும்பும் போதெனப்புகன்று
    கனமிகுநுங் கழலிணையைவணங்கும்
    கணக்கறிந்தமெய் யன்பர்களிணங்கும் கதி

227 வணங்கிநின் றுவரும் வழியினிலோர்காளி
வந்து துரத்தியதெம்மை
வலியவிலங்கிட வேண்டுமென்னவிங்கு
வந்ததாகச்சொல்லுமும்மை
வணங்கிப்போமெனச் சொல்லிவிடைகொண்டு
மலைக்கும்வடிவுட னெதிர்வரக்கண்டு
வள்ளாலுன்திரு வாக்கின்படிநடந்த
வண்ணமதறிந்த வெம்பவங்கடந்த கதி

228 மன்னுஞ்சிதம்பரம் பாவாடைப்பிள்ளை
மகிழ்ந்து வலம்வருங்காலில்
மகத்தாஞ்சித்தி வளாகத்திலரவம்
வளைந்து கடித்திடக்காலில்
மடங்கிப்பற்க ளொடுங்கிடப்பிடுங்கி
மனந்திடுக்கிட்டுப் பயந்துநடுங்கி
வள்ளாலுமைநினைந் திடச்சுகம்பெற்ற
வண்மையறிந்த வடியேம்பவமற்ற கதி

229 உத்தமர்சூழ்கருங் குழியில்வாதியாம்
ஒருவன தாடகச்சித்தி
உள்ளவர்க்கிந்தைதைக் கேட்டவனையழைத்
துலைக்காகா தெனப்புத்தி
உரைத்துமவன் கேளாமலேமீட்டும்
உற்சாகத்தோடதற் கானதைப்போட்டும்
ஒன்றியவிருந்தைக் கண்டிடவணங்கும்
உண்மைதெரிந்த நாயடியேமிணங்கும் கதி

230 அருணாசலம் வெங்கடாசலமிருவரை
அழைத்தின்று முதனீங்கள்
அந்நியமாமிச மருந்தாதிருந்திடில்
அவுரிநெல் லைந்துபங்கோங்க
லாகுமென்றபடி தின்னுதிருந்திட
அப்படியேயந்தப் பலன்பொருந்திட
அப்படையாச்சிகள் மிகமகிழ்ச்சியுற
அறிந்தசிற்றடி யேங்கள்பவமறக் கதி

231 கேச்தமிதமுறை யாகவுட்கொளக்
கேடில்லை யுடலுக்கென்றும்
கிரமமாகத்தூது வேளையுண்டுவரக்
கேவல மகற்றுமென்றும்
பாசமுறுதமெய்ப் பதியையுஞ்சேராத
பகிர்முகக்கண்கொண் டொன்றையும்பாராத
படியிலிருக்கமெய்ப் பலநன்குபொருந்தப்
படுமென்றது மறிந்தவெமைத்திருந்தக் கதி

232 ஏகாமற்றேக மிருக்கவுதாரணம்
எழிலுறுந் தீபத்தைக்காட்டி
இலகுஞ்சம்பந்த மூற்றுக்கேணிஞாயம்
என்னவு நன்குறநாட்டி
சாகாத்தலைபோகாப் புனல்வேகாக்காலும்
சாற்றியிதையனுப விக்கவெக்காலும்
சாகாநிலைகூடு மென்றுரைத்தருளும்
தன்மையுணர்ந்த நாயேமையாண்டருளும் கதி

233 பத்தனுறுமுகக் குறிசிற்றந்தேகம்
பருத்திருக் கப்பொறுது
பணிந்துவிண்ணப்பஞ் செய்யவோர்குளிகை
பரிந்தீந்துங் கைப்பெறுது
பாரில்விடவுட னெடுத்தேயுட்கொண்டு
பாரிநால்வகை யொழுக்கமெனவிண்டு
பாங்குடனுபநியாசஞ் செய்நும்மருமை
பரவவுங்கேட்ட நாயேம்பெறும்பெருமைக் கதி

234 தென்றேயத்தி லிருந்திரண்டுபுலவர்
தீரமாய் நும்மிடம்வந்து
திருவாசகமுத லகவற்குப்பொருள்
செப்பிடக் கேட்கவுவந்து
செப்புவோங்கேட்குந் தரமுமுண்டோவென்னச்
சினந்துட்சிரித்துக் கேட்டிடுவோமென்ன
திரு. ந. கரத்துக்கெட் டெட்டுப்பொருள்சொல்லத்
தெரிந்தடங்கிச் செல்லவறிந்தவெமைநல்ல கதி

235 பாண்டிநாதசித்தர் தில்லையில்முருகர்கும்
பாபிஷேகஞ் செய்ததினத்தில்
பன்முறைநும்மைத் தன்கரத்திலன்னம்
பாலிக்கவேண்டிட மனத்தில்
பரிவோடளித்தபின் யாவரும்முண்டிடப்
பணித்தபடிபுசித் தானந்தங்கொண்டிடப்
பார்த்தவரெல்லா நும்மகிமைபுகன்ற
பான்மையுமறிந்த வெம்பவமகன்ற கதி

236 பத்தனுபய கலாநிதிப்புலவன்
பாண்டுநோயால் மெய்வீக்கம்
பருத்துச்சிரங்கு மிகுந்துகலங்கிப்
பதைத்து மனதிலேக்கம்
பலக்கநன்சந்நிதிக் கேணையிற்படுத்துப்
பக்குவமாய்ச்சித்தி வளாகமடுத்துப்
பரிந்துநிட்டைசெய்யு மறைபின்வாயிற்
படியில்விழுந்து நாயேமருள்வாயிற் கதி

237 தேவரீராங்காங்குஞ் சீடருக்கிரங்கிச்
செய்த மகிமைகள்பலவும்
சிறுகுரவோடுஞ் சக்திசற்றுமின்றித்
தேம்பியே யழுதுசொலவும்
தெரிந்துகதவு திறந்திட நும்மடி
சிக்கெனப்பற்ற நோய்தீர்ந்ததென்றபடிச்
சிகிச்சையொன்றுஞ் செய்யாமலேநீங்கிய
சித்தியறிந்த சிற்றடியேமோங்கிய கதி

238 வளஞ்சேர்கூடலூர் சின்னத்தம்பிப்பிள்ளை
வடற் பதியினினின்று
மகிமைநிறைசித்தி வளாகமேவும்
வழிதப்பியே யல்லினின்று
மியங்கிடத்தேவ ரீருருக்காட்டி
மார்க்கமிதென்றே திருக்கரநீட்டி
மறையவுடன்சென் றங்ஙனேபார்த்து
மகிழ்ந்ததறிந்த வெம்வினைதீர்த்துக் கதி

239 சித்திவளாகத்தி லுற்றநடராஜன்
தூரத்தி நாகத்தைப்பிடிக்கச்
சிக்கெனக்கைசுற்ற விட்டுவிடாமையின்
சிறிவலக் கையிற்கடிக்கத்
திருச்சந்நிதியி னேர்வந்துகாட்டச்
செறிந்தவன்பருக் கோரச்சமூட்டச்
சிரித்தானந்த நடராஜனீயென்னச்
சீர்பெற்றதறிந்த சிற்றடியேமுன்னக் கதி

240 அரவமும்புலியு மனுதினம்போற்றுஞ்சி
தம்பரத் தலத்துத்தரத்தில்
அருட்பெருஞ்ஜோதி யாண்டவர்விளங்கும்
அற்புத வடலம்பரத்தில்
அட்டகோணச்சபை நேர்போதப்பந்தரை
ஆகாதெனவு மடங்காதமந்தரை
ஆளவிடிவீழ்த்திச் சபைதனைக்காத்த
தறிந்தசிற்றடி யேமுலகேத்தக் கதி

241 சற்சனர்சூழ் காரணப்பட்டோர்வாழ்கந்த
சாமிக்கிருந்த மெய்ம்மயக்கம்
தாங்காதுநுஞ்சந்நி தானத்திற்குவந்து
தனக்கு ளெண்ணவத்தியக்கம்
தக்கணமேக விபூதிதந்துபின்பு
தக்கவுத்தியோகந் தருவோமென்றன்பு
சாற்றியதுமுதல் மயக்கந்தீர்ந்த
தன்மையறிந்த வடியேமின்பார்ந்த கதி

242 சித்திவளாகத் தெதிரினில்வலைஞர்
சிறியவலைகள் கொண்டகலச்
சென்றவரைநோக்கிப் பெருவலைவீசிடிற்
செல்வமிகு மெனப்புகலச்
செப்பியவவ்வணமே செய்துவந்திடத்
தினமுமவர்க்குப் பொருள்மிகுந்திடச்
சிலநாள்சென்றவரை யினியித்தொழில்
செய்யாமற்றடுக்கச் சிற்றடியேமெழிற் கதி

243 திருவுளம்பற்றியதை பசட்டையாகத்
தேர்ச்சியில்லாத வவ்வலைனர்
தெரிந்திடவொண்ணுத வேறுவழிசென்று
தீரமாய்வீச வக்கொலைஞர்
சிறிதுமின்றிவலை யறுபடக்கொண்டு
தெளிந்தத்தொழிலை விட்டுவிடக்கண்டு
திகைத்துமற்றவர் கொலைபுலைநீக்கும்
திறமறிந்தவெமை யின்பந்தேக்கும் கதி

244 சித்திவளாகத்திற் சேர்ந்தகுழாங்கட்குச்
செல்லுமன்ன தானம்புரியச்
சிக்காதகைதர்சந்நிதியில் விண்ணப்பிக்கத்
தெய்வந்தரு மெனவுரிய
தேவையானசாமா னைந்துமிடத்தில்
திரள்திரளாகப்பின் வாயிலிடத்தில்
சேர்ந்திருக்கவெடுத் தன்புடனேசெய்யும்
சித்தியுமறிந்த நாயேமகிழ்ந்துய்யும் கதி

245 மாதவர்சூழ்மேட்டுக் குப்பமெனுஞ்சித்தி
வளாகத் துலவும்போது
மகத்துவத்தேகத்தில் நிழலிலாது
மறைந்திட மறையோது
மார்க்கப்படியடிச் சுவட்டைக்கண்டிட
மாட்டாமையுமோர்ந்து நற்றவர்விண்டிட
மதியிலாதவெம் புறத்திலகத்தில்
வதிந்துவிட்டு விடாமலிவ்விகத்தில் கதி

246 சித்திவளாகத்தில் ரங்கசாமிப்பிள்ளை
தெரிசித்து வலம்வரும்போது
சீறிநாகங்கடிக்கப் பற்களொடியத்
தெரிந்துபிடுங்க வத்தீது
சிறிதும்பெறுது வலம்வரவவ்விடம்
தீர்ந்துசுகம்பெற்றதா லின்றுமவ்விடம்
சிரத்தையோடு வலம்வருபலரிகத்தின்
தீதொழிய வறிந்தோமை மெய்ச்சுகத்தின் கதி

247 பத்தர்சூழொற்றியூர் வாழுமிராஜகோ
பாலன்றன் றந்தையினோடு
பரிவொடுசித்தி வளாகத்தில்வந்தும்மைப்
பணிந்திட வவரோடு
பசுக்களின்மகத்து வந்தன்னையன்று
பகர்ந்திடவிடை கொண்டுதம்மூர்சென்று
பாலித்தவண்ணந்தம் பசுவைவைத்திருந்தும்
பகலோர்தினத்தினி லெம்மனந்திருந்தும் கதி

248 வெய்யலிற்கட்டி யிருந்ததம்பசுவை
விரைந்தவிழ்த்திட வக்காலில்
மிக்கவலுமையாய் முட்டித்தள்ளிவிட
விழுந்தெழா வண்ணங்காலில்
விளைந்ததுன்பந் தீராதும்மைப்பலவாய்
வேண்டவிருமல்லகைச் செட்டியாலந்நோய்
விலகுமென்று சொப்பனத்திற்புகன்ற
விதமாகவறிந்த வெம்பவமகன்ற கதி

249 கொங்கணத்தி லிருந்திருவர்வெண்கருங்
குட்டரோ யாளர்கள்வந்து
கோமானின்சந்நிதி கண்டுதெரிசிக்கக்
கோதின் மெய்ப்பூதியுவந்து
கொடுத்திடவைந்து வேளையிருந்துண்டு
குணம்பெற்றுச் சுத்ததேகமுறக்கண்டு
குரைகழல்வணங்கித் துதித்துஞ்சென்ற
கொள்கையுமறிந்த வெம்பவம்வென்ற கதி

250 சத்தியறிவோமென் றோர்துலுக்கன்வந்து
தன்முழங் காலினிற்பஞ்சைத்
தண்ணீர்கொண்டப்பிச் சிரங்கென்றுகாட்டிடத்
தாமறிந் தவனெஞ்சைத்
தண்டிக்கவவ்வண மாமெனவிண்டிடத்
தன்அகத்தாற்சிரங் காகவேகண்டிடத்
தாள்வணங்கியழ விரங்கிநீங்கிடத்
தயவுசெய்ததறிந் தோமையோங்கிடக் கதி

251 வடலூர்தருமச் சாலையினுஞ்சித்தி
வளாகத்து நம்மைக்கண்ட
மாந்தர்பல்லாயிரம் பேரைக்கொலைபுலை
மறத்தொழில் விடவிண்ட
வாய்மைமொழிப்படி யின்றைக்குமனேகர்
வாழ்ந்திருக்கக் கண்டோர்கேட்டவர்சினேகர்
மற்றவருமக வினத்தவராயுற்ற
வண்மையுமறிந்த வெங்கள்பவமற்ற கதி

252 செப்பும்பிரணவ தேகவிலக்கணம்
தெரித்திட வுருவருவத்
தேகத்தைக்காட்டிட வடிச்சுவடது
தெரிந்திடா வகைமருவ
சென்னைமாசிலாமணி படங்கொள்ளத்
தோராமலெண்டர மேமாறச்செய்துள்ள
சித்தியையறிந்த மெய்யன்பர்புகன்ற
செய்தியுமறிந்த வெம்வினையகன்ற கதி

253 செப்பும்ஸ்ரீமுக வருடத்தின்மார்கழி
திங்கள்முதற் பத்துதினத்தில்
சிற்றறைக்குட்சென்றங் கிருப்பதுங்கதவு
திறந்துவந்துற்ற சனத்தில்
சேர்ந்துபங்கிய சித்துவருவதும்பின்பு
திரும்பவுமறைக்குள் ளிருப்பதுமன்பு
செறிந்திரக்கத்தினோடு வெளிவரும்
சித்தியுமறிந்த சிற்றடியேம்பெரும் கதி

254 சித்திவளாகத் திருவறையினுள்ளே
சேர்ந்தபின்னர் சிலதினத்தில்
சென்றுதுரைத் தனத்தார்வந்துகதவைத்
திறவென்பா ரவர்மனத்தில்
'திருவருள்புகுந்தவ் வெண்ணத்தைமாற்றிடும்
தெரிந்துகொள்வீரதை யன்றெனச்சாற்றிடும்
செம்மொழியைப் பொன்மொழியாகப்போற்றும்
செயலறிந்தவெமை மேற்படியேற்றும் கதி

255 கடையைவிரித்தோங் கொள்வார்களில்லைக்
கட்டிவிட்டோ மினிநமக்குக்
கதியடைவதற் கிந்தத்தீபத்தினைக்
கடவுளெனக் கொள்வீரெமக்குக்
கடிகையிரண்டரை வரையிலுநும்முன்னர்
காணுதிருக்க விருப்பமுண்டுபின்னர்
கருதருஞ்சித்திப் பல்கோடிநடந்திடும்
காண்பீரென்றுமெங்கள் போதமகன்றிடும் கதி

256 அத்தருணத்தில் அருட்பெருஞ்ஜோதி
ஆண்டவருட னிவ்வுருவாய்
அருகிலிருந்துநும்பவ யொழிக்கச்செய்வோம்
அதுவரையுங் காணுவருவாய்
ஆங்காங்குமிருந்து ஜீவகாருண்யத்தின்
அருமையெங்கும்விளங்கச் செய்தபுண்யத்தின்
அடைவோங்கவருட் செங்கோற்செலுத்துவோமென்றே
அறைந்துமறியா வெம்பவவினைவென்றே கதி

257 இதுமுதலதுவரை யகவினத்தாராக
இதமுடன் பசித்தோர்க்கே
இரங்கியன்னமளித் தருட்பெருஞ்ஜோதி
ஈசனை யேத்திடுவோர்க்கே
என்றுமிறவாவரங் கிடைச்குமற்றை
எல்லார்க்குமோர் படியேறவருமற்றை
என்றுந்திருவாய் மலர்ந்ததுந்தெரிந்த
ஏழையடியேங்கள் தற்போதமிரிந்த கதி

258 பன்னுநாலாயிரத் தொள்ளாயிரத்தெழு
பத்தைந்தின் மகரத்திங்கள்
பத்தொன்பதில்வெள்ளிப் புனர்ப்பூசத்தினில்
பாதியிரவினி லெங்கள்
பார்வைபெறுவணங் கதவைமூடிடப்
பட்சத்தினஞ்சென் றுண்ணுழைந்துநேடிடப்
பரமநுஞ்சொற்போற் காணுதுமறைந்திடும்
பண்பறியாநாயே மன்புகிறைந்திடும் கதி

259 துரியாதீதவுபசாந்த மேனிலையிற்
றோன்றுந்துணை யாகவிருந்தும்
தொண்டர்சிலருக்குக் கனவிலுநனவிலுந்
தோன்றியவ்வ வருந்திருந்தும்
சுத்தசன்மார்க்கத்தைப் போதித்தும்வருத்தம்
தொலைத்துமொளித்து மிலங்கும்பொருத்தம்
சொல்லநினைக்க வறியாதுகலங்கும்
தொல்வினையோமுக்கு மெய்யின்பந்துலங்கும் கதி

260 பெரியநோய்விடங் காசங்குன்மமற்றும்
பிணிகள்யாவை யுந்தொலைக்கும்
பிரியதன்வந்திரி யிருநிதிசெய்யும்
பெருஞ்சித்தன் மதிநிலைக்கும்
உரியசமரசசன் மார்க்கமென்றென்றும்
உலகிற்பரவச்செய் பெரியோனென்றின்றும்
உம்மெய்ப்புகழறிந்துத் தமருரைக்கும்
உண்மையுணர்ந்த வெங்கன்மனங்கரைக்கும் கதி

261 இராமலிங்காய நமவெனுமந்திரம்
இசைப்பவர் முன்வினைவாட்டும்
இடரடையாரென்று மெண்ணும்பெருஞ்சித்தி
எல்லாம் பெற்றிடுவர்மீட்டும்
இங்குவராமற்பே ரின்பத்தலமுற்றே
இணையிலுண்மையறி வானந்தமும்பெற்றே
என்றும்வாழ்குவ ரென்றான்றோர்புகன்றிடும்
இயலுமறிந்த வெம்போதமகன்றிடும் கதி

வாழி.

வாழியெந்தை யருட்பிரகாச வள்ளால்
வாழிநுஞ் சரிதச்சீரும்
வாழியாமுய்யு மிணைமலர்ப்பதங்கள்
வாழிநின் னுரிமைப்பேரும்
வாழிவேதாந்த சன்மார்க்கநெறிமுறை
வாழிதிருவருட் பாத்திருமுறை
வாழிவடற்சிற் சபையன்பர்சூழ
வாழிவையம் வானுமற்றவும்வாழ கதி

ஸ்ரீமத்-திருவருட்பிரகாசவள்ளலார்
தோன்றுந் துணையாயிருந்தவரை நடந்த
திவ்யசரித்திரக் கீர்த்தனை ஒருவாறு முற்றியது.
ஸ்ரீமத்-இராமலிங்கசுவாமிகள் இணையடிகளே தஞ்சம்.

ஸ்ரீமத்

# பிள்ளைப் பெருமான்

## தோன்றாத் துணையாய்ச் செய்தருளும்

# திருவிளையாடல்.

1 சித்திவளாகத்துச் சிற்றறைக்குட்சென்று
 தேகமறைந்த சிற்போது
செல்லக்கலெக்டர் பெரியடாக்டர்தா
 சீல்தாரங்கு வந்திப்போது
  திறவெனத்தாசில்தார் தீமொழிசெப்பிடத்
  திறவுகோலைக் கலெக்டரிடமொப்பிடச்
  சிறந்தடாக்டர்சுற்றிப் பார்த்துண்மையோர்ந்த
  திறந்தெரிந்தோமுக்கே நன்மையார்ந்த — கதி

2 சிவத்தோடுகிட்டை தன்னிலிப்பெரியார்
 திகழ்ந்திருக் கின்றாரென்றும்
திறக்கப்படாதெனத் தாசிலைத்தடுத்துச்
 சித்தர்நிலை யறியீரென்றும்
  சிறந்தஞாயங்கள் புகன்றிங்கேயென்ன
  செய்திடக்கட்டளை யுங்கட்கெனச்சொன்ன
  சீரிலார்க்கன்னதானந் தெய்வத்துதியும்
  செய்வதெனச்சொல்ல வெம்மெய்யிற்பதியும் — கதி

3 பரிவோடிரண்டு துரைமார்களுமிரு
 பதுரூபா யினைக்கொடுத்துப்
பத்தியோடின்றெம் பேரார்செயுமென்றந்த
 பத்தர்நிறை பதிவிடுத்து
  பரிமேலேகப்பின் சென்றதாசிலய்யரைப்
  பயந்துமுள்ளிற் றள்ளவவர்மெய்யரைப்
  பங்கின்முட்செறிய மிகவுநடுங்கும்
  பான்மையறிந்த வெம்மகமுமொடுங்கும் — கதி

4 சென்றவிருவருந் திரும்பியிம்மகா
 சித்தரைவைத தீப்பலனே
சிந்தையினன்குறத் தெரிந்திடுவீரென்று
 செப்பி நகைத்துடனலனே
 சிறியவொருகட்டை வண்டியிலேற்ற
 சித்திவளாகச்சித்த நம்மைப்போற்றச்
 சென்றதையங்குள்ளார்நம் வள்ளல்முன்சொற்ற
 திறமிதென்றறிந்த வெம்முள்ளவன்பற்ற கதி

5 காரணப்பட்டூர் வாழுங்கந்தசாமிதன்
 கண்வலியா னெந்தபோது
கனவில்வடற்பதி செல்லெனப்போகக்
 கண்டு செட்டியாரித்தீது
 கணத்திற்போம்ரஸ்தாளிப் பழத்தினுலீதுநங்
 காரணக்குருவினு லறிந்ததிப்போதுநங்
 கண்களிற்கட்டென்ற படிசெய்யநீங்கிய
 காரியமறிந்தவெம்மிடி நையவோங்கிய கதி

6 சீரணவுந்திருக் கோவலூர்வாமனத்
 தேவன் றனையிருவாரம்
தெரிசித்தபோதக் கந்தசாமிதனக்கோர்
 தினத்திரவி லோர்நேரம்
 ஏரணவந்தாதி நாமாவளிக்கண்ணி
 இன்பப்பதிகமுரைக்க வுளத்தெண்ணி
 இயம்புஞ்சொப்ப னத்தின்வண்ணநடந்த
 இயலறிந்தவெங்கன் மனங்கடந்த கதி

7 பாவகாரியமெல்லாருஞ் செய்யாவண்ணம்
 பரவத்திரு வுள்ளங்கொண்டு
பகர்ஜீவகாருண்ய நூலையாயிரமச்சிற்
 பதித்திடவுங் கட்டிகண்டு
 தாவருந்துன்புறச் சாமிமலைசென்று
 சாந்தமடையவுங் கனவினினின்று
 சாற்றியவண்ண நடந்தின்பம்பெற்றிடும்
 தரமறிந்தோமை மெய்யின்பமுற்றிடும் கதி

8 மதிநிலைபெறும் வகையுணராமல்
மயங்கு மெங்களையவத்தில்
மாளாவகை வகுத்திட்டவடற்சபை
மகத்தாம் பூசவுற்சவத்தில்
அதிர்வெடிதூக்கி யெறியக்கூனன்தேக
மாகாயம்போய்க்கீழ் விழவுங்குணமாக
ஆக்கியநின்னருள் கண்டவர்வியந்திடும்
அருமையறிந்தோமை யொண்டவர்நயந்திடும் கதி

9 சற்பத்தியுற்ற சுப்பராயப்பரதேசி
சத்திய தருமச்சாலைச்
தனிலிருந்து குளிஞ்சிக்குப்பத்துக்குத்
தனியே சென்றிடுங்காலைச்
சாலையிலிரவில் ராந்தல்மாத்திரம்
தனக்குமுன்செல வறிந்துதோத்திரம்
தன்னுள்ளேசொல்லிக் கொண்டேகவுமறைந்த
தரமறிந்தோம் வினைபோகவுநிறைந்த கதி

10 கோட்டகம்பள்ளிக் குடத்தான்சொப்பனத்திற்
கோதிலுருக் கொண்டுநானை
கொடியவரவங் கடித்திடுமயக்கங்
கொடுக்கு மருந்தவ்வேளை
கொள்ளவேண்டாஞ் சுகமாய்விடுமென்று
கூறியவாறே கடித்திடவன்று
குணம்பெறமருந் தேதொன்றுந்தின்னுமற்
கொண்டதறிந்த வெந்நீதொன்றுமுன்னுமற் கதி

11 சந்நிதானச்செயல் பற்பலகேட்டுச்
சத்தியபத்தி யைப்பெற்றே
சத்துவர்சூழ்பெங்க ளூர்வேணுகோபாலன்
தாய்சோதர ருடனுற்றே
சாலைசபைசித்தி வளாகம்வணங்கித்
தாண்டவஞ்செய்தில்லைக் கேகிடவிணங்கிச்
சாரும்வழிதப்பிப் போகவொருநதி
தாண்டச்செய்த தறிந்தோமைப்பெருநிதிக் கதி

12 மேலவன்வேணு கோபாலன் தன்மனையில்
விவாகத்திற்கு வந்துசேர்ந்த
வெகுபேர்க்கிரவின் மத்தியிலும்முரு
மேவிவுலாவிட நேர்ந்த
'வேளையிற்றிருட னெனமிகப்பயந்து
விரைந்துபார்க்க மறைந்திடநயந்து
விதிர்விதிர்த்திறைஞ் சிட்டநின்பெருமை
மெய்யன்பர்சொல்ல வறிந்தோமையருமைக் கதி

13 அவ்வேணுகோபாலன் மிகவலைந்திளைப்
படைந்து நடக்கும்வேளை
அகப்படாத்தருணத்தி னின்மாம்பழத்
தாவல்கொள நெடுநாளை
அன்பர்போல்வந்தோர் கனியைக்கொடுத்திட
அகங்களிகொண் டுடன்வாய்மடுத்திட
அக்கணமறையக் கண்டவருருகும்
அடைவுமறிந்த வெமக்கன்புபெருகும் கதி

14 பெங்களூர்வேணு கோபாலன்சகோதரன்
பெண்காலஞ் சென்றிடவிரவில்
பேரிடுகாட்டி லெவருமில்லாமையின்
பேதுற்றச்சங் கொண்டவிரைவில்
பெரியவைராகி யிராமலிங்கமென்னப்
பேசிவந்திக்குழியிற் புதைப்பீரென்னப்
பிரியமாய்ச்செய்தபின் வழித்துணைபண்ணிய
பின்புமறைந்ததுங் கேட்டயாம்புண்ணியக் கதி

15 பத்திநிறைவேணு கோபாலனோர்பகல்
பரமனும் பூசனைசெய்ய
பரிந்தும்முருவைப் பெண்காணச்செய்விக்கப்
பார்த்தவர் மனதுநைய
யத்தநிமிடஞ்சென்றப் பெண்சேய்தெருவின்
பக்கமாய்ப்போவதாக் கண்டுநும்முருவின்
பாங்குரைத்தோடப் பிடித்துவந்தின்புற்ற
பான்மையுமோர்ந்த நாயேமுய்யவன்பற்ற கதி

16 திருவொற்றியூர்பட்டினத்தார் திருக்கோவிற்
றெரிசிக்கும்போது தன்குடையே
தேடிக்காணுமலன்பன் வேணுகோபாலன்
திரும்பிப் போகுங்காலிடையே
தெருவில்வந்தொருவ ரதைத்தந்துபோக
திரும்பிப்பற்றி யவர்பின்விரைந்தேக
சென்றுங்காணுவித மறைந்ததுந்தன்மை
திறமுமறிந்தவிவ் வடியேம்பெறுநன்மை கதி

17 பத்தன்வேணுகோபால னொடுசேர்ந்தருட்
பாவினுட் சிலகவிப்பொருளைப்
பஜனைசெய்காரணப் பட்டுக்கந்தசாமி
பகர்ந்திடப் பற்பலமருளைப்
பாறிடச்செய்யவோர் பரதேசிபோல்வந்து
பட்டினத்தார்சொற் கவியொன்றையுவந்து
பாடிமறையத் தெரிந்தகமுருகும்
பான்மையறிந்த வெம்மின்சுகம்பெருகும் கதி

18 திருக்கோவலூர்சேர்ந்த கோட்டமருதூரில்
சீர்கருணீகக் குலத்தோன்
சிவகணபதி பூசையுந்தேவரீர்
திருவடிக் கன்புறுநலத்தோன்
சீலன்முத்துவெங்க டாசலற்குப்பொருள்
சிறிதுமில்லாது திகைத்தயர்ந்துன்னருள்
தீனனென்பாலில்லையே யெனத்தியங்கச்
சிற்றடியேங்கட்கு மெய்பின்பம்வயங்கக் கதி

19 தருமமிகும்புது வைக்கணித்தாய
தவளகுப்பஞ் சாவடிக்குச்
சமீபச்சாலையிற் பரதேசிபோல்வந்து
தரித்திர மொழியும்படிக்குத்
தவலரும்பஞ்சாக் கரவுபதேசஞ்
சாற்றிச்சோதிடத் திறற்பலதேசஞ்
சார்ந்தவருக்கு முக்காலத்தினுமாகும்
தன்மையறியவு முற்காலவினையோகும் கதி

20 தீவினை நல்வினை யாவுமையமறச்
செய்யுளாற் செப்பவுண்டாகும்
செல்வமிகுமதனு லெனவருளிச்
சிற்போதிற் காணுமலேகும்
சித்தியறிந்து வணங்கிடவவ்விதம்
செய்துவரவவ னிலம்பாட்டின்பதம்
தீர்ந்துசுகமா யிருந்திடும்பெருமை
தெரிந்தநாயடி யேம்பெறுமருமைக் கதி

21 வடலூறுஞ்சத்திய தருமச்சாலையில்
வந்திடு மன்பர்களருந்த
வளஞ்சேர்வேப்பூ ரிராமலிங்கப்பிள்ளை
மகிழ்ந்து நன்னிலம்பொருந்த
வைத்திடவழுக்காற் றுல்வாதம்புரிந்த
வன்பனைப்பொன்றப் பணித்ததைத்தெரிந்த
மற்றவரச்சுற் றடங்கிச்சுகமுற்ற
மகிமையுமறிந்த நாயேமகமற்ற கதி

22 வளநிறையுமூற்றங் கால்மங்கலத்தினில்
வாழுமொரு ரெட்டிக்கால
மரத்தடியிலும்மைக் காணும்படிசெய்ய
மலைத்துப் பயந்துசால
மகிழ்வுடன்பூக் கொண்டருச்சனைசெய்ய
மறைந்ததைக்கண்டு சிற்றடியேனுய்ய
வந்தருள்செய்தா யெனத்துதிபுகன்ற
வண்மைதெரிந்த நாயேம்விதியகன்ற கதி

23 சித்தர்கள்சூழ்வடற் சிற்சபைதெரிசித்துச்
சிறந்த நாகூரினுக்கேக
செல்வச்சாமிநாத செட்டியார்முதலியோர்
சேர்ந்தல்லில் வண்டியிற்போக
தேவரீரெட்டுவய துடையார்போலே
செல்லமூன்றுவது வண்டியின்பின்னாலே
தெரிந்தெவ்வூரென மருதூரென்றிடும்
செயலையறிந்த வெம்போதம்பொன்றிடும் கதி

24 வண்டியிலேறெனச் சொல்லியுந்திருடர்
வந்தென்னென்பா ரெனச்சொல்ல
மறுக்கவற்புறுத்தி யேறும்படிசெய்ய
வதிந்து வைகரைமெல்ல
வண்டிவிட்டிறங்கிச் சென்றிடத்தேடியும்
மறைந்ததைக்காணுமல் மனம்வாடியும்
வருந்தியுந்துதி செய்துஞ்சென்றிடும்
மகிமைதெரிந்த வெம்பவம்வென்றிடும் சுதி

திருவருட்பிரகாச வள்ளலார்

திருவடிகளே சரணம்.

சம்பூர்ணம்.



சிவகணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி—தனிப்பெருங்கருணை.

காரணப்பட்டு

# ஸ்ரீசுந்தரவிநாயகர் பாமாலை.

## காப்பு.

வெண்பா.

உலகம் பரவு மொருமுதல்வ வென்றுங்
கலகம் பறிக்குங் கடவுள்—விலகலின்றிக்
காரணப்பட் டோர்வாழ் கணபதியின் பாமாலை
சீரணவச் செய்யவருள் செய். 1

சீரோங்குஞ் செல்வத் திருஞானச் செல்வியர்வாழ்
பாரோங்குங் காரணப் பட்டூரிற்—பேரோங்குஞ்
சுந்தரவி நாயகனின் சொன்மாலை சாற்றிடற்குத்
தந்தருள்வா யுண்மைத் தரம். 2

---

## கலி விருத்தம்.

பெரும்பொருட்கொளும்பிரணவமெய்யினிற்
பிறங்குவோனெனப்பேசருந்தெய்வமே
விரும்புநாரையூர்நம்பிக்குவேண்டிய
விறலளித்தமெய்ஞ்ஞானவிநோதனே
அரும்பெரும்புருஷார்த்தமடைந்திடு
மன்பர்சூழ்திருக்காரணப்பட்டினிற்
றுரும்பனேனைப்பாடென்றருள்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 1

விப்ரகண்யர்விதியின்வழிபடும்
வித்தகன்றருமுற்பெருந்தெய்வமே
யிப்ரபஞ்சத்தினின்பமும்வானுளோர்க்
கேற்றபோகமுமெத்திசையெங்கணு
மெப்ரபாவமுமென்றனுக்கிங்ஙனே
யீந்தருள்திருக்காரணப்பட்டினிற்
சுப்ரமண்யர்க்குமுன்வருந்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 2

நாரதாதியர்நாத்தழும்பேறிட
நவிலுநாயகனன்கருள்தெய்வமே
யூரனோடுசேரனும்போமுன
முரியவெள்ளையையோர்கைலைதன்னிலுட்
காரவைத்திட்டகாரணனேயென்முன்
காலன்வாராதருள்காரணப்பட்டிற்
சூரநாசன்றன்சோதரத்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 3

வாதினாற்பெருமாயைமிதித்தவோர்
மாநடத்தன்மதிப்பருந்தெய்வமே
போதினையவம்போக்கிடும்புல்லர்பாற்
போந்துறுமெய்ப்புலமையருளுவாய்
தீதிலாக்கபிலன்மலையாசனன்
சேவித்தேத்திடுங்காரணப்பட்டினிற்
சூதிலார்க்குத்துணைவருந்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 4

மன்னுதில்லையின்மாதவத்தூர்வாசன்
மகிழுமாநடமாடிடுந்தெய்வமே
பன்னுமெய்கண்டநாதற்குப்பாலித்தும்
பாரிற்காசிப்பதியில்விருந்தின
னென்னும்பல்வடிவேற்றுங்கருணைசெய்
யிறைவனேதிருக்காரணப்பட்டினிற்
றுன்னுநாயடியேற்கருள்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 5

மதிக்கும்யாவும்விதிக்குமலரயன்
மருகனென்றுவழங்கிடுந்தெய்வமே
விதிக்கும்வேதவியாசருக்கும்விசுவா
மித்திரற்கும்விரைந்தருள்செய்திடுங்
கதிக்குமாபுகழ்கேட்டுநின்காலிணை
காப்பதென்றெண்ணிக் காரணப்பட்டினிற்
றுதிக்குஞ்சிற்றடியேற்கருள்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 6

சகமெலாஞ்சிருட்டிக்குந்தரமிலாச்
சதுமுகற்கருள் தந்திடுந்தெய்வமே
யிகமெலாந்தன்வயிற்றிலிலங்கிட
விறைவர்மூவர்க்குங்காட்டிடுமெந்தையே
மகமெலாமுறையாச்செயுமாந்தர்கள்
மல்குங்காரணப்பட்டின்மகிழ்ந்தருட்
சுகமெலாஞ்சிறியேற்கருள்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 7

கன்மம்பத்திமெய்ஞ்ஞானங்கணித்திடுங்
கடவுள்மாங்கனிகைக்கொளுந்தெய்வமே
மன்மதற்குமகோற்கடத்தேவனாய்
வந்துமுன்செயல்தந்திடும்வள்ளலே
கன்மனமுங்கரையக்கவிசொலுங்
கற்றவர்சூழுங்காரணப்பட்டினிற்
றொன்மைத்தொண்டரோடேற்றருள்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 8

சிட்டரேத்துஞ்சிருட்டிசெய்பங்கயன்
செல்வனென்னுமரீசிமுனிவரற்
கட்டமூர்த்தனருளிலைம்மையே
யரியபுத்திரியாய்வந்தவல்லபை
யிட்டமோடுமணம்புரிந்தின்புறு
மிறைவனேயெழிற்காரணப்பட்டினிற்
றட்டனேனையுமாட்கொளுந்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 9

அங்கமெல்லாந்தொழுநோயடைந்திடு
மரையன்சோமகாந்தனெனுமன்புளோன்
புங்கவநின்புராணத்தைக்கேட்டதாற்
பொன்வடிவொடுபோந்தமனைமைந்த
ரெங்கணும்புகழெல்லோருநின்புவி
யேறச்செய்தாயெழிற்காரணப்பட்டிற்
றுங்கமில்லொதியேற்கருள்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 10

பல்விதச்சமயங்கள்பராவிடும்
பரசிவன்முற்பரிந்திடுந்தெய்வமே
வெல்விடயமொழித்துமீதானத்தின்
மேவிநின்னொடுவிள்ளவில்லாதுறுங்
கல்விகேள்வியைப்பெற்றுக்கதிபெறக்
கருதுவோர்வாழுங்காரணப்பட்டினிற்
றொல்வினைதொலைத்தெற்கருள்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 11

ஏதமும்மதவாதமுமெய்திலா
ரிதயமேவியிருந்திடுந்தெய்வமே
நாதமுஞ்சென்றுநின்மயநானெனு
நன்கறிந்துபின்னனேதானென்றிடும்
பேதமுஞ்சென்றபேறுவிரும்பிடும்
பெரியர்வாழ்ந்திடுங்காரணப்பட்டினிற்
சூதனேற்கருள்செய்திடுந்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 12

ஒன்றுமல்லவிரண்டுமன்றொன்றிரண்
டுருவுமல்லவருவுமன்றுருவரு
வன்றுவிந்துவுநாதமுமன்றெலா
மாகியன்றுயகத்தும்புறத்தினு
மென்றும்பூரணமாகியிலங்கிடு
மெந்தையேயெழிற்காரணப்பட்டினிற
றொன்றுநின்றொண்டரோடருள்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 13

மாசிலாநெறியாய்ந்திடுமாதவர்
மனதிலென்றும்வதிந்திடுந்தெய்வமே
வேசியார்மஞ்சண்மேனிமினுக்கினின்
மிகமயங்கிமெலிவுற்றுமெய்யினிற்
றேசிலாதுதிரைநரைமூப்பொடு
சேர்ந்தனன்காரணப்பட்டினின்பதத்
தாசியென்மேற்படவருள்தூயனே
யருட்ஜோதிக்கடவுளே. 14

சித்தசித்தின்றிறந்தெரிந்துற்பவஞ்
சேதமற்றோருளந்திகழ்தெய்வமே
மத்தநெஞ்சகவஞ்சகப்பாவியேன்
வாய்மையற்றமனத்தைத்திருத்திநின்
சித்தம்விட்டகலாமற்றிருவுளஞ்
செய்தருள்திருக்காரணப்பட்டினிற்
சுத்தசத்துவவித்தகத்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 15

அம்பினேர்விழிமங்கையராசையை
யறவிடுத்தவர்க்கன்பருள்தெய்வமே
வெம்பிவெம்பிணியாலிலம்பாட்டினன்
மிகவுந்துன்புற்றுவேண்டிநின்சந்நிதி
நம்பிவந்தவிந்நாயேனுக்குன்னரு
ணல்குவாய்திருக்காரணப்பட்டினிற்
றும்பிமாமுகவைங்கரத்தூயனே
தோன்றலேயருட்சோதிக்கடவுளே. 16

கருதிச்சிந்தைகசிந்தவருக்கென்றுங்
காட்சிதந்திடுங்கரிமுகத்தெய்வமே
பெருதினேருழைத்தெண்ணடங்காநினை
யெண்ணியெத்தனையோவுடம்பெய்தியு
மொருதினத்துமுன்னைநினையாதவிவ்
வொதியனேற்கருள்காரணப்பட்டினிற்
சுருதியின்முடிமேலுறுந்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 17

ஆதியாய்நடுவாகிமுடிவுமா
யல்லவாகியமர்ந்திடுந்தெய்வமே
குதினோர்தனத்தோகையர்மையலிற்
சூறைக்காற்றிற்கறங்காச்சுழன்றிடுந்
தீதிலேதினம்போக்கியவென்பிழை
தீரவந்தனன்காரணப்பட்டினிற்
சோதியாதெனையாண்டருள்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 18

புன்மயக்கிற்பொறிவழிசென்றிடாப்
புண்ணியர்க்குண்மைபோதிக்குந்தெய்வமே
கன்மயங்குமனத்திற்கலங்கிடுங்
கடையனேனைக்கடைக்கணித்தாளுவாய்
பன்மயக்கினிற்பட்டுழலாநல்லோர்
பரவுங்காரணப்பட்டிற்பழமறைச்
சொன்மயக்கத்துலங்கிடுந்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 19

தேகபோகங்கிஞ்சித்தும்விருப்பிலாச்
சீவன்முத்தருளந்திகழ்தெய்வமே
சாகவேவழிகாட்டுஞ்சகமயற்
சார்வகாலமுஞ்சார்ந்து தயங்கினேன்
காகதாலியம்போனின்கழலிணை
காணவந்தனன்காரணப்பட்டிலென்
சோகநீக்கியருள்செயுந்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 20

பந்தபாசம்பறித்தமெய்ஞ்ஞானிகள
பங்கிலென்றும்பரிந்திடுந்தெய்வமே
யெந்தநாளுமுன்சேவடியின்புக
ழின்பருதொன்றிரண்டுறைக்கவி
சந்தமாகவுஞ்சாத்தும்புலமையைத்
தந்தருள்திருக்காரணப்பட்டினிற்
சுந்தரக்கயமாமுகத்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 21

தித்திமித்திமியென்னத்திருநடஞ்
செய்யுஞ்சிற்சபையோன்றருந்தெய்வமே
சித்திமுத்தியும்பத்தியுஞ்செவ்வனே
சேர்ந்தனுபவமாகுந்திறமருள்

சித்திபுத்தியைச்சேர்ந்துமெய்வாழ்வென்றுந்
திகழுங்காரணப்பட்டிற்சிறந்துளோர்
துத்தியம்பெறுமைமங்காத்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 22

கலங்கும்வானோர் களிக்கவோர்சூரனைக்
காலனைகொள்ளக்கணித்திடுந்தெய்வமே
யிலங்குங்காரியகாரணமென்கின்ற
வெட்டிரண்டெளியேற்குவிளக்குவாய்
மலங்குறுதமகத்துவச்சீரெலாம்
வாய்ந்திடுந்திருக்காரணப்பட்டினிற்
றுலங்குமூஷிகவாகனத்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 23

நித்தபூரணநிஷ்களநிர்க்குண
நித்தியன்றருநின்மலத்தெய்வமே
சித்தஜாலவிகற்பத்தைத்தீர்த்துயர்
சிற்சுகம்விளைவிக்கத்திருத்திகொள்
ளத்தனேயெனத்தொண்டுசெய்யன்புளோ
ரார்ந்தகாரணப்பட்டிலமர்ந்திடுஞ்
சுத்தவேழமுகம்பெறுந்தூயனே
தோன்றலேயருட்சோதிக்கடவுளே. 24

மன்றுளாடியமாமணியன்புகொண்
மைந்தனென்றுவழங்கிடுந்தெய்வமே
யென்றுமென்றனையிந்திரியக்கள்வ
ரீர்த்துமாயமயக்கிலிணைத்திடச்
சென்றுமுப்பெருமாசையிற்றேய்கின்ற
தீனனேற்கருள்காரணப்பட்டினிற்
றென்றுதொட்டுமுதற்றொழுந்தெய்வமே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 25

ஒப்பிலாதவொருவனென்றுரண
மோதுஞ்சங்கரனுண்மகிழ்தெய்வமே
யிப்பிராயத்திலேனுமிங்காட்கொளா
தேழையேனைக்கைவிட்டிடிலென்செய்வேன்
தப்பிலாதசெல்வம்பெறுந்தக்கவர்
சாருங்காரணப்பட்டினிற்றண்ணளி
தப்பினோடுவிளங்கிடுந்தூயனே
தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 26

இன்பெலாந்தருமீசனென்றுகம
　மியம்புஞ்சங்கரனீன்றருள்தெய்வமே
யன்பெலாந்திரண்டோர்வடிவாகிய
　வருட்பிரகாசன்வரவெற்கருளுவாய்
என்பெலாங்கரைந்தேத்திடும்பத்தர்க
　ளென்றும்வாழ்ந்திடுங்காரணப்பட்டினிற்
றுன்பெலாந்தவிர்த்தாட்கொளுந்தூயனே
　தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 27

பன்மார்க்கப்பொதுவென்னப்பலன்றரும்
　பரமனன்பிற்பரிந்திடுந்தெய்வமே
புன்மார்க்கத்தவம்போக்கிமெய்ப்போதமார்
　பொருணிறைந்தநற்கல்வியைப்போதிக்குஞ்
சன்மார்க்கத்தரெந்நாளுந்தழைத்தோங்குந்
　தலமெனத்தகுங்காரணப்பட்டினிற்
றுன்மார்க்கச்சிறியேற்கருள்தூயனே
　தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 28

மருவுஞ்சுத்தசன்மார்க்கசங்கத்தபி
　மானிகட்குமகத்துவமார்சுத்த
வுருவுதந்தெங்குய்கொலைபுலையொருவிடற்
　குரியராகவுஞற்றவருளுவாய்
கருவுட்சேராக்கதியைக்கருதுவோர்
　களித்துவாழ்ந்திடுங்காரணப்பட்டினிற்
றுருவுளேற்குமருள்செயுந்தூயனே
　தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 29

அரியகத்தனனந்தலமர்ந்திடு
　மாதிசேடன்சேயம்புலிமுற்கலர்
உரியவாவணிபூர்வசதுர்த்தியி
　லுற்றநோன்பையெடுக்கவுவந்துடன்
கரியமாமுகக்காட்சிதந்தாட்கொண்ட
　கர்த்தனேதிருக்காரணப்பட்டினிற்
றுரியநன்னிலையெற்கருள்தூயனே
　தோன்றலேயருட்ஜோதிக்கடவுளே. 30

முற்றிற்று.

வாழி.

வாழிசுந்தரக்கணபதிமாதேவன்
வாழிவேலவன்வாழிமெய்யாரியன்
வாழிசுத்தவுடம்புறுமாதவர்
வாழியந்தணர்நன்னீதிமன்னயர்
வாழியெங்கும்வயங்கிடுமானினம்
வாழிகாரணப்பட்டிலமர்ந்துளோர்
வாழிசுத்தசன்மார்க்கப்பெருநெறி
வாழிவையமும்வானமும்வாழியே. 31

முற்றும்.

## ஸ்ரீசுந்தரவிநாயகர் கீர்த்தனை.



இராகம்-முகாரி-சாப்பு-தாளம்.

எதுவேணுஞ் சொல்மனமே—உனக்
கெதுவேணுஞ் சொல்மனமே.

பொதுவினடம்புரிபுங்கவன்முன்றரும்
புதல்வன்பொன்னடிவேணுமா—அல்லது
புதுமயல்காட்டிப்புணர்ச்சியின்பந்தரும்
பூவையரேவேணுமாவேணுமா—உனக்கெதுவேணும், 1

பொங்கரவம்புனைபுண்ணியன்றருங்கந்த
பூர்வஜன்னியன்வேணுமா—அல்லது
போதத்தைத்தந்துநற்புலனையழித்திடும்
புன்மாதரேவேணுமாவேணுமா—உனக்கெதுவேணும். 2

மன்றிற்றார்வாசர்க்குமாநடங்காட்டிய
மலரிணைப்பதம்வேணுமா—அல்லது
மன்மதன்வாதையின்மதிமயங்கிடச்செய்யு
மங்கையரேவேணுமாவேணுமா—உனக்கெதுவேணும் 3

கரிமுகனைச்செற்றகருணாகரனெனுங்
கணபதிக்கழல்வேணுமா—அல்லது
கண்காட்டிப்பின்னேகரங்காட்டித்தனங்கொள்ளுங்
காதகியேவேணுமாவேணுமா—உனக்கெதுவேணும். 4

தொல்யுகந்தன்னின்முத்தொழிற்செய்திடும்வக்ர
துண்டன்சீரடிவேணுமா—அல்லது
துன்மதிசொல்லிப்பின்றுன்பத்திலாழ்த்திடுந்
தோகையரேவேணுமாவேணுமா—உனக்கெதுவேணும். 5

கனராஜன்றனைவென்றகனகசிந்தாமணிக்
கழலிணைமலர்வேணுமா—அல்லது
கருத்தொன்றுவாக்கொன்றுகண்ணொன்றுகாட்டிடுங்
காதகியேவேணுமாவேணுமா—உனக்கெதுவேணும். 6

சிந்தூரவசுரனைச்செற்றகஜானனர்
சேவடித்துணைவேணுமா—அல்லது
சிணுங்கிப்பிணங்கிப்பின்சிரித்துமிணங்குமூ
தேவியரேவேணுமாவேணுமா—உனக்கெதுவேணும். 7

கமலாசுரனைமறக்கருணைசெய்மயூரேசன்
காலிணைமலர்வேணுமா—அல்லது
காலன்போலுன்னுயுள்கணக்கிடுங்கன்னெஞ்சக்
கடியவளேவேணுமாவேணுமா—உனக்கெதுவேணும். 8

முற்றும்.

---

காரணப்பட்டு

# விக்னேசுவரர் - நாமாவளி.



மகாகணபதிவருவாயே
மரணமிலாதகதிதருவாயே. 1

சுந்தரவிநாயகர்திருவடியே
துதிப்பவர்திருமுடிக்கணிமுடியே. 2

சுந்தரவிநாயகர்பொற்பதமே
சுகநிலைநெறிதருநற்பதமே. 3

சுந்தரவிநாயகர்தோத்திரமே
சுருதிமுடிமேலுஞ்சூத்திரமே. 4

சுந்தரவிநாயகர்வாழிடமே
சுகசொரூபநெறியர்சூழிடமே. 5

காரணப்பட்டிலமர்கணபதியே
காரணமட்டிலருள்குணநிதியே 6

மதிநெறிதருசுந்தரநாதா
மணியௌடதமந்திரபோதா 7

விதியின்செயலொழிக்குஞ்சுந்தரத்தூயா
வினையின்பயனழிக்குமந்திரத்தேயா. 8

சுந்தரவிநாயகரைப்பாடுவோரே
ஜோதிநடுநிலைநெறிநாடுவோரே. 9

சுந்தரக்கணபதிதன்சுயசரித்திரமே
சொல்பவர்க்கில்லைவெந்துயர்தரித்திரமே. 10

சுந்தரவிநாயகர்நாமசுகசரித்திரமே
துதிசெய்பவர்க்கில்லைவீமபவவுபத்திரமே. 11

பாரினினல்வளப்பலன்றருங்காரணப்
பட்டினிலமர்ந்தருள்பரமேசா
பண்ணொடுநின்னருட்பதப்புகழேத்திப்
பரவிடும்பத்தர்கள்பவநாசா. 12

படிறனேன்படும்பிணிபயந்தீரக்காரணப்
பட்டினில்வந்தனன்பண்ணவனே
பரமகிருபாகரபரிபூரணபரம்
பரசிவனீன்றமுக்கண்ணவனே. 13

சுமுகாயலம்போதராயநமவே
சூர்ப்பகர்ணதூமகேதுநமவே. 14

ஏகதந்தாயகபிலாயநமவே
ஏரம்பகஜகர்ணிகாயநமவே. 15

விகடாயவிக்னராஜாயநமவே
விக்னவேதவிநாயகாயநமவே. 16

கணபதேபாலசந்திராயநமவே
ஸ்கந்தபூர்வஜகணேசாயநமவே. 17

வக்ரதுண்டாமயூரேசசரணம்
வல்லபைமஹோற்கடமஹேசசரணம். 18

கணாத்யக்ஷாதுண்டிநாயகாசரணம்
கஜானனவுபமயூரேசாயசரணம். 19

கணாதிபதிநின்பதசரணம்
கடைநாயேனென்பவஹரணம். 20

சுந்தரசிந்தாமணிசரணம்
தொந்தரைநந்தாபவஹரணம். 21

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி—தனிப்பெருங்கருணை.

# சுப்பிரமணியக்கடவுள்

## சோடச வெண்பா.

### சாமிமலை.

கஞ்சமலர்ச் சேவடியோர் காலுமறப் பின்றியென்றுந்
தஞ்சமென்றுள் ளன்போடு தாழ்ந்தேத்தில்—வஞ்சநெஞ்சே
நாமிவணீங் காத நலம்பெறவே வந்தருள்வான்
சாமிமலை சாமிநா தன். 1

உன்னைநினை யாத வொதியனே னாயிடினு
மென்னைவிட னின்கருணைக் கேற்குமோ—தன்னைநிக
ரோமியலுண் மெய்ப்பொருளை யோதும் பரமகுரு
சாமிமலை சாமிநா தா. 2

### திருச்செந்தூர்.

சேவித்துள் ளன்போடு சிந்திச்சி னெஞ்சேநம்
மாவிக் கொருகெடுதி யாவதிலை—பூமி
லொருச்செந்து வுந்தம் முயிரென்போர் வாழுந்
திருச்செந்தூர் தேவைத் தினம். 3

திருக்கமலக் கண்ணன் றிருமருகன் றன்னை
யுருக்கமுட னெஞ்ஞான்று முன்னி—னெருக்கக்
கருச்சென்று வாராக் கதியருள்வா னெஞ்சே
திருச்செந்தூர் சந்நிதியைச் சேர்ந்து. 4

### சோலைமலை.

வழிபாடு செய்யும் வகையுணர்ந்தென் னெஞ்சே
யொழியாம லுன்னி லுடனே—பழியாத
பந்தநா சஞ்செய்யும் பத்தர்நிறை சோலைமலைக்
கந்தநா தன்பூங் கழல். 5

அறமுதலா நான்கு மடையவெனி னெஞ்சே
புறமுதலாம் பற்றனைத்தும் போக்கி—விறலுடைய
வேலைமலை வல்லியிடம் வேண்டிக் கரத்திலுற்ற
சோலைமலை யானைத் தொழு. 6

### திருப்பரங்குன்றம்.

விண்ணவரு மண்ணவரும் வேண்டுநலம் பெற்றுய்ய
நண்ணல்செய் கின்றாரெந் நாளுநம—தெண்ணம்
ஒருப்படச்செய் வானீயு முன்னுவையே னெஞ்சே
திருப்பரங்குன் றானைத் தினம். 7

ஒருகணமு மோயாம லுன்னுவையேற் கூற்று
றொருகணநம் பால்வரவே வுன்று—றொருகால்

விருப்பமுறிற் றுன்புற்று வீழ்வானென் னெஞ்சே
திருப்பரங்குன் றக்கடவுள் சீர். 8

பழனி.

ஒருவாம லேத்தி லொருநாளு நம்மைக்
கருவாயிற் சேர்க்கக் கருதான்—மருமலரோன்
முன்பநுப வித்ததுயர் முற்றுமற வான்மனனே
தென்பழனி யானைத் தினம். 9

வன்பாரும் வன்னெஞ்சர் வாயலிற்செல் லாதுயிர்கட்
கின்பாருஞ் செய்கையுட னெம்மானை—யன்பா
யொருவாம லேத்தி னுடனருள்வா னெஞ்சே
திருவாவி னன்குடியைச் சேர்ந்து. 10

குன்றுதோறாடல்.

பதப்பரவிற் சாகாப் பதந்தருவான் யார்க்கு
மிதம்பரிவிற் செய்துநெஞ்சே யென்றுஞ்—சிதம்பரமா
மன்றுளே யாடுகின்ற மாதேவன் பின்னீன்ற
குன்றுதோ றாடுங் குகன். 11

மன்றுணின் றாடுகின்ற மாதேவன் மாமதலாய்
சென்றுநின் னன்பருடன் சேர்ந்தென்றுங்—குன்றுதொறு
மாடல்செயு முன்ற னரும்பெருஞ்சீர் பாதமொன்றே
நாடல்செயு நல்லவா நல்கு. 12

பொது.

வரசத்தி வேல்முருகா வள்ளிமண வாளா
அரனெற்றி யாறுபொறி யப்பா—பரம
சடாட்சரா வென்றுன்னிற் சந்ததமு நெஞ்சே
கடாட்சமே செய்தருள்வான் காண். 13

சரவணப வாகுகா சண்முகா கந்தா
மரகதம யூரா வடிவேற்—கரமருவுஞ்
சாமிநா தாவென்னிற் சத்தியநெஞ்சே பெறலாம்
நாமிறவா வீட்டி னலம். 14

பவநோ யுடனேய் பகர்மரண நோயு
மிவனோயா வுண்ணோய்மற் றெல்லா—வவநோயு
மென்பால் வராதவகை யெண்ணிலையே லென்குருவே
யுன்பாற் கருணையுமுண் டோ. 15

தீன தயாபரனே தெய்வயா னைக்கொழுநா
ஞான திவாகரர்க்கு நாயகா—மோனமுறுங்
குட்டமுனிக் குங்குருவே கோமானே சிற்றடியே
னிட்டமிறை வேறவரு ளே. 16

முற்றிற்று.

உ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை..

---

திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

சிதம்பரம்-இராமலிங்கசுவாமிகள்

# சற்குருவெண்பாவந்தாதி.

---

காப்பு.

சீர்சான்ற மெய்ஞ்ஞான சித்தர்மகிழ்ந் தேத்துமொரு
தார்சான்ற ராமலிங்க சற்குரவ—னோர்சான்ற
வெண்பாவந் தாதி விளம்பெனலா லைங்கரனின்
கண்பார்த்தன் முற்றுங் கடன்.

முருகக்கடவுள்.

கடம்பணியுங் கந்தா கதிர்வேலா ஞானத்
திடம்பணிநல் லோர்க்கருளுந் தேவா—மடம்படுமென்
வெவ்வினைதீர் மெய்க்குரவன் வெண்பாவந் தாதிசொலச்
செவ்விதிசெய் விப்பதுநின் சீர்.

## நூல்.

சீர்மேவு ஞானத் திருவொளியாய் மெய்யிலங்கு
பேர்மேவு மின்பப் பெருவெளியாய்ப்—பார்மேவு
முத்தமர்க்குந் தோன்று மொளிர்கின்ற ராமலிங்க
வித்தகநான் காண விளங்கு. 1

விளங்குகின்ற பல்விடய வேதனையா லென்றுங்
களங்கமுற்ற நெஞ்சக் கடையேன்—றுளங்கலறு
மன்பர்பணி ராமலிங்க வாண்டவனே நின்னுபய
வின்பபதம் போற்றவரு ளின்று. 2

இன்றிருந்தார் நாளை யிறப்பார் விலக்கொழியா
தென்றிருக்கா திப்பெருநூ லேத்தலா—னன்றிதைநீ
ரெள்ளாதாய்ந் துய்மின்க ளென்றருளி ராமலிங்க
வள்ளால்மெய் வாழ்வருளு வாய். 3

வாய்மையிலார் கூட்ட மறந்துமதி யாமனல்லோர்
தூய்மைபெறுஞ் சீர்புகலுஞ் சுத்தருடன்—றோய்வுற்
றிருட்பிணியைத் தீர்க்கவர மீவார் மனனே
யருட்பிர காசவள்ள லார். 4

ஆர்தருவார் சுத்தவுட லாதியவை மூன்றுமென
வோர்தருபே ரெண்ணங்கொண் டுற்றேறக்—சீர்தருமோ
ராறந்த மேலா ரருட்பா வருள்குருவே
பேறந்த நாளெனக்குப் பேசு. 5

பேசுமல மைந்தும் பெருதுன் னருள்மணந்தான்
வீசுமகத் தாலென் வியனிலையைத்—தேசுபெறத்
தந்தாள்வாய் ராமலிங்க தற்பரனே சற்குருவே
யெந்தாயே யென்றந்தை யே. 6

தந்தையென்று கொண்டாடுஞ் சற்புத் திரமார்க்கஞ்
சிந்தைகொண்டு தந்தாண்டாற் சீருலகி—னிந்தையிலாப்
பேறடைவேன் ராமலிங்க பெம்மானின் பாதமன்றி
வேறடைவே தில்லை விதி. 7

விதிமுற்றும் விட்டு விலக்கே புரியுஞ்
சதியற்ற மாந்தரெலாந் தாழ—மதிபெற்ற
வுத்தமர்கள் மேன்மேலு மோங்க விராமலிங்க
சித்தகுரு வேநினருள் செய். 8

செய்வினையைக் கூறிற் சிறியோர் பலருக்கும்
பொய்வினைநல் லோர்சிலர்க்கும் போராட்ட—மெய்வினையை
யேசியிடு மிவ்வுலகி லென்செய்வேன் ராமலிங்க
தேசிகநீ செப்போர் திறம். 9

திறமாங் கயல்விழியார் செய்கையொரு காலே
மறமாங் கொலைபுலைசெய் வார்கூட்—டுறவுமற்று
நித்தமொத்தென் னெக்கெடுத்த னீதியோ ராமலிங்க
வத்தவத்துன் பந்தீர்த் தருள். 10

அருளுருவோ டென்னைவலிந் தாண்டோய்க்கென் ணுவி
பொருளுடலுந் தந்தாலும் போதா—தெருளுடையோ
னென்னநடித் தேனிதுவு மேன்றுகொண்டாய் ராமலிங்க
மன்னவெனென் பேனுன் மனம். 11

மனமென்சொற் கேட்கின் மகத்தாம்பே றெல்லா
முனதருளா லிக்கணமே யுண்டா—தினமென்ன
வித்தா ரணியிலெனக் கெந்தா யிராமலிங்க
சித்தா மனமாயைத் தீர். 12

தீரத் துறந்தோர்தஞ் சீர்புகழுந் தொண்டரடி
யாரத் தலைக்கணிவார்க் கன்பருடன்—சேரற்கே
அற்பமுமீ டில்லேனே யானாலும் ராமலிங்க
தற்பரநீ யாளத் தகும். 13

தகுந்த தருணமென்று சாற்றி யரையிற்
புகுந்து மறைந்த புதுமை—மிகுந்தகர
வித்தகமா மென்னில் வியக்திியெந்நாள் ராமலிங்க
வித்தகநான் றேற விளங்கு. 14

விளங்குலக போக விடயமசத் தாகத்
துளங்குமெனிற் றுன்பந் தொலையும்—களங்கமிலாப்
போதமுன்னைச் சாருமெனப் போதித்தாய் ராமலிங்க
நீதவென்னுட் டோன்ற நினை. 15

நினையா நினைவென் னிலையெனவே சொற்ற
வுனையா னிரவுபக லுன்னும்—வினையாண்டு
மெற்குருவ மாக விசைவிப்பாய் ராமலிங்க
சற்குருவே நின்றாள் சரண். 16

சரணடைவோர் தாபமெலாந் தாக்குந் தகவோய்
மரணமிலா வாழ்க்கை வணமுங்—கரணங்கள்
சீவான்மச் சீருந் தெரிந்ததுபோல் ராமலிங்க
தேவாவென் னுள்விளங்கத் தேர். 17

தேரே னெனினுந் தெரிந்தவன்போ லேநடித்து
நேரே புகழுடைந்தே னீணிலத்தில்—யாரேனு
மெத்தனென்போ லுண்டோ விரங்கியருள் ராமலிங்க
வத்தநின்பேர் கொண்டாட லால். 18

ஆலடியி னல்வருக்கு மாழ்வாரி யுண்டமுனி
மூலர்முத லோர்க்கு மொழிந்ததுவு—மேலறியும்
பொற்பார் சிவஞான போதமன்றோ ராமலிங்க
சற்பாத் திரவெனக்குச் சாற்று. 19

சாற்றுங் கொடுமையுறுந் தாமதப்பேய் கொண்டென்னை
வேற்று விகார விடயத்திற்—றேற்றமிகு
மற்பனெனை யாட்ட வலமந்தேன் ராமலிங்க
வற்புதனே யாண்டருளன் பால். 20

அன்பாம் பொருள்கொண் டடியேன் வரும்வழியிற்
றுன்பாரக் கொள்ளைகொண்டார் துன்மார்க்கர்—நின்பாலில்
விண்ணப்பஞ் செய்துகொண்டேன் வித்தகவி ராமலிங்க
புண்ணவநீ யாளப் பரம். 21

பரநெறியும் பாசப் பசுநிலையு மேலாம்
வரன்முதலா யுற்றநெறி மற்றுந்—திரமுறவே
நிற்குநெறி யெற்கருள னின்மலவி ராமலிங்க
சற்குருநின் றுட்குரிய தாம். 22

தாமேயிங் காள்வதற்குச் சற்குருவாத் தோன்றியய
ஞமேவுஞ் சத்தி நலங்காட்டிப்—பூமேற்
றெருட்பெருஞ் சித்தெல்லாஞ் செய்தருள்வார் நெஞ்சே
யருட்பெருஞ் சித்த ரவர். 23

அவமார்க்கந் தீர்க்கு மருட்கடலே சாகாத்
தவமார்க்கந் தந்தருளுந் தாதா—சிவஞானம்
பெற்றவர்கள் வாழ்த்தும் பெரும விராமலிங்க
நற்றவவென் பேனென் னலம். 24

நலமேவ யாவருநின் னல்வடிவைக் காண
நிலமே லெழுந்தருளு நேரஞ்—சொலமேவுஞ்
சொப்பனமெந் நாட்கிடைக்குஞ் சொல்வா யிராமலிங்க
வப்பவிதென் பேராசை யாம். 25

ஆங்குணத்தார் நின்னடிய ராங்காங்கு கூடிநின்சீர்
பாங்குபெறப் பாடுகின்றார் பாவியேன்—றீங்குபெறு
மாதர்வசப் பட்டுழன்று வாடுகின்றேன் ராமலிங்க
மாதவவீ தென்னென் மதி. 26

மதிபலவுஞ் சொல்லி மனஞ்செல் வழியே
சதிபலவுஞ் செய்யுஞ் சழக்கன்—கதிபெறுமா
றெப்படியோ நின்சித்த மெந்தா யிராமலிங்க
வப்பவிதே கால மறை. 27

அறையுங் கலையி னகப்பொருள்க டேரு
ரிறையும் பெரியரல வென்றாய்—முறையுளவின்
பொற்புறவென் பாலருள்வாய் புண்ணியவி ராமலிங்க
வற்புதநின் னேர்கருணையால். 28

கருணையான் மெய்யென்னுங் காயமதை மெய்யாம்
பொருணையாச் சித்தி புகன்றே—மருணையச்
செய்வித்தாய் ராமலிங்க தேசிகனே யவ்வணமே
யுய்விக்கக் கொள்வா யுளம். 29

உளத்தினிதம் பொன்னைமதித் துள்ள வுலோப
வளத்தரிடஞ் செல்லாத வாழ்வு—மிளக்கமுடை
னையமிலா தேற்போர்க் கருளியல்பும் ராமலிங்க
வையவடி யேற்குத்தந் தாள். 30

ஆளுடைய பிள்ளையா ரம்பொனடி போற்றவைந்தா
நாளுடைமை யென்றே நவின்றிட்டாய்—கோளுடைமை
கொள்ளா தெனையாண்டு கொண்ட விராமலிங்க
வள்ளா லதன்சீர் வழுத்து. 31

வழுத்தற் கரிய மனுவுடலைப் பெற்றோர்
கொழுத்துண் டுறங்குவதைக் கொண்டாற்—பழுத்துவிழும்
வேதனையான் மெய்யென்று மெய்யுரைத்தாய் ராமலிங்க
நாதவழி யாததனை நல்கு. 32

நல்குதலுக் கெண்ணிறந்த நாளா யெனையறியா
நல்குரவொன் றாலே நடுநடுங்கி—யொல்குதலோ
டங்கமெலா நைந்தே யடுத்தே னிராமலிங்க
புங்கவவென் றுன்பதனைப் போக்கு. 33

போக்கின்மெய் வீடும் புகழ்பொருளுங் காப்பறிவுந்
தேக்கிற்றமிழுஞ் சிரத்தைநட்பு—மாக்கிவருந்
திண்ணமுறச் செய்வாய் சிதம்பரவி ராமலிங்க
பண்ணவவீ தென்னுடைய பற்று. 34

பற்றுனக்கொன் றுண்டு பரிகரிப்பேன் றுன்புகொளா
துற்றிருப்பா யென்று யுடன்கண்டேன்—சற்றுணர்ந்துஞ்
சொற்குறிபோ னில்லேனென் சொல்வே னிராமலிங்க
சற்குருவே யுன்றன் றரம். 35

தரமன் றுணரிற் றரணியெலாந் தோற்றுந்
திரமன் றறிவையெனத் தேற்றிப்—பரமொன்றப்
பண்ணவெண்ணி நந்நிலையைப் பாலித்தாய் ராமலிங்க
வண்ணலென்றன் றன்மை யறிந்து. 36

அறியாமை நீங்கி யறிவா யறிவுக்
கறிவாகி யவ்வறிவுக் கப்பாற்—பிறிவற்ற
வத்துவிதா னந்த மருள்வா யிராமலிங்க
சத்துவனே யித்தருணந் தான். 37

தானந்த நானிரங்கித் தன்மையிலேற் கொன்றுகொடுத்
தானந்த விர்க்கவெவ்வா றெவ்வியதோ—தானந்த
மில்லவனென் றேத்து மியல்புடைய ராமலிங்க
வல்லவனென் னேயுன் மனம். 38

மனமாயை கொண்டு மதிவினையி னாலுந்
தினமாழ்கித் தீவினையே செய்யக்—கனவிடத்துந்
தூண்டமிகுந் துன்புற்றுத் தூயோ யிராமலிங்க
வாண்டவநின் றாள்பணிந்தேன்யான். 39

யானெனதென் னுஞ்செருக்கை யீர்த்தென்னை யாட்கொள்ளுங்
கோனெனவுட் கொண்டேன் குறைகளெலா மானகவே
மெத்தவுநின் பாலுரைத்தேன் மேதகவி ராமலிங்க
வித்தகநின் சித்தமினி மேல். 40

மேன்முகங்கொள் ளென்றபடி மேவவருள் வித்தகவென்
பான்முகங்கொண் டென்றனருட் பாவென்னு—நான்முகப்பி
னூற்றிருபத் தெட்டா நுவலும் பதப்புகழைப்
போற்றிருபற் றென்றும் புகல். 41

புகலுவதென் குற்றமெலாம் பூரணநின் பாலி
லகலுவதற் காமென் றறிந்தே—யிகல்வதிலாச்
சீலர்பணிந் தேத்துஞ் சிதம்பரவி ராமலிங்க
மேலவனே யாள்க விரைந்து. 42

விரைந்தெனையன் றாண்டவந்த வித்தகனே யென்று
கரைந்துநினைந் துங்கனவிற் காணேன்—திரைந்தெனுடல்
மண்ணாலாகா வகைகொளுமோ ராமலிங்கா
வண்ணாநின் னுள்ள மது. 43

அதுவிதுவென் றன்றென் றறியவொண்ணா வாற்றாற்
பொதுவதுவென் றோரார் பொருளைப்—புதுமையுற
வெண்ணாதே சும்மா விருவென்ற ராமலிங்கக்
கண்ணாளா தேற்றக் கலை 44

கலையுரைத்த கற்பனையே கற்றவருக் குண்மை
நிலையுரைத்தற் கெத்துணையு நேரா—நிலையறியுந்
துங்கருக்கே யன்றியெனச் சொற்ற விராமலிங்க
புங்கவனே நாவே புனை. 45

புனைவதுநீ றக்கமணி பூண்பதுமெய் யன்பி
னினைவதுநின் சீரடியே நித்தம்—வினையொழிக்கக்
கற்றவரின் பாங்கிதெனக் கண்டே னிராமலிங்க
நற்றவனே நான்பொருந்த நாடு. 46

நாடுநடு நாட்டத்தை நாட்டியெனை வாட்டுகின்ற
கோடுபடு வன்மனத்தைக் கூட்டியென்னோ—டீடுபடச்
சேர்த்தாள வல்லவரார் சித்தகுரு ராமலிங்க
தீர்த்தாவீ துன்றன் றிடம். 47

திடம்பெறுமோர் ஞானத் திறமுன்பு காணற்
குடம்புறவே நின்றந்த வொன்றைச்—சடம்பெறவே
காட்சியதாய்த் தோற்றுவிப்பாய் கற்பகவி ராமலிங்க
மாட்சியனே யென்பான் மகிழ்ந்து. 48

மகிழ்கொண் டயன்விதித்த வாறு ளொழிந்தாற்
றிகில்கொண் டிடநவென் செய்வான்—முகிவென்று
வேதனையே கொள்ளாதீர் மெய்த்தவவி ராமலிங்க
நீதனுரை யாய்வீர் நிசம். 49

நிசமயிலா நாயேன்முன் னீடுலகிற் றோன்றி
விசனமெலாம் போக்க விதித்த—வசனமதை
யாதரவாக் கொண்டே னருள்வாயி ராமலிங்க
மாதவநின் வாசமகி மா. 50

மாதுறையு மாமதியு மான்மழுவு மாசடையு
மாதுறையு மாபணியு மாவுரியு—மாதுறையுஞ்
சங்கவிழி யுங்கரந்து சற்குரவ னாகவந்தோ
னெங்க ளிராமலிங்க னே. 51

இராமலிந்த மாந்த ரிறப்புண்டென் றேங்கி
யிராமலிங்கு வாழுநம நீச—னிராமலிங்க
சற்குருவாய் வந்தருட்பா தந்தான் மனனேயந்
நற்குருநா லென்னறிவே னான். 52

நான்செய்த குற்றமெலா நாடியவ னிவ்வளவு
மேன்செய்தா னஞ்சீ ரெழில்பெறவே—தான்சினங்கொள்
ளாதவையெல் லாஞ்சொலித்தன் னன்பருடன் ராமலிங்க
வாதவனின் பங்கொள்ளு வான். 53

வான்வாய் மருத்தில் வயப்படுமென் பஞ்செனச்சொற்
றேன்வாய் மலர்க்குழலார் செய்கையெனுங்—கான்வா
யடுத்தாழ்ந்தேன் ராமலிங்க வாரியனே யன்பிற்
றடுத்தாள்வா யச்சஞ் சலம். 54

சஞ்சலங்கொண் டேங்குந் தமியேற் குளமிரங்கி
யஞ்சலென்று னின்னருளுக் காகாதோ—துஞ்சலுறச்
சீரியலே நல்குஞ் சிதம்பரவி ராமலிங்க
வாரியனே மூவாசை யால். 55

ஆசையிலார் நெஞ்சகந்தோ யற்புதனே யன்புகொண்டு
பூசைபுரி வோர்க்கருளும் புண்ணியனே—மாசைகொண்டு
மாசிகவா வன்மனத்தான் மாழாந்தேன் ராமலிங்க
தேசிகனே நிற்கபயந் தேற்று. 56

தேற்றுவார் நின்னைவிடத் தீவினையேற் காருமிலை
தூற்றுவார் மற்றவர்பாற் றுன்புரையேன்-போற்றுகின்ற
நல்லவர்க்கும் பொல்லவர்க்கு நன்கருளி ராமலிங்க
வல்லவனே யெற்கருளு வாய். 57

வாய்நிறைந்த பொய்யுரையு மாணிறைந்த செய்கையுந்தீ
வாய்நிறைந்த நெஞ்சகமும் வாய்ந்துற்றேன்—றூய்மை நிறை
பத்தர்பணி யும்பதித பாவனவி ராமலிங்க
நித்தவெனை யுங்காக்க நேர். 58

நேரும் பருவமிலா நேரத்தி னின்னருடான்
சாரும் படிசெய்தற் றன்மமோ—கோருங்கா
லீயவரு வாரென் றிசைக்குதே ராமலிங்க
தூயவநீ நட்ட துசம். 59

துசங்கட்டிக் கொண்டென்னைத் துட்ட ரறுவர்
வசங்கட்டிக் கொண்டாட்டன் மாண்போ—கசங்கட்டிப்
போமாறே யாடப் புரிந்து பிராமலிங்க
கோமானீ நட்ட கொடி. 60

கொடிகட்டி வீற்றிருந்துங் கோதில் குமரன்
குடிவிட்டு நீங்கல் குணமோ—மடிவிட்ட
வேதா தியர்போற்றும் வீரியவி ராமலிங்க
மேதா வியவென்னின் மெய். 61

மெய்வகைசேர் வாயும் விதிவகைநேர் செய்கையுமுண்
மெய்வகைதேர் நெஞ்சகமு மேவியிருந்—துய்வகையி
லண்ணவரு நாள்வரையி லாற்றலுறும் ராமலிங்க
பண்ணவநின் சீர்கேட்கப் பண். 62

பண்ணதுகொண் டுன்புகழைப் பாடவறி யேனமல
விண்ணதுகொண் டுண்ணிற்கு மெய்யறியேன்—மண்ணனலாற்
பேதமுறாத் தேகம் பெறுவேனோ ராமலிங்க
நாதவெனக் குள்ளறிய நாட்டு. 63

நாட்டில்விழி யாமனடு நாட்டிலுறங் காதிருக்கும்
பாட்டிலெனை யேபழக்கம் பண்ணுவிப்பாய்—வீட்டினிய
லுற்றவர்கள் வாழ்த்துகின்ற வுத்தமவி ராமலிங்கக்
கொற்றவவென் பற்றிதெனக் கொள். 64

கொள்ளுகின்ற பல்லோர்கள் கூறுஞ் சமயங்கள்
விள்ளுகின்ற பொய்ந்நெறியை மேவாம—னள்ளுறையிற்
சித்தாடும் ராமலிங்க தேசிகனே சுத்தசிவ
சித்தாந்த மெய்ந்நெறியைச் செப்பு. 65

செப்புமுதற் செந்தமிழிற் சித்தாந்த வீரெழுநூற்
கொப்புயர்வொன் றில்லையென் றென்னுள்ளுரைத்தா—யப்பொருளைச்
செப்பமா யானறியச் செப்புவாய் ராமலிங்க
வப்பவீ தென்விருப்ப மாம். 66

ஆம்பொருள்க ளெல்லா மடங்கன் முறைதெரிக்கு
நாம்பொருளென் றேது நடையொழிக்கு—மோம்பதையென்
றுள்ளபடி யேயுரைத்த வுன்னதவி ராமலிங்க
வள்ளலுன தன்பென் வளம். 67

வளங்கொண்ட வைந்தெழுத்தான் மாயுமல மைந்தென்
றுளங்கொண்டோர் வெண்பா வுரைத்தாய்—விளங்குவதற்
கெந்தநாட் காட்டுவிக்க வெண்ணுதியோ ராமலிங்க
வந்தணு நாயேற் கறை. 68

அறையுந் தலமுதன்மூன் றுலாம் பயனை
யுறையுந் திருமுன்ன ருற்றுன்—முறையுடனெவ்
றுத்தமரு ரைத்தபடி யுன்னிவந்தேன் ராமலிங்க
சித்தவெனக் கென்றிரங்கு நெஞ்சு. 69

நெஞ்சகதால் வாடி நிலைகுலைந்து புன்மாதர்
வஞ்சகத்தான் மாழாந்து வந்தடைந்தேன்—துஞ்சலுற்ற
பாசமறுத் தென்னைப் பணிகொள்ள ராமலிங்க
வீசநினக் கேகடமை யின்று. 70

இன்றைக்கோ நாளைக்கோ வென்பா விரங்குதன்மற்
றென்றைக்கோ வென்றெண்ணி யேங்குகின்றே—னன்றைக்கோர்
விற்பனர்ப ணிந்தேத்து மேன்மையுறும் ராமலிங்க
சிற்பரநின் சித்தமதைச் செப்பு. 71

செப்புகின்ற காலதிசை தேசங்கள் காணுமெனை
யொப்பமுடன் காணவவைக் கொவ்வாதென் —றப்படியி
லென்னையறி வித்துள் ளிருந்தருளி ராமலிங்க
மன்னவனே நெஞ்சே மதி. 72

மதிகதியென் றெண்ணுத மாந்தர் மரணு
விதிசதிரென் றுன்னி விழுவார்—சதியிதுவென்
றெண்ணுரென் மாணவக வென்றுரைத்த ராமலிங்க
வண்ணுநின் போலருள்வா ரார். 73

ஆரென்று மொன்றுங்கொல் லாதவர்நஞ் சொந்தவினத்
தாரென்று சொற்றபடி யம்புவியி—னேரென்று
நண்ணுரை யென்னுறவா நட்டாமை ராமலிங்க
வண்ணுவே யின்றருளு வாய். 74

வாயார வாழ்த்த மனமாரச் சிந்திக்க
வோயாது மெய்யா லுவந்துதொழச்—சாயாமெய்த்
தேகசித்தி பெற்றுய்யச் சிற்பரவி ராமலிங்க
வேகசித்த நின்னுளத்தி லெண். 75

எண்ணும் பரமுதன்மூன் றென்பவெலாங் கற்பனைநா
நண்ணும் பிரமமென நாட்டுவோர்—மண்ணுலகி
லுண்மைலேன் பேரளியா லுத்தரவி ராமலிங்க
வண்ணலே யுண்மை யருள். 76

அருள்வாசம் பெற்றோர்க் கருள்வாத வூர
ரருள்வாச கப்பொருளை யாயார்—மருள்வாயுற்
றெம்மறிவே தெய்வமென வேய்ப்பரென்றாய் ராமலிங்க
செம்மதியோ யென்னுட் சிறந்து. 77

சிறந்துதிகழ் பத்தர்முதற் சித்தர்கள்வி யக்குந்
துறந்திரு மேனிகொண்டு தோற்றித்—திறந்தழைய
வெண்பாபா டென்றுரைத்தாய் விற்பனவி ராமலிங்க
பண்பாவென் னுலென் பயன். 78

பயனறியா நாயேனைப் பாடச் சிறிது
நயனறிவாச் செய்தபெரு நன்றித்—தயவறியாத்
தன்மையனே னெண்ணத் தரமோ விராமலிங்க
சின்மயனே யுன்னோர் செயல். 79

செயலொன்று வாக்கொன்று சிந்தையொன்றாக் கொண்ட
மயலொன்று மாதர் வடிவி—லயலறியா
துண்ணுட்டங் கொண்டேற்கு முண்டோ விராமலிங்க
வண்ணுவுன் றன்சீ ரடி. 80

அடியு நடுவு மருட்பரைய தாக
முடியுஞ் சிவமே முடியாம்—படியறியச்
சொற்றான்சம் பந்தனெனச் சொற்று யிராமலிங்க
நற்றாயென் னுள்விளங்க நாடு. 81

நாடுநடு நாட்டமதி னுனென்னும் போதமறக்
கூடுநெறி யென்றெனக்குக் கூட்டுவிப்பாய்—பீடுபெறுஞ்
சத்தர்தொழுஞ் சீவ தயாபரவி ராமலிங்க
வத்தநின ருட்பார்வை யால். 82

அருட்பார்வை யொன்றே யகித்தசட துக்க
மருட்பாதை மாற்று மனமே—தெருட்சாரும்
விற்பனர்கு ழாஞ்சேர்க்கும் வெற்றியுறும் ராமலிங்க
தற்பரனு மென்குருநா தன். 83

தன்னிற் றுரும்புந்தொந் தத்தசியின் மெய்ப்பொருளைத்
தன்னிற் றெரிந்தவுந் தன்மைபெறு-மென்னினெஞ்சே
யார்பெறமாட் டாதா ரிராமலிங்க தேசிகனூர்
நேர்பெறும சீசந் நிதி. 84

நிதிமறவா துன்னை நினையா திருக்கும்
விதியறமா யெற்கார் விதித்தார்—மதிநிறமா
யுற்றவரே மெய்த்தவரென் றுண்மையுரை ராமலிங்க
நற்றவனே சொல்வாய் நயந்து. 85

நயநதுசுத்த வித்தைமுத லாதவரைக் கப்பாற்
றயங்குநித்த தத்துவமுந் தாண்டி—யியங்கருளா
லென்னையறிந் துள்ளுணைக்கொண் டின்புறவி ராமலிங்க
மன்னவருள் செய்நல் வரம். 86

வரங்கொண்டு முத்தமிழான் மாண்புறுநாற் பாவுந்
தரங்கொண்டு பாடத் தமியேற்—கிரங்குதல்செய்
நேரமிதே வந்தருள்வாய் நித்தியவி ராமலிங்க
வாரமுதே நின்னுள்ள மார்ந்து. 87

ஆர்ந்தவத்தன் பூசை யதனாற் பசுகரணந்
தீர்ந்தசுத்தஞ் சுத்தமுறுஞ் சீர்யோகந்—தேர்ந்தடங்கும்
பேதமிலா னந்தம் பிறங்குமென்ற ராமலிங்க
நாதவருள் வாயந் நலம். 88

நலனருளும் பொற்சபையை நாடியமு தாரும்
பலனருளுஞ் சிற்சபையைப் பற்றாய்—சலமறுத்து
மேலா மநுபவத்தின் மெய்யிதென்ற ராமலிங்க
சீலாவென் னுள்விளங்கச் செய். 89

செய்யாருஞ் சேவடியென் சென்னியிசை வைத்தழியா
மெய்யாரச் செய்வதென்றோ மெய்த்தவனே—பொய்யாத
வாரமிகப் பெற்றவர்கள் வாழ்த்துகின்ற ராமலிங்க
தீரவெனக் கின்றறியச் செப்பு. 90

செப்பும் பிரணவத்தின் செம்பொருளு மூன்றெழுத்தென்
றொப்புஞ் சிறப்புரையு முள்ளுணர்த்தற்—கிப்புவியி
லேற்றதிரு நாள்தா னெதுவோ விராமலிங்க
மேற்றவனே யெற்கருளுண் மெய். 91

மெய்யுடையார் போன்று வெளியில் வியகரித்துப்
பொய்யுடைமை யுள்ளே பொருளாகச்—செய்யுமிகு
வன்மனனே மாயும் வகையருள்வாய் ராமலிங்க
சின்மயனே யுள்ளந் தெரிந்து. 92

தெரிந்தடைந்தேன் ராமலிங்க தேசிகனே நின்சீர்
புரிந்திடற்கின் னுந்தாழ்க்கப் போமோ—பிரிந்துழன்றே
நிந்தையிகத் தெத்தனைநா ணீடுலகிற் றுன்புறுவேன்
சிந்தையிகத் தேங்கியழு தே. 93

அழுதுமுகம் வாடியலைந் தாற்றேனின் பாதந்
தொழுதுதெரி சிப்பதென்றோ சொல்வாய்—பழுதுவரா
தென்றுநின்சொல் லென்றே யிராமலிங்க சற்குருவே
யின்றுமுயிர் வாழ்கின்றேன் யான். 94

யான்மதிக்க வேலா விடும்பையெலாம் பட்டுழன்றுன்
கான்மதிப்பை யெண்ணிக் கழறுகின்றேன்—பான்மதித்துக்
கண்பாரா வென்னில்வருங் கண்மணியி ராமலிங்க
பண்பாநின் பாலென் பழி. 95

பழிதருமென் றுகிலுமிப் பாவிபடும் பாட்டை
யழிதரவே யெண்ண லறமாங்—கழியா
விராமலிந்த யாவரையு மீடேற்ற வந்த
விராமலிங்க தேசிகனே யின்று. 96

இன்றிருந்தோர் நாளைக் கிருப்பாரிங் கென்பதிலை
யுன்றனுளென் றன்சொருப முண்மையிதே—நன்றறிந்த
யீனமொழி யென்று யிராமலிங்க சற்குருவே
மோனமொழி யற்ற முடிபு. 97

முடிவிலருட் ஜோதி முழுமுதலே மூவா
வடிவில் வயங்கும் வலனே—படிமிசைவாழ்
பாமரர்க்குஞ் சன்மார்க்கம் பாலிக்கும் வள்ளானன்
னேமமெளி யேற்கு நிகழ்த்து. 98

நிகழ்த்தும் பலசுருதி நிச்சயமீ தென்றென்
னகத்தில் விளங்க வருள்வாய்—சகத்துறுமா
வேதனையைத் தீர்க்கவந்த வித்தகவி ராமலிங்க
நாதநினக் கேயடிமை நான். 99

நான்படும்பா டெல்லாமு நன்கறிந்து மேழைமுன்வந்
தேன்படுகின் றுயென் றிரங்குகிலாய்—தேன்படுநின்
பாதமலர் சிந்தித்தேன் பன்னாளும் ராமலிங்க
நாதவெனைக் காப்பாய் நயந்து. 100

நயந்துதுதி செய்யு நலமறியேன் மிக்கப்
பயந்துனடி யாரைப் பணியேன்—வியந்துனது
சீர்பாத மர்ச்சியேன் தேசிகனே சிற்றறியேற்
கார்பாலி லாகுமுத்யோ கம். 101

உத்தியோகம் பின்புனக்கீ வோமென் றுரைத்திருந்து
நித்தியமுந் துன்படைத னீதியோ—பத்திநெறி
பொய்யா தவர்போற்றும் புண்ணியனே ராமலிங்க
வய்யா விதுசந் நியம். 102

சத்தியமன் றென்றிச் சகப்பொருளைப் போக்கியதா
னித்தியமுங் கட்ட நிகழ்வதுகா—னித்திசையில்
வந்தருள வெண்ணிலையேல் வள்ளலெனு நின்பெயருக்
கெந்தவுரை சொல்வா யிசைந்து. 103

இசைவுற்ற வெவ்வுயிரு மென்னுயிர்போற் கொள்ளு
நசையற்ற மாத்தயையை நாடிந்—திசையெங்கு
மின்பருள்வாய் ராமலிங்க வென்குருவே யஃதின்றேற்
றுன்படைவேன் பவ்வமதிற் றேய்ந்து. 104

தோய்ந்துந்தோ யாதநெறி சொல்லநினை யன்றியெங்கு
மாய்ந்துங் கிடைத்த லரிதரிதுள்—ளோய்ந்தவரைத்
தள்ளாத ராமலிங்க தற்பரனே யென்னையுவந்
தெள்ளாதா ளித்தருண மே. 105

தருணமருட் ஜோதியாந் தந்தையுவந் திங்கே
வருவரெனச் சொல்லி மறைந்தா—யருள்புரித
லென்றோ யிராமலிங்க வென்னையா வென்னரசே
யின்றே புகலென் னிடத்து. 106

என்னிடத்தோ குற்றமல தென்சொற்கே ளாதமனந்
தன்னிடத்தோ மேல்வினையின் றன்னிடத்தோ—மன்னுமுறை
சொல்லவகை யின்றியுனைத் தோத்திரித்தேன் ராமலிங்க
நல்லவனே யென்பா னவில். 107

நவிலவரு மோவன்றி நாடவரு மோவிப்
புவியிலெவர் துன்பம் பொறுப்பார்—செவியதனிற்
கொள்ளுமுறை யுண்டோ குலகுருவே பாவியெனத்
தள்ளுமுறை யுண்டோநீ சாற்று. 108

சாற்றுமண்பெண் பொன்னலாஞ் சஞ்சலமே மேற்கொண்டு
தேற்றுபவ ரின்றித் திகைத்துநினைப்—போற்றுகின்ற
முப்போது மோயவிலை முன்வந்து சற்குருவே
யெப்போ தொலையு மிது. 109

இதுவோநின் னுள்ள மிதுவோ கருணை
யிதுவோநன் மார்க்க மிதுவோ—சதுராகுஞ்
சிந்தையென்பால் வைத்தருள்வாய் தேசிகனே யின்னுமுனக்
கெந்தவகை சொல்வ தினி. 110

இனியான் பொறுக்கவில்லே னேழையேன் றுன்பச்
சனியான் மெலிந்து தளர்ந்தேன்—முனியாம
லெள்ளா திடர்தீர்ப்பா யெந்தா யிராமலிங்க
வள்ளாலினின் னுள்ள மகிழ்ந்து. 111

மகிழ்ந்தன்னை தந்தைகுரு மற்றுநீ யென்று
நெகிழ்ந்தமனத் தோடு நிதமும்—புகழ்ந்தேத்தி
வாழ்கின்ற நாளிடையில் வள்ளலே வன்றுன்பி
லாழ்கின்றே னீதோநின் னன்பு. 112

அன்பிரு நின்சீ ரறைந்துநினைந் துய்கின்றேன்
மன்பாருள் ராமலிங்க வள்ளலே—யின்பார்
குலகுருநீ தெய்வமுநீ கோமானு நீயே
யலதிலைநா யேன்றன்னை யாள். 113

ஆள்வதுநின் பாரமதே யன்புவந்து மெய்ஞ்ஞானக்
கேள்விதருந் தென்றனக்குக் கேட்பித்துன்—றாள்வணங்கிப்
போற்றுகின்றேன் ராமலிங்க புண்ணியனே மேனிலைமே
லேற்றுவித்திந் நாயேனை யிங்கு. 114

இங்குசுத்த தேகத்தோ டெல்லார்க்குந் தோன்றியப்பா
லெங்குசென் றேவொளித்தா யென்குருவே—தங்குமொரு
சீர்திகழும் ராமலிங்க தேசிகனே சிற்றடியே
னோர்திகழச் சற்றே நினை. 115

நினையா நினைவி னிலைத்தே யிருக்க
நினையா னிதந்தொழுது நின்றே—னெனையாரே
யாதரித்து வைப்பவர்க ளற்புதவி ராமலிங்க
நாதநினை யல்லாதிந் நாள். 116

நாட்செல்லு மென்று னமனுளே யாகுங்கூர்
வாட்செல்லும் புண்ணொத்து மாழ்குவேன்—மாட்சிபெறுங்
காருண்ய ராமலிங்கக் கண்ணேயென் றுன்பகலப்
பாருண்மை யன்பு பரிந்து. 117

பரிந்துவிரைந் துன்றாட் பணியாது வீணே
புரிந்தபிழை யெல்லாம் பொறுத்தே—பிரிந்துசெல்லு
நீண்டமன மெற்கடங்கி நிற்கவருள் ராமலிங்க
வாண்டவவென் வேண்டுதலீ தாம். 118

ஆம்போது மேல்வினையா லாமென்று சின்னுளிற
சாம்பே தையர்குழுவிற் சாராது—தாம்போகா
நன்மதியார் பான்மருவ நாட்டாயேல் ராமலிங்க
நின்மலனே யாரிந் நிலத்து. 119

நிலமேழின் மேலேழ் நிலைவெளியுண் டந்த
றலமே லளப்பரிதாந் தன்மை—நிலமேலே
யாவரறி விப்பவரிங் கெந்தா யிராமலிங்க
தேவநினை யின்றித் தெரிந்து. 120

தெரித்தவற்று ளோர்வகையுந் தேராது நெஞ்சைப்
பிரித்ததுவு நின்புகழைப் பேசும்—பொருத்தமதை
யெற்குணரச் செய்வதுவு மென்னரசே ராமலிங்க
சற்குருநின் னின்னருளே தான். 121

தானமர்தா னந்தெரிந்தார் தற்பதநீ ழற்சார்ந்தா
ரீனமுறுக் கல்வியறி வில்லாதேற்—கூனமிலாச்
சித்தியடை வுண்டுகொலோ சித்தகுரு ராமலிங்க
நித்தியநின் னுலா நிலே. 122

நிலேயில்லா வென்மெய்யி னீடிக்கு நோயை
யுலேவகைசெய் தாலிவ் வுலக—நிலேவசையாக்
கூறுமோ ராமலிங்கக் கோமானே யென்றுன்ப
மாறுமே யென்னின் மனம். 123

மனத்தானன் றூய்க்கருதி வாக்கால்து திக்கு
மினத்தார்க்குந் தீயவினே யேகுங்—கனத்தா
மதிகாட்டும் ராமலிங்க மாதவனே யுண்மெய்ப்
பதிகாட்டு முன்றனருட் பா. 124

அருட்பாவில் ரண்டேகா லாழ்ந்தபொருட் பாட்டின்
பொருட்பாலீ தென்று புகன்றே—மருட்பாடு
தீர்ந்துய்ய வெண்ணுவையோ தேசிகசி காமணியே
வோர்ந்திலே னுன்ற னுளம். 125

உளமுவந்தென் மெய்த்துன் புயிர்வருத்த மெல்லாம்
பிளவுபெறச் செய்தல் பெரிதோ—வளவுபடாச்
சித்தா விராமலிங்க தேசிகா வெங்குநிறை
யத்தா வபயமப யம். 126

அபயநின் சந்நிதிக்கே யாவிமுதன் மூன்று
முபயநின் பாதமல ருக்கே—சுபநிறையுஞ்
சிற்பதனே ராமலிங்க தேசிகனே நின்னுடைய
நற்பதமிந் நாளடைத னன்று. 127

நன்றுலகிற் சன்மார்க்க நாட்ட வெழுந்தருள்வ
தென்றென் றெதிர்பார்த் திருக்கின்றே—நின்றுமென்றன்
தந்தையே ராமலிங்க சற்குருவே நின்னுடைய
சிந்தையே துண்மையுறச் செப்பு. 128

செப்பு முபநிடதச் செம்பொருளுஞ் சன்மார்க்க
ரொப்பு மநுபவித்தி னுள்ளுளவு—மெப்புவியுஞ்
சித்தனெனும் ராமலிங்க தேசிகனே யுள்ளமுவந்
தித்தருணஞ் சொல்வா யெனக்கு. 129

எனதுநின தென்னு மிருவினையும் போக்க
நினது தயை யென்றெனக்கு நேரு—முனதுருவை
யென்றுதெரி சித்திடுவே னென்குருவே யென்னுடலம்
பொன்றுமுனம் வந்து புகல். 130

புகலுவதென் னெண்ணமெலாம் புன்மாதர் பால்விட்
டகல்வதிலை யுண்மையிதே யாமிவ்—வகமினிமேற்
கொள்ளா வகையருள்வாய் கோவே யிராமலிங்க
வள்ளாலென் னேநின் மனம். 131

மனஞ்சென்ற வாறென் மதிசெல்ல மாய
வனஞ்சென் றுழன்று மலைந்தே—னினஞ்சிறிது
மாற்றிலேன் ராமலிங்க வண்ணலே யாள்வாய்நிற்
போற்றிலேன் குற்றம் பொறுத்து. 132

பொறுத்தென் பிழையீண்டுப் போக்கு மனதை
நிறுத்துந் தரமாகு நின்று—லொறுக்கிலனுன்
சற்று மிராமலிங்க சற்குருநின் னைக்காணப்
பெற்றும் பெறுதவெனப் பேறு. 133

பேறின் மனிதப் பிறப்பாற் பயனென்றே
வீறின் மனத்தான் மிகமெலிந்தேன்—றேறும்
பருவமிலேன் ராமலிங்கப் பண்ணவனே வேறு
கருவமிலே னென்றன்னைக் கா. 134

காக்கவுன்றன் பாரங் கடையேனை யித்தருண
மாக்கமொழிந் தன்புவடி வாயிருக்கு—மாக்களுடன்
சேர்த்தாள வேண்டுகின்றேன் தேசிகவி ராமலிங்க
தீர்த்தா விதுநின் றிறம். 135

திறங்கண்டு மூன்றன் றிருநாம மாமந்
திரங்கொண்டு தீவினையைத் தீர்க்கும்—வரங்கொண்டு
வாழ்ந்திலேன் ராமலிங்க வள்ளானின் னன்பருடன்
சூழ்ந்திலே னீதென் றுணிபு. 136

துணிபீ தெனத்தேறுந் துட்டனே னுக்கோர்
பணியீந்து துன்பொழியப் பார்ப்பாய்—மணிசேர்
வடல்வா ழிராமலிங்க வள்ளலே நின்னை
விடவேறே யார்புவியின் மேல். 137

மேற்கங்கை வீழா விதமெடுத்தா னென்றதைநா
யேற்கங்கை நெல்லியென வேதெரிவித்—தேற்கவே
யின்பாக யாரிடத்து மேகாம லென்குருவே
யன்பாக வீதலற மாம். 138

அறங்காட்டி மிக்க வரிதா முடலைப்
புறங்காட்டில் வையாப் புலமைத்—திறங்காட்ட
வந்தாள்வாய் ராமலிங்க மாதவனே சித்திபுரத்
தெந்தா யெனப்புகழ வே. 139

புகழு மிகழும் பொருளொன்றே யாக
நிகழுந் தரமன்று நேரு—மகநெகிழ்ந்து
தற்போத நீங்கிலெனச் சாற்றியலி ராமலிங்க
சிற்போத வெற்குவரச் செய். 140

செய்யேன் பிறர்க்குநலஞ் சேவியே னல்லோரைப்
பொய்யேற்கு முண்டோநின் பொற்சமுகம்—வெய்யேனென்
றெண்ணாதந் நாளாண்ட வென்குருவே ராமலிங்க
வண்ணாவிந் நாளு மருள். 141

அருளாது கைவிட்டா லஞ்சேலென் றிங்கே
மருளான் மயங்கி மடிவேன்—தெருளாத
மத்தனெனை வாழ்விக்க வள்ளலுண்டோ ராமலிங்க
வித்தகநீ யன்றியிம்மண் மேல். 142

மேல்வருந்தீ தேதோ வினைவொன்று நாமறியோஞ்
சேல்வருங்கண் ணார்வலையிற் சிக்கினநம்—பால்வருமோர்
காமன் றனையெரிக்கக் கற்றிலோம் ராமலிங்க
நாமன் றனைமனமே நாடு. 143

நாடுவார் நாளு நயந்துதுதி செய்தெங்குந்
தேடுவார் நின்னைத் தெரிசிக்கக்—கூடுவார்
நீதாழ்ந் வாதத்திற் றேய்கின்றேன் ராமலிங்க
தாதா மதிநெறியைத் தா. 144

தாக்குகின்ற முன்வினையின் றன்றாற் றலையிலெழு
தாக்குறையே யென்றுன்னுஞ் சஞ்சலத்தை—நீக்குமொரு
றந்தைவந்தா னென்று தளராமற் சற்குருவா
மெந்தையையெநெஞ் சேயென்று மெண். 145

எண்ண வெழுத விசைக்கமுடி யாத்துன்பின்
வண்ணமதை யெவ்விடத்தில் வாய்திறப்பேன்—பண்ணவர்சூழ்
பூமிபொருந் தும்பதியிற் பொற்சபைசெய் ராமலிங்க
சாமிசமு கத்தன்றிச் சார்ந்து. 146

சார்ந்தவிடத் தம்மயமாஞ் சார்போத ரூநமெனைத்
தேர்ந்தவறி வுள்ளவனாச் செய்வதற்கே—யோர்ந்திலனே
னின்னையன்றி ராமலிங்க நீதநினைப் போற்றுகின்றே
னென்னையினிக் கைவிட்டி டேல். 147

ஏலாத் தனத்தரிட மேற்காது நின்னடியர்
பாலார் மனத்தினனாய்ப் பத்திநெறி—மேலாகுந்
தற்பரனே நல்லவரந் தந்தருள்வாய் ராமலிங்க
சிற்பரனே யென்பருவந் தேர்ந்து. 148

தேர்ந்து தெளிந்தோர்க்குந் தேராவெம் போல்வார்க்கு
மார்ந்தபொது வுண்மை யருள்செய்தாய்—தேர்ந்தவற்றுட்
சற்றேனு மோர்நிலையிற் சார்ந்திலேன் ராமலிங்க
நற்றேவா வென்செய்வே னான். 149

நானோ வறிவிலனாய் நவ்விவிழி யார்மயற்பட்
டேனோ மதிமயங்கி யேங்குகின்றேன்—வானோரு
நின்னன்பர் பாற்சேர நீதியுண்டோ ராமலிங்க
மன்னவவப் பொய்ம்மயக்கை மாற்று. 150

மாற்று மதியறியா வன்மனத்தர் தம்பானண்
பேற்று மருண்டுழலு மேழையனைத்—தேற்றுவா
ரெற்கொருவர் நின்னையன்றி யில்லை யிராமலிங்க
சற்குருவே யுண்மையிது தான். 151

தானந் தவஞ்செய்யுஞ் சற்சனரைப் போன்றுநடித்
தீனந் தருமடவா ரிச்சையுளே—மானஞ்சற்
றேனுமிலா தாழ்ந்தே னிராமலிங்க நாதவினி
யேனுமெனை யேற்றுவதற் கெண். 152

எண்ணுயோ வென்கவலை யேக விராமலிங்க
வண்ணுவோ வென்றே யலறுகின்றேன்—பண்ணாரும்
பாடலுரைக்கும் பதமறியே னுன்னையன்றி
நாட லுவந்தறியே னான். 153

நானெனதென் னுஞ்செருக்கா னன்றியிலாப் பெண்வலையின்
மானெனவே சிக்கி மயங்குமெனை—யேனெடுக்க
வெண்ணமினக் கின்னுமிலை யெந்தா யிராமலிங்க
வண்ணலினி யாற்றே னருள். 154

அருள்வதுநின் றன்மை யடியேன் வினையான்
மருள்வதுநின் மாகருணை மாண்போ—விருள்வடிவி
னுற்றே னிராமலிங்க வுத்தமனே யன்றுண்டாய்க்
கெற்றே யிரக்கமிலை யின்று. 155

இன்றுமெனை நீவலிதி லேன்றுகொண்டா லன்றிநல
மொன்றுமறி யாதிவ் வுலகத்தே—கன்றுதன்றாய்ப்
பாரா தலமரல்போற் பண்பா ரிராமலிங்க
தீரா வலைவேன் றினம். 156

*தினமொருகா லேனுந் திருவடிசிந் திக்கு*
*மனமொருவா நின்றிடற்கு வாய்க்கி—லினமொருபே*
*றுண்டுகொலோ ராமலிங்க வுத்தமனே யவ்வின்பங்*
*கண்டுகசப் பாகுங்கற் கண்டு.* 157

கண்டோர்கள் கண்ணுங் கருதுவோர் நன்மனமும்
விண்டோர்கள் வாயும் வியன்பொருளே—யுண்டோர்
திருவிருப்பாற் கேட்குஞ் செவியு மினிக்குந்
திருவருட்பா வென்றிலகுந் தேன். 158

*தேன்மாரி பெய்யச் சிறிதுண்டா ருய்ந்தார்நா*
*யேன்மாரி சத்தாநின் றேமாப்புற்—றேன்மாறு*
*துன்னும் பெருமகிமை யுற்றநின தோர்வாயாற்*
*பன்னுஞ்சீர் சான்றவருட் பா.* 159

*அருட்பாவி லுள்ள வரும்பொருளை யோரா*
*திருட்பார்வை கொண்டுலகி லேங்கு—மருட்பாதை*
*நண்ணுதி ராமலிங்க நாதா சுகிக்கவரு*
*ளுண்ணுடி யுட்பொருளை யுண்டு.* 160

*உண்டுபே ரின்ப முவந்துள்ளோர் போற்றுமுனைக்*
*கண்டுதொழ யாருங் கருணையுளங்—கொண்டுலகிற்*
*சான்றுவந்தாய் ராமலிங்க சற்குருவே யென்முறையை*
*யேன்றுகொள்வா யின்னே யிசைந்து.* 161

*இசைந்துதுதி செய்யநினை யெண்ணுங்கா னெஞ்ச*
*மசைந்து பலவிடயத் தாழ்த்தி—நசைந்துவட்டி*
*வாட்டுவதோ ராமலிங்க வள்ளலே வன்பவத்தி*
*லாட்டுவதோ நன்றடக்கி யாள்.* 162

*ஆள்வினையே யில்லா வடியேன் முனந்தோன்றி*
*நீள்வினையி லாழா நிலையதனைக்—கேள்வியுறப்*
*போதித்தால் ராமலிங்க புண்ணியனே யன்றியெனைச்*
*சோதித்தாற் போமோ துயர்.* 163

*துயரந் தருமரணந் தோன்று துலகோ*
*ருயவந் தருளியவோ ருண்மை—நயமறியா*
*திங்கே யயர்ந்தே னிராமலிங்க சற்குருவே*
*யெங்கே புகுவே னிங்கு.* 164

*இரக்கமுயி ரொன்று யிசைத்திட்டா யந்த*
*விரக்க மொருவிலுயி ரேகுந்—திரக்கருத்தைச்*
*சாற்றியவி ராமலிங்க சற்குருவே யென்றுயரை*
*யாற்றிலையே யீதென் னறம்.* 165

அறமாஞ்சா காதகல்வி யாதியா நான்கின்
திறமாகு முண்மைநெறி தேர்ந்தே—பெறலாகுஞ்
சீரிய விராமலிங்க தேசிகனே நின்சடைக்கண்
பாரிரங்கு கின்றேனின் பால். 166

நின்பாற் கொடுக்கு நெறியு மதன்பயனு
மென்பா லடுக்கு மியலருள்வா—யன்பால்
வடல்வெளிவாழ் ராமலிங்க வள்ளா லடைவே
னுடல்பொருளு மென்றனுயி ரும். 167

உம்மையே சற்குருவென் றுள்ளபடி யேயுணர்ந்தே
னிம்மையே யிவ்வுடல மேகாமற்—செம்மையே
வாழ்வளிப்பாய் ராமலிங்க வள்ளலே வூழ்வினையி
லாழ்வதனை யின்றே யழித்து. 168

அழித்த லளித்த லருளலிவை நீகண்
விழித்த வுடனணுவின் மேவிக்—கழித்தலிலா
வின்பவடி வுண்டா மிராமலிங்க சற்குருவே
யென்பவமொ ழிக்காத தென். 169

என்னே வறியே னெளியேன் வினையளவிங்
கென்னே வறிந்து மிரங்குகிலாய்—முன்னேன்
பிழைத்திலன்றா னு மிராமலிங்க தேவே
பிழைத்திலனோ யேனையினிப் பேண். 170

பேணும் பெருங்கருணைப் பெம்மானே நின்னையன்றி
யூணுடையு மீவா ரொருவரிலை—காணுலகிற்
கன்றுதன்றா யில்லாது காத்தலுறு மோவதுபோ
லின்றுவிண்ணப் பித்தே னிது. 171

இதுதருணம் வாராயே லேறு முதுமை
பொதுவிலுப தேசம் புரிவா—யதுவிதெனுஞ்
சுத்தசிவ சன்மார்க்கந் தோன்றவரும் ராமலிங்க
வித்தகனே யென்பால் விரைந்து. 172

விரைந்துவலி தின்வடலின் மேவியற வர்க்குந்
திரைந்தோ ரிளமையுற்றுஞ் செத்தோர்—தரைவந்துஞ்
சேர்வரென்ற ராமலிங்க சிற்பரனே யெக்கால
நேர்வதனை யேனு நிகழ்த்து. 173

நிகழ்த்தும் வெளிகாண நீள்புவியி லோடு
மிகழ்ச்சியுடை யேனுக் கினத்தேன்—சகத்தாசை
கொண்டுயர்வொப் பில்லாக் குருராமலிங்க நினைக்
கண்டுகொள வெண்ணுதலாற் காண். 174

காணரினை யேத்தக் கருதவறி யேனென்று
மூணடைய வேங்க வுடையுடுக்க—நாணமின்றிப்
பெண்ணே யெனநினைக்கப் பின்னிடையேன் ராமலிங்க
கண்ணே தவிரென் கவல். 175

கவலையெலாந் தீர்க்குங் கலையளித்து மென்றன்
சவலைமனப் பேயாற் சலித்தேன்—தவலருஞ்சீ
ரன்பர்பணி ராமலிங்க வாதவனே யந்நெறியி
லென்பவநெஞ் சங்குவிய வெண். 176

எண்ணவரு மிவ்வுலகி லென்பிறவி யெல்லாமு
மெண்ணவரா வென்பிழைக ளெத்துணையுந்—திண்ணமிதை
யோர்ந்தொறுத்தி ராமலிங்க வுத்தமனே நின்னையன்றிக்
கூர்ந்தெனையாட் கொள்பவரார் கூறு. 177

கூறுவது நின்னுமங் கொள்ளுவதுந் ணின்வடிவந்
தேறுவது நின்னருட்பாத் தெய்விகத்தா—லாறுவதுன்
பொன்னடியில் ராமலிங்க புண்ணியனே யென்னையினி
யுன்னடியார் தொண்டுசெய வுன். 178

உன்பே ரருட்கருணை யுண்டோ விலையோவென்
றென்பேதை நெஞ்சகத்தா லேங்குகின்றே—னன்பேது
மில்லே னிராமலிங்க வென்குருவே யுண்மையுற
வல்லே னிரங்கி யருள். 179

அருள்பெறற்கு நெஞ்சே யமையாயேற் பேர்முன்
னுருள்கீற்றை நீக்கி யுரைப்பேன் * —பொருளொன்
றிசைத்தவி ராமலிங்க வென்னப்பா வென்று
லசைத்த லுறுமோ வது. 180

அதுபுருவ மீதிதய மாகுங் குறிப்பிற்
பொதுசிறப் பேதென்ற போது—சதுராக
பூருவமே ராமலிங்க பூரணனே மேற்சிறப்பென்
றோருவா யென்று யுவந்து. 181

உவந்தோ தியவாறே யுன்னவுன்ன மாறு
தவந்தோன்ற வேக்க மடைந்தேன்—துவந்தோன்று
தின்புறவோ ராமலிங்க வென்னரசே நானின்னுந்
துன்புறவோ நின்றத் துவம். 182

தத்துவங்க ளெல்லாந் தனித்தனிசென் றேநாதத்
தொத்தநினை நீயின்றி யுற்றிடுதற்—சுத்தமுறுஞ்
சீவனிலை யாமென்ற தேசிகனே யந்நிலையை
யாவதடி யேனுக் கருள். 183

---

* 'நெஞ்சே'-கீற்றுநீக்கின் 'நஞ்சே' ஆகும்.

அருளுறுதற் கான்ம வநுபவமுன் வேண்டுந்
தெருளுறுசம் பந்தர் திருவாக்—கருளினரென்
றிப்புவியில் ராமலிங்க வென்னரசே நெஞ்சிரங்கிச்
செப்புமுறை யெற்கடையச் செய். 184

செய்கின்ற நன்முயற்சி செல்வமுத லூற்றூனு
முய்கின்ற மெய்ந்நிலையி லோங்குதற்குத்—தெய்வமுனை
யல்லாது நாயடியேற் காகுமோ ராமலிங்க
வல்லானே தந்தாள் வரம். 185

வரம்பெற்று நல்லோர் மதியமுத முண்டே
வுரம்பெற்று வாழ்கின்றா ருன்பாற்—றிரந்தேர்
தவமாக்க ராமலிங்க சற்குருவே யென்றன்
பவநீக்க நிற்கே பரம். 186

பரமுயிர்பார் தோன்றும் பகர்காரி யத்தாற்
கரவிடுங் காரணத்தாற் காண்பீர்—திரமுரைக்கும்
வேதா கமமென்ற வித்தகனே ராமலிங்க
தாதா வருளத் தரம். 187

தரமும் பதிபசுபா சத்தின் பகுப்பின்
திரமுமோர் பாட்டிற் றெரிக்கும்—வரமுதவுந்
தெய்வீக ராமலிங்க தேசிகனே நின்னருட்பா
மெய்வீடு காட்டும் விளக்கு. 188

விளக்கதென்கோ மெய்ஞ்ஞான வித்தென்கோ மேலோ
ருளக்கமலத் தேனென்கோ வோயாக்—களக்கறுக்கும்
வேலென்கோ ராமலிங்க வித்தகனே குண்டலியின்
பாலென்கோ வுன்றனருட் பா. 189

பாமாலை சாற்றும் பதமறியே னின்னடிக்கே
பூமாலை சூட்டும் புலனறியேன்—கோமானின்
செய்யவருட் பாபாடுஞ் சீரறியேன் றீவினையே
னுய்யவழி யுண்டோ வுரை. 190

உரைக்குஞ் சுருதியொன்று மோர்கிலே னுள்ளங்
கரைக்கும் விதமேதுங் காணேன்—றிரைக்கின்ற
மெய்யடைந்தேன் ராமலிங்க வித்தகனே யென்செய்வேன்
மெய்யடைவே தெற்கு விதி. 191

விதிகொள்ளு மார்க்க மிருகாதி கட்கே
கெதிகொண்மாந் தர்க்குக் கிடையா—மதிகொள்ளுஞ்
சீவகா ருண்ணியநூற் றேடிவா சிக்கினெஞ்சே
யாவலாய்க் கண்டறிய லாம். 192

ஆமாறு சன்மார்க்க மாகுமொன்றே யூழ்வினையைச்
சாமாறு செய்யுஞ் சரீரமதைப்—போமாறு
செய்யா தெனவருளிச் செய்த விராமலிங்க
வய்யாநின் மாண்பறிவா ரார். 193

ஆர்புறவி னத்தா ரவர்க்குப் பசியொன்றைச
சார்புணவு கொண்டாற்றற் சன்மார்க்க—நேர்புரைத
லாகுமென்ற ராமலிங்க வண்ணலே யென்றுன்பம்
போகுமென்றோர் வார்த்தை புகல். 194

புகலு மகவினத்தார் புல்லிடினு மன்பா
யிகலிலமு தென்றுண்க வேனோர்—சுகவமுதந்
தந்தாலும் புல்லெனவே தள்ளென்ற சித்திபுரத்
தெந்தாய்நின் னேர்மையெனென் பேன். 195

என்னென்பே னென்னை யிளவயதி லாட்கொண்டும்
பின்னென்பே தைத்தன்மை பேராமல்—கன்னெஞ்ச
மாதர்மயற் பட்டுழல வாட்டுதே ராமலிங்க
மாதவவென் வஞ்ச மனம். 196

வஞ்சமனத் தின்வழியால் வாய்திறந்து செப்பவொணு
தஞ்சுமெதிர்த் துத்தன்பி லாழ்த்துவதா—லஞ்சியுன்பால்
வந்தடைந்தும் ராமலிங்க மாதவனே யாற்றுகிலா
யிந்தவித மோவிருப் பேன். 197

இருப்பேனோ நின்னருட்பா வேத்தாது விட்டால்
விருப்பேது நின்னருட்கென் மேலே—திருப்பிவைத்தா
யிப்பாரில் ராமலிங்க வென்குருவே யென்னரசே
யப்பாவீ தன்றோ வறம். 198

அறந்தெரிந்த யேலோ ரனைவோ ரருட்பாத்
திறந்தெரிந்து பாடுகின்றார் சீராம்—புறங்கூறும்
பாதகனே னைப்பாடப் பண்ணளிப்பாய் ராமலிங்க
மாதவனே யுள்ள மகிழ்ந்து. 199

மகிழ்ந்து நினைந்து மறவா துணர்ந்து
நெகிழ்ந்து துதிசெய்து நின்றேன்—முகிலில்லா
வின்பாரு மென்ற விராமலிங்க சற்குருவே
யென்பா லமையவரு ளின்று. 200

இன்றுமெனைச் சோதியா திங்கே யெழுந்தருளி
யன்றுநய னப்பிணியை யாற்றுதற்குப்—பொன்றுலங்குஞ்
சுத்தவுருக் கொண்டென்முன் சொப்பனத்தில் வந்ததுபோ
லத்தவரு ளின்றுமப் பா. 201

அப்பாவென் னையா வரசேயென் னாண்டவனே
யிப்பாரி லுன்னடியா னென்றென்னைச்—செப்பாதார்
யாருமிலை யானுநடித் தேனுனையே யன்றிக்காப்
பாருமிலை யீதுண்மை யாம். 202

ஆம்போதா மென்ப தகற்றிடு கட்டென்னுந்
தீம்போதத் தேன்மொழியைத் தேராது—நாம்போ
தவலமுறப் போக்குவது மறமோவென் னெஞ்சே
கவலகற்றி யம்மொழியைக் கா. 203

காக்குங் கருணைக் கடலேயென் கன்மவினை
நீக்குந் தனிமுதலே நிர்விகற்பந்—தேக்குநெறி
தந்தாள முன்வந்த சற்குருவே யேழையென்முன்
வந்தாள வின்னுமனம் வை. 204

மனம்வைத்து மாதவஞ்செய் மாண்புடையோர் மன்றிற்
றினம்வைத்துத் தீயவர்பாற் சேராக்—கனம்வைத்துத்
தற்காத்த னாயேனைச் சற்குருவே நின்மகிமைச்
சொற்காப்பே யாருந் துணை. 205

துணையென்று வஞ்சத் துடியிடையார் தம்பா
லணையென்று கெஞ்சி யடைந்தே—பிணையொன்றி
நோய்கொண்டேன் சற்குருவே நொந்தேன் பிழைபொறுப்பாய்
தாய்கொண்ட நின்றயவைத் தந்து. 206

தந்தாய் திருநீறு சார்தமுற மெய்ம்மயக்க
நந்தா வொருசுத்த ஞானநிலை—யிந்தாவென்
றெக்கால மீந்தருள்வா யென்குருவே தெண்டனிட்டேன்
முக்காலுன் சந்நிதியின் முன். 207

முன்வினையா லுன்றன் முகமலரைக் காணலுற்றும்
பின்வினையின் றுற்பயனற் பீடழிந்தே—னென்வினையின்
வன்மைவகை யெல்லாமும் வள்ளலே மாற்றியிடுந்
தன்மை நினக்கே தகும். 208

தகுந்தருண மீதருளத் தாழ்த்தியே யிங்கே
மிகுந்துயரஞ் செய்யுமுப்பு மேலாம்—புகுந்தென்னுட்
பொய்விளக்கு மாயப் பொதுநீங்க வென்குருவே
மெய்விளக்கை யேற்றி விடு. 209

விடுவதுவும் பற்றுவதும் வீடுபந்த மாகும்
படுவதுவீண் பாடிந்தப் பாரிற்—கெடுவதிலாப்
பத்திநெறி நின்றூற் பலனென்ற சற்குருவே
சித்திபெற வுன்றனருள் செய். 210

செய்வதுசெய் விப்பதுவுஞ் சீர்பெறவித் தாரணியி
லுய்வதுமுய் விப்பதுவு முன்னருளாற்—றெய்வநிலை
கூடுவது மாகுங் குலகுருவே நின்னருட்பா
பாடுவது மாநற் பலம். 211

பலனெதுவோ சாகாப் பதமெதுவோ மேலாம்
புலனெதுவோ சன்மார்க்கம் போந்த—நலனெதுவோ
வொன்றுமறி யாதுன் னுபயபதம் போற்றுகின்றே
னன்றுறவென் சற்குருவே நாடு. 212

நாடும் பெருங்கருணை நாயகனே யன்பரெலாந்
தேடுந் தனித்தலைமைத் தேசிகனே—வாடும்பல்
வாட்டமதை யென்பால் வராவகைசெய் தத்துவித
நாட்டமதை நாயேற்குண் ணூட்டு. 213

உண்ணூட்டும் போதுபல வூழ்வினையின் வாதனையென்
கண்ணூட்டச் சூக்குமமாய்க் கன்னெஞ்சம்—விண்ணூட்டஞ்
செய்யா தசைக்கின்ற தீங்கொழித்தி ராமலிங்க
வய்யா வமர வருள். 214

அருணிலைவி ளங்கு மரங்கமதி லாருந்
தெருணிலைசே ரானந்தந் தேக்கும்—பெருநிலையைச்
சற்குருவே வீண்சஞ் சலமெல்லாம் போக்கியினி
யெற்குரிமை யாகவரு ளிங்கு. 215

இங்குன் னடியரெலா மீடறியா வானந்தம்
பொங்குங் கடற்படிந்து போற்றுகின்றார்—கங்குல்பகல்
வெம்மாதின் சீக்குழியில் வீழ்கின்றேன் சற்குருவே
யிம்மா லொழிக்கும்வகை யெண். 216

எண்ணரிய வெய்யவுட லெத்தனைய டுத்தெடுத்தே
யண்ணலுனை யேத்சாத தாலவற்றை—மண்ணனற்கே
யாக்கினே னின்றேனு மாதவனே யக்கொடுமை
நீக்கியருள் சாகா நிலம். 217

நிலத்திற் சுமையாய் நிறுத்திச் சலித்தான்
பலத்தி லரியவயன் பற்றும்—மலத்திற்
புழுப்போ லழிந்தொழிந்தேன் புண்ணியனே யாள்வாய்
விழுப்போதந் தந்துள் விரைந்து. 218

விரைந்துலகிற் சன்மார்க்க மெய்விளங்கத் தோன்றித்
திரைந்துடலம் போகாத் திறத்தை—வரைந்து
திருவருட்பா வாறுமுறை செய்தே மறைந்தாய்
குருவிருப்ப மேதோ குறை. 219

குறையிரந்து கோமான் குரைகழலைப் போற்றின்
மறைவிரிந்த மெய்ப்பொருளின் மாட்சித்—துறைமுழுது
மாறுமுறை யுள்ளி லமைத்தநெறி யாவுநெஞ்சே
தேறுமுறை சொல்வான் றெரிந்து. 220

தெரிந்தபெரி யர்க்குச் சிறப்பென்றுந் தேரு
விரிந்த சிறியர்க்கு மேலாய்ப்—புரிந்தசிறப்
பென்றருளி ராமலிங்க வென்குருவே யிச்சிறியே
னென்றருளு முன்றனரு ளே. 221

உன்றனுள வாய்மை யொருசற்று மோர்கிலனு
னென்றவொரு தற்போத மென்னைவிட்டுப்—பொன்றவிலை
நீண்டநா ளாகவென்பா னின்றவப் போதமொழித்
தாண்டருள்வா யம்மையப் பா. 222

அம்மையப்ப ஞசானென் னுண்டவனு நீயென்றே
செம்மையுற்ற நின்புகழைச் செப்புகின்றே—னிம்மைசற்றுஞ்
செய்வகையே செய்யாச் சிறியேன் துயரகன்று
மெய்வகையே மேவ விரும்பு. 223

விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்பு முதற்கனியே யாகத்—தரும்பெரியர்
நன்மொழியை யோர்பகலி னுனடைய வென்முனம்வந்
தின்மொழியைச் சொல்லாத தென். 224

என்னையொப்பார் செய்பிழைக ளெல்லாம் பொறுத்தருள
நின்னையொப்பா ரில்லையென நித்தியமும்—பொன்னையொப்பாந்
திவ்வியநின் சீரேத்துஞ் சிற்றடியேன் றுன்படைய
வொவ்வியதோ வுன்ற னுளம். 225

உளமென் வசமாக வோர்கடிகை நில்லா
தளவின்றிச் செல்லு மதனை—யுளவாக
வென்பா லமைந்திடுதற் கென்குருவே யின்றருள்வா
யன்பாரு நல்லொழுக்க மாம். 226

நல்லொழுக்க மாமொன்று நாடிலே னுயடியேன்
புல்லொழுக்கி லெந்நாளும் பூரித்தே—னில்லொழுக்கஞ்
சேர்கிலே னய்யாவென் றீதொழிய வெண்ணுவையோ
வோர்கிலே னின்மெய் யுளம். 227

உள்ளநய னஞ்சீவ னுத்துநடு நாட்டமதிற்
றுள்ள லொழிந்து துரிசற்றே—யெள்ளளவும்
பேதமற நிற்கப் பெரிதருள்வா யென்குருவே
யேதமறக் காலமிது. 228

இதுசமய மென்பா விரங்கிலையே லோராப்
பொதுஜனங்க ளுற்றிடுமெப் போதும்—விதுசலிக்குந்
தண்ணிலகும் ராமலிங்க சற்குருவே யீதேனு
நண்ணியென்கட் டந்தீர நாடு. 229

நாடுவது நின்னருளை நாட்டுவது நின்சீரை
தேடுவது நின்னுருவைச் சிற்றடியேன்—பாடுவது
முன்றனருட் பாவதன்கண் ணுட்பொருணன் கோர்ந்திலனே
யென்றயர்ந்தேன் சின்னவய தில். 230

சின்னவய திற்றொடங்கிச் செல்வமதி லாழ்ந்திருந்தே
னென்னவகை யோமூப்பி லேங்குகின்றேன்—சொன்னமுறை
கேட்டருளா யென்னிற் கெடுவேன் பழிவருமென்
வாட்டமறச் செய்வாய் மகிழ்ந்து. 231

மகிழ்ந்துமட மாதர் மயக்கிலுழ லாதே
நெகிழ்ந்துருகு மன்பர்தமை நேடி—மகிழ்ந்துளத்தி
னேயமொடு பூசித்த னேமமெனத் தேர்ந்தறியேன்
றூயமணி தன்சத் துவம். 232

சத்துவவி ராசதத்திற் றாமதத்தி னன்மைசினங்
கத்துமிகுந் தீமை கருதுவேன்—தத்துவத்தி
லொப்புவித்தேன் சற்குருவே யுற்றவிலம் பாடொழிய
விப்புவியி லித்தருண மெண். 233

எண்ண வெழுதிக்காண வேத்த மகிழ்சிறக்கும்
வண்ணமுற முன்றன் மகிமைதனை—நண்ணலின்றிச்
சந்ததமு மீயெனவித் தாரணியி லூண்விழைந்தேன்
தந்தவயி றொன்றுகுஞ் சாண். 234

சாண்வயிற்றுக் கேபலவாய்ச் சந்தைநுழை நாயென்னப்
பேண்வகையிற் பெண்பாற் பிரியாதே—வூண்வகையிற்
சிக்கிமன மாழாந்து தேய்கின்றேன் சற்குருவே
யிக்கிரியை மாற்றவரு ளின்று. 235

இன்றில்லை நேற்றுண் டெனும்பெரிய ரான்றமொழி
நன்றில்லை யென்றேவீ ணாட்கழித்தே—னன்றியிலேன்
சீர்த்திபெறும் ராமலிங்க தேசிகனே முன்போலப்
பார்த்திரங்கித் தீர்ப்பாயென் பாடு. 236

என்பாட்டை யென்னுள் ளிருந்தறிந்து நீக்காம
னின்பாட்டுக் கேதிலர்போ னீயிருந்தாற்—றன்பாட்டை
யெவ்வண்ண நான்சகிப்பே னின்றவ் விடுக்கணறச்
செவ்வண்ணத் தேசிகனே செப்பு. 237

செப்பும் பிரணவமெய்ச் சித்தியிதன் றெல்லோரு
மொப்பும் படிசெய் தொளித்தவனை—யிப்புவியின்
தன்மைவிட்ட மாதவருந் தாமறியா ரென்றாலந்
நன்மைசொல் வல்லவனோ நான். 238

நானொழிய வுற்றவொரு ஞானநிலை நல்வேதத்
தேனொழியா வாய்மலராற் செப்பியுமந்—நானொழியக்
கற்குந் திறமறியாக் கைவினையேன் காரணத்தைப்
பொற்குன் றனையாய் புகல். 239

புகலுந் தரமறியாப் புன்மையினே னல்லோ
ரிகலுந் தரமுணர்வே னென்னோ—பகலும்
விதமறியே னெந்தாய் வினையேனை மேலாம்
பதமடைய நின்னுள்ளம் பற்று. 240

பற்றுவிட்டு நின்னருளைப் பற்றும்வகை யென்றாலே
கற்றுவரு மோவதனைக் கண்டிலேன்—சற்றுமதைப்
பன்னாண் முயன்றறியும் பத்தியிலேன் சற்குருவே
நின்னால் வருமந் நிலை. 241

நிலையில்லா வாழ்க்கை நெறிநின்று வீணே
தலையில்லா தூதியத்தைச் சார்வா—னலைதருமென்
றுணையிலா நெஞ்சை நடுநிறுத்தி யுண்மையெலாங்
காணவருள் மெய்ஞ்ஞானக் கண். 242

கண்மணியே யக்கண்ணின் கண்ணொளியே பேதமுறு
வுண்மணியே யுள்ளுமொளி ரோர்மணியே—விண்மணியே
சொற்குறையா முத்தமிழுஞ் சொல்லுவதற் கெற்கருள்வாய்
சற்குருவே நின்றாள் சரண். 243

சரணமென மாதரிடஞ் சார்ந்தேவல் செய்து
மரணபய மின்றியெனை வாட்டுந்—திரணநெஞ்சே
யுய்விப்பா னன்கறியா வுன்னை மறக்கருணை
செய்விப்பா னென்றே சிகன். 244

தேசிகனின் பொற்பதமென் சென்னி சுமந்திடுக
தேசிகநின் சீரே செவிகேட்கத்—தேசிகனின்
செய்யபுகழ் நாவேத்தச் செய்தருள்வாய் நின்றாம
முய்ய நினைக்க வுளம். 245

உளக்கருத்தை நன்று யுணர்ந்தருள்வா னென்றே
களக்கமிலான் சீரைக் கழற—விளக்கமிலா
வன்னெஞ்சே மாற்றுகின்றாய் வள்ளலுனைக் கண்டித்து
நன்னெஞ்சாச் செய்குவனிந் நாள். 246

நாளொன்றி லேனுமுனை நாடிநினைந் தேத்தாத
நாடொன்று முண்டோவிந் நாட்டில்வரு—நாளொன்றி
லேதாமோ நின்வரவை யென்குருவே யெண்ணுவதுந்
தீதாமோ வுண்மையுறச் செப்பு. 247

செப்புமுலை யஞ்சேற்கண் செல்வியர்பாழ் மையலுழன்
றிப்புவியிற் றுன்பா விழுக்குண்டேன்—தப்புநெறி
விள்ளவிட யின்றிநின்பால் விண்ணப்பித் தேனருள்செய்
யெள்ளளவுங் கள்ள மிலை. 248

கள்ளமிலா நின்சொற் கடிகை யிரண்டரையி
னுள்ள கணக்கி னுளவறியா—துள்ளமிக
வாடித் தியங்கி மயங்குகின்றேன் சற்குருவே
நாடித் தெரியவரு ணல்கு. 249

அருணல்கு நற்கருணை யாரமுதே மோனத்
தெருணல்கும் ராமலிங்கத் தேவே—மருணலியச
சித்தமுவந் தென்முன் றிருமேனி கொண்டருளிப்
புத்தமுத மீகுவதெப் போது. 250

எப்போ தொலையு மெளியேன் படுந்துயர
மிப்போ தெனவறியே னென்குருவே—முப்போது
நின்னும மேத்துதற்கு நேரமிலேன் மாயப்பெண்
ணின்னுமஞ் சொல்லே னிசைந்து. 251

இசைந்துலக வாதனையி லேங்கித் தியங்க
வசைந்திழுக்கு நெஞ்சை யடக்கி—யிசைந்த
திருவார் குருவேயென் சென்னிவைத்தே னுள்வாய்
மருவார் பதபரிச மண். 252

மண்ணென்று பொன்னென்று வந்த மயக்கொழியும்
பெண்ணென்ற பேய்விட்டுப் போராதே—கண்ணென்று
போற்றுகின்றே னன்றியொரு போதுங் கடுகடுத்துத்
தூற்றுகிலேன் சற்றுந் துணிந்து. 253

துணிந்துனடி யார்மதுரச் சொற்கேட் டறியேன்
பணிந்துனருட் பாவதனைப் பாடேன்—தணிந்திலகும்
விண்களிக்க வோங்கும் வியன்குருவே சிற்றடியேன்
கண்களிப்ப தென்றுனினைக் கண்டு. 254

கண்டோர் நகைசெயுமிக் கன்மவுட லேயெடுத்தேன்
பண்டோ ரறமேனும் பண்ணியிரே—னுண்டோவென்
போன்றவர்க ளிந்தப் புவிதனிலே புண்ணியப்பே
றான்றகுரு வின்னே யருள். 255

அருள்வாயின் றேவிவ் வடியேன் மிகநொந்
திருள்வாயி னின்றுகரை யேறு—தொருபாம்பின்
வாய்ப்படுமோர் தேரையைப்போல் வாடி யுடம்புநைந்து
போய்ப்படுவேன் பஞ்சப் பொறி. 256

பஞ்சப்பொறிவழியிற் பற்றியிப் பாரிடையில்
வஞ்சப் பகட்டியர்மா மாயையிலே—நெஞ்சமெனை
யேமாரச் செய்ததினி யென்குருவே மெய்வகையிற்
போமாறுள் ளன்பு புரி. 257

புரிவான் பெருநன்மை பொய்யாகா வென்சொற்
பரிவான் மனனே பணியிற்—பிரியாதுன்
னீண்டவகை யெல்லாமு நீக்கி யிராமலிங்க
வாண்டவனே யேசத்தி யம். 258

சத்தியவான் வார்த்தையிது சத்தியஞா னத்தீப
நித்தியமும் பத்திசெயு நேமத்தா—லெத்திசையுஞ்
சூழ்வா ரெலாம்வந்து தோத்திரஞ்செய் தென்ஞான்றும்
வாழ்வார் மனமே மதி. 259

மதிபெரிதென் றெண்ணூர் மனஞ்செல் வழியே
விதிபெரிதென் றேமாந்து வீணே—கதியிழந்து
தீங்கிழைப்பார் நெஞ்சே திருவருள்செய் சற்குருசொற்
பாங்கிதுவே யுள்ள படி. 260

உள்ளபடி யுள்ளதனை யுண்முகத்திற் கண்டுகொளுந்
தெள்ளமுதைக் காட்டியுறத் தேற்றுவிக்கும்—வள்ளலெனுஞ்
சற்குருவே ராமலிங்க தற்பரனே யுள்ளமுவந்
தெற்குமுனம் வந்தருள்வா யின்று. 261

இன்றுமுத லுன்ற னிணையடியைச் சேரவரு
மன்றுவரை நின்மெய் யடியவர்பா—னின்றுனது
சொற்சுகமே கேட்கவருள் தூயகுரு வேயந்தச்
சிற்சுகமே சுத்த சிவம். 262

சுத்தசிவ சன்மார்க்கந் தோன்றச்செய் தெவ்வுயிரு
நித்தமுற வுள்ளுவந்த நின்மலனே—வுத்தரத்திற்
பத்திபெறத் தோற்றும் பஜனைமடந் தாபிக்கச்
சத்தியமா நின்னருளைத் தா. 263

தாவென்று மாசந்நி தானத்திற் கேட்டாலிந்
தாவென்பா னம்முடைய சற்குருவே—காலென்று
மின்னே யபயகர மீந்தருள்வா னெஞ்சேநீ
யென்னேய மேற்காத தென். 264

என்பாடெல் லாமுன் னிதயமறிந் துந்தடியேன்
வன்பாட லானைதன் மாண்பாமோ—முன்பாடு
பின்பாற் புலனென்ற பெற்றியனே சற்குருவே
யென்பா லுறச்செய் யுவந்தே. 265

உவந்தொடுங்கி நங்குருவி ஞோர்மொழிபோ னின்றாற்
பவந்தொலையும் பல்வினையும் பாறும்—தவம்பரவுந்
தேர்ந்தமதி யார்மனனே திண்ணமிதே யென்றுநமைச்
சேர்ந்தவர்க்கு மில்லையினித் தீங்கு. 266

தீங்குறவே செய்யினுமித் தீயேனை நன்னெறியின்
பாங்குறவே செய்யினுநின் பாரமதே—தாங்குவது
நின்னையன்றி வேறேயிந் நீடுலகிற் கண்டறியே
னென்னையினித் துன்பினிலாழ்த் தேல். 267

ஆழ்த்தேல்வெம் மாத ரளிந்தபுண் ணீர்க்குழியிற்
றாழ்த்தேல் மதிநெறியிற் சற்குருவே—பாழ்த்த
பிறப்பொழிப்பா யென்றாற் பெரிதருள்வா னெஞ்சே
யிறப்புநமக் கென்று மிரா. 268

இராமலிந்த யாவரையு மிக்கணமே பந்தத்
திராமலுந்த மேனிலையி லேற்று—மிராமலிங்க
வள்ளா லுனைப்புகழ்ந்து வாயார வாழ்த்துமெனை
யெள்ளா தருளளிப்பா யின்று. 269

இன்று தொடங்கிநமக் கின்பொழியா தெம்மவரே
யென்று வளாகத் தியம்பிமறைந்—தன்றமுத
லண்டமெங்கு மார்ந்திலங்கு மாதவனே நான்காணக்
கண்டருவாய் நின்மெய்க் கலை. 270

கலையுரைத்த வுண்மைக் கருத்தறியா மாந்தர்
நிலையுரைத்த ராமலிங்க நீதன்—விலையுரைக்க
வொல்லாத பொன்னுருக்கொண் டோங்குவா னெண்பதத்தைப்
பொல்லாத நெஞ்சே புனை. 271

புனைந்துரையேன் சற்றேனும் பொய்புகலே னீவிர்
நினைந்துருகி யன்பே நிறைந்து—வனைந்துதுதி
செய்யுங்கள் சாதலிலை செப்பினேன் சத்தியமீ
துய்யுங்க ளென்றா யுகந்து. 272

உகந்தருளிச் செய்தபடி யோர்போது மின்றிச்
சகந்தனிலே வீணருடன் சார்ந்து—சுகந்தெரியாக்
காலங் கழித்தேன் கடைக்கணிப்பாய் சற்குருநின்
பாலன்பு கொள்ளப் பணித்து. 273

பணித்தபடி செய்கின்ற பத்தர்களிற் கீழாய்க்
கணித்தசிறு நாயேனைக் காலும்—பிணித்துயரில்
வாடி வருந்திநின்றேன் வள்ளலே யித்துன்ப
மோடி மகிழ்ந்திருக்க வுன். 274

உன்னுகின்ற தோறு முனதுதிருப் பாதமதை
பின்னுமணிப் பெண்பாவின் மேவியெனை—முன்மயங்கச்
செய்யுமட நெஞ்சைத் திருப்பியுன்பாற் சற்குருவே
வுய்யுநெறி தந்தா ளுவந்து. 275

உவந்து புகழ்ந்தே வுலோபரிடஞ் சென்று
பவந்தொலையும் பாடு படாதே—யவந்தொடுத்துக்
காலங் கழிக்குங் கடையேனைச் சற்குருவே
ஞாலந் தனிற்காக்க நாடு. 276

நாடுந் தனிக்கருணை நாட்டமதை யித்தருண
நீடும் படிச்செய்ய நீதியுண்டோ—கேடுன்னு
நெஞ்சமிலார் போற்றுகின்ற நின்மலனே முன்போல்வந்
தஞ்சலென வேயாண் டருள். 277

அருள்வாயென் றுன்னை யநுதினமும் போற்ற
விருள்வாயுற் றேழையே னிங்கே—பெருவாழ்
வடையாதே பேதுறுத லாமோ குருவே
தடையர்தோ யானறியச் சாற்று. 278

சாற்றுமட மாதர்மயற் சார்ந்துழன்று நிந்தையுற்றுத்
தேற்றுபவ ரின்றித் திகைத்தெங்கும்—போற்றுகின்ற
தந்தையே வுன்றன்சீர் சந்நிதியிற் றாழ்ந்தேனென்
னிந்தையே நீக்க நினை. 279

நினையளவில் லாத நிறைமகிமை யுற்றோர்
வினையழிய வேத்த விழைந்தார்—தினையளவு
மாட்சியொழி யாதவடன் மன்றடைந்தேன் சற்குருவே
காட்சியுற நின்னுருவைக் காட்டு. 280

காட்டுவா யுண்மைநெறி கண்டவர்குற் றேவல்செய
நாட்டுவா யென்னுளத்தி னல்லொழுக்கம்—வீட்டுவாய்
சேரவரு முத்தேக சித்திபெற ராமலிங்க
தீரவருள் வாயித் தினம். 281

இத்தினத்தி னல்விலரு ளெந்தையாய்ச் சொப்பனத்தின்
முத்திசித்தி வாய்க்கு முறையிலங்கு—நித்தியத்தி
னிற்குநெறி யெற்கு நிகழ்த்துவாய் ராமலிங்க
சற்குருவே யித்தருணந் தான். 282

தானென்ற நன்னிலையின் றன்மையென்முன் வந்துனக்கீந்
தேனென் றருள்புரிவா யென்குருவே—நானென்ற
வன்பழித்து நெற்றிநடு வைக்கமன நீங்காத
வின்பமரு முண்மை யிது. 283

இதுவன்றோ முத்திநெறி யீதன்றோ சித்தி
யிதுவன்றோ சன்மார்க்க மென்றே—பொதுவிலுப
தேசித்தே காணாது சென்றாய் கருணையிதோ
பூசித்தேன் வந்தருளிப் போது. 284

போதெல்லாம் வீண்கழிக்கும் புன்மாதர் பொய்ச்சாலஞ்
சூதெல்லா முண்மையெனத் தோற்றுவித்துத்—தீதெல்லாஞ்
செய்விக்கு நெஞ்சைத் திருத்தியெனைச் சற்குருவே
யுய்விக்கச் செய்குவதென் றோ. 285

என்றோ வலிதினில்வந் தென்றனைமுன் ஞண்டதுபோ
லின்றோவந் தாள்வாய்நா னென்னறிவே—னின்றோத
வென்கனவி லேனு மியம்பிடுவாய் சற்குருவே
நின்கனமே சொல்வே னிதம். 286

நிதமுன் னருட்பா நியமமா வேத்தும்
விதமுந் தெரியேன்பொய் வீணன்—பதமும்
பணியேன் பெரியோர் பரவுங் குருமா
மணியே யருணல் வழி. 287

வழிபடுநன் னேயமிலேன் வாழ்மையடி வாழ்மை
வழிவருநல் லன்பனலேன் மாதர்—விழிவலையிற்
பேராதே மாழ்கின்றேன் பெம்மானீ யாளாயேற்
றீராதே துன்பந் தினம். 288

தினம்போ தனைசெய்துந் தீவினையோ யாதே
மனம்போம் வழிவிட்டு மாறா—தினமென்னை
நவ்விவிழி மாதரிடை நாட்டுவதோ சற்குருவே
யவ்வினையை மாற்றி யருள். 289

அருள்வாழ்வி னுண்மை யறியாது நாயே
னிருள்வாழ்வின் மூழ்கிமிக வேங்கிப்—பெருவாழ்வி
லாதே யழிதலழ காமோவென் சற்குருவே
யீதே சமயமரு ளிங்கு. 290

இங்கிவ் வடியேற் கிரங்காயேற் சத்தியமுன்
பங்கில் வருமென் பழிநன்றோ—தங்குநின்சீ
ரெப்படியும் போற்றுகின்றே னென்குருவே யென்பாலி
லிப்படியோ நின்னிரக்க மே. 291

இரக்கமே மாந்தர்க் கியல்பாங் குணமாந்
திரக்கருத்தை யாவருக்குஞ் செப்பி—வரக்கருணை
தந்தாயஃதென்பாலிற் சற்றுமிலை யென்குருவே
யெந்தாயே வுள்விளங்க வெண். 292

எண்ணுனிற்கா ருண்யவழி யில்லாது முத்திபெற
நண்ணிற் பலனில்லை நற்சுருதி—விண்ணிற்பூ
விற்கருணை யான்றோரி னிச்சையென்ற சற்குருநின்
னற்கருணை யோர்வேனோ நான். 293

நான்புனையும் பாமாலை நல்லகுரு நாதனடி
தான்புனையு மல்லாதித் தாரணியோ—ரேன்புனைவா
ருய்யவெனி லென்குருவுக் குன்றனை நெஞ் சேயிடமாச்
செய்யமுய னீயே சிவம். 294

சிவஞான போதமெனுந் தெய்வீக நூலி
னவஞான வுட்பொருளை நாட—வவஞானம்
போகவருட் பாபுகன்ற புண்ணியனுஞ் சற்குருவி
னேகவுரு நெஞ்சேநீ யெண். 295

எண்ணாது நின்மகிமை யேத்தாது நின்னருட்பா
நண்ணாது நின்வடிவ நாயடியேன்—பண்ணாது
பாமாலை நின்னடிக்கிப் பாரினின்றுற் சற்குருவே
சாமாறு நீங்குவதோ சாற்று. 296

சாற்றுகின்ற சுத்தசிவ சன்மார்க்க சாதகத்தைத்
தோற்றுவித்து மவ்வகையிற் றேயாது—வேற்றுவகை
செல்லவெண்ணு நெஞ்சைச் சிவகுருவே வோருளவு
வெல்லவருள் செய்வாய் விரைந்து. 297

விரைந்துநினை துன்கழலே வேண்டிவெகு நாளாய்க்
கரைந்துதுதி செய்துமினுங் காணேன்—திரைந்துடலம்
பொன்றுமுனம் வந்ததுபோற் புண்ணியனே நான்காணற்
கென்றுறுமோ வின்றே யியம்பு. 298

இயம்புகின்ற தேவாரத் தின்மெய்ப் பொருளின்
சுயம்புகன்ற நின்னருட்பா சொல்லு—நயம்புரியா
தெப்படியோ பாடுகின்றே னென்குருவே மெய்வண்ண
மிப்படியென் றெற்கருள்வா யின்று. 299

இன்றல்லது நாளைக்கோ வென்றைக்கோ வென்னுடலம்
பொன்றவரு மென்றே புலம்பாது—நின்றயவுண்
டென்னிடத்தே யென்றுமகிழ்ந் தேதுவரி னுஞ்சிந்தை
நின்னிடத்தே வைக்க நினை. 300

நினைவிட்டு நீங்கா நிலையுங் குழவி
யனைவிட்டு நீங்கா ததுபோ—லெனைவிட்டுப்
போகா நினதருளும் புண்ணியனே யிவ்வுடல்விட்
டேகா நிலையுமரு ளின்று. 301

இன்றோ வலதென்றோ வேழையேன் முன்றோன்றி
நன்றோ திடலெவரு நாடுவடன்—மன்றோங்குஞ்
சற்குருவே ராமலிங்க தற்பரனே யுள்ளமுவந்
தெற்கருள்செய் யித்தருண மே. 302

தருணமிது செய்யவருட் டந்தையார் நம்முன்
மருணலிய விங்கே வருவார்—கருணையுட
னென்றருளிச்செய்த விராமலிங்க சற்குருவே
யென்றதையிந் நாயேற் கியம்பு. 303

இயம்பியவா றுன்ற னிணையடிக ளேத்து
நயம்புரியுங் கல்வியிலா நாயேன்—சுயம்புகல
வல்லவனோ ராமலிங்க வள்ளலே நின்றயவா
லல்லதெனா லாமோ வருள். 304

அருளா ரமுதந்தந் தாண்டருள வேண்டுந்
தெருளாப் பருவச் சிறியேன்—மருளாலே
வாதனையுற் றேனெனினும் வள்ளலே வெம்பிணியி
னேதமெலா நீக்கியெனை யின்று. 305

இன்றுன் கருணையினா லென்னுடைய தீமையெலாம்
பொன்றும் படிநினைத்தாற் போகாதோ—நன்றுன்பேர்
வள்ளலன்றோ ராமலிங்க மாதவனே யேழையென்பாற்
கள்ளமன்றோ வென்னின் கருத்து. 306

கருத்தறிந்து மென்றன் கனவினிலுங் காணா
திருத்தலழ காமோ வெளியேன்—பொருத்தமின்றோ
நின்னருட்கி ராமலிங்க நின்மலனென் றெவ்வுலகும்
பன்னருஞ்சீ ருற்றாய் பகர். 307

பகரும்போ துன்னருட்பா பற்றுறற்போல் காட்டி
நகருமென் னெஞ்சமிந்த நாட்டி—னிகரரிய
சீருற்ற ராமலிங்க தேசிகனே நின்னையன்றி
யாருற்றா ரென்செய்வேன் யான். 308

யானென்னு மாணவப்பே யின்னுமெனை விட்டகலா
தேனென்னை யேமாற்ற லென்பிழையோ—தேனென்று
நின்பாணினை வொழித்த நேரமோ ராமலிங்க
கின்பாமன் னிப்பருள வெண்; 309

எண்ணுவனே வேறொன் றியம்புவனோ மற்றவரை
நண்ணுவனோ நின்னுடைய நாமமன்றி—மண்ணுலகி
லுத்தரமன் றூற்பவஞ்செய் யுத்தமவி ராமலிங்க
சித்தநினக் கொத்ததயை செய். 310

செய்வா ரொருவனென்றே சிந்திக்கி லென்னெஞ்சே
யுய்வான் வருவானீ துண்மையா—மெய்வாழ்வை
நம்பியா னிற்குமிட நாடுவாய் ராமலிங்க
வெம்பிரா னுள்ள மிதுவே. 311

இதுவன்றோ வென்றனைவிட் டிவ்வுலகி லேங்கு
மதுவன்றோ நெஞ்சே யறிநீ—சதுரன்றே
சொன்னபடி நிற்கிற் சுகமடைவாய் ராமலிங்க
மன்னவன் சொல்லென்றே மதி. 312

மதியாது நம்பெருமான் மன்றினையென் னெஞ்சே
துதியாமற் பற்பலவாய்த் தூற்றுஞ்—சதிகாரர்
வன்னேயத் தாலே மதியொழிந்தாய் ராமலிங்க
வன்னே யெனிற்றருவா னன்பு. 313

அன்புஞ் சிவமுமொன்றென் றூரவ் வழிவிடுத்தே
வன்புங் கடுமையுளார் வாயலிடைத்—துன்புறவே
யென்னே யெனையீர்ப்பா யென்னெஞ்சே ராமலிங்க
மன்னேயென் றன்னன் மறந்து. 314

மறவாமற் சன்மார்க்க மாநிலையை வாய்மை
துறவாமன் மெய்யன்பிற் றோய்ந்தாற்—பிறவாமை
யென்று மிறவாமையுறு மென்றுரைத்தா யென்குருவே
யென்று வருதலரு ளின்று. 315

இன்றுமுனை விட்டகலா தென்னெஞ்சை நின்றிடச்செய்
தென்றுமெனை யாண்டிடுதற் கிவ்வுலகி—லென்குருவாய்
வாய்த்திலங்கும் ராமலிங்க வள்ளலே யித்தருண
மாய்த்திடுவா யென்றன் மருள். 316

மருளுடுங் கொள்கையற மாதவரும் போற்றுங்
கருணாநிதிசமுகங் கண்டு—மிருளுடைற்
கெண்ணுவரை யாவிட் டெருதுகறப் பாரென்று
நண்ணுவா ரான்றோர் நகைத்து. 317

நகைப்பார் வெறுப்பாக நாடுவா ரென்றும்
பகைப்பார்மெய் யேதும் பகரார்—திகைப்பொழியச்
சொல்லா ரிராமலிங்கத் தூயவனே நின்னன்பர்
கல்லாமை யென்பாலிற் கண்டு. 318

கண்டேன் கவிதீர்ந்தேன் கள்வனே னின்முகத்தைக்
கொண்டே னருட்போதங் கோதின்றி—யுண்டேனின்
றென்போ லரியதவம் யார்செய்தா ரிப்புவியிற்
றுன்போ விலெமெய்ச் சுகம். 319

சுகம்போலக் காட்டிச் சுதந்தரத்தை மாற்று
மகங்கொண்ட மாத ரழகைச்—சகந்தனிலே
கண்டு மயங்கியுனைக் காணமற் சற்குருவே
வுண்டுறங்கு வேன்பகலல் லும். 320

அல்லார்ந்த கண்டமுக்க ணைந்துமுக நாலிருதோ
ளெல்லாங் கரந்தே யெழிற்குவா—யெல்லாருங்
கண்டுகளி கொள்ளக் கடைக்கணித்தா யிவ்வுலகி
லுண்டுடுத்தி வாறென்முன் னும். 321

முன்னுந் தவஞ்செய்து முற்றுப் பெறுக்குறையாற்
பின்னு மிறந்தும் பிறந்திடவு—மின்னுமிகத்
தெத்தனைப்பி றப்பெடுக்க வெண்ணுமோ சற்குருவே
மத்தனையுன் றன்கன் மனம். 322

கன்மனங்கற் கண்டாக் கரையவரு ளுங்கருணை
நன்மனங்கொண் டென்னுளொன்றை நாட்டியென் றன்—புன்மதியை
நன்றுக மேருமலை நாடும் படிசெய்தாய்
பொன்று நிலையைப் புகன்று. 323

புகன்றபடி சாதிக்கப் போந்த தருணத்
தகன்று விடயத்தி லாழ்த்திச்—சகந்தனிலே
துன்புறச்செய் நெஞ்சின் துடிப்படக்கிச் சற்குருவே
யன்புகொண்டு மன்னித் தருள். 324

அருளாது விட்டுவிட்டா லாண்டானென் னும்பே
ரிருளாகு மோவென்று மில்லை—மருளாமற்
செய்வதுநின் செய்கையென்பார் தேசிகனே சற்றிரங்கி
யுய்வதுறக் கண்பாரு கந்து. 325

உகந்த வடியவள்போ லுற்றபணி செய்து
சுகந்த மலர்மாலை சூட்டிச்—சகந்தனிலே
கொல்லாமற் கொல்லுங் கொடியவள்பா லென்னெஞ்சைச
செல்லாதுன் பாலிருக்கச் செய். 326

செய்தாலுந் தீமை சிறிதுநினை யான்பரிந்துன்
மெய்தாவு நெஞ்சகத்தான் மேதினியிற்—பொய்தாவு
நெஞ்சே யிராமலிங்க நின்மலனை நாளுநினை
யஞ்சேலென் றண்டருளு வான். 327

வானுலகு மண்ணுலகும் வாழ்த்து மகாமகிமைத்
தேனுலவுஞ் சீர்பரவுஞ் செய்யவருட்—பானுவலும்
பண்டிதசி காமணியைப் பன்னுநெஞ்சேநீ
யண்டிநினை நன்மையடை வாய். 328

வாய்மையுளான் தூய்மையுளான் வண்மையுளா னென்றுமொரு
காய்மையிலா னுண்மைநூற் கற்றவர்க்குச்—சேய்மையிலா
னக்காலு ரைத்தவிரண் டற்றுநிற்பாய் நெஞ்சேநீ
யெக்கா லசையாம லே. 329

அசையாம லென்று மலையாம லவ்விட்
டிசையாம லுன்னிலைவிட் டேங்கா—விசைபோன
பம்பரம்போ லோவிற்பர வெளியுண் ணின்றிடிற்சிற்
றம்பரமென் றியென்னு ளார்ந்து. 330

ஆர்ந்தன்பி னேடுரைத்த வானந்த நன்னிலையிற்
சார்ந்தனுப விக்குந் தருணத்திற்—பேர்ந்தே
விரிந்திகத்திற் செல்ல விரைகின்றாய் நெஞ்சே
பரிந்திலையென் மேலென் பகை. 331

பகைசேரா வுள்வாயின் பாங்கோர்தம் பத்தின்
தகைசேர வென்றனக்குச் சாற்றிப்—புகைசேராக்
கற்பூர தீபவொளி கண்டிடுவா யங்கென்றால்
சிற்பூவின் மேலே திகழ்ந்து. 332

திகழுமெனச் சொப்பனத்திற் றேசிகன்போல் வந்து
நிகழும்பொற் சொன்னெறியே நில்லா—திகழுறவே
முன்னேயென் னெஞ்ச முடுக்குகின்ற தேழுயக்கி
லென்னே கொடியசெய லீது. 333

ஈதோர் திருவிளையாட் டென்றோ மறுபடியு
மேதோ மறைந்திட்டா யென்குருவே—நீதோரு
மெம்மனோர் பேரகந்தை யெல்லா மொழிந்தபின்போ
லிம்மையிலே நான்காணு வேன். 334

காணு திருக்கும்வரை காரிழையார் பாலடங்கி
யூணுதி கட்கே யுழன்றிருப்பேன்—கோணுத
நன்னேயத் தோருண் ணடிக்கின்ற ராமலிங்க
வன்னே யிரங்கி யருள். 335

அருள்செய்த வண்ண மனுபவிக்க வேலா
திருள்வடிவி லின்னுமிக வேங்கு—மருணவியச்
செய்வதென்றோ ராமலிங்க தேசிகனே யிவ்வடியே
னுய்வதென்றோ வுண்மை புரை. 336

உரைசெய்கை யுள்ள மொருங்கேநின் பாலிற்
கரைசெயவென் ணுயேலிக் கால—நரையிற்
பயக்கடலின் மூழ்குவேன் பண்பார் குருவே
வுயக்கருணை யெத்தருண மோ. 337

எத்தருண மித்தரையி லெங்கள்குரு ராமலிங்க
சித்தவருவாயெனச்சிந் தித்திருந்தேன்—சித்தமகிழ்ந்
தாண்டிடுவேன் வந்தென் றருள்செய்தாய் சொப்பனத்தி
லீண்டிடரைத் தீர்க்க விசைந்து. 338

இசைவாய்ந்த பண்ணுனின் னின்னருட்பா வேத்தி
வசைசாரா மெய்ந்நிலையில் வாழா—தசைவாய்
விரிந்த மனத்தான் மெலிகின்றேன் வள்ளால்
புரிந்தருள்வாய் நின்கருணைப் பொன். 339

பொன்னுடையார் பாலிற் புகுந்துகலங் காவகையே
யென்னுடையா யேழைக் கிசைவித்து—மன்னுடையும்
பூணுமுணவும் பொருளும் போந்தவைத்துன் னன்பர்பணி
பூணுமுணர் வென்னுட் புரி. 340

புரிகுழலார் பாலூண் பொருந்திடுதற் கேங்கித்
திரிகின்ற புன்மையெலாந் தீர்த்துப்—பரிவுடனே
முன்னையுவந் தாண்டதுபோன் மூப்பிலுமுவந் தாண்டருள்வா
யென்னைமற வாதகுரு வே. 341

குருவாகும் ராமலிங்கக் கோமானெனன் றோங்குங்
கருணை நிதிதன்னைக் காண்பான்—வருநெஞ்சே
சொப்பனத்திற் றோன்றுந் துணையாக வந்தருள்வா
னிப்படியி லாறுமுறை யெண். 342

எண்ணுவார் நற்கதியை யேத்துவா ரின்னருட்பா
வுண்ணுவா ரவ்வின்ப வுட்பொருளைக்—கண்ணுட்
கலந்திலகுஞ் சற்குருவைக் காணநினை நெஞ்சே
கலந்திடுவா யின்பக் கடல். 343

கடலுலகில் வானிற் கதிநிலையீ தென்னுந்
திடமறிய வேறெங்கே தேர்வா—யுடன்சென்
றிருணடா தென்மனனே யென்குருவே யாகுங்
கருணை நிதிசெயலைக் காண். 344

காண்டகுநீ யென்பாற் கலந்துநிற்க வெண்ணுவையே
னீண்டநிலை யென்றனக்கு நேருநல்லோர்—வேண்டலிலாப்
பெண்மைக் குணம்போகும் பிரியமுட னீயுநெஞ்சே
வண்மையுட னேநிலவு வாய். 345

நிலவாத கொள்கை நிரம்பிசிவ யோகங்
கலவாத பொல்லாக் கலியிற் பலவா
மதத்துரிசை மாற்றிநெஞ்சே வள்ளலிணைச் செம்பூம்
பதத்துகளை யெண்ணிற் பலன். 346

பலன்பெறவே வேண்டிற் பலவாறுன் றன்சஞ்
சலந்தொலைநெஞ் சேயின்றேற் சற்று—நலம்பெறுவ
தென்றனு லாகா தெடுப்பதினி யெம்பிறவி
யுன்றனு லெத்தனையா மோ. 347

எத்தனை நா ளேத்தியுமிவ் வேழையேன் மட்டிலுனக்
கித்தனைப ராமுகந்தா னென்னையோ—சித்தனெனுந்
தேசிகவி ராமலிங்க சிற்பரநின் சீரடிக்கே
யாசிலாப் பத்தி யருள். 348

அருளுவா ரார்நமக்கென் றச்சமுற வேண்டா
மிருளுறுமென் னெஞ்சேநீ யென்றும்—வருநம்
மருட்பிறவி மாய்த்திடுவார் மாதேவ ராய்வந்த
வருட்பிர காசவள்ள லார். 349

"வள்ளல் குருராயன் வாது" வென்ற வெண்பாவுக் *
குள்ள முவந்தோ ருரைசெய்தோய்—துள்ளலுறு
நெஞ்சாற் றவித்து நிலைகுலைந்து நிற்குமெனை
யஞ்சாதே யென்றடக்கி யாள். 350

ஆளும் பெருங்கருணை யண்ணலே நின்னருட்பா
நாளுந் துதித்து நலம்பெறவும்—கோளுங்
கலகமிலாச் சீருறவுங் காணவரு வாயிவ்
வுலகமெலாம் போற்று முனை. 351

உனையலதிங் கோர்கடவு ளுண்டென்ப தென்னுட்
டினையளவுஞ் சிந்தனையே செய்யேன்—வினையகல
வெண்ணு திருப்ப தியல்போ விராமலிங்க
வண்ணு வெனைக்காத் தருள். 352

காத்தருள வேண்டுமெனக் காலமெலா நின்னும
நாத்தழும்பே றத்துதிக்க நண்ணுமை—லாத்தமிலா
மாதரார் நாமம்பான் மாறும வெண்ணுகின்ற
தாதலிலென் னெஞ்சங்கல் லாம். 353

கல்லாநெ நெஞ்சங் கனியாகச் செய்யநினை
யல்லாம லாரருள்வா ரம்புவியி—லெல்லார்க்கும்
வஞ்சமிலா தின்பமருள் வள்ளானின் பாலிலென்கண்
னெஞ்சங் கரைய நினை. 354

---

* ஒழிவி லொடுக்க வெண்பா.

நினைப்போர்க் கருள்புரியு நின்மலனே யென்னை
வினைப்போர்க் கிழுக்குமென் றன் வெய்ய—நினைப்பொழித்தே
யெக்கணமு முன்ற னிணையடியே சிந்திக்க
விக்கணமென் னெஞ்சை யிருத்து. 355

இருத்தித்தன் னெண்ணம்போ லேமாற்றி மிக்க
வருத்திச்செய் கின்ற மடவார்—கருத்திலுறை
மாலிலென் றந்தியங்கா மாண்புடைய மாதவத்தர்
பாலினிலன் றேசல்லா பம். 356

சல்லாபஞ் செய்மடவார் சாயையிலே மாயையிலே
நில்லாம னின்பாலென் னெஞ்சமதை—யெல்லாஞ்செய்
வல்லவனே நின்றிடச்செய் வண்மையருள் ராமலிங்க
நல்லவனே யுள்ள நயந்து. 357

நயக்கச்செய் வஞ்சமட நல்லார்செய் மாய
மயக்கொழிந்த மாதவரும் வாழ்த்தி—வியக்கு
மதிசே ரிராமலிங்க வள்ளலே யென்பாற்
கதிசேரப் பார்நினருட் கண். 358

கண்மூடிக் காட்டிக் கபடஞ்செய் மாதர்மயன்
மண்மூடிப் போக மருந்தொன் றை—விண்மூடுங்
கந்தரம்போற் செய்ய கவிபொழிந்த ராமலிங்க
சுந்தரவென் சொப்பனத்திற் சொல். 359

சொல்லும் வடற்சபைவாழ் ஜோதிப் பெருமானே
யெல்லுமல்லும் வெம்மடவா ரிச்சையதை—வெல்லுகின்ற
வீறுடனென் னுநெஞ்சை வென்றிடச்செய் துற்றநிலை
பேறுடனே யீவதின்றுன் பேர். 360

உன்பேரைச் சொல்லி யுடலோம்பச் செய்கின்ற
வென்பேர் நினைக்கிலெனக் கேளிதமே—யன்பேது
மில்லா வெனைச்சீட னென்கின்று ரிவ்வுலகோ
ரெல்லாமு நின்செயல தே. 361

செயலொன் றறியாது சேயிழையார் தம்பான்
மயலொன்றி நல்ல மதியைப்—பயிலாத
போதுன் பெரும்போதம் போற்றுகிலேன் புண்ணியனே
யேதும் பருவ மிலை. 362

பருவமிலாக் காலத்திப் பாரதனிற் றேன்றிக்
கருவமிலா விக்காலங் காணு—தருவமதாய்
நின்றுயைக் காண்பதென்றே நின்மலனே யித்தகஞ்
சென்று வரலுன் செயல். 363

செயலெங்கு நின்செயலாய்த் தோராது மாதர்
மயலொன்றிச் சால மயங்கி—யயலெங்கு
முற்றசுக மீதேயென் றோர்ந்திழிந்தேன் சற்குருவே
கற்றதுமற் றொன்றுமிலை காண். 364

காணாத காலமெல்லாங் கற்றோர் நகையாட
வாணாளை வீணாய் வழங்கிநிற்பே—ணாணும
லிப்பாரி லின்பமிலை யென்றடைவேன் ராமலிங்க
வப்பா வடியேற் கருள். 365

அருள்செய்வாய் பின்பென் றகமகிழ்ச்சி கொண்டு
மருள்செய்யு மாதரிடை வஞ்ச—விருள்செயலிற்
றப்பா துறைந்து தவிக்கின்றேன் ராமலிங்க
வப்பாவென் றோவுன்ற னன்பு. 366

அன்பே வுருவாயிவ் வம்புவியிற் றோன்றிப்பே
ரின்பே யருள விருந்திலகித்—துன்பேதுந்
தோன்று விதஞ்சொல்லித் தோன்று திருப்பதுவுஞ்
சான்றோமோ சற்குருவே சாற்று. 367

சாற்றியவா றின்றேனுஞ் சாதகஞ்செய் வோமென்றாற்
காற்றிற் கறங்கெனவே கண்டவிட—மாற்றிவெறுங்
காரியமே செய்நெஞ்சைக் கண்டிக்கும் வன்மையிலே
னாரிசைவா ரல்லதுநின் னால். 368

நின்சொற் படிசற்று நில்லாத வென்றன்மனத்
தின்சொற் படிசென் றிளைக்கின்றே—னின்சொற்போ
னின்றிடச்செய் வன்மையிலே னின்மலனே யென்னெஞ்சை
வென்றிடற்கோ ருண்மை விளம்பு. 369

விளம்பமுடி யாதவொரு மீதான மேவ
வுளம்பரிந்து நன்று யுரைத்தாய்—களங்கமுறு
மென்பாற் பெறவருமோ வென்குருவே காணிலன்றி
யின்பாருன் பொன்னுருவ மே. 370

உருவந் தெரிசனமு முள்ளசுத்தி மூன்று
மொருவும் படிவிளக்கி யுண்மெய்—மருவமற்றத்
தத்துவச்சட் டைக்கழற்றித் தற்போத நீக்கியுய
ரத்துவத்தி னிற்க வருள். 371

அருள்கொண்டென் முன்னருவந் தாண்டதுபோ லின்னு
மிருள்கொண்ட வென்றனையீ டேற்றத்—தெருள்கொண்ட
வேருருவை நீக்கிவந்திங் கென்குருவே வுய்யவருள்
சீருறுநின் வாய்மலரின் றேன். 372

தேன்பாகு கற்கண்டுந் தேக்குந் திருவருட்பா
நான்பாட நல்லவர நல்கிலாய்—வான்பாடுஞ்
செய்யபுகழ் சேருஞ் சிதம்பரவி ராமலிங்க
வய்யவினி யேனு மருள். 373

அருளார்சிற் றம்பலத்தி லன்பாரு மின்பம்
வெருளாதுட் கொண்டு மிளிருந்—தெருளார்ந்த
மன்றுறையும் ராமலிங்க வள்ளலே யென்றருள்வா
யென்றுமழி யாவாழ்வை யே. 374

வாழையடி வாழையென வாய்மலர்ந்த வண்ணமிந்த
வேழையேன் பாலிரக்க மில்லையோ—கோழைமனந்
தன்னான் மயங்கித் தவிக்கின்றேன் சற்குருவே
யென்னு லினிச்சகிக்கி லேன். 375

சகிக்கமுடி யாத சழக்குகளென் பானிர்
வகிக்க முடியாது மயக்கித்—தகிக்குமிதை
யண்டிப்பா டெல்லா மடைகின்றேன் சற்குருவே
கண்டிப்பா யென்னெஞ்சக் காடு. 376

"காடுவெட்டி" யென்னுங் கவிப்பொருளைத் தேருமற்
பாடுபட்டு மின்னும் பலித்ததிலை—வீடுகட்டி
வந்தாற் பலிக்குமென்ற வாய்மையெது வென்றறியே
னெந்தாயிங் கென்செய்கு வேன். 377

செய்வேன்குற் றேவன்மடச் செல்வியர்பாற் சேர்ந்துமிகத்
தொய்வேனற் சுத்தமிலாத் துட்டனே—னுய்வேனோ
தேங்கமழுஞ் செய்யவடற் சிற்சபையிற் சேவித்துப்
பூங்கமழுநின் பாதமலர்ப் பொன். 378

பொற்பங்க யத்தின் புதுநறவெ னுங்கவியின்
சொற்பொருளின் செய்பாகஞ் சொல்லாது—சொற்பெருமை
யாகபரி பாஷை யறைந்தகன்றாய் சற்குருவே
தேகமழி யாததிறஞ் செப்பு. 379

செப்புவா யுண்மைநெறி தேர்ச்சியிலாச் சீடனென
வொப்புவா ரிவ்வுலகி லுன்னைவிடத்—தப்புணர்ந்து
தள்ளத் தகும்பெரியர் தாமுளரோ சற்குருவே
யெள்ளத் தகுந்தன்மை யென். 380

என்கையி லொன்றீந்தா யென்றகவி யின்பொருளை
யென்கைநெல் லிக்கனிபோ னீந்தருளில்—வன்கையஞ்
ஞானமெலாம் போக்கி நவிலுஞ்சன் மார்க்கசுத்த
ஞானமது பெற்றுய்வே னன். 381

நான்றேடா முன்ன நயந்தென்முன் றோன்றியடி
யேன்றேடக் காணா திருக்கின்றாய்—வான்றேடு
முன்றன்பொற் பாதநிழ லூடிருக்க வொண்ணாத
தென்றன்பொல் லாக்கால மே. 382

காலநோய் தீர்க்குங் கணக்குரைத்தோ யென்னுடைய
மூலநோய் தீர்க்கு முறையிலையோ—ஞாலமதில்
யாவரெனைக் காத்திடுவா ரெந்தா யிராமலிங்க
தேவநினை யன்றியெற்குச் செப்பு. 383

செப்புங் கலைகளெலாந் தேர்ந்துரைக்கிற் கற்பனையா
யொப்பும் படியாகு முண்மையிதே—தப்புறுமென்
றெண்ணாதீ ரென்ற வெழிற்குருவே நன்றருள்வா
யுண்ணாட வென்ற னுளம். 384

உள்ளத் திருந்து மொளித்திருப்ப துன்னுடைய
கள்ளத் தனமென்று கண்டுகொண்டேன்—வள்ளற்பேர்
பெற்றாயே யீதுன்றன் பெற்றியோ ராமலிங்க
நற்றாயே யெற்கு நவில். 385

நவிலக் கலையொன்று நல்லறிவு மில்லேன்
செவிகட் குறவிருந்துஞ் செய்யேன்—புவிகட்குத்
தேன்படைக்குஞ் சோலைவளர் செய்யவடற் றேசிகனே
யேன்படைத்தா யிங்கென்னை யே. 386

என்னையறி யாதிருக்கு மேழைத் தனமுடையே
னுன்னையறி யாதிருப்ப தோர்வியப்போ—முன்னமெனை
யாண்டுவந்த ராமலிங்க வண்ணலே யித்தருண
மீண்டுவந்தாற் போமே யிடர். 387

இடர்புரியு முன்வினையி னீனமொழித் தென்னை
யளர்படர்ந்த பாச மறுத்துப்—படர்கல்வி
கற்குநெறி காட்டிக் கடைத்தேற்று வாயென்றன்
சற்குருநீ யேபண்டி தன். 388

பண்டிதனுஞ் சிற்றம் பலஞானிக் குண்மைநிலை
விண்டிதயத் தையம் விடச்செய்யக்—கொண்டிசைத்த
"நின்னிலை"யென் னுங்கவியி னீர்மையடி யேற்கருளி
நன்னிலையில் வைப்பாய் நயந்து. 389

நயந்தமொழி நாட்டி நடிக்கின்ற மாதர்
புயந்தழுவி நோய்கொண்டும் புல்லும்—வயந்தழுவிக்
கன்றுமிலம் பாடடைந்தேன் கற்பகமே தந்திடுவாய்
பொன்றுமுன் முன்றனருட் பொன். 390

பொன்னுடையார் பாற்சென்றிப் பொய்யுடலைப் போற்றுவது
நின்னுடைய மாகருணை நீதியதோ—வென்னுடைய
தீயவினை யென்னிலுனைத் தேசிகனுக் கொண்டவெனக்
காயவினை யுண்டோ வருள். 391

அருள்வாயென் றெண்ணி யடியேன் பவத்தன்
பிருள்வாய்ப்பட் டேங்குகின்றே னென்பாற்—றெருள்வாயிற்
சாருகின்ற நற்புலனைத் தந்தருள்வாய் சற்குருவே
கோருகின்ற நின்றயவைக் கொண்டு. 392

கொண்டுகுலம் பேசுவது கொண்டோர்க்கெப் போதாவ
துண்டுகொலோ வில்லையதை யோர்ந்தேனும்—பண்டுவந்த
கோமானே குற்றங் குணமாக்கொண் டென்கவலை
போமாறு வந்து புகல். 393

புகல்கின்ற வேதாந்த போதாந்த மாறு
மிகலின்றி யொன்றாக வெண்ணற்—சுகமெனலா
மென்றோர் கவிபுகன்று யெற்கருள்வாய்ப் பேதமதை
வென்றோர் விளம்புகின்ற வீடு. 394

வீட்டாசைப் பட்டவரை வீட்டைவிட்டு நீக்கவெனும்
பாட்டாக வென்னைப் படைத்தனையோ—வேட்டாண்டி
யாக்கினால் வீடுறுமென் றன்போ டனதுதிரு
வாக்கினாற் சொல்லிங்கு வந்து. 395

உவந்து வடல்வெளியி லோர்நால் வருடம்
பவந்துலைய வல்லும் பகலு—நவந்துலங்க
நண்ணிச்சன் மார்க்க நவின்றாயென் னற்குருவே
யெண்ணிற் பெருவெள்ள மே. 396

வெள்ளம் வருமுன் விரைந்தணையைப் போவென்றே
வுள்ள மகிழ்ந்தே வுரைசெய்தாய்—கள்ளமிலா
நெஞ்சமுளார்க் காகு நெடுவஞ்ச னேற்காமோ
வஞ்சவெனு நீயே யருள். 397

அருளுணர்த்துஞ் சன்மார்க்க மாகுமிது வென்றே
தெருளுணர்த்தும் பாக்களாச் செய்தும்—பொருளுணர்த்த
விப்பாரில் யாருமிலை யென்குருவே யீதென்ன
வப்பா வொருகால மா. 398

ஒருகால மேனு முனதருமை யுன்னி
யுருகாத நெஞ்ச முடையேன்—பெருகாத
னவ்விவிழி மாதரிடை நண்ணினேன் சற்குருவே
வெவ்வினையேற் குண்டோமெய் வீடு. 399

வீடுவிட்டு மேலான வீடடைய வேண்டிப்பல்
பாடுபட்டுப் பார்த்திலனென் பாழ்மனத்தின்—காடுவெட்ட
நண்ணிலே னல்லகுரு நாதனினை நாடோறு
மெண்ணிலே னிச்சிறுவ னே. 400

சிறுவன் வருமச்சந் தேறுனென் பார்போ
னறுமென் குழலார் நடிப்பாற்—பெறுபயனை
யானந்த மென்றறியு மற்பன்மெய் வாழ்வுபெற
வானந் திகழ்வோய் வழுத்து. 401

வழுத்தியம காதேவ மாலையிலோர் பாட்டிற்
கழுத்தரிந்து கன்மமல மென்று—மெழுத்துமட்டும்
வாயாற் புகல்வேன் வகையறியேன் வள்ளாலினை
தாயாதார்க் கன்றேபொய் யாம். 402

பொய்யுடலைப் போற்றுவார் பூவையரே யென்றவர்தம்
பொய்யுரையை மெய்யாகப் போதெல்லாஞ்—செய்யுமெனை
நின்னன்ப ரெப்போது நிந்திப்பா ரென்குருவே
யென்னனன்பன் றேனென் றியம்பு. 403

இயம்புகின்ற பன்மார்க்க மிற்றென்ற வற்றின்
வயம்புகா வண்ணஞ்சன் மார்க்க—நயம்புகன்றே
யெங்குசென் றேயொளித்தா யென்குருவே யின்றுவர
லிங்குநன்று மென்வேண்ட லே. 404

வேண்டுதல்வேண் டாமையிலா வித்தகனே நின்னடியை
வேண்டுதலில் லாதிந்த மேதினியின்—மாண்டுவிட
வெண்ணியவென் புன்மைதவிர்த் தின்னருட்பா தந்தனினை
நண்ணி யிருக்கவர நல்கு. 405

நல்குதலிந் நாயேற்கெந் நாள்வருமோ வென்றுநித
மொல்குதலோ டின்மகிமை யோதுகின்றேன்—புல்குதலி
லின்புடைய ஞானி யிடிகின்றேன் சற்குருநின்
னன்புடைய ஞானவெனை யாக்கு. 406

ஆக்கிக்காப் பாற்றி யவமொழித்துப் பக்குவமாய்த்
தேக்கிப் பலனளிக்கத் தேசிகனே—போக்கிறந்த
மெய்வாழ் வடைந்துய்ய வேண்டுகின்றே னித்தருணஞ்
செய்வாயினை துன்றன் செயல். 407

செயலெல்லா முன்றன் செயலென் றடங்காக்
கயலொன்றுங் கண்ணார் கலப்பின்—மயலொன்றித்
தீங்கழல்கொண் டேங்கித் தியங்குகின்றேன் சற்குருநின்
பூங்கழலைச் சேருவதெப் போது. 408

எப்போதென் னெண்ணமெலா மீடேறு நின்னருளா
லிப்போ தெனவறியே னென்குருவே—தப்போ
வனேகஞ்செய் தாலுமன்னித் தற்புதநின் னன்பர்
சினேகமே னும்பொருந்தச் செய். 409

செய்யார் திருவுருவாய்த் தீயாய் வெளியாகி
மெய்யாரு மேற்சித்தி மேவினையோ—வய்யா
வெருதாக வீங்குழைத்தே னெம்பெருமா னின்னைக்
கருதாத வென்மனமே கல். 410

கல்லாத நெஞ்சங் கரையுமோ வல்லதென் றன்
பொல்லாத முன்வினைதான் போகுமோ—சொல்லாமற்
சொல்லும் பொருளெனக்குத் தோன்றுமோ சற்குருவே
நல்லுரை சொல்லாயே நயந்து. 411

நயந்துன் னருட்பாச்சின் னாள்துதித்த வாற்றாற்
சுயம்புகல சற்றே துணிந்தேன்—பயந்துன்ற
னின்றொழிலென் றுள்ளங்கொண் டேன்றுகொள்வாய் சற்குருவே
யென்றொழிநின் காற்றொழுத லே. 412

தொழுதா லழுதாற் றுதித்தாற்சிந் தித்தா
லெழுதா வெழுத்தென்று மேலா—பழுதுவரா
வென்பார் மதியறியா ரென்றுரைத்தா யென்குருவே
யன்பாரு நின்வாக்கி னால். 413

வாக்கினான் மெய்யான் மனத்தாற் றுதிபணித
லாக்கி நெகிழ்ந்துருகி யன்புகொண்டு—தேக்கிக்
கலையா திருக்கச்செய் கர்த்தனே யன்பே
நிலையாக நிற்க நிதம். 414

நிதமெண் பதுகோடி நேருநினை வென்றாற்
சதமென்ப தொன்றுமிலை சாற்றிற்—பதமொன்ற
நின்னை நினைப்பிக்க நேருமல்லாற் சற்குருவே
யென்னை லொருசற்று மில். 415

இல்லாப் பொருளை யிருப்பதென் றெண்ணச்செய்
பொல்லாத மாயையினைப் போக்கிடவா—யெல்லா
மகரமதி லென்றே யருள்செய் குருவே
பகரும்வடற் சிற்றம் பலம். 416

அம்பலத்தி லெக்காலு மாடுகின்ற யாற்றலிலா
வம்பரத்தின் மெய்யோம்ப வாடுகின்றே—னிம்பரத்தி
லுன்றன் செயலென் றுணர்கிலேன் சற்குருவே
யென்றன் மதியீன மே. 417

மதியீனத் தாலே மயங்கிமட மாதர்
சதியீதென் றோராமற் சார்ந்தே—கதியிழந்து
நாளுமலைந் தேன்குருவே நாடாமற் செய்தருள்வாய்
மாளும்விதஞ் செய்யு மலம். 418

மலமைந்து மைந்திறன் மாறுமெனச் சொற்ற
நலமொன்றுங் காணேனிந் நாயேன்—பலமொன்றச்
செய்விக்க வெத்தனைநாட் செல்லுமோ சற்குருவே
வுய்விக்க வெண்ணி யுரை. 419

உரைசெய்த பாட்டி னுளவாய்ந் தறிந்து
கரைசெய்தாய் கல்விக்கடற்கென்—றுரைசெய்வார்
நாதாந்த மோன நலம்பெற்றோர் சற்குருவே
யீதாந் தமிழ்வேத மே. 420

வேதா கமமுதலா மெய்ந்நூலி னுள்ளுறையின்
சூதான மெல்லாந் துணிந்துரைத்தோய்—மீதான
முற்றவர்ப ணிந்தேத்து முத்தமவி ராமலிங்க
நற்றவவென் மேற்கடைக்க ணூட்டு. 421

நாட்டினாய் நாதாந்த நன்னிலைமே லுட்ஜோதி
காட்டினா யெல்லோருங் கண்டிடவிந்—நாட்டினிலே
ஆக்கமுட னின்றவிடத் துத்தமனே நான்பெறுவ
தேக்கமுந் தூக்கமு மே. 422

தூக்கமோ விட்டுத் தொலையவிலைப் பெண்மயலி
னேக்கமோ வென்றனைவிட் டேகவிலை—யாக்கமோ
நல்வினையி லில்லை நலநிறைந்த சற்குருவே
வல்வினையே னைத்திருப்பி வை. 423

வைத்த பதமிருக்க வாழாது மங்கையரி
சைத்தபடி சையோகஞ் சார்ந்தான்றோர்—கைத்தவற்றிற்
போதவமே செய்யப் பொருத்தினையோ ராமலிங்க
மாதவனே நின்சம் மதம். 424

மதத்தான் மடத்தான் மதியீனத் தாற்பெண்
ணிதத்தாற் றனத்தா லிசைக்கும்—பதத்தாலிங்
கந்தோ பிணிமூப்பி லாழ்கின்றேன் சற்குருவே
நைந்தேகச் செய்வாய் நயந்து. 425

நயந்தேன்வெந் நங்கையர்பா னல்லோர்பாற் சேரப்
பயந்தேன் பகருநலம் பாரேன்—வியந்து துதி
செய்கிலேன் ராமலிங்க தேசிகனே யென்செய்தே
னுய்கிலே னென்னீக்க மோ, 426

நீக்கமிலாப் பத்தி நிறைந்துமெய் யின்புறைந்து
தேக்கமிலா வின்பந் திளைத்திடவு—மூக்கமெலா
முன்னுடைய சீரே வுரைத்திடவுஞ் சற்குருவே
யென்னுடைய பேராசை யே. 427

ஆசைபோலா மூன்றனடிகீழ்த் திருவருட்பா
வோசைபோலா மென்செவியி லுற்றிடவும்—பூசைபோலா
மூன்றனடிக் கேசேயவு முன்னியநன் சற்குருவே
யொன்றனை நீக்கிவ்வுலகி லே. 428

உலகம் பொருந்து முயர்நகரி * லென்றுங்
கலகம் பொருந்தாக் கழக—திலகு
மிதமேசெய் தென்னை யிருக்கச்செய் வாயில்
விதமே யடியேன் விருப்பு 429

விருப்புநின் பாலிருக்க வீணுக்கு மென்னெஞ்
சிருப்பையுட னேநிறுத்தி யென்பாற்—றிருப்பிப்பின்
னுன்பா லுறச்செய்யி லுத்தமனே யென்னையிப்பால்
வன்பாக யார்தூற்று வார். 430

தூற்றுவா ரிவ்வுலகிற் றுட்டனென வெல்லோரு
மாற்றுவா ரில்லை யடியேனை—யேற்றுவா
னின்னுள்ள நீர்மை நினைக்கின்றேன் சற்குருவே
யென்னுள்ள நீயறிந்த தே. 431

அறிதலறி விப்பித்த லம்புவியி லன்பு
செறிதற் செறிவித்தற் செய்யு—நெறிதாற்கு
நின்போற் கருணையுளார் நின்மலனே யெங்குள்ளா
ரென்போன்ற கல்லார்க்கு மே. 432

கல்லார்கற் றூர்க்குங் கருணைசெயுங் கண்மணியென்
றெல்லாருஞ் சந்நிதிவந் தேத்திநிற்கப்—பொல்லாத
துட்டனென நீக்கத் துணிகுவையோ சற்குருவென்
னிட்டமது நீதெரிந்த தே. 433

தெரிந்தவன்போ லேநடித்துத் தீவினையே செய்து
சரிந்த சமயத்திற் றுங்கப்—புரிந்திடற்கு
நேசிக்கு மங்கையரா னெஞ்சுடைந்தேன் சற்குருவே
யாசிக்க வுண்டோணி னல். 434

---

* உலகம் பொருந்தும் உயர் நகர்-பார்வதிபுரம்.
உலகம்-பார், பொருந்தும்-வதி, நகர்-புரம்.
பார்வதிபுரம் என்பது வடலூர்.

னுறுலே வெம்மடவா ருள்ளபொரு ளைப்பறித்து
நாளும விண்ணுமென்னை நாட்டுதே—சேனுடர்
போற்றுகின்ற ராமலிங்க புண்ணியனே சற்றிரங்கி
மாற்றுவா யென்றன் மனம். 435

மனமென்ன செய்யு மதியென்ன செய்யுந்
தனமென்ன செய்துவிடுஞ் சாற்றிற்—சினமொழிந்து
மாதவநீ யென்பான் மனம்வைக்கிற் பின்வேறே
யாதரவே னின்றே யருள். 436

அருள்சேரு மன்புண்டா மாவலுறு மற்றப்
பொருள்சேரு மெந்நாளும் பொய்யாத்—தெருள்சேரும்
வஞ்சமிலா தென்னெஞ்சே வள்ளலடி யெண்ணுவையே
லெஞ்சலிலா வின்படைவை யே. 437

அடைவா யவனிமிசை யற்புதமெய்ச் சீர்த்தி
யடைவாய் வருநமனை யன்றே—புடைவாயே
சன்மார்க்க சங்கமதைத் தாபித்த சற்குருவை
நன்மார்க்க மாய்மனமே நாடு. 438

நாடுவனோ நின்னருளை நல்ல திருவருட்பா
பாடுவனோ வென்றும் பணிவனோ—தேடுவனோ
வெந்தவிதஞ் செய்தன்னை யென்பா லிரங்கவைப்பே
னிந்தவித மென்றறிகி லேன். 439

ஏனென்றென் றுன்பமறிந் தென்னையணைப் பாரில்லை
தேனென்று சொல்லிற்றித் திக்குமோ—நானென்ற
நானறியேன் சற்குருவே நற்பெண் டனக்குத்தாய்
தானறியாச் சூலுமுண்டோ தான். 440

உண்டோவென் போன்ற வுலோபிகளு தாரகுண
முண்டோநின் போன்று ருலகமதிற்—கண்டோரு
மில்லையிதைக் கேட்டோரு மில்லையெனிற் சற்குருவென்
றொல்லைவினை நீக்க வுரை. 441

உரையாற் செயலா லுளத்தினாற் செய்த
கரையா வினையாற் கலங்கித்—திரைகடல்சூழ்
பாரிற் பலவிழுந்தேன் பண்ணவனே நின்னன்பர்
சீரிற் கடையவனுச் செய். 442

செய்வார் நிதம்பூசை சேவிப்பார் நின்கழலை
யுய்வார்முத் தேகசித்தி யுற்றிடவோ—ரெய்யாத
வாழ்வுதரும் ராமலிங்க வள்ளாலிப் பேதையனைத்
தாழ்வுசெயா துண்மையின்பந் தா. 443

தாவென்று லன்றேயிந் தாவென்பா னென்றுய்நீ
தாவென்று மின்னுந் தராதவகை—யாவதென்னோ
வுன்பா லிரக்க மிலேயோ வொருசற்று
மென்பா லிலேயோ வியம்பு. 444

இயம்புவாய் வந்தொருசொல் லென்றேங்கி நின்றும்
பயம்புரியா தின்னுமிந்தப் பாரின்—வயந்தியங்கி
யாற்றலிலா தாழ்ந்தே னரசே வுனையன்பாற்
போற்றலிலா வன்போ புகல். 445

புகலுமறு கோடியாம் பொய்ச்சமய மெல்லா
மகலுமினிச் சன்மார்க்க மாகு—மிகலுதலில்
லாதே வழங்கிடுமென் றன்றுரைத்தாய் ராமலிங்க
மாதேவா * வென்றோ வழுத்து. 446

வழுத்தியவா றெப்படியும் வாய்க்குமென்று மின்று
பழுத்த வுடலடைந்தேன் பார்த்து—முழுத்தயவு
நின்பா லிலேயென்று நின்மலனே சொல்லுவதற்
கென்பாற் றுணிவோ விலே. 447

இல்லேயென்று சொல்வதற்கு மில்லே யிரண்டரையி †
னெல்லேயின்றுந் தேர்ந்தவர்க ளில்லேயுன் றன்—சொல்லேயினி
யென்னவென்று கேட்போர்க் கியம்புவேன் சற்குருவே
யின்னவகை யென்றெற் கியம்பு. 448

இயம்புவா ரேதேனு மெண்ணுவார் சொல்லி
னயம்புரியா தேங்கி நலிவார்—சுயம்புரைத்த
சத்தியவா னென்றறியார் சற்குருவே யவ்வவர்வாய்ப்
பொத்தி யிருக்கப் புகல். 449

புகலுவா யென்றுனது பூங்கழலேப் போற்றிப்
பகலுமல் லும்விழித்துப் பார்த்தும்—சகமதனின்
மாணேயத் தோர்துதிக்கு மாதவவென் சற்குருவே
காணேனென் னேநின் கருத்து. 450

---

* என்றோ-எப்பொழுதோ.

† அற்புதப் பத்திரிகையில் வந்துள்ள நாலாவது பாட்டு.

"என்சாமியெனது துரை யென்னுயிர் நாயகமே
யின்றுவந்து நானிருக்கு மிடத்தி லமர்கின்றார்
பின்சாரு மிரண் டரைநாழிகைக்குள்ளே யெனது
பேருடம்பிற் கலந்துளத்தே பிரியாமலிருப்பார்,
தன்சாதியுடைப் பெரியதவத்தாலே நான்றன்
சாற்றுகின்றே னறிந்ததிது சத்தியஞ் சத்தியமே
மின்சாரு மிடைமடவா யென்மொழி நின்றனக்கே
வெளியாகு மிரண்டரை நாழிகை கடந்த போதே"

கருத்துவந்துன் பொன்முகத்தைக் காட்டி லுலகோர்
வருத்தமுற வின்றியினி வாழ்வார்—விருத்தமிலாச்
சன்மார்க்க மெங்குந் தழைத்தோங்குஞ் சற்குருவே
துன்மார்க்கம் போகுந் தொலைந்து. 451

தொலைக்கப் பவக்கடலைத் தோணியெனும் பத்தி
நிலைக்கவைக்கா தின்பமென நேடி—முலைக்குவட்டின்
பாசங்கொண் டேற்கும் பலிக்குமோ சற்குருவந்
நேசங் கடக்க நினை. 452

நினைத்தோத நீந்திடக்கன் றேடுவான் போன்றே ‡
யினைத்துலகும் போற்று மரசே—நினைத்துதிக்க
நண்ணிமட மங்கையரை நாடில்வரு மோவதனை
யெண்ணியெனக் குட்சிரிக்கின் றேன். 453

சிரிப்பார் வியப்பார் சினமுறுவார் குற்றம்
விரிப்பா ரெனைநோக்கி மேலோர்—தரிப்பார்வன்
னெஞ்சனெனன் னும்பெயரை நீக்கியென்றன் சற்குருவே
யஞ்சலெனக் கொண்டருளு வாய். 354

வாயில்லான் வாழ்த்தி வரத்தைக் கொடுப்பதுபோற்
சேயில்லான் செல்வத்தைச் சேர்ப்பதுபோற்—றுயில்லாப்
புத்திரன்றன் போகம்போற் புண்ணியனே யன்பில்லாப்
பத்திவைத்தே னென்னினுங்கண் பார். 455

பார்வையிலான் பற்பலநூற் பார்ப்பதுபோன் றெவ்விதத்துந்
தேர்வையிலா னீள்வழக்கைத் தீர்ப்பதுபோற்—போர்வையிலா
னல்லகுளிர் காலத்தை நாடுவது போற்குருவே
வல்லவறுய் நான்வாழ் வது. 456

வாழ்வாரைக் கண்டு மனம்பொறுக்கேன் றுன்பமதிற்
றாழ்வாரைக் கண்டுந் தயையடையேன்—சூழ்வாரைத்
தூற்றுவேன் பின்னுற் றுயருறுவேன் சற்குருவே
யேற்றுவா ரில்லை யெனை. 457

எனைக்கல்வி மானெனவே யெண்ணியிறு மாப்புற்
றுனைக்கனவி லேனுமறந் துன்னு—நினைக்கரிய
விற்பனர்கள் சொல்லும் விழுப்பொருளுஞ் சற்குருவே
கற்பனையென் றெண்ணுவேன் காண். 458

---

‡ இரண்டாந்திருமுறை பழமொழிமேல்வைத்துப்
பரிவுகூர்தல் எனும் பதிகத்தில் 8-வது பாசுரம்.
"கல்லையுந்திவா னதி கடப்பவர்போல் ... ... ...
... ... திகழுமொற்றியூர்த் தியாக நாயகனே."

காணா முதலிற் கனவூ தியம்பெறவே
நாணாம னாறு நலிபவர்போற்—கோணாத
பத்திபெறா துன்றன் பதநினைந்து சற்குருவே
சித்திபெறச் செய்யுஞ் செயல். 459

செயலெல்லாந் தெய்வச் செயலென்றார் சீவச்
செயலுமுண் டென்றார் சிலவ—ரியல்வாதச்
சிந்தையது தீரச் சிறுசரிதஞ் செப்பியவென்
னெந்தையினி யென்றுகாண் பேன். 460

காணும்வெள் ளத்திற் கனகம் புதைப்பவன்போ
னாணும் விதயில்லா நங்கையர்சொற்—பூணுகின்ற
நெஞ்சினின் சீரை நிறுத்தினேன் சற்குருவே
யஞ்சினே னில்லாமை யால். 461

நில்லாத நெஞ்சை நிறுத்துவதற் குன்னாலே
யல்லாம லாராலு மாவதிலை—யெல்லாஞ்செய்
வல்லவனே ராமலிங்க வள்ளலே யன்புகொண்டு
வெல்லவகை செய்வாயென் மேல். 462

என்மேல் விருப்பமுனக் கெவ்வாறுண் டாமதற்கே
உன்மேற் கடனாக வொப்புவித்தே—னென்மேற்
பழிசொல்லிச் சற்குருவே பாவியெனத் தள்ள
வழியில்லை சொல்வாய் வழி. 463

வழிதெரிந்த சன்மார்க்க மாதவர்தஞ் சொல்லுக்
கழிவிலையென் றன்போ டவர்பா—லொழிவின்றிச்
கூடியிரு வென்றாய் † குலகுருவே கோதின்றி
நாடி யிருக்குநல நாட்டு. 464

நாட்டிவிரு கான்மாடாய் நல்லோரை நிந்திக்கும்
பாட்டினிற் பண்டிதனாய்ப் பாவியேன்—காட்டிலுறுந்
தீயவிலங் கைப்போற் றிரிகின்றேன் சற்குருவே
யாயவினை யேன்றனையு மாள். 465

* இரண்டாந்திருமுறை பழமொழிமேல் வைத்துப் பரிவு கூர்தல் எனும் பதிகத்தில் 5-வது பாசுரம் "போர்க்கும் வெள்ளத்திற் பொன் புதைப்பவன் போல்"

† நெஞ்சறி வுறுத்தல் 699 - 700

"சாதுக் களாமவர்தஞ் சங்க மகத்துவத்தைச்
சாதுக் களன்றி யெவர் தாமறிவார்—நீதுக்க
நீங்கியன்னோர் சங்கத்தி னின்றுமகிழ்ந் தேத்திநிதம்
ஆங்கவர்தாட் குற்றேவ லாய்ந்தியற்றி

ஆளாய்வெம் மாதர்க் கறிவைப் பறிகொடுத்து
மீளாது வாணாளை வீணாக்கிக்—கேளாத
கேள்வியெலாங் கேட்டுங் கெடுகின்றேன் சற்குருவே
யாள்வினையில் லேற்கு மருள். 466

அருள்செய்த வுன்கருணைக் காகுமெந் நாளு
மிருள்செய்த வென்றெனக்கு மேலும்—பொருளொன்றே
முன்னையதெக் காலு முழுச்சுகமே சற்குருவே
பின்னையதென் றுந்துன்பப் பேர். 467

பேரோங்குஞ் செல்வம் பெறுவடலூ ரென்கின்ற
தேரோங்குஞ் சித்திபுரச் சிற்சபையி—னாரோங்கு
மன்பருவந் தானந்த மார்கின்றா ரென்போன்ற
வன்பர்களு முய்கின்றார் வந்து. 468

வந்துவந்து வந்தனைசெய் மாந்தர் வடற்சபையிற்
சிந்துலைந்து சிந்திக்கச் செய்தனையே—யிந்துன்றன்
றண்ணளிக்குத் தோற்குந் தயாபரனே நின்னடியை
நண்ணமுதந் தந்தருளிந் நாள். 469

இந்நாளி லன்பா யிரங்கி யருளாயே
லெந்நாள் வருவாயென் றெண்ணிநைவே—னந்நாளில்
வந்தையந் தீர்த்த வகைமறந்த தாலென்றன்
சிந்தை நலிவொழியச் செய். 470

செய்யாத செய்கையெல்லாஞ் செய்தே னெனினுமென்ற
னய்யாவே நீபொறுக்க லாகாதோ—பொய்யாத
சிந்தையுற்றோர்க் கென்றாற் சிறப்பிற் சிறப்பெனலிந்
நிந்தையுற்றேற் கன்றே நினை. 471

நினைத்து விளக்கெரிக்க நீர்விடுவார் போன்றே *
தினைத்துணையு நல்லெனவே செய்யா—தெனைத்துதிக்க
வெண்ணிற் பலன்வருமோ யென்பாயேற் சற்குருவே
மண்ணிற் பழியே வரும். 472

வருவ தறிய மரப்பிளவி னாப்பை
யுருவிடுமோர் மந்திதனக் குண்டாம்—பெருவருத்தம்
போன்றுமட மாதர் புணர்ச்சியினாற் றாழுமெனை
யேன்றுகொள்வாய் சற்குருவே யின்று. 473

---

* இரண்டாந்திருமுறை, பழமொழிமேல் வைத்துப் பரிவுகூர்தல் எனும் பதிகத்தில் 10-வது பாசுரம் "நீர்சொரிந் தொளிவிளக் கெரிப்பவன் போல்"

இன்றுமுனுஞ் செய்தபிழை யெல்லாமுன் சந்நிதியி
லொன்றுமொளிக் காதுரைத்தே னுண்மையே—யென்றுமதை
யெண்ணாமல் ராமலிங்க வீசனே தண்டிக்க
நண்ணாமற் செய்வாய் நலம். 474

நலன்றருமி ராமலிங்க நற்குருவி னாமம்
பலன்றருஞ் செல்வம் பலவும்—புலன்றருநற்
சித்திமுத்தி சேருமிகு கீர்த்தியுண்டா மென்னெஞ்சே
நித்தியமு மன்பாய் நினை. 475

நினைத்துநிக்கு நேரத்தி னெஞ்சமெனை விட்டே
யனைத்துலகுஞ் சென்றே யலைந்தா—லெனைத்துயரம்
விட்டோடு மாறுண்டோ மேலவனே நின்னருளாற்
கட்டோடு நீக்கக் கடன். 476

கடன்பட்டுக் காலங் கழித்திடவு மென்னை
யுடன்படுத்து முண்மையினை யோர்ந்துந்—திடம்படா
தாட்படுமென் பாவிரங்கி யண்ணலே நன்மைசெய
நாட்படுமோ வின்றே நவில். 477

நவின்றெவர்க்கு மெய்போன்றி நாளுமுட லோம்பச
செவிநிரம்பக் கேட்குஞ் சிறுமை—புவியின்மிசை
யஞ்சுபுல னட்டு மழிதரற்குச் சற்குருவே
துஞ்சுமுனம் வந்துநிறுஞ் சொல். 478

சொற்கருத்தங் கற்றவர்க டோன்றச்சொன் னார்களெழுத்
திற்கருத்தம் யாருமியம்பவிலை—நற்கருத்தை
யெந்தவெழுத் திற்குமிசைத்தாயென் சற்குருவந்
திந்தவகை யென்பா யெனக்கு. 479

எனக்கோர் வரங்கேட்க வெண்ணமுண்டு நின்பா
லுனக்கோர் பெரிதல்ல வுன்னி—லெனக்கோர்
சுதந்தரமில் லாததிறந் தோன்றச்செய் விப்பாய்
விதந்தெரியா வெற்கிம்மண் மேல். 480

மேற்கதியை மேவ விரும்பாது வீழ்த்துகின்ற
சேற்கணுடை மாதர்வஞ்சச் செய்கையிலே—நூற்கதிர்போற்
சென்றே திரியுநெஞ்சாற் றேய்கின்றேன் சற்குருவே
யென்றே கடந்துய்கு வேன். 481

உய்யும்வகை யுன்னருளா லோதியதை யோர்ந்தபடிச
செய்யும்வகை யின்றித் தியங்குகின்றேன்—பெய்யும்வகை
செய்யாச்சீ தம்போற் சிறுவனைக்கை விட்டாலென்
றெய்யாத வாழ்வையடை வேன். 482

அடையும் பொருளொன்றே யாகு மதனு
னடையும் பலவாக நண்ணுங்—கடைமதங்க
ளெல்லாமொன் ருக்கு மியலருள்வாய் * சற்குருவே
யெல்லா முனதுசெய லே. 483

செயலறிவிச் சைமயெனச் செப்பவரு மூன்று
மயலிலுரு தன்பா லமையும்—பயனடையச்
செய்விப்பா யென்னிலின்று தேசிகனே யென்னையுநீ
யுய்விப்பா யென்றுறுதி யுண்டு. 484

உண்டுண் டிறங்கு மொழியினையே யுன்னருளை
மொண்டுண்டு கொள்ளு முறையுண்டோ—தொண்டுகொண்ட
மேதினியில் ராமலிங்க வித்தகனே யின்றெனக்கச்
சூதினியே னுந்தெரியச் சொல். 485

சொல்வதுநின் பாரமென்றுந் தொண்டனேன் றொல்லுலகிற்
பல்வகையாய் நின்னருளாற் பாடுகின்றே—னல்வகையி
லெப்படியோ நின்கருணை யென்குருவே யென்பாவி
யிப்படியென் றெண்ணவறி யேன். 486

அறியாச் சிறுபருவத் தாண்டதுவு மெய்யேற்
குறியாக் குறிப்பிற் குறித்த—நெறியாய்ந்து
கொள்ளா தலைகின்ற குற்றம் பொறுத்தென்னை
யெள்ளா தருள்புரிவா யின்று. 487

இன்றுபெரு மூப்பா லிளைத்துத் தளர்ந்ததனு
லென்றுநினைக் காண்பேனென் றேங்குகின்றே—னன்றுநினைத்
தெல்லோரும் வாழ்ந்திருக்க வென்னையிலம் பாட்டினிற்க
நல்லோயென் செய்தாய் நலம். 488

---

* ஆறுந்திருமுறை. பிரிவாற்றுமை. 9-வது பாசுரம்

"எம்மத நிலையுநின்னருள் நிலையிலிலங்குதல்
அறிந்தனன் எல்லாம்
சம்மதம் ஆக்கிக் கொள்கின்றே னல்லால்
தனித்துவே றெண்ணிய துண்டோ"

பொதுவில் நோக்கும்போது எம்மத நிலையும் சம்மதம் ஆக்கிக் கொள்ள வேண்டும்: இது பூரண விலக்கணம். இது சாமான்யம். இது பாரமார்த்திகம். சிறப்பிலக்கணத்தில் "ஆகக் கொள்வது" இது விவகாரம். இது விசேஷம். இவ்வுண்மையின் விரிவை வல்லவரிடம் கேட்டுணர்க.

நலனென்று நாடாத நங்கையர்பா லென்றன்
புலனென்றச் செய்ததினிப் போதும்—பலனென்றப்
பண்ணுவது நண்ணுவதும் பாடுவதுஞ் சற்குருவே
யெண்ணுவது நின்னாட்ட மே. 489

ஆட்டுவித்தா லாடுகின்றே னன்பர்களோ டென்றனையுங்
கூட்டுவித்தாற் கூடுகின்றேன் குற்றமின்றிக்—காட்டுணவை
யூட்டுவித்தா லுண்கின்றே னுத்தமனே யென்னுளத்தை
நாட்டுவித்தா னாடுகின்றே னான். 490

நானோ நலமறியா நல்குரவி னேனின்றே
னேனோ பிழைகுறிப்ப தென்குருவே—வானோரும்
வந்தனைசெய் தேத்தும் வடற்சபைவாழ் வள்ளாலென்
சிந்தனைத் தீர்ப்பாய் சிறந்து. 491

சிறந்தவர்க்கும் பல்வகைசெய் சித்தருக்கும் போத
மிறந்தவர்க்கு நின்னருளே யெண்ணித்—துறந்தவர்க்கு
மென்போன் மறந்தவர்க்கு மின்னருள்செய் யென்குருவே
நின்போன்ற ராரிந் நிலத்து. 492

நிலம்பொருள்பொன் மூன்று நிலையற்ற தென்னு
நலம்புரியா துன்னி நலியும்—புலன்றிருத்த
நின்னாலே யாகுமென்று நின்மலனே நன்றறிந்தே
னென்னாலே யாகா தினி. 493

இனியேனு மென்ற னிலம்பாட்டை * நீக்கித்
துனியே வராமற் றொலைத்தே—கனியேயாய்
நெஞ்சமதை மாற்றிநின்பா னிற்கவைத்தாற் சற்குருவே
யெஞ்சலிலா வாழ்வுவரு மே. 494

வருமவற்று ளெல்லாம் வறுமை மிகத்துன்பந்
தருவதெனச் சொல்வார் தரையி—னிருவகிக்க
வென்னான் முடியவிலை யெந்தா யினியென்பாற்
றுன்னா திருக்கவழி சொல். 495

சொல்லா நெறியையொரு சொல்லாற் றெரிவித்து
நில்லாம னீளுகின்ற நெஞ்சமே—புல்லாக
நண்ணிப் புறம்போக நற்குருவே செய்வாரிஃ
தெண்ணி யடங்கி யிரு. 496

---

* இலம்பாடு-அறிவில் ஏழ்மை.

இருவொரு மொன்று யிருந்திடுவோ மாறுற்
கருவோ டுறச்செய்யார் கண்டா—யுருவோடு
சேருகின்ற சித்திமுத்தி சித்திக்கு நங்குருவைக்
கோருகின்ற தேநலமாக் கொள். 497

கொள்ளுவார் முன்செய்த குற்றமெலா மெண்ணிநெஞ்சே
தள்ளுவா ரென்று தளராதே—நள்ளுவார்
காதரிப்பார் கட்குநமைக் காட்டிக் கொடாரென்று †
மாதரிப்பார் சற்குருவே யாம். 498

ஆம்பிரம நீயென் றறைவா ரறிவுடையோர்
நாம்பிரம மென்பவரின் நாட்டினிலே—சாம்பிரம ‡
மாமென்றார் நம்முடைய வாசிரிய ரென்னெஞ்சே
வோமென்ற வக்கரத்தை யுன். 499

உன்னுவோ நங்குருவி னோர்நாம மந்திரத்தைப்
பன்னுவோஞ் சீர்த்தியையிப் பாரினிலே—மன்னுவோஞ்
சாகாத வாழ்வதனைச் சாருவோ மென்னெஞ்சே
மாகாத லோடு மகிழ்ந்து. 500

மகிழ்ந்து வடற்சபையில் வஞ்சமின்றிச் சென்று
புகழ்ந்து துதிசெய்யிற் பொன்று—நெகிழ்ந்தமன
மாதவர்நோக் குண்டா மனமே மறவாமற்
போதவமே போக்காது போ. 501

போக்காது வீண்போது பொன்பறிக்கும் பூவையரை
நோக்காது வேறு நுவலாது—நீக்காது
சாந்தமதைச் சர்ச்சனரைத் தள்ளாது சற்குருவைப்
போந்தநெறி நெஞ்சேநீ போற்று. 502

---

† ஆறாந்திருமுறை, நெஞ்சொடு இளத்தல் 13-வது பாட்டு.
"காதரிப்பார்கட்குக் காட்டிக் கொடார் நம்மை
ஆதரிப்பாரிதோ அம்பலத்திருக்கின்றார்"

‡ ஐந்தாந்திருமுறை, தெய்வமணிமாலை 11-வது பாசுரம்.
"நாம்பிரம நமையன்றி யாம் பிரமம் வேறில்லை
... ... ...
சாம்பிரம மிவர்கள் தாம் ... ... "

போற்றுவார் நின்னைப் புகழ்ந்திடுவா ரெல்லோரு
மேற்றுவார் நின்பே ரிசைத்திடுவார்—மாற்றுயர்பொன்
னெஞ்சமென்பார் நல்லநெறி நின்றானீ நின்றிலையேல்
வஞ்சநெஞ்ச மென்பார் மதி. 503

மதித்துன்னை மேலாக வாழ்த்தியுமென் சொல்லைப்
பதித்திலா துன்றன் பழைய—சதித்தலையே
கொண்டிப்பார் கொன்னடையிற் கூடியுழல் வன்னெஞ்சே
தண்டிப்பார் சற்குருவே தான். 504

தானந் தயைபொறையுஞ் சாந்தமுறு நற்றவமு
மீனந் தவிர்க்கு மெழிற்குணமு—மோனந்தற்
போதவிழப் புந்தருவாய் போதகவி ராமலிங்க
நாதவிந்தக் காலமே நன்று. 505

நன்றுதர வித்தருண நாயடியேன் முன்வந்து
பொன்றுதலை நீங்கியிந்தப் பூவினிலே—யென்றுமொரு
தன்மையிலே நிற்குந் தரமருள்வாய் சற்குருவே
யின்மையிலா மெய்வாழ்வி லே. 506

வாழ்வாரை வாழ்விக்கும் வள்ளலென்று மிவ்வுலகிற்
றாழ்வாரைத் தாழ்விக்குஞ் சாமியென்றுஞ்—சூழ்வாரைக்
காசுப றிக்கின்ற கள்வரென்றுஞ் சொற்றவிதை *
யேசுவா ராயாம லே. 507

ஆயாம லுண்மையறி யாமலடங் காமலென்று
மாயாம னிற்க வழியறியா—தோயாமற்
பாடுபட்டோர் சற்றும் பயனறியீ ரென்றுரைத்திந் †
நாடுவிட்டீ ரேதோ நலம். 508

நலமே யறியாது நல்குரவாற் றாழ்ந்து
பலமே யொழிந்து படுஞ்சஞ்—சலமோர்ந்துங்
காணு திருத்தல் கருணையோ சற்குருவே
பேணு திருப்பதுவோ பேறு. 509

---

* இரண்டாந்திருமுறை, சிலதாஸம்வாதம். கீர்த்தனை சரணம் 5.
"வாழ்ந்தாரை மேன்மேலும் வாழச் செய்பவருக்கு .
... ... ... "

† ஆறாந்திருமுறை, "ஞானசரியை" என்றும் "வாய்ப்பறை யார்த்தல்" என்றும் வழங்கும் "நினைந்து நினைந்து" என்று தொடங்கும் பாசுரத்தை முதலாகவுடைய மாலை.

பேறுதர வெங்கும் பெருமைதர வுண்ணற்குச்
சோறுதர வெந்நாளுஞ் சோர்வில்லா—வீறுதரப்
பொய்யுடலைக் கற்பூரம் போலாக்கச் ‡ சற்குருவே
செய்யுமுன தின்னருளே சேர்ந்து. 510

சேர்ந்துசன் மார்க்கத் திருக்கூட்டத் தின்மகிமை
யோர்ந்துன் றிருவருட்பா வோதுதற்கு—நேர்ந்துறையு
முண்மைநெறி பெற்றுய்ய வுத்தமனே வள்ளலெனும்
வண்மை விளக்கவருள் வந்து. 511

வந்தருளி னலன்றி வாய்மையிலாப் பொய்வாழ்வின்
தொந்தரையே கொண்டு சுழலவரும்—பந்தவாகை
யிற்குருவா னீக்க வியலுமோ சற்குருவே
யெற்குருவாய் வந்தருள்செய் யின்று. 512

இன்றுவிரைந் தென்முன் னெழுந்து வராவிடிலோ
நன்றுவிளங் காதிந்த நாட்டினிலே—பொன்றுதற்குத்
தென்றிசையோன் முன்வந்து சீறுவனே சற்குருவே
நன்றிதுவோ சொன்ன நலம். 513

நலமடைய வேண்டுமென்று னல்லடனூ ரென்னுந்
தலமடைந்தென் னெஞ்சமே தங்கிப்—புலனடங்க
வொன்றாக நின்றிருந்தா லோங்குமென்றன் சற்குருவாற்
பொன்றா நிலைவருமப் போது. 514

போதுசெலு முன்னம் பொறிவாயிற் போகாம
லேதுவரு மோவென்றே யேங்காதிப்—போதுநெஞ்சே
சென்றுவடற் சிற்சபையைச் சேவித்தா லிங்குவரு
மென்றுமழி யாவின்ப மே. 515

இன்பமே யிங்கிரண்டா மென்பவற்றுட் சிற்றின்பந்
துன்பமே மற்றையது தூய்மையுறு—மின்பமே
நன்றுசெயு மவ்வின்ப நாடென்றாய் சற்குருவே
யென்றுமிறப் பென்ப திலை. 516

இலையென் றிரப்போர்க் கிலையென்ப தொன்றே
நலையென்று கொள்ளுகின்ற நாயேன்—றலைவணங்கி
யேத்துவதாற் சந்நிதியி லென்குருவே நின்றுகவி
சாத்துவதா லின்பமுண்டோ சாற்று. 517

---

‡ ஆறாந்திருமுறையில் அநுபவமாலையில் விளக்கியுள்ளது.

சாற்றுங்கூ டாவொழுக்கஞ் சந்நிதியில் வந்துசெய்வோர்
போற்றும் பணியும் பொருந்துமோ—வேற்றுனைத்
தின்போருஞ் சிற்சபைக்குட் செல்லுவரோ சற்குருவே
யென்போருக் கென்சொல்லு வேன். 518

சொல்லுவேன் சிற்சிலர்க்குத் தூயவனென் றுட்கருதி
வெல்லுவேன் சொல்லுகின்ற மேல்வகையிற்—புல்லுவேன
மாதர்தமைப் பொய்யான் மயக்குவேன் சற்குருவென்
றீதறவே செய்தென்னைத் தேற்று. 519

தேற்றுவேன் சில்லோரைச் செய்திடுவேன் குற்றமெலா
மாற்றுவேன் பொய்சொல்லி வன்னெஞ்சேன்—போற்றுவே
னுன்பேரைச் சொல்லி யுடலோம்பு வேன்குருவே
யென்போன்ற சற்சனரா ரீங்கு. 520

ஈங்குவந்தென் றீக்குணங்க ளெல்லா மொழித்துமிகத்
தேங்குகின்ற வென்னைத் தெளிவித்துன்—பாங்குபெறச்
செய்வதென்றே சிற்சபைவாழ் தேசிகசி காமணியே
யுய்வதென்றே நாயேற் குரை. 521

உரைசெய்தா லென்பனென வுன்னைக் குறைவா
யுரைசெய்வா ரிவ்வுலகி லுண்டோ—கரைமேல்
விடுத்தாலு நீயேயெவ் வெம்பிறவித் துன்புங்
கொடுத்தாலு நீயே குரு. 522

குருவேயென் றன்றனையே கொண்டிருந்த நாட்கொண்
டுருவேறு கொண்டதுண்டோ வுன்னி—மருவேறுஞ்
சித்திபுரச் சற்குருவே சிற்றடியேன் றொண்டுகொண்டு
பத்தியுறச் செய்வாய் பரிந்து. 523

பரிந்துநின் சந்நிதியிற் பத்திசெய் வோரைத்
தெரிந்துகொள்வா யிந்தச் சிறியேன்—புரிந்தவிதந்
தப்பிதமாய்த் துன்புற்றேன் சற்குருவே யெப்படியு
மொப்பியரு ளாததுயர் வோ. 524

உயர்வுதாழ் வென்று முறவுபகை யென்று
மயர்வின்ப மென்று மறியுந்—துயரொழித்துப்
பேதமிலாக் கற்பைப் * பெரிதருள்வாய் சற்குருவே
யேதமற வுய்வதிது வே. 525

---

* திருவாசகம், திருக்கழுக்குன்றப் பதிகம் ஆருவது பாசுரம்:
"பேதமில்லதோர் கற்பளித்த பெருந்துறைப்,
பெருவெள்ளமே ... ..."

இதுசாம் பவியா மிதுபை ரவியா
மிதுகே சரியாகு மென்றே—சதுராக
முன்னிலையி னிற்கின் முழுதுணர்வா † மென்றுரைத்த
நன்னிலையைச் சற்குருவே நாட்டு. 526

நாட்டுநெறி சிற்சபையி னன்முத் திரையாகும் ‡
வீட்டுநெறி நீதென்ற வித்தகனே—கூட்டுநெறி
செய்வித்துத் தீதகற்றிச் சிற்றடியேன் றன்னையினி
யுய்விக்க நோக்கமுனக் குண்டு. 527

† நான்காந்திருமுறை ஆளுடையவடிக ளருண்மாலை, மூன்றாம் பாசுரம் :
"மன்புருவ நடுமுதலா மனம் புதைத்து நெடுங்காலம்
என்புருவாய்த் தவஞ்செய்வார் எல்லாரும் ஏமாக்க
அன்புருவம் பெற்றதன்பின் அருளுருவம் அடைந்து பின்னர்
இன்புருவம் ஆயினைநீ எழில்வாத வூரிறையே."

சாம்பவி, பைரவி, கேசரி ஆகிய மூன்று முத்திரையில் புருவமுத்திரைதான் சாம்பவி. 'திருமந்திர'க் கருத்தையும் 'நிஷ்டானுபூதி'யின் கருத்தையும் அறிக.

திருவருட்பிரகாசவள்ளலார் 'உண்மைநெறி' எனும் வசனத்தில் விளக்கிய நான்கு ஒழுக்கங்களில் ஒன்றாகிய கரண வொழுக்கத்தில் இவ்வநுபவம் ஒன்று.

‡ சிற்சபை-புருவமத்தி.

"இந்த தேகத்தில் புருவமத்தியில் நமது ஆன்ம அறிவு என்கிற கருப்பூரத்தில் கடவுள் அருள் என்கிற தீபம் விளங்குவதாகப் பாவித்துப் பார்த்து அதில் பழகிப் பழகிக் கடவுளிடத்தே உண்மையாகிய அன்பையும் ஜீவர்களிடத்தே உண்மையாகிய காருண்யத்தையும் இடைவிடாமல் வைத்து ஓங்கார பஞ்சாக்ஷரம் ஞாபகஞ் செய்தல் வேண்டும்" என்பதும்,

"ஞானசபை என்பது ஆன்மப் பிரகாசம், அந்தப் பிரகாசத்திற்குள்ளிருக்கும் பிரகாசந்தான் கடவுள். அந்த உள்ளொளியின் அசைவே நடம். இதைத்தான் சிற்சபை அல்லது ஞானசபை என்றும் நடனம் என்றும் சொல்வது." என்பதும்

வள்ளலார் வரைந்து வைத்த குறிப்பினுட் கண்டவை.

வள்ளலார் "கையறவிலாது நடுக்கண் புருவப்பூட்டு
கண்டுகளி கொண்டு திறந்துண்டு நடுநாட்டு ... ..."
(ஆறாந்திருமுறை, பிரபஞ்சவெற்றி.) என்றும்,

நான்காந் திருமுறையில், ஆளுடைய பிள்ளையாரருண்மாலை, எட்டாம் பாசுரத்தில்,

"செவ்வகை யொருகாற் படுமதியளவே
செறிபொறி மனமதன் முடிவில்
எவ்வகை நிலையுந் தோற்றுநீ நினக்குள்
எண்ணியபடி யெலாம் எய்தும் ... ..."

என்றும் அருளிய கருத்தைத் தெளிந்துணர்க.

உண்டுன் கடமையென்பா லுற்றவிடத் தேயருளல்
கண்டுமினு நீங்காக் கவலையுள்ளேன்—பண்டுவந்து
சாவதில் லாநிலையைச் சாற்றியொளித் தாய்குருவே
யாவதென் றேவென்ற றல். 528

என்றனு லாவதுனக் கென்றுமொன்று மில்லையெனக்
குன்றனு லாகாத தொன்றுமிலை—யென்றறிந்து §
நானின்னுங் காணு நலமறியேன் சற்குருவென்
பானின் கடைக்கண்ணுற் பார். 529

பாராத பார்வையினைப் பார்க்கவைத்தும் பாரினில்யான்
கோராத தீவினையைக் கூட்டுவிக்குந்—தேராத
நெஞ்சாற் கலங்குகின்றே னின்மலனே மானிடனுக்
கெஞ்சாவாழ் வன்றோ வெழுத்து. 530

எழுத்தறியா னேடுசுமந் திட்டதுபோ லென்றும்
வழுத்தறியே னுன்னை வணங்கேன்—பழுத்த
வுடலிலக்கம் பூதிசுமந் துற்றேன் குருவே
கடலினன்னீர் விட்டதுபோற் காண். 531

விட்டதுபோற் காட்டி விடாதுள் ளிருந்துபெருங்
கட்டமதைச் செய்யுமென்றன் கன்னெஞ்சி—னிட்டமதைத்
தீர்க்கச்சா காதிருக்கத் தேசிகனே செய்வதுசன்
மார்க்கமஃதன் றோநின் மரபு. 532

மரபறியான் பேசமணம் வந்ததுபோ லுன்பா
சுரமறியா தூட்பொருளைச் சொல்லுந்—திறமறிவான்
போன்று பொருளுரைப்பேன் புண்ணியனே யெப்படியு
மேன்றுகொள்வா யென்பதறிந் தே. 533

அறியா வறிவை யறிந்திடவே கிற்கிற்
பிறியாது நின்றிடாப் பேதை—குறியாத
கூற்றி விழுக்குங் குடிகெடுத்த நெஞ்சினடை
மாற்றியருள் செய்குருவே வந்து. 534

வந்திக்கும் போதெல்லாம் வஞ்சமட மாதர்தமைச்
சந்திக்கச் செய்கின்ற சண்டிநெஞ்சைப்—பந்திக்க
வொட்டா திருக்குநல முத்தமனே யுன்றனக்கே
கட்டாயஞ் செய்யக் கடன். 535

---

§ முதல் திருமுறை, சிவநேச வெண்பா, 17-வது பாட்டு:
"உன்னால் எனக்காவ துண்டதுநீ கண்டதுவே
என்னால் உனக்காவ தேதுளது ... ..."

கடன்படுதல் தேசிகர்க்குக் கற்பில்லாச் சீடர்க்
குடன்படுத லன்றென் றுரைப்பார் * —வடன்மன்றி
னுண்மைதர வீற்றிருக்கு முத்தமனே மெய்வாழ்வின்
வண்மைதர விங்கருள்வாய் வந்து. 536

வந்துமுன் மாட்கொண்டு வாணாள் வழங்குநிலை
தந்து முணர்ச்சியிலாத் தன்மையினாற்—சிந்துகொண்டு
வீணாட் கழித்திழிந்தேன் வித்தகனே நின்கடைய
மாணாக்க ளாக்க மதி. 537

மதிக்கரும மகாதேவ மாலையிலே யுற்ற
பதிக்கணக்கை யார்பாற் பயில்வே—† னிதிக்குவையைத்
தந்துஞ்சொல் வாரில்லை சற்குருவே முன்னுருவாய்
வந்துண்மை சொல்லமனம் வை. 538

மனம்வைத்து முன்போல வந்தருளி லுன்றன்
கனம்பொய்த்துப் போமோ கருதின்—முனம்வைத்த
வுன்றன் பெருங்கருணை யோயுமோ சற்குருவே
யென்றன் பெருந்துணிவா மே. 539

துணிவுகொண்டு வன்பர்தமைத் தூற்றுத டங்கிப்
பணிவுசெய வில்லாப் படிறேன்—மணிகொழிக்குஞ்
செங்காற் ‡ குணக்கில்வடற் சிற்சபையாய் நின்னையன்றி
யிங்கா ரெனைச்சேர்ப்ப ரே. 540

சேர்க்குஞ்சன் மார்க்கசங்கத் தேசிகனே தீமையெலாந்
தீர்க்குந் தனித்தலைமைத் தெய்வமே—யார்க்குந்தற்
போதமெலாம் போக்குஞ்சிற் போதகனே யிவ்வடியே
னேதமெலாந் தீர்த்திடுதற் கெண். 541

---

* ஆறுந்திருமுறை, வாதனைக்கழிவு 6-வது பாசுரம்:

"தெரிந்த பெரியர்க்கருள் புரிதல்சிறப்
பென்றுரைத்த தெய்வமறை
திரிந்த சிறியர்க் கருள்புரிதல் சிறப்பிற்
சிறப்பென் றுரைத்தனவே ... ..."

† மஹாதேவ மாலைக்கு விருத்தி உரை.

மஹாவித்வான் அரன்வாயல் வேங்கட சுப்புப் பிள்ளையவர்கள் இயற்றினர்.

‡ செங்கால்: வடலூருக்கு மேற்கே அரை மைல் தூரத்திலுள்ள ஓர் ஓடை.

எண்ணலில் லாததமி ழெல்லாருங் கற்றதுகைம்
மண்ணளவே யென்றார் மதியுடையோர்—விண்ணளவின்
பேருரைத்த வல்லுனர்யார் * பெம்மானே யவ்வளவின்
சீருரைத்தா யுன்றன் றிறம். 542

திறமென்ப தெவ்வுயிருந் தேவா லயமே
யறமென்ப தொன்றாமீ தல்லாற்—புறமென்ப
தில்லையென்ற ராமலிங்க வீசனே யிவ்வகையெவ்
வெல்லையினுங் கண்டதில்லை யே. 543

இலைமறைகாய் போல விருந்தொளித்த வின்னு
நலையலவே யென்றழுது நாடு—மலைவலைவைத்
தீர்த்தருள்வாய் ராமலிங்க தேசிகவித் தீயனையுஞ்
சேர்த்துநின தன்பனெனத் தேர்ந்து. 544

தேர்ந்தே தெளிந்த திறலுடையோர் வாழ்வடலிற்
சேர்ந்தே தினமுந் திருச்சபையி—லார்ந்தேத்திற்
றப்புவாய் நீநெஞ்சே தண்டனையே தாங்கவரு
மொப்புவா யின்றே லுனக்கு. 545

---

* ஆறாந்திருமுறை, தோழிக்குரிமை கிளத்தல், 13-வது பாசுரம்:
"வாய்திறவா மௌனமதே யாகுமெனில் தோழி
மௌனசத்தி வெளியேழும் பரத்த பரத்தொழியும்,
தூய பராபரமதுவே யென்றால் அங்கதுதான்
துலங்குநடு வெளிதனிலே கலந்து கரைவதுகாண்
மேய நடுவெளியென்றால் தற்பரமாம் வெளியில்
விரவியிடுந் தற்பரமாம் வெளியென்றால் அதுவும்
ஆயபெருவெளிதனிலே அடங்கும் இதுமட்டே
அளப்பதொருவாறு அதன்மேல் அளப்பது அரிதரிதே."
ஷை திருமுறை, நடராஜபதிமாலை, 10-வது பாசுரம்:
"வானிலே வானுற்ற வாய்ப்பிலே
வானின் அருவத்திலே வான் இயலிலே
வான் அடியிலே வானின் நடுவிலே
முடியிலே வண்ணத்திலே கலையிலே ... ..."
அருட்பெருஞ் ஜோதி அகவல்: அடி 493—512 வரையில்.
வெளியிடைப் பகுதியின் விரிவியல், அணுவியல், பூ, திறன், கருநிலை, விரிநிலை, அருநிலை, முடிநிலை, சத்திகள், சத்தர்கள், உயிரியல், வித்தியல், சித்தியல், முதலிய ஓர்ந்துணர்க.
திருவாசகம் திருவண்டப் பகுதியில்:
"பொய்தீர் வானிற் கலப்புவைத்தோன் என்று, கட்டளையிடுவதை உய்த்துணர்க.

உனக்கெனக்கு மோர்பேத முண்டென் குருவே
யெனக்குப் பிறப்பு மிறப்பு—மனக்குற்றந்
துன்பமுமுண் டுன்றனக்குச் சொன்னவற்று ளொன்றுமிலை
யின்பமெனக் கென்றுண் டியம்பு. 546

இயம்புறு வென்றுன்ப மெண்ணி யிரங்கி
நயம்புகலு நங்கையரை நாடும்—வயந்தொலைத்து
வந்துமுன் னின்னுருவாய் வள்ளலே நின்னருளைத்
தந்துசா காவரமுந் தா. 547

தாவென்று சாகாத் தரங்கேட்கி லின்றேயிந்
தாவென்று தந்தாற் றடுப்பவரார்—தாவெங்கு †
மில்லையோ நானிருக்க வென்குருவே நிற்கிரக்க
மில்லையோ வென்பாலி லே. 548

என்பாலி லுற்றகுற்ற மெல்லாமு மெண்ணுதியே
லுன்பாலி னல்லிரக்க முண்டாமோ—வின்பாரு
முத்தரசிற் றம்பலத்தி லுற்றோய் குணமாக
வுத்தரஞ்சொல் வாயிங் குகந்து. 549

உகந்தன்பி னோடுவந்தே வும்பர்களும் போற்றுஞ்
சகந்தனில்வ டற்சபையிற் சார்ந்தே—மகங்காண
வுன்னிலழி யாவாழ்வை யுற்றிடுவீ ரென்றுயந்
நன்னிலையி னிற்கவெனை நாடு. 550

நாடுங் கருணையிலா நாட்டிலுள்ளோர் பாற்சேர்ந்து
வாடும் படிசெய்தன் மாண்பாமோ—கூடு
மகவினத்தார் ‡ சற்சபையி லானந்தங் கொண்டே
புகவெனக்கு வாய்த்திடலெப் போது. 551

போதுமீ னுக்கழிக்கும் புல்லர்கள்பாற் சேராதெப்
போதுநின தின்னருட்பா போற்றுகின்ற—சாதுசங்கத்
தாரிடத்திற் சார்ந்தென் றுஞ் சற்குருவே வுன்னைநினைந்
தோரிடத்தி னிற்கவுளத் துன். 552

---

† தாவு-இடம்.

‡ ஆறாந்திருமுறை, அருள்விளக்கமாலை, 71-வது பாசுரம்.
"உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் உடையவர்க ளெல்லாம்
உறவினத்தாரல்லர் அவர் புறவினத்தார் அவர்க்குப்
பயிர்ப்புறும்ஓர் பசிதவிர்த்தல் மாத்திரமே புரிக
பரிந்துமற்றைப் பண்புரையேல் நண்புதவே லிங்கே
நயப்புறு சன்மார்க்கம் அவரடையளவும் இதுதான்
நம்மாணை யென்றெனக்கு நவின்ற அருளிறையே ... ... "

உன்னுகின்ற தீமையெலா முற்றறிந்தா லெக்காலு
மென்னுடைய வெம்பிறவி யெண்ணலுறு—தின்னுமெனை
யெப்பிறப்பி லாழ்த்துவையோ வென்குருவே சற்றிரங்கி
யிப்பிறப்பி லென்றனையீ டேற்று. 553

ஈடேற வேண்டுமென வெண்ணித் துதிக்கவினும்
பாடேற வென்றூற் படமுடியா—காடேறு
மிக்கால மென்செய்வே னென்குருவே முன்போல
வெக்காலங் காண்பே னினி. 554

இனியிந்த மூப்பி லெனையா தரிக்குங்
கனிவுடையா ரெவ்விடத்துங் காணேன்—புனிதநினை
யல்லாற் கதியில்லை யாசானே யென்னுடைமை
யெல்லாமு நீயறிந்த தே. 555

அறிவார்க்கு மொன்று மறியார்க்கு மொன்றாக்
குறியாக்கு நின்கருணைக் கூற்றைப்—பிறிவாக
வென்பாலி லுண்டென்று லென்குருவே நின்பாலி
லன்பாரி ரக்கமிலை யாம். 556

ஆகுமென்று லாகாத தப்போதே யாகிவிடு
மேகுமென்றூற் றீவினைக ளேகுமே—யாகுமிவை
நன்றாய றிந்தவெனை நண்ணுயேல் ராமலிங்க
வென்றாயே யென்செய்கு வேன். 557

செய்வதொன்று மேலாத சிற்றடியேன் மூப்பிலினி
யுய்வதெந்த வாறென்ப துற்றறியேன்—பொய்வழுமை
நாடிநலிந் தேனருள்வாய் நற்குருவே நின்றனையே
பாடி யிருக்கும் பதம். 558

பதமாகு நான்கிலொன்றைப் § பாவியேன் பாலிற்
சதமாக வாய்த்திடற்குத் தந்தா—லிதமாக
வென்றுஞ் சுகித்திருப்பே னென்குருவே நின்கருணை
யின்றுமென் பாலில்லை யே. 559

இல்லையெனக் குற்ற ரினிய வுறவினரெவ்
வெல்லையினுங் காணே னினியேனு—மொல்லைவினை
நீக்கியாட் கொள்ளுவது நின்கடனுஞ் சற்குருவே
யாக்கிவிடு நின்னன்ப னய். 560

ஆய்வதற்கா ருவ தறிவைக் கொடுத்திருந்து
மாய்வழக்க மீண்டு மறிவித்தல்—சேய்வழக்க
மன்றே மறந்திடுதெ லாண்டவவிவ் வேழைச்சே
யென்றே யருள்செய்வை யே. 561

---

§ நான்கு தாசமார்க்கமுதல்.

செய்வாய்மை யின்னதெனத் தேறாச் சிறியேன்செய்
பொய்வாய் பிழையைப் பொறுத்தென்னை—புய்வாய்நீ
யென்றே முனம்வந் தியம்புவையேற் சற்குருவே
யின்றேமெய் வாழ்வடைகு வேன். 562

அடைவேதுவோ சித்திபெறற் கன்றே யுரைத்து
மிடையிடையே வேறுவகை யெண்ணக்—கடையேனைத்
தூண்டுகின்ற நெஞ்சின் றுடிப்படக்கிச் சற்குருவே
யாண்டுகொள்வ துன்றன்பே ரன்பு. 563

அன்பென்ப தாராயி னான்ம நெகிழ்ச்சியதா
மின்பென்ப தென்றும்பே ரின்பமாம்—வன்பதிலாப்
பத்தி மனநெகிழ்ச்சிப் பண்பென்ற சற்குருவே
சித்திக்க நின்கருணை செய். ¶ 564

செய்வாய் கருணையென்று சிந்தனையே செய்திருந்து
மெய்வாய் விளம்பவின்னு மேவிலையே—பொய்வாயி
லாழ்த்தவனு னென்றோ வரசேயென் பால்வரவு
தாழ்த்தனையென் செய்வதுநான் றான். 565

---

¶ வள்ளலார் வரைந்துவைத்த குறிப்பினுட் கண்டது:

"பக்தி என்பது மனநெகிழ்ச்சி, மன உருக்கம், அன்பு என்பது ஆன்ம நெகிழ்ச்சி, ஆன்ம உருக்கம் எல்லா உயிர்களிடத்தும் கடவுள் வியாபித்திருப்பதை அறிதலே ஈஸ்வர பக்தியாம், ஜீவகாருண்யம் உண்டானால் அருளுண்டாகும், இவ்வருள் அன்புண்டானால் உண்டாகும், அன்புண்டானால் சிவானுபவம் உண்டாகும்".

ஆறாந்திருமுறை,

"நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து
நெகிழ்ந்து அன்பே நிறைந்து நிறைந்து
ஊற்றெழுங் கண்ணீர தனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே நன்னிதியே
ஞான நடத்தரசே என்உரிமை நாயகனே என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம் ... ..."

எனும் பாசுரத்தில்,

நினைதல் மனத்தாலே, உணர்தல் அறிவாலே, (ஆன்மா) நெகிழ்தல் அன்பாலே என்று கொள்க.

ஈண்டு 'அருளமுதே' தாச மார்க்கத்தையும், 'நன்னிதியே' சற்புத்திர மார்க்கத்தையும், "ஞான நடத்தரசே" சகமார்க்கத்தையும், 'உரிமை நாயகனே' சன்மார்க்கத்தையும் தழுவிக்காட்டும்.

நான்றான் பிரமமென நாடாம லெங்கெங்குந்
தோன்றானீ யென்னுங் குறிக்கொளவு—மான்றாவுங்
கண்ணார் மயலறவுங் கர்த்தனே யென்னுவையே
லெண்ணாத வாழ்வுவரு மே. 566

வரும்பிறவி யெத்தனையோ வாய்மை யறியேன்
தரும்பிறவி தன்னிலுனைச் சற்றும்—விரும்புவனோ
விப்பிறப்பிற் சித்தி யெனக்குண்டோ சற்குருவே
யெப்பிறப்பி லோவறிகி லேன். 567

ஏனோவென் பாலி விரக்கமுனக் கில்லையிது
தானோ பெருங்கருணைத் தன்மையுயர்—வானோரும்
வாழ்த்த விளங்கும் வடற்சபையோ யென்னுடைய
பாழ்த்த பிறப்பறுக்கப் பார். 568

பார்த்தநிலை மாற்றியெனைப் பாவையரின் கண்வலையிற்
சேர்த்தவன் னெஞ்சின் செயல்முழுதுந்—தீர்த்தருளுஞ்
சற்குருநீ யேயன்றோ சற்றிரங்கிச் சிற்றடியே
னிற்குநிலை நெஞ்சை நிறுத்து. 569

நிறுத்தற்கு மென்னெஞ்சை நின்பாலிற் குற்றம்
பொறுத்தற்கு நீயேயிப் பூவி—லொறுத்தற்குப்
பேய்க்குணத்தேற் காமோ பெருமானே யின்றருள்செய்
வாய்க்குமோர் நல்ல வரம். 570

வரம்பெறலா நல்ல மகிழ்வுறலாஞ் சாகாத்
திரம்பெறலாஞ் சிற்சபையிற் சேருந்—தரம்பெறலாஞ்
சித்தியலுஞ் சித்திபுரத் தேசிகன்றன் சேவடியை
நித்தியமு நெஞ்சே நினை. 571

நினைக்குங் குருநாம நீண்மந் திரந்தீ
வினைக்கும் விடத்துக்கும் வேறு—முனைக்குமெல்லா
நோவுக்கா னீக * நுவன்மற் றிரண்டிக்குஞ்
சாவுக்கு நன்மருந்து தான். 572

மருந்து வடலூர் வடற்சபையி லுண்டு
திருந்துவோர்க் கீது திரமாய்ப்—பொருந்துஞ்
சகத்தீ ரறிமினென்ற சற்குருவே யென்ற
னகத்தீங் ககற்றி யருள். 573

அருளடைய வேண்டுமெனி லன்னியலூ னீக்கல்
பொருளடைய வேண்டுமெனிற் போற்றல்—மருளொழித்துச்
சாகா திருக்கவெனிற் சற்குருவை நெஞ்சமே
நீகாத லோடு நினை. 574

---

* ஆன்மீகம்-ஆத்மிகம்.

நினைத்தோர்க் கிராமலிங்க நின்மலனை நாளு ;
மனைத்துமல்கும் போற்றவரு மன்றித்—தினைத்துணையும்
பேதமிலா வாழ்வு பிறங்குமட நெஞ்சேநின்
யேதமறச் சொன்னே னிது. 575

இதுவே தகுதி யிதுவேசன் மார்க்க
மிதுவே சகச மிதுவே—சதுராகுங்
கையறவி லாதுநடக் கண்ணெனும்பா வின்கருத்தா
மையமிலை நெஞ்சே யினி. 576

இனியேனு மென்னுடைய வேழைநெஞ்சே யென்னைத்
தனியே நிறுத்திநீ தானுந்—துனியேது
மில்லாதென் னுள்ளடங்கி னெம்பெருமான் ராமலிங்க
வல்லா னருளே வரும். 577

வருகின்ற காலம் வருமெல்லா மென்னுந்
திருகுசொலுந் தீயவர்பாற் சேரா !—துருகிநெகி
ழன்புளரைக் கூடிநம தாசானை யெண்ணிநெஞ்சே
யின்புருவம் பெற்றுய்வை யே. 578

உய்யலாஞ் சற்சனரோ டெண்ணலாங் குண்டலிப்பாற் †
செய்யலா மெந்நாளுஞ் சித்தியெலாம்—பொய்யறியாப்
பூரணத்திற் சேர்ந்திடலாம் பூரணனுஞ் சற்குருவின்
காரணத்தை நெஞ்சே கருது. 579

கருதிலாய் நன்மை கலிச்சுமையை நொண்டி
யெருதுபோ லீர்க்கின்று யென்னை—வருதுயர
மோர்கிலையே யுன்னையடி யோடொழியச் செய்திடுவான்
றேர்கிலையென் னுசான் செயல். 580

---

527-ம் செய்யுளின் கீழ் வரைந்துள்ள குறிப்பைப் பார்க்க.

* வருகிற காலத்தில் எல்லாம் வந்துசேரும் என்று கூறுவோர் விதி வாதக்காரர். விதிவாதத்தை மதிவாதத்தால் வெல்வதே உண்மை என்பது, பெரிய புராணத்திற் கூறிய திருவாரூர்ச் சிறப்பை வள்ளலார் விரித்தெழுதிய 'மனுமுறைகண்ட வாசகத்தால் அறியக்கிடக்கும்.

"ஆவி யீரைந்தை அபகரித்தே வைத்தோதில்" என்னும் செய்யுளில் வள்ளலாரும், "சிவாயநமவென்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒரு நாளு மில்லை உபாயம் இதுவே மதியாகும். அல்லாத வெல்லாம் விதியே மதியாகிவிடும்" என்று பிறசான்றோரும் கூறியுள்ளதை ஆழ்ந்தறிக.

† இரண்டாந் திருமுறை, வெண்ணிலா, பத்தாம் செய்யுள்.

"குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலாவே அந்த
குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலாவே"

இரண்டாந்திருமுறை, பழமொழிமேல் வைத்துப் பிரிவு கூர்தம், 9-ம் பாசுரம் "நெய்யினுற்சுடு நெருப்பவிப்பவன்போல் ... ... "

செயலெல்லாஞ் சற்குருவின் செய்கையென்றெண் ணாது
நயமில்லா தேத்தி நடக்கு—மியலொழிப்பா
னென்றிருக்க நீநெஞ்சே யேமாற்று நின்றாயுன்
வன்றிருக்கை யின்றோடே மாற்று. 581

மாற்றுயர்ந்த தங்கமென்பேன் மாணிக்கப் பூணென்பே
னேற்றுகின்ற வைரமென்ப னென்னெஞ்சே—போற்றுங்
குருவென்பே னென்னிட்டங் கொண்டனையே லின்றே
னுருவழிப்பே னான்றாக வுன். 582

உன்னுகின்ற வாறின்று முன்பால் வருவேனென்
றென்னு ளிருந்தே யிழுக்கின்றாய்—நின்னுடைய
வெண்ணம் பலியா தெனதுகுரு நாதருனைத்
திண்ணந்தெண் டிப்பார் தெரி. 583

தெரிகின்ற முக்குற்றந் தீர்க்க நினைத்தே
யெரியு நெருப்பவிக்க வெண்ணிச்—சொரியுநெய்யா
லாகுமென் றெண்ணுவர்போ லாசானை நின்னையெண்ணி
யேகுகின்றேன் மாதரிடை யே. 584

இடைவிடா தெப்பிறப்பு மென்னுடனே யுன்ற
னடைவிடா தின்னு நலியக்—கடைவிடா
தாட்டுவதற் கெண்ணுநெஞ்சே யாசான்ற னல்லருளா
லோட்டுவனென் னுள்ளடங்க வுன். 585

உன்னைத் துதிக்கவுன்ன வுன்பணியே செய்யவென்று
மென்னைத் திருத்தச்செய் தென்குருவே—முன்னைவினை
நீக்கியழி யாதநிலை நீதாலுன் சித்தமென்றன்
பாக்கியமே யாகும் பலன். 586

பலன்பெறவே வேண்டிற் பரிவாய் வடலூர்
தலஞ்சென்று சன்மார்க்க சங்க—நலம்பெற்று
நன்றியுறு நெஞ்சேயென் னற்குருவைச் சிந்திக்கிற்
றென்றிசையோன் வாரான் றெரிந்து. 587

தெரிந்துந் தெரியாதுஞ் செய்தபிழை யெல்லா
மிரிந்துவிடு முண்மையிது வென்றே—புரிந்தபடி
செய்யவடற் சிற்சபையைச் சேவித்துஞ் சற்குருவை
யுய்யவகை யேனில்லை யோ. 588

இல்லையெனக் குன்னருடா னென்றாலென் செய்வேன்
தொல்லைவினை விட்டுத் தொலையுமோ—வல்லையெனக்
காவா யெனவறிந்தே னாண்டவனே நின்னாலொன்
றாவாத துண்டோ வறை. 589

அறைகின்ற வுண்மை யறநூற் றெரித்து
முறைதவறி நிற்குமுழு மூட—னிறையளவு
மெண்ணாத பாவியெனை யின்புறச்செய் வாய்குருவே
கண்ணார வுன்றனையே கண்டு. 590

கண்டாற் கலிதீருங் கண்ணுற் செவிவிருந்து
கொண்டாற் குறைதீருங் கோமானே—பண்டாகாக்
கள்ளமெலாம் போகுங் களிப்புண்டாம் ராமலிங்க
வள்ளலே யீதென் வழக்கு. 591

வழக்குண் டெனக்குனக்கும் வந்தருளிற் சொல்வேன்
கிழக்குமேற் காயாத கேடன்—சழக்குடையே
னுயினுமென் பாவிரங்கி யய்யாவே வந்தொருசொற்
றாயினுமன் பாவந்து சாற்று. 592

சாற்றும் பெரியோர் தரமறியே னன்புகொண்டு
போற்றும் பணியும் புரிந்திலேன்—தூற்றுமொரு
செய்கையுள்ளேன் சற்குருவே சித்தமகிழ்ந் துன்வாயா
லுய்கையெனக் குண்டென்னி லுண்டு. 593

உண்டாயின் முன்றவத்தா லுண்டாகு மென்றுவிதி
கொண்டா ருரைப்பார் குவலயத்திற்—கண்டாரு
நின்பாலிற் கேட்டாரு நின்மலனே நன்மதியே
யென்பாரீ துன்னுண்மை யே. 594

உண்மையெது வென்றுணு னூமையேன் பொய்யென்று
லொண்மையுட னேயுரைக்க வுண்மகிழ்வேன்—தண்மையுளேன்
வேடிக்கை யென்றுலோ விட்டொழியேன் தேசிகவென்
வாடிக்கை யின்றேயே மாற்று. 595

மாற்றுவா யென்னுடைய மாறுகொண்ட வன்மனத்தை
யாற்றுவா யென்றுன்ப மத்தனையு—மேற்றுவாய்
மேனிலையில் வாழ வியன்குருவே யின்றருள்வாய்
நானிலையி லொன்று நயந்து. 596

நயமாய்ப் பிறர்தம்மை நாளும்வஞ் சித்துச்
சுயமா நலத்திற் சுழலுங்—கயவனெனை
யாதரிப்ப துன்கடனே யற்புதவி ராமலிங்க
நீதவினி யேனு நினை. 597

நினைத்து மறைவர்க நீண்டநாட் செய்த
வினைத்துநன் றாக வறிவாய்—தினைத்துணையு
நன்றே யிராதுவற்றை நாடாமற் சற்குருவே
யின்றே தயைசெய்வை யே. 598

தயவுசெய்திவ் வேழைத் தமியேனை நோக்கிக்
கயலெய்தங் கண்ணாரைக் கண்டு—மயலெய்தும்
வஞ்சமன தைத்திருப்பி வள்ளலே நின்னருளாங்
கஞ்சமலர்த் தேனருளிக் கா. 599

காத்தருள்வா யென்றே கனவி னனவினிலு
நாத்தழும்ப நாளு நயந்துருகித்—தோத்திரித்துங்
கண்ணார நின்னைக் கனவினிலுங் கண்டறியே
னண்ணாவின் றேனு மருள். 600

அருளும் பொருளுநின்பா லன்புடையோர்க் குண்டா
மிருளுமரு ளுண்டாமஃ தின்றேற்—றெருளுடையோர்
சூழும் வடற்சபையின் றோன்றலே யென்றனையும்
வாழும் படிவாய் மலர். 601

மலர்நிறையு நந்தவன மாபலாச் சோலை
பலநிறையுஞ் சித்திபுரம் பார்த்தோர்—புலர்தலிலா
வாழ்வடைந்தார் வள்ளலே வஞ்சனினே யாதினிமேற்
றாழ்வடையா துன்னருளைத் தா. 602

தாவென்ப வர்க்குனரு டந்தாயென் றாழ்வறிந்தா
மீவென்ப துன்பாலி லில்லையோ—சாவென்ப
தென்பா னெருங்கி யிருக்கின்ற தென்குருநின்
னன்பா லிரங்கி யருள். 603

அருள்செயிலிவ் வேழைக்குன் னன்பர்தடுப் பாரோ
பொருள்குறையு மோகருணை போமோ—தெருணிறையுஞ்
சிற்சபையின் சீர்சிறிதுந் தேயுமோ சற்குருவே
நற்சபையோர் பாலென்னை நாட்டு. 604

நாட்டிற் பிழைப்பதற்கு நாயே னலிகின்ற
பாட்டிற் பெரியோர் பழிக்கவருங்—கேட்டிடிற்பின்
காணிற் கவலைமிகுங் கற்பகமே யின்றென்னைப்
பேணிற் கெடுமோநின் பேர். 605

பேர்கொண்ட நின்னரிய பேர்கொண்டா ரெம்பெரியர்
சீர்கொண்டு வாழுந் திறங்கொண்டார்—வார்கொண்ட
கொங்கையர்குற் றேவலுளேன் மீகாமானீ தெண்டித்தல்
சங்கையிலே னுக்குத் தகும். 606

தகுந்த தருணத்திற் றயையின்றி மூப்பு
மிகுந்த தருணத்தில் விழலே—னுகுந்தருண
நீயன்றி யார்நன் னிலையளிப்பார் சற்குருவே
தாயன்றி சேய்சுகமோ தான். 607

சுகந்த வுடைப்பணியுஞ் சூட்டிமெய் காட்டிச்
சகந்தனிலே மாற்றிச் சதிசெய்—தகந்தழுவு
மங்கையரா லீடழிந்தேன் வள்ளலே யிந்நாய்க்குச்
சங்கையிலா வாழ்வுண்டோ தான். 608

உண்டுன் சமுகத்தி லுற்றதுரும் புக்கெல்லாங்
கண்டு களிக்கக் கதியளிக்கப்—பண்டு
கொளப்பெறுமிந் நாய்க்கென் குறையோ வுரையா
யளப்பருஞ் சத்தியுடை யாய். 609

உடையா யுலகமெலா முன்னுடைய காற்கீழ்க்
கடையாக வென்னைக் கணிக்கப்—படையாத
வென்பாற் கடைக்கணித்தா லென்றன் குலகுருவே
யுன்பாற் பெருங்கருணை யுண்டு. 610

உண்டுபண்ணி யென்னை யுலகிற் சுமையாக
வுண்டுறங்கி வீணி லுழைப்பதற்கோ—கண்டுகொண்ட
வுன்றன் பணிவிட் டொழிந்திழிந்தேன் சற்குருவே
யென்றன்றூர்ப் பாக்கிய மே. 611

பாக்கியம ளித்தும் பலனடையா தென்றனத
யோக்கியத்தா லெல்லா மொழித்தேனின்—வாக்கியத்தைக்
கொள்ளாத துட்டக் குணத்தாற் குலகுருவே
தள்ளாம னின்னருளைத் தா. 612

அருளைத்தா வென்றுன் னடிவணங்கு மென்றன்
மருளைத் தொலைத்துன் மனங்கொண்—டிருளடையா
தொன்றுமறி யாதவெனக் கோர்குருவே யின்றருள்வா
யென்றும்பொன் றூவின்ப மே. 613

இன்பமறி யாச்சுணங்க னென்னைக் கரிப்பதுபோற்
றுன்பமறி யாது துடியிடையா—ரன்பரென
வேகாத நோய்கொண்டே னென்குருவே தீர்த்தருள்வாய்
சாகாத நின்னருளைத் தந்து. 614

தந்தநின தின்னருளைச் சற்றுமுண ராதுவெறும்
பந்தமதி லாழ்ந்து பலனிழந்தேன்—சிந்தனையைப்
பல்வகையி னின்பாற் பகர்ந்தேனென் சற்குருவே
நல்வகைசெய் தென்னைநடு நாட்டு. 615

நடுநாட்டங் கொண்ட நலத்திருக்க நெஞ்சங்
கொடுநாட்டங் கொண்டு குலைக்கப்—படுவாட்டங்
கண்டுங் கருணையிலாக் காரணமேன் சற்குருவே
பண்டுன் னடியனன்றோ பார். 616

பாரா திருக்கிற் படிறனென்னை யிவ்வுலகி
லாரா தரிப்பார்க ளன்பாகச்—சீராருஞ்
சித்திபுரச் சிற்சபைவாழ் தேசிகவித் தீயேன்பா
லெத்தினமி ரக்கம்வரு மே. 617

வருங்கால மின்றோ வறுமையுடன் மூப்புத்
தருங்கால நின்னிரக்கந் தானோ—வருங்கால
மல்லவோ நீயிஃ தறிந்திலையோ சற்குருவே
சொல்லவோ நின்றேன் துணிந்து. 618

துணிந்துன்றன் மெய்யடியார் சூழலென்றுஞ் செல்லேன்
பணிந்துன் பதப்புகழைப் பாடேன்—தணிந்துருகேன்
முன்செய்த தென்னோ முழுதறிந்த சற்குருவே
யென்செய்வே னின்றே யிரங்கு. 619

இரங்குந் தனிக்கருணை யென்றுமுண் டென்னுந்
தரங்குறையா தெற்கருளைத் தந்தாற்—சிரங்குவிக்கு
மன்பரொன் றுஞ் சொல்லா ரருட்குருவே—யாதரிப்பா
யின்பமொடென் றும்வாழ வே. 620

வாழ்ந்தோரெல் லாருமென்மேல் வாழ்ந்திடவு நல்குரவாற்
றாழ்ந்தோரெல் லாநற் றரம்பெறவுஞ்—சூழ்ந்தோங்குஞ்
சன்மார்க்க மொன்றேயெத் தாரணியுஞ் சற்குருவே
நன்மார்க்க மாகவர நல்கு. 621

நல்குரவா லின்னு நலியச்செய் தாற்சிறியே
னெல்குதலால் வீணே யுழன்றிடுவேன்—செல்குதலுக்
கெங்குமிட மில்லை யெனைக்காத்தற் கென்குருவே
தங்குமிட நின்னடியே தான். 622

தானந் தவமுதலாச் சாற்றுகின்ற வ்வைரநது
மானவையெல் லாம்பசிவந் தாலேகு—மானதினா
லென்னிலம்பா டேகுதலுக் கென்றன் குலகுருவே
வுன்னினு லாகாத தோ. 623

ஆகாத தொன்றுண்டோ வாசானே யிவ்வுலகிற்
சாகா வரமீயுஞ் சாமியே—நீகாதல்
கொண்டால் வறுமை குடிகெட்டுப் போகாதோ
பண்டா தரித்தாய் பகர். 624

பகர்வா ரடுத்தவரின் பட்டினியைப் பாரா
ரிகவாது பிச்சையெடுத் தீவார்—சுகமாக
வின்பார் வடிவுடைய வென்குருவே யென்மட்டி
லுன்பா லிரக்கமிலை யோ. 625

ஓவென்று கூவியழு தோலமிட்டுஞ் சிந்தித்துந்
தேவென்று கொண்டுந் தெரிந்திலையோ—வாவென்றுன்
பாற்றிலையே யன்பமைந்த வாசானீ முன்வந்து
தேற்றிலையே யென்னுடுலென் றீங்கு. 626

தீங்குபல செய்வோர்க்குந் தீங்குநினை யாதவுன்றன்
பாங்குபெற வென்றனக்கும் பங்கிலையோ—தேங்குபலா
மாசிறக்குஞ் சோலை வளர்வடலூர் சிற்சபைவாழ்
தேசிகவென் வெம்பிணியைத் தீர். 627

தீராத துன்பமெலாந் தீர்க்குந் தயவுடைய
பேரார் வடற்சபையெம் பெம்மானே—சீராருஞ்
செய்யபுக ழேத்துகின்ற சிற்றடியேன் றன்னையினுஞ்
செய்யவுனக் கிட்டமென்றோ செய். 628

செய்யாத தீமையெலாஞ் செய்தே னெனினுமென்ற
னய்யாவே நீபொறுக்க லாகாதோ—பொய்யாத
வுன்பா லடைக்கலமா யுற்றவெனை யிவ்வுலகிற்
றுன்பாரப் பார்ப்பதுவோ சொல். 629

சொல்லும் பொருளின் சுகமறியா துன்னருட்பா
வல்லும் பகலு மறைகின்றேன்—கல்லுங்கற்
கண்டாகச் செய்யவல்ல கர்த்தனே மெய்விளக்க
முண்டாகச் செய்வா யுகந்து. 630

உகந்தநின் மெய்யன்ப ருலகிலுண் டென்போ
லிகந்தபொய் யன்பனுனக் கில்லை—யகந்தைமிகக்
கொண்டவனென் றாலுங் குருவே யெனக்கருளக்
கொண்டவனீ யல்லையோ கூறு. 631

கூறுதற்கோ நன்னாவுங் கொள்ளுதற்கோ நன்மனமுந்
தேறுதற்கோ நல்லறிவுஞ் சேவிக்க—வீறுடைய
தேகமுமீந் துங்குருவே தேர்ச்சியிலாத் தேமொழியார்
போகமுற்றேன் யாருளரென் போல். 632

என்போற் கொடும்பாவி யெங்குமே யில்லையென்று
நின்போத மென்பா னிறுத்தாமற்—றுன்போடே
சேர்ப்பாயேற் சற்குருவே சிற்றடியேன் கட்டமதைத்
தீர்ப்பார்க ளில்லையருள் செய். 633

அருள்செய்த வாறுன் னடிபணிந்து நிற்கின்
மருள்செய்ய வென்மனமே மாற்றி—யிருள்செய்ய
வெண்ணி யிறுத்துகின்ற தென்குருவே யென்பாலி
னண்ணியுறச் செய்வாய் நலம். 634

நலஞ்செய்ய வோர்காலு நாடேன் வெறுஞ்சஞ்
சலஞ்செய் மடவரலைச் சார்வேன்—தலஞ்சென்று
பத்திசெய் வோரைப் பரிகசிப்பேன் சற்குருவே
யெத்திசையிற் சேர்த்திடுவை யே. 635

ஏதுந் தெரியாம லென்வாணாள் வீணேயெப்
போதுங் கழிக்கின்றேன் பூவினிலே—யோதுஞ்சீர்
நற்றமிழ்வே தப்பனுவ ஞனறியேன் சற்குருவே
யிற்றவனை யென்செய்வை யே. 636

செய்வதுகா ருண்யமிலாச் செய்கையே யென்னினுநா
னுய்வதெவ்வா றென்றுன்னை யுன்னுகின்றேன்—தெய்வமே
யென்றன் கொடுந்துன்ப மேகச்செய் வாயின்றே
லுன்றன்பா லென்பழியே யுண்டு. 637

பழியுண்டா மென்றேனும் பாவியின்றுன் பேகும்
வழியுண்டா மென்றென் மனங்கொண்—டிழிவுணரா
துன்பான் முறையிட்டே னுத்தமனே செய்வதினி
யென்பான் முறையே யிலை. 638

முறைசெய்தா லுள்ளபடி மூதறிவோ யென்றுங்
குறைசெய்யா யென்றெண்ணிக் கூறுங்—துறையறிந்தே
விண்ணப்பஞ் செய்துகொண்டேன் வித்தகனே யுன்றனுடைய
வெண்ணப் படிசெய் யினி. 639

இனியேனு மென்கட்டை மெண்ணிக் கதிர்முன்
பனியே யெனச்செய்திப் பாரிற்—றனியேதும்
வாராமற் செய்தெனது வள்ளலே நல்வாழ்வு
தாரா யிதுவே தகி. 640

தகியிதுவே ராமலிங்க சற்குருவே மேலா
மதியிதுவென் றோர்ந்திலா மத்தன்—பதிபசுபா
சத்தின் றரமறியாச் சார்போத ஞமெனக்கி
கத்தின் சுகமுங் கருது. 641

கருதுவோர் தீமையெலாங் காணமற் செய்வோ
யெருதுபோல் வீணுழைப்பை யெண்ணுங்—கிருதுடைய
மத்தனையாட் கொள்வதற்கு வள்ளலே யுன்சித்த
மெத்தருண மோவறிகி லேன். 642

என்கெடுவா யென்று லினுங்கெடுவேன் பந்தயமென்
றுன்கெடுவான் போன்றிந்தத் தாரணியி—னுன்கெடுவே
னுயினுமுன் வந்துவலிந் தாட்கொண்ட சற்குருவே
சேயினனென் றுளித் தினம். 643

தினமு முனைத்துதித்துந் தீவினையேன் பாவி
லினமு முனக்கிரக்க மில்லை—வனமுலவு
மந்தியெனத் தள்ளாது வள்ளலே நின்னருளாற்
றந்திடுவாய் பூசைத் தனம். 644

தனந்தந்தென் னெண்ணந் தனைமுடிக்க நல்ல
மனந்தந்துன் னன்பரென வாழ்வோ—ரினந்தந்தே
யுண்மையறி வானந்த முற்றிடச்செய் சற்குருவே
வண்மையிது நின்பேர் மணம். 645

மணந்தருநற் செந்தா மரைமலராள் வந்து
பணந்தருவா ளென்றுநிதம் பார்த்துங்—குணங்காணே
னுன்பாலெச் சத்திகளுண் டுத்தமநின் சொற்கேட்பா
ரென்பா லனுப்பாத தென். 646

என்னிதயத் துன்பமெலா மேகவிலை யென்றுநித
முன்னியழு தேங்கி யுளறுகின்றே—னுன்னிதயங்
கல்லாமோ சற்குருநீ கற்பகநீ யென்செய்கே
னெல்லாமு முன்செய்கை யே. 647

உன்செய்கை யெண்ணி யுலகமெலாங் கொண்டாடு
மென்செய்கை நோக்கமிக வேளிதமே—புன்செய்கை
கொண்டோ னெனினுங் குருவே குணமாக்க
லுண்டோ விலையோ வுரை. 648

உரைத்தேனின் னேர்நாம முள்ளபடி யுன்னிக்
கரைத்தேன் மனதையுனைக் கண்டு—நரைத்தே
னுடலமுற் றும்பிணியே யுற்றேன்மெய்ஞ் ஞானக்
கடலமுதே யின்றென்னைக் கா. 649

காக்க நினக்குக் கடமையென வேகளித்து
நீக்கக் கருதலுன்ற னீர்மையோ—வூக்கமிக
வில்லையென் றுனு மெனக்கருள்வாய் சற்குருவே
தொல்லைவினை நீக்கிச் சுகம். 650

சுகமென்ப துன்னருட்பாத் தோத்திரமே செய்தல்
மகமென்ப துன்றன் வடிவ—மகந்தனிலே
யுற்றிருத்த லென்றோதி யுன்னுகின்றேன் சற்குருவே
பற்றிநிற்குந் துன்பறவே பார். 651

பாராம லென்மேற் பராமுகமே செய்திருந்தா
லாரா தரிப்பாரிவ் வம்புவியிற்—றீராநோய்
நீற்றினு னீக்குகின்ற நின்மலனே யென்றுன்ப
மாற்றிலே னின்னே யருள். 652

இன்னே யருள்செய்வா யென்றுன்னை யேநினைந்து
மென்னை யருளா திருக்கின்றாய்—முன்னேவந்
தாண்டுகொண்ட துண்மையெனி லாண்டவனே மூன்றுருக்கொண்
டுண்டுவந்து தீர்ப்பா யிடர். 653

இடர்புரியு மாயையினு லென்மனமு முன்னம்
படர்வினையி னுன்மதியும் பாரிற்—றொடர்ந்தென்னை
நீங்கிழைக்கச் சோர்ந்து தியங்குகின்றேன் சற்குருவே
யீங்கிவற்றை நீயறிந்த தே. 654

தேன்றோய் மலர்ச்சோலை தேங்கு பலாமகிழும்
வான்றோய் வளநிறையு மாவடலூர்—சான்றோய்நின்
பூங்கழலைப் போற்றாத புன்மையினே னென்னினுமென்
றீங்ககலச் செய்யித் தினம். 655

தினமுன் றிருவடியைச் சிந்தித் திருந்து
மினமும் பராமுகங்கொண் டெண்ணு—மனமென்ன
வுன்றன்பா லுண்டோ வுயர்கருணைப் பெம்மானே
யென்றன்பான் மாத்திர மே. 656

மாத்திரையொன் றேனு மனநெகிழ்ச்சி யுண்டாயிற்
சாத்திரமு ணர்ந்ததற்குச் சாட்சியதாந்—தோத்திரஞ்செய்
தாலும் வரவில்லை யாசானே யுண்டாயிற்
சாலுமெனக் கஃதொன்றே தான். 657

தான்றோன்றி யாகத் தமியேன் பலநாளு
மான்றோன்றுங் கண்ணார் மயலினிற்க—வேன்றோன்றி
னேனோ வறிந்திலே னென்குருவே மையலற
வேனோ விரக்க மிலை. 658

இலையோ வுனக்கிரக்க மென்பாலிற் கொள்ள
மலையோ விதுவுன் மனமோ—வலையோமுன்
வந்தாண் டதுபொய்யோ வள்ளலே யின்றேலென்
சிந்தா குலமுழுதுந் தீர். 659

தீர்ந்ததினி யென்றே திருவார்த்தை யுண்டாகுந்
தேர்ந்ததனைப் பார்த்துத் தெளிமினென்றா—யோர்ந்துமத
னுண்மையொரு சற்று முணர்கிலேன் வள்ளலெனும்
வண்மையுண்டேல் வந்து வழுத்து. 660

வழுத்துந் தமிழ்வேத வண்மையருட் பாவில்
விழுத்துணையாய் வந்து விளம்பு—முழுப்பொருளின்
செவ்வையறி யார்குழுவிற் சேரா தருள்குருவே
யிவ்வைய கத்திலெனை யே. 661

என்னையறிந் துன்றனையே யென்னுள் ளறிந்தப்பா
லென்னையறி யாம லிலகுமின்பந்—தன்னையடைந்
தென்றுமழி யாம லிருக்கவருள் சற்குருவே
பொன்றுமுன மென்னுட் புகுந்து. 662

புகுந்தருண மென்று புகன்று மறைந்தே
யுகுந்தருணந் தன்னி லுதவத்—தகுந்தவரந்
தாரா தொளித்திருந்தாற் சற்குருவே யென்னையினி
யாரா தரிப்பவர்க ளாய்ந்து. 663

ஆய்ந்துணர்ந்தோர் தம்பா லடங்கிப் பணிந்தறியேன்
தேய்ந்தமனச் செல்வியர்பாற் சேர்ந்துழன்றே—வோய்ந்தவுடற்
கொண்டுநலிந் துன்பாற் குறையிரந்தேன் சற்குருவே
பண்டுன் னடிமையெனப் பார். 664

பார்த்துன் னருட்பா படித்துப் பொருள்கருதி
வேர்த்து நெகிழ்ந்துருகும் வித்தகர்பாற்—சேர்த்தனது
பொற்குரைக ழற்றுதிக்கும் புந்திதரச் சற்குருவே
நிற்குரிமை யாக நினை. 665

நினைத்து மனநெகிழ்ந்து நித்திரையு நீங்கி
யனைத்துலகும் போற்றுமென்ற னய்யா—வுனைத்துதித்து
மென்னவல நீங்கவிலை யென்றன் குலகுருநீ
யுன்னவுட னீங்கிவிடா தோ. 666

நீங்கிவிடு மெத்துன்பு நின்னைநினைந் தாலின்ப
மோங்கி விளங்குமென்ப துண்மையென் றுன்—பாங்கிலமர்ந்
துன்னென்று லூறெங்கு மோடுகின்ற தென்னெஞ்ச
மென்னென்பேன் சற்குருவே யின்று. 667

இன்றளித்த துக்கமுத வில்லையுடற் கென்மார்க்க
மொன்றுமவர்க் கென்றே யுரைத்தருளி—யின்றுமறைந்
தெங்கிருக்கின் றுயர்ந்தோ வென்செய்வேன் சற்குருவே
யிங்கிருந் தேங்குகின்றேன் யான். 668

யானெனுந்தற் போதத்தால் யாண்டுஞ் செருக்கடைந்து
மானெனுங்கண் ணார்வலையின் மாயையிலே—கோனெனவே
சென்றிழிந்து சீரழிந்தேன் சித்திபுரச் சற்குருவே
யென்றினியுன் றாளடைகு வேன். 669

அடைவேனோ வுன்றன்மெய் யன்பர் சமுக
மிடையேனோ மாதரிட மேங்கா—துடையேனோ
வுன்னைநினைந் தென்னுள்ள முத்தமனே யுன்சித்த
மென்னையினி யென்செய்வை யே. 670

என்செய்வேன் மூப்பிணு லேகாமூ லப்பிணியாற்
புன்செய்கை மாருத பூவையரான்—முன்செய்த
தீயவினை யாற்றுன்பிற் றேய்கின்றேன் சற்குருவே
யாயவினை நீக்கி யருள். 671

அருளுடைய வுன்றன்மெய் யன்பருடன் சேர
மருளுடைய வென்வினையை மாற்றித்—தெருளுடைய
சித்தியெல் லாம்விளங்குஞ் சித்திபுரச் சற்குருவே
பத்திமையென் பாலிருக்கப் பண். 672

பண்ணிறைந்த வுன்றனருட் பாநிறைந்த பாசுரங்க
ளெண்ணிறைந்த மெய்யன்பா லோதுவதற்—கெண்ணிறைந்த
கீதவகை முற்றுமெனைக் கேட்பிக்க ராமலிங்க
நாதவுளங் கொண்டருளிந் நாள். 673

இந்நாளே நன்னுளா மென்னைமுனம் வந்தாண்ட
வந்நாட் பருவமிலே யாதலினு—லெந்நாள்
வரநேரு மென்றுன் வரவையெதிர் பார்க்குந்
தரநேர்வந் துன்னருளைத் தா. 674

தாவென்று லோபமுளார் தம்வாயிற் செல்லாம
லோவென்று கூவியழு தோலமிட்டுத்—தாவென்றுன்
சந்நிதியி னிற்கத் தயவு செய்தாற் சற்குருவே
யெந்நிதியும் பெற்றுய்கு வேன். 675

உய்குவே னென்றுன் னுபயபதம் போற்றுதென்
செய்குவே னென்றுந் தியானிக்க—மொய்குழலார்
பொய்யன்பி லீர்க்கும் புலைநெஞ்சைச் சற்குருநின்
மெய்யன்பி னிற்க விதி. 676

விதிசெய்த வாறு வினையேனிற் குங்காற்
சதிசெய்யு மாதரிடை சார்ந்து—கதிசேரா
தீர்க்குங் கரட்டுநெஞ்சி னேற்றமெலாஞ் சற்குருவே
தீர்க்குங் கடமையெனச் செய். 677

செய்யவடற் சித்திபுரச் சித்தனே சிற்றடியே
னுய்யவகை செய்தலுனக் கொவ்வாதோ—மெய்யறியாப்
பெத்தருக்கின் றென்றுற் பெருங்கருணைப் பேரேறிப்
பித்தனையும் பேணலன்றே பேறு. 678

பேறிற் பதினாறாய்ப் ¶ பேசவரிப் பித்துலகோர்
தேறிற் சரியாதி செப்புவர்நல்—லாறிற்கற்
றோரென் றுணர்கின்ற வுத்தமர்பாற் சற்குருவே
சேரென் றுரைத்ததன்றோ சீர். 679

சீர்தருவா ரோயாத செல்வந் தருவார்நற்
பேர்தருவார் சாவும் பிறப்புமிலா—வூர்தருவா
ராதிவினை நோயொழிப்பா ரன்புருவ மாங்குருவை
நீதியொடு செஞ்சே நினை. 680

நினைத்தல் மறத்தலற்று நித்தியவி வேக
மனைத்துமுற் றஞ்ஞான மற்று—லெனைத்தென்றும்
போற்றுமுச் சித்தி பொருந்துமென்ற சற்குருவே
தேற்றுவித்தென் னெஞ்சைத் திருப்பு. 681

திருப்புதற்கெத் தேசமெங்குந் தேசிகனே யிங்கு
விருப்புடன்சன் மார்க்கநெறி மேவி—யொருப்படவே
போதித்த வற்றுளொன்றும் போற்றுகிலே னீயறிவாய்
வேதித்தற் செய்யும் விதம். 682

விதமடிமை செய்நேயன் மெய்யடிக ளாக்கும்
பதமறிந்து செய்விக்கப் பாரி—விதமறிந்து
சற்குருவாய் வந்துதித்த சண்முகனே நீயன்றி
யிற்குருவா செய்திடுவா ரீங்கு. 683

ஈங்குன் புகழ்சரித மெல்லுமல்லு நீங்காம
லாங்காங்கு சென்றே யறையுமென் றன்—றீங்ககலச்
செய்யாயேல் ராமலிங்க தேசிகனே யென்னருமை
யய்யாவே யீதோ வழகு. 684

அழகுடைய நின்வடிவை யன்புடன்பா வித்துப்
பழகிவரு நின்னன்பர் பண்பார்—கழகமதிற்
சேரா திருக்கினுமென் றேசிகனே நின்கடைக்கண்
பாரா திருப்பதுவோ பற்று. 685

---

¶ பதினாறு பேறு: சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கை அந்நான்காற் பெருக்கின் பதினாறு; சரியையிற் சரியை, சரியையிற்கிரியை, எனப்பெருக்குக. ... ... ..."

"ஆரூர்திருமுறை" உபதேசவுண்மை 10-வது பாசுரம்:
"நன்றும் கடந்தே யொளிர் ஞானசபாபதியே"

பற்றி யகங்கறுத்த பல்லோரைச் சன்மார்க்க
முற்றிருக்க விந்த யுகத்தினிலே—முற்றிரக்கங்
கொண்டுவந்தே னென்ற $ குருவேயந் நாளெனையாட்
கொண்டதுவு மின்றேநீ கூறு. 686

கூறுஞ்சன் மார்க்கக் குறிப்பொன்றுங் கொள்ளாமற்
றேறும்வகை யில்லையெனத் தேர்ந்துமனம்—வேறுபட
லென்ன வதிசயமோ வென்குருவே யென்றனக்கே
வுன்னமிகு நாண முறும். 687

நாணமுறு நங்கையர்பா லுளுமிணங் கிப்பிணங்குங்
கோணமிலை தன்னிற் குதிக்கின்ற—வாணவத்தைப்
போக்கிவிட்டுச் சற்குருவே பொய்யாநின் னன்பருட
ளுக்கிநலஞ் செய்வ தறம். 688

அறமே புரிகின்றோ ரனைவரகி லத்தின்
மறமே புரியு மறவன்—றிறமேதுஞ்
செய்யா வொருவனெனைச் சேர்ப்படுத்திச் சற்குருவே
பொய்யாத வாழ்விற் பொருத்து. 689

பொருத்திச்சன் மார்க்கசங்க போதனையைக் கேட்க
விருத்தியென் னெஞ்சமதை யென்பாற்—றிருத்தியொடு
மெய்யறிவின் பம்பெறவே வேண்டுகின்றேன் சற்குருநின்
செய்யதயை கொண்டின்று செய். 690

செய்யாத தீயவெலாஞ் செய்தொழிந்தேன் சேயிழையார்
பொய்யாகும் புல்குதலிற் பூரித்தே—னையாநின்
பொன்னடியைப் போற்றும் புலமையிலாப் போக்கனையு
நின்னடிமை யாக நினை. 691

நினைந்துநினைந் தென்னுமொரு நின்னதருட் பாவை
நினைந்து துதித்து நெகிழா—தெனைந்துபுலத்
திற்குதித்தே யேகுநெஞ்சை யென்குருவே யென்பாலி
னிற்குமுறை தண்டிப்பாய் நீ. 692

---

$ ஆரூர்திருமுறை, வேண்டுகோள், 10-ம் பாசுரம்:

"அகத்தே கறுத்துப் புறத்து வெளுத்திருந்த
உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத் தடைவித்திட அவரும்
இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திடுதற்
கென்றே எனை இந்த
யுகத்தே இறைவன் வருவிக்க
உற்றேன் அருளைப் பெற்றேனே."

68-ம் பக்கக் குறிப்பைக் காண்க.

நீயேயென் னெஞ்சமதை நிற்கும் படிசெய்தாற்
போயே விடுமென்றன் புன்மையெலாந்—தீயேனின்
பாதமலர் பற்றிப் பலனடைவேன் ராமலிங்க
நாதவெனக் கிவ்வரமே நன்று 693

நன்றுநின் சீரடியே நாடிநின்றும் வன்னெஞ்சா
லின்றுநின் றேங்குவது மேற்குமோ—வென்றுயர
முன்பாலி லன்றி யுரைப்பதெங்ஙன் சற்குருவே
யென்பா லிரக்கமிலை யே. 694

இலையோவென் பாற்கருணை யென்கலியைத் தீர்க்க
நிலையோவீ துன்பாலி னுரு—மலையோவா
வாழியெனப் பந்தத்தி லாழ்கின்றேன் சற்குருவே
வாழியென்று சீர்வதிப்பாய் வந்து. 695

வந்தாலிங் குன்னை மதியாரோ நின்னருளைத்
தந்தாற் றடுப்பவரார் தாரணியி—னந்தாத
சீருடைய சித்திபுரச் செல்வா வினியென்பால்
யாருடையா ரன்புடையா ரிங்கு. 696

இங்குன் றிருமுகத்தை யெல்லோருங் காணவெண்ணி
யெங்குந் துதித்தலறி யேங்குகின்றார்—சங்குந்து
நீர்த்தடஞ்சூழ் சித்திபுர நித்தியனே நித்தியமும்
பார்த்தடங்கா வின்புதரப் பார். 697

பார்த்தாற் பழவினைநோய் பாறுநின் பத்தரொடு
சேர்த்தாற் சினமாதி தீர்ந்துவிடுந்—தீர்த்தாவென்
றெத்தினமு மேத்தினு லென்குருவே முத்தியெனு
நித்தியவாழ் வுண்டே நினை. 698

நினைமறந்து நில்லா நிதிநினைந்து நாயேன்
வினைநினைந்து வீண்துன்பில் வீழ்ந்து—மனைதொறும்போய்
வாடு வதுநினைந்து மாயாது வள்ளலுனை
நாடு மதியருள னன்று. 699

நன்றென்றுந் தீதென்று நாடுகின்ற நாட்டமொழித்
தென்றென்றும் பேதமுறு வின்புளர்பாற்—சென்றென்றும்
போராத வின்பமுறப் பெம்மானே யெண்ணுவையேல்
வாராத வாழ்வு வரும். 700

வருங்காலோ வன்றி மருவுநிகழ் காலோ
தருங்கால நல்லவரந் தன்னைப்—பெருங்காத
லோடேயெக் காலமென வுன்னிநைகின் றேனென்ற
னூடே யிருக்கு முனை. 701

உனையன்றி யிந்த வுலகத்தி லென்னை
யனையென்னக் காத்திடுவ ராரே—யெனையென்றுஞ்
சஞ்சலமில் லாதிருக்கச் சற்குருவே யென்முன்வந்
தஞ்சலெனச் செய்வா யருள். 702

செய்வா யருளென்று சிந்தித் திருந்தாலும்
பொய்வாழ்விற் போந்த பொருளில்லா—மெய்வாழா
தென்பதைக்கொண் டேங்குகின்றே னென்றன் குலகுருவே
வுன்பதத்தன் பாலெவையு முண்டு. 703

உண்டு நினதடியை யுன்னுவர்க்கெல் லாமுனைக்
கண்டுமெனைக் காக்கக் கருத்திலையோ—பண்டுவந்து
பின்றருவே னென்ற பெருமானே யின்னுமெக்கா
லென்ற ருவாயென்றறிகி லேன். 704

அறியாப் பருவத் தருளியபொன் வாக்கைக்
குறியாக வித்தனைநாட் கொண்டு—நெறியாக
வென்றுவரு மென்றுநித மேங்குகின்றேன் சித்திபுர
மன்றுறைவோ யுன்றன் மனம் 705

மனத்தாற் பொருள்கருதி வாக்காற் றுதிப்போ
ரினத்தார்க்கு நன்மையுண்டா மென்றுன்—கனத்தாந்
திருவருட்பா வைத்துதித்துந் தீங்குநல மென்னு
மிருவிருட்பா டேகவிலை யே. 706

ஏகவிலை யென்னோயு மென்றன் பெருங் குறையும்
போகவிலை நானென்னும் போதமினு—மாகவிலை
நெஞ்சிற்கு மென்றனக்கு நின்மலனே யென்செய்வே
னஞ்சிக் கெடுவேனை யாள். 707

எனையாண்டா யென்ற விறுமாப்பா லேமாந்
துனையாண்டா னென்னு முறுதி—தனையாளா
வன்மையினாற் றுன்படைந்தேன் வள்ளலே நின்கருணைத்
தன்மையா னீக்கத் தகும். 708

தகுநின் பெருங்கருணைத் தன்மையென வெண்ணி
மிகுதுன்ப முற்றும் விடாம—னகுதலுட
னேகாந்த நின்றுந்தன் பேகவிலை சற்குருவே
யேகாந்தத் தெவ்வணமோ செப்பு. 709

செப்புஞ் சுகமெவையுஞ் செய்தருள்வ துன்கருணை
யொப்புவதற் கேதேனு முண்டுகொலோ—தப்புமிகும்
பாதகர்க்கும் பாலித்தாய் பண்ணவனே யென்பாலிற்
றீதகற்ற லோபெரிய தீது. 710

தீதுசெய் வோருக்குந் தீமையெண்ணு நின்மனந்தா
னேதுசெய்வோ மென்றென்பா லெண்ணுவதோ—வாதுசெய்தால்
யார்பாற் சயமுண்டா மென்குருவே வந்திதனை
யோர்பாலி னில்லா துரை. 711

உரைப்பவனு மெய்ந்நூலி னுண்மையென்ற னெஞ்சங்
கரைப்பவனுங் கல்லார்க்குங் காண—நிரைப்பவனுங்
கற்றாரிற் சேர்ப்பவனுங் கர்த்தனீ யன்றியெனக்
குற்றாரு முண்டுகொ லோ. 712

உண்டும் வெறுப்பில்லை யுன்றனருட் பாவினைக்கற்
கண்டும் வெறுப்பாங் கனிவுக்கே—தொண்டுஞ்செய்
தாரா தனைசெய்வா ரண்ணலே யவ்வெவற்றுஞ்
சேரா திருந்தேன் றெரிந்து. 713

தெரிந்ததொன்று மில்லைத் தெரிந்த படியே
புரிந்ததொன்று மில்லைப் புவியில்—விரிந்தமனந்
தன்னான் மயங்கித் தவிக்கின்றேன் சற்குருவே
யென்னாலொன் றாவ திலை. 714

இலையென்ப துண்டென்ப திவ்விரண்டு மென்னு
விலையென் றறிந்திருந்து மெண்ணு—தலைகின்ற
வீணாள்மனமடக்கி வித்தகனே யெற்கருள்வாய்
வாணாள் மகிழும் வழி. 715

வழிதெரிந்த மேலோர் மதிநிறைந்த வுன்றன்
மொழிதெரிந்து முன்னூன் முடிபென்—றழிதலிலாச்
சித்திபெற்றார் சித்திபுரத் தேசிகனே நின்னன்ப
ரத்திறமில் லேற்குமரு ளே. 716

அருளே திருமேனி யாகவந் தென்றன்
மருளே தவிர்த்து மனத்தா—லிருளடைந்து
மூவாசை வெங்கடலின் மூழ்கினேன் ராமலிங்க
தேவாவிந் நாளுமருள் செய். 717

செய்தபிழை யெல்லாந் திருவுள்ளங் கொள்ளாது
மெய்தவிரா முன்னுருவாய் மேதினியோ—ருய்வதற்கே
யன்போ டெழுந்தருளி யற்பனெனை யுங்கடைக்கண்
ணின்போடு பாரைய னே. 718

அய்யா வரசே யருட்பெருஞ் ஜோதியனே
செய்யாரு நின்பதுமச் சீர்பாதங்—கையாற்
பரிசிக்கப் பாவமெலாம் பாறும் வதனந்
தெரிசிக்கத் தீருந் திரை. 719

திரையற்று விட்டாற் செழுஞ்ஜோதி தோன்றும்
வரையற்ற மெய்வாழ்வு வாய்க்கும்—புரையற்ற
முச்சித்தி யுண்டென்றேன் முன்னுரைத்த சற்குருவே
யச்சித்தி யின்றேற் கருள். 720

அருண்மேனி கொண்டிவ் வவனிமிசை தோன்றி
யிருண்மேனி கொண்டவரை யெல்லாந்—தெருண்மேனி
யாக்குதற்குற் றேனென் ‡ றறைந்துமறைந் தாய்கடைக்கண்
ணோக்கால நுவல். 721

நுவல்கின்ற வேதாந்த நுண்மைசற்று மோராக்
கவல்கொண்டுன் சந்நிதியைக் கண்டு—மவலமுறுந்
தென்றனையாட் கொள்ள விரங்குகிலாய் சற்குருவே
யுன்றன் கருணையிது வோ. 722

இதுவே தருணமெனக் கொற்றி யூரிற்
சதுர்வேத சங்கிரகந் தந்த †— சதுருடைய
வெந்தைவரு வானென் றியம்பி மறைந்தவுன்றன்
சிந்தை யுளவறியச் செய் 723

செய்யார் வெளிவடிவோ செஞ்ஜோதித் தாணுவோ
மெய்யார்நின் மேனியியன் § மெய்யாக—வய்யாவென்
சித்தமது தேறத் திருவுளங் கொள் ராமலிங்க
வத்தவிதென் விண்ணப்ப மாம். 724

விண்ணென்பது தோவன்றி மேலோர்சொன் மெய்ஞ்ஞான
விண்ணென்பது தோவுன்றன் மெய்வடிவ—மெண்ணப்
படுவதற்கு மில்லை பரம்பொருளே நின்னை
விடுவதற்கு மில்லை விதி. 725

‡ 686-வது செய்யுட்குக் காட்டிய பாசுரம் பார்க்க.

† இதில் குறித்தவிஷயம்: திருவொற்றியூரில் வள்ளலார் தரிசனார்த்தமாகச் சென்றபோது அம்மன்சந்நிதிக்கு எதிரே ஒரு பிராமணப்பிள்ளை தோன்றி ' வள்ளலார் திருக்கரத்தில் ''சதுர்வேத சாரசங்கிரகம்'' எனும் சிறுசுவடியைக் கொடுத்து விட்டுமறைந்து விட்டனர் என்பது.

§ "செய்யார்-விசேஷம் பொருந்திய.

தாணு-ஸ்தம்பம். ஜோதிஸ்தம்பம்-ஒளி.

நின்வடிவம் வெளியோ ஒளியோ.

§ விண்-பூதவெளி; ஆகாயம்.

மெய்ஞ்ஞானவிண்-ஞானவெளி; சிதாகாசம்,

விதிசெய்த வாறில் வினையேனைக் காலுந்
துதிசெய்து கண்ணீர் துளும்பி—நதிசெய்து
நின்பாத மேநிரப்ப நேருமோ சற்குருவே
யென்பா விரங்கில்வரு மே. 726

வருமாயை வல்வினையான் மாழாந்து நெஞ்சாற்
பெருவா தனையடைந்து பேரா—திருகான்மா
டென்னவுழைக் கின்றே னிராமலிங்க சற்குருவே
சொன்னபடி செய்வதென்றோ சொல். 727

சொல்லும் பொருளின் சுகமுணர்ந்து நின்னருட்பா
வல்லும் பகலு மநுபவிக்கும்—வல்லுனரைச்
சேராது தீயர்கள்பாற் செல்லுமவ் வெண்ணமினி
வாரா வகையருளு வாய். 728

வாய்மையடக் கம்பொறுமை வண்மை யுலோபமின்மை
தூய்மை யறிவுடைமை சோர்வின்மை—காய்மையிலா
நற்குணங்க ளொன்றுமிலா நாயேனை ராமலிங்க
சிற்குணவின் றுய்யவருள் செய். 729

செய்யாத தீமையெலாஞ் செய்தவனென் றெள்ளாம
லெய்யாத வின்பளிக்க வெண்ணியென்ற—னய்யாவே
யன்றுவந் தாண்டதுபொய் யன்றெனிலிம் மூப்பிலன்போ
டின்றுவந் தாண்டருள வெண். 730

எண்ணுதியோ வன்பனென வெள்ளுதியோ பாவியென
நண்ணுதியோ வேழையென நானறியேன்—மண்ணுலகி
லொன்றுமறி யாம லுயங்குகின்றேன் சற்குருவே
யென்று நிசஞ் சொல்வா யெனக்கு. 731

எனக்கு முனக்கு மிசைந்தபொருத் தத்திற்
றனக்குநிக ரில்லாத தம்ப †—மெனக்கழறு
முண்மையெனக் குள்ளுணர்த்த வுந்தவி ராமலிங்கக்
கண்மணியே யுன்றன் கடன். 732

கடனென்னைக் காப்பதற்குக் காரணநீ யன்றிக்
கடலுலகிற் கண்டறியக் காணேன்—வடல்வெளியி
லுத்தரசிற் சித்திபுர முற்பவஞ்செய் ராமலிங்க
சித்தநினைக் கண்டுவெக்கச் செய். 733

---

† ஆரூர்திருமுறை மெய்யருள் வியப்பு. **சரணம் (க)**

“ தனக்கு நிகரிங்கில்லாதுயர்ந்த தம்பமொன்றதே”

உலக்கச்செய் தோங்க வுலகுயிர்க ளெல்லாம்
பவக்கடலைப் போக்கவிந்தப் பாரி—னவக்கருத்தை
யெல்லா மெளிதிலுற வின்னருட்பா வீந்ததினை
யல்லா லருள்பவரிங் கார். 734

ஆர்தடுப்பா ரென்வினையை யார்பொறுப்பா ரென்றீமை
யார்கொடுப்பா ராராத வானந்தஞ்—சீர்படைக்குஞ்
சித்தியெலாஞ் செய்தருளுஞ் சித்திபுரத் தேசிகனே
புத்தி நின்பா னிற்கப் புரி. 735

புரிகுழலார் பொய்ம்மயக்கிற் போந்துழன்றெப் போதுந்
திரிகுணமு மாறித் திகைக்கும்—விரிமனத்தை
யென்றாலடக்க வியலுமோ வென்குருவே
யுன்றா லடக்க லுறும். 736

உறுபிறப்பை யுள்ளீடா யுற்றுநினைக்கப்
பெறுமளவிற் பேதுற்றுப் பேசுக்—தொறுமொனது
நெஞ்சு நினைவிட்டு நெடுங்கவலைக் குள்ளாக்க
வஞ்சுமெனை யாட்கொண் டருள். 737

அருளுடையா யன்புடையா யாற்ற லுடையாய்
தெருளுடைய சித்திபுரத் தேவா—மருளுடைய
வென்போன்ற வேழைக் கிரங்கியரு ளுங்கருணை
நின்போன்றார்க் குண்டிந் நிலத்து. 738

நிலத்தும் பணத்து நெடுங்கண் மடவார்
பெலத்தும் பிரியமிகும் பேதை—நலத்தொருசற்
றேனும்விருப் பில்லாத வீடில்லா வீனமுறு
நானுநினக் காளெனவே நாட்டு. 739

நாட்டும் புருவ நடுவிளங்கு கின்றநலங்
காட்டுங் கருணைக் கடலமுதே—கூட்டுகின்ற
வூழன்றி யுண்டோவென் றோதுகின்ற வர்க்குநா
கேழன்றி யில்லென்ற தென். 740

என்றாட்டந் தன்றா லெனக்காவ தில்லையெனு
நன்றாட்ட நானுணர நாட்டுவிப்பாய்—பன்றாட்டம்
பட்டவனென் றென்னைப் பரிதபிக்க விட்டுவிடே
லிட்டமுடன் கேட்கும்வர மின்று. 741

இன்றேனு மென்கவலை யீர்த்தென்னை யேன்றுகொளற்
கென்றே யிரக்கங்கொண் டென்முன்னர்—முன்றேகம்
பெற்றுவந்து தோன்றுவையேற் பெம்மானென் றன்பமெலர்
மெற்றுமிரா தேகிவிடு மே. 742

விட்டாலுந் தொட்டாலும் வேறில்லைத் தோடமுண்டு
கெட்டாலு நட்டமுறுங் கேள்வியில்லை—கட்டாற்
கனத்தாலு மென்ற கவிபுரிந்த வாறென்
மனத்தா லுறுந்தீமை மாற்ற. 743

மாற்றுயர்ந்த தங்கமென்பேன் மாமணியென் பேனென்சொல்
லேற்றுவந்தா லென்னெஞ்சே யென்றுகவி—சாற்றுந்
திறமருட்டுந் தன்மை தெரியேன் குருவே
யறமருளென் னெஞ்சடக்கு மாறு. 744

ஆறுசடை யம்புலியு மாரனவ்வி * யுங்கரந்து
வீறுமெய்ஞ் ஞான வியன்குருவாய்க்—கூறு
மருட்பா வரலாற்றை யன்றேப்ப லேனென்
னிருட்பா டகற்றுவதற் கே. 745

அகலவெளி லன்பில் லடியே னகந்தை
புகலவரும் பொய்மிடியும் போந்த—சுகமருவுஞ்
செய்ய திருவருட்பா சிந்திக்கச் செப்பியவா
றய்ய விரும்ப வருள். 746

அருளிலையே லய்யா வடியேனுஞ் ஞான
மருளினேன் மானமின்றி வாழ்வேன்—தெருளில்லார்
பாற்றொழிலைப் பண்ணிப் பரதவிப்பேன் முன்னிருக்குங்
கீற்றொழிந்த நெஞ்சிற் கிடந்து. 747

கிடந்துபவக் கீழ்க்கடலிற் கீழனந்த சன்மங்
கடந்துன் கருணைதருங் கண்ணன்—மடந்தவிர்ந்த
மானிடனாய் யாநிலத்தில் வந்துதித்து மாதவநா
னேனிடரி லேங்குவ தே. 748

---

* ஆரல்-நெருப்பு, நவ்வி-மான்.

ஆறாந்திருமுறை, இரங்கல், 8-வது பாசுரம்:

"கட்டாலுங் கனத்தாலும் களிக்கின்ற பேயுலகீர்
கலை சோர்ந் தாரைப்
பொட்டாலுந் துகிலாலும் புனைவித்துச் சுடுகின்றீர்
புதைக்க நேரீர்
சுட்டாலுஞ் சுடுமேது கண்டுமேதுடம்பு துடியா
தென் சொல்லீர் நும்மைத்
தொட்டாலும் தோடமுறும் விட்டாலும் கதியிலை
மேற்சூழ் வீரன்றே."

எங்குகின்றே னென்செய்கே னென்குருவே யென்பாவ
மோங்குகின்ற தூரெல்லா முண்மையிதே—தாங்குகின்றோர்
நின்னையன்றி யாருமிலை நீடுலகி லாதரந்தா
னன்னையின்றிச் சேய்க்கே தறை. 749

அறையுஞ் சுருதிகளி னந்தரங்க மெல்லாங்
குறையின்றிக் கூறுகின்ற கோதிற்—றுறைமுழுது
நின்னருட்பா வொன்றி னிலக்கவைத்த நின்பெருமை
யென்னறிவே னென்னுத னே. 750

நாதனெனை யாட்கொண்டா னுனஞ்சே னென்னெஞ்சே
வாதனையி லென்னை மடக்கி வைக்குஞ்—சூததனை
நீறுசெய்வா னின்னை நிலைக்கவையா னின்னிழப்பைக்
கூறுமருட் சித்த குரு. 751

சித்தகுரு வேயுன்றன் சித்தந் திரும்பிவிட்டா
லித்தரையோ ரெல்லா மிறப்பறுவார்—செத்தவர்க
ளெல்லா மெழுவா ரிளமையுறு வார்முதியோ
ரெல்லாநின் னேர்கருணை யே. 752

கருணையுண் டெங்கே கடவுளுண் டங்கே
மருணையு மாரகமு மாயுந்—தெருணையா
தென்றருளி ராமலிங்க வீசனே யென்பாலி
லென்றவ் விரக்கம்வரு மே. 753

வரும்போது நற்காலம் வாழ்வு முழுதுந்
தருமின்றேற் றூழ்வெல்லாந் தானே—வருமென்பார்
காலங் கடவுளென்போர் காருண்ய சற்குருவே!
தாலந் தனில்மதியேன் றூன். 754

தான்றனக் கேயுவமை சாற்றுவதல்லாற் பிறிது
தான்றரவேற் காதபெருந் தன்மையுறும்—வான்றெரிக்குஞ்
சித்திபுரச் சிற்சபையைச் செய்தோனை யென்னெஞ்சே
நித்தியமுங் காண நினை. 755

நினைவார் பவமறுக்கு நின்மலனே யென்றுந்
தனையோ ரணுவாகத் தாழ்த்து—மனைவோர்
குறையே தவிர்த்தருளுங் கோமானே யென்றன்
முறையேற்று வந்தருளென் முன். 756

முன்னாள் வலிந்துவந்தென் முன்றோன்றி யென்னாளை
நன்னாளா யாக்கு நலந்தெரித்து—மென்னாளைப்
பொன்னன்பர் பால்வீணே போக்கினேன் சற்குருவே
வுன்னன்பெற் குண்டோ வுரை. 757

உரைமனங்கட் கெட்டா வொருநிலையி னிற்கும்
வரையகன்ற வாழ்வெனக்கு வாய்க்கும்—வரைநினது
சிற்சரணச் சீர்த்திதனைச் சிந்திக்கச் செய்யவடற்
சிற்சபையோ யுன்றனருள் செய். 758

அருள்செய்வ துன்ற னருங்குணத்தின் றன்மை
மருள்செய்வ தென்றன் மடமை—யுருள்சகடக்
காலுன்னுஞ் செல்வங் கதியென்போர் மாட்டிறுமென்
பாலுன் னருட்கடைக்கண் பார். 759

பார்வையிலாக் கண்கள் பயனறியாப் பாடலொரு
நேர்மையிலா வாழ்க்கை நிலவுதல்போற்—சீர்மையிலாத்
தீயேனைச் சீடனெனச் செப்புவதாந் தேசிகவெற்
காயவகை நின்கடமை யாம். 760

கடனில்லா வாழ்வுங் கடுமையிலாச் சொல்லு
மடமில்லா நுண்ணறிவு மண்ணி—லடமில்லா
நற்குணமு நல்லோர்க ணட்புமென்றன் சற்குருவே
யெற்குவரச் செய்தலியல் பே. 761

இயல்புமனி தப்பிறப்பிற் கீதென் றறியேன்
மயல்புரியு மாதரிடை மாய்வேன்—செயலொன்று
வாக்கொன்றுக் கொள்வேன் வடற்சபையோய் நல்லவனு
யாக்குவது நின்பார மாம். 762

பாரமா யிவ்வுலகிற் பாவியே னேன்பிறந்தேன்
தீரமா நின்னடியைச் சிந்தைசெய்யே—னாரமார்
நின்னடியார் தம்மை நினைந்தறியேன் சற்குருவே
யுன்னடிய னுகவுளத் துன். 763

உன்னிலையு மென்னிலையு மொன்றே யெனுங்கவியி
னன்னிலையை யென்றெனக்கு நல்குவாய்—தன்னிலையி
லுள்ள மொருங்கிலெனை யோதியவி ராமலிங்க
வள்ளலெனை யாட்கொள்ளு மாறு. 764

மாறுதற்கு மார்க்கமின்றி வன்மனத்தின் வஞ்சனையாற்
றூறுதலிற் றுன்புறைந்த துட்டனெனை—வீறுவடற்
சித்தகுரு ராமலிங்க தேசிகனே யித்தருணஞ்
சித்தமுவந் துன்றனருள் செய். 765

---

ஆறுந்திருமுறை, சம்பந்தர் தோத்திரம்:

"உலகியலின் உறுமயலின் ... ...
உன்னிலையும் என்னிலையும் அன்னியமிலைச்
சிறிதும் உற்றறிதி என்ற ஒன்றே!

செய்யநின் செங்கமலச் சேவடியைச் சிந்தனைசெய்
துய்யநினை வுண்டாக வுன்னருளாற்—றுய்யவரு
ணையமுளோர் நீவெட னின்மலனே யென்னுடைய
தியவுளந் தன்னைத் திருப்பு. 766

திருப்பியெனைத் தீநெறியிற் செல்லாத வண்ணம்
விருப்பமொடு மெய்ந்நெறியின் மேவி—யொருப்படமே
லேற்றுவது மென்போன்ற வேழையரைச் சற்குருவே
தேற்றுவது முன்றன் செயல். 767

செய்யுந் திருப்பணியைத் தேராரைச் சேர்ந்துகொடும்
பொய்யுந் திருகும் புகல்கின்ற—வெய்யும்வேற்
கண்ணாரிற் காமுற்றேன் கர்த்தனே சொப்பனத்து
மெண்ணு வகையருள வெண். 768

எண்ணி யிருக்கின்ற வெண்ணமெலா மீடேற்ற
நண்ணியிந் நாட்டில்வரு நாளெதுவோ—விண்ணியல்விட்
டெல்லவரு மின்படைதற் கென்குருவே சொப்பனத்துஞ்
சொல்லவர லென்றே துணிந்து. 769

துணிந்துரைத்தேன் தூய்மையிலாத் துன்மார்க்க முற்றும்
பணிந்தறியாப் பாவியேன் பாவிற்—கணிந்தறியாச்
சித்தனைத்துஞ் செய்யவல்ல தேசிகனே தீதொழித்தற்
கெத்தனைநாட் செல்லுமறி யேன். 770

அறியா தறிந்து மனைவோர்செய் குற்றங்
குறியாது கொள்ளுங் குணமாய்ப்—பிரியாதிங்
கங்கிருந் தாண்டருளு மாண்டவநிற் கன்பில்லேன்
பங்கினினீ யின்றே பகர். 771

பகர்தமிழ்வே தப்பனுவற் பார்த்துப் படிக்குந்
தகவறியேன் சற்றுந் தமியேன்—சகமதனிற்
பொய்ந்நூற் புகன்றுபல போதொழித்தேன் சற்குருநின்
மெய்ந்நூல் விளங்க விளக்கு. 772

விளக்கெரித்து நீரால் வியனேற்றி யூரி
லளக்கரிய சீர்த்தி யடைந்தோய்—¶ களக்கமுறு
மென்றனஞ் ஞானவிரு ளீர்த்தென்னை யாண்டுகொளற்
குன்றனு லாகாத தோ. 773

ஆகாத தொன்றுண்டோ வற்புதனே யம்புவியிற்
சாகாத தன்மையினைச் சாற்றியவா—தேகாதி
மூன்றிலொன்றே னுங்கொடுக்க முன்வந்தி லேனென்னை
யென்றுகொளற் கெவ்வண்ண மே. 774

---

¶ இதிற் குறித்தவிவரம் வள்ளலார் சரிதத்திற் காண்க.

எவ்வண்ண மென்குருவே யேழையெனே யேன்றுகொளு
மவ்வண்ண மாவதொன்று மாய்ந்தறியேன்—தெவ்வண்ண
நீக்குதற்கிந் நீடுலகி னோர்ந்தவனே நின்னடிய
ளுக்குதற்கெவ் வண்ண மறை. 775

அறைவார்க் கருள்வா யரும்பதத்தை யன்றுன்
மறைவாக் கதனுன் மலர்ந்த—முறையாறு
மன்போடு பாடற் கறியேனை யாள்வதற்கு
நின்போல்வா ருண்டோ நிகழ்த்து. 776

நிகழ்கின்ற காலத்தி னிற்குநிலை யின்றி
யிகழ்கின்ற விவ்விடம்விட் டேகிப்—புகழ்கின்ற
வெவ்விடத்தி லெயிருக்க வெண்ணுவையோ சற்குருவே
யவ்விடத்தை யன்போ டருள். 777

அருள்வடிவா யன்றுவலிந் தாண்டதுபோ லின்று
மிருள்வடிவி லேங்குகின்ற வென்முன்—குருவடிவாய்க்
கண்டுவக்க வென்றன் கனவினில்வந் திவ்விடந்தா
னுண்டுனக்குச் செல்லென் றுரை. 778

உரைசெய் தொருநெறியி னூடிருக்க முற்றுங்
கரைசெய்தென் கன்மனத்தைக் கண்டித்—துரைநெகிழப்
பண்ணிவைத்தா னின்னருட்குப் பாரமோ சற்குருவே
யெண்ணியவா றுள்வா யெனே. 779

எனையடிமை யாக்கி யிடந்தந் திருக்க
வுனையன்றி யுன்றுணை யுண்டோ—தினையளவு
மில்லையென்றே நிதமு மேத்துகின்றேன் சற்குருவே
வல்லையே வுன்றன் மனம். 780

மனமென்ன செய்யு மதியென்ன நாடு
முனமென் வினைசெய் முடிபே—யினமென்னை
யாழ்த்துவதென் றூற்றுன்பி லாகாமியவாதந்
தாழ்த்துவதெத் தன்மையதைச் சாற்று. † 781

சாற்றும்பே ரண்ட சராசரங்க ளெல்லாமும்
போற்றுஞ் சிவஞான போதகனே—கூற்றுவனை
வாரா வகைசெய்யும் வள்ளாலென் பான்மரணஞ்
சேரா வகையையருள் செய். 782

---

† இரண்டாந் திருமுறை, அபராத விண்ணப்பம். 10-ம் பாசுரம்:
" வாழா மனத்தின் வழிசென்று... ... ..."
வாழாமெனில் எம்பெருமானே.

அருள்செய்வா யென்றே யனுதினமு மேத்தித்
தெருள்செய்நின் சேவடிசிந் தித்து—மிருள்செய்யு
மத்தமனத் தால்வாடன் மாண்பாமோ ராமலிங்க
வுத்தமநின் பேரருணீ தோ. 783

ஈதென்ன விந்தை யிருதலைகொ ளெறும்பின்
தீதென்னத் தேங்கித் திகைப்புற்றேன்—சூதென்னும்
பெண்டனத்தாற் பெம்மாநின் பேரருளே யிவ்வேழைத்
தொண்டனுக்கே யுற்ற துணை. 784

துணையென்று துட்டமனத் தோகையரின் வன்கண்
கணையொன்றிக் காலங் கழித்தே—னிணையொன்றுஞ்
செல்லாத சித்திபுரச் சிற்சபைவாழ் தேசிகநீ
யல்லாற் றயைசெய்வா ரார். 785

அருள்ளா ரற்பனெனை யாதரிக்க வம்புவியிற்
சீருள்ள சித்திபுரத் தேசிகனே—பேருள்ளா
ராணிப் பொன்னென்ற வருங்கவிசொல் ராமலிங்க
மாணிக்க மேயுள் ளுவந்து. 886

வந்துவடன் மாபுரத்தில் வாழ்ந்திருந்தென் வஞ்சமனச்
சிந்தலைத்துச் சிற்சபையைச் சேவித்தெச்—செந்துவுக்குந்
தீங்கெதுவுஞ் செய்யாத் திறமருளல் தேசிகநின்
பாங்கெனவென் பாலிற்கண் பார். 887

பார்க்குமிடம் பாராமற் பார்நடையிற் பாவிமனஞ்
சேர்க்குமிதன் றீச்செயலைத் தீர்த்திடற்கே—யார்க்குமிங்கே
யாவதிலை யென்றறிந்தே னாண்டவனே யன்புகொண்டு
நீவலிதி லின்றே நினை. 788

நினைப்போலிந் நீலகிலி னீதியுள்ளோ ரில்லை
யெனைப்போ லனீதியுள்ளோ ரில்லை—நினைப்போது
மெண்ணடங்கா வென்ற னிழிவொழித்தற் கென்குருவே
வுண்ணடங்கொ ளுன்னருளுக் குண்டு. 789

உண்டுறங்கி யுள்ளநா ளொன்றொன்று யோடுவதைக்
கண்டுகலங் காவிக் கடைநாயேன்—றொண்டுலகி
னன்னேய நாடி நடந்தலுத்தேன் ராமலிங்க
வன்னே யபய மருள். 790

அருளரசிவ் வம்புவியி லாளுவதற் கின்றே
மருளழிசெய் வாழ்வு வழங்கத்—தெருளடையுங்
கால மெனக்கழறிக் காணு தொளித்தாயெக்
காலமெனக் குள்ளறியக் காட்டு. 791

காட்டும் பொருணிலையுங் காண்பானுங் காட்சியும்போய்
நாட்டு நடுநிலையை நாட்டுதற்குக்—கூட்டுகின்ற
வாரினிய னீயா மனங்கொண்டேன் செய்யகழற்
சீரியலைச் சிந்திக்கச் செய். 792

செய்தாலுந் தீமையெலாந் தீர்த்துப் பொறுத்தருள்வான்
மெய்தாவும் வாழ்வு மிகக்கொடுப்பான்—பொய்தாவு
நெஞ்சேயென் னேயநெறி நின்று னிமிடத்தி
லஞ்சேலென் பானுண்ட வன். 793

ஆண்டவனீ யன்புடைய வாசானு மப்பனுநீ
காண்டகுமெய்த் தெய்வமுநீ கண்மணிநீ—மீண்டவத்திற்
செல்லாதென் சித்தமதைச் செய்விக்குஞ் சித்தனுநீ
வல்லானீ வெற்கெய்ப்பில் வைப்பு. 794

வைப்பாம் வகைவிட்ட வஞ்சநெஞ்சை வாழ்த்திமிகு
கைப்பாங் கடலுலகின் காரியமே—வொப்பாக
வெண்ணாதே யென்றுரைத்து மேற்கவிலை யென்குருவே
வுண்ணாடி நிற்கவுளத் துன். 795

உன்னாதன் னுங்கதியை யுன்னருளா லுற்றிடலா
மென்னாலே யெஞ்ஞான்று மேலாதே—பன்னாளுந்
தோத்திரமே செய்யாத துட்டனே னென்னினுஞ்சற்
பாத்திரனாய்ப் பாவித்துப் பார். 796

பாவித்துப் பார்க்கப் பதிநிலையைப் பற்றவிலை
சேவித்துச் செப்புகினுஞ் செல்லவிலை—யாவிக்கோ
ராவியே யென்மனத்தி னுக்கமதை யார்க்குரைப்பேன்
பாவியேன் வன்பரிதா பம். 797

பரிதாபம் பாராப் பகையுளதோ வென்பா
லரிதாகு நின்னருட்கா காதோ—சரிதானோ
வண்டினரைக் காப்ப தறமென்றே யாசானுக்
கெண்டிசையுஞ் சொல்வா ரிது. 798

இதுவென்று லஃதென்பே னின்றே லிதுவென்று
சதுராகச் சாற்றுஞ் சழக்கன்—பொதுவென்று
கொண்டதே கோலமெனக் கூறுவேன் சற்குருவே
விண்டதேன் தீர்க்க விரைந்து. 799

விரைந்துன் விரைகழலின் மேதக்க சீர்த்தி
கரைந்து நினைந்துமினுங் காணேன்—திரைந்துடலம்
பொன்றுமுனம் வந்துனது பொன்முகத்தைக் காட்டிடுதே
லென்றுநின துள்ள மிரங்கு. 800

இரங்குவது முண்டோ வெளியேனை யீர்க்குங்
குரங்குமனக் கொள்கை குணமோ—வரங்குலவு
நின்றனக்கிந் நேர்மை நிலைக்குமோ நின்மலனே
யென்றனக்குஞ் சந்தேக மே. 801

தேகமுச் சித்தித் * திகழுவருஞ் சிற்சபையி
லேக விரங்கியழ வென்னுமுறை—யேகவிட்டு
பொய்ப்பதியைப் போற்றினேன் புண்ணியனே பூப்பதியு
மெய்ப்பதியை மேவ விரும்பு. 802

விரும்பும் விடயமெலா மெய்யா விளங்க
வரும்புனின் வஞ்சமெலா மாற்றி—பெரும்புனி
லுண்ணிலவுஞ் சிற்சபையி னுத்தமனே யுள்ளிநெஞ்சே
விண்ணிலகு மெய்மே விடும். 803

விடும்வே தனையெல்லாம் வீண்விடயத் துற்ற
படும்பாடெல் லாமொருங்கே பாழாங்—கொடும்பாவ
மெல்லா மிரிந்துவிடு மென்குருவாம் ராமலிங்க
வல்லானை நெஞ்சே வழுத்து. 804

வழுத்து மலவுடலின் வண்ண மறியே
னழுத்தும் பவக்கடலுக் கானேன்—முழுத்துன்பம்
பெற்றேன் பெருங்கருணைப் பெம்மானே பேதையெனு
ளுற்றே யிருப்பதுநான் ரே. 805

நன்றென்றுந் தீதென்று நாட்டிற் பெருஞ்செல்வ
மின்றென்று முண்டென்று மில்லாம—லென்றுமொரு
நேர்மையாய் நிற்கு நிலையருளச் சற்குருவே
யார்மனமி ரங்கிடுவா ரிங்கு. 806

இங்கேயென் னப்ப னெழுந்தருளி யித்தருண
நங்கேத நாடாதிந் நாட்டினிலே—யெங்கேயுஞ்
சிற்சுகமே செய்வனென்ற † தேசிகநீ செப்பியவா
றெச்சுகமு மின்னுமிலை யே. 807

இலையோநல் லெண்ண மிலையோநற் கேள்வி
யிலையோநன் னேய மெனக்கே—யலைவேது
நீங்கவிலை யென்செய்வே னின்மலனே நின்னருளே
யோங்கவிலை யென்பா லுறைந்து. 808

---

* முச்சித்தி: உருவச்சித்தி, அருவச்சித்தி, அருவுருவச்சித்தி.

† ஆரூர்த்திருமுறை, உறுதிகூறல் எனும் பதிகம்.

உறைந்துலகின் முற்சனன வூழ்வினையா லுண்மை
மறைந்துமன மாயையினே மாறி—நிறைந்த
சவலையெனத் தேய்ந்துந் தயவிலையே யென்றுங்
கவலையுறு மென்னிலையைக் கண்டு. 809

கண்டதெலாங் கேட்டதெலாங் காணனீர் கற்பனையே
யுண்டதெலா மூர்மலமே யோர்குறையே—கொண்டதெலா
மாமென்ற $ ராமலிங்க வாசானே நின்னருளாற்
போமென்று லெத்துயரும் போம். 810

போமோ புரிகுழலார் பொன்பூமி போற்றுதலு
மாமோநின் னன்பர்கழற் கன்புறுதல்—வேமோவென்
றீதகமுந் தீவினையுந் தேசிகனே சிற்றடியேன்
சாதகமோ யானறியச் சாற்று. 811

சாற்றுகின்ற சன்மார்க்க சங்கமெங்குஞ் சார்ந்திலங்குந்
தோற்றுமருட் ஜோதியொன்றே தொல்லுலகிற்—போற்றவரு
மென்றருளிச் செய்த விராமலிங்க சற்குருவே
யின்றளவுங் கண்டறிகி லேன். 812

ஏனென் னிதயத் திருந்துமெனை யேய்க்கின்ற
மானென்னு மாதரார் மைவிழியாற்—றேனென்னு
மின்சொல்லா லேங்கிநிற்ற லேற்குமோ வென்குருவே
நின்சொல்லா னீக்க நினை. 813

நினைப்போதொன் றேனு நினைந்திலன்வீண் செய்கை
தினைப்போதும் விட்டுவிடாத் தீயே—னெனைப்போன்
றெவருமிலை யென்றாலு மென்குருவே யென்றன்
றவறொழித்து நின்னருளைத் தா. 814

தாதாவென் றுன்செஞ் சரணடைந்தேன் சஞ்சலமிப்
போதா யினும்விட்டுப் போகாதோ—வேதாவு
மென்னைப் பிறப்பிக்க வெண்ணுவனோ வென்குருவே
யுன்னைத் துதிக்குமெனை யும். 815

எனையுமினி யேம னிறப்பிப்ப னோநின்
னினையு நினைப்பொழியா நின்றாற்—றினையளவுஞ்
செல்லா தெனத்துணிந்து செப்பினேன் சற்குருநின்
வல்லாண்மை தன்னை மதித்து. 816

---

$ ஆரூர்திருமுறை, வாய்ப்பறையார்த்தல், 4-ம் பாசுரம்.

! கண்டதெலாம் அநித்தியமே... ... ... ...

மதியாது தம்மை மதியமுத முண்டோர்
விதியா விதியை விதிக்குஞ்---சதிகார
னுமெனையு மாட்கொண்ட வண்ணலே யெவ்வினையும்
போமெனச்சொல் லன்பு புரிந்து. 817

புரிவதெலாம் பொய்யே புகல்வதெலா மெய்யே
தெரிவதெலாம் பொய்ந்நூலே தேர்ந்து—விரிவதெலாம்
வெவ்விடய வேட்கையிலே மேதகவேன் சற்குருவே
யெவ்விடயத் தாள்வையெனை யே. 818

ஏதுந் தெரியா திருளிற் கிடந்தவெனக்
கோதுயிரு மூன்றறிவு முண்டாக்கி—சாதுசங்கந்
தன்னைத் தெரித்துந் தகாதவரைச் சார்ந்தகுற்றந்
தன்னைப் பொறுப்பதுநீ தான். 819

தானே தனக்குவமை தாரணியிற் சாற்றவரும்
வானோர் பொழில்சூழ் வடற்சபையை—மானேர்
நயனர்தமை நாடார்க்கு நாட்டினே னென்றாய்
பயனடையேற் குண்டாமோ பற்று. 820

பற்றுவது விட்டாற் ‡ பரகுருநின் சொற்படியே
முற்றுணர்வு வாய்க்கு முறையுண்டாங்—கற்றுமதன்
சாதகஞ்செய் யாதவலச் சாதனைசெய் கின்றபெரும்
பாதகனை யுங்கடைக்கண் பார். 821

பாராத பார்வை பதியும் படிபலிக்கும்
பேராத வின்பம் பிறங்கவருந்—தீராத
தீவினையைத் தீர்க்கவந்த தேசிகனே யுன்றனருட்
பாவினையே பாடப் பணி. 822

பணிந்தடங்கு $ மென்றவருட் பாவின் படியே
துணிந்தடங்கா நெஞ்சத் துடுக்காற்—கணிந்துசொல
வொண்ணாத துன்பி லுழன்றே னிராமலிங்க
வண்ணா விதையடக்கி யாள். 823

---

பாராத பார்வை-மருட்பா.

‡ இரண்டாந்திருமுறை, திருவண்ணப் பதிகம் 7-ம் பாசுரம்:
"பற்றுவது பந்தம் ... ... ... ."

$ ஆறாந்திருமுறை, இன்பத்திறன் 6-ம் பாசுரம்:

"பணிந்தடங்கு ... ... ... "

ஆளுங் கருணை யருட்பிரகா சப்பெரும
கோளுங் கொடுவினையுங் கொள்ளுமன—மாளும்வகை
யெற்குணரச் செய்யநினக் கேலாதோ ராமலிங்க
சிற்குணவீ தென்னின் றிறம். 824

திறமாநின் சேவடியைச் சிந்திக்கச் செய்த
லறமாகு மென்றருள லாகும்—பிறலாகத்
தோன்றுவதற் குள்ளமின்றேற் சொப்பனத்தி லேனுமெனை
யேன்றுகொள லாகாதோ வின்று. 825

இன்றுபக லோவிரவோ விவ்வம் புவியினிலே
யென்றுவரு வாயோ வியம்பியரு—ளென்றுமிலை
யென்றுரைப்ப யென்னி லிராமலிங்க சற்குருவே
யன்றுரைத்த தெல்லாம்பொய் யாம். 826

பொய்யாகாப் பொன்மொழியெப் போதுமெனப் போற்றவினு
மய்யாநின் னன்பென்பா லார்ந்திலையே—மெய்யாக
வெங்குறுவே னென்சொல்வே னென்செய்கேன் சற்குருவே
யிங்குவர விப்போதே யெண். 827

எண்ணுவது மேலாதோ வெவ்வுலகு மீடேறப்
பண்ணுவதும் பாரமோ பார்ப்பதற்கு—நண்ணுவது
மாகாதோ வாண்டவனே யன்பிருந்தாற் பாவமெலா
மேகாதோ வோர்நொடியி லே. 828

ஏனோ விரக்கமிலை யென்னெஞ்சோ நின்னெஞ்சந்
தானோ வறியேன் தமியேனீ—தானோமெய்
யன்புடைய வாசானில் வண்டவுயி ரத்தனைக்கு
மின்புடைய னன்றோ வியம்பு. 829

இயம்புவதற் கின்னதென வென்னறிவே னின்னுண்
ணயம்புரியு நாட்டமதை நாடு—சயம்புவியி
லென்றுமோ வென்றேக மென்குருவே யித்தருணஞ்
சொன்றேற் றொலையுந் துயர். 830

துயரமே தோன்றுதித் தொல்லுலகர் பொன்றும்
பயமுறீ ரென்றற் பகரு—நயமறிந்து
வாழ்வீர்மெய் வாழ்விற்சன் மார்க்கமென்ற வள்ளாலவ்
வாழ்வடைத லென்றோ வழுத்து. 831

வழுத்துவதிவ் வையகத்தில் வள்ளலே யென்றன்
புழுத்துழலும் புன்பிறவி போக—முழுத்துயர
நீங்காத தற்போத நீங்கு நிலையறிய
வீங்கா தாஞ்செய்வை யே. 832

வையேன் மனத்திலுன்றன் மாநாம மந்திரத்தை
நையே னயர்ந்துருகி நங்கையரைக்—கையேனெச்
சிந்தையுணீங் காக்கருணைத் தேசிகனீ யாதலினென்
னிந்தையறத் தந்தா ணிலை. 833

நிலையேறு வேண்டாது நீள்விழியார் மாய
முலையேறு வன்னெஞ்ச மூடன்—தலையேறுந்
துன்பச் சுமைதூக்குந் துட்டனெனைத் தூயவனு
யின்பச் சுமைசுமக்க வெண். 834

எண்ணிலெளி யேன்குற்ற மென்னுமோ நின்சித்த
மண்ணிலெவ ருஞ்செய்யார் மாநிலத்திற்—பண்ணிலகுஞ்
சீரருட்பா தந்தருளுந் தேசிகவென் சென்னிவைத்தா
ளோரருட்பா தத்துகளே யே. 835

துகளற்ற வோர்செல்வந் துய்த்தனர்நின் னன்பர்
நிகளப் பெரும்பனைபோ னீண்டு—பகலிற்
றவசிந்தை யார்போன்று சாதித்தே னய்யா
வவசிந்தை நீக்கி யருள். 836

அருளார்நின் மேனியைக்கண் ணுற்காண வெந்தப்
பொருளாலு மாமோ புகலிற்—றெருளாலே
யன்றியென வாய்ந்தறிந்தே னய்யா வநுபவமா
யென்றியலு மின்றே யியம்பு. 837

இயம்புவதற் கேலா விழிவெல்லா மென்றன்
வயம்பொருந்த வாட்டு மனத்தின்—மயம்புடைக்க
வெவ்விதத்து மென்று லியலவிலை யென்குருவே
யவ்விதத்தை யன்போ டருள். 838

அருளிற் றுணைமதனி லன்பிற் றவத்திற்
றெருளிற் சுகமுகத்திற் றேர்ந்த—பொருட்சொல்லி
லான்றோர்க ளாயறித லாமென்று மவ்வளவுஞ்
சான்றெய் நினக்கே தகும். 839

---

பட்டினத்தார் பாடல்:

"பொருளுடையோரைச் செயலினும்வீரரைப்
போர்க்களத்தும்
தெருளுடையோரை முகத்தினுந்தேர்ந்து
தெளிவதுபோல்
அருளுடையோரைத் தவத்தில்
துணைத்தில் அருளில் அன்பில்,
இருளறுசொல்லினுங் காணத்தகுங்கச்சி
யேகம்பனே."

தருமென்ற சன்மார்க்கர் சாற்றுங் குணங்க
ணருமென்னை நாடியிங் நாட்டின்—மிருமென்றன்
குற்றங் குணமாகக் கொள்ளுவையே யின்னடியார்
சுற்றங் கொளுமென்னைச் சூழ்ந்து. 840

சூழ்ந்திருக்குஞ் சுற்றமெலாஞ் சொல்லளவே யன்றிநன்றாய்
வாழ்ந்திருக்கச் சற்று மனங்கொள்ளா—ராழ்ந்துன்னி
லெற்குரிமை யன்னியரே யென்றிருக்கின் றேனதுவுஞ்
சற்குருநின் மாகருணை தான். 841

தாங்கெடுத லின்றித் தமையடுத்தோர் தங்களையுந்
தாங்கெடுக்குஞ் சுற்றத்தார் தன்மையறிந்—தீங்கெவர்க
ளோடுமுற வாகாம லுன்னடிய ருக்கடிய
ரோடுறவு கொண்டே னுளம். 842

உள்ளது கொடுத்தா லுறவுண்டெங் குங்கொடுக்க
வுள்ளதிலை யென்றா லுறும்பகையே—கொள்ளவருஞ்
சுற்றத்தை விட்டுத் துரையேநின் றாண்டடிப்
பற்றத் தயைசெய் பரிந்து. 843

பரிந்துநின தன்பர் பதமலரார் காட்டத்
தெரிந்துபணி யெல்லாஞ் சிரத்தாற்—புரிந்துமகிழ்ந்
துய்வேனி ராமலிங்க வுத்தமனே யின்றேலென்
செய்வேன் றிருவுள்ளஞ் செய். 844

செய்வேன் பருவந் தெரிந்தருளின் றேற்சிறியேன்
பொய்வே தனைபுரிந்து பொன்றுவே—னுய்வேதிஃ
துண்மையென்றன் சற்குருவே வுன்றனது வாய்திறவா
வண்மையென்றோ வுன்றன் மனம். 845

மனமென்னை வாட்டும் வகையறிந்து முன்றன்
மனமென்றோ காருண்ய வண்ணக்—கனமென்றோ
வின்னும் பொறுத்திருப்ப தேற்குமோ வென்குருவே
பன்னுன் பெயர்ப்பொருளைப் பார். 846

பார்த்தா னினைத்தாற் படித்தாற் றிருவருட்பா
சேர்த்தாரு மென்பார்நின் சேவடியிற்—றீர்த்தாவோர்
நேரமென் றாலு நினைந்திலையோ நிற்கோர
வாரமென்று சொல்ல வரும். 847

வரும்பிறவி யேதோ வகுக்க வறியேன்
தரும்பிறவி தன்னிற் றவஞ்சா—ரரும்பிறவி
வாய்க்குமோ ராமலிங்க வள்ளலே யிவ்வடிமை
நாய்க்குத் தவிசுண்டோ நாடு. 848

நாடும்பன் மாணவர்க்கு ஞானடிய ருக்கடிமை
கூடும் படியேனுங் கூட்டுவிப்பாய்த்—தேடுஞ்சீ
ரெல்லா மெளிதி லெனக்கருளற் கென்குருநீ
யல்லாதிவ் வம்புவியி லார். 849

ஆரம் புவியி லதிகப்பிர சங்கிகளின்
றீரங் கெடுத்தார் தெரிந்திலையோ—வீரங்கொள்
ளுன்றன் வழக்கமொழித் துநெஞ்சே யென்குருவை
யென்றன் வசத்திலிருந் தெண். 850

எண்ணு மெழுத்து மிருகண் ணெனும்பொருளை
நண்ணு மெழுத்தெனக்கு நாட்டிநலம்—பண்ணுமொரு
சற்குருநீ யன்றோ தமிழ்மூன்று நாற்கவியு
மொர்குவா வெண்ணிடுவை யே. 851

எண்ணிடுவா யென்குருவை யென்சொற் படியிருந்து
பெண்ணிடுவாய்ப் பேச்சிற் பிரியமுறே—னண்ணியிடு
மற்றிரண்டிற் * பற்றுதே மாண்புளநெஞ் சேநண்பு
பற்றியிது சொன்னேன் பரிந்து. 852

பரிந்தன்னம் பாலிக்கும் பண்புடையாள் போலப்
புரிந்தநடை மேற்காட்டிப் பொன்னே—விரிந்திழுக்கும்
வஞ்சரால் வாடியவிம் மந்தனையும் வள்ளானின்
செஞ்சரணஞ் சிந்திக்கச் செய். 853

செய்வான் சிறந்தநலஞ் சேர்விப்பான் சற்சனரி
லுய்வான் வழியுள் ளுணர்த்துவான்—மெய்வாழ்வு
தந்திடுவா னென்னெஞ்சே சற்குரவன் சத்தியைநா
னெந்தவிதஞ் சொல்வே னினி. 854

இனியா கிலுமென்னை யேன்றுகொளா யென்னி
லனியாய மாய்த்துன்பி லாழ்வேன்—முனியாமற்
சேராத வென்னெஞ்சைச் சீராக்கிச் சற்குருவென்
றீராத தீவினையைத் தீர்த்து. 855

தீர்த்தா தரிக்கத் திருவுளங்கொண் டென்வினையைப்
பார்த்தாற் பலியாதோ பக்குவனாய்ச்—சேர்த்தா
விழிவருமோ வென்குருவே யென்றனக்கு நல்ல
வழியருள்வாய் வந்து வலிந்து. 856

* மற்றிரண்டு-மண்ணாசை, பொன்னாசை.

வலிந்துவந் தாள்வதற்கு வாய்த்தவனு னன்றி
நலிந்து நினைந்துருகி நாடேன்—மலிந்தவனீ
யென்றிறுமாப் புற்றிருக்கின் றேனென் குலகுருவே
நன்றிதெனச் செய்வாய் நலம். 857

நலமெல்லாங் கொள்ளைகொண்டார் நாட்டினினின் னன்பர்
பலமெல்லாம் பெண்பாற் பரித்தேன்—புலமெல்லாம்
வீணே யுழைத்தேன் வியன்குருவே யென்றனைப்போற்
காணே னுலகிற் கருது. 858

கருதி வருந்துமெனைக் காத்திடுவா ரில்லைச்
சுருதி வழுத்துஞ் சுகத்தை—யொருகணமு
மெண்ணாது வீணி லெருதினுழைத் தேன்கருணை
யண்ணா வொருத்தென்னை யாள். 859

ஆளும் பெருங்கருணை யண்ணாவீ ணாகவென்னாள்
மாளும் படிவாழ்தல் மாண்பாமோ—நீளும்பொய்க்
கூட்டின் சுமைசுமக்கக் கூடுமோ சற்குருமெய்
வீட்டிற் சுகிக்க விடு. 860

விடப்படுவ தின்னதெனை விட்டறியே னென்னாற்
கடப்படுவ தின்னதெனக் காணேன்—திடப்படுத
லொன்றேனு மில்லா துணர்வழிந்தேன் சற்குருவே
யென்றே கடைத்தேறு வேன். 861

தேறுவனோ சிற்சபையின் றேவேநின் சிந்தனையி
லாறுவனோ வெம்மை யறவொழித்துக்—கூறுவனோ
யுன்றனருட் பாமகிமை யூரெங்கு நின்னருளா
லென்றனக்கு நின்சித்த மே. 862

சித்தகுரு வேநினது சித்தமென் பாக்கியமே
நித்த நினைநினைக்க நேரமிலை—யித்தரையிற்
றப்பதையே செய்து தவிக்கின்றேன் சற்குருநீ
யெப்படியோ சேர்ப்பா யெனை. 863

எனைவலிதி லிவ்விகத்தி லீர்க்கின்ற நெஞ்சை
நினைநினைக்கச் செய்விக்க நின்னாற்—றினையளவுங்
கூடாதோ வென்றன் குலகுருவே நின்குறிப்பி
லாடாதோ வவ்வண்ண மாய். 864

அவ்வண்ண மீதென் றறியா வடிநாயே
னெவ்வண்ண முய்குவே னிப்பிறப்பி—லிவ்வண்ண
மென்றே யருள்வதற்கி ராமலிங்க சற்குருவே
யின்றேனு மெண்ணுவை யே. 865

எண்ணுவனோ நின்னடியை யேத்துவனோ நின்னருட்பா
வுண்ணுவனோ நின்னினைவா ருண்டிதனைப்—பண்ணுவனோ
நின்னடியார் பூசை நிதமுமெனைச் சற்குருநீ
யென்னடிய னென்றிடா யேல். 866

ஏலா ரிடத்தி லிரக்காம லில்லையென்போர்க்
கேலா தெனவு மியம்பாமற்—சேலாருங்
கண்ணாரிற் சிக்காமற் காத்திடுவாய் சற்குருநின்
றண்ணா ரருளமுதந் தந்து. 867

தந்தா னினைதருளைத் தாரணியி லென்னுடைய
சிந்தா குலமெல்லாந் தீர்ந்துவிடு—நந்தாத
தேகமுஞ் சித்திவருந் தேசிகனே யுண்டழியாப்
போகமெய்ச் சித்திப் பொருள். 868

பொருளென்ப துன்னுடைய பொற்கழலைப் போற்றல்
தெருளென்ப துன்வாக்கின் றேர்ச்சி—மருளென்ப
திவ்வகைக்கு மாறா மெனவறிந்தே னென்குருவே
யெவ்வகையைச் செய்வா யெனக்கு. 869

எனக்கோர் கதிநீயென் றெண்ணியிருக் கின்றே
னினக்கோ வடிய ரனேகர்—மனக்கோர
மத்தியிலே மாற்ற வருதலையே மாற்றுதற்குச்
சத்தியுளோ யென்குருநீ தான். 870

தானந் தவமுந் தயையுந் தரவருசி
தானந் தவறுமற் றுனிருந்தான்—ஞானமுறு
மென்றுரைப்பார் நல்லோ ரெழிற்குருவே யேழையேற்
கின்றுவரச் செய்திடுவா யே. 871

செயற்கரிய செய்கையெலாஞ் செய்வார் பெரியோ
ரியற்கைச் சிறியோர்க் கிழிவே—செயற்கையா
மென்றாலென் றீங்கெல்லா மேகாதோ சற்குருவே
யுன்றா ளினைத்தாலு மோ. 872

நினைந்துநினைந் தென்று நிகழ்த்துங் * கவிபோல்
வனைந்து துதிக்கும் வகையே—நினைந்துணர்ந்தும்
பெற்றறியேன் ராமலிங்க பெம்மானே யென்செய்கே
னுற்றறியே னுன்ற னுளம். 873

உள்ளதனை யுள்ளபடி யுண்முகத்திற் காணும்வகை
கள்ளமிலா தேவெளியிற் காட்டுவித்து—மெள்ளளவுங்
காணும லேங்குங் கடையேனுக் கென்குருவே
கோணா நிலையைக் கொடு. 874

---

* 68-ம் பக்கக் குறிப்பைப் பார்க்க.

கொடுத்தாற் குறைவருமோ கோமானே நின்னை
யடுத்தார்க் கவலமுண்டோ வன்பை—விடுத்தா
லறமாமோ நின்னருளுக் காகாதோ வென்பாற்
றிறமாக நின்னருளைச் செய். 875

செய்தவமி ருந்தாலென் தீவினையெல் லாந்தீரும்
பொய்தவமே செய்துவந்தாற் போகுமோ—மெய்தவத்தைக்
கொள்ளவெளி லென்னெஞ்சங் கூடவில்லை யென்குருநிற்
கெள்ளளவி ரக்கமில்லை யே. 876

இரக்கமில்லை யென்பாவி லென்றாலு முன்றன்
திரக்கருத்தை வேறாகச் செப்பேன்—பரக்கவரு
மென்னெஞ் சடங்கவில்லை யென்குருவே நின்னாலவ்
வன்னெஞ் சடக்க வரும். 877

வருங்கவலை தீர்க்கும் வரமருள லுன்றன்
பெருங்கருணைக் காகாத பேறோ—தருங்கருணை
யுண்டோ விலையோவென் றோர்ந்திலேன் சற்குருவே
பண்டோ விலையிப் படி. 878

இப்படியே காணா திருந்தாலிச் சிற்றடியே
னிப்படியி லெவ்வண்ண மென்செய்வேன்—தப்படியே
செய்யுஞ் சழக்கனென் றுன் சிந்தையினிற் கொண்டுவெட்டி
யுய்யும்வழி யெற்கே துரை. 879

உரைசெயுங்கா லுன்னருட்பா லுள்ளதுபோ னெஞ்சங்
கரைவதுபோ லேநடித்துக் காட்டி—வரையின்றிச்
சென்றிழுப்ப தென்செய்வேன் தேசிகனே யென்குறிப்பி
னின்றிடற்குச் சற்றே நினை. 880

நினைவின் மாணபய நீங்கவில்லை நீக்கற்
குனையன்றி வல்லுனர்க ளுண்டோ—வினையன்றிச்
சேய்க்குண்டோ வெச்சுகமுந் தேசிகனே நின்னடிமை
நாய்க்குண்டே சாகா நலம். 881

நலமே கருதி நடவாதா ரெந்தத்
தலமேலுங் கண்டதுண்டோ சாற்றிற்—பலமேது
மில்லாத வேழையெனக் கேதுண்டு சற்குருநீ
யல்லாற் கதியின் றருள். 882

அருளும் பொருளு மடைந்தார்நின் னன்ப
ரிருளுமரு ளுங்கொண் டிருந்தேன்—தெருளுடைய
னல்லனென்று லன்புடைய வாசானே யாவருக்கு
நல்லவனீ யன்றோ நவில். 883

நவிலும் பெருஞ்சுருதி ஞானி யொருவன்
புவிமூன்றி லின்மை புகலுந்—துவிதமற்ற
வுண்மைநெறி சொல்வா ரொருவருண்டோ சற்குருநின்
வண்மையினன் காரறிகு வார். 884

அறிவார் பெரியா ரருமை யறிந்தாற்
பிறியார்தற் போதமற்ற பேற்றிற்—குறியாத
மூடனென்போ லின்றேனு மூதறிவோய் முத்தமிழாற்
பாடவரு ளுண்மெய்ப் பதம். 885

பதந்தேர்ந்து பாட்டின் பயன்றேர்ந்து மேலோ
ரிதந்தேர்ந் திருக்கின்றார் யாரோ—விதந்தேர்ந்தும்
வாணாள் கழித்தேன் வடற்குருவே நன்னெறியி
ஞனு வெனையு நடத்து. 886

நடத்துவார் மெய்ப்பணியை நாடிநயந் தென்னை
விடத்துணியா ரென்றுநிதம் வீணே—மடத்தனத்தா
ருவிமடத் தையலர்பாற் றூழ்ந்தழிந்தேன் சற்குருவே
பாவியெனத் தள்ளாமற் பார். 887

"பாராத பார்வை" யெனும் பாட்டைப் படித்திருந்துந்
தேராது வெம்மடவார் செய்கையினிற்—பேராது
சார்ந்து சதுரிழந்தேன் சற்குருநின் னன்பருளந்
தேர்ந்துபணி செய்யத் திருப்பு. 888

திருப்பியெனை யுன்றன் றிருவடியைப் பற்றும்
விருப்பிருக்கச் செய்தல் வியப்போ—கருப்பிருப்ப
தென்மட்டி னின்னருளுக் கேற்குமோ வென்குருவே
யென்மட்டித் தன்மையிது வே. 889

தன்மையீ துன்றன் றரமீதென் றோர்சற்று
முன்னலறி யாதிவ் வொதியனையேன்—புன்மையெலாம்
போக்கும் பொறுப்புடைய புண்ணியனே நின்னடிய
ருக்கும் வணமென் றருள். 890

என்றருள்வா யென்றெண்ணி யேங்கிப் புலம்பிநிற்ப
துன்றன் பெருங்கருணைக் குற்றதோ—சென்றதினல்
வாழ்விழந்தேன் வள்ளால் வருநாளி லேனுமெனைத்
தாழ்வில்லா நின்னருளைத் தா. 891

அருளைத் தராதன் றறைந்தமெய் வாக்கின்
பொருளைத் தராதிந்தப் பூவின்—மருளைத்தந்
தாள்வதுவு நன்றோமோ வாசானே யவ்வியம
ருள்வரிலிந் நாயேனுக் கார். 892

ஆர்துணைவ ராருறவ ராரினிய ரென்னெஞ்சே
யோர்துணையுங் கண்டறியோ முண்மையிதே—நார்தனக்குப்
பூவே துணையெனலிப் பூவிலினி ராமலிங்க
தேவே துணையென்று தேறு. 893

தேறுவாய் நெஞ்சே திரிபொழிப்பாய் தேசிகனார்
கூறுவாய் கொண்டு குணமாக—மாறுவாய்
கொள்ளாம லென்னுடனே கூடியிருந் தாலெவரு
மெள்ளாத வின்புறலா மிங்கு. 894

இங்குன் னியற்கையைவிட் டென்னெஞ்சே யென்சொலிற்
றங்கும் படியிருந்தாற் றரணியி—லெங்குமுன்சீர்
கொண்டாடவே னின்றேற் கோதிற் குருவருளாற்
றிண்டாடச் செய்வேன் றெரி. 895

தெரிந்துகொள்வ தெல்லாந் திருவருட்பா வுள்ளிற்
புரிந்திருக்கப் பொய்ந்நூற் புகல—விரிந்தநெஞ்சே
வேண்டா மவையெல்லாம் விட்டுவிட்டி ராமலிங்க
வாண்டா னருமை யறி. 896

அறிவா ரருட்பா வருமை யறிந்தாற்
பிறியார்மற் றொன்றினையும் பேசார்—நெறியாகப்
பெற்றுய்வா ரெந்தப் பெரியோரும் பேய்நெஞ்சே
கற்றுய்ய வென்னிற் கருது. 897

கருதி யுரைத்தாற் கதிபெறலாம் வீணே
யெருதி னுழைத்தாலிங் கென்னாம்—திருவருட்பா
சொல்கின்றேன் றொன்றுதொட்டென் றாய்மொழியை நெஞ்சேநீ
வெல்கின்ற யென்னின் வெறுப்பு. 898

வெறுத்தாலென் சொல்லை வெருவா யலைவாய்
பொறுத்தான்மீட் டுன்வழியே போவா—யொறுத்தாலு
மானமிலை நெஞ்சே வடற்சபையின் வள்ளலுனக்
கானவகை செய்வா னறிந்து. 899

அறிவா மருட்பாவி லார்ந்தகவி யோர்சீர்
செறிவாம் பொருளைந் தெரிந்தாற்—பிறியாத
வானந்த முண்டா மலைவில்லா தென்னெஞ்சே
வானும் பெறுமெய் வரும். 900

வருமே தவமோனம் வாய்க்குமே ஞானந்
தருமே சகலசித்தித் தன்மை—யொருவா
விருவா தனைமுற்று மேகுநெஞ்சே யேத்திற்
றிருவா ரருட்பா தினம். 901

தினமுந் திருவருட்பா சிந்திக்கி னெஞ்சே
யினமும்வே றின்பமுண்டோ வில்லை—யினமுலகி
லுன்றன் பிடிவாத மோங்கா தருளாணை
யென்றன்சொற் கொண்டே யிரு. 902

இருந்திடுவா யென்றெனெஞ்சை யேத்தியுமென் பாலிற்
பொருந்தியிரா மற்பெண்பாற் போகும்—பெருந்திருட்டைத்
தீர்த்தடக்குஞ் செய்கை தெரிந்திலேன் சற்குருவே
பார்த்தடக்க லுன்றன் பரம். 903

§ பரமே தென்பாட்டின் படியிப் படியின்
தரமேது பெண்போகந் தானே—திரமென்று
நண்ணுகினை வூட்டநெஞ்ச நாடுமோ சற்குருவே
யெண்ணநினைக் குண்டாயி னே. 904

உண்டாயி னுண்டாகு முன்றன் பெருங்கருணை
தண்டாத பேரின்பஞ் சற்குருவே—வெண்டா
மரையாளென் வாக்கில் வசித்திடுவா ளென்னுட்
டிரையேழு நீங்குந் திறம். 905

திறமென்றோ வுன்றன் செயலென்றோ செய்யு
மறமென்றோ வொன்று மறியேன்—புறமு
மகமும் புரிவதென்றோ வண்ணலே யென்பாற்
சுகமுண்டோ நாயேற்குச் சொல். 906

சொற்பயனெவ் வோரிடத்துந் தோன்றியவா றுன்னருட்பா
வற்பனொரு காலு மநுபவியேன்—சொப்பனத்தும்
புன்செய்கை போக்காப் புலையேனிப் பூவுலகி
லென்செய்கு வேன்குரு வே. 907

குருவேயென் குற்றங் குணமாகக் கொண்டென்
னிருவே தனையொழிக்க வெண்ணித்—திருவேய்நின்
னன்முகத்தைக் காட்ட நனவிற் கனவினில்வந்
தென்முகத்தைப் பார்த்தருள்வை யே. 908

ஏதா யினுமோ ரிதமுண்டென் பாலெனவிப்
போதா யினுமிரங்கப் போகாதோ—தீதாகச்
செய்தவெலா மன்னித்துத் தேசிகனே யென்றருள்வாய்
மெய்தவறா துற்ற விதி. 909

---

§ ஐந்தாந்திருமுறை, தெய்வமணிமாலை, 2-ம் பாசுரம்:
'பரமேது வினைசெயும் பயனேது ... ... "

விதிவிடா தென்று வெகுநூல் விளக்கு
மதியழிக்கு மென்று வகுக்கும்—பதிநூல்
விதிக்கருத்தீ தென்றருளி வித்தகனே யென்னை
மதிக்கவைத்த தற்கென்கைம் மாறு. 910

மாறுபடா வாய்மை மதியால் வருமார்க்கம்
வேறுபடா தெவ்வூழ் வினைகளையு—நீறுபடச்
செய்யுமென்ற ராமலிங்க தேசிகனே நின்போல
வுய்யும்வகை யாருணர்த்து வோர். 911

ஓராயிரம்பே ருலகத் திருந்தாலு
நேராய நீர்மை நிகழ்த்துவரோ—வாராயிற்
காதரிப் பார்கட்குக் காட்டிக் கொடாரென்ற
வாதரனே யீதேநின் னன்பு. 912

அன்பறியே னின்னடியர்க் கானவிதஞ் செய்தறியேன்
வன்பறிவேன் வாய்மையிலா வன்மனத்தாற்—றுன்பறிய
நின்றனனென் காலமெலா நின்மலனே யிக்கொடியேற்
குன்றன் றிருவருளுண் டோ. 913

உண்டோநின் போலிரக்க முள்ளோ ருலகிலில்லை
பண்டோ விலையென்போற் பாவிகளுங்—கண்டோர்
மனம்பதைக்க வாழ்கின்றேன் வள்ளலே யுன்றன்
கனம்புதைக்க வென்னுட் கருது. 914

கருதினு லென்குருவின் காலிணையை மேலாஞ்
சுருதிசொலுஞ் சுத்தநிலை தோயும்—பருதியெனப்
பாரதனிற் கீர்த்தி பரவுமென்றன் பாழ்நெஞ்சே
கோரவிலை யேயென் குறிப்பு. 915

குறிக்குங் குருவின் குணமதனைக் கொண்டென்
வெறிக்கும் வினையை விடுக்கிற்—பிறிக்கவொணுச்
சுத்தசிவா னந்தஞ் சுலபமாய்ப் பெற்றுய்வாய்
நித்தமிதை நெஞ்சே நிறுத்து. 916

நிறுத்திப் பலவழியை நேடா திருக்கிற்
பொறுத்துன்றன் புன்மையெலாம் போக்கிச்—செறித்தலிலா
வாய்மையுளோர் பாற்சேர்ப்பான் வன்னெஞ்சே சற்குரவன்
வாய்மொழியே நல்ல வரம். 917

வரமாவ தெஞ்ஞான்றும் வாழ்திருக்குஞ் சாகாத்
தரமாமென் * ரோர்கவியிற் சாற்றித்—திரமாகும்
வண்ணவகை வாய்மலர்ந்தும் வள்ளாலென் வன்னெஞ்சோ
நண்ணவிலை யென்செய்வே னான். 918

---

* 6-ந் திருமுறை, முறையீடு 9-ம் பாசுரம்:
"சாகாத தலையறியேன் ... ... "

நானுமொழி யாதொழிந்து நாடும்வகை நாயேற்கின்
றேனும்வர வெண்ணமினக் கேலாதோ—மானுனக்கு
நன்றோ வேதாந்தியர்க்கு நாவலர்க்கு நாயகனீ
யன்றோவிவ் வேழைக் கருள். 919

ஏழைக் கருள விழிவோநின் னின்னருட்பா
கோழைக் குணத்தோர்க்குக் கூடாதோ—வாழைக்கீழ்
வாழையென்ற ‡ தெற்றுக்கோ வள்ளலே யென்போன்ற
வேழையருக் கன்றோ வியம்பு. 920

இயம்பியநின் வாக்கினின்ற விச்சைவண்ண மன்றி
சுயம்புகல வல்லனலேன் சொல்லும்—பயம்பெரிதே
யென்றாலு மென்கவலை யெங்குரைப்பே னென்குருவே
நன்றாகா தென்றெண்ணி நாடு. 921

நாடென்று னங்குரவ னல்வரவை நாணிலத்தின்
பாடென்று பார்க்கின்றாய் பாழ்நெஞ்சே—யீடென்று
மொன்றுமிலை யுன்றனக்கே யுன்றாற் படும்பாடே
யென்றுமிரா தென்குருவை யெண். 922

எண்ணிற் பலசன்ம மெங்குமெடுத் திவ்வுலகின்
மண்ணிற் படுத்தேன் மதியின்றிப்—புண்ணிற்கோற்
பட்டதுபோ லின்னும் படுவதோ சற்குருவே
விட்டதுவு மின்றோ விளக்கு. 923

விளக்கும்போ தந்நாள் விளங்கியது போலக்
களக்கமின்றிக் கண்டேன் கருணை—விளக்கதனாற்
றோன்றாத் துணையிற் றுரிசுற்றேன் சற்குருவே
யேன்றானிவ் வண்ண மெனக்கு. 924

எனக்கென்றோ துன்ப மிவைவித்தா யீதுன்
றனக்கன்றோ தன்மத்தின் றன்மை—யெனக்கன்றே
யென்று துணிந்துரைத்தே னென்குருவே யென்னுள்ளத்
தின்று துணிந்துவிளக் கேற்று. 925

ஏற்றிடினு நீயேமெய் யின்பளித்து மேனிலையிற்
றூற்றிடினு நீயே துயரளித்துத்—தேற்றிடுவோர்
யாருமிலை யென்குருவே யார்க்குரைப்பே னெங்குமொரு
சீருமிலை யென்னே செயல். 926

---

‡ 6-ம் திருமுறை, பிரியேனென்றல், 4-ம் பாசுரம்:

"வாழையடி வாழையென ... ... "

செயலின்னதென்று தெரியாது வஞ்சக்
கயலென்னுங் கண்ணார் கடையின்—மயலுறைந்து
பொய்வாழ்விற் போந்த புலைநெஞ்சைச் சற்குருவே
மெய்வாழ்விற் செல்ல விடு. 927

விடுத்தாலு நல்வழியின் மேவாமலென்னைத்
தடுத்தாலுஞ் சற்குருநீ தானே—கெடுத்தாலு
மென்செய்வே னென்பா லிரக்கமுளோர் யாருமிலை
நின்செய்கை யேயென் னிலை. 928

நிலையாக வென்னெஞ்சை நின்பா னிறுத்தற்
கிலையா நினக்கிச்சை யென்பாற்—றொலையாத
துன்பங் கொடுக்குந் துடுக்கடக்கிச் சற்குருவே
இன்பங் கொடுக்கவிசைந் தெண். 929

எண்ணுதற்கு நின்னடியை யேத்துதற்கு நின்பூசை
பண்ணுதற்கும் பற்றிலையென் பாழ்நெஞ்ச—முண்ணுதற்கு
மோடி யுறங்குதற்கு முன்னுவதைச் சற்குருநீ
நாடியிருப்பதுவோ நன்று. 930

நன்றென்று நான்செய்ய நாடுகின்ற நாட்டமதை
யென்றென்று மென்னே டிசைவதுபோற்—பின்சென்று
மாறுசெய்து வாட்டுகின்ற வன்னெஞ்சைச் சற்குருவே
நீறுசெய்த லன்றே நெறி. 931

நெறியுடையோர் சாகா நிலையுடையோர் நீங்காப்
பொறியுடையோர் போற்றும் புனிதா—வெறியுடைய
நெஞ்சா னிலைகுலைந்தே னீநினைந்தாற் றுன்பமெலாம்
அஞ்சாய்ப் பறந்துவிடும் பார். 932

பாராதே பாதகஞ்செய் பத்தமிலாப் பாவையரைச்
சேராதே செவ்வையிலாத் தீயோரைக்—கோராதே
சாதலுறுந் தேவர்களைச் சந்ததமென் சற்குருவைக்
காதலுட னெஞ்சே கருது. 933

கருதுவோ ரேத்துவோர் கண்டு களிப்போர்
வெருவுதலு மன்புமுள்ளோர் வேண்டு—திருவுதவுஞ்
செய்ய திருவருட்பா சேர்ந்தென்னே டேத்திநெஞ்சே
வுய்யவரு மெய்யிதென வுன். 934

உன்னுகின்ற வுத்தமரி னுள்ளநிறைந் துள்ளவனே
பன்னுகின்ற பத்தர் பணிமுடியை—யுன்னுகின்ற
பொன்னடிக்குப் போந்தவனே போதமற்றென் சற்குருவே
நின்னடியி னீற்க நினை. 935

நினைப்பு மறப்பா னிலைக்கும் பிறவி
யனைத்து மமையு மதனைத்—தினைத்துணையும்
வாரா வகைசெய்து வள்ளலே யிவ்வடியேற்
காரா வமுத மருள். 936

அருளும் பொருளு மமைந்தாலங் கிங்கு
மருளும் வறுமையு மாயுந்—தெருளும்
பெருஞ்செல் வமுமுண்டாம் பேதைநெஞ்சே யெல்லாந்
தருஞ்சற் குரவன்றன் றாள். 937

தாளை யெளிதிற் றருவானென் சற்குரவ
னாளையென மாட்டானென் னன்னெஞ்சே—வேளைவர
வேண்டுமெனச் சொல்லான் விதிகடத்தும் வேதியனை
யாண்டு மறவா திரு. 938

இருளுறுமென் னெஞ்சே யிரவும் பகலுந்
தெருளுறுமென் றேசிகனைச் சிந்தித்—தருளுறுதற்
காசைவை யென்று லவலப்பெண் ணின்மண்ணின்
மாசையினின் றுயென் மதி. 939

மதிக்குஞ் சமயமத மார்க்கங்க ளெல்லாந்
திதிக்கும் வழியன்று தேரிற்—கதிக்கவருஞ்
சன்மார்க்க மொன்றே சவலைநெஞ்சே சற்குருவின்
சொன்மார்க்க மென்றுந் துணை. 940

துணையே தறியாச் சுகமேது சொல்லற்
கிணையேது மெண்ணுவதற் கேலாத்—திணைமேவு
நங்குருவின் சொல்வண்ண நாடிலையே லென்னெஞ்சே
யெங்குமிலை யென்றறிவை யே. 941

ஏதுந் தெரியாத வேழையர்போ லேமாற்றுஞ்
சூதுந் திருகுமுள்ள தோகையரின்—மீதுவைக்கும்
பற்றைவிட்டுச் சற்குருசொற் பற்றுவையேற் பாழ்நெஞ்சே
யிற்றைவரும் பேரின்ப மே. 942

இன்பமே சத்துச்சித் தென்றும் பிரியாத
துன்பமசத் துச்சடமாச் சொன்முறையை—மன்பதைக்குச்
சாற்றியவி ராமலிங்க சற்குருவே யென்றுன்ப
மாற்றியவ் வின்ப மருள். 948

அருள்வாய்ந்த வாக்கா லறைந்தவருட் பாவின்
பொருள்வாய்ந்த புண்ணியரிப் பூவிற்—றெருள்வாய்ந்த
சித்தராய் வாழ்கின்றர் தேசிகனே சிற்றடியேன்
பெத்தனுய் வாழ்வதுவோ பேர். 944

பேர்முறையாய்ப் பேசும் பெரியோர்நற் பேறுபெற்றார்
நேர்முகமென் காட்சியுற நேர்ந்துமொரு—சீர்முறையு
மில்லாம லென்குருவே யேமாந் திருக்கின்ற
தெல்லாமு நின்னிரக்க மே. 945

ஏனோவிவ் வேழைமட்டி லிந்தவிப ரீதமிது
தானோநின் சம்மதமுஞ் சாத்விகமும்—வானோரும்
வாழ்த்துகின்ற வள்ளாலுன் மாணடிவ ணங்குமெனைத்
தாழ்த்துவது தானோ சரி. 946

சரியென்றுன் தத்துவத்தைச் சாற்ற வருமோ
தெரியுந் தரமோ சிறியேன்—விரியும்பொய்
மாய மயக்கொழித்து வள்ளலே நின்னன்பர்
நேய நினைக்க நினை. 947

நினைத்தா லெனையிந்த நீடுலகில் வாழ
வினைத்தாந் துயர்நிற்ற லாமோ—வினைத்தானுஞ்
சேயின் றுயரறிந்துஞ் சீறுவளோ சற்குருவே
யாயின் றுணையே தருள். 948

அருளைப் பெறலாமென் றானந்தங் கொண்டு
மருளைப் பெறுமனத்தால் வாடி—யிருளைப்
பெறநேர்வ தைக்கண்டும் பெம்மானின் றற்றுன்
பறநேர்மை யின்றோ வறை. 949

அறைந்தாலென் பால்வந் தருளினின் சீரே
குறைந்திடுமோ சற்குருவே கூறாய்—துறைநலத்தைக்
காட்டியநின் பாவின் கருணைநிறை சொற்பொருளை
நாட்டிடிற் போமோ நயம். 950

நயத்தா * லெனுமருட்பா நாடிப் படித்து
முயத்தான் வழியொன்று மோரா—வயத்தால்
வருந்தி யிருக்கின்றேன் வள்ளலே நின்பாற்
பொருந்தி யிருக்கப் புரி. 951

புரிந்தவருட் பாவிற் பொத்தியவெ † னும்பா
விரிந்தபொருண் மேவாது வீணிற்—றிரிந்தவலங்
கொண்டேனை யாளக் குருவே நினக்குள்ள
முண்டே லுடன்வரா தோ. 952

---

* 6-ம் திருமுறை. அடியார்பேறு, 14-ம் பாசுரம்:
"நயத்தாலுனது திருவருளை ... ... "

† 6-ம் திருமுறை, திருவருட்பேறு:
"பொத்திய மலப்பிணி ... ... "

வாராதோமெய் வாழ்வு வரிலழியா வின்பந்
தாராதோசன் மார்க்கர் தயையு—மிராதோவென்
மீதிற் குருவே விருப்பிருந்தா லெத்துன்பு
மேதிப் புவிமே லெனக்கு. 953

எனக்குண்ணீ யுன்னுண்ணா னென்றுரைத்த ‡ வண்ண
மெனக்குணர வந்ததிலை யேனோ—னினக்குரிய
வெண்ணமன்றோ வின்றேலிங் கேனுரைத்தாய் சற்குருவே
திண்ணமாய் நானறியச் செப்பு. 954

செப்பும்வே தாந்தமெலாஞ் சித்தாந்த மெல்லாமு
மொப்பும் வெளியா யுரைத்ததின்றென்—றிப்புவியில்
வந்துரைத்த ராமலிங்க வள்ளலே யின்றெனது
சிந்துதுலைத் துன்னடியிற் சேர். 955

சேரும்வடற் சித்திபுரச் சிற்சபையி லெல்லோருங்
கோரும்வர மெல்லாங் கொடுக்கின்றாய்—சீருடைய
சித்தகுரு வேயிந்தச் சிற்றடியேன் மட்டிலுனக்
கித்தனைவெ றுப்பென்னை யே. 956

என்னை யொருபொருட்டா யெண்ணிக் கடைக்கணித்தும்
பொன்னை யுடையார்பாற் போகாமற்—பின்னைதனை
யென்பால்வைத் தென்னெண்ண மீடேற்ற வென்குருவே
யுன்பாற் செயலில்லை யோ. 957

இல்லையே யென்னெண்ண மீடேற்றநின்கருணை
வல்லையே யுன்றன் மனத்திரக்க—மல்லையே
வன்மனத்தா னின்பேரும் வள்ளலன்றோ நின்னையன்றி
யென்மருமம் யார்க்குரைப் பேன். 958

உரைசெய்த நின்னூலி லுண்ணுகின்ற ¶ தென்று
வரைசெய்த பாட்டை வழுத்திக்—கரைசெய்வே
னன்னியரின் வன்மனத்தை யண்ணலே யென்மனத்தின்
கன்னிலைக ரைந்ததிலை காண். 959

காணேனோ நின்னைக் கருதேனோ நின்புகழைப்
பூணேனோ நின்னடியென் பொன்முடியில்—வீணேனோ
பாரி லுழைப்பேன் பரகுருவே நின்றயையென்
பேரிலுண் டாகப் பெறின். 960

---

‡ 6-ம் திருமுறை, மெய்யருள்வியப்பு மாலை:
25. "எனக்குள் நீ ... ... "

¶ 2-ம் திருமுறை, கழிபகற் கிரங்கல், 7-ம் பாசுரம்:
"உண்ணுகின்றதும் ... ... ".

பெறுமவற்று ளெல்லாம் பெரிதுகுரு நாம
முறுதியாய்க் கொண்டென்று மோதில்—வெறுமையென
வெண்ணுதியே வீடழிவா யென்னெஞ்சே வுண்மையென
நண்ணுதியே யெல்லா நலம். 961

நலமேதுஞ் செய்யருட்பா நாடா விடிலோர்
பலமேதுன் பாதம் பணியும்—புலனேது
பூவிற் புகழேது புண்ணியரின் சார்பேது
நாவினுக் கேது நயம். 962

நயமில்லா வென்னுவி னுமகளை வைத்துப்
பயமில்லா துன்னருட்பா பாடும்—வயமருள
வுற்றநின தின்னருளை யுத்தமனே யென்னறிவே
னற்றவமே செய்யாத நான். 963

நானென்ன செய்வே னறுங்குழலார் பாழ்வலையின்
மானென்னச் சிக்கும் வகைசெய்யு—மீனனெஞ்சாற்
புண்பட்டு நிற்கின்றேன் புத்தமுதாஞ் சற்குருநின்
கண்பட்டாற் றீருங் கலி. 964

கலிதீர்க்க வந்த கருணைக் கடலே
நலிதீர்க்க வந்தருளு நாதா—பலிதீர்க்குஞ்
சன்மார்க்க சங்கந் தழைக்கவந்த சற்குருவே
யென்மார்க்க நீயறிவை யே. 965

அறியாப் பருவத்தி லாண்டவனே யென்றும்
பிறியாருள் ளத்திற் பிறியா—தறிவாய்ப்
பிறங்கும் பெரியோர்நற் பேறுபெறு தின்னு
முறங்குமெனை யாண்டிடுவை யோ. 966

ஓவென்று கூவியழ லோதுதற்குச் சேடன்றன்
றூவென்றும் போதாதிந் நாயேனின்—பாவென்றும்
பாடும் பணியும் படியவிலை சற்குருவே
வாடும் வகையொழிப்பாய் வந்து. 967

வந்தாலிவ் வையகமும் வானகமும் வந்துன்றன்
செந்தா மரைப்பாதஞ் சேருமே—நந்தாத
சச்சிதா னந்தந் தழையுமே சற்குருவே
வுச்சிதமெய் வீடுவிளை யும். 968

விளையும் பயிர்முளையின் மேலே தெரியுங்
களையுங் கவராது காணி—விளைமையிலே
வந்தென்னை யாண்டும் வழிபடேன் சற்குருவே
தந்தென்ன வுன்றன் றரம். 969

தாமுமென் னேக்காணுந் தன்மையுமென் னுண்ணின்
றிரமுமறி கின்றவிதந் தேரும்—வரமுதவ
வெந்தநாட் செல்லுமிதை யென்றனக்குச் சற்குருவே
யிந்தநா ளென்றருளின் றே. 970

இன்றுவரு மோ * வென் றிசைத்தகவி போற்பெறுதற்
கென்றுவரு மோவென்றே யெண்ணியெண்ணி—மன்றுறையும்
சித்தா நிதமேத்தித் தேம்புகின்றே னஃதெவ்வி
தத்தால் வருமதனைச் சாற்று. 971

சாற்றுஞ் சகசநிட்டை சாதகஞ்செய் யுந்தருண
மாற்றும் படியென் மனந்தன்னைற்—றேற்றும்வகை
யென்னு லுரைக்க வியலவில்லை யென்குருவே
வுன்னுற் கரைக்கவரா தோ. 972

வராதோ மனமுறினல் வாழ்வடையு மார்க்க
மிராதோவென் னெஞ்ச மிதமாய்த்—தராதோ
வரிதாம் பிறப்பிறப்பி லாதவின்ப மய்யா
பெரிதாமோ வீதுன்றன் பேர்க்கு. 973

பேர்சொல்லிற் போராத பேரின்பம் பெற்றுயலா
நேர்சொல்லி தென்றே நினைமனமே—பார்சொல்லும்
வான்சொல்லும் வள்ளலார் வாய்மையுறு மாண்பெவையு
நான்சொல்வ தென்னே நலம். 974

நலஞ்சேரு நாதாந்த நாடவரு நல்ல
புலஞ்சேரு மெழ்நற் புவியின்—பலன்சேருங்
குண்டலிப்பா லுண்ணவருங் கோதிலருட் பாவாலெல்ம்
மண்டலமு மேத்த வரும். 975

வருமுக் குணரகித மாநிலையின் மாண்புந்
தருமுப் பெரியசித்தித் தன்மை—வருமுறைமை
யாறு முறையருட்பா வாராயி லெத்துயரு
மாறுமுறை யுந்தெரிக்கு மாம். 976

தெரியாத தொன்றுமிராச் சித்தியெலா மெய்தும்
புரியாத வெக்கவியிற் போந்த—விரியாகு
மெப்பொருளுஞ் சொல்லவரு மென்குருவி னல்லருட்பா
செப்பொருகா னெஞ்சே தினம். 977

---

* இன்றுவரு மோநாளைக் கேவருமோ வல்லதுமற்
றென்றுவரு மோவறியேன் எங்கோவே—துன்றுமல
வெம்மாயை யற்று வெளிக்குள் வெளிகடந்து
சும்மா விருக்குஞ் சுகம்.

தினமுந் திருவருட்பா சிந்திக்கி லெல்லாத்
தினமுந் தருமனிடஞ் சேரா—வினமுநெஞ்சே
கல்லா தவரிடத்திற் காலங் கழிக்கின்றாய்
வல்லா னுனையடக்கு வான். 978

* "வான்காணு" வென்னு மகாதேவ மாலையினிற்
றேன்காணு நற்சுவைசேர் தீம்பாவை—நான்காணத்
திட்டமொடு நின்றாற் றெரியவரு நெஞ்சேயென்
னிட்டமொடு நீயு மிரு. 979

இருந்தாலென் சொல்வண்ண மென்னெஞ்சே நல்ல
மருந்தாங் குருவின்வாய் வண்ணந்—திருந்தாத
வுன்றனக்கு முன்னினத்தோ டுற்றவர்க்கும் போதிப்பே
னென்றனக்கும் புண்ணியமா மே. 980

ஆகாத நன்மையெலா மாகாதோ சற்குருவே
போகாத தீமையெலாம் போகாதோ—நீகாதற்
கொண்டென்னை யாண்டிடுதல் கூடாதோ குற்றமெலாங்
கொண்டென்னை வாட்டுவதோ கூறு. 981

கூறுந் தமிழ்மறையிற் கொண்டவெலா மெல்லவருந்
தேறுந் திறமாய்த் திருவருட்பா—வாறுமுறை
யாகவருள் செய்தளித்த வண்ணலென்றன் துன்பமெலா
மேகவருள் செய்தாள்வை யே. 982

ஆளாதோ நின்னருளிவ் வன்பனுளத் துன்பமெலா
மாளாதோ வுன்றன் மனமிரங்கிற்—றாளாதோ
விப்படியி லென்பிழைக ளென்றாலு மென்குருவே
யெப்படியு மென்னைவிடா தே. 983

விடாதோவென் றீயவினை வீணெனெஞ்சஞ் செய்த
தடாதோநின் காதி லடையப்—படாதோ
வென்றன் முறையெண்ணி லென்னுடைய சற்குருவே
வுன்றன் முறையுமிது வோ. 984

இதுவோ நின்னெண்ண மிதுவோநின் செய்கை
யிதுவோநின் வஞ்சநெஞ்சே யின்னு—மிதுவோநின்
பொய்வாழ்வு போதும் புனிதமுறுஞ் சற்குருவின்
மெய்வாழ்வு சற்றே விழை. 985

---

* மகாதேவமாலை, 49-ம் பாசுரம்:
"வான்காணு மறைகாணு ... "

விழைவின் விளைவை விசாரிக்கில் யாவும்
பிழையின்றி யில்லை பிறிது—மிழையின்றி
பூசியா லென்னெஞ்சே யொன்றுமுடி யாதென்னை
நேசியா விட்டா னினக்கு. 986

நினக்குச் செயலொன்று மில்லாமற் செய்வே
னெனக்குப் பயமே தினிமேற்—றனக்குவமை
யில்லாத வென்குருவி னின்னருளின் வல்லபத்தா
லெல்லா மெனக்குநல மே. 987

நலனே வருமென்று நான்செல் வழியின்
பலநேயம் விட்டிந்தப் பாரிற்—சலமேவா
வானே யெனநிற்கும் வண்மையுறி னெஞ்சேயெங்
கோனே கொடுப்பான் குணம். 988

குணமென்று நெஞ்சேயென் கொள்கையினில் லாமற்
பணமே முதலியவிப் பாரிற்—கணமேனுஞ்
செல்லுவையே லென்குருவின் செல்வாக்காற் செல்லவிடே
னல்லும் பகலு மறி. 989

அறியாயோ வென்னையுன்ற ஞணவத்தைப் போக்குங்
குறியாளென் றெண்ணியுன்றன் கூற்றைப்—பறியாயே
லின்றே யழித்திடுவே னென்குருவின் வாய்மொழியீ
தென்றே நினைத்திருநெஞ் சே. 990

நெஞ்சே யுனக்கோர் நிசமா முபதேசஞ்
செஞ்சே வடிக்கமலார் தேசிகன்வந்—தஞ்சேலென்
றிம்மையே யாள்வா னிராமலிங்க நாமமதைச்
செம்மையாய்ச் சிந்திப்ப தே. 991

சிந்திப்ப துன்றன் திருநாம மென்றைக்கும்
வந்திப்ப துன்றன் மலர்ப்பாதஞ்—சந்திப்ப
துன்னன்பர் கூட்டமதே யுன்றுணை யென்குருவே
யென்னன்பை யேன்றுகொள் ளே. 992

என்றுகொண்டா யென்றற் கியன்முத் தமிழியற்றிச்
சான்றுகண்டே னென்னினுநின் சற்சீடர்—போன்றுலகிற்
சஞ்சரித்தேன் சற்குருவே சற்றேனு மன்னித்தென்
னெஞ்சரிப்பை நீக்க நினை. 993

நினைத்துவிட்டான் மேலா நிலைபேறுண் டாகு
மனைத்துலகுங் காணவர லாகுந்—தனைத்தெரித
லன்று மெனமகிழ்ந்தா யற்பநெஞ்சே மன்னருட்பா
நன்றுபூன் றிப்பார் நயந்து. 994

நயந்துபசாந் தத்தலத்தை நாடின் மரண
பயந்துலையும் பாழ்வினையும் பாறுஞ்—சுயந்துலங்குஞ்
சுஞ்ஞானந் தோயுஞ் சுகரூப மாநெஞ்சே
யெஞ்ஞான்று மின்னருட்பா வேத்து. 995

ஏத்திநினை யெண்ணியுணர்ந் தின்பமுட னென்னுயிர்நை
வேத்தியமாய்ச் செய்ய விரைந்தருள்வாய்—நாத்திகரை
யாத்திகரா யாக்க வவதரித்த சற்குருவே
சாத்தியமெய்ஞ் ஞானத்தைத் தந்து. 996

தந்தவருட் பாவிற் றகரமெய்ஞ் ஞானமெனு *
மந்தமுறும் பாட்டி னருத்தமதை—யிந்தவித
மென்றறிய வேண்டுகின்றே னென்னுடைய சற்குருவே
யின்றருள்வாய் நாயேற் கிசைந்து. 997

இசைந்துவந்து வந்துன் னெழிலார் முகத்தை
யசைந்துழலு நெஞ்சை யடக்கி—நசைந்திருக்கு
மென்றன்முன் காட்டற் கிராமலிங்க சற்குருவே
வுன்றன் கருணையிலை யோ. 998

ஓய்ந்தவிடத் துள்விளங்கு மொண்பொருளை யுற்றிடற்குக்
காய்ந்தமனத் தோடிருக்கக் காணுமோ—தேய்ந்தமத
வாதியர்க்கு வாய்க்காத வள்ளா னினதருளென்
மீதிருக்கில் வந்து விடும். 999

விடுத்தலுள் வாங்கல் விளையா திருக்கி
னடுத்தரியி னிற்கலரு நன்மை—யடுக்குமென
வுன்றனருட் பாவி † லுரைத்தவண மென்குருவே
யென்றனக் குள்ளமைய வெண். 1000

எண்ணினு லேந்தநிலை யேலாது மெய்ப்பூசை
டண்ணினு லேந்தவினை பாறது—கண்ணினுந்
காணிலேந் நெஞ்சங் கரையாதென் சற்குருவை
நீணிலா ¶ நெஞ்சே நினை. 1001

---

* அருட்பெருஞ்சோதி அகவல் அடிகள் 45, 46:
"தகர மெய்ஞ்ஞானத் தனிப்பெரு வெளியெனும்
அகர நிலைப்பதி அருட்பெருஞ் சோதி ... ... "

† 6-ந்திருமுறை, மெய்யருள் வியப்பு, 63.
"தாங்கல்விடுதல் இரண்டும் எனக்குச் சமமதாயிற்றே"

¶ நீள்-நெடுநேரம், நிலா-ஒருவழி நில்லாத.

நினைத்தவெளி தாகு நிலைத்தலரி தாகு
மௌனத்துஞ்சொல் லேற்காத தென்னே—புனைத்துணையாக்
கொண்டிருக்கப் பார்த்தாற் குதிக்கின்ற யென்னெஞ்சே
கண்டிருப்பா ரென்குருவே காண். 1002

காணாத மேனிலையைக் காண்பேனோ கண்ணிணையிற்
கோணாத கோதிலிடங் கூடுவனோ—நாணாத
நெஞ்சமதை நின்பா னிறுத்துவனோ சற்குருவே
யஞ்சலென வாளாவிட் டால். 1003

விட்டா லெனைமட்டின் மேவுமோ நின்னிறைவு
தட்டாத நின்னருட்குத் தன்மமோ—வெட்டாத
சீரியலைச் சித்திபுரச் சிற்சபையிற் செய்தமைத்தாய்
பாரியலுள் ளோர்க்கும் பரிந்து. 1004

பரிந்துநின் பாதமலர் பற்றிப் பணியா
விரிந்துழன்று வீணில் விழைந்து—திரிந்துநைந்து
வாடுகின்ற வன்னெஞ்சை வள்ளலே நின்பணியை
நாடுகின்ற நல்வழியி னூட்டு. 1005

நாட்டுவதோ நன்னிலையி னூயேனை வன்பவத்தி
லாட்டுவதோ வுன்றனடி யார்பாலிற்—கூட்டுவதோ
நீட்டுவதோ வென்னெஞ்சை நின்மலனே நின்வடிவைக்
காட்டுவதோ வுன்றன் கடன். 1006

கடனுவ தென்னைக் கடைக்கணித்த லாகுந்
திடனுவ தென்மனத்தைத் தேற்ற—லுடனூறு
முன்னை விடாதிருத்த லுன்னதவென் சற்குருநீ
யென்னை விடாதிருத்தலே. 1007

இருந்தாற் கருணை யெனையடிமை யாக்கல்
திருந்தாவென் சுற்றத்தைத் தேற்றல்—வருந்தாத
நன்னாளை யேதருத னற்சித்தி யீதலுமா
மென்னு சிரியநினக் கே. 1008

நினக்கென்மேற் பட்ச நிலைத்திருந்தா லின்னும்
வனக்குரங்கு வன்மனத்தால் வாடிக்—கனக்கேதம்
பெற்றிருக்க லாமோ பெருமானே யித்துன்ப
மற்றிருக்கு மன்பீத லாம். 1009

ஈத லெவரிடத்து மின்சோற் புகன்றிடுத
லோத லுனதருட்பா வுள்ளுணர்தல்—பேதமிலாக்
கற்புறுத லுன்றனுருக் காட்சிபெறல் ராமலிங்க
வற்புதனே யுன்னருளா லாம். 1010

அருளை நினைந்தா லமருமெய்க் காட்சி
தெருளை நினைந்தாற் றினமு—மிருளொழியு
மேமசித்தி யுண்டாகு மென்னெஞ்சே சற்குருவி
னுமசித்தி யெல்லா நலம். 1011

நலமே நவில்கின்ற நல்லோர்கள் வாழும்
தலமேவி நிற்கவரந் தந்தாற்—சலமேவும்
வன்மனத்தை மாற்ற வராதோவென் சற்குருவே
வுன்மனத்தை யின்றே யுரை. 1012

உரைத்தால் வசதியிட முற்றிருப்பே னுன்றன்
விரைத்தா மலர்ப்பாதம் வேண்டித்—திரைத்தவுடற்
பெற்றவனு னுலும் பிறழாமற் சற்குருநின்
சொற்றவறே னீயே துணை. 1013

துணைநின் னடியன்றித் தொல்லுலகிற் காணே
னிணைநின் னருட்கெங்கு மில்லை—யணையின்றிக்
காணுங் கருணைக் கடலமுதே கற்பகமே
பூணும் பணியைப் புரி. 1014

புரிந்தவற்றை யாழ்ந்த புணரியிலே விட்டேன்
தெரிந்தவற்றை வீணே தெருவி—லெரிந்துவிட்டே
னென்போன்ற வேழையிங் கெங்குமிலை சற்குருவே
முன்போன்று வந்தருளென் முன். 1015

முன்வருதற் கேற்ற முழுத்தவமே செய்தறியேன்
பின்வருவ தென்னும் பிரியமுறி—னின்வருகை
யென்றே பெறலாமென் றேங்கிநிற்பேன் சற்குருவே
யின்றே வருத லினிது. 1016

இனித்தலுறு நின்னருட்பா வேத்துகின்ற போதிற்
கனித்தமனங் கொண்டு கருதித்—தனித்திருந்து
கண்ணீ ருகுத்துக் களிக்கேனோ சற்குருநின்
னுண்ணீர்மை யென்னறிவ னோ. 1017

என்னறிவே னுன்சித்த மேதறிவேன் செய்தவினை
பின்னறியேன் முன்னறியேன் பேதையேன்—மன்னறிவே
யில்லாதலைகின்றே னென்குருவே யென்னுளிருந்
தெல்லா மறிவாயே. 1018

ஏதுந்தெரியா வெனையடிமை யாக்கியுயிப்
போதுபடும் பரட்டைப் பொறுத்திருத்தற்—கேதுவென்றே
சித்தி வளாகத்திற் † சேர்ந்துவிட்டோ மென்றிங்கு
மெத்தி யிருப்பதுநன் றே. 1019

நன்றாக வென்னுடைய நாட்டமதை யென்னுள்ளே
நின்று யறிந்திலையோ நின்மலனே—தன்றாயைப்
பாராத பார்ப்பாய்ப் $ பரதவிக்கும் பாதகனை
யாரா தரித்திடுவ ரே. 1020

இடுதலடுத் தோருக்கே யேழையரு மிச்சைப்
படுத லடுத்தகுணம் பாரி—னடுதலைமை
நிற்குநிலை யோர்க்கிந் நெறியுண் டெனக்குமுண்டாஞ்
சற்குருநின் றண்ணருளாற் றன். 1021

தானந் தவமடக்கந் தாளாண்மை சத்வகுண
மானந் தருமம மதிமார்க்க—ஞானமிலாத்
தற்போதங் கொண்ட தமியேனை யன்றாண்ட
சற்போத சற்குருநீ தான் 1022

நீதானென் னல்லன்னை நீதானென் னற்றந்தை
நீதானென் னல்லகுரு நேர்தெய்வ—நீதானென்
னன்னேய னற்றுணைவ னல்லுறவா நண்ணுமெனக்
கென்னே யருளாத தின்று. 1023

இன்றுமுத லாநமக்கிங் கின்பொழியா வென்றேமென்
றென்றுமிது போன்றிருத்த லேற்குமோ—வன்றுரைத்த
சித்தனைத்துங் காட்சியுறச் செய்வதென்றோ ராமலிங்க
சித்த வுன்றன் சித்தமருள் செய். 1024

செய்கைநன் றேபலவுஞ் செப்பி யொளித்திருக்கி
லுய்கைநன் றேபெறவு முண்டுகொலோ—மெய்விளங்கு
முன்கருணைக் கோரழகோ வுத்தமனே யுண்மைசொல
வென்கனவில் வாராத தென் 1025

வாராத தென்னோ வடற்சபைசெய் வள்ளாலென்
தீராத தீவினையைத் தீர்த்தென்றும்—போராத
பாழ்பிறவித் துன்பைப் பறித்துன் பதம்பணியும்
வாழ்வுதர வென்முன்னு வந்து 1026

---

† சித்திவளாகம்: வடலூருக்குத் தெற்கே இரண்டு மைல் தூரத்தே யுள்ள மேட்டுக்குப்பம் என்னும் சிறு கிராமத்தில் வள்ளலார் எழுந்தருளி யிருந்த சிறு குடிசைக்கு இட்டபெயர்.

$ பார்ப்பு—பறவைக்குஞ்சு.

வந்துவந்து மாறாமல் வந்தனைசெய் மாந்தர்களின்
சிந்துலைத்துச் சிந்தையுறுஞ் செம்மையெலாந்—தந்தருளுஞ்
சத்தியமீ தென்றபடி சாரவருள் சற்குருவே
சித்திதருஞ் சித்திபுரத் தே. 1027

சித்திபுரச் சிற்சபையைச் சேவிக்கச் சித்தரெலா
நித்தியமுங் கூடு நிலைமையறிந்—தெத்திசையுள்
ளன்பாளர் வந்தேத்தி யானந்தங் கொண்டிடுவா
ரின்பார் வடலூ ரெனும். 1028

வடலூரென் னும்பார் வதிபுரத்திற் சென்றே
மடமாரு நின்செயலை மாற்றித்—திடமான
பத்தியுடன் சிற்சபையுட் பார்த்தடங்கி னெஞ்சேமெய்ச்
சித்தியுற லாஞ்சத் தியம். 1029

சத்தியவான் சற்குருநீ சாற்றியவோர் சன்மார்க்க
முத்தியுற நின்று முயற்சிக்க—வெத்தியெனை
யீர்த்திகத்தி னின்படைய வெண்ணுகின்ற வென்னெஞ்சைப்
பார்த்திருத்த னன்றோ பகர். 1030

பகர்ந்தாய்சன் மார்க்கம் பரிவொடுபன் மார்க்க
மிகந்தாய்நின் னேர்கருணை யென்னே—சகங்காண
வந்துவடற் சிற்சபைசெய் வள்ளாலென் வன்பிறவிச்
சிந்துதுலைத் தின்புறவே செய். 1031

இன்புறவே செய்தனினக் கேற்காதோ வென்னாளுந்
துன்புறவே செய்தலினுஞ் சோதனையோ—வன்புடைய
வண்ணலே யார்க்கு மடியேன்பா லிவ்வண்ண
மெண்ணலே னின்னெஞ்சி லே. 1032

நின்னெஞ்சஞ் சற்றிரங்கி னின்னைவிட்டோர் மாத்திரையும்
வன்னெஞ்சர் பாற்போக வாராதே—யென்னெஞ்ச
மீதறிந்து நன்றாக வென்குருவே யிவ்வளவு
சூதறிந்த தென்பாலென் சொல். 1033

சொற்பொருளைத் தேர்ந்தவன்போற் சொல்வேன் றிருவருட்பா
நற்பொருளை நன்குணரா நாயடியேன்—புற்பொருளைப்
போற்றுவர்பாற் போயயர்வேன் பூரணனே நின்னையன்றி
யேற்றுபவ ராரிங் கெனை. 1034

எனையறியா வேழையே னெங்குநிறைந் துள்ள
நினையறித லாகு முளவைத்—தினையளவு
முன்னவரு மோவென் றுயங்குகின்றேன் சற்குருவே
வுன்னதரு ளுண்டே லுறும். 1035

உறுவமற்று ளெல்லா முயர்வேதென் றன்னில்
வறுமையற்ற வானந்தவாழ்வே—பெறுமவற்றின்
சாதகமே செய்யாச் சழக்கனையென் சற்குருவே
தீதகலச் செய்வகையே செய். 1036

செய்வகைசெய் யாதிருந்தாற் சிற்றடியேன் றீமையொழிந்
துய்வகைசெய் தோங்குவனோ வுன்னடியிற்—பொய்வகையே
யில்லாத நற்பத்தி யெப்படியுண் டென்குருவே
செல்லாதென் றுலருளிச் செய். 1037

அருளிச்செய் யென்றுன் னடிபணிந்து நிற்கிற்
பொருளிற்பொய்ப் பூவையரிற் போந்த—விருளிற்கீ
ழ்ர்க்கின்ற வென்னெஞ்சை யென்குருவே யென்பாலிற்
சேர்க்கின்ற செய்கையருள் செய். 1038

செய்யாநின் சேவடியைச் சிந்தித்துஞ் சித்தமகிழ்ந்
தய்யாவென் றுன்பகற்ற லாகாதோ—வெய்யாத
வாழ்வெவர்க்கு மீந்தருளும் வள்ளாலிவ் வையகத்திற்
றாழ்வெனக்கு மாத்திரமோ தான். 1039

மாத்திரமோ செய்தாய் மனநின் மலரடியிற்
றோத்திரஞ்செய் யுங்காற் றுணிந்துநிற்கப்—பாத்தியமே
யில்லா தலையவெனக் கென்செய்கேன் சற்குருநீ
யல்லாதிங் காரடக்கு வார். 1040

வாரமிகக் கொண்டோர்நின் மாணடிக்குச் செந்தமிழ்ப்பா
வாரமெனக் கொண்டுரைத்தா ரம்புவியிற்—பாரமென
நின்றே னினையேத்து நேர்மையிலேன் சற்குருவே
யென்றேநா னீடேறு வேன். 1041

ஈடேறச் செய்வாயென் றெண்ணியவென் னைத்துன்பப்
பாடேறச் செய்தல் பராக்ரமமோ—காடேறுங்
காலஞ் சமீபித்துங் காருண்ய சற்குருவே
ஞாலந் தனிலேழை நான். 1042

ஏழைநா னென்றிவ் விகத்தி லெனைப்படைத்த
தாழையே யுன்னியென லாகித்தும்—வாழையெனும்
பாவையுணர்ந் தூழெல்லாம் பாறுமென்றுன் பாதமலர்
சேவைசெய் தேன்தயவு செய். 1043

செய்தபிழை சற்றுந் திருவுள்ளங் கொள்ளாதுண்
மெய்தவரு மேனிலையின் மேவிநிற்கச்—செய்வதுநின்
பெற்றியென்றின் புற்றிருக்கப் பெம்மானே யென்னெஞ்ச
மெற்றியெனை யேமாற்ற லென். 1044

என்பாலென் னெஞ்ச மிடுக்கண் ணிழைத்தவெலா
முன்பாலி லோயா துரைத்திருந்துந்—துன்பா
ரரசாக வைத்த லழகோவெங் கெங்கும்
பிரகாச மன்றோநின் பேர். 1045

பேர்கருணைப் பெம்மானின் பேருரைத்தோர் பேதமிலா
வோர்கதியை யுற்ற நுனதருட்பா—வோர்கவியிற்
காலடியைக் கற்றர் கவிசொற்றர் நாயேனின்
காலடித்தா சேத்தக் கருது. 1046

கருதுவார் நின்கவியைக் கண்ணீ ருகுப்பா
ரொருதுயரி லேனு முழலா—ரொருதுணையு
மில்லாமற் செய்நெஞ்சை யென்குருவே நின்னைவிட்டு
நில்லா திருக்க நினை. 1047

நினைநயத்தா லென்கின்ற நின்கவிகொண் * டேத்து
மெனைநயத்தா லெப்படியோ வீர்க்கும்—வினைவயத்தா
லென்றன் மனமையோ வென்செய்வே னென்குருவே
யுன்றன் மனமுமிது வோ. 1048

ஓதா துணரு முளவருளி யுன்னன்பர்
மீதான மேற விழைந்தனையே—சூதான
வெண்ணமுனக் கென்பா லிசைந்ததென்னே யென்குருவிவ்
வண்ணமுனக் காமோ வழுத்து. 1049

வழுத்த வகையறியா வாணுளைப் போக்குங்
கொழுத்த மனமுடைய கோளன்—பழுத்தவுடற்
கொண்டேன் குணங்கொள் குருவேயென் குற்றமெலாம்
விண்டேன் மிகையின்ன மே. 1050

இன்னமுனக் கென்பா லிரக்கமிலை யென்பான்முன்
சொன்னமுறை சூதென்றுஞ் சொல்லுவனோ—வென்னருமை
யய்யாவென் னப்பா வரசே யருட்குருவே
யெய்யாத வின்பருளின் றே. 1051

இன்றே யிணையிலின்ப மீந்தருளா தேயிருந்தா
லென்றேயென் றெண்ணிமிக வேங்குவதே—நன்றேயோ
"கோடையிலே" ‡ யென்றகுருவே குணரகித
மேடையிலே மேவ விரும்பு. 1052

---

* 951-ம் பாட்டின் குறிப்பைப் பார்க்க.

‡ 6-ம் திருமுறை, அருள்விளக்க மாலை, 2-ம் பாசுரம்:
"கோடையிலே யிளைப்பாற்றிக்
கொள்ளும்வகை கிடைத்த குளிர்தருவே ... ... "

விரும்புகின்ற மேலோர் விளம்புமுன்றன் மேன்மை
தரும்புமிணை யில்லாத தூர்த்த—னிரும்புவியிற்
செப்பவரு மோகினைப்போற் சித்தகுரு வுண்டென்றே
வொப்ப வருமோ வுரை. 1053

உரையுஞ் செயலுமுனை யுன்னுதலு நின்று
வரையுஞ்செய் யேனெனினும் வள்ளா—னரையுண்ட
தேகமடைந் தும்வடல்வாழ் தேசிகனே யென்சிறுமை
யேகவருள் செய்யாத தென். 1054

என்கடமை யுன்ற னிணையடியைய யேதொழுத
லுன்கடமை யுன்முகத்தைக் காட்டிடுதல்—பின்கடமை
போதமறுத் துன்றனருட் போதந் தனைப்போருத்த
லீதலது நின்னறம தேன். 1055

அறமுதலா நான்கு மடைவாயித் தேக
முறமுடியி லன்றே வுயர்வாந்—திறமன்றே
வெப்பிறப்பி லுண்டோ வெளியேற்குச் சற்குருவே
யிப்பிறப்பிற் சேரவரு ளே. 1056

அருளினு லெந்நலமு மாதுநமக் கென்று
மருளிலழி யாதே மனமே—யருளின்
தெருட்சுவையுண் டின்புறலாந் தெய்வமிதி லென்றே
யருட்சபைசெய் சித்த ரவர். 1057

சித்தரவ ரெவ்வுலகிற் சிற்றுயிர்க்கு நன்மைசெயு
நித்தரவ ரெங்கு நிறைந்திலகு—முத்தர்கட்கு
முத்தரவ ரைந்தொழிற்செய் மூர்த்தியவ ரென்மனமே
நித்தமுறை யாக நினை. 1058

நினைத்திருந்தால் ராமலிங்க நின்மலனை நெஞ்சே
வினைத்துயரெல் லாமொருங்கே வீடுந்—தினைத்துணையுஞ்
சந்தேக மேவேண்டாஞ் சத்தியமா கத்தருவா
னந்தேக நீங்கா நலம். 1059

நலந்தருவா யென்று நலியாத தேகப்
பலந்தருவா யென்று பணிந்தும்—பலனருளாக்
காரணமே தோவறியேன் கர்த்தனே யென்செய்தேன்
தாரணியிற் செய்யாத தப்பு. 1060

தப்பொருசற் றேனுந் தவறுது செய்கின்ற
வொப்பொருவ ரில்லா வொதியேனை—யெப்பொழுதுஞ்
சத்தினிபா தம்பெற்ற சத்தியர்வாழ் மெய்ஞ்ஞான
சித்திபுரத் தேயிருக்கச் செய். 1061

செய்வாயே யெண்ணம்போற் சித்திபுரத் தெஞ்ஞான்று
மூய்வார்வை வாரோவென் னுத்தமனே—மெய்வாழ்வு
தந்திடலா காதென்று சாற்றுவரோ சற்குருவே
வந்திடரைத் தீர்த்தருளு வாய். 1062

தீர்த்தருளிற் றுன்பமெலாந் தேசிகநின் னன்பருடன்
சேர்த்தருளி னின்பெருஞ்சீர் தேயுமோ—பார்த்தருளின்
முன்செய்த தீமையெலா முன்னிற்கு மோவென்றன்
புன்செய்கை நீங்கப் புரி. 1063

புரிந்துமுன் செய்தவினை போகப் பரிந்து
திரிந்தலையு மென்மனத்தின் றீமை—யெரிந்துவிடக்
கண்பார்த் தருள்வாய் கருணைநிறை ராமலிங்க
நண்பாவின் றென்னை நயந்து. 1064

நயந்தென்னை நாளு நலியச்செய் நெஞ்சாற்
பயந்தபய நீங்கப் பணிந்துங்—கயந்து
பராமுகஞ் செய்தல் பரமோ வடலூ
ரிராமலிங்க தேசிகனே யின்று. 1065

இன்றிரவில் வந்தென் னிடரெல்லாந் தீர்த்திடுவே
னென்றிதமாய்ச் சொல்லா திருந்திடிலோ—வென்றுநினைத்
தெய்வமென்று சிந்தித்துந் தேசிகனே சிற்றடியே
னுய்வதெங்கே சற்றே யுரை. 1066

உரைத்து நெகிழ்ந்துணர்ந்து முன்சொற் படியே
கரைத்துமென் னெஞ்சைநினைக் காணேன்—நிரைத்தவுடற்
பெற்றிளைத்தேன் பெம்மானின் பேரருட்பா வைத்தினமுங்
கற்றிளைத்த னன்றே கருது. 1067

கருதியுன்றன் சீரைக் கனிந்துரைத்தும் வீணே
யெருதினுழைத் திங்கிருத்த லேற்குமோ—வொருதினமும்
பாடவிலை யோநினருட் பாவையெனக் கின்பருள
நாடவிலையே யேழை நான். 1068

ஏழைநா னென்செய்கே னெங்குறுவே னென்னுடைய
வூழையே யுன்ன லுனக்கழகோ—மாழைநேர்
சிற்சபையைச் சித்தருறை சித்திபுரத் தேயமைத்த
நற்சபைக்கு நாயகவிந் நாள். 1068

இந்நாளே நன்று ளிறையருள்வா னென்றுரைத்த
தெந்நாள் வருவதினி யென்குருவே—அந்நாளை
யாவதடி யேனுக் கருவுருவாய்ச் சொப்பனத்திற்
சாவதற்கு முன்வந்து சாற்று. 1070

சாற்றுந் திருவருட்பா சாகாத சன்மார்க்கந்
தோற்றும் படியெல்லாஞ் சூக்குமமாய்ப்—போற்று
முலகமெலா நெஞ்சே வுடனிருந்தென் னோடு
கலகமுறு தென்றுங் கருது. 1071

கருதியுரு கித்துதித்தாற் காட்சியெலா மெய்துஞ்
சுருதிசொலு மெய்யின்பந் தோயுங்—கருவி
லொருநாளுஞ் சேரா வுளவுவரு நெஞ்சே
திருமுறையை யன்பாய்த் தினம். 1072

தினமிலம்பா டொன்றுற் றியங்கி மயங்க
மனமென்னைச் செய்யும் வகையாற்—கனங்குலைந்து
பொன்னுடையார் பாற்போய்ப் புழுங்குகின்றே னென்னையினி
யென்னுடையாய் விட்டிடுவ தேன். 1073

தேனோகற் கண்டோ செழும்பாகோ தீம்பாலோ
வானோர் அமுதோ வகையறியேன்—நான்ஒரும்
ஓர்முறையில் ஓர்பாட்டின் ஓர்சொல்லின் உட்சுவையை
ஓர்முறையிற் சொல்லவரு மோ. 1074

வருவாயில் லாத வகையாலென் பாவி
லொருவாது துன்ப முடையேன்—பெருவாழ்வு
காணேன் கடைக்கணிப்பாய் கர்த்தனே நிற்கன்பு
பூணேனென் குற்றம் பொறுத்து. 1075

பொறுத்தா ரரசாள்வார் பொங்கினர்கா டாள்வா
ரொறுத்தாலு மென்றுன்ப மோயா—திறுத்தாலுங்
காண்டற் களவில்லை கர்த்தனே யின்றுநினை
வேண்டலஃ தேகிவிட வே. 1076

விடவே வரும்விடய வேட்கையெலா நெஞ்சே
கெடவே வருமொருவாக் கேடும்—படவே
வழிபாடன் பாகவென் றும்வள்ளற் பதத்தி
னொழியாத மெய்யின்ப முண்டு. 1077

உண்டுறங்கா வாழ்வுண்டா முன்னலற வுன்னுநிலை
கண்டு களிக்குங் கதியுண்டாம்—பண்டுளவெல்
லாவினையுந் தீரு மருட்பாவி லோர்கவியை
நாவினா லோது நலம். 1078

நலன்றருமே வெண்செம்பூ நங்கைமார் தாஞ்செய்
பலன்றருமே ஞானசித்திப் பண்பின்—தலந்தனக்குட்
சித்திபுரஞ் சென்று தெரிசிக்கின் மற்றுநெஞ்சே
சித்திகளெல்லா மமையுஞ் சேர்ந்து. 1079

சேர்ந்தேசன் மார்க்கத்தர் சேவடியைப் போற்றுநல
மார்ந்தேநற் சித்திபுர வம்பலத்திற்—சார்ந்துலகி
லெல்லவருந் தம்மவரா யெண்ணினெஞ்சே மாயையினை
வெல்லவரு மன்றே விரைந்து. 1080

விரையேறு நின்கழலை வேண்டியுமென் னுள்ளே
யுரையேழி லின்றுவரை யொன்றுந்—திரையேனு
நீக்கா திருப்பதுவு நீதியோ சற்குருநின்
வாக்காலெக் காலம் வழுத்து. 1081

வழுத்தும் வகையின்றி வாய்த்தவருட் பாவைக்
கொழுத்த மனத்தாற் குலைந்தே—புழுத்தவுடற்
போற்றினேன் சற்குருவென் புந்தியுறும் புன்மையெலா
நீற்றிடற்கின் றேனு நினை. 1082

நினைவேண்ட வேண்டநெஞ்சே நின்சம் மதம்போ
லெனைவிடயத் தீர்க்கின்ற வென்னே—வுனையினியேன்
விட்டதுந வின்னருளா லென்னுள் ளடங்கிநிற்கக்
கட்டமுறக் கண்டிப்பேன் காண். 1083

காணாத காட்சியெலாங் கண்டுகொள வாமென்றே
வூணுதி விட்டே யுழல்கின்றார்—வீணாக
சித்திபுரச் சிற்சபையைத் தேர்ந்துதெரி சிக்கிலுண்டா
முத்திசித்தி வாய்க்கு முறை. 1084

முறையாறி லொன்றின் முறையாவோர் பாட்டைக்
குறையாத பண்ணோடு கூறின்—முறையாகச்
சித்திமுத்தி சேர்க்குமென்ற தேசிகன்சொல் வண்ணநெஞ்சே
யெத்தினமு மேத்தி யிரு. 1085

இருவோரு * மொன்றா யிருந்தடங்கி யேத்திற்
கருவோடு சேராக் கதியைத்—தருவோமென்
றெத்திசையும் போற்றுகின்ற வென்குருவின் வாக்கைநெஞ்சே
நத்தியிரு வுண்டாங் நலம். 1086

* இருவோர்—நெஞ்சாகிய நீயும் நானும்

நலந்தருதற் கோர்நாளு நண்ணுய விந்த
நிலந்தனிலே வீணுழைப்பி னின்றே—பலன்றருநின்
னன்முகத்தைக் கண்டு நலிவுறலோ சற்குருவே
யென்முகத்தைப் பாராத தேன். 1087

ஏன்பிறந்தேன் சற்றுமறி வில்லாத கல்லாக
நான்பிறந்தா னின்னன்பர் நற்பதத்தாள்—தாம்படுமே
லவ்வடைவின் மேலா மரும்பிறவி பெற்றுய்வே
னிவ்வடிவில் வீணாக வே. 1078

வேண்டியவா றெல்லாம் விரைந்தளிப்பா னன்முறையாய்
வேண்டினு லென்றே விளம்பியவா—றீண்டின்று
மோயா தழுதுமுனக் குள்ளிரக்க மில்லையெனைச்
சேயாக வெண்ணியருள் செய். 1089

செய்யும் பணிவிட்டுத் தீங்கிழைக்குந் தீயனையு
முய்யும் படிசெய்த லொவ்வாதோ—பெய்யுஞ்
சலகந்த ரம்போலெந் தாழ்வகற்றற் கிந்த
வுலகந் தனிலுதித் தோய். 1090

தோயாது தோய்கின்ற சூதறியா திவ்வுலகி
லோயாது துன்பத் துழல்கின்ற—நீயாது
முன்னலிதை யோதென் றுரைத்தவென்றன் சற்குருவே
யென்னசெய்தேன் சின்னவய தில். 1091

சின்ன வயததனிற் சித்திவளா கத்தினிலே
யென்ன நகையுனக்கென் றேயருளி—நின்னருட்பா
பாதப் புகழ்ச்சி படியென்ற சற்குருவின்
றேதப் படச்செய்வ தேன். 1092

ஏனென்னை யன்றுண்டாய்க் கிம்மூப்பி லிவ்வெறுப்பு
நானென்ன செய்தாலு ஞாயமோ—தேனென்ன
வொப்பா வருட்பா வுதவியவென் சற்குருமுன்
னெப்பாவஞ் செய்துதித் தேன். 1093

உதித்தமுத லிந்த வுலகினிலிந் நாளும்
விதித்தநெறி நில்லாது வீணே—கதித்த
வனியாயஞ் செய்யினுமென் னைசானே யிம்மூப்பி
லினியா கிலுமிரங்கா யேன். 1094

இரங்காயே யென்தேக மென்னுமோ வுன்றன்
தரங்காண வென்னுற் றரமோ—வரங்காண
விப்பாற் றவஞ்செய்ய வேலுமோ ராமலிங்க
வப்பாவிப் போதே யருள். 1095

அருளசையா தொன்றுமசை யாதென்ற * ஞானப்
பொருளசையாப் போதம் புகன்று—மருளசையா
தென்னே மயங்கி யிருந்திழிந்தேன் சற்குருவே
யின்னே யருளாத தென். 1096

என்பேரை யின்று மிடுகுறியா வேற்றுகந்தே
னின்பேரைக் காரணமாய் நேர்ந்தறிந்தே † னன்பேயு
ஞானசித் தித்தலத்தை நன்றுறச்செய் சற்குருவெற்
கானசித்தி யின்றே யருள். 1097

அருளிருந்தா லென்று மழியாவின் புண்டாம்
பொருளிருந்தா லிவ்வுலக போகம்—பெருகு
மிருவகையில் லாவேழைக் கென்குருநின் சித்த
மொருவகையே னுந்தரலென் றே. 1098

என்றே வெளியே னிடரொழிந்து நின்னருட்பா
நன்றேதிச் சித்திபுர நண்ணிநின்று—மன்றேங்கு
முன்னுருவை யேமறவா துன்னிவுய்ய வேண்டுமெனக்
கின்னுமரு ளாதவித மென். 1099

என்பாலிற் பூமகளை யேனனுப்ப வில்லையென்றே
னன்பாலங் கைக்கனிபோ லாக்கிவைத்த—வின்பாரு
மன்றுறையும் ராமலிங்க வள்ளலையென் னெஞ்சேநீ
யென்றுமற வாம லிரு. 1100

இருந்தா லிகபரமெய் யின்புறையு மென்றும்
வருந்தா தருளமுதம் வாய்க்குந்—திருந்தாது
நீண்டவரைத் தூய்தாக்கு நீதியுண்டா னெஞ்சேநம்
மாண்டவனார் செய்ய வருள். 1101

---

* அருட்பெருஞ்சோதி அகவல், அடிகள் 977—978.

"அருளலா தணுவும் அசைந்திடா ததனால்
அருணலம் பரவுகென் றறைந்த மெய்ச் சிவமே"

† என்பேர் - இந்நூலாசிரியர் பெயர் - கந்தசாமி பிள்ளை. இது இடு குறிப் பெயர்.

நின்பேர் - வள்ளலார். இது காரணப் பெயர்.

அருளடைய வேண்டி லருட்பிரகா சன்ற
னருளுடையோர் பாவி னமையும்—பொருளுணர்ந்து
சிந்திப்ப தென்றுமொரு சித்திபுரஞ் சென்றுநெஞ்சே
வந்திப்ப தென்று மதி. 1102

மதிதருமி ராமலிங்க வள்ளலருட் பாமெய்க்
கதிதருமுக் காலுணருங் கல்வி—நிதிதருமென்
றெண்ணித் துதித்துய்வா ரென்னெஞ்சே யெங்குமுளோர்
நண்ணிற் பெறுவாய் நலம். 1103

நலமென்ப தென்று நலிவற் றிருத்தல்
பலமென்ப தைந்தும் பறித்தல்—நலமென்ப
துத்தர ஞானசித்தி யோர்புரமென் ‡ றேநமென்மற்
னித்தநுணந் தோன்றியநு ளே. 1104

அருள்செய்வா ரிங்குநமக் காரென் றழுங்கேல்
மருள்செறிவார் போன்று மனனே—யிருள்செறியும்
பாசா டவிகடத்தும் பண்புறுமி ராமலிங்க
வாசானே வந்தருளு வான். 1105

வானத்தின் மீது மயில்குயிலா யிற்றென்றே ¶
மோனத்தின் மேலா முறைதெரித்தா—னூனமறுத்
தன்புருவாம் ராமலிங்க வாசிரிய னெஞ்சேமெய்
யின்புருநா மெய்தியுற வே. 1106

---

‡ 6-ம் திருமுறை, சிதம்பரமான்மியம் எனும் பதிகம்.

¶ 6-ந் திருமுறை, கீர்த்தனைகள்

"வானத்தின்மீது மயிலாடக்கண்டேன்
மயில் குயிலாச்சுதடி—அக்கச்சி
மயில் குயிலாச்சுதடி."

மயில்-ஒளி. குயில்-வெளி மயில்-சோதியையும் குயில் நாதத்தையும் உணர்த்தும்.

தொம்பதம்-ஒளி, தற்பதம்-வெளி, அசிபதம்-இன்பம்.
"தொம்பதவுருவொடு தற்பத வெளியில்
தோன்றசிபத நடநான்காணல்வேண்டும்."
(6-ந் திருமுறை, தலைவி பாங்கிக்கு உரைத்தல் 2-ம் பாசுரம்.)

வேகாத காலாதி மெய்ப்பொருளைக் கண்டு கொண்டு
சாகாதமெய்பெறலே சன்மார்க்க—நீகாதற்
கொள்ளுறுதி யென்ற குருராம லிங்கவெனக்
குள்ளுறவே கொள்வா யுளம். 1107

உளவெவையுஞ் சித்தாந்தத் துள்விளங்கு மென்னு
முளவுமுறை யாறி * லுணர்த்தி—யளவளவா
நற்பதமே காட்டியதி னுட்டுவித்த ராமலிங்க
சிற்பதனே வாழ்கவுன்றன் சீர். 1108

முற்றிற்று.

## வாழி.

வாழியெனைப் பாடென்ற வாய்மைத் திருமலர்வாய்
வாழியெனக் கின்ப மலர்கண்கள்—வாழியருள்
வாழிகுரு ராமலிங்கம் வாழியருண் மெய்யடியார்
வாழிசுக மார்க்க வழி.

ஸ்ரீமத் திருவருட் பிரகாசவள்ளலார் திருவடிகளே சரணம்.

சுபம். சுபம். சுபம்.



* ஆறில்-ஆறுந் திருமுறையில்.

6-ந் திருமுறை, தோழிக்குரிமைகிளத்தல், 10-ம் பாசுரம்:
" பரமதனேடுலகுயிர்கள்.... ... ... ...
உரமிகுபேர் உலகுயிர்கள் பரம் இவை காரியத்தால் உள்ளனவே காரணத்தால் உள்ளன இல்லனவே, தரமிகுபேர் அருளொளியாற் சிவமயமே எல்லாந் தாமெனவே யுணர்வது சன்மார்க்க நெறிபிடியே."

இப்பாசுரத்தில் சித்தாந்த நுண்பொருளைத் தெளிவாக விளக்கியுள்ளதை உய்த்துணர்க.

சிவமயம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை.

# குருநேச வெண்பா.

திருநா ளருந்தீர்த்தந் தெய்வநிலை யொன்று
மொருநாளுங் கண்டதிலை யுண்மை—யருணெனன்
பாலருளிச் செய்யப் பரமகுருவே யிந்தக்
காலநல மென்றே கருது. 1

காலங் கடந்த கடவுளைக் காண்டற்குக்
காலங் கருதாதெக் காலத்துஞ்—சீலந்
தனினினைக்கச் சாற்றியவென் சற்குருநின் ஞான
மினிதுரைக்க வென்று மருளே. 2

என்மார்க்கஞ் சன்மார்க்க மென்று மிறப்பொழிக்குந்
துன்மார்க்க முற்றுந் தொலைக்குமென்ற—நன்மார்க்க
மென்றும் பயின்றறியா வேழையெனை நின்னருளே
யின்றும் வலிந்தாளு மே. 3

சாகாத கல்வித் தரமுடனே போகாநீர்
வேகாத காலுணர்தல் வேண்டுமென்று—மாகாத
லோடருளி யெங்கே யொளித்தனையோ சற்குருவே
யீடறியா வென்முன்ன ரே. 4

நரைமரண மூப்பறியார் நற்குலத்தா ¶ ரென்றோர்
வரைபுகன்ற வாறுவடல் வள்ளால்—திரைமலிந்த
பொய்யையை யச்செய்திப் புத்தமுதந் தந்தருள்வாய்
மெய்யைமெய் யாக்க விரைந்து. 5

---

¶ ஆறாந்திருமுறை, உறுதிகூறல், 7-ம் பாசுரம்:
" நரைமரண மூப்பறியா நல்ல
வுடம்பினரே நற்குலத்தார்... ... ... ..."

கடையுகத்தி லுள்ளங் கறுத்தவர்மெய் யின்ப
மடையவந்த சற்குருவே யைந்தி—னிடையி
லொருபதா மென்னை † யுணர்த்த நினையன்றி
‡ யிருப துவகைவே றேது. 6

அகத்தே கறுத்தென்ற வன்பார் கலியி
னகத்தில் விளங்கு மடைவை—யிகத்தேது
மின்றுவரை காணே னிராமலிங்க சற்குருவே
யென்று புரிந்தருள்வை யே. 7

துன்பத் தினவு தொலையவிலை யென்றேத்த
வின்பக் கணமேவந் தெய்தலுற்றே—னென்பக்கத்
திப்படியுஞ் செய்தற் கிசைந்தனையே சற்குருவே
யெப்படிநின் மாண்பையறி வேன். 8

எந்தநோ யுங்கணத்தி லேகச்செய் தோயென்றன்
தந்தநோய் தீர்க்கத் தயையிலையோ—சந்ததமு
முன்னையுன்னி னேனென் றுரைத்தவுடன் சற்குருவே
யென்னையந் நோயில்லையே. 9

ஒருமையுட னென்றுரைத்த வோர்கலியி லுள்ள
வருமையுறும் வேண்டுகோ ளன்போ—டிருமையினும்
வேண்டுமென்று வேண்டுகின்றேன் வித்தகனே யென்றேக
மாண்டுவிடா முன்னம் வழங்கு. 10

சென்றுரைப்பார் சொல்லிற் சிறியா னெனுங்கலியெற்
கென்றுரைத்தா யென்றுநினைத் தேங்குகின்றேன்—தொன்றுதொட்டு
வந்தவகை மாற்றும் வழியறியேன் வள்ளாலின்
றந்தவகை தீர வருள். 11

புண்படா மெய்யும் புரைபடா நெஞ்சகமுங்
கண்படா தென்றுங் கருதியுள்ள—நண்பறாச்
சீலருட னெஞ்ஞான்றுஞ் சேர்ந்துய்யச் சற்குருவென்
பாலருளல் வேண்டும் பலன். 12

---

† பஞ்சாட்சரத்தின் நடுவெழுத்தாகிய 'ய' ஆன்மாவை உணர்த்தும், தமிழிலக்கத்தில் ஒருபது (பத்து) எழுதுவது ௰ ய.

‡ தமிழிலக்கத்தில் இருபது 'உய' என்று எழுதப்படும். உய-உய்ய,

பெர்த்தியம * லப்பிணிசேர் புன்குரம்பை சன்மார்க்க
சத்தியலா லெஞ்ஞான்றுஞ் சாகாத—சித்தியுறு
மென்றருளுஞ் சித்திபுரத் தெந்தாயே சுத்தவுடம்
பென்றருள்வாய் நாயேற் கிசைந்து. 13

மான்றா மூலக வழக்கின் படியென்று
சான்றாக வோர்கவியைச் சாற்றியது—மேன்றாேறு
வெத்தலத்திற் கிவ்வா றிசைத்தனை யென் சற்குருவே
யத்தலத்தின் றன்மை யருள். 14

இறந்தா ரெழுவரென்ற வென்குருவவ் வுண்மை
மறந்தா ருலகறிவோர் மாயை—துறந்தார்தம்
போதமிறந் தாரென்று போதிப்பார் நாயேற்கப்
போத மிறக்கப் புரி. 15

அம்பலத்தா னல்லருளா லம்புவியிற் செத்தவரென்
கம்பலத்தா லேயெழுவார் காணென்ற— † நம்பரம
முத்தகுரு சொற்பொருளை மூதுணர்ந்த சித்தரன்றி
யித்தரையில் யாரறிவ ரே. 16

ஓவுறாத் துன்பஞ்செய் யூற்றையுடம் பெஞ்ஞான்றுஞ்
சாவுறா மெய்ந்நிலையைச் சாருமென்று— ‡ நாவுகந்து
சொல்லியவென் சற்குருவே தூயவரு ளில்லாத
வல்லியனெஞ் சேற்கோ வழுத்து. 17

ஒருநான்கொன் றின்முனுற்ற வொன்றாங் குருவே
யிருநான்கு நாலரையா மென்னை—யிருநான்
கரைவீசத் தாற்கண்டின் பன்படையக் கண்பார்
திரைவீசுந் தேவவருட் சிந்து §. 18

---

* 6-ந் திருமுறை திருவருட்பேறு.

" பொத்திய மலப்பிணிப் புழுக்கு ரம்பைதான்
சித்தியற் சுத்தசன் மார்க்கச் சேர்ப்பினால்
நித்திய மாகியே நிகழு மென்பது
சத்தியஞ் சத்தியஞ் சகத்து ளீர்களே."

† 6-ந் திருமுறை சுத்தசிவநிலை 39-வது பாசுரம்:

" யான்புரிதல் வேண்டுங்கொல்... ... ..."

‡ 6-ந் திருமுறை திருவருட்பேறு.

" ஓவுறாத்துயர்செயும் உடம்புதானென்றும்"

§ ஒருநான்கு ஒன்று-ஐந்து. ஐந்துக்குமுன் உற்ற ஒன்றும் குருவே-பஞ்சாக்ஷரத்துக்கு முன்னே பொருந்திய 'சிகார' எழுத்து நீ.

இருநான்கு—எட்டு. நாலரை—இரண்டு. இருநான்கு நாலரையாம் என்னை—எட்டும் இரண்டும் கூடிய பத்தாகிய (ய) என்னும் ஆன்மாவாகிய என்னை (ய என்பது ஆன்ம அக்கரம்)

இருநான்கு—எட்டு.எட்டு அரைவீசம்—கால் (வ). பஞ்சாக்ஷரத்தில் 'வ' என்பது கால் (திருவடி) உணர்த்தும். வ—அருள்.

ஆகவே ஆன்மாவாகிய என்னை அருளால் கண்டு இன்படையக்கண் பார்.

சிந்து—கடல். அருட்கடலில் திரைவீசும்படியான தேவ!

தொண்டன்செய் தோழன் சுடரடிக ளாக்கிடவிம்
மிண்டன் வினைநீக்க வேண்டுகின்றே—னண்டமெலாஞ்
செங்கோற் செலுத்தத் திருவுளங்கொள் சற்குருநீ
யெங்கோனு மன்றோ வியம்பு. 19

மரணபய நீங்காதே வாழ்வதிலென் வீணே
திரணமுஞ் சம்மதியாத் தீதாங்—கரணந்
தியங்கவரு மென்றோயென் தேசிகனே யந்தப்
பயந்தொலைய நின்கடைக்கண் பார். 20

ஆற்றுவெள்ளம் வாராமுன் னைந்தணைசெய் வீரென்று *
சாற்றுமொரு சித்திபுரச் சற்குருவே—கூற்றுவருங்
காலமுநீ செய்யுங் கருணையுமீ தென்றணைக்கோன்
பாலறியச் சொல்வாய் பரிந்து. 21

எண்ணமெலா நன்றாக வின்றே முடித்தருள்வான்
திண்ணமிது நெஞ்சே தெரிந்தடங்கி—விண்ணப்ப
முள்ளபடி செய்துகொண்டா லுத்தமவி ராமலிங்க
வள்ளலுடன் முன்போ லுவந்து. 22

வடற்சிற் சபையுடையான் வாய்மலர்ந்த வண்ண
முடற்சிற் சபையினிடை யூடே—யடக்கமுடன்
சஞ்சலமே சற்றுமின்றிச் சார்ந்திருந்தா லென்மனனே
வஞ்சமிலா வாழ்வு வரும். 23

சுத்தநிலை பெற்றுய்யத் தூயவடற் சிற்சபையை
வைத்தகுரு ராமலிங்க வள்ளலே—நித்தமுறும்
பொன்னைநிகர் நின்னருளாற் போகின்றேன் சென்னைநகர்க்
கென்னைநலஞ் சேரவரு ளே. 24

சென்னையினி லுற்ற சிறுநோய்கள் சேராம
லென்னைநல மாயிருக்க வென்றுமருள்—தன்னைநிக
ரில்லாத ஞானசித்தி யெல்லாம் விளங்கச்செய்
வல்லாய்நின் னுள்ள மகிழ்ந்து. 25

தருமமிகுஞ் சென்னைத் தலத்துறுநோ யென்ற
னருகில்வரா வண்ண மருள்வாய்—திருமருவுஞ்
சித்திபுரச் சிற்சபைமெய்த் தேசிகனே நின்னடியே
நத்தியவண் செல்கின்றே னான். 26

---

* 6-ந் திருமுறை உறுதிகூறல் 3-ம் பாசுரம்:

"ஆற்றுவெள்ளம் வருவதன்முன் அணைபோட அறியீர்... ..."

விதியின் விதமே விளையுமெனின் மேலாம்
பதியின் பயனுளதோ பாரில்—விதியொழிக்கச்
சிந்தனைசெய் யென்றுஞ் சிவனையென்ற சற்குருவை
வந்தனைசெய் நெஞ்சே மகிழ்ந்து. 27

ஆசுவரா வாழ்வை யருளாயே யலம்புவியி
லேசுவரே யென்றென்னை யேசுவரே*—யீசுரனென்
றுன்னையிர வும்பகலு முன்னியுன்னி வாடுகின்றேன்
பின்னையெவ ரீவார்நற் பேறு. 28

எக்கால மென்னெண்ண மீடேற வெண்ணுவையோ
வக்கால மேனு மருள்செய்வாய்—முக்காலுந்
தெண்டனிட்டேன் குற்றமெலாந் தீரவருட் டேசுருவங்
கொண்டவுயர் ஞானக் குரு. 29

என்னெண்ண மீடேற்றா திவ்வுலகி லேங்கவைத்த
லுன்னெண்ண மோகருணை யுள்ளானே—பொன்வண்ணச்
சேவடியைச் சிந்திக்குஞ் சிற்றடியேன் றன்னையினி
யாவதஞ்ச லென்றே யருள். 30

பல்விடயப் பாட்டிலெனைப் பாழ்படுத்தும் பாவநெஞ்ச
நல்விடய நாடநெடு நாணவின்றுஞ்—சொல்விதமாய்
நிற்கவிலை யென்செய்கே னின்மலவென் சற்குருநின்
சொற்கடங்குந் தீருந் துயர். 31

பொன்னுடையார் பொய்வாயிற் போந்துபல போதெல்லா
மென்னுடையா யென்னையென்று மேங்கவைத்த—னின்னுடைய
செய்வகையன் றென்னினுமென் சிந்தொழியச் செய்தின்றே
வுய்வகைசெய் சற்குருநீ யோர்ந்து. 32

சற்குருவே நின்னுடைய சந்நிதியிற் சந்ததமு
நிற்குநெறி யென்றெனக்கு நேருவதோ—வெற்குறுநீ
சொல்வாய்முன் னின்னுருவாய்ச் சொப்பனத்தில் வந்தேனும்
கொல்வாயென் றீயவினைக் குன்று. 33

கல்லான்மெய் சொல்லான் கருணையிலான் காதகஞ்செய்
பொல்லானன் புள்ளாரைப் புண்படுத்தும்—வல்லானென்
றெல்லாருந் தூற்று மெனைச்சீட னாக்கொண்ட
நல்லானை நெஞ்சேநீ நாடு. 34

அன்பே யணுவுமிலா வற்பனெனை யாண்டிடுதற்
குன்பே ரருள்சற்று மொப்பாதோ—நின்பேதை
யெப்படியுஞ் சொல்வே னெனக்கிரங்கிச் சற்குருவே
யப்படிக்கே தேனு மருள். 35

*ஏ—ஏ! சுவரே - குட்டிச்சுவரே என்று என்னை ஏசுவரே - இகழ்வரே.

ஆதியஞ் ஞானமலத் தாழ்ந்தவெனை நன்மனிதச்
சாதியினிற் சாரவைத்த சற்குருவே—மாதுயராஞ்
சாதல் பிறத்தலிலாச் சத்தியிற் சார்ந்திருக்க
நீதமுமுண் டென்பா னினை. 36

மதியாதார் வாசல் மறந்துஞ்செல் லாத
மதியாரும் வாழ்வுஞ்சொன் மாறு—மதியாளர்
தம்முறவும் வஞ்சரொடு சாராவகையு நெஞ்சே
நம்முடைய சற்குருசொல் நாடு. 37

இத்தருண மென்றுயரை யெண்ணி யிரங்கியருள்
பத்தனல வென்றே பகர்ந்தாலு—மித்தரையோர்
நல்லார்க்கும் பொல்லார்க்கு நன்கருளுஞ் சற்குருநீ
யெல்லாஞ் செயலாகு மே. 38

எல்லாஞ்செய் வல்லானென் றெல்லாரு மேத்துகின்ற
வல்லானே யென்பான் மறதியுண்டோ—செல்லாதோ
நின்னருளொன் செய்கேனின் னீடிலகி னின்னைவிட
வின்னருள்செய் வாரில்லை யே. 39

இடைவிடா மெய்யன்போ டென்றுந் துதிப்போர்
தடையின்றிச் சன்மார்க்க சங்க— மடைகுவரென்
றெத்தியெனை விட்டா லிரக்க மொருவிலென்ற
சத்தியவா னீயன்றே சாற்று. ४०

---

* 6-ந் திருமுறை, பிள்ளைப்பெரு விண்ணப்பம் 93-ம் பாசுரம்:

"வருமுயிர் இரக்கம் பற்றியே... ... ...
இரக்கம் ஒருவில் என் உயிரும் ஒருவும்... ..."

94-96 ம் பாசுரங்களும் கவனிக்க.

முருகதாசர் தாம் இயற்றிய விஞப்பதிகத்தில்,

'அரக்கரிற்றலையாய' எனும் பாசுரத்தில்

"இரக்கமே வடிவாம் வடலூரான்"

என்றும்,

'களபமென்முலை...' எனும் பாசுரத்தில்,

"மிளகைநேர் ஒருசிறிய வண்டேழுந்து
விளக்கில் வீழினும் விழிப்புனல் சிந்தி
இளகு நெஞ்சகம்பெறும் வடலூரான்"

என்றும் வள்ளலார் சொரூபத்தை விளக்கினர்.

குற்றங் குணமாகக் கொள்வோய் குறைநீர்க்கு,
மற்றங் குறித்தே யலேவின்றே—னற்றருண
மீதேயென் றெண்ணி யிரங்கியருள் சற்குருவே
சூதே யலவென்றன் சொல். 41

துத்தியமே * செய்யிற் றுயரந் தொலேயுமென்ற
சத்தியநின் வாக்கின் றரமறிந்தும்—பத்தியுடன்
செய்யாதே வீணிற் றிரிந்திழிந்தேன் சித்திபுரத்
தய்யாவே மன்னித் தருள். 42

பொன்னாற் புவியிற் புருடனெனப் போற்றுவா
ரென்னு லதைவிரும்பி லெய்திடுமோ—நின்னாலே
சாவும் பிறப்புமறுஞ் சற்குருவே மற்றுமுள்ள
யாவும் பெறலாகும் யான். 48

பலபடவி ரிந்திழுக்கும் பாதகநெஞ் சுன்பாற்
சுலபமுறு மன்புபெறச் சோர்ந்தே—நிலவுலகில்
வாட்டமறச் செல்வதந்தோ வன்னா லதன்கொடிய
நாட்டமறச் செய்வாய் நயந்து. 44

மானமின்றிச் சோர்ந்து மதிமயங்கி மெய்யொழித்தே
தானமின்றித் தன்பெருமை தான்கொண்ட—வீனமுறும்
வன்பரொடு கூடா வகைசெய்வித் தென்குருநின்
னன்பரொடு சேர வருள். 45

இலக்கண விலக்கியத்திற் கென்றுஞ்சா காத
விலக்கா யிலங்கு மெழிலார்—குலக்குருவே
யில்லாமை யில்லேயெனக் கென்று மெனக்குத
வில்லாமை நன்றே வியம்பு. 46

எப்படியு நின்னடியை யென்றுமற வாதவன்போற்
செப்படிவித் தைச்செய்யுந் தீரனென—விப்படியி
னன்ருய் நடிக்கின்ற நாயேனேச் சற்குருவே
யென்ருளு வாயறிகி லேன். 47

கண்டவிடத் துப்புகழ்தல் காணு விடத்திகழ்தல்
கொண்டவென் னெஞ்சக் குறைநீக்கிக்—கொண்டடக்கி
வஞ்சமிலா வாழ்வடைய வள்ளானின் னுள்ளமுவந்
தஞ்சலஞ்ச லென்றே யருள். 48

---

* துத்தியம் - தோத்திரம்.

எக்கால மேழையெனை யெங்கிருக்க வெண்ணுதியோ
வக்கால மின்றே யருள்செய்வாய்—முக்காலுஞ்
சத்தியஞ்செய் தென்குறையைச் சாற்றினேன் ராமலிங்க
நித்தியவென் கட்ட நினைந்து. 49

மாழைநேர் மாவடலின் மன்றமர்ந்த மாதேவா
பாழையே யெண்ணிப் பலனிழந்த—வேழையேன்
பாடறிந்த நிற்குப் பரிதாப மில்லையென்றிந்
நாடறியச் சொல்வேனிந் நாள். 50

பரிதாப மென்னிடத்துன் பாலில்லை யென்னிற்
பெரிதாந் தயையுளநின் பேரே—பெரிதாக
வென்று நிலைத்திருக்க வேற்குமோ சற்குருவே
யென்றுரைப்பே னெண்ணி யிரங்கு. 51

தெருவின்மண் கட்டிவிண்டாற் றேர்ந்ததயை யுள்ளோ
ருருகுவா ரென்றுரைத்த வுண்மைக் † —குருபரனே
வுன்னிடத்தி லில்லையென்பே னுன்னியழு துங்கருணை
யென்னிடத்தி லின்மையினு லே. 52

குருவேநான் செய்தகுற்றங் கோடியிருந் தாலு
முருவே தரிசிக்க வுன்னிற்—கருவே
றறுக்குமென் றேபகலு மல்லுமகிழ்ந் துற்றே
னொறுக்குமுன் றன்சீ ருளம். 53

சத்தியவான் வார்த்தையிது தானுரைத்தே னென்றருளு
நித்தியநின் சொல்வணமிந் நீடுலகி—லெத்தினத்திற்
கண்டானந் திக்கவருங் கர்த்தனே யித்தருணம்
விண்டாலென் றுன்பம் விடும். 54

செல்வநிறை சித்திபுரச் சித்தனே நின்னருளாற்
பல்வகையாய்ப் பாடியுள்ள பாடல்களை—நல்வகையா
யச்சிலிட வேண்டுவதற் காதரவு செய்தருள்வா
யிச்சிறுவ னிச்சையிது வே. 55

---

† வள்ளலார், ஜீவகாருண்யத்திறத்தில் தாம் மேம்பட்டவர்களாக மதித்த மாணாக்கர் சிலர்க்குக், குறிப்பால் ஜீவகாருண்யத்தின் உண்மை நிலையை விவகாரத்தில் விளக்கிக் காட்டிய கதை:

இரண்டு பெரியோர்கள் தெருவில் போகும்போது ஒருவர்கால் ஒரு மண்கட்டிமீது படவே அது தூளாகியது. தூளாகியதைக் கண்டு மற்றொருவர் மூர்ச்சையாயினர். (சடப்பொருள்களிடத்தும் அதனதன் இயற்கையை அழிக்காதிருத்தல் வேண்டும் என்பது தமை யுணர்ந்து எல்லாம் சிவமயமாகக் கண்ட பெரியோர் கொள்கை.)

பூசைக்கும் பாலுக்கும் பொய்த்தோழன் காவலென ¶
வாசைக்கு மெய்யடியா ரன்புக்கு—மாசையுள்ளிற்
கொண்டவனவன் னெஞ்சே குலகுருவா லிக்கணமே
தண்டனையே செய்யத் தகும். 56

எத்தனை நா ளென்னோ டிருந்துவஞ் சித்தநெஞ்சே
யித்தனை நாட் சென்றதுன்ற னீனமுறுஞ்—சித்தமதைக்
கண்டுகொள வுன்னைக் கணத்தின் மறக்கருணை
கொண்டுதண் டிப்பார் குரு. 57

சித்தகுருவே நின்னைச் சிந்திக்கும் போதென்னை
யித்தரையிற் பெண்பா விழுக்கின்ற—மத்தநெஞ்சின்
கெட்டப் படிவமுற்றுங் கேடாக்கிச் சற்குருவென்
னிட்டப் படியிருக்க வெண். 58

அறத்துளர்க்கோர் பட்சி யலாரையெட்டுக் காலி
மறத்தினுக் கோரெண் மறைசொல்—விறைக்குப்பாம்
பேறுநில மென்றருளு மென்குருசொல் வண்ணநெஞ்சே
மாறுபடா தென்றுஞ்செய் வாய். ‡ 59

---

¶ பூசை - பூனை. பூனைக்கும் தோழன் பாலுக்கும் காவல் என்பது பழமொழி. உலக ஆசைக்கும் மெய்யடியார் அன்புக்கும் ஆக இரண்டிடத்தும் நெஞ்சு பற்றுதலைக் குறிக்கின்றது.

‡ அறத்துளோர்க்கு ஓர்பட்சி ; ஓர்பட்சி-ஓர்பறவை. ஈண்டு பறவை 'ஈ' என்னும் பறவையைக் குறிக்கும். அறத்துளோர்க்கு ஈ (கொடு) என்பதாம்.

அல்லார்க்கு—அறத்துளோரல்லாதவர்க்கு, எட்டுக்காலி — நான்கு காலி + நான்கு காலி.

(நான்கு காலுடைய மிருகம்.)
நான்குகாலி—பரி (குதிரை).
நான்குகாலி—கரி (யானை) ஆகவே எட்டுக்காலி—பரிகரி.
அறத்துளோரல்லாரைப் பரிகரி (விலக்கிவிடு)
மறம்-பாவத்திற்கு, ஓர் எண் - ஓர் இலக்கம்
ஈண்டு 'ஐந்து' என்னும் இலக்கம்.
ஐந்து - அஞ்சு. ஆகவே பாவத்திற்கு அஞ்சு (பயப்படு)
இறைக்கு - இறைவனுக்கு, பாம்பு - பணி.
ஏறு - ரிஷபம் - விடை. நிலம் - செய்.

**ஆகவே இறைவனுக்குப் பாம்பேறு நிலம் - இறைவனுக்குப் பணி விடைசெய்.**

உன்னையே யோர்கணமு முள்ளபடி யுன்றாத
வென்னையே யாதரிப்பா ரெத்தனைபேர்—தன்னைமறந்
துன்னடியை யோயாம லுன்னுமவர்க் கென்குருவே
யென்னநிலை யீந்திடுவை யே. 60

சற்குருவி னாறெழுத்தைச் சந்ததஞ்சிந் திக்கினெஞ்சே
துற்குணங்க ளெல்லாந் தொலைந்துவிடும்—பொற்குணமே
யுற்றுக் கலைகடந்த வுத்தரமெய்ஞ் ஞானநிலை
பெற்றுக் களிக்கவரும் பேறு. 61

சந்தோட நம்பாலிற் சற்றிருந்தால் வள்ளலுக்கு
நந்தோட மெல்லா நடுநடுங்கி—நைந்தோட
மாட்டாதோ வென்சொன் மறுத்ததினால் வல்லநெஞ்சே
காட்டாதே நின்கடையைக் கட்டு. 62

சற்றுந் தயவிலையே சாமியென்றேன் வார்த்தையிலை
முற்றுந் தடையுன்றால் மூடநெஞ்சே—பற்றுவிட்டே
யெப்போதென் சொற்போ லிருப்பாயோ வென்குருவுக்
கப்போதே நற்றயையுண் டாம். 63

பார்த்தா னினைத்தாற் படித்தாற் பயனறிந்தால்
வேர்த்தாக்கை முற்றும் விதிர்விதிர்க்கும்—பேர்க்காத
வீட்டினிய வின்பம் விளையு முலகியலீர்
பாட்டிலோர் பாதியருட் பா. 64

கற்கண்டு தேன்பாகுங் கைக்குமென்பார் நின்னருட்பா
சொற்கண்டு கொண்டபெருஞ் சூழ்ச்சியுளார்—கற்கண்டு
கண்டகருங் காக்கையெனக் கைப்பென்று கற்றறியார்
விண்டதனாற் கொண்டார் வினை. 65

திருவருட்பா வைத்தினமுஞ் சிந்திக்கி னன்றாய்
வருவிருப்ப மெல்லாமும் வாய்க்கும்—கருவிருப்பம்
வாராதென் வஞ்சநெஞ்சே வல்வினையின் வாதனையுஞ்
சேராதிஃ தேசத் தியம். 66

அருட்பா வனுதினமு மர்ச்சிக்கி னம்முன்
மருட்பாடு மாறு மனனே—யிருட்பாட்டின்
மூவாசை முன்னொழியு முதுணர்வோர் சார்புண்டாஞ்
சாவாத வாழ்வுந் தரும். 67

அருட்பாவி னுட்கருத்தை யாய்ந்துணர்ந்த வான்றோர்
விருப்பாக வேறெருநூல் வேண்டா—ரிருப்பாக
வெந்நூலி னுள்ளு மிருக்கின்ற வெப்பொருளு
மிந்நூலிற் காணுதலா லே. 68

சமயமத சுத்த சமரசசன் மார்க்கஞ்
சமரசமா சுத்தமுமே சார—வமர்ந்திருந்த
திவ்வருட் பாவுள்ளி லெழிலார் கவிப்புலவீர்
செவ்வருட்பேர் காண்பீர் தினம். 69

ஆறு முடிமுடியி னந்தரங்கச் செம்பொருளை
யாறு முறையி லமைத்தருளு—மாறெழுத்தைக்
கொண்டகுரு நாதன் குரைகழலைப் போற்றிநெஞ்சே
யண்டமெலாங் கண்டுகொள லாம். 70

நம்மினுமின் புள்ளாரை நன்குகொளன் மைத்திரிய
நம்மினுமே ழைக்கீத னற்கருணை—நம்மினுமே
மெய்யன்பர்க் கேமுதிதை வெய்யர்க்கு பேட்சையிவை *
செய்யென்பா ரைச்சேர்நெஞ் சே. 71

களங்கமில் லாதகல்வி கற்றோர் கவியு
மிளங்கவியு மொப்போ வெனினு—மிளங்குழவி
வாய்ச்சொலின் றோர்க்கினிக்கும் வள்ளலே யென்றுநீதை
தாய்க்குமே லன்றோநீ தான். 72

கரும்பின்சா றும்பாகுங் கற்கண்டுந் தேனும்
விரும்புங் கனியும் வெறுப்பாம்—பெரும்புவியி
னுத்திகரும் போற்றி நயந்துபடித் தேயுருகி
யேத்துமருட் பாவினிப்புக் கே. 73

சத்தியநின் சற்சரிதஞ் சாற்றியதை யச்சிலிடற்
கொத்திருந் தென்னை யுபசரிப்போ—ரித்தரையி
லில்லாதேங் கக்கண்டு மென்குருவே சற்றிரக்க
மில்லாமை யென்பாவி லேன். 74

வாட்டமிலா வாழ்வுண்டாம் வன்னெஞ்சே வள்ளலின்சொ
னாட்டமதை நாடி நடுகின்று—னீட்டமொடு
கேட்டதனு லென்னபலன் கேடே யினியுமுன்றன்
ஆட்டமொழிக் காதவகை யால். 75

பெருவாய்மை யெல்லாம் பிறங்கவருட் பாவைத்
திருவாய் மலர்ந்தருளுந் தேவே—வருவாயே
யில்லாம லுண்மயங்கி யேங்குகின்ற வேழையைநீ
யல்லாம லாதரிப்பா ரார். 76

---

* வேதாந்த நூல்கள் மைத்திரியம் - நம்மினும் இன்புள்ளோரை நன்கு கொள்ளுதல், கருணை - ஏழைக்கு ஈதல், முதிதை - மெய்யன்பர்க்கு ஈதல், உபேட்சை - கொடியார்களிடம் அசட்டைசெய்தல் எனக்கூறும்.

வடவிருக்குந் தெய்வ மணியே யினிமே
லிடநெருக்க முள்ள விரும்பிற்—கடினக்
கருப்பையிற் சேராக் கதியருளித் தேகந்
திருப்பே யருவருப் பே. 77

நால்வகையொ ழுக்கத்தி னாலரைக்கீழ் முந்திரியென்
பால்வதிய வில்லைகொடும் பாதகனென்—மேல்வருங்கூற்
றென்செயுமோ வென்செய்கே னென்குருவே யக்கூற்றின்
வன்செய்கை மாற்றமனம் வை. 78

பஞ்செனவே பாவி படும்பாட்டைப் பார்த்திருந்து
மஞ்சலென வாதரஞ்செய் யாதிருந்தாற்—றஞ்சமென
நின்பாதந் தாழ்ந்துநின்று நின்மலனே யென்பயனோ
வுன்பாற் கருணையுமுண் டோ. 79

பெருங்கருணை யாளனெனப் பேர்பெற்று மென்பாற்
றருங்கருணை யில்லையெனிற் றக்கோர்—தரும்பெயர்தா
னீடித்து நிற்குமோ நேயமிகுஞ் சற்குருவே
நாடிக் கடைக்கணருளு ட்டு.80

அன்றுவலிந் தற்பனெனை யாண்டிருந்து மன்னியனென்
றின்றுமறந் தேயிருப்ப தென்குருவே—நன்றுகொலோ
கொண்டபின்புங் குற்றங் குறியார் குவலயத்தோர்
தண்டனையுஞ் செய்தணைப்பர் தாம். 81

மறக்கருணை செய்த வகைபோது மென்பா
லறக்கருணை செய்வ தறமே—திறக்கருணை
யென்பாலிற் சற்று மிலையென்று சற்குருவே
யுன்பாலி லுங்கொள்வ தோ. 82

சாதி சமயச் சழக்கைவிட்டா லன்றிநம்முட்
சோதிதனைக் கண்டுகொளத் தோன்றாதே—நீதியென்ற †
சற்குருவின் சொல்வண்ணஞ் சற்றேனும் பேதமின்றி
நிற்குநெறி நெஞ்சே நினை. 83

---

* நாலரைக்கீழ் முந்திரி என்பது மிகச்சிறிய எண் அளவைக் குறிக்கும்.

† சாதிசமயச் சழக்கை விட்டேனருட்
சோதியைக் கண்டேனடி—அக்கச்சி
சோதியைக் கண்டேனடி.

(அப்பா - அப்பாஜி - அப்பாச்சி, அண்ணா - அண்ணாச்சி, ராவ் - ராவ்ஜி என்று வழங்குதல்போல் அக்காள் - அக்காச்சி - அக்கச்சி என மருவி வழங்குகிறது போலும்.)

கோணு நிலையிலென்னுட் கூடியிருந் தால்மனமே
காணாத காட்சியெலாங் கண்டிடலாம்—வாணாளைப்
போக்காதே வீணேநான் போற்றியுரைக் குஞ்சொல்லை
நீக்காதே நிற்க நினை. 84

கற்பம் பலவாய்க் கனலினடுக் காலூன்றி
நிற்பவர்க்கு முள்ளொளித்த * நின்மலனாந்—தற்பரனைத்
தான்கலந்தொன் றாயிலங்குஞ் சற்குருவின் தன்மையடி
யேன்கலந்து சொல்வதரி தே. 85

எப்படியு மென்குருவை யீரைந்து காற்குள்ளே †
தப்படியே யின்றித் தடங்கடல்சூ—ழிப்படியிக்
கண்டேமெய் யின்புறலாங் கன்னெஞ்சே பல்காலும்
விண்டேனுன் னையம் விடு. 86

பத்தேகா னாழிகைக்குட் பாரிலுள்ளோர் பார்த்தானந்
தித்தே யிறவா திருந்திடற்கே—முத்தேகந்
தந்திடவே வந்திடுவேன் சத்தியமென் னுங்குருவைச்
சிந்தனைசெய் நெஞ்சே தினம். 87

தேன்மருவுஞ் சோலைவளர் சித்திபுரச் சிற்சபையி
னான்மருவி நாவார நாளுமுன்றன்—பான்மருவித்
தோத்திரஞ்செய் தேயிருக்குந் தூயவனா யென்னையுஞ்சற்
பாத்திரனாய்ச் செய்வாய் பரிந்து. 88

உத்தர ஞானசித்தி யோங்கவட லூர்வெளியிற்
சுத்தமுளோர் சூழ்ந்தேத்தத் தூயசபை—வைத்தருளு
நித்தியனே சத்தியனே நின்மலனே யென்னையுமங்
கெத்தினமும் வாழ்ந்திருக்க வெண். 89

சித்தி வளாகமென்றோர் சிற்றூரைச் செப்பியதிற்
சித்தியெலாஞ் செய்வமெனச் சேர்ந்திருந்தே—பத்தியுட
னிவ்விளக்கைத் தெய்வமென வேத்துங்க ‡ ளென்றுமறைந்
தெவ்விடத்துச் சென்றாயி தென். 90

---

* மகாதேவமாலை, 55-ம் பாசுரம்:
"கற்பங்கள் பலகோடி செல்லத்தீய
கனலினடு வூசியின்மேற் காலையூன்றி ... ..."

† ஈரைந்துகால் - பத்துகால் - இரண்டரை.
இரண்டரை நாழிகையில் வள்ளலார் தோன்றுவர் என்பதைக் குறிக்கும்.

‡ வள்ளலார் தம்மைச்சூழ்ந்திருந்த கூட்டத்தாருக்கு ஒரு அகல் விளக்கை எடுத்துக்கொடுத்து அதைக் கடவுளாகக் கொள்ளும்படி சுட்டினர். இவ்விளக்கு இன்றும் மேட்டுக்குப்பத்தில் இடைவிடாமல் எரிந்து கொண்டிருக்கிறது.

நின்னையொப்பா ரில்லையிந்த நீணிலத்தி னின்மகிமை
யென்னையொப்பா ராரறிவா ரென்குருநின்—பொன்னையொப்பாஞ்
சேவடியைச் சிந்திக்குஞ் சீடரடி யார்க்கடிய
னுவதற்கு மன்பில்லை யா. 91

அன்பே வடிவா யமர்ந்தபெரி யோரெல்லா
முன்பேரை யுன்னி யுருகுகின்ற—ரென்பேரை
யென்னவென்று லென்று வெழுவில்லை யென்குருவே
யென்னசொல்வே னுணமுமில் லேன். 92

வீட்டில்விருப் புள்ளோரை வீட்டைவிட் டெத்துறத்தி
யோட்டில்விருப் பங்கொளச்செ யுத்தமனென் *—றேட்டி
லெழுதிவைத்த நின்னடியை யென்றுமென் னெஞ்சந்
தொழுதிருக்க வோருளவு சொல். 93

கல்லாலின் கீழமர்ந்த கர்த்தனென்கோ வெக்காலு
மெல்லாஞ்செய் சித்தனென்கோ வென்குருவே—கல்லாத்
தரித்திரரை யோம்புந் தயாபரனு னீயேற்
பொருத்தமிது வென்றே புகல். 94

ஏயர்கோ னென்பவரா லேசடைந்த சுந்தரர்க்கே
யாயகைம்மா றீதென் றறிகிலேன்—னேயமுற
வீசனிரக் கத்தைவெளி யிட்டதற்கே † யென்றருளுந்
தேசிகநின் சொற்புதிய தேன். 95

---

* 2-ந் திருமுறை, தெண்டனிட்டேனென்று சொல்லடி எனும் கீர்த்தனை, 7-ம் சரணம்:

" பாட்டுக்காசைப்பட்டு ... ... ...
வீட்டுக்காசைப்படுவாரை வீட்டைவிட்டுத் துரத்தியே
வேட்டாண்டியாயுலகி லோட்டாண்டி யாக்குவார்க்கு."

† திருவருண் முறையீடு, 133-ம் பாசுரம்:

"சடையவநீமுன் தடுத்தாண்ட நம்பிக்குச் சற்றேனினும்
கடையவனேன்செயும் கைம்மாறறிந்திலன் கால்வருந்தி
நடையுறநின்னைப் பரவைதன்பாங்கர் நடத்தியன்பர்
இடைவரும் உன்றன் இரக்கத்தைத் தான்வெளியிட்டதற்கே"

2-ம் திருமுறை, கழிபகற்கிரங்கல், 5-ம் பாசுரம்:

" தாயராதியர் ... ... ... ...
ஏயர்கோனுக்கன்றருளும் எம்பெருமான் ... ..."

பண்ணூலுன் சீரினைச்சம் பந்தர்சொல வென்றருளு
மெண்ணுநின் சீர்கேட்போ ரெல்லாரு—மண்ணாரும்
விண்ணாரும் போற்றும் வியன்கதியைப் பெற்றுய்வா
ருண்ணா வருளமுத முண்டு. 96

பகுதி தகுதியெனும் பாட்டின் படியே †
தகுதியொடு செய்யாமற் றாழ்ந்தே—மிகுதகுதற்
கிவ்வுலகுற் றேனெனினு மேத்துகின்றேன் சற்குருவென்
றெவ்வுலகும் போற்றுமுனை யே. 97

ஆர்கொண்டார் சேய்க்கறியிட் டாரென்ற பாட்டருளும் ‡
பேர்கொண்ட நின்னன்பர் பேருரைப்போர்—சீர்கொள்
ளடியா ரடிவணங்கு மன்புமிலா வென்னை
யடியானென் றெண்ணலுமா மா. 98

---

* சிவநேசவெண்பா, 41-ம் பாசுரம்:

"பண்ணூலுன் சீரினைச்சம் பந்தர்சொல வெள்ளெலும்பு
பெண்ணான தென்பார் பெரிதன்றே—அண்ணாவச்
சைவவடி வாஞான சம்பந்தர் சீருரைக்கில்
தெய்வவடி வாஞ்சாம்பர் சேர்ந்து"

† 2-ம் திருமுறை, பொதுத்தனித்திருவெண்பா, 9-ம் பாசுரம்:

"பகுதி தகுதி விகுதியெனும் பாட்டில்
இகலில் இடையை இரட்டித்—தகவின்
அருச்சித்தால் முன்னுமது கடையாம் கண்டீர்
திருச்சிற் சபையானைத் தேர்ந்து."

பகுதி, தகுதி, விகுதி—இம்மொழிகளின் முதலெழுத்துக்களைச் சேர்த்தால் **பதவி,** இடையெழுத்துக்களைச் சேர்த்து, **கு கு கு** மூன்று **கு** இரட்டித்தால் **ஆறுகு - அறுகு.** அறுகு-அறுகம்புல்.

கடைசியெழுத்துக்களைச் சேர்த்தால் **தி - தி - தி** மூன்று '**தி**' **முத்தி.**

ஆகவே அறுகால் அர்ச்சித்தால் பதவி (பதமுத்தி)யும், முத்தி (ஐக்கிய முத்தி)யும் பெறலாம் என்றவாறு.

‡ சிவநேச வெண்பா, 47

" ஆர்கொண்டார் சேய்க்கறியிட் டாரே சிறுத்தொண்டப்
பேர்கொண்டா ராயிடில்... ... • ..."

என்னும் பாட்டில் பிள்ளைக்கறியிட்டதாகிய மிகப் பெரிய தொண்டு செய்த அடியார்க்குச் சிறுத்தொண்டர் என்றமைந்ததாயின் ஏனையர் தொண்டு எம்மாத்திரம் எ-று.

சந்தோட மென்றுமொரு சத்விடயத் தில்லாம
லந்தோ வெனையவலத் தாழ்த்துமன—னைந்தோட
செய்வதென்றோ சித்திபுரச் சித்தனே சிற்றடியே
னுய்வதென்றோ வுள்ள துரை. 99

கண்பாரென் றேத்துங் கணப்போதுங் கூடாமல்
விண்பாரு மேத்தும் வியன்குருவே—பெண்பாலி
லென்றனைவ லிந்திழுக்கு மென்மனத்தின் வன்பொழிக்க
வுன்றனையல் லாதெவரிங் குண்டு. 100

மறைவிரித்த வாக்கால் வழுத்தியவோர் பாட்டின்
முறையிருப்பின் கேட்கு முறையோர்—குறையுமின்றி
யுண்டென்று யென்முறையை யோர்காலுங் கேட்டிலையோ
கண்டென்று லின்புண்டோ காண். 101

எந்தவகை யேத்துகினு மென்பா விரக்கமிலை
யிந்தவகை நீயிருந்தா லென்செய்கேன்—பந்தவகை
வென்றோர்மற் றோரின் வினையொழிக்கும் வித்தகநிற்
கென்றோவென் பாலிரக்க மே. 102

எவ்வாறென் னிச்சையெலா மீடேறு மோவறியே
னவ்வா றெனக்கருள லாகாதோ—செவ்வாற்றி
னின்னருளுக் கென்னெண்ண நேரிலையோ சற்குருவே
வுன்னருளுண் டாயினெலா முண்டு. 103

குலத்திற் கொடியேன் குணத்திற் கொடியே
னலத்திற்சற் றேனுமென்று நாடேன்—மலத்திற்
புழுத்தபுழுப் போன்றிடுவேன் புண்ணியனே பந்தத்
தழுத்தியிடா தென்றனையின் றுள். 104

ஆளாது கைவிட்டா லம்புவியி லிவ்வடியேன்
கேளாத கேள்வியெலாங் கேட்டிருந்து—வாளா
நலிந்தாழ்வே னென்குருவே நன்றலவே யன்று
வலிந் தாண்டதின்றோ வழுத்து. 105

மறப்புநினைப் பற்றலிம் மாநிலத்தி லென்றும்
பிறப்பு மிறப்புமிலாப் பேறே—பெறப்படுமென்
றெல்லவர்க்குஞ் சொல்லவல்ல வென்குருவே வென்றனக்கந்
நல்லவகை யுற்றிடற்கு நாடு. 106

பாட்டா லவன்புகழைப் பாடுகின்றோ ரென்றவுன்றன் *
பாட்டா லறிந்தபடி பாடியதைக்—கேட்டார்
வினையற்றார் யானோ வினையுற்றே னீதுன்
னினைவுற்ற தின்றோ நிகழ்த்து. 107

எம்பெருமா னின்விளையாட் டென்றகவி யின்படியே †,
எம்பெருமா னென்னைவளர்த் தேங்கவைத்தால்—வம்பெனவே
நண்ணுவார் நிற்கதனை நாயேன்றன் துன்பொழிக்க
வெண்ணுவா யின்படைய வே. 108

எத்தனைக்குற் றஞ்செயினு மிப்பிறப்பின் முற்பிறப்பி
லத்தனையு நீபொறுக்க லாகாதோ—சித்தனைத்துஞ்
செய்யும் பெருங்கருணைத் தேசிகனே சிற்றடியே
னுய்யும் வகையருள வுன். 109

கடைக்கணித்தா லென்றன் கவலையெலாந் தீரும்
உடைக்குமூ னுக்கு முனையே—யடைக்கலமாய்க்
கொண்டிருக்கு மென்னைக் குலகுருவே துன்படையக்
கண்டிருப்ப தோநின் கடன். 110

எனக்குத்தி யோகம்பின் பீந்திடுவே னென்ற
வுனக்குமறப் பென்பதுவு முண்டோ—தனக்குவமை
யில்லா தவதரித்த வென்குருவே யெற்கருள்வ
தில்லாமை யேனோ வியம்பு. 111

சான்றோரென் றெல்லாருஞ் சாற்றவைத்தல் புத்திரரை
யீன்றோர்க் கழகென் றியம்பிடுவா ‡ —ரான்றோர்க
ளவ்வண்ண மென்றனையே யாக்காது கைவிடுத
லெவ்வண்ண மென்றந்தை யே. 112

---

* நெஞ்சறிவுறுத்தல், 235.
"பாட்டால் அவன் புகழைப் பாடுகின்றோர் பக்க நின்று
கேட்டால் வினைகள்விடை கேட்குங்காண்.

† மகாதேவமாலை, 87-ம் பாசுரம்:
"எம்பெருமான் நின்விளையாட்டென் சொல்கேன்நான்
ஏதும் அறியாச் சிறியேன் எனைத்தான் இங்கே
செம்புனலால் குழைத்த புலால்சுவர்சூழ் பொத்தைச்
சிறுவீட்டில், இருட்டறையில், சிறைசெய் தந்தோ,
கம்பமுறப் பசித்தழலுங் கொளுந்த, அந்தக்
கரணமுதற் பொறிபுலப்பேய் கவர்ந்து சூழ்ந்து
வம்பியற்றக் காமாதி அரட்டரெல்லா மடிபிடித்து
வருத்த என்றோ, வளர்த்தாய் எந்தாய்!"

‡ "தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்"—திருக்குறள்,

விசையற்ற பம்பரம்போல் வீழாத முன்பே
நசையற்ற மேனிலையை நாடி—வசையற்ற
வின்படையச் செய்வாயோ வென்குருவே யென்னையினுந்
துன்படையச் செய்வாயோ சொல். 113

காற்றாலே யென்ற $ கவியறிந்து மெக்காலுஞ்
சோற்றாலே மாந்து சுழல்கின்றேன்—கூற்றாலே
செய்யவருந் தீமையுறச் செய்வாயோ சற்குருவே
வுய்யவரும் வாழ்வருள்வா யோ. 114

ஆதிபௌ தீகத்தா லாதியாத் மீகத்தா
லாதிதெய்வீ கத்தா லழிவுபடாச்—சோதியாந்
தூயவடி வம்பெற்ற தோன்றலே நின்னடியர்க்
காயவடி யேனு வருள். 115

எத்தனைவி தத்திலுனை யேத்துகினு மென்பாலுன்
சித்தமது சற்றுந் திரும்பவிலை—யெத்தனைநாள்
துன்பம் பொறுப்பேனித் தொல்லுலகிற் சற்குருவே
யின்பம் பொருந்திடுதற் கெண். 116

கடைவிரித்தோங் கொள்வாரைக் காணு தடைத்தோந்
தடையின் றிரண்டரைக்குட் சார்ந்தே—கடைதிறப்போ †
மென்றுரைத்துக் காணுதிருக்கின்று யென்குருவே
யென்றுவரு வாயறிகி லேன். 117

எத்தனைபேர் நின்வரவை யெண்ணியெண்ணி யேங்குகின்று
ரெத்தனைநாட் சென்றிடுமோ விங்குவர—லத்தருண
மித்தேகத் தோடிங் கிருத்துவையோ வென்குருவே
யெத்தேகத் தென்றே வியம்பு. 118

---

$ 6-ந் திருமுறை.

"காற்றாலே புவியாலே ... ... ...
எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும் மெய் ... ... "
ஈண்டு சுத்ததேகத்தின் இலக்ஷணம் கூறியவாறு.

† வள்ளலார் திருக்காப்பிட்டுக் கொள்வதற்குச் சிறிது நேரத்திற்கு முன் சூழ்ந்துள்ள அடியர் குழாங்களை நோக்கி **"கடைவிரித்தோம் கொள்வாரிலே, கட்டிவிட்டோம்"** என்று கூறினர்.

ஏதோநின் னெண்ண மெவரறிவா ரிவ்வுலகிற்
சூதோ வலவுன்றன் சொல்லென்றே—போதேயெண்
போக்காது போற்றுமெனைப் புண்ணியனே பொன்றலுற
லாக்காது மெய்யின் பருள். 119

கண்ணாரக் கண்டு களிப்பதெக் காலமென
வெண்ணு திருப்போரிங் கெங்குமிலை—யுண்ணாடும்
பத்தியிலே னுக்கும் பரிந்தருள்வாய் சற்குருவே
நித்திய வாழ்வோங்கு நினை. 120

யாரறிவார் நின்னியலை யாரறிவார் நின்செயலை
யாரறிவார் நின்மகிமை யன்புருவே—யாரறிவா
ரென்னிற்றற் போத மிறந்தா ரருட்குருவே
வுன்னிலறி வார்நின் னுளம். 121

சூட்சியெலாந் தோன்றுஞ் சுருதியெலாஞ் சொல்கின்ற
மாட்சிமைசேர் மன்றமர்ந்த வள்ளலையே—காட்சியுறக்
கண்டாற் கதிக்குவழி காட்டுமட வன்னெஞ்சே
கொண்டாடு மென்னுடனே கூடு. 122

கூடியிருந் தாலென் குடிகெடுத்த வன்னெஞ்சே
நாடியவிங் கெல்லா நடக்குநம்பா—வாடியவோர்
வள்ளலருள் மாநிலையும் வாய்க்கவரு மோர்பகற்கு
ளுள்ளபடி சொன்னே னுனக்கு. 123

தவம்புரியேன் தலஞ்செல்லேன் சற்சனரைச் சாரே
னவம்புரிவே னெவ்விதத்து மாகா—தவனெனினு
மஞ்சலென வாக்கா லருள்வாயேற் சற்குருவே
யெஞ்சலிலா வின்படைகு வேன். 124

எண்ணாத சீர்பெறுநின் னின்சரிதப் புத்தகத்தைக்
கண்ணாரக் கண்டு களிப்படைதற்—கண்ணாகா
னெண்ணியநல் லெண்ணமினு மித்தனைநாட் செல்லுமென
நண்ணி யிருக்க நவில். 125

கற்றவர்கள் சொல்லுங் கவிபோன்று நற்கல்வி
யற்றவென் றன் புன்கவியா காதெனினு—நற்றவர்க
ளுண்ணிலவுஞ் சற்குருவே வுற்றசுகச் * சொல்லெனவே
யெண்ணியேற் றுக்கொள்வை யே. 126

காலத்தைத் தாழ்த்திடிலெக் காலத்தி லென்விரதம்
ஞாலத்தி னன்றாய் நடைபெறுதல்—சீலத்தை
யெல்லவருங் கொள்ளச்செய் யென்குருவே யிச்சமய
நல்லவரஞ் சொல்லவர நாடு. 127

* சுகம் - கிளி.

பூமிபதி யுந்தலத்திற் * பொற்சபையி லேசித்த
சாமிவிஜ யஞ்செய்தே சர்வசித்தி—நாமிருமை
யின்படையச் செய்திடுவா ரென்றருளு மென்குருவின்
னன்புடைமை யாரறிகு வார். 128

குலத்துமுதன் மைந்தனெனக் கூறியுளா ரென்றாய்
நலத்திற்கென் றேயறிந்த நாளிந்—நிலத்திலெங்கு
முன்றன் சரிதமென்று மோதுகின்றேன் சற்குருவே
யென்சஞ்ச லந்தொலைய வே. 129

என்றல்லி னும்பகலு மெண்ணி யிரங்குவர்பால்
நன்றல்ல தெல்லாமு நாடாதே—மன்ற
மிராமலிங் கார்க்குநல † விச்சைதர வந்த
விராமலிங் காயநம வே. 130

சந்ததமுஞ் சஞ்சலமே சற்றுமின்றி யுன்னுவர்க்குப்
பந்தவினை யெல்லாமும் பாறிடுமே—யிந்தத்
தராதலத்திற் சன்மார்க்க சங்கமருள் செய்த
விராமலிங்க தேசிகவென் றே. 131

அன்போ டனுதினமு மர்ச்சிக்கின் றோர்க்கென்றும்
வன்பேசெய் வல்வினைகள் மாய்ந்துவிடுந்—துன்பே
யிராமலிங் கெங்கு மிறப்பொழிக்க வந்த
விராமலிங்க சற்குருவென் றே. 132

போற்றுவோர்க் கெஞ்ஞான்றும் பூவுலகும் பொன்னுலகும்
போற்றும் புகழ்தருமெய்ப் பூமிதருங்—கூற்று
வராமல்மெய் வாழ்வருள வந்தவத ரித்த
விராமலிங்க நித்தனென வே. 133

நித்தமற வாம னினைக்கின்ற மாந்தர்தமக்
குத்தர ஞானசித்தி யுண்டாகுஞ்—சுத்த
மிராதவரைச் சீலர்களா யீடேற்ற வந்த
விராமலிங்க வித்தகவென் றே. 134

பலகலைக ளெல்லாம் பகருமந்த ரங்கஞ்
சுலபமுறத் தோன்றுந் துதித்தா—லுலகிற்
தராதரம்பா ராதுவித்தந் தந்தருள வந்த
விராமலிங்க சிற்பரவென் றே. 135

---

* பூமி - பார், பதியும் - வதி, தலம் - புரம்: பார்வதிபுரம்.
† இராமல் - அருவமாயிராமல், இங்கு - உருவமாய் வந்து.

தூய்யமனத் தோடு துதிப்போர் துயரொழியும்
பொய்யுகத்தி லக்கினிக்கும் பூமிக்கு—மெய்யைத்
தராமற் சிதாகாசஞ் சார்ந்திலங்க வைக்கு
மிராமலிங்க சித்தவென வே. 136

விலகலிலா தெண்ணும் விவேகிகளுக் கென்றுங்
கலகமிலா மெய்ந்நிலையே காணு—மிலகு
நிராமயத்தி னீர்மை நிகழ்த்தவிங்கு வந்த
விராமலிங்க தற்பரவென் றே. 137

ஆங்கார நீக்கியுண்மை யன்பாற் றுதிப்போர்க்குச்
சாங்கால நீங்கிவிடுஞ் சத்தியமே—நீங்கா
விராமலிந்தோர்க் கிங் * கழியா வின்பளிக்க வந்த
விராமலிங்க நாமத்தை யே. 138

பொருந்தியவுள் ளன்போடு போற்றிச்சிந் திப்போர்க்
கருந்திருமூன் றுகு மழியா—திருந்த
புராதனநோய் போக்கும் புலன்றரவி ளங்கு
மிராமலிங்க மந்திரத்தை யே. 139

ஒருமையுடன் சந்ததமு முன்னுகின்ற வர்க்கே
யிருவினையொப் புண்டாகு மென்றுங்—கருவில்
வராவகையைக் காட்ட வடற்சபையைச் செய்த
விராமலிங்க வீசரவென் றே. 140

நித்தியமு மெண்ணி நெகிழ்ந்துருகு முத்தமர்பாற்
சத்தினிபா தந்தானே சார்ந்திலங்குஞ்—சித்தி
விராவுமுத் தேகம் விளங்கவைக்க வந்த
விராமலிங்க நாதவென வே. 141

பலபடவே செல்லாமற் பன்னுகின்ற பேர்க்கு
மலபரிபா கம்பெறுதல் வாய்க்குங்—கலகந்
தராதமெய்ஞ் ஞானந் தரப்புவியில் வந்த
விராமலிங்க மாதவவென் றே. 242

சொற்பூத் தொடுப்போர்க்குச் சுத்தவுடல் முன்பீந்துங்
கற்பூரம் போற்கரையுங் காட்சிதரு—நற்பு
விராவுடற் சித்தி விளங்கவிந்த வந்த
விராமலிங்க நீதனடிக் கே. 143

விரும்புமவை யெல்லாம் விரைவிலுண் டின்னிற்
றுரும்பியற்று மைந்து தொழிலும்—பொருந்து
நிராசையுள் ளோருண் ணிலாவுமரு ளாரு
மிராமலிங்க வள்ளலெனவே. 144

* இரா—இரவு—அஞ்ஞானம், மலிந்தோர்—நிறைந்தோர்.

செத்தவர்நான் போர்த்த சிறுகம் பலத்தாலே
யித்தரையில் வந்துதிப்பா ரென்றுரைத்தோய்—மத்தனென்றன்
தந்தந் தாண்டிடற்குச் சத்தியின்றோ * சற்குருவே !
யெந்தவிதந் தோத்திரஞ்செய் வேன். 145

ஏடனந்தங் கோடி யெழுதுகினு மென்னுடைய
பாடனந்தங் கொள்ளாதிப் பாரிலெனக்—கீடனந்த
மன்பதைக்குள் யாருமில்லை வள்ளா னினக்கபய
மென்பதைக்கொண் டேனுமரு ளே. 146

மைப்பிணித்த கண்ணார் வலையிலகப் பட்டுழன்றே
கைப்பிணியு மெய்ப்பிணியுங் கண்டயர்ந்தே—னெப்பிணியும்
போக்குந் தயவுடைய பூரணனே புத்தமுதந்
தேக்கும் படியருளிச் செய். 147

சுத்தசாத கப்பெருநூல் சொல்வண்ணஞ் சாதிக்கின்
முத்தனு யாகு முறையுண்டா—மித்தரையி
லென்றருளுஞ் சித்திபுரத் தெந்தாயே யிவ்வடியேற்
கென்றருளு வாயறிகி லேன். 148

அன்னிதா கர்த்தத்வத் † தாலென்னை யாண்டிடுதற்
குன்னினுன் முத்தர்தமக் கொப்பாவேன்—சன்னிதா
னத்தினிதம் வேண்டுகின்ற நாயேற்குச் சற்குருவே
சித்தியுற வேதயவு செய். 149

கண்டாற் கலிதீருங் காணுத காட்சியெலாந்
தொண்டாற் கண்டானந்தந் தோயவருந்—தண்டாத
வந்தரமா மெய்யடைந்த வாசானே யின்றுநெஞ்சே
யிந்தவுல கந்தன்னி லே. 150

சிந்தகலாச் சிற்றிடையார் செய்கையினுற் சற்குருநீ
தந்தவுட லிற்பன்னோய் சார்ந்திழிந்தேன்—பந்தவகை
நீக்குந் திறமுடைய நின்மலனே சுத்தவுடம்
பாக்கும் வகையருள்செய் வாய். 151

வன்பாரு மாந்தரிடம் வாணுளைப் போக்கிமிகு
துன்பார வந்துநின்று தோத்திரித்தே—னென்பாற்
பராமுகஞ்செய் யாமற் பரிந்தருளிச் செய்வா
யிராமலிங்க தேசிகனே யின்று. 152

---

* 17-ம் பாட்டின் குறிப்பைப் பார்க்க.
தந்தம்—பல், தந்து ஆண்ட. (வயதுமுதிர்ந்ததால் பல்விழுந்து விட்ட படியால் துதிப்பதற்குப் பல் மீண்டும் வேண்டும் எ-று.)

† அன்னிதாகர்த்தத்துவம் - ஒன்றை வேறொன்றாக ஆக்குதல். நரிபரியானது. இங்கு பாவியேனைப் புண்ணியனுக்குதல் குறித்தது.

எண்ணாத துன்பமெலா மென்பாலி லெய்திடினும்
பண்ணாரு நின்னருட்பா பாடிடவே—னண்ணாவே
பத்தியிலை யென்றுசொலும் பத்தர்மொழி கேளாம
னித்தியவின் பீய நினை. 153

அன்பர்மொழி கேட்டருளு மன்பார் செவியென்றன்
துன்பமொழி கேட்கத் துணிந்ததுவோ—வென்பருவந்
தீதேயன் றென்வினையே தீதெனினுஞ் சற்குருவிப்
போதே தருணமதைப் போக்கு. 154

பானுவொவ்வோர் நாளாய்ப் பகிர்ந்துகழிக் கின்றதைச்சற்
றேனுமுணா ராமனெஞ்சே யேங்குகின்ற—யேனுனக்கிப்
பேதமைவிட் டெம்வள்ளற் பெம்மானை யென்றுமெண்ணிற்
சாதலறுஞ் சத்தியமே தான். 155

எந்தநா ளென்குருவை யெண்ணுவையோ வேழைநெஞ்சே
யந்தநா ளைக்கழித்த லாகாதே—சொந்தநா
ளென்றுநித நெக்குவிட்டே யென்புருக வெண்ணினமக்
கென்றுமிற வாமையுறு மே. 156

கூற்றுவன்றன் னுட்கொண்ட கொள்கையினைத் தூதர்கட்குச்
சாற்றுவதி ராமலிங்க சற்குருவைப்—போற்றுகின்ற
சித்தரினத் தாரிடத்துஞ் சேராமை யென்னிநெஞ்சே
யித்தரையி லச்சநமக் கேன். 157

நேசமுடன் சற்குருவை நீக்கமற வெண்ணுவதும்
பாசமற நின்மலனைப் பல்காலும்—பூசனைசெய்
மார்க்கண்ட மாமுனியின் மார்க்கமுமோ ரற்றுாச
மார்க்கமென நெஞ்சே மதி. 158

நித்தியமு மோர்நிமிட நீங்காமற் சற்குருவைப்
பத்தியுட னென்றே பாவிக்கிற்—சத்தியமாய்ச்
சாதல் பிறத்தலிலாச் சத்தியவாழ் வுண்டாகு
நீதமென நெஞ்சே நினை. 159

பங்கமடைந் தாரவையைப் பாராது சாதுக்கள்
சங்கமடை வாயென்று * சாற்றியதைத்—தங்கமொழி
யென்றும் விடிற்றுன்ப மென்றுமெனத் துற்சங்க
மென்றும் விடுநெஞ்ச மே. 160

---

* நெஞ்சறிவுறுத்தல் 699 - 700.

" சாதுக்க ளாமவர்தஞ் சங்க மகத்துவத்தைச்
சாதுக்க ளன்றியெவர் தாமறிவார்—தீதுக்க
நீங்கியன்னோர் சங்கத்தி னின்றுமகிழ்ந் தேத்திநிதம்
ஆங்கவர்தாள் குற்றேவல் ஆய்ந்தியற்றி"

பாவிகட்குப் பல்காற் பயிற்றிடினும் புன்செய்நிலச்
சாவிபோன் றெந்நலமுஞ் சாராதே—நாவினுக்குத்
துன்பமே நீயுநெஞ்சே சொல்வண்ணங் கேட்டிலையே
லின்பமே யில்லையுனக் கே. 161

அன்று வலிந்துவந்தே யாண்டதுண்மை யேகுருவே
யின்றுமற வாதிருப்ப தின்மையே—யென்று
மொருபடித்தாய் நிற்பதுனக் கொக்குமே யென்பா
லிருபடித்தா யெண்ணுவது மேன். 162

என்னையே கோயிலா யெந்நாளுங் கொண்டிருந்து
முன்னையே காண்டற் குளவறியா—வென்னைமுலை
யுண்ணியோ பாலாழி யுண்மீனோ † வென்றுநித
மெண்ணியோ விங்கிருப்ப தே. 163

யாரெனைப்போ லேமாந்த வேழையர்க ளென்குருவே
யாரெனைப்போற் பாதகர்க ளிங்கெங்கும்—யாரெனைப்போற்
கல்லாத மூடர்களுங் காணே னெனைத்தேற்ற
வல்லானீ யன்றோ வழுத்து. 164

ஆறறிவைக் கொண்ட வரும்பிறவி யைப்பெற்றுந்
தேறவகை யின்றித் தியங்குகின்றேன்—வேறெவர்பாற்
சென்றுரைப்பே னென்குறையைத் தேசிகனே நின்னையன்றி
யென்றுயரைத் தீர்ப்பா ரெவர். 165

யாரே யெனினுமன்று னின்னருட்பா வைத்துதிப்போர்
சீரே யுரைக்குந் திருவாளர்—பேரோ
மறவாமை யென்று மறவேன் குருவே
யிறவாமை யென்றுமரு ளே. 166

சாகாத கல்வியென்று சாற்றியவோர் பாட்டிலுள்ள
வாகாரு நான்குவகை யென்று—மேகாத
சுத்தசன் மார்க்கமென்ற சூட்சிதனைச் சற்குருவென்
சித்தமொன்ற வின்றருளிச் செய். 167

கரைசேர வைத்தாலுங் காதகஞ்செய் மாயைத்
திரைசேர வைத்தாலுந் தீயேன்—விரைசேரு
நின்கழல்ப ணிந்தேத்தி நிற்பேன் குருவேவே
றென்கழறு வேனென்னை யே. 168

† முலை உண்ணி - பசுவின் முலைக்காம்பைக் கடித்துக்கொண்டிருக்கும் உண்ணி என்னும் ஜெந்து அதனிடத்தேயுள்ள சுவையானபாலை உண்ணாது அதிலுள்ள ரத்தத்தை உறிஞ்சும்.

அதுபோலவே, பாலாழியுள்மீன் - பாற்கடலில் உள்ளமீன் பாலை உண்ணாது மற்ற ஜெந்துக்களை உண்ணும் எ-று.

ஆண்டவனீ யென்றே யகமகிழ்ச்சி கொண்டிருத
மீண்டவமே செய்திறுமாந் தீடழிந்தே—னாண்டருவாய்
சென்றங் கிளைத்துத் தியங்குகின்றேன் சற்குருவே
யென்றவ் விடர்நீங்கு மே 169

என்னுடைய வன்மனத்தா லெண்ணடங்கா வெந்துயரு
மின்னிடையார் கண்வலையில் வீழவமும்—பொன்னுடைய
வஞ்சகர்பாற் போய்ப்படுமென் வாதனையுஞ் சற்குருவே
துஞ்சவருள் செய்வாய் சுகம். 170

இத்தருண நான்படுந்துன் பெண்ணியிரங் காமலப்பா
லெத்தருண மூப்புநிறைந் தேருமன்றோ—வத்தருணம்
வந்தருளி லென்னபலன் வள்ளலே நின்கருணை
யெந்தவித மோவறிகி லேன். 171

எத்தனைச்சன் மத்திளிரு னெத்தனைக்குற் றஞ்செயினு
மத்தனையு நீபொறுத்த லாகுமே—சித்தனைத்துஞ்
செய்யவல்ல சித்தனுமெய்த் தேசிகனு மாயுலகோ
ருய்யவகை செய்திடவந் தோய் 172

பாவகாரி யம்பலவும் பாரிலடி யோடொழிக்கச்
சீவகா ருண்ணியநூற் செய்தருளுந்—தேவகினைச்
சீர்கருணீ கக்குலத்து தித்தசித்த னென்பருன்ற
னேர்கருணை யாரறிவ ரே. 173

சைவந் தழைக்கத் தரும்பரனா ரனுபவங்
கைவந்த நெல்லிக் கனியெனவே—நைவறின்றிக்
காட்டவருட் பாவிக் கலியிலருள் செய்குருவி
னாட்டமதை நெஞ்சேநீ நாடு. 174

இப்படியி லெத்தனைநா ளிவ்வண்ணந் துன்புறுத
லிப்படியும் பார்க்க விசைந்தனையே—யெப்படியு
முன்னைமற வேன்றுன் பொழிக்கா விடிற்குருவே
யென்னையுன்பா தஞ்சேர்ப்பை யே. 175

பன்னாளுந் துன்பமுற்றிப் பாவியழு தேங்கிநிற்ற
னின்னாலே நீக்குதற்கு நேராதோ—வென்னாற்
பொறுக்கவிலை பூமி பொருந்தும் பதியோ
யொறுக்கவந்த தோநின் னுளம். 176

தேகந் தளர்ந்துந் திரைமூப் படைந்தும்பெண்
மோகந் தளரவிலை மூடநெஞ்சாற்—சோகமுற்று
மஞ்சா தலையு மகமொழிப்பாய் சற்குருவே
யெஞ்சாத மெய்யின்ப மீந்து. 177

மருந்துமணி மந்திரமெய் வாழ்க்கையறி வித்துப்
பொருந்துஞ்சன் மார்க்கம் புகுத்திப்—பெருந்துயரம்
போக்கிவடற் சிற்சபைசெய் புண்ணியனே புத்தமுதந்
தேக்கித் திளைக்கவருள் செய். 178

சாதலெனும் பொல்லாமை சாதலுறச் சன்மார்க்க
சாதனத்தைச் சாற்றியவென் சற்குருநின்—போதனையைச்
சாதகஞ்செய் யாமனிதஞ் சஞ்சலமே கொண்டிழியும்
பாதகனைச் சற்றேகண் பார். 179

கடைக்கணித்தாற் காணாத காட்சியெலா முண்டா
மடைத்தலைக்கொக் கைப்போன் மயங்கி—யுடைக்கும்பே
ருண்டிக்கு நோக்கு மொதியேனைச் சற்குருவே
தண்டித்து மெய்யின்பந் தா. 180

திருமந் திரவுரையுஞ் சிற்றம்ப லத்திற்
றருமந் திரமுமெனுட் டந்த—வொருமொழியு
மொன்றென்றே * வுண்மை யுரைத்தகுரு வேயெனக்கவ்
வொன்றென்றே வோதிடுவை யோ. 181

திருவருட்பா வோர்பாட்டிற் றேர்ந்தவற்று ளொன்றி
லொருவிருப்புங் கொள்ளா வொதியேன்—பெருவிருப்பா
னன்றல்ல வெவ்வெவையு நாடுகின்றேன் சற்குருவே
யென்றல்ல னீக்கவரு மே. 182

பொய்யாக வோர்பாட்டிற் பூப்பிற் புணர்ந்தேனென்
றய்யா வெழுதியதெற் கானதுவே—செய்யாத
பாவமென் றூலும் பரிந்தருள்வார் நின்னையன்றி
யாவருமெ னக்கில்லை யே. 183

கண்ணேக்க மென்றுங் கலியிற் றிருவருட்பா
பண்ணேக்க மாகப் படியேனின்—னுண்ணேக்க
மென்பாலி லெவ்வா றிருக்கவருஞ் சற்குருநின்
னன்பாலெவ் வாற்றினுமுண் டாம். 184

---

* 6-ந் திருமுறை, பிள்ளைப்பெரு விண்ணப்பம், 114-ம் பாசுரம்:

“ திருவளர் திருவம்பலத்திலே அந்நாள்
செப்பிய மெய்ம்மொழிப் பொருளும்
உருவளர் திருமந்திரத் திருமுறையால்
உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்
கருவளர் அடியேன் உளத்திலே நின்று
காட்டிய மெய்ம்மொழிப் பொருளும்
மருவிஎன் உளத்தே நம்பி நான்இருக்கும்
வண்ணமுன் திருவுளம் அறியும்”

கொலைபுலைகட் காமங் கொடும்பொய்யும் போக்கி
யலைவின்மெய்ஞ் ஞானமுற வாக்கி—நிலைபேறு
வாய்த்திடவுஞ் செய்தருள்வாய் வள்ளாலிச் சிற்றடிமை
நாய்க்கா ரருள்வார் நயந்து. 185

எத்தனையூ ரெத்தனைபே ரெத்தனைதாய் தந்தையர்க
ளெத்தனையோ கற்ப மிறந்துபிறந்—தெத்தனையோ
சென்மமொழித் தேன்கருணைத் தேசிகவின் றேனுமந்தக்
கன்மமொழித் தாளக் கருது. 186

இன்னமிறந் தும்பிறந்தே யோங்கிநிற்க வெண்ணுறுவையோன்
முன்னமெனை யாண்ட முறைசரியோ—பின்ன
வயதன்று மூப்புமிக வந்துங் குருநின்
றயவென்ன சற்றேநீ சாற்று. 187

கவலுறையப் பொய்ந்நூலைக் கற்பதன்றி யென்றன்
பவமறைய மெய்ந்நூலைப் பாரேன்—தவநிறையக்
கற்றோ ரவையிற் கலந்ததிலை யென்குருநிற்
கெற்றோ வருமிரக்க மே. 188

நீற்றிலிட்ட மில்லாவ நீதரைச்சேர்ந் தென்குருவே
சோற்றிலிட்டங் கொண்டு சுழன்றலைந்தேன்—காற்றிற்
கறங்காய்க் கலங்காக் கதிநிலையின் மேல்வைத்
திறங்கா திருக்கவருளே. 189

வீணே திரிந்துழன்று மெய்ந்நெறியே சொல்பவன்போ
லூணே யிலாம னடிக்கின்றேன்—காணே
னெனைப்போற் குருவேமெய் யின்பளிக்க வெங்கும்
நினைப்போலுங் காணே னிசம். 190

மின்னைப்போ லென்று * விளம்பியபாட் டிவ்வுலகி
லென்னைப்போன் றூர்க்கே யிதமாகும்—பின்னை
யெவர்க்குமல வென்றயர்ந்தே னென்குருவே யின்றவ்
வவக்குணத்தை நீக்கி யருள். 191

* 2-ந் திருமுறை, தனித்திருவிருத்தம் 11-ம் பாசுரம்:
" மின்னைப்போல் இடைமெல்லியலாரென்றே..,".

ஏட்டாலுங் கேளென்ற * வென்றன் குருவேயப்
பாட்டா லறிந்த பயனைவிட்டுச்—சீட்டா
லயலவரைக் கேட்டடைத லாமோ வினியச்
செயலறவென் பாலருளிச் செய். 192

பூர்வகன்மத் தாலேயிப் போதுபொரு ளுன்றனக்குச்
சேர்வதன்றென் றுலென்றன் றேசிகனே—யார்வமுட
னின்னையே தோத்திரித்து நிற்பதோ வவ்விதிதா
னென்னையே மாற்றுவதென் னே. 193

வாழா மனத்தின் வழிசென் றெனும்பாட்டி
லூழா மெனிலிவ் † வொதியனே—னேழாகும்
வெய்யநர கத்தினில்வீழ் வேனென்ற சற்குருநா
னுய்யநல மேதோ வுரை. 194

சாற்றுகின்ற ஆழ்வலியைச் சன்மார்க்க சாதகத்தா
னீற்றுவிட லாமென்றிந் நீடுலகிற்—றேற்றுவிக்க
வெண்ணி யவதரித்த வென்குருவே யென்றுமதை
நண்ணி யிருக்கவர நல்கு. 195

மனமேமுன் னென்று வழுத்தியவோர் பாட்டென் ‡
னினமேயுள் ளார்க்கே யிலக்காந்—தினமேயச்
சஞ்சலத்தா லேங்குகின்றேன் சற்குருவே யென்கொடிய
வஞ்சமனத் தீச்செயலை மாற்று. 196

---

* திருவருண் முறையீடு, 31-ம் பாசுரம்:

" ஏட்டாலும்கேள் அயல் என்பாரை
    நான்சிரித்து என்னை வெட்டிப்
போட்டாலும் வேறிடங் கேளேன்
    என் ஆணைப் புறம்விடுத்துக்
கேட்டாலும் என்னை உடையாளிடம்
    சென்று கேட்பன் என்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலும்
    சொல்லி நிறுத்துவனே."

பொருளை இச்சித்துவந்து சில பிரபுக்களுக்குச் சிபார்சு கடிதம் கொடுக்கும் படி கேட்டுக்கொண்ட ஒருவருக்கு நாம் கேட்கவேண்டியது நம்மை உடைய பெருமானிடத்தே என்று வள்ளலார் இச்செய்யுளால் விளக்கிக் காட்டினர்.

† 94-ம் பக்கக் குறிப்பைப் பார்க்க.

‡ 2-ந் திருமுறை, அவலமதிக்கலைசல், 8-ம் பாசுரம்:

" மனமே மூன்னர் வழிகாட்டப்... ,,, ,,,"

கருணைப் பெருங்கடலே கற்பகமே யார்க்குந்
தருணத் துதவுகின்ற தாதா—விருணலியத்
தோன்றுகின்ற மெய்ஞ்ஞானச் சோதியே யென்முறையை
யேன்றுகொண் டின்புறவீ டேற்று. 197

உலகவிட யத்தி லுழைத்துழல்வே னன்றிக்
கலகமிலா வாழ்வைக் கருதேன்—பலகலையுங்
கற்றவன்போல் வாணாள் கழித்தேன் குருவேநா
னுற்றவகை நீக்கவுளத் துன். 198

பருவமிலா தாலோ பலவினையி னாலோ
கருவமுள தாலோ கடையேன்—மருவவந்த
துன்பமினி மேற்சகியேன் தூயகுரு வேயென்பா
லின்பமுற வென்றுமரு ளே. 199

நாலா ரணந்தன்னி னாலேழா மாகமத்தி
னூலாறி னுள்ளே நுவல்கின்ற—மேலாம்
பரதுரிய முற்றோர் பரவுங் குருநின்
திரவுருவைக் காணவருள் செய். 200

கலைவல்லோர் போற்றுகின்ற கர்த்தாமெய்ஞ் ஞான
நிலைவல்லோ ரேத்துகின்ற நித்தா—கொலைபுலையில்
லாதா ருளத்தமர்ந்த வத்தாவென் றன்சிரமேற்
போதார்நின் பாதம் புனை. 201

அருட்பெருஞ் ஜோதி யதனான் முடியுந்
தெருட்பெருஞ் சத்தியமீ தென்ற—வருட்கவியி *
னுள்ளதையோர்ந் துங்குருவே வுன்றனையுன் னெஞ்சக்
கள்ளமதை நீக்கக் கருது. 202

விதிநீங்கிற் றேகம் விழுமென்று மான்மா
கதிசேரு மென்றுங் கழறும்—விதிவாதஞ்
சுத்தசன் மார்க்கத்தாற் றேற்குமென்ற ராமலிங்க
சித்தநின் மார்க்கமுறச் செய். 203

---

* 6-ந் திருமுறை, சுத்தசிவநிலை, 37-ம் பாசுரம்:

" செத்தாரை யெல்லாந் திரும்ப எழுப்புதலிங் கு)
கெத்தால் முடியுமெனில் எம்மவரே—சித்தாம்
அருட்பெருஞ் சோதி யதனால் முடியும்
தெருட்பெருஞ் சத்தியமீ தே."

ஒடுங்கிடுங்கா லத்தி லுடலிங்கே வீழ்ந்தா
லொடுங்கினதே யில்லையென வோதி—யிடுங்கலையே
சுத்தசித் தாந்தச் சுருதியென்ற சற்குருவே
யத்தகைய போத மருள். 204

கற்பூர நன்மணமென் காயத்திற் கண்டதெனச் *
சொற்பூத் தொடுத்தவருட் சோதியே—நற்பூ
விரவியசிற் சித்திபுர வித்தகனே யென்னுட்
பரவியநோய் முற்றுமறப் பார். 205

தற்போத மென்னுட் டலையெடுக்கா வண்ணமுன்றன்
சிற்போத மென்பாலிற் சேரவைத்து—நற்போது
போக்குஞ்சன் மார்க்கருடன் போந்தென்றுஞ் சற்குருவே
தேக்கும்பே ரின்பமுறச் செய். 206

கேடர் முறைதன்னைக் கேட்டசெவி யுங்கடைய
சீடன் முறைக்குஞ் செவிடாமோ—நாடதனி
லென்வழக்கைத் தீர்க்க வெவருமிலை சற்குருவே
நின்வழக்கை நீயே நிகழ்த்து. 207

தராதரம்பா ராமற் றராதலத்தில் வந்து
பராபரத்தி னுண்மை பகர்ந்த—விராமலிங்க
நித்தியனே யென்பிழையை நீக்கியருள் செய்திடுவாய்
சத்தியனே நின்றாள் சரண். 208

கதிக்குவழி காட்டக் கருணையுளங் கொண்டு
மதிக்குரிமை காட்டவந்த வள்ளால்—மதிக்கருநின்
பொன்னே ரடியென்றும் போற்றவருள் ராமலிங்க
வன்னே யபயமப யம். 209

உத்தரசற் சித்தியெலா மோங்கவட லூற்றவனை
யித்தரையிற் காணும லேங்குகின்ற—பத்தர்தொழத்
துப்பார் திருவடிவந் தோன்றவருள் ராமலிங்க
வப்பா வபயமப யம். 210

---

† 6-ந் திருமுறை, தலைவி வருந்தல், 11-ம் பாசுரம்:

“ கற்பூரமணக்கின்றதென் மேனிமுழுதும்
கணவர் மணமது என்றேன் ... ... ...”

கல்லாக் கடினமனக் கல்லார்க்குங் கற்றறிந்த
நல்லார்க்கு மென்போன்ற ஞானமிலா—வெல்லார்க்கு
மெய்யார்முத் தேகசித்தி மேவவருள் ராமலிங்க
வய்யா வபயமப் யம். 211

புற்போதஞ் செய்திந்தப் பூவிளில்வா ழாவண்ண
நற்போதஞ் செய்தமர நாடுகின்றேன்—தற்போதஞ்
செத்தா ரெழுவரென்ற செம்மொழிசொல் ராமலிங்க
வத்தா வபயமப யம். 212

எத்தருண மென்றுயர மெல்லா மொருங்கொழியு
மத்தருண மின்றே யருள்செய்ய—வித்தருணங்
கண்ணுரக் காணக் கருதுகின்றேன் ராமலிங்க
வண்ணு வபயமப யம். 213

படியினினின் பாதம் பணிந்தேத்தும் போதே
யடிமையிட நில்லா தலையுங்—கடின
மரநேர்நெஞ் சாண்மை வதைப்பாய் வடல்வா
ழரனே யபயமப யம். 214

என்றுமன்போ டெவ்வுயிரு மென்னுயிரென் றெண்ணுமற்
கொன்றுதின் னும்பதகர் கூட்டுறவே—யென்றும்
பழகா திருந்திடக்கண் பார்ப்பாய் வடல்வா
ழழகா வபயமப யம். 215

வன்பார் விடயத்தில் வாணுளைப் போக்கியிரு
துன்பார்ந்த வன்மை தொலைத்துன்பா—லன்பாற்
றினகாலஞ் சிந்திக்கச் செய்வாய் வடல்வா
ழனகா வபயமப யம். 216

துன்பார்ந் துளந்தளர்ந்து சோர்வடைந்தே யெஞ்ஞான்று
மின்பார்ந் திராமல்மிக வேக்கமுற்றே—னென்பாற்
கமலா ணியலைக் கருதேல் வடல்வா
ழமலா வபயமப யம். 217

கானமயி லாடுவந்தக் கண்டவான் கோழியைப்போன்
மானமின்றிப் பாடி மகிழ்வேற்கு—ஞான
வருணுடுஞ் சித்தி யருள்வாய் வடல்வா
ழருணு வபயமப யம். 218

*சமரசமார் சுத்தசிவ சன்மார்க்க மென்னுள்*
*ளமரமகிழ் கொண்டே யருள்வா—யமரர்*
*முரசே தினமு முழக்கும் வடலூ*
*ரரசே வபயமப யம்.* 219

*தவக்கடலுட் சாருந் தவந்தந்து பந்தப்*
*பவக்கடலைத் தீர்த்திந்தப் பாரி—லெவர்க்குந்*
*தெருட்பிரகா சந்தரற்குத் தேசிகனாய் வந்த*
*வருட்பிர காசவப யம்.* 220

*சிவமெய்ப் பொருளென்று தேர வதற்குத்*
*தவநற் செயலென்று சார—வெவர்க்குந்*
*தெருட்பெருஞ்சித் தீயவடற் சிற்சபையில் வாழு*
*மருட்பெருஞ் சோதியப யம்.* 221

குருநேச வெண்பா சம்பூர்ணம்.

*திருவருட்பிரகாச வள்ளலார் திருவடிகளே சரணம்.*



உ

சிவமயம்.

அருட்பெருஞ்சோதி-தனிப்பெருங்கருணை.

# கொலைமறுத்தல்.

திருவருட்பா.

அறநிலை விளக்கம்.

" மருவாணைப் பெண்ணாக்கி ஒருகணத்தில்
கண்விழித்து வயங்கும் அப்பெண்
உருவாணை உருவாக்கி இறந்தவரை
எழுப்புகின்ற உறுவ னேனும்
கருவாள்நை யுறஇரங்கா துயிருடம்பைக்
கடிந்துண் ணும் கருத்த னேல்எம்
குருவாணை எமதுசிவக் கொழுந்தாணை
ஞானியெனக் கூறொ ணாதே."

66-ம் பக்கக் குறிப்பைப்பார்க்க.

◆◆◆◆◆◆◆◆◆

வெண்பா.

எவ்வுயிருந் தம்முயிர்போ லெண்ணுகின்ற மாந்தர்களை
யெவ்வுயிரு மேத்துமெனு மின்னியநூ— † லெவ்வுலகி
லெம்மதமு மின்புடனே யேன்றுகொளு மிந்நெறியிற்
சம்மதமில் லாரெவரோ தாம்.

---

† திருக்குறள், புலான்மறுத்தல், 10-ம் செய்யுள்:

" கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்."

காரணனென் றெவ்வுயிர்க்குங் கர்த்தாவென் றெங்குநிறை
பூரணனென் றுயாமற் புல்லுயிரை—மாரணஞ்செய்
தூனிதமாய்த் தின்றே யுடலோம்பு கின்றவரை
மானிடரென் றெண்ணலுமா மா. 2

ஆண்டவனெல் லாவுயிர்க்குள் ளார்ந்திருப்ப தாயாம
லீண்டரிய வின்னுயிர்கொன் றிட்டாரை—நீண்ட
விருப்புமுட்பிப் பாய்க்குள்ளே * யீட்டியினூற் றள்ளி
யுருட்டுவார் தூதுவர்பல் லோர். 3

எவ்வுயிருள் ளும்புறத்து மீசரனீங் காதிருப்ப
னவ்வுயிர்கள் மெய்யின்றி யார்ந்துமிரா—விவ்வுளவைச்
சற்றுமறி யாதூனைச் சம்மதங்கொண் டுண்கின்றோர்
கற்றுமறி யாக்குருடர் காண். 4

உயிர்களே யாண்டவருக் குண்மைவீ டாகு
முயிர்களுக்கு வீடோ வுடல்க— † ளுயிர்க
ளுடலைநசித் தாலன்றி யோர்கணத்துந் தேகம்
விடவருமோ வென்றுணரு வீர். 5

ஏழ்நிலைமா டத்து மிழிந்தசிற் றில்லிடத்தும்
வாழ்நிலைய மாக்கொண்டோர் மானிடரென்— § றூழ்ந்துணரார்
சிற்றுயிரைக் கொன்றூனைத் தின்பாரே ழாநரகி
லெற்றுந்துன் புற்றிருப்ப ரே. 6

எறும்பு முதல்யானை யெல்லாமான் மாவா
யுறும்புவியி லென்றுணரா வூமர்—பெறும்பயனை
யோரா துயிர்க்கொலைசெய் தூன்றின்போர் மானிடராய்
வாராது தீநரகாழ் வார். 7

மாந்தர்பிண மெல்லா மயானத்திற் சுட்டுவிட்டுப்
போந்தநன் னீர்மூழ்கப் போகின்றீர்—சாந்தமின்றித்
தாழ்ந்தவுயிர் கொன்று தசைதின்கின் றீர்நன்று
யாழ்ந்தறியீ ரீதென் னறம். 8

* இரும்பு முட்பீப்பாய்—இரும்பாற்செய்த முள்ளையுடைய பிப்பாய்.

† ஆண்டவனுக்கு உயிர்வீடு, உயிருக்கு உடல் வீடு, உயிரைப் பிரிக்கின் உடம்பு நசியும்.

§ எழுநிலை மாடத்து வாழ்வதும் உயிர். சிறு இல்லில் வாழ்வதும் உயிர். சிறு உடம்புடைய ஜெந்துதானே என்று நினைத்து உயிர்க்கொலை செய்தல் கூடாது.

மனிதப் பிணங்கிடக்கும் வாயிலுண்ணோ மென்போ
* ரனியப் ¶ பிணந்தின்ன லாமோ—வினிமையுற
வீதுநல மோவெட்க மீனமிலை யோவென்பார்க்
கேதுசொல வல்லார்க ளே. 9

சின்னகுறும் புத்தேவர் $ சிற்றுயிரைக் கொன்றுகொடு
வென்னநமைக் கேட்பாரே லென்கொடுப்பார் † —சொன்னவணங்
கொன்றுதாந் தின்னுங் கொடியமா பாதகரை
யென்றுநிர யம்விடா தே. 10

பன்றிதகர் மாடு பறவைமச் சங்கொன்று
தின்றிடுவோர் சாண்வயிறே தீக்காடா—மென்றுரைக்கும்
வேதாக மங்கள் விரைவிலவ ரைக்கொடிய
பாதாளத் தாழ்த்தப் படும். 11

ஆடுகொன்று தின்னு மதிபாத கர்செத்த
மாடுதின் போர்புலைய மாக்களென்று—நாடுகின்ற
தெப்படியோ சொல்லுவீ ரம்மவரே யிங்குமிகத்
தப்படியே செய்தவரார் தாம். 12

கொன்றாற் பெரும்பாவங் கொன்றவனஃ தாய்த்தன்னைத்
தின்றாற்போ காதுகொடுந் தீநரகிற்—சென்றாழ்ந்து
கற்பம் பலகிடந்து காதகஞ்செய் தீவிலங்காய்ப்
பற்பலதுன் பெய்துவனப் பால். 13

---

* அனிய - அன்னிய.

கொலைமறுத்தல் நூல். வெண்பா.

¶ பிணங்கிடக்க நானுகரே னென்றுநீ பேசுங்
குணங்கடக்க வேண்டியதென் கூறாய்—பிணத்தைக்
கலத்திலே யிட்டுக் கலந்துநா வாரப்
புலத்தினாற் றின்றாய்ப் புகல்.

$ 6-ந் திருமுறை, பிள்ளைப்பெருவிண்ணப்பம். 59-ம் பாட்டு.

நலிதரு சிறிய தெய்வமென் றையோ நாட்டிலே பலபெயர் நாட்டிப், பலிதர வாடு பன்றிகுக் குடங்கள் பலிக்கடா முதலிய வுயிரைப், பொலிவுறக் கொண்டே போகவுங் கண்டே புந்திநொந் துளநடுக் குற்றேன், கலியுறு சிறிய தெய்வவெங் கோயிற் கண்டகா லத்தினும் பயந்தேன்.

† பலிகொடு என்று கேட்டு வாங்கும் சிறு தெய்வம் எங்ஙனம் பிறர்க்கு வரங்கொடுக்கக் கூடும்.

நாசிநீர் சிந்தி னடங்கி யருவருத்தே
யேசிடுவீர் பக்கத்தி ருக்கின்ற—மாசிலிரே
மண்ணித் தகர்மலத்தை நன்றலம்பி யேசமையற்
பண்ணியுண் பீரிதென்ன பண்பு. 14

வாறுகா யிற்புழுக்க ளூற்று லெறிந்திடுவோர்
நாறுகரு வாட்டி னடிப்புழுவை—வேறுசெய்து
கார்ப்புமுதற் சேர்த்துக் களித்துண்பார் தம்மைநெஞ்சே
சேர்ப்பர்நர காழ்வரெனத் தேர். 15

ஆண்குறியைக் காட்டி லருவருத்துக் கோபித்து
மீண்டர்க்கச் சண்டை விளைவிப்பா—ராண்மைக் ‡
குறியை வறுத்துக் குணமாக வுண்பார்
நெறியென்ன நேமமுமென் னே. 16

¶ பல்லாயி ரங்கனிகாய் பாரி னிறைந்திருக்கப்
பொல்லாப் புலாலைப் புசிக்கின்ற—வல்லாருங்
காதகஞ்செய் தூதர்களாற் காரிருப்புத் தண்டங்கொண்
டேதநீங் காதடைவ ரே. 17

காய்கனிவித் தெல்லாங் கருதிலுயி ராமன்றோ
பேய்பிடித்த பித்தரைப்போற் பேசுகின்றீர்—வாய்மூடு
மென்றுருக் கோர்செடியி லேவுயிரொன் றேயறிமி
னென்றுலென் சொல்வார்க ளே. 18

காய்கனிக ளைப்பறிக்கிற் கண்டசெடி மற்றெவைக்கு
நோய்தருவ தின்றோ நுவலென்போர்—காய்கனிகள்
நம்முடைய ரோம நகமெடுக்கும் போதுற்ற
வம்முறையா மென்றறிய லாம். * 19

காயிலையில் ரோமநகக் கண்ணுற்ற வோர்சுத்த
மேயிலையோ வென்றே யியம்புவோர்—காயிலையிற்
றோது விருத்தியுடன் றத்துவவி ருத்தியுமற்
றேதுமிலை யென்றறிவ ரே. 20

---

‡ மை - ஆடு. ஆண்மை - ஆண் ஆடு.

¶ திருப்புகழ் சுவாமிகள் பாடல்.

ஈயிற்றுக்குண் பனவாயிர மிருக்கக்கண்டும் விடாதுயிர்
வதைத்துத்தின் பவர்பாழ்மத மழியாதோ.

* மனிதர்க்கு ரோமம் நகம் எடுக்கும்போது நோய் உண்டாகாதவாறு
போல் காய்கனிகள் பறிக்கும்போது செடிக்கு நோயுண்டாகாது.

வித்தென்ப தெவ்வுடற்கும் வித்தென்ப மீதாராமற்
சித்தென்ப வர்க்குண்மை செப்புவார்—சித்தென்றால்
மண்ணிலுயிர் நீர்வழியாய் வந்தபின்மு ளைப்பதென்னொன்
றெண்ணிலுயிர் மெய்யறிவ ரே. 21

¶ அந்தோ வுயிர்க ளலறவவை கொன்றாலோச்
சந்தோட மீக்கொண்டு சாப்பிடுவீர்—நுந்தோழர்
மக்கள் மனைவியர்போன் மற்றவைக்குண் டென்றறியா
தெக்களிப்பில் வாழ்வதுமென் னே. 22

புலியும் பசுவும் பொருந்தி யிருந்தே
நலியின்றி வாழ்ந்தவிந்த நாட்டிற்—கலிமிகவே
சற்றிரக்க மில்லார்தஞ் சாண்வயிற்றிற் கூனிரப்பக்
கற்றிருப்ப தென்னோ களித்து. 23

மாதவர்சூழ் மாமதுரை மாநகரின் மாமிசந்தின்
றாதவகை யாய்ப்பகலு மல்லுநின்று—மாதவத்தைச்
செய்திருந்தோர் நாரை சிவலோகஞ் சேர்ந்ததென்றா †
லுய்திடற்கு மற்றுண்டோ வோது. 24

* கொன்றுதினச் சற்றுமனங் கொள்ளாரைத் தண்டித்துக்
கொன்றுதினச் செய்யுங் கொடியவரைக்—கொன்றுநமன்
செல்லரிக்குந் தேள்கொட்டுந் தீங்குறிக வுந்தெய்யய
வல்லநர கத்தாழ்த்து வான். 25

ஆவின்பால் மாமிசமே யாமென்பார் தம்மைமும்மா
தாவின்பா லவ்வணந்தா னாகுமென்றா—லாவி
பதைக்காக்கு தர்க்கம் பகர்பாத கத்தோர்க்
கெதைச்சொலினு மென்னபய னே. 26

---

¶ வள்ளலார் சரித்திரம். விருத்தம்.

அம்மா வெனவலற வாருயிரைக் கொன்றருந்தி
இம்மா னிடரெல்லா மின்புற் றிருக்கின்றார்
அம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவர்க்கும்
பொய்ம்மா நிரயமென்றாற் புசிப்பவர்க்கென் சொல்லுவமே.

† திருவிளையாடற் புராணம், நாரைக்கு முத்திகொடுத்த படலம்.

* கொலைமறுத்தல் சாத்திரத்தில், விருத்தம்.

கொன்றிலாரைக் கொலச்சொலிக் கூறினர்
தின்றிலாரைத் தினச்சொலித் தெண்டித்தார்
பன்றியாய்ப்படி யிற்பிறந் தேழ்நர
கொன்றுவாரா ரூனையி தூண்மையே.

இச்சைகொண்டா லெல்லாந்தின் றேதீர வேண்டுமென்போர்க்
கிச்சைமுறை யில்லவர்பா லெய்திடிலவ்—விச்சைவணஞ்
செய்வதுண்டோ வீதுணர்ந்து செப்புவீ ரென்றானும்
பொய்வாய்க்குப் போடவரும் பூட்டு. 27

* என்றுந்தின் னுஞ்சாதி யின்றுந் தினல்வேண்டு
மென்றுஞ்சொல் வோர்க்குரைப்பா ரின்புறநூ—னன்றுணர்ந்தோர்
நாயுங் கழுகு நரிபூனை காக்கையெறும்
பீயுமுணுஞ் சாதியென வே. 28

தந்தைசெய் கின்றவணந் தன்னுடைய புத்திரருஞ்
சிந்தைசெய் வாரென்று செப்புவார்—தந்தைமுனம்
பிச்சை யெடுத்துப் பிழைத்தானேற் பிள்ளைகட்கவ்
விச்சைவரா தென்றறிவ ரே. 29

நாகம் புலியானை நாரையெறும் புச்சிலந்தி
காகங் குரங்கு கழுகுமுத—னாகப்பூண்
கொண்டார் பதஞ்சேரக் கொல்லா விரதத்தைக்
கொண்டனவீ தேநற் குலம். 30

கற்பனவுங் கற்றறியார் கற்றவர்பா லுற்றறியார்
சொற்பனத்துஞ் சாந்தத் துறையறியா—ரற்பருற
வென்றும் விடார்கொலைசெய் தின்புறவூன் றின்பாரை
யென்றும் விடாநிரைய மே. 31

விரதநாட் புன்மா மிசந்தின்னாச் சாலஞ்
சரதமாய்க் காட்டுஞ் சகத்தீர்—விரதமென்ன
வேறுநா ளெல்லாம் விலக்கோநம் மாண்டவர்க்குக்
கூறுவீர் நும்பொய்க் குணம். 32

மாடுதின்போர் நீழனும்மேல் வாராமற் காத்திடுவீ
ராடுதின்போ ரைத்தொடுத லாகுமோ—கோடுடைய
துன்மதியீர் நும்முடைய சுத்தமிக நன்றறிந்தீர்
நன்மதியோர் நாடா நடை. 33

---

* கொலைமறுத்தல் சாத்திரம், வெண்பா.

நாய்கழுகு கூகை நரிகாக மீயெறும்பு
பேயிவைக ளாவி பிரிந்தவூன்—நேயமொடு
தாமருந்த லல்லாது சற்கா ரியமனிதர்
தாமருந்த லாவதுவோ தான்.

புலைகொலைசெய் கின்றோர் புறவினத்தா ரென்ற *
கலைவல்லோர் சொல்லைக் கருதிற்—புலைகொலைசெய்
வோரெந்த சாதி யுரைப்பீரென் றுலகீர்
யாரென் றறைந்திடவல் லீர். 84

குடும்பகோ ஷத்திற் கொலைசெய்யார் வீட்டி
லிடும்பலியேற் றுண்ணவினி தென்றே † —கடுந்துறவிக்
கன்பா லருளியதை யாய்ந்தறிந் தாற்கொலைசெய்
தின்பார வுண்பா ரெவர். 85

புன்புலா லென்று புகன்றவருட் பாக்கருத்தை ‡
யன்புளார் பாற்கேட் டறியாமல்—வன்புலா
லுண்பாரை யெல்லா வுயிரெம் முயிரென்போர்
கண்பார்க்க நேரிடுமோ காண். 86

புலைகொலைசெய் வோர்கட்குப் புண்ணியத்தைச் செய்தல்
கலைநிலையைச் சொல்லற்ற தாதே—யலைநிலைசெய்
வன்பசியே நீக்குமென் றோர் வள்ளலார் சன்மார்க்க
வின்படையுங் காலவரை யே. 87

---

* 66-ம் பக்கம் குறித்துள்ள செய்யுளை நுண்ணிதின் உணர்க.

† குடும்பகோஷம், முயற்சிப்படலம், 38-ம் செய்யுள்:

"சீரேனம் அறியாத திருவடியும்
குருவடியும் சிந்தித் தேகி
யாரேனுங் கொலைதறியார் எமந்தரியார்
என அவர்தம் இல்லந் தோறும்
போரோர்நெற் சோறேனும் புதுக்கஞ்சி
யேனுமன்றிப் புளித்த காடி
நீரேனும் கூழேனும் கிடைத்ததனை
ஏற்றுவந்து தின்று வாங்கி."

‡ 6-ந் திருமுறை, பிள்ளைப்பெருவிண்ணப்பம், 37-ம் பாசுரம்:

"புன்புலால் உடம்பின் அசுத்தமும்... ... ..
வன்புலால் உண்ணு மனிதரைக் கண்டு
மயங்கி உள்நடுங்கி ஆற்றுமல்
என்பெலாம் கருக இளைத்தனன்
அந்த இளைப்பையும் ஐயநீ அறிவாய்."

கொல்லாதார்க் கின்பங் கொடுப்பார் கடவுளென்ற
நல்லார்சொற் கேட்டறிந்த நம்மவரே—யெல்லாம்
பொறுக்கவரும் பொல்லாப் புலைகொலைசெய் குற்ற
மொறுக்கவரா தென்றறியி ரோ. 38

படைகொண்டார் நெஞ்சம்போ னன்றாக்கா தொன்றி
னுடல்சுவையுண் டார்மனமென் றோதுந்—திடசுருதி
வாசியார் கூர்கொண்ட வாள்கொண் டுயிர்கொல்வார்
மாசிலா மானிடரா மா. 39

தடங்கடல்சூழ் தாரணியிற் றக்கோர் மொழிந்த
வடங்கன் முறைமற் றருட்பா—திடங்கொண்டு
பொல்லாப் புலாலைப் புசிப்போர் தொடுவாரே
லெல்லாருந் துன்படைவா ரே. 40

நீதிவினை கொண்டிந்த நீடுலகி னில்வியாசர்
சாதிரா லென்றுநெஞ்சே சாதித்தார்—சூதினிலே
புன்புலா லுண்போர் புலையரெனத் தள்ளிவிட்ட
தின்புளார் செங்கோலி லே. 41

பூனைதின் னுக்கறியைப் பூரித்துண் பாரென்ப
ரானைதின் னுங்கறியென் றுய்ந்தறியா—தூனைத்தின்
கின்றோர்பூ னைக்கினமாங் கீழ்மிருகச் சாதியரே
யென்றோருக் கென்சொல்வ ரே. 42

அன்னியப தார்த்தமிதென் றன்பா யருந்திடுவா
ரன்னியமென் றற்கருத்த மாய்ந்திலரே—யன்னியவூன்
றின்பார் மனிதர்களோ செப்பிலிவ ரன்னியரே
யென்பாருக் கென்புகல்வ ரே. 43

விளையு மாக்கிளையை வெட்டிப் புதைக்கில் ;
விளையுமோ * மைக்காலை வெட்டில்—விளைவறியா
திவ்விரண்டு மொன்றென்பார்க் கிவ்வுலகில் யாராலு
மெவ்விதமுந் சொல்வதுவீ ணே. 44

* மைக்கால் - ஆட்டுக்கால்.

ஆவுரித்துத் தின்பாரு மாண்டவருக் கன்புளரேற்
றேவரெனக் கொள்வரெனுந் தென்றமிழின்—பாவருமை *
சின்ன விலக்கணமுந் தேரா ரறியாது
னென்ன விரோதமென்ப ரே. 45

---

* திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்:
"சங்கநிதி பதுமநிதி ... ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில்
அவர்கண்டீர்யாம் வணங்கும்
...."

"ஆகம நெறியை விளக்கவந்த" அருளுடைய அரசுகள் "புலையரே னும்" என இழிவு சிறப்பு உம்மை கொடுத்துக் கூறியிருத்தலால் புலால் உண்ணுமையே ஈசர்க்கு உகந்தது என்று கொள்ளவேண்டும்.

உணவாதிகளில் இயற்கை வசத்தராய்ப் பிறஜெந்துக்களின் ஊனை உண்டு களிக்கும் சுபாவமுடைய சாதியில்பிறந்த ஒருவர் கடவுளிடம் அகத்தும் புறத்தும் அன்பு மிக்கு அகங் குழைந்து மெய் அரும்பி அடிகள் பாதம் நெஞ்சினால் நினைத்தும், நாவினால் வாழ்த்தியும் கையினால் தொழுதும் சிவனடிக்கேவைத்த அன்பு கலந்த மெய்யறிவுடையராயும், மறந்தும் பிற தெய்வம் நினையாதவராயும், மெய்கலந்த அன்பு மிகுதியினால் ஆடுதலும் அவ்வியல்பில் பாடுதலுமாய் நிகழ்பவராயும், பெருங்காதல் ஒப்பரிதாய் வளர்ந்து ஓங்க உள் உருகி மைவண்ணத்திருமிடற்றார் மன்றில் நடம் கும்பிடுவது எவ்வண்ணம் எனத்துயிலும் போதும் எண்ணி எண்ணித் தெள்ளாரமுதசார மயமாக ஆகின்றவராயும் விளங்குகின்ற பெரியோராய்த் திகழ்வாராயின் அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே என்று சிவபிரானிடத்துப் பாராட்டப்படும் அன்பின்திறத்தைப் புலப்படுத்தும் நோக்கங் கொண்டாரேயன்றிப் புலால் உண்பதை எடுத்துச் சிறப்பிக்கவேண்டும் என்று வாக்கின் மன்னர் (அரசுகள்) கருதினாரல்லர்.

அன்றியும் சாதி, குலம், கோத்திரம், பிறந்த இடம், பிறந்த காலம் முதலிய இயற்கை வசதிகளே வீட்டின்பத்திற்கும் அமைந்த நெறி என்று நினைத்து இறுமாப்புக் கொண்டும், கடவுளிடம் அன்பு பூண்டும் உயிர்களிடம் இரக்கங் கொண்டும் வாழாமல் வாழ்நாளை வீண்நாளாகக் கழித்தும், சாதிபற்றியே மற்றையரைத் தாழ்வு படுத்தியும் தம்மை மதித்தும் பிறர் குற்றம் ஆராய்ந்தும் திரிகின்றவர்களை நோக்கி, சாதியாசாரம், குலாசாரம், மரபாசாரம், தேசாசாரம், கோத்திரச் சண்டை, சாத்திரச் சந்தடி முதலிய பேதங்களைக் காட்டிலும் தெய்வம் பரவல், பிற உயிர்க்கு இரங்கல், பெருங்குணம் பற்றல், பாடிப்பணிதல், பத்திசெய்திருத்தல் முதலிய அன்பு நெறியின் நிலைகளே சிறந்தன என்னும் மெய்நூல் முடிபை விளக்கிக் காட்டினார் என்றும் கொள்ளலாம்.

"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங் கொண்டென்செய்வீர்
பாத்திரம் சிவமென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளுமாற் பேறரே."

என்று அரசுகள் கட்டளையிட்டதை ஓர்ந்துணர்க. விரிக்கிற்பெருகும்.

உவமையுவ மேயமென்ப தொன்றுமுண ராமல்
அவமுறுவீண் வாதமுறு மற்பர்—பவமுறுபொய்
வன்மொழிகே ளாதுசெய்யுள் வண்மையறி வல்லுனரி
னின்மொழிகே ளென்னெஞ்ச மே. 46

கல்வியெனு மூரின் கடையிற் புகுந்தறியா
வல்வினையார் வார்த்தை மதியாமல்—நல்விதியை
யாழ்ந்துணர்ந்த வான்றோ ரவையிற் படிந்திருந்து
வாழ்ந்திருநெஞ் சேநல் வழி. 47

தின்றிடுவா ரில்லையெனிற் றேயத்தி லொன்றினையுங்
கொன்றிடுவா ரில்லையெனுங் கொள்கையினை—நன்றறியாச்
சில்லோர்தின் ருற்பாவஞ் சேராதென் பாரவரைப்
பல்லோரு மெள்ளப் படும். 48

கண்ணப்ப நாயனூர் கர்த்தனுக்கு மாமிசத்தை
யுண்ணக் கொடுத்தாரென் ரேதுவார்—கண்ணதுவே
வேண்டா மொருவிரல்லை வேதனந்தான் செய்வாரோ
வீண்டாழ்ந் தறியார்க ளே. 49

திருநாளைப் போவாருந் தின்றனரு னென்றே
பெருமூடர் சொல்வார் பெரியோ—ரொருநாளு
முண்ணதிலை வெம்பிறவி யுற்றதனூற் றீமூழ்கி
யண்ணலடி யார்ந்தன ரென் பார். * 50

பகர்சுத்த ராகும்யாழ்ப் பாணரென்பா ருக்கோ
ரகமிருக்கச் செய்யென் றருளுஞ்—சகமகிழுஞ்
† சம்பந்த வள்ளற் றனிமொழியை யெஞ்ஞான்று
நம்பந்த நீங்கநெஞ்சே நாடு. 51

கார்த்திகையெ னும்விரத காலத்தின் மாமிசத்தைச்
சேர்த்தலா காதென்று செப்பிடுவீர்—சீர்த்தியுறு
மந்நா டவிரமற்ற தாண்டவருக் காகாதே
லெந்நா ளனவியம்பு வீர். 52

---

* திருநாளைப் போவார் சைவரே. பிறந்த பிறப்புக்காக அக்கினியில் மூழ்கினர். நந்தனூர் கீர்த்தனையில் 'மாடுதின்னும் புலையர்' என்று கூறியது சைவமரபு அறியாத ஏழைக் குறும்பே யாகும்.

† திருஞான சம்பந்தப் பெருமான் திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கும் பிறப்பு பற்றியே தனியிடம் அமைத்தனர்.

சிறந்தநோன் பேகொன்று தின்னாமை யென்ற
வறந்தருமவ் வார்த்தை யறவே—மறந்துயிரைக்
கொன்றுதின்கின் றோரைக் கொடுங்கூற்றன் தூதுவர்க
ளொன்றுநர காழ்த்திடுவ ரே. 53

தோத்திரஞ்செய் தாலுந் தொழுதாலு மூன்றின்போர்
சாத்திரங்கற் றாலுஞ் சகமதனி—லாத்தியுறுங்
கற்பம் பலவாய்க் கடுநரகில் வீழ்வதைவிட்
டுற்பவிக்க நேர்வதுமுண் டோ. 54

கொன்றுதின் கின்ற கொடும்பாவக் கோளர்களை
மன்றுணின்ற நம்பெருமான் மாணடியை—யென்றுந்
தொழுவார் கடைக்கணுற்றாற் றுன்புற் றுருகி
யழுவார் மிகவாடு வார். 55

கொலைபுலைசெய் வாரோடு கூடியிருந் துண்போர்
புலையரொடா வூனைப் புசிக்குந்—தலைநிலையாம்
பாதகத்துக் காளாய்ப் பலகாற் படுநரகில்
வாதனையுற் றாழ்ந்தலறு வார். 56

உண்ணாமை யுள்ள துயிர்நிலையென் றோர்பெரியர்
கண்ணாகச் சொன்ன கவிப்பொருளை—நண்ணாமற்
கொன்றுயிரைத் தின்றூனைக் கொண்டாட்டங் கொள்வோரை
யென்றுநிர யம்விடா தே. 57

* கொல்லா விரதத்தைக் கொண்டோர்நல் லோரென்ற
நல்லார்சொன் னன்மொழியை நண்ணாமற்—பொல்லாப்
புலாலைப் பிரியமுற்றிப் பூதலத்தி லென்னே
விலாப்புடைக்கத் தின்பார் விதி. 58

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூ னுண்ணவொரு †
நன்னூன் மொழிப்பொருளை நண்ணாமற்—றன்னூனை
யாரலுக்கு § மண்ணுக்கு மாக்கியொழித் தானன்றிச்
சாரமென்ன கண்டுகொண்டான் றான். § ஆரல் - நெருப்பு. 59

பொல்லாப் புலாலையென்ற பொன்மொழிசொன் மூலர்நெறி ‡
நில்லாரைத் தீவாய் நிரயத்தின்—மல்லாகத்
தள்ளுவார் துன்பமுறத் தாக்குவார் தண்டத்தா
லெள்ளுவா ரெற்பகலு மே. 60

* 'கொல்லாவிரதமது கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே." தாயுமானவர்.

† திருக்குறள், புலால் மறுத்தல், க.

" பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகிடை
மல்லாகத் தள்ளி மறித்து வைப்பரே." திருமந்திரம்.

புலையுங் கொலைகளவும் போக்கென்ற வெளவைக்
கலையுந் திருநெறியுங் கல்லார்—நிலைபே
றடையார் பவமேழி லாழ்ந்தேழ் நரகே
யடைவார் மனமே யறி. 61

மருவாரணைப் பெண்ணென்று வாய்மலர்ந்த வெங்கள்
குருவாணை போனில்லாக் கோள—ரொருவாம
லேழா நரகத் திருப்பரன்றி யிவ்வுலகில்
வாழார் மனமே மதி. 62

கொல்லா விரதத்தைக் கொள்ளாரைக் காணிலொரு
புல்லாக வெண்ணென்ற பொன்மொழியைக் ‡ கல்லாத
துட்டர்களைச் சேரத் துணிவாயே னெஞ்சேபின்
கட்டமுறு மென்றே கருது. 63

செயிரிற் றலைபிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைபிரிந்த வூனென் * றுயிர்க்குறுதி
யன்போ டுரைத்தபெரி யாராணை போனடப்போ
ரின்போடென் றும்வாழ்வ ரே. 64

கொலைபுலைகூ டாதென்று கூறிவிட்டா ரான்றோர்
நிலைபெறவே யிந்த நிலத்திற்—றலையாய்
விராவு புண்ய மென்று மிகமுயன்றோ னங்க
ளிராமலிங்க தேசிகனு மே. § 65

கோலைமறுத்தல் சம்பூர்ணம்.



---

‡ நெஞ்சறி வுறுத்தல், 650.

“ கொல்லா விரதமது கொள்ளாரைக் காணிலொரு
புல்லாக எண்ணிப் புறம்பொழிக... ... ...”

* திருக்குறள், புலால் மறுத்தல், 8-வது செய்யுள்.

§ இந்நூலாசிரியர் வள்ளலாரியற்றிய சீவகாருண்ய வொழுக்கத்தை அச்சிட்ட காலத்தில் முருகதாசரியற்றிய சாத்துகவி:

கொலையும்புலையும் தவிர்தனன்றென் றெளவை கூறியசொல்
மலையிலக்கென் றவள்பின்னேனும் சொற்றனன் மாநிலத்தில்
நிலைபெறச்செய்ய வடலூரன்போல் முயல்நெஞ் சுற்றிலார்
தலையினிற கங்கைவைத்தோன் அருளோர்ந்த சரதமிதே.

சிவமயம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை.

# சாமிமலை ¶ சாமிநாதக் கடவுள்

# தோத்திரம். $

◆◆◆◆◆◆◆◆◆

நேரிசை வெண்பா.

*சற்குருவாம் ராமலிங்க சாமிதனக் குப்பரம*
*நற்குருவா குஞ்சாமி நாதனே—யெற்குரிய*
*வெண்ணப் படியே யிரங்கியருள் சந்நிதியில்*
*விண்ணப்பஞ் செய்தேன் விரைந்து.* 1

*என்றன் கனவினில்வந் திப்பிளவை யின்கொடுமை*
*யின்றகலு மேரகம்வா வென்றருளிச்—சென்றவுடன்*
*துன்பமற வந்துநின்றேன் தூய விபூதிபெற்றே*
*னென்பகர்வே னின்னிரக்க மே.* 2

---

¶ சாமிமலை : கும்பகோணத்திற்கு மேற்கே நான்கு மைல் தூரத்தி லுள்ள திருவேரகம் என்பது. முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கும் ஆறு படை வீடுகளில் ஒன்று.

நச்சினார்க்கினியர், "மலைநாட்டகத்து ஒரு திருப்பதி" என்பர்.

முருகதாசர் ஆறுபடை வீடுகளையும்,

"பழனியப்பா ஏரகத்தப் பாசெந்தி லப்பா
அழகுமலி சோலைமலை யப்பா—கழகம்
புகழ்பரங்குன் றப்பா பொருப்பினங்கள் தோறும்
திகழுமப்பா நின்கருணை செய்."

என ஒரு தனிப்பாடலில் அமைத்துக் கூறியிருக்கின்றனர்.

$ இந்நூலாசிரியர் தமது இருபதாம் பிராயத்தில் மிகப் பெரிய கட்டி தோன்றித் துன்பப்பட்டுக்கொண் டிருந்த காலத்து ஆங்கில வைத்தியர் அதை அறுக்கவேண்டுமென்று கூறிப்போந்தவுடன் அன்றிர வில் முருகரைத் தியானிக்கவே சாமிமலைக்கு வரும்படி உத்தரவு பிறந் தது. விழித்துப் பார்த்ததும் கட்டிமறைந்து மிகச்சிறிய உருவாகியது. பிறகு சாமிமலைக்குச் சென்று தம்கண்களால் பல அற்புதங்களையும் கண்டு களித்தார். அச்சமயம் இத்தோத்திரம் பாடினர்.

இத்தனைநா ளித்தலத்தை யெண்ணி வராதிருந்த
மத்தனிவ னென்றே மறக்கருணை—வைத்தருளா
தின்பா ரறக்கருணை யின்றருள்வா யேரகம்வா
முன்பா வருளுவதிங் கார். 3

சின்ன வயதிற் சிறியேனை யாட்கொண்டு
பின்னரென் பாலிற் பிரியமற்ற—தென்னவகை
யோயறியேன் குற்ற மொறுத்திரங்கி யேரகம்வாழ்
தேவனினைப் பாடவருள் செய். 4

எனையறியுந் தன்மை யெனக்கறிவித் தென்னுள்
ளுனையறியுந் தன்மை யுணர்த்தித்—தினையளவும்
பேதமிலா வின்பம் பிறங்கவரு ளேரகம்வாழ்
நாதநினக் கேயடிமை நான். 5

எந்தநோ யுங்கணத்தி லேகச்செய் யேரகத்தோ
யெந்தனோய் நீக்க விரங்கிலையே—சந்ததமு
முன்றனை யுன்னி யுருகிநெகிழ்ந் தேத்துகின்றே
னென்றுயே யென்றந்தை யே. 6

தீதே பலவாச் செய்திருந்தே னானு
மீதே தருண மிரங்கியருள்—மாதேவன்
வாமி * மகிழ் பின்னீன்ற மைந்தனெனப் போற்றுகின்ற
சாமிமலை சாமிநா தா. 7

செம்மையிலாத் தீமைபல செய்தேன் பிழைபொறுத்து
வெம்மையெலாந் தீர்த்து விரைந்தருள்செய்—யம்மைசிவ
காமிமலை யாளீன்ற கந்தவே ளென்றேத்துஞ்
சாமிமலை சாமிநா தா. 8

தவம்புரியேன் தான்றோன்றித் தம்பிரா னாகி
யவஞ்செய்தே னென்னினும்வந் தாள்வாய்—சிவன்தந்த
நேமிமகிழ்ந் தேந்து நெடுமான் மருகனெனுஞ்
சாமிமலை சாமிநா தா. 9

காமக்ரோ தாதியெலாங் கைகண்டேன் பாலிரங்கி
தாமதமில் லாதருள் தந்திடுவாய்—தாமரைவாழ்
சாமிமுன மேங்கத் தனிச்சிறைவைத் துப்படைத்த
சாமிமலை சாமிநா தா. 10

---

* வாமி - சிவபிரானுடைய வாம (இடது) பாகத்தில் உள்ள அம்பிகை.

அடமேசெய் தீச்செயலை யாங்காரி யென்றென்னை
யிடரேசெய் யாதுனரு ளீவாய்—கடல்சூழும்
பூமிமகிழ் பூமகளைப் பொன்மாமி யென்றுபுகழ்
சாமிமலை சாமிநா தா. 11

எந்நாளென் குற்றமெலா மெண்ணு திரங்குவையோ
வந்நாளென் சொப்பனத்தி லன்புடனே—யெந்நாளு
நேமிநா தன்மருக நின்மலவென் றேத்துகின்ற
சாமிநா தாவின்று சாற்று. 12

மரணசன னப்பிணியை மாற்று மகத்தாம்
பிரணவத்தைச் சங்கரற்குப் பேசுஞ்—சரவணப்பேர்
கொண்டநதி யில்வளர்ந்த கோவேயிச் சிற்றடியேன்
கொண்டபிணி நீங்கவருள் செய். 13

பரமுயிர்பார் மூன்றும் பகர்கற் பனைநாம்
பிரமமென னெஞ்சே பிழையே—பிரம
மருவேறும் பூக்கொண்டு மாதவர்பூ சிக்குந்
திருவேர கத்தனெனத் தேர். 14

அருளுடைய வாண்டவனென் றன்றோர் நிதமுந்
தெருளுறுதற் கேத்துகின்றார் தீயேன்—மருளடைந்து
மாழ்கின்றேன் சாமிமலை வள்ளலே மெய்யின்ப
வாழ்வுதர வந்தருளு வாய். 15

தொண்டரடி யார்க்கினிய தொண்டர்களு மேத்துகின்ற
தொண்டர்பணி செய்யுந் துறையருள்வா—யண்டர்தொழும்
வாமிமலை வல்லிமண வாளன்றன் சற்குருவாஞ்
சாமிமலைத் தேவே சரண். 16

சாமிநாதன் செஞ்சரணந் தஞ்சம்.



---

குறிப்பு:—இந்நூலாசிரியர் பாடிய வெண்பாவாலமைந்த நூல்களை யெல்லாம் ஒருசேரத் திரட்டி வெளியிடவேணடும் என்னும் விருப்பத்தினால் இத்தோத்திரம் இடையே சேர்க்கப்பட்டது.

சிவமயம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை.

# அருட்பிரகாசர் அற்புத வந்தாதி.

விநாயகர்.

கலித்துறை.

சீராருந் தெய்வத் தனிநிலை யெங்குந் திகழநினைந்
தேரார் வடற்சபை யெண்முகஞ் செய்த வெழிற்குருமேற்
பேரார் கலித்துறை யந்தாதி செய்யப் பெரிதருளுங்
காராரு மாமுக வைங்கர நால்வாய்க் கணபதியே.

முருகர்.

பதியே பரகுருவே முப்புராந்தக பாலகனே
மதியே பெறவந்தருளிய சற்குரு வள்ளலின்மேற்
றுதியோர் கலித்துறை யந்தாதி செய்யத் துகளறுசொன்
னிதியே யுறுந்தர நாயேற் கருள்வது நின்சீரதே.

நூல்.

சீர்சான்ற வுண்மை யறிவின்பந் தேக்குஞ் சிவவெளியே
பேர்சான்ற வேதா கமசம மார்க்கம் * பிறங்கொளியே
நேர்சான்ற மேலா முபநிடதத்தி னிசப்பொருளே
தேர்சான்ற சீர்வடற் சிற்சபை யோங்குந் திருநெறியே. 1

திருநெறி மெய்த்தமிழ் மாமறை யின்பொரு டேற்றியதாற்
பெருநெறி யாவு மறிந்தே னிதுநற் பெருமறைதன்
னருநெறி யென்ற † வருட்பிர காச னருட்கவியி
னொருநெறி நிற்கி லுளங்கலங் காவகை யுற்றிடுமே. 2

---

* சமமார்க்கம்—சமரச மார்க்கம்.

† 2-ந் திருமுறை, திருவருள் விலாசம், 2-ம் பாசுரம்:

"திருநெறிமெய்த் தமிழ் மறையாந் திருக்கடைக் காப்பதனால்
திருவுளங் காட்டிய நாளில் தெரிந்திலன் இச்சிறியேன்,
பெருநெறிஎன் உளத்திருந்து காட்டியநாள் அறிந்தேன்
'பிழைபடாத் தெய்வமறை இது'வெனப் பின்பு உணர்ந்
[தேன். ..."

உற்றிடு நற்றவ ருள்ளே நிறைந்தொளி ருத்தமனே
கற்றிடு வித்தகர் தம்பே ரறிவிற் கலந்தவனே
பெற்றிடு முற்செய வூழ்வினை யற்றிடு பெற்றியனே
முற்றிடு தற்கிட நின்னடி யேயிதென் முற்கண்டதே. 3

முற்கண்ட சண்பைய ராதியர் நால்வர் முதுக்குரவர்
பிற்கண்ட செய்ய வருட்பிரகாசன் பிறங்குதமிழ்ச்
சொற்கண் டுளத்திற் கருதியுள் ளன்பாற் றுதிப்பவர்க்குக்
கற்கண்டு பாகுதேன் வானாட் டமுதங் கயந்திடுமே. 4

கயந்திடு நின்செவி நாயேன் பிழையைக் கணித்துரைக்க
வியந்திடு நின்மன மெங்கிவ னுண்டென மேதினியி
னயந்திடு நின்னருண் மீட்டுமென் பாற்றயை நண்ணுறவே
பயந்திடு மென்னுளத் துன்னருட் பாத்தேன் படிந்திடுமே. 5

தேன்படிக் குந்திரு வன்றொண்டர் செய்திடுந் தெய்வமறை
நான்படிக் கும்பொழு தோரே * னெனையென்று நாட்டியிந்நா
யேன்படிக் கப்பணி நின்னருட் பாவினை யின்புடனே
நான்படிக் கும்பொழு நின்மன மென்வழி நண்ணிடுமே. 6

நண்ணிடு வாருன்ற னெழுத் தைத்தின நாடியயற்
பண்ணிடு வார்நின் றிருவருட் பாவுறும் பாடல்கட்கே
யெண்ணிடு வேனின் னுருவினைக் கண்டிட வென்னுடற்றீ
மண்ணிடு மாறுசெய் யாதருள் வாயொளி வான்கலந்தே. 7

வான்கலந் தாடு மணிவா சகப்பெரு மான்றனையே †
தேன்கலந் தாலென்ன நின்னருட் பாவினிற் செய்துதியை
மான்கலந் தேர்விழி மையலிற் பட்டு மயங்குகின்ற
நான்கலந் தேதுதி செய்திட நின்னரு ளுடிடுமே. 8

நாடிடு வார்வினைப் பல்லா யிரவர் நயந்துநின்சீர்
பாடிடு வார்நின் றிருவருட் பாவைப் பலன்பெறவே
யோடிடு வார்வட லுத்தர சிற்சபை யோர்ந்திலனாய்
வாடிடு நாயேன் றனக்கரு ளுய்வான் வருமொழியே. 9

---

* 4-ந் திருமுறை, ஆளுடைய நம்பிகள் அருள்மாலை, 7-ம் பாசுரம்:
"தேன்படிக்கும் அமுதாம் உன்திருப்பாட்டைத்
தினந்தோறும் ... ... ..."

† 4-ந் திருமுறை, ஆளுடைய அடிகள் அருள்மாலை, 7-ம் பாசுரம்:
"வான்கலந்த மாணிக்க வாசக ... ..."

வருமொழி செய்திடு மாணிக்க வாசகர் வாசகத்தி
லொருமொழி யென்றலை வன்றனைச் சேர்ந்திட லுற்றதெனுந்
திருமொழி ‡ சொற்ற வருட்குரு வேனின் றிருவருட்பா
வொருமொழி கேட்டிடிற் சஞ்சித நீங்கிடு முண்மையிதே. 10

உண்மை யிதேயினிச் சன்மார்க்க சங்க முலகமெல்லாம்
வண்மையு டன்பர வுந்திரை யுற்றிடு மானுடர்க
ளொண்மையி ளம்பரு வம்பெறு வாரென் றுரைத்திருந்தும்
பெண்மையுற் றேமறந் தேற்கரு ணின்னிணைப் போடியே. 11

போடி யார்பதி னுற யிரத்தோர் பிறந்ததிருச்
சீரடி யேத்தந்த வள்ளாலுள் ளன்புடன் செய்துவைத்த
பாரடி வான்புகழ் நின்னருட் பாவுறும் பாவதனி ¶
லோரடி கற்ற லிகபர முத்தி யுடன்வருமே. 12

---

‡ 4-ந் திருமுறை, ஆளுடைய அடிகள் அருள்மாலை, 8-ம் பாசுரம்:
"வருமொழிசெய் மாணிக்க வாசக ... ... "

¶ இராமலிங்கசுவாமிகள் "அருள் நெறியின் முதலரசியற்றிய" திருஞானசம்பந்தப் பெருமானை உபாசனா மூர்த்தமாகக் கொண்டு பல பதிகங்கள் பாடியிருத்தலால் சம்பந்தர் சீரடியைப் பெறுவதற்குத் திருவருட்பாவிலுள்ள சம்பந்தப் பெருமான் தோத்திரம் போதும் என்றனர். சற்புத்திர மார்க்கம் விளக்கிய சம்பந்தமூர்த்தியை இராமலிங்கபிள்ளைப் பெருமான் 4-ந் திருமுறையில்,

"உலகியல் உணர்வோர் அணுத்துணையேனும்
உற்றிலாச் சிறிய ஓர் பருவத்து"

என்று தொடங்கும் பாசுரம் முதலாகவுடைய மாலையிலும்,

"சீரார் சண்பைக் கவுணியர்தம்
தெய்வமரபில் திகழ் விளக்கே ... ... "

என்று தொடங்கும் பாசுரத்திலும், 6-ந் திருமுறையில்.

"உலகியலின் உறுமயலின் அடைவுபெறும்
எனதிதயம் ஒளிபெற விளங்கு சுடரே ... ... "

என்று தொடங்கும் பாசுரத்திலும் இன்னும் பல பாக்களின் இடையிலும் மிக அழகாகவும் உருக்கமாகவும் துதித்திருக்கிறதை நோக்கியே சைவப் பிரசாரகர்கள் பிரசங்கம் தொடங்குமுன் இப்பாக்களைப் பாடுகின்றனர்.

திருச்சீரடி-சம்பந்தர்திருவடி
பார்-பூமி, அடி-பாதாளம், வான்-சொர்க்கம்.

ஆகவே மூவுலகும் புகழும் திருவருட்பாவிலுள்ள சம்பந்தர் துதி.

உடன்வரு மேநின் றிருவருட் பாவைநன் கோதுதற்குத்
திடன்வரு மேநல்ல சீர்வரு மேமுத்தி சித்திவரும்
வடன்மன் றினிலொரு மாத்திரைப் போது வதிந்திடவே
யடன்மன முற்றோர் பணிவாய்த் திடுமுரு வண்டத்திலே. 13

உருவண்டப் பேர்மறை யென்றெவ் வுலகமு மோதுகின்ற
திருவண்டப் பேர்பெறு நற்சீ ரகவலைச் செய்தபெருங்
குருவென்று நின்சீ ரருட்பாவி லன்பிற் குறித்தவதில்
றுவென்ற * வுண்மை நிலையுரைப் பாயெனக் கின்னதென்றே. 14

இன்னதென் றுண்மெய்ப் பொருளறி யுந்திற மின்மையினேற்
சொன்னதைச் சொல்லுஞ் சுகத்தினைப் போன்றே சுருதிசொல்லு
மின்னன கற்பனை மெய்யென் றுரைப்பார் வியன்குருவே
மன்னல வுட்பொரு ளின்றே விளங்க வகுத்தருளே. 15

---

* 4-ந் திருமுறை, ஆளுடைய அடிகளருண்மாலை, 4-ம் பாசுரம்:

" உருவண்டப் பெருமறையென் றுலகமெலாம் புகழ்கின்ற
திருவண்டப் பகுதியெனும் திருவகவல் வாய்மலர்ந்த
குருவென்றெப் பெருந்தவரும் கூறுகின்ற கோவேநீ
இருவென்ற தனிஅகவல் எண்ணமென்னக் கியம்புதியே." என்னும் பாசுரத்தில் மணிவாசகர் தாம் அருளிய திருவண்டப்பகுதியில் கடைசி அடிகளில் "கடைமுறை என்னையும் இருப்ப தாக்கினன்" என்று அருளிச்செய்ததன் நுண்ணிய அனுபவம் வள்ளலார் தமக்குப் பூரணமாய் விளங்கவேண்டும் என்று பாடியருளிய பரமாசாரியப் பரம் பொருளையே துதிக்கின்றார்.

" நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள்வாழ்க" என்று தொடங்கும் "சிவபுராணத்தில்" ஆளுடைய அடிகள் "திருவடிக்கீழ்ச் சொல்லியபாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்" என்றருளியதால், பாடலை நெட்டுருப் பண்ணி ஆரவாரிப்பதை விடக் கடவுளது பெரும்புகழ் எப்படிப் பாட்டின்பொருளால் தெளியக்கிடக்கும் என்பதைத் தேர்ந்து ஓதல் வேண்டும் என்பது பெற்றும்.

கடவுள் ஒலிவடிவம் அல்லர், ஒலிபெறுகின்ற வரி (எழுத்து) வடிவம் அல்லர், எழுத்தாலாகிய சொல்வடிவம் அல்லர் சொல்லில் அமைந்த பொருளின் பயனே ஆவர்.

திருவாசகத்தின் பொருளை அனுபவித்தற்கு வள்ளலார் போன்ற மெய்ஞ்ஞானிகளே உரியர்.

அருளே திரண்டோ ரருவுரு வாகி யவனிமிசைப்
பொருளே புவியே யணங்கே யெனுமெனைப் போன்றவரை
யிருளேய் பிறவிக் கடற்கரை யேற்றிமெய் யின்புடையுந்
தெருளே தரவருள் ராமலிங் கோத்தம தேசிகனே. 16

தேசிக வுன்றன் றிருமுக மாமலர் சேவித்துமுண்
மாசிகற் சுத்தசன் மார்க்கசங் கத்தவர் மாணடியி
லாசிக வாப்பத்தி யில்லேன் பிழைபொறுத் தாண்டருள்வாய்
மாசிக ரம்பெறுஞ் சீர்வடல் வாழ்குரு மாமணியே. 17

மாமணி யேதிரு வார்வள மன்வடல் வாழ்மணியே
தூமணி யேமரு தூரவ தாரச் சுகமணியே
கோமணி யேயென் குலமணி யேசற் குருமணியே
வோமணி யேருட லம் * பெற வேயரு ளுண்மணியே. 18

உண்மணி யேயெனக் கெய்ப்பில்வைப் பாகு மொருமணியே
தண்மணி யேயொழி யாப்பவ நாசந் தருமணியே
கண்மணி யேகண்ணி னுண்மணி யேவான் கதிர்மணியே
விண்மணி யேசுத்த சன்மார்க்க சங்க வியன்மணியே. 19

மணியே யருட்பிர காசவள் ளாலென் மலவுடலிற்
பிணியே வளர வளர்த்தனை யேற்கொடும் பேய்மனத்தேன்
றுணியே னெவரிடஞ் சொல்லவு நின்பதத் தூமலரைப்
பணியே னெனினுந் தயாபர வென்னைப் பரிந்தருளே. 20

பரிந்தருள் வேனென் பதத்துறு மன்பின் பயனதனைத்
தெரிந்த விவேகிகட் கொப்பாரி யாயுறுஞ் சீடனெனைப்
பிரிந்த மனத்தின னிற்கிலை யென்னினின் பேறிதுவோ
விரிந்தவர்க் கேயரு ளல்விதி யென்றதென் வித்தகனே. 21

வித்தக நிற்குயர் வுள்ளோ ரிலையென மேதினியிற்
சத்தக வீறுடை மாதவர் தேர்ந்து சகத்துரைப்பார்
சித்தக நற்றவ ரென்போன் றவர்க்குந் திருவருட்பா
புத்தக மீந்தவ னேவட லூர்வளர் புண்ணியனே. 22

புண்ணிய மோர்ந்துயிர்க் கின்பே புரிபவர் பூவுலகிற்
கண்ணிய ராயிருந் தோர்கதி சேர்குவர் கற்பனையா
யெண்ணிடு வார்பெரு வீட்டடை வாரென லென்றுமில்லை
புண்ணிய மீதெனக் காருண்ய நூலிற் ‡ புகன்றவனே. 23

---

* ஓமணியேருடல்ம்: ஓம் - பிரணவம். அணி-ஏர். உடலம்-உடல்:—பிரணவதேகம்.

‡ காருண்யநூல்-ஜீவகாருண்ய வொழுக்கம்.

புகன்றிடி லின்னும் பிறப்பெனக் குண்டெனப் புத்தமுதென் $
மகன்றனக் கீயெனச் சேர்த்தருள் குண்டலி மாதினிடஞ்
செகன்றனி லேயிற வாமையுண் டென்னினித் தேகமதை
யகன்ற வெளிச்செயுஞ் சத்திபா லென்னை யமைத்தருளே. 24

அமைத்திடு வார்நன் னிலையத்தி லுன்றனை யன்றியென்னை
யிமைத்தனை யில்லையென் றெண்ணியே நிற்க விகத்துயரின்
சுமைத்தனைப் போக்கும் வகையறி யாது சுழன்றிருக்கச்
சமைத்தனை யோவெனை மாத்திர மிந்தச் சகத்தினிலே. 25

சகத்தினி னின்றரங் கேட்டவ ரன்பொடு சாற்றியநன்
மகத்தினை யென்றும் வழுவாது செய்து மகிழ்ந்திருக்க
முகத்தினை முன்னெறி சித்துந் துயர்க்கடன் மூழ்குவதோ
சுகத்தினை யென்றடை வேன்குரு வேயெனைச் சோதிப்பதே. 26

சோதிக்க வெண்ணிலிச் சிற்றடி யேன்றனைத் துன்பமெல்லாம்
வாதிக்க நண்ணிடு மீதுன் கருணை மனத்தடைவோ
வேதிக்க மண்ணினில் வந்துதித் தோய்ப்பசு வேதனையைச்
சாதிக்க விண்ணி லொளித்தா யெதையதைச் சாற்றுகவே. 27

சாற்றும் பொதுவற வுண்மை விளங்கவெத் தாரணியும்
போற்றுந் திருவருட் பாவின்முப் பூவைந்து பூவெழுபூ §
வேற்றும்பொற் பங்கய † மென்னுங் கவிக ளியற்பொருளைத்
தோற்றும் படிக்கருள் செய்வா யருட்பெருஞ் ஜோதியனே. 28

---

6-ந் திருமுறை, கைம்மாறின்மை, 9-ம் பாசுரம் "பொற்பங்கய"

$ இன்னும் பிறப்பதற்கு... ..." தாயுமானவர்.

† 6-ந்திருமுறை, வரம்பிலின்பம், 33-ம் பாசுரம்:

§ " விண்ணிடத்தே முதன்முப்பூ விரிய அதில் ஒருபூ
விரிய அதில்மற்றொருபூ விரிந்திட இவ்வைம்பூக்
கண்ணிடத்தே பிறிதொருபூ கண்மலர அதிலே
கட்டவிழ வெற்றொருபூ விட்ட எழுபூவும்
பெண்ணிடத்தே நான்காகி ஆணிடத்தே
மூன்றாய்ப் பிரிவிலவாய்ப் பிரிவுளவாய்ப் பிறங்கி உடல்கரணம்
நண்ணிடத் தேர்ந்தியற்றி அதில்நடுநின்று
விளங்கும் நல்லதிரு வடிப்பெருமை சொல்லுவதார்தோழி"

ஈண்டு 'பெண்ணிடத்தே நான்காகி' 'ஆணிடத்தே மூன்றாய்" என்பதை விளக்க வள்ளலார் எழுதிவைத்த குறிப்புகள் வருமாறு:

(முன்பக்கத்துக் குறிப்பின் தொடர்ச்சி.)

ஏழுகலைகள். பெண்பாகத்தில் கலை நான்கு.
ஆண்பாகத்தில் கலைமூன்று. ஆக ஏழு.

ஒவ்வொரு கலையில் ஒவ்வொரு தாது அணுவாய்ச்சேர்ந்து ஏழாவது கலையில் கரு சம்பூரணமாய் சப்ததாதுக்களும் கூடியபின் பிண்டமாகும். பிறப்பு எழென்பது ஒவ்வொரு தேகத்தில் ஏழுபிறப்பு. ஆண்பிள்ளையின் தேகத்தில் மூன்றிடங்களில் சத்துண்டு:—

அவை மண்டையின்மூளை கொப்பூழ் இலிங்கத்தின் கீழ்ப்புறம் பெண்பிள்ளையின் தேகத்தில் சத்து நான்கிடங்களில் உண்டு. மண்டையின்மூளை தனங்களின்கீழ், கொப்பூழ், குய்யம்.

சுரோணிதப் பையினிடத்தில் மூன்றுமணிசேர்ந்த கொத்து (க) வலது புறத்திலும், நான்கு மணிசேர்ந்த கொத்து (க) இடது புறத்திலும், இருக்கின்றது. சுரோணித சுக்கிலங்கலந்து கர்ப்பந் தரிக்கிற காலத்தில் மூன்றுசேர்ந்த கொத்தில் சம்பந்தப்பட்டால் ஆண்குழந்தையும் நான்குசேர்ந்த கொத்தில் சம்பந்தப்பட்டால் பெண்குழந்தையும் பிறக்கும்—புணர்ச்சிக் காலத்தில் வலதுபுறம் சாய்வாகப் புணர்ந்தால் ஆணும் இடதுபுறம் சாய்வாகப்புணர்ந்தால் பெண்குழந்தையும் பிறக்கும்.

சுக்கிலமும் இரண்டரை (உ½) வராகன் எடையாயிருக்கும். அதின் விஷபாகமாகிய சத்தி ஒன்று, சாதாரண மென்னும் பூதமாகிய அறிவு ஒன்று, அசாதாரணமான அமுதமாகிய விந்து அரை. இதுபோல் பெண்பாலிடத்தும் சுரோணிதம் உள்ளது. மேற்கண்ட சுக்கிலசுரோணிதம் இரண்டினும் கடவுள் ஆவி உருவாக இருப்பர். கோசத்தின் முன்விஷம் அடுத்து பூதம் அதற்குமேல் அமுதம் உண்டு. இவ்வாறு பெண்பாகத்தும் உண்டு.

முன்னுள்ள விஷபாகம் புணர்ச்சிக்காலையில் வெளிப்பட்டால் தேகநஷ்டம். பூதம் வெளிப்பட்டால் வியாதி. அமுதம் வெளிப்பட்டால் சந்ததிவிர்த்தியின்று. கடவுளருளால் காலசக்கரம்போல் ஏகதேசத்தில் கோச உபஸ்தங்களில் அமுதமாக நாடியை முன்தள்ளி விஷாதிகளை பின்னே சேர்த்துக் கருதரிக்கச்செய்விப்பார். இந்த நியாயத்தால் இடைவிடாது புணருகிறவர்களுக்குக் கருப்பம் இல்லை. மேலும் விந்துவளம், இடவளம், வன்னி, கிருமி, மோகவிசேடம் இவற்றாலும் கர்ப்பமில்லை.

ஆணுக்குள் பெண்ணும், பெண்ணுக்குள் ஆணும் என்பது எவ்வாறெனில் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம். பிரகிருதி ஆன்மா என்னும் ஏழுங்கூடிச் சுக்கில சுரோணிதமாய் சப்த் தாதுவாகச் சிருஷ்டிக்குக் காரணமாய் இருப்பதால் ஆணுக்குள்பெண்ணும், பெண்ணுக்குள் ஆணுமாய் இருப்பது உண்மை. உருவபேதத்தால் பெண், ஆண் என்பதுபொய் பெண். ஆண் என்னும் நாமபேதம் வருவானேன். அறிவின் உயர்ச்சி தாழ்த்தியால், ஆன்ம அறிவு=ஆண். மனஅறிவு=பெண். புருஷபாகத்தில் மூன்றில் ஆகாசத்தில் பிருதுவியும், பெண்பாகம் நான்கில் பிருதுவியினிடத்தில் ஆகாசந்தோன்றி அடங்குவதுபோல் பெண் ஆணுகியும் ஆண்பெண்ணுகிய நியாயம்.

திருட்பெருஞ்சோதி அகவல், அடிகள் 703-716. சமரச சுத்தசன்மார்க்க சத்தியப்பெரு விண்ணப்பம் எனும் வசனத்தைப்படிக்க.

ஜோதிய னேபெரு வாதிய னே * சிற சுகமயனே
யாதிய னேதிரு பாதிய னேமன் றகநயனே
தீதிய னேர்பெறுந் தீவினை யேசெய்யுந் தீயனையே
வேதிய னேர்கர மீதடை யாதருள் ¶ மேதையனே. 29

மேதைய னேவெளி யேழின் விளைவருள் விற்பனனே
போதைய னேகா கரமா யொழியவென் புந்தியினாற்
றீதைய னேகஞ் செயினும் பொறுத்துநின் சேவடியைப்
பேதைய னேன்றலை மேல்வைத் தருள்வதுன் பெற்றியதே. 30

பெற்றிநின் வெற்றிநற் பேரரு ளொன்றையும் பேசறியே
னெற்றியென் புந்தியை யீர்க்கு மனத்தினுக் கீடுபட்டே
சுற்றிவன் மாதரின் சூழ்ச்சியி லின்னுஞ் சுழலவல்லேன்
கற்றிலன் கேள்வியி லேனெனைக் காத்தருள் காரணனே. 31

காரண காரிய மெட்டுமி ரண்டென்றே கண்டிடவுஞ்
சீரண வாவியீ ரைந்தென்னு மோர்கவி † செப்பியதிற்
பேரண வக்கர மைந்தின் றிறமும் பிறங்கிடவு
மாரண நீக்கவு மன்றுரைத் தாய்வீட்டின் மன்றவனே.. 32

மன்றவ சுத்த வடாந்த சமரச மார்க்கமிதே
யென்றவ வித்தமெ லாந்தெறு மாயை யிருவினையை
வென்றவ சித்தி வளாகம திற்றிரு மெய்ம்மறையச்
சென்றவ வித்தரு வாயரு ளொற்கொரு செவ்வகையே. 33

செவ்வகை யோர்காற் படுமதி யென்ற § செழும்பொருடா
னெவ்வகை யோவென வெண்ணிடு வேற்கிது வென்றருளா
திவ்வகை யின்னும் பராமுகஞ் செய்திடி லென்செய்குவேன்
றெவ்வகை நீக்கு மிராமலிங் கோத்தம சிற்பரனே. 34

சிற்பர ஞானசி வாகர வத்துவ சிற்குணனே
தற்பர மோனத யாகர வித்தக தத்துவனே
மற்பர தீன தயாபர சுத்த மனத்தையுறற்
கெற்பர மானவ னேவர மொத்தரு ளொன்விருப்பே. 35

---

* வாதி-ரசவாதம் அறிந்தவர் செம்பைப் பொன்னாக்குதல் போல் அஞ்ஞானிகளை பக்குவஞ்செய்பவர்.

¶ வேதியன்கரம் (கை) என்மீது சேராமல் அருள்—என்னை இனி மேல் சிருஷ்டிக்கப்படாது.

† 6-ந் திருமுறையில், 'ஆவியீரைந்து ... ... ...''
எனும் பாசுரத்திற்குத் திருவருட்பாவில் உரை எழுதி யுள்ளது இந்நூல் 70-ம் பக்கம் பார்க்க.

§ 62-ம் பக்கம் பார்க்க.

என்விருப் பென்றுநின் பொன்னடி யேநினைந் தேத்திடவும்
பொன்விருப் பாளரிற் போதே கழிக்கப் புகாவகையும்
புன்விருப் பென்பால் வராவகை யும்பெறப் போற்றுகின்றே
னின்விருப் பென்னறி வேன்சிறி யேற்கரு ணித்தியனே. 36

நித்திய வான்வளர் நின்மல னேயிந் நிலவுலகிற்
சத்திய வான்மொழி நாழி யிரண்டரை தாண்டியபின்
சித்திய லான்வரு சித்தி புரத்தினிற் செத்தவர்கள்
முத்திய வாவொடு வந்தடை வாரென்ற முன்னவனே. 37

முன்னவ பேத முணர்ந்தறி யாயென முன்னிலையாய்ச்
சொன்னது தோழிக் குரிமை யுரைத்தது * தோன்றிடமே
நின்னது சீரருட் பாவினிற் கண்டவந் நீர்மையினைப்
பன்ன வெனக்குமுன் றோன்றிடு வாயென் பரகுருவே. 38

குருவே சிற்றம்பல ஞானித னக்கே குகனுரையாய்
மருவே வளருங் கருங்குழி தன்னின் மனமிரங்கித்
திருவே தரு "நின்னிலை" யென்ற † பாவருள் சின்மயனே
கருவேற்கண் ணார்மய நீர்த்தொழிப் பாய்வெங் கருவிருளே. 39

கருவிருட் பாலறக் கற்றநல் லோர்க்குங் கலிமனத்தாற்
பெருவிருட் பாட்டின் மயங்குமென் போன்றசிற் பேதையர்க்குந்
தருவிருப் பாற்சற் குருராம லிங்கச் சலகந்தரந் $
திருவிருப் பாவருட் பாமழை பெய்ததித் தீவெங்குமே. 40

---

‡ வள்ளலார் எழுதிய 'அற்புதப்பத்திரிகையில்' 3-ம் பாசுரம்:
" சத்தியவான் வார்த்தையிது ... ... ... ..."

* 6-ந் திருமுறை, தோழிக்குரிமை கிளத்தல், 7-ம் பாசுரம்:
" சிவமயமே வேறிலை... ... ... தோழி
நவமயநீ உணர்ந்தறியாய் ... ... ..."

† நின்னிலையை என்னருளால் நீயுணர்ந்து நின்றடங்கில்
இன்னிலையே அந்நிலையை எய்துதிகாண்—முன்னிலையில்
இற்குருவின் நாட்டாதே என்றுரைத்தான் ஏரகம்வாழ்
சற்குருவென் சாமிநா தன்.

வள்ளலாரிடம் திருச்சிற்றம்பல ஞானியார் வந்து உபதேசம்பெற நெடுநாளாய்க் காத்திருந்தும் ஞானியார் சந்நியாசியாதலால் வெள்ளை வேட்டிக்காரராகிய வள்ளலார் உபதேசம் செய்யுமுறை அடாது என்று தடுத்தும் ஞானியார் மேன்மேலும் காத்துக்கொண்டிருக்கவே இச்செய்யுளை எழுதித்தந்தனர் என்பது இங்குக் குறித்துள்ள விவரம்.

$ சலகந்தரம்-மேகம்.

எங்கும் பெரும்புகழ் நின்னருட் பாவினி லெவ்வுலகுந்
தங்கும் பலஞ்செறி பற்பல வாச்சொற் சமயமெல்லாம்
பொங்குங் கடற்புகு மாறெனும் பாட்டைப் * புகன்றருளுஞ்
சங்குந் தருந்தடஞ் சூழ்வடன் மன்றமர் தன்மயனே. 41

தன்மய னேசக லாகம மாமறை சாற்றியதைப்
பன்மய னேருறும் பாதக னேற்கோர் பகற்பொழுதிற்
கன்மய நீக்கி யறிவிலுண் மைப்படக் காட்டிநெஞ்சை
யென்மய மாக்கிநா னுன்மய மாகு மிதமருளே. 42

இதமே புரியாப் புறவினத் தார்க்கு மியற்பசியின்
பதமே யறிந்ததை நீக்கவு மற்றொரு பண்புநண்பெவ்
விதமேனுஞ் செய்யா திருக்கவு நன்னெறி மேவுவரைச்
சதமே புரியென்னு முன்னடி யென்முடி தாங்கிடுமே. 43

தாங்குந் தனித்த மனித்த வுடம்பின் றாமுயிர்சேர்
பாங்கும் வசனவிண் ணப்பம தாகப் பரிந்துரைத்துந்
தீங்குங் குணமுநின் னற்செய லென்னுந் தெளிவுற்றிலே
னோங்கும் வடல்வெளி யுத்தர சிற்சபை யுற்றவனே. 44

உற்றவ னேயுல கெல்லா மெனற்கோ ருரைவிரிக்கச்
சொற்றவ னேவிரிக் கிற்பெரு குந்தாஞ் சோம்புறுமிவ்
வெற்றவ னேற்குமுத் யோகமீ வேனென்ற மேதையனே
கொற்றவ னேயதை யென்றடை வேன்சிற் குணதரனே. 45

தரனே யருட்பிர காசவள் ளாலெனச் சாற்றுமெங்கள்
பரனே யருட்பெருஞ் ஜோதியை நேர்முகப் பார்வையிலெவ்
வுரனேது மிற்பெரு மத்தருந் தெய்வ வுபாசனைசெய்
திரனே யுறத்திரு வுத்தர சிற்சபை செய்பதியே. 46

பதியே யுபய கலாநிதி யோர்க்கும் பதிநெறிசொற்
கதியே யுபயம தாய்ப்பெரு மோனக் கனநிலைசொன்
னிதியே யெவர்க்குந் தயவுட னேநன் னிதிமருவா
விதியே யெனக்கு விதித்தனை யோவென் விதியிதுவே. 47

---

* மகாதேவ மாலை. பொங்குபல சமயமெனும்... ...

வேறுபடுஞ்சமயமெல்லாம் புகுந்துபார்க்கில்
  விளங்குபரம்பொருளே நின்விளையாட்டல்லால்
மாறுபடுங்கருத்தில்லை மோனஞான
  வாரிதியில்நதித்திரள்போல் வயங்கிற்றம்மா.

எனத் திருவருட் பெருஞ்செல்வராகிய தாயுமானாரும் அருளினர்.

விதியிது சாகாத் தலைவித்தி யாகலை மேற்பதியாங்
கதியிது வேயுயிர் சாந்திவே காக்காற் கலையெனலாந்
ததியிது போகாப் புனலேப்ர திஷ்டா தருங்கலையாம்
மதியிது வென்றிடுஞ் சீர்வடன் மன்றுறை மாதவனே. 48

மாதவ னேயென்றன் விண்ணப்ப மொன்றுகேள் மாநிலத்திற்
போதவ மேகழித் தேபல தேவரைப் போற்றுகின்ற
தீதவ ரோடிணங் காவகை செய்யத் திருவருள்செய்
நாதவ ரோதய னேவடற் சிற்சபை நாயகனே. 49

நாயக ஞானசு காதர மோன நலந்தருமோர்
தாயக நீயடி யேற்கரு ளாதநித் தாரணியிற்
றீயக மாமென் வினைக்கிலை தாவெனத் தேர்ந்தனனுன்
சேயக மானவ னென்றே விடாதருள் செம்மையனே. 50

செம்மையி லாத மனஞ்செல் வழியினிற் றீவினைசெய்
திம்மையி லேபல நோய்ப்பிணிப் புண்டு மிளநகையார்
தம்மையி லேசமும் பற்று திருக்குந் தரமின்றியே
வெம்மையி லேபுழுப் போன்றன னென்னை விடாதருளே. 51

விடாததும் விட்டு விடாததும் விட்டதும் விட்டெதுவுங்
கொடாத மனத்தொடுங் கூடா வொழுக்கக் கொடுமைபல
வடாதவை செய்தன னுயினு முன்சிற் றடிமையந்தோ
படாதபா டும்படப் பார்க்கின் றனைநின் பரமிதுவே. 52

பரமிது வோநின் றிறமிது வோசொற் பரங்கருணைத்
தரமிது வோநல் லறமிது வோபரி தாபமிலா
வுரமிது வோவுன்ற னூழிது வேயென்னி னின்பெயரின்
வரமிது வோவென நொந்தொழி யும்பழி வாய்த்திடுமே. 53

வாய்த்திடுங் கல்வியுஞ் செல்வமு நின்சீர் வழுத்தினர்க்குக்
காய்த்திடுங் கன்மன நெக்குவிட் டன்பாற் கரைந்துவிடுந்
தேய்த்திடுங் கைவினை நின்னையே போற்றுமென் றீவினையை
மாய்த்திடுங் காரிய மின்றே யினதொரு வஞ்சகமே. 54

வஞ்சமில் லார்கடுந் துஞ்சலில் லார்பெரு வாய்மையுள்ளார்
வெஞ்சமில் லார்கொடு நெஞ்சமில் லார்பவ வென்றியுள்ளார்
பஞ்சமில் லாரருட் பஞ்சமில் லார்நின் பதம்பணிவார்
தஞ்சமில் லாதுழல் வேற்குநின் முன்னுரு தந்தருளே. 55

தந்தரு ளென்றுநின் பொற்பதம் போற்றுந் தமியனென்முன்
வந்தரு ளற்கின்னுந் தாழ்த்திடின் மூப்பு வளர்ந்துறந்துக்
கந்தரு மாரணம் வந்திடு மற்றதைக் கண்டித்துமோக்
கந்தரு வாருனை யல்லா திலையுள்ளங் கண்டவனே. 56

கண்டவ வெல்லாங் கடந்தோர் வடற்சபை கண்டவனே
பண்டவ மெல்லாம் பறிக்க வலிந்தருட் பாமுதலிற்
கொண்ட வரும்பெரும் பாதப் புகழ்ச்சியைக் கூறெனவாய்
விண்டவ வென்பிணி தீர்த்தருள் மாயை மிதித்தவனே. 57

மிதித்திடும் பாதரட் சைக்குட் பொதிந்த விதிமதிக்குட்
கதித்திடும் லிங்கம் புடமின்றித் தீயினிற் கட்டியதேல் *
மதித்திடும் பேர்களெங் குள்ளார்நின் றேக மகத்துவத்தைத்
துதித்திடும் பேயேன் பிணிதீர்த் தருள்திரு தூயவனே. 58

தூயவ னேசற் குருராம லிங்க துரந்தரனே
நேயவ னேசுத்த சன்மார்க்க சங்க நிரந்தரனே
தீயவ னேகரைச் சீலரா யாக்கிடுஞ் சிற்சத்தியூர்
மேயவ னேயெனக் காருந் துணையில்லை மேதகனே. 59

மேதக நின்றனைக் கண்டவர் யாரும் வியன் சுகத்தைப்
பேதக மின்றி யடைந்தார் நினதரும் பேருரைத்தோர்
காதக வன்மையை மாற்றினர் நின்னற் கருத்தறியாப்
பாதக னேனையு நின்கடைக் கண்ணினுற் பார்த்தருளே. 60

பார்த்திருக் குந்தரு ணத்திலே யென்னைப் பகிர்முகத்தே
யீர்த்திருட் டன்மையி லந்தோ வெப்போது மிருவினையிற்
சேர்த்திருக் கச்செய்யு மென்றீய நெஞ்சைத் திருப்பியுனை
யார்த்திருக் கச்செய வேண்டுகின் றேனரு ளாரியனே. 61

ஆரிய நின்ற னடியேன் படும்பா டறிந்திருந்துஞ்
சீரிய லன்புறு நின்னுள்ள மின்னுந் திரும்பவில்லை
யாரிய லின்புடை யோர்நின்னை யன்றியிவ் வம்புவியிற்
பேரிய லின்றர மோவினி யேனும் பெரிதருளே. 62

பெரிதரு ணின்னடி யன்மக னேயனுப் பேதையன்றன்
விரிதரு வன்பவந் தீர்த்தாண் டருள விரைந்துண்ணிலைத்
தெரிதரு செய்ய வடற்சிற் சபைதெரி சித்துமென்னே
யரிதரு முள்ள மிரங்கிலை யேயெனை யாண்டவனே. 63

---

* வள்ளலார் போட்டிருக்கும் பாதரக்ஷைகளை இரண்டு மாதத்திற்கு ஒருமுறை ஒவ்வொருவர் எடுத்துக்கொண்டுபோய்ப் போற்றி அதில் லிங்கத்தை வைத்துக்கட்டி வைப்பார்கள். சிலநாள் கழித்து எடுத்துப்பார்த்தால் லிங்கம்கட்டி யிருக்கும்; எடுத்து நெருப்பிலீட்டால் உருகிப் புகைந்து போகாது. இதனல் சுத்ததேகம் பெற்றதன் இலக்கணம் புலனுகின்றது.

ஆண்டவ னேயென தாரிய னேகரு ணாம்பரனே
தூண்ட வராதொளி செய்விளக் கேயருட் ஜோதியனே
நீண்டவ னேமுத லோர்கள் வழுத்தரு நின்மலனே
வேண்டவ ராதவ னீயல்லை யேவடல் விண்ணவனே. 64

விண்ணவ வுன்றன் றிருவருட் பாவில் விரிந்தபலப்
பண்ணவ மென்றன் கருத்திற் பதிவுறப் பாடவருள்
பண்ண வருந்திநின் பாதாம் புயத்தைப் பணிந்துநின்றேன்
பண்ணவ வென்மேற் பராமுக மின்றிப் பணித்தருளே. 65

பணித்தநின் வாக்கின் படிநா லொழுக்கிலிப் பார்நடையிற்
பிணித்தவிந் நாயிற் கடையே னென்றேனும் பிடித்தறியேன்
கணித்தவிப் பூவின் சுமையெனக் காலங் கழிக்குமென்னி
னணித்தவ * வென்றடை வேனெனக் குங்குரு வானவனே. 66

ஆனவ வெவ்வுல கத்தி லெவர்க்குமோ ரற்புதஞ்செய்
மோனவ வேழ்மூ வயதினி லாட்கொண்டு முத்தமிழிற்
கான வருஞ்சீ ரியலளித் துந்தெரி யாதவனாய்
தீனவ னுயுழல் வேன்றனை யாளத் திறநினக்கே. 67

நினக்கே தருங்கொடும் பாவி படுந்துயர் நீக்கிடவுந்
தனக்கே தனமென வெண்ணிடு வாரிடந் தாழ்ந்துழலு
மனக்கேதம் போக்கி யழியா நிலையினில் வாழ்விக்கவுங்
கனக்கே தனர்பணி சற்குரு வென்றே கருதினனே. 68

கருதின னின்றனைச் சொப்பனத் தாயினுங் காண்கின்றிலேன்
வருதின மோவல தின்றோ நமன்வரு வானென்றெனுள்
ளொருதின மாயினு மூன்று துழலுழ வுக்குதவா
வெருதின னேற்கவ் விதிநீத் தருணின தின்னடியே. 69

அடியே தருட்சிவ மேதெனத் துன்பினி லாழ்ந்திருந்த
மிடியே யறநீ கடைக்கணித் துன்னுள் விளங்குமடி
முடியேயெனத்திரு ஞானசம் பந்தர் மொழிந்தனராய்ப்
படியே * யுரைத்தனை சற்குரு வேயப் படியெதுவே. 70

---

* எய்னின் அணித்தவன்—நான் என் என்கிற தூரத்தைவிட இறைவன் நெருங்கியவன்.

* 4-ந் திருமுறை, ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை, 7-ம் பாசுரம்:
"அடியெனல் ஏதுவோ முடியெனல் எதுவோ அருட்சிவம் ... ..."

எதுவோநின் பேரரு ளேதோநற் கால மெனக்கருள
லெதுவோநின் றண்ணரு ளேதோவென் பாக்கிய மேதறிவேன்
மதுவோர்ந்தி டாவிழு மீயெனப் பூவின் மயங்குகின்றே
னிதுவோ நின்பேரிய லென்குரு வேயென்னை யேன்றுகொள்ளே.71

கொள்ளுதி யோநின் னடியார்குற் றேவலைக் கொண்டுசெய்யத்
தள்ளுதி யோவொடும் பாவியென் றென்னைத் தகாதவனாய்
விள்ளுதி யோநின தன்பரி டத்திவன் வீணனென்றே
யெள்ளுதி யோநினை யல்லாற் கதியில்லை யென்றனக்கே. 72

என்றன தாவியு மெய்யும் பொருளுநீ தேனுனக்கே
யென்றனை லக்கரத் தேந்துவே னென்ன வியம்புமுன்னே
சென்றன வான்புவி யெல்லாமென் னெஞ்சமுஞ் சித்தமுமே
யுன்றன தின்னரு ளின்றேற் றருவது முண்மையுண்டே. 73

உண்டு முறங்கியும் போமெல்லாம் போக்கு மொழியனையான்
கண்டுமுன் னந்துதி செய்திடச் செய்நின் கருணைதன்னைக்
கொண்டு முறைப்படி செய்யாத வென்னைக் குறிக்கொள்ளுவாய்
வண்டு முரற்பொழில் சூழ்வடன் மன்றினில் வாழ்பவனே. 74

பவனே மனிதப் பிறப்பினு லுண்டாம் பயனருளுந்
தவனே மதிதரு மெய்யருட் பாவாந் தமிழ்மறைசொன்
னவனே மலமைந் தொழித்துன்னை யன்றியிந் நானிலத்தே
யெவனே மனைத்தவிர்க் குந்தரஞ் சொற்றவ னென்னிறையே. 75

இறையே யருட்பிர காசவள்ளா னினக் கென்னுடைய
குறையே நிரந்தரங் கூறிட வுஞ்செவி கொள்ளிலையே
முறையே யுண்டாயிடிற் கேள்வியுண் டென்பார் முறையில்லையென்
றறையே னினக்கென் னினும்படுந் துன்பம தாற்றிலனே. 76

ஆற்றில னென்னிலம் பாடும் பிணியு மயலவரைப்
போற்றிலன் சற்குரு வேநின்னை யன்றியிப் பூவுலகின்
மாற்றில தாவொளிர் நின்னும மேயன்றி மற்றெவையுஞ்
சாற்றில னென்வினை தீர்த்தருள் வாய்வடற் சற்குணனே. 7

சற்குண வானத்தின் மேன்மயி லாமெனச் * சாற்றியதின்
சொற்குண மீதென் றறியா துயங்குமென் சொப்பனத்தே
யெற்குண ரும்படி யோர்பொரு ளீதென் றியம்பியவோர்
நற்குண னேநினக் கேதுகைம் மாறதை நாடிலனே. 78

நாடிலன் கையற வில்லாதென் னுங்கவி நாட்டமதைத் †
தேடில னந்நெறி நிற்போர் தமைநின்றன் செய்யபுகழ்
பாடில னன்பொடு கண்ணீருடலிற் படியவெழுந்
தாடில னுயினு மீண்டருள் வாய்பர மானந்தனே. 79

ஆனந்த மேசச்சி தானந்த மாமென் றறிந்துகொள்வா
யூனந் தருமல நோய்ப்புழு சேர்ந்தகூ டுத்தமநன்
மோனந் தருசுத்த சன்மார்க்கச் சேர்க்கையின் முத்தசுத்த
ஞானந் தருமுட லாமெனச் சொன்ன நலத்தவனே. 80

நலத்தவ சுத்தர் மனத்தவ மெய்போ னடிப்பவர்க்கும்
பலத்த வரத்தைத் தருபவ மற்றோர் பவமறவெம்
மலத்தவ நீக்கி யருள்பவ சித்தி வளாகமெனுந்
தலத்தவ னேயிவ் வடியேனை யாளுந் தரத்தவனே. 81

தரத்தவ நீரால் விளக்கை யெரிக்குந் தவநெறிநில்
விரத்தவ மோன கரத்தவ நாயேன் வினைதவிர்க்கும்
வரத்தவ வீனமி லாதவர் வாழும் வடலெனுமோர்
புரத்தவ சுத்த ஷடாந்த சமரச போதகனே. 82

போதக நான்மறை யாகம வுண்மைப் புகலரிய
மேதக வெம்மல வேதக வென்வெவ் வினைவளர்க்குந்
தீதக வன்பிழை தீர்த்திப் புழுவுடற் சேதமுறாச்
சாதக மெற்கருள் வாய்சுக தாரக சத்தியனே. 83

---

* "வானத்தின்மீது மயிலாடக்கண்டேன்... ... "

இவ்வந்தாதி ஆசிரியரும் புதுச்சேரி துரைசாமிப் பிள்ளையவர்களும் இச்செய்யுளுக்கு உரை நெடுநேரம் யோசித்தும் விளங்காமையால் தோன்றாத் துணையாய்விளங்கும் வள்ளலார் இந்நூலாசிரியர்க்கு இரவில் சொப்பனத்தில் உரைவிளக்கினர் என்பது ஈண்டு குறித்தவிவரம்.

† 62-ம் பக்கம் பார்க்க.

சத்திய மென்மொழி சாற்றின னென்றிச் சகத்தவர்க்கு
நித்திய நன்னெறி காட்டி மறைந்தது நீதிகொலோ
வித்தியல் வித்தின் விளைவியன் † மற்றும் விளைவிக்குமெய்ச்
சத்தியற் சித்தியன் முத்தி யியற்சொலுஞ் சாத்தியனே. 84

சாத்திய னேசுத்த சாதக நூலின் றரந்தரற்குப்
பாத்திய னேசுத்த சன்மார்க்க வித்தைப் பகர்ந்தருளு
பாத்திய னேயித் தருணமுன் வந்தே பரிந்துயிர்நை
வேத்திய மாக்குந் தரமருள் வாய்வடல் விற்பனனே. 85

விற்பன நிற்கப யஞ்சரணம் பெற வேண்டுதற்கே
கற்பன கற்றறி யேன்முனங் கோவலின் கண்ணிரவிற் §
சொற்பனத் திற்சம மாகநா மாவளி சொல்லெனவிவ்
வற்ப னகத்திற் புரிந்தனை யேநின் னருளென்னையே. 86

என்னையோ வுன்றன் பெருங்கரு ணைக்குணத் தின்மகிமை
முன்னையோ செய்த தவமென்கண் ணோயற முன்னமென்மு
னன்னையோ சொல்லாள் கனவில் வடல்வர லாமென்றனை ‡
தன்னையோ ராவித் தனையனைக் காப்பதித் தன்மையதே. 87

---

† அருட்பெருஞ்சோதி அகவல், அடிகள் 629-645:

“ வித்தியலொன்று விளைவியல்பலவா... ... ...”

வித்து, வித்தியல், விளைவியல், விளைவியல், பதம், விளையுபகரிப்பு வித்திடைமுளை, முளையிடைவிளைவு, வித்தினுள்வித்து, வித்ததில்வித்து விளைவினில்விளைவு விளைவதில்விளைவு, முளையதின்முளை, முளையினுள் முளை, வித்திடைப்பதம், பதத்திடைவித்தும்,... ... ...முதலிய விரிவுகளை உணர்ந்து தெளிக.

§ இந்நூலாசிரியர் திருக்கோவலூரில் தங்கி யிருந்தபோது சமரச நாமாவளி பாடும்படி வள்ளலார் கட்டளையிட்டனர்.

‡ இந்நூலாசிரியர் புதுச்சேரியில் தங்கியிருந்தகாலத்துக் கண்ணோயால் வருந்திக்கொண்டிருந்தபோது ஓரிரவில் வடலூருக்கு வரும்படி வள்ளலார் கட்டளையிட்டனர். வடலூருக்குச் சென்றவுடன் கூடலூரிலிருந்து வந்த ஒரு சிறுபிள்ளைக்குத் தீராக் கண்ணோய் ரஸ்தாளி வாழைப் பழத்தால் குணமானதைக்கேட்டு அப்படியே செய்யவே மூன்றுமாதமாகத் துன்பஞ்செய்த கண்ணோய் நீங்கியது.

தன்மையில் லேற்கித் திரையுட னீக்கித் தருங்கல்வியு
மின்மை தராமிகுஞ் செல்வமெய்ஞ் ஞானமு மிவ்வுலகிற்
புன்மையி னோர்தமைச் சற்குண ராக்கிடப் போதிக்கவோர்
நன்னுமையுந் தந்தருள் வாய்வடன் மன்றுறை ஞானவனே. 88

ஞானவ வென்மெய்ப் பிணிமருந் தாய்வரு நாயகனே
கானவக் குட்டி * யலன்பூனை யின்குட்டி காணரசே
வானவ ரேத்த விருந்தருட் சித்தி வளாகமதிற்
போனவ நின்றர மோரேற் கருள்கநின் பொற்பதமே. 89

பொற்பதம் போற்றுய் புராதன ரிற்பலர் பொன்றினர்யான்
சொற்பதம் போற்சுத்த நன்னிலைக் கேற்ற சுகந்தருமோர்
தற்பத மாதிபெற் றுய்ந்திட வற்புத சற்குருவே
நிற்பத மேத்துகின் றேனெனக் கென்னினி நேரிடுமே. 90

நேரிடு மோவப் புராதனர் போன்றெந்த நேரத்துநற்
பேரிடு மோநின் றரமறி யாதவிப் பேதையென்னுற்
சீரிடு மோர்வளஞ் சேர்வடன் மன்றுறை தேசிகனே
நாரிடு மோனவர் நாட்டினி லென்னென நாட்டுவரே. 91

நாட்டுவ ரான்ற குருதுரி யத்தவர் நற்பெயரைச்
சூட்டுவர் தூற்றி யினத்தார்க்கும் பாவச் சுபாவத்தையே
வேட்டுவர் புன்முலை யுண்ணியைப் போன்றவர் வீட்டுநெறி
காட்டுவ ரோசற் குருநின்னை யன்றியிக் காலத்திலே. 92

காலத்தி லேமழை பெய்யாத தால்வருங் கட்டமென்ன
ஞாலத்தி லேவிருத் தாப்பியத் தான்மிகு நன்மைகெட்டக்
கோலத்தி லேவரி லந்தோவென் செய்குவன் கூறரிய
சீலத்தி லேநிலைப் பேனோ வடல்வருஞ் செவ்வண்ணனே. 93

---

* கானவக்குட்டி—குரங்குக்குட்டிஃ

இதுதானுகவே தாயைப்பிடித்துக்கொள்ளும்.

பூனைக்குட்டி சுபாவம்ஃ

தாய்ப்பூனையே குட்டியைத்தழுவும். பூனைக்குட்டி ஏழிடத்தில் வைக்கும் என்பது சாதாரணம்.

ஞான பூமியாகிய ஏழ்பூமியிலும் நீதான் வைக்கவேண்டும் என்ற வேண்டுகோள் குறிப்பால் விளங்கும்.

செவ்வண்ண நின்னரு ளுண்டேல் வறுமைச் சிறுமையெல்லா
மிவ்வண்ணஞ் சென்றதென் றோர்க்குந் தெரிவின்றி யேகிடுங்கா
ணவ்வண்ண முவ்வண்ண மொன்றறி யாவிவ் வடிமைதன்னை
யெவ்வண்ண மேற்றுவை யோவடற் சிற்சபைக் கேற்றவனே. 94

ஏற்றவ வென்பெருங் குற்றங் குணமா வெழிலுறுவெண்
ணீற்றவ சுத்த சிவசாக் கிரநன் னிலையிருந்து
மேற்றவ சொப்பனத் திற்சார்ந் துவந்து மிகக்கலந்துந்
தோற்றவந் தாய்குரு வேயினி யென்றிங்கு தோன்றுவையே. 95

தோன்று முனைக்கண்ட போதுமற் றொன்றவண் டோன்றவில்லை
தேன்றுளிக் கும்பொழிற் சித்திவ ளாகத் திருவறைநின்
றூன்று மறைந்தபின் னந்தோ மிகவுள் ளயர்ந்தவென்னை
யேன்றுகொள் ளாவிடி லென்குரு வேயினி யென்செய்வனே. 96

என்செய்கு வேனிங்கி யான்படும் பாட்டை யெவர்க்குரைப்பேன்
தன்செய்கை நீக்கரு தத்துவ னேயென் றனித்தந்தையே
புன்செய்கை மாறாப் புலையே னெனினுநின் பொற்சரித
நின்செய்கை யேபுகல் வேன்வடன் மன்றுறை நின்மலனே. 97

நின்மல னேயிரு மூன்றத்து வாநிலை நின்றதன்மேல்
வன்மல மாயவப் பாலருள் கூடிட மாவமுதார்
பொன்மலதேக முறுங்கதி சேரப் புரிந்தருள்வாய்
மன்மல மர்ந்திடு முத்தா சிற்சபை வாழ்பவனே. 98

வாழ்பவ சீர்வடன் மாமணி மன்றினுள் வாய்வர்தம்மைச்
சூழ்பவ வம்புலி யாரமு துஞ்சிவத் தூயமுது
மேழ்பவ நீக்கிவந் தீந்தருள் வாயென வெண்ணிநின்றாள்
வீழ்பவ ருக்கருள் செய்திடுவா யிதென் வேண்டுதலே. 99

வேண்டுநின் பொற்பத மென்றுந் தொழவோர் வியனுறவும்
வேண்டுநின் மெய்ப்புகழ் பேசும் பெரியரின் மேல்விருப்பும்
வேண்டுமெந் துங்கோலை செய்யா ரிணங்கழ மேதினியில்
வேண்டுநின் சீரருட் பாவிய லோங்கு மிகுநலமே. 100

மிகுநல மேதருஞ் சிற்சபை நாளுநை மித்திகமுந்
தகுநல மேதின மார்ந்திடு மாரா தனைநிறைவுந்
தொகுநல மேபெறுஞ் சாதுசங் கத்தவர் தொண்டுறைந்து
புகுநல வுற்சவ மோங்குக நின்னருட் பொன்வாழியே. 101

வாழியென் சற்குரு ராமலிங் கேந்திர வள்ளலென்றும்
வாழியென் றந்தை யருட்பிர காசன் மலரடிகள்
வாழியென் னையன் பதம்பணி வோர்கள் வழிவழியாய்
வாழியென் னப்பன் றிருவருட் பாமறை வாழியவே. 102

வாழியென் குற்றமெல் லாங்குண மாக்குநின் வண்மையருள்
வாழியெற் கெய்ப்பில்வைப் பாகுங் குலகுரு வள்ளனின்பேர்
வாழியெல் லாந்தருஞ் சுத்தசன் மார்க்க வழிபலவும்
வாழிசன் மார்க்கர்கள் வான்புவி மற்றவும் வாழியவே. 103

வாழியென் சொப்பனத் தில்வந்து பாடென்ற மாமலர்வாய்
வாழியென் முன்வந்து பூதி கொடுத்து மகிழ்ந்தகரம்
வாழியென் பாலுற்று நோக்குங் கருணை மலர்ந்தகண்கள்
வாழிநற் கேள்வி விரும்பினர் யார்க்கு நின் மன்சீரதே. 104

திருச்சிற்றம்பலம்.

அருட்பிரகாசர் அற்புதவந்தாதி முற்றிற்று.

திருவருட்பிரகாச வள்ளலார் திருவடிகளேசரணம்.



சிவமயம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை

# வெறிவிலக்கு.



## கலித்துறை.

கல்லுக்கு நெஞ்சுரு குஞ்சீ ரருட்பிர காசவள்ளற்
சொல்லுக் குகந்த வறுராசி * மாரன் றொடுகணையின்
மல்லுக்கு நைந்து விழித்துயி னீங்கி மலங்கிநிற்க
வில்லுக்கு மூன்றிரண் டென்செய்த ‡ தோ பழி வேறிலையே.

கண்ணிற் கிசைந்த வெழிலா ரருட்பிர காசவள்ளற்
பண்ணிற் கிசைந்த வருட்பாவைக் கேட்டுப் பரவசமா
யெண்ணிக் கசிந்து மதன்கணை யாற்றைய லேங்கிநிற்கப்
பெண்ணிற் கிசைந்தவெட் † டென்செய்த தந்தோ பெரும்
[பழியே.

---

* அறுராசி - ஆறுவது ராசி, கன்னி. கன்னி - பெண்.

‡ வில்லுக்கு மூன்றிரண்டு என்செய்ததோ—

வில்லு - தனுசு.

மூன்றிரண்டு - ஐந்து.

தனுசுக்கு ஐந்தாவது - மேஷம்.

மேஷம் - ஆடு. ஆடு என்னசெய்ததோ—

காமபாணத்தால் வருந்தி யிருக்கிறபோது வீணுக்கு ஆட்டுக்கடாவை என் பலியிடுவது.

† பெண்ணுக்கு இசைந்த எட்டு—

பெண் - கன்னி.

கன்னிக்கு இசைந்த எட்டு - மேஷம்.

மேஷம் - ஆடு.

வெறிவிலக்கு :

மணஞ் செய்துகொள்ளப் பொருள் தேடச்சென்ற தலைவனிடம் கொண்ட காதலால் மெலிவடைந்த தலைவியைச் செவிலித்தாய் கட்டு விச்சியிடம் காட்டி "இப்பெண் அடைந்த நோயைத்தெரிய அறிந்து சொல்லும்" என்றவுடன், கட்டுவிச்சி நெல்லிட்டுப் பார்த்து "சிறு தெய்வம் இப்பெண்ணைப்பற்றி யிருக்கிறது" என்பாள். பிறகு "வேலன் வெறி யாடட்டும், ஆண் ஆட்டுக்கடா பலிகொடுக்கவேண்டும்" எனத் தாய்மார் துணிவார்கள். தலைவி "ஈதென்ன அழகு, தலைவனைக் காணாததால் உண்டாகியநோயைப் பிறர் அறியாதபடி நான் இதுவரையிலும் மறைத்து வைத்திருந்தேன். தாய்மார் சிறு தெய்வத்திற்குப் பலிகொடுத்தாலும் என்னிடம் உண்மையாக உள்ளதாகிய நோய்நீங்கப் போவதில்லை. நீங்காமையால் பலர் பலவிதமாக எண்ணுவார்கள். ஆகையால் நானே என் வெட்கத்தை விட்டுவிட்டாயினும் தலைவனுக்கும் எனக்கும் என்விளையாட்டுப் பருவமுதல் இதுவரையும் நிகழ்ந்த ரகசியத்தை வெளியிடுவேன். அதனால் அயலார் பழிகூறினாலும் கூறட்டும், ஊரார் சிரித்தாலும் சிரிக்கட்டும், தாய்மார்கோபித்தாலும் கோபிக்கட்டும்" என்று ஆராய்ந்து துணிந்து வெறியாடிப் பலிகொடுத்தலை விட்டு விடும்படி தோழியிடம் அறத்தொடு நிற்பாள்.

வெறிவிலக்கு சம்பூர்ணம்.



சிவமயம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை.

# வடற்சிற்சபைமாலை.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

(யமபய நீக்கம்.)

## காப்பு.

அருட்சபை நடம்புரி யருட்பெருஞ்சோதி
தெருட்பெருஞ் சீர்சொலத் திகழ்வ சித்தியே.

## வெண்பா.

பூமணக்குஞ் சோலைவளர் பூமிபொருந் தும்பதியிற்
பாமணக்குஞ் செய்யவருட் பாவினைநன்—ஞமணக்கத்
தந்தருளி ராமலிங்க சற்குருவைப் பாடுதற்கு ¶
வந்தருள்வான் றந்திமுகன் வந்து.

## கலித்துறை.

கல்வியுங் கேள்வியுங் கற்றோ ருறவுங் கனவறிவு
நல்வினை யும்பொறை யும்பெரு வாய்மையு நாடிலனுய்ப்
புல்வினை யேசெயு மென்னையு மாட்கொண்ட பொன்னருளோ
வல்வினை யேனறி வேனோ வடல்வெளி வாழ்பவனே.

மறக்குந் தொழிலோ நினைக்குந் தொழிலோ வருமவற்றிற்
சிறக்குந் தொழிலெது வென்றே மயங்கித் தியங்கிநின்றேன்
துறக்குந் தொழினல மென்றுனென் சற்குரு சொல்லியவா †
றிறக்கும் பிறக்குந் தொழிலிலை சும்மா விருந்திடினே.

---

¶ பாடுதற்கு வந்தருள்வான்-பாடுதற்கு உவந்தருள்வான்.

† நினைக்குந் தொழிலையும் மறக்குந்தொழிலையும் துறத்தல்.

" சும்மாவிரு சொல்லற என்றலுமே
அம்மாபொருளொன்றும் அறிந்திலனே"—அருணகிரிநாதர்.

மேலார் விளங்கெழி லுத்தர ஞான வியன்சபையின்
பாலா ரருட்பிர காசன் றிருவருட் பாவெனுமோர்
நூலார் பொருளொரு சற்றுமோ ராது நுவலுமென்முன்
காலா வினிவர வேலாது நின்கடை கட்டுவையே. 3

தன்புலத் தார்சச்சி தானந்த வாழ்வைத் * தருந்தகையார்
துன்புலத் தார்தமை யின்புள ராக்கிடுந் தூய்மையர்வாழ்
மன்புலத் தாரும் வடற்சபை யென்றன் மனம்பதித்தேன்
தென்புலத் தானென் புலத்தார்ந் திடான்குரு செய்கையிதே. § 4

பொன்றிசை † யாரும் புவிசேர் பதிசிற் புனிதபதி
மன்றிசை யாதி நறுந்தமிழ் பாடிடும் வல்லவனைய்
நன்றிசை யார்ந்திட வென்குரு நாதனை நாடிநின்றேன்
தென்றிசை யானினி யென்றிசை வாரான் றிறமிதுவே. 5

தேமா பலாதென்னை சூழ்தரு ஞான சிதம்பரத்தே
பூமாலை யேற்ற வருட்பிர காசர்தம் பொன்னடிக்கே
பாமாலை சாத்திடு நாயே னெதிர்வரப் பாசமுறு
மேமாவுன் ஞலினி யாமாவென் றேமகிழ் வெய்தினனே. 6

விட்டார் புகழ்சீ ரருட்பிர காசன் வியன்பதத்தைப்
பாட்டா லருச்சனை செய்திடு நாயேன் பணிசிரத்தே
நீட்டா னரிமகன் றன்கரத் தானெடு நீலக்கடா ‡
மாட்டா னினிவர மாட்டா னெனவுண் மகிழ்ந்தனனே. 7

திருமன் மறைவெண் டிருமன்ன ராதியர் செய்கையொன்றும்
பெருமன் வடற்சபை நாதற்கு மாலை பிணைப்பவர்பா
லுருமன் னிடாதெனிற் பாமாலை சாத்திடு முத்தமர்முன்
றருமன் கருமமுஞ் செல்வதுண் டோசெந் தமிழ்வலரே. 8

---

* தன்புலத்து-தன் அறிவிலே, ஆர்-விளங்கும், சச்சிதானந்தம்.

§ தென்புலத்தான்-யமன். என்புலத்தார்ந்திடான் - என்னிடம் வரமாட்டான்.

† பொன்திசை-தேவலோகத் துள்ளவர்.

‡ அரிமகன்-பிர்மா. நீலக்கடாமாட்டான்-கருநிறம்பொருந்திய எருமைக்கடாவின்மீது வரும் யமன்.

சங்கோங்கு வெண்ட ரளந்தருஞ் செங்காற் றரங்கிணிக்கீழ்ப் ¶
பங்கோங்கு முத்தர சிற்சபை ஞான சபாபதிக்கே
கொங்கோங்குந் தார்மொழி மாலையுஞ் சூட்டுங் குடிமுழுதுஞ்
சேங்கோற் கடவுடன் வெங்கோற் செலாதெனத் தேர்ந்தனனே. 9

அண்டங்கள யாவு மணுவி லடக்கி யகண்டிதமாய்ப்
பண்டங்கள் யாவு மொடுக்கிப் புவிபதி பட்டினத்தின்
விண்டங் கருட்பெருஞ் சோதியைக் காண விருமபுவர்பாற்
சண்டன் வரான்வரிற் றண்டம் பெறுதிரான் சத்தியமே. 10

மாசக லன்பர் நிறைந்தொளிர் பூபதி மாநகரிற்
றேசக லாத சிதம்பர சிற்சபைத் தேவையுள்ளத் *
தேசக வாசைய றுந்தொழ வெண்ணுவ ரேலவர்முன்
பாச கரன்வரி னுசை மறுனருட் பான்மையிதே. 11

இந்தகம் பங்கயன் பூதமைந் தாய்ச்சக தீசனுமாய்த்
தந்தகந் தங்கும் விழுப்பொரு ளாய்ச்சுக தாரகமாய்ச் $
சிந்தகந் தங்கா வடற்பெருஞ் சோதியைச் சிந்திப்பர்முன்
னந்தகன் பந்தகப் பட்டுழல் வான்குரு வாணையிதே. 12

தங்கக் கடுக்கை மகிழ்தும்பை மல்லிகைச் சண்பகமுந்
தங்கக் கவின்பொழிற் சூழ்வடற் சிற்சபை சார்ந்துமிரு ‡
தங்கக்கஞ் சத்தொடு தோத்திரஞ் செய்திடுஞ் சற்சனர்முன்
சிங்கக் கொடியனங் கம்பங்க மாய்விடுந் திண்ணமிதே. 13

நயமன்னு நாற்பா னிருசத்தி நாளு நலம்பொருந்தச்
சுயமன்னு முத்தர ஞான சிதம்பர சோதியைத்தௌத்
தியமன்னு மெய்ப்புகழ் கேள்வியுற் றுச்சிந்தை செய்பவர்பா
லியமன் சயமன் னுவதில்லை வள்ள லியம்பியதே. 14

---

¶ தரங்கிணி-நதி.

* உள்ளத் தேசகவாசை-உள்ளத்தே பொருந்திய சகவாசை - உலகப் பற்று.

$ இந்து-சந்திரன், அகம்-ஆத்மா, பங்கயன்-சூரியன்.
தந்து-ஞானம். சிந்து-துன்பம்.

‡ சார்ந்துமிரு தங்கக்கஞ்சத்தொடு:
மிருதங்கம்-மத்தளம், கஞ்சம்-தாளம்.
சிங்கக்கொடியன்-யமன்.

தாட்டா மரைத்தடஞ் சூழ்வடற் சித்தித் தலமகிமை
கேட்டா நலகினி லெவ்வேவ் வுயிரையுங் கேடுசெய
மாட்டார் சமரச ரென்றே யவர்முன் மருவுகடா
மாட்டா னவன்செயற் காட்டான் கருணையின் மாட்சியிதே. 15

நேற்றுவந் தானின் றிறந்தான் பெருமையிந் நீடுலகிற்
றேற்றுவ தென்னுமான் றோர்மொழி யெண்ணித் துயரடையா
தேற்றுவந் தானருட் * போதியான் சிற்சபை யெண்ணுவரேற்
கூற்றுவன் றன்செயல் மாற்றுவ னீதென் குருமொழியே. 16

கொடுவன்மை சேர்மனக் கோளர் புலானுண் கொலைஞருமன்
பொடுவந்து ஞான வடற்சிற் சபைபுக வுற்றனரேற்
கெடுவன்மை தீர்த்துற வாக்கப் படுவரக் கேண்மையர்முன்
னடுவன் § கெடுவன் முனம்பட்ட பாடெண்ணி நாடிலனே. 17

அண்ட சராசர மெல்லா மருளி யளித்தழிக்குங்
கண்ட வகண்ட வகண்டா கரனமர் காட்சிதனைக்
கொண்ட வடற்பெருஞ் ஜோதியைக் கண்டுகை கூப்புவர்முன்
தண்ட தரன்வரிற் றண்டனை யேபெறத் தக்கவனே. 18

விதியோ தொலைக்க மதியோ நிலைக்க விளங்குமருட்
பதியோ வெனப்பகர் பார்வதி மாபுரம் பார்த்தங்ஙனே
வதியோ ரகவினத் தோரினத் தோர்முனம் வைதரணி $
நதியோன் வரிலோ வடியோ டவன்பதி நாசமதே. 19

வானுறைந் தோரும் வழிபட வேண்டி வணங்கவருந்
தேனுறைந் தோடும் பொழில்வள ரும்வடற் சித்திபுரக்
கோனுளந் தோய வகங்குழைந் தேத்துங் குலத்தவர்முன்
பானுமைந் தன்வரிற் † றுனுனைந் தேகுவன் பாதலத்தே. 20

---

* ஏற்றுவந்தான்-ஏறுஉவந்தான்.

§ நடுவன்-நடுநிலையையுடைய யமன்.

முனம்பட்டபாடு-மார்க்கண்டேயருக்காக உதையுண்டது.

$ வைதரணி-யமபுரத்திற்குச் செல்லும் வழியிலுள்ள ஒருநதி. இந்த நதியை எளிதிற் கடப்பதற்காகவே கோதானம் செய்யப்படுவது.

† பானுமைந்தன்-சூரியன் மகன்-யமன்.

பாசவன் பாவம் பறித்தருள் கூட்டும் பலன்றருநன்
னேசவன் பாளர் நிறைந்தொளிர் சிற்சபை நின்றிலங்குந்
தேசவன் செஞ்சரண் சிந்திப்பர் வாழுந் திசைமுழுது
நாசவன் வந்திடி னுசமே யாவனிஞ் ஞாலத்திலே. 21

அடங்கலுஞ் செந்தமிழ் மாமறை வள்ளலி னுறுமுறை
யடங்கவுஞ் செய்தரு ளண்ணலுள் ளந்திக ழம்பலவன்
திடங்கலந் தோங்கும் வடற்சபை சேர்ந்துசிந் திப்பவர்முன்
மடங்கலின் ‡ மெய்வாழ் வடங்கலு மாண்டிடு மாநிசமே. 22

அறமிது சுத்தசன் மார்க்கத்தின் மெய்ந்நெறி யாய்ந்தறிதல்
திறமிது வேறிலை யென்றே வடலுறுஞ் சிற்சபையுண்
ணிறமிது சிற்பரஞ் ஜோதியென் றுன்னி நெகிழ்பவர்முன்
மறலிவந் தாழ்கிழ்ப் பிறவியின் பால்வந்து மாழ்குவனே. 23

பண்பண்ணி யாறு திருமுறைப் பாசுரம் பாடுகின்ற
நண்பண்ணி னேர்நித நாடும் வடலமர் நற்சபையில்
விண்பண்ணிக் காட்டிய வித்தகன் சேவடி வேண்டுவர்முன்
சண்டன் $ வரிலுடற் புண்பண்ணச் செய்குவர் சற்சனரே. 24

சமன்றரும் புந்தியைச் சார்ந்துசாத் விகந் தனையடைந்தே
சமந்தம மாதியுற் றுண்மைமோக் கம்பெறுஞ் சாதகத்தோ
ரமர்ந்த வடற்சபை கண்டோரை யேத்திடு மன்பர்முன்னே
நமன்வர வெணணி லவன்றலை போக்கிடு நல்லருளே. 25

மதியுறு மெய்யுயி ரோரைக் கணிதம் வதுத்திடுந்தை
திதியுறும் பூரணைக் கர்க்கட கம்விது சேர்நடுக்கோட்
கதியுறுந் தேகமுச் சித்தி யருட்சோதி கண்டவர்க்கே
மதியுறு நற்றரு பூச மகோற்சவ மான்மியமே. 26

பேர்தரு வாத்திய மெல்லாஞ் செறிந்து பெரிதொலிக்க
நேர்தரு கல்வித் திருஞான முள்ளோர் நிறைந்து தொழச்
சீர்தரு முத்தர ஞான சிதம்பர சிற்சோதியை
யேர்தரு பூசத் தறுகாலங் கண்டோர்க் கிறப்பில்லையே. 27

---

‡ மடங்கல்-யமன்.

$ சண்டன்-யமன்.

நிதிநிறை நீடுமா டங்க ணிலாவு நெடுந்தெருவுந்
ததிநிறை * பாடலம் புன்னைக் குவளைநற் சாதியுறும்
விதிநிறை சோலையுஞ் சூழ்வடற் சிற்சபை மேற்சுகத்தை
மதிநிறை-பூச விழாக்கண்ட பேர்க்கு மதிவிதியே. 28

நிலக்கண † மங்கலச் சொற்சீர் தொடையணி நேர்முதலோ
ரிலக்கண முந்தெரி யேனெனைப் பாட விசைத்தனையைம்
புலக்க ணடைந்து கலக்கமே கொள்ளுமென் போதமொழிந்
திலக்கண மாகநின் சேவடி நீழ லிருத்துவையே. 29

வாழி.

வாழியென் குற்ற மெலாங்குண மாக்குநின் வண்மையருள்
வாழியெற் கெய்ப்பில்வைப் பாகுங் குலகுரு வள்ளனின்பேர்
வாழியெல் லாந்தருஞ் சுத்தசன் மார்க்க வழிபலவும்
வாழிசன் மார்க்கர்கள் வான்புவி மற்றவும் வாழியவே.

வடற்சிற்சபை மாலை முற்றிற்று.

திருவருட்பிரகாச வள்ளலார் திருவடிகளேசரணம்.



* ததி-வாசனை.

† நிலக்கணம்-மூன்றுநிரையசை அடுத்துவருஞ் சொல்,

சிவமயம்.

அருட்பெருஞ்சோதி - தனிப்பெருங்கருணை.

# அருட்பிரகாசர் அற்புதமாலை.

விநாயகர்.

வெண்பா.

சீர்மேவும் ராமலிங்க தேசிகனார் செய்யகழற்
கேர்மேவு மாலைக் கிசைந்தருளும்—பார்மேவு
நந்திமுதற் றேவர்பணி நாதர்முதற் புத்திரனாந்
தந்திமுகத் தெந்தைதிருத் தாள்.

---

ஆசிரிய விருத்தம்.

நித்தியநிராதார நின்மலநிராலம்ப
நிரதிசய மோனவெளியை
நிஷ்களநிரஞ்சன நிராகாரநிர்விடய
நிரவயவ ஞானவொளியை
யெத்திசையிலெச்சமய மதவாதிகட்குமோ
ரெண்முகச் சிற்சபையினை §
யித்தரையினிற்றுரிய நற்றலமெனப்புக
ழிலங்குபார் வதிபுரத்திற்
பத்திபெறவைத்தருளு முத்தசிற்பரசித்த
பரமகரு ணாகரவெனைப்
படிறனெனவிட்டிடா தடிமையென்றுன்பதம்
பணியப் பணித்தருளுவாய்

---

§ எண்முகச் சிற்சபை - வடலூர்ப் பெருவெளியில் ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்கச் சத்தியஞானசபை எண்கோணமாகக் கட்டப்பட்டுள்ளது.

சித்தியுறமுத்திசா தகமெனக்கற்றுளோர்
சேர்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச ‡
திருவருட் பிரகாசனே.

ஆய்ந்திடுமனந்தமறை யாயிரமுகங்கொண்
டளந்துமள வாதநிலையே
அயுத † கற்பங்கொண் டனந்தர்பலரோதவு *
மடங்கவிய லாதநிறைவே
ஒய்ந்திடமனப்பரியு கைத்தசிவயோகரு
முணர்ந்திடற் கரியபொருளே
ஓங்காரநிலைகடந் தப்பாலுமூடுருவி
யொளிர்தனிச் சுத்தவொளியே
மாய்ந்திடும்பூதவுட லழிவுறுமெய்வகை
வகுத்தருளு நித்தவெளியே
மருவுதொந்தத்தசியி னுக்குயி $ ரருட்சுகமு
மரபென வகுத்தமணியே
தேய்ந்தமதவாதியர்க் கணுவுமெட்டாதசிவ
சிற்சுகா னந்தவமுதே
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 2

---

‡ திருவருட் புரவாச மருவும் உத்தமர் நேச - அருட் புரத்திலே (ஊரிலே) வாசஞ்செய்யும்படியான உத்தமர் யாரோ அவர்க்கு நேசரா யிருக்கின்ற, திருவருட பிரகாசனே.

† அயுதம்-அநேகம்.

* அனந்தர்-ஆதிசேஷர்.

ஒய்ந்திட மனப்பரியுகைத்த சிவயோகர்-மனமாகிய குதிரையை ஓய வைத்து அதன்மேலேறிய யோகர்.

$ தொந்தத்தசியினுக் குயிரருட்சுகம்-தொம், தத், அசி, தொம்பதம் உயிர், தற்பதம்-அருள், அசிபதம்-சுகம்.

133-ம் பக்கம் பார்க்க,

சங்கமொலிசெய்யபின் ஞேங்குமொருயோகநிலே
சார்ந்ததற் கப்பாலுறுந்
தசபிரண்டாந் ¶ தலந் தன்னில்வருமனுபவந்
தனேயடைந் தாங்ககன்றே
திங்கடருமமுதினேப் § பொற்சபையினிற்கண்டு
சிற்சபையி லுண்டதன்மேற்
சென்றன்புவடிவமரு ளுயிரின்பமுணவெனத்
திகழ்ஞான சித்தியருமை
யெங்கணும்பரவியுப் யத்திருவருட்பா
வியற்றிய தயாபரனினல்
லிணமலர்ப்பதமென்ற னிதயத்திலொளிசெய்ய
வெஞ்ஞான்று மருள்செய்குவாய்
செங்கமலவாவிசூழ் செங்காற் † குணக்கினிற்
றிகழ்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 3

---

¶ தசம் இரண்டு-துவாதசாந்தத்தலம்-நெற்றிக்குமேல்.

§ திங்கள்தரு அமுதினே... ... ... ...

6-ந் திருமுறை, அனுபவமாலே, 12-ம் பாசுரம்:

“ கள்உண்டாள்எனப்புகன்றூர் கனகசபைநடுவே
கண்டதுண்டுசிற்சபையி லுண்டதும்உண்டடிநான்
எள்ளுண்டபலவிடயத் திறக்குங்கள்அன்றே
என்றும்இறவாநிலேயில் இருத்துங்கள்உலகர்
உள்ளுண்டபோதுமயக் குற்றிடுங்கள்அலவே
உள்ளமயக்கனேத்தினேயும் ஒழித்திடுங்கள்மடவாய்!
அள்ளுண்டபிறரும்எனே அடுத்தடுத்துக்கண்டால்
அறிவுதரும்அவர்க்கும் இங்கேயான்உண்டகள்ளே.”

நெஞ்சறி வுறுத்தல், 652.

“ அன்பே வடிவாய் அருளே உயிராய்ப்பேர்
இன்பே உணவாய் இசைந்தாரும்—”

† செங்கால்: 64-ம் பக்கம்பார்க்க.

சுத்தமுறுபிரபலச் சுருதியைக்கற்றிலேன்
சுகநிலைமை யுற்றவர்குழாஞ்
சூழ்ந்தவர் துணைப்பதந் தொழுதிலேன்கொலைபுலைசெய்
துட்டரொடு கூடிநின்றேன்
பெத்தநடைமுற்றுமென துளமெனும்பெட்டியிற்
பெயராது வைத்துமகிழ்வேன்
பெரியர்கள்மனங்கசந் திடவுற்றதீதெலாம்
பெறலரிய வென்றுகொள்வேன்
வித்தகநினற்சமுக முற்றவத்தாற்பெற்று
மெய்ந்நிலை யுணர்ந்திடாத
மிடியனெனைமுனியாது கருணைகூர்ந்தென்முன்
விரைந்துவந் தாண்டருளுவாய்
சித்தமதிலற்பநெறி சிந்தித்திடாதவர்கள்
சேர்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவரு . பிரகாசனே. 4

பல்வகைச்சமயமெனு நதிகளெல்லாங்கொளும்
பரிபூரணக் கடலெனும் ¶
பதிநிலையுமெவ்வுயிரு மென்னுயிரெனப்பெறும்
பரமகாருண்ய நெறியும்
நல்வளமெலாமுறும் பார்வதிபுரத்திலகு
ஞானசிற் சபையினொளியை
நாளும்வணங்கிநின் றிருவருட்பாவினை
நயந்துதுதி செய்யும்விதமும்
தொல்வகைவினைப்பய னொழிக்கவருமதிநெறி
தொடர்ந்திடு மொழுக்கநடையுந்
துகளிலாமுத்தமிழி னற்கவியுநன்குறச்
சொல்வளமு மெற்கருளுவாய்

* மஹாதேவமாலை 48:

"பொங்குபலசமயம். ... ... ... " "

¶ தவமுந் தவமுடையார்க்காகும் அவமதனை
அஃதிலார் மேற்கொள்வது—திருக்குறள்.

செல்வநிறைகல்விசிவ ஞானமும்பெற்றுளோர்
திகழ்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 5

தவமிலார்க்கொருகதியு மில்லையெனுமான்றோர்
தனித்தமொழி யறியாதுமெய்த்
தகவெலாம்பெற்றவன் போலேநடிப்பதிற்
றவறுபுரி யாதசதுரன்
பவமெலாமறவொழித் தபயஞானம்பெற்ற
பரிபாகிகளையு மிகழ்வேன்
பாரின்மடமாதரைத் தாயரென்றெண்ணிடும்
பரமநற் குணமுமில்லேன்
நவமெலாந்தருவதிப் புவனசுகமென்றுமிக
நாடிமகிழ் கொண்டுழல்வேன்
நாயினேன்பிழைபொறுத் தாளும்பெருங்கருணை
நாதனுனை யன்றியுண்டோ
சிவமெலாந்தருமெனச் சும்மாவிருந்துளோர்
திகழ்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 6

மரமணற்கல்லெனி லருச்சனைநினன்பர்பத
மலர்பரிச நின்றலமுமாம் §
மகிதலத்தரியவுட லம்பெற்றுமீண்டுநல்
வாழ்வடைய லாமவற்றுற்
றமிகுநன் மானிட மெடுத்துநின்னிணையடித்
தன்மைசற் றேனுமறியாத்
தமியனேற்குன்பெருந் தயவினாற்சன்மார்க்க
சாதகமளித் திம்மையே

---

§ மரம், மணல், கல், எனில், அருச்சனை, நின் அன்பர் பதமலர் பசம், நின்தலமுமாம்:—

(வில்வம் முதலிய) மரம், அருச்சனைக்கும், மணல்-அடியார்கள் பாதத்தில்பரிசத்திற்கும், கல்-கோயில் கட்டடத்திற்கும் பயனாகும்.

வுரமருவவித்தேக மதிமண்டலத்தமுத
முண்ணவரு சித்தியேனு
முயரகண்டாகார சத்திசித்தியையேனு
முதவவந் தாண்டருளுவாய்
திரமுறுஷடாந்தசம ரசசுத்தசன்மார்க்கர்
திகழ்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 7

வாணுளெலாஞ்சால மடவார்மயக்கவலை
மருவிமதி கெட்டுமாழ்கி
மனமேகும்வழிசென்று மலவுடலினைக்கொண்டு
வருநரையு மூப்புமுற்றே
வீணுகவினையேற வெய்யநமனுளாக
விடுதூதர் விரைவில்வருநாள்
விளையுமெனவெண்ணுமிவ் வேளையில்வெறுப்பின்றி
மிக்கதயை யோடுவந்தே
கோணுதநிலையுடைய குணசீலரேத்திடுங்
குருவேயென் குற்றமெல்லாங்
குணமாகவேகொண்டு கோதிலாமெய்தந்து
குறைதீர வந்தருளுவாய்
சேணுடர் ‡ போற்றிடுஞ் சீர்கொணிறைவளமெலாஞ்
திகழ்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 8

எத்தனைப்பிறவிக ளெடுக்கவைத்தும்பிரம
னின்னுஞ் சலிக்கவில்லை
இறப்புத்தொழிற்பல விசைத்துமவ்வியமனுக்
கென்பா லிரக்கமில்லை
நித்தமும்விடாதனுப விக்கவருமுன்செய்த
நீள்வினை யொழிந்ததில்லை

‡ சேணுடர்—தேவர்கள்.

நெஞ்சமெண்பதுகோடி நித † நினைக்குந்தொழிலை
　　நிமிடமு மறக்கவில்லை
சித்தமொடுபுத்தியுஞ் சிந்தனைவிசாரணைச்
　　சிறிதுங் குறைந்ததில்லை
சிறியனேனென்செய்வே னிவ்வகைத்துன்பெலாந்
　　தீர்ந்திடச் செய்தருளுவாய்
சித்தர்முத்தர்கள்பத்தர் நற்றவர்பெரும்புலவர்
　　சேர்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
　　திருவருட் பிரகாசனே. 9

ஞாலமதின்மனயொத்த நண்பினரைவஞ்சிக்கு
　　நயமுளே னல்லோர்தமை
நாத்தழும்பேறவன் மொழிநவிலுவேனுன்ற
　　ளுமமொரு போதுமுரையேன்
சாலமடவார்தமைத் தஞ்சமெனவெண்ணுவேன்
　　றவவிரத தருமநினையேன்
தானஞ்செய்வோரைத் தடுக்கவறிவேன்றீயர்
　　தம்மினுந் தவறுபுரிவேன்
காலமெல்லாங்களவு செய்வோர்தமக்குளவு
　　கரவிற்கலந்து சொல்வேன்
கலியுறுங்கயமைபல கருதினேனெனினுமிக்
　　கடையேனை யாண்டருளுவாய்
சீலமிகுமெய்யடியர் சேரும்வடலூரெனுஞ்
　　சித்திபுர சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
　　திருவருட பிரகாசனே. 10

பேதமொடபேதமும் பெருமையொடுசிறுமையும்
　　பெறுமான மவமானமும்
பிரிவினொடுசேர்க்கையுஞ் செல்வமொடுவறுமையும்
　　பிரியமுட னருவருப்புஞ்

---

† "உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
　எண்பது கோடி நினைந்தெண்ணுவன ... ... ... "

சேதமொடிலாபமும் புகழொடுமிகழ்ச்சியுஞ்
சீதமொடு மிகுவெப்பமுந்
தீரமொடுசோர்வுங் கயத்தலொடினித்தலுஞ்
சினமுடன் றணிவுகொளலும்
பாதகமொடறமுநல் வெற்றியொடுதோல்வியும்
பகையினொ டுறவுகொளலும்
பகர்சகலகேவலமு மில்லாதநிலைபெறும்
பண்புதவி யாண்டருளுவாய்
சீதமிகுமதியணவு சோலைசெறிவடலிற்
சிறந்தோங்கு சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 11

இன்பறுகருலகரைக் காணிற்களிப்புட
னிருத்தலெனு மைத்திரியமும்
எப்பொருளுமில்லா தயர்ந்துமிகுதுன்புற்
றிருப்போரை நோக்கிலவர்தந்
துன்பறமுயன்றிட விரங்குநற்கருணையுந்
துரிசற்ற புண்ணியரெனுந்
தூயரைக்காணிலன் புறுதலெனுமுதிதையுஞ்
சொல்லரிய பாவிகளெனும்
வன்பரைக்காணிலொரு கேடுநினையாதரு
வருப்பணுவு மின்றியவரை
மதியாமதிப்புட னிருந்திடுமுபேக்ஷையெனு
வாழ்வுமெற் கருள்செய்குவாய்
தென்பலவுறும்பொழிற் குலவுமுத்தரஞான
சித்திபுர சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 12

---

‡ தென்-தென்னை. பலா-பலாமரம்.

மலமகலமாயையாற் றனுகரணமீந்துசுக
வாழ்வைக் கொடுத்தருளலும்
வருகன்மவகையினாற் புவனபோகம்பெறும்
வாழ்வைக் கொடுத்தருளலும்
நலமருவுமின்பமுந் துன்பமும்போக்கிமெய்ந்
நாடெனத் திகழ்முத்தியை
நாடவருமெய்யின்பளித்தலு முயிர்க்கெலா
நாயகநி னொருகடமையாய்
நிலமதனிலான்றோர் நிகழ்த்தினராதலா
னின்பெருங் கருணையதனா
னிகரரியவவ்வின்ப மிம்மையேயித்தருண
நிலைபெற வெனக்கருளுவாய்
சேலமருவு ¶ மகிழுறும் பார்வதிபுரத்திலமர்
சித்தர்பணி சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 12

உலகதிற் றாலருக் குமபஞ்சகிர்த்தியமு
முரியகாரண நடனமும்
உடல்கரணமுயிர்களுக் குறுதொழிலெனச்செயுநி
னுரிமையடி யார்தமக்கே
விலகலில்லாதுடலி னற்பணியியற்றவும்
விருப்புடன் றுதிவாக்கினால்
விளம்பவுமனத்தினான் மெய்யன்புளுற்றவும்
விமலமுறுநின் றயவினா
லிலகமனவாக்குடம் பவைமூன்றினுற்றமற்
றெவையு மெவ்விதமுமாற
தியற்றியீறில்லாத விணையுயர்வினின்புமுற
வேழையேற் கருள்செய்குவாய்

¶ சேலம் - எலுமிச்சை.

[illegible]
[illegible]
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 14

எவ்விடமுநின்கோவி லெவ்வடிவுநின்வடிவ
மெத்தொழிலு நின்தொழில்தாய்
எவ்வுயிருநீயாகி யிலகுநின்காட்சிதனை
யென்கண்க ளாரநோக்கி
அவ்வியமகற்றியன் னியபாவமுழுவது
மறப்புரிந் துயர்வொப்பிலா
வறிவதற்கருமுண்மை யறிவின்பமாஞ்சச்சி
தானந்தவாழ் வடைந்தே
திவ்வியநின்னெழிலுள்ள சீர்பெறுங்கழலிணைத்
திருவடித் தாமரைக்கே
சிற்றடியனேன்றொண்டு செய்துய்யவேண்டினேன்
றிருவுளங் கொண்டருளுவாய்
செவ்விதியின்வழிபடுஞ் செல்வர்நிறைவடலிற்
சிறந்தோங்கு சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 15

எவ்வுலகுமற்பமென வெண்ணும்விராகமுட ‡
னெங்குநின் னருளாணையா
லியலுதலையருளினாற் கண்டுதான்பிறரென்ன
வெண்ணாத நற்பத்தியும்
ஒவ்வுமகமும்புற மகப்புறத்தெவ்விடமு
முனையன்றி வேறில்லையென்
றுணரவருநவிலரிய வமலஞானமுமதற்
குற்றசாதக மெனச்சொல்
லெவ்வுயிருமென்றனுயி ரென்றிடுமொழுக்கமு
மிசைந்திடு மனோநாசமும்

---

‡ விராகம் - வெறுப்பு.

இடைவிடாதடையவரும் வாசனக்ஷயமுமீந் $
தென்னையாண் டருள்புரிகுவாய்
தெவ்வுநல்லுறவுந் துறந்தமேனிலையுளோர்
சேர்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 16

எங்குநின்பூரண முணர்ந்தெனது தூலவுட
லெட்டுணையு மசையாமலும்
எனதுவாயொருசற்று நுவலாதுமௌனமொ
டிருந்திடவுமெனது நெஞ்சந்
தங்குதலிலாதுபல வழிசெல்வதொருவித்
தனித்தொன்று நினையாமலும்
,தவறிலாதகிலவுல கெவையினுமநித்தியத்
தருசுகத் தினிலவலமாய்
மங்குதலகற்றிமுன் னிலையறுஞ்சுட்டின்மை
மருவறிவி னிலைடையுமோர்
வாழ்வினையளித்திட வணங்கிநின்றேனினது
மனமுவந் தருள்புரிகுவாய்
செங்குவளைமரைமல் லிகைப்பாடலம்புன்னை
செறிவடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 17

என்னதறிவார்ந்துமன முருகிவிழிநீர்பெருகி
யிசையும்வாக் குரைகுளறியே
இலகுமுடலம்பட படத்துமயிர்குச்செறிந்
திடவுமிவ் வுலகமதிலே
நன்னடையையறியாது கண்டவர்கள்கேட்டவர்க
ணகைசெய்து கண்டபடியே
நவிலவுமதைக்கேட் டுளங்களித்துன்றனரு
ளுடிமயல் மீறியிளையோர்

---

$ வாசனக்ஷயம் - அநித்திய வாசனை நீங்குதல்.

* மரை-தாமரை, பாடலம்-பாதிரிப்பூ.

சின்னமொடுமத்தனுய்ப் பகிர்முகம்விடுத்துத்
திரிந்துமெய் யின்படையவும்
சிறுவயதிலென்னையாட் கொண்டவரசேகொடுந்
தீயனேற்கின் றருளுவாய்
தென்னயமுணர்ந்தசிவ யோகமுறுமந்தணர்கள்
சேர்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 18

உனையன்றியழியாத நற்கதியையுதவுவோ
ருலகெங்குமிலை யென்றறிந்
துன்னையேயிரவினும் பகலினுநினைந்துன்ற
னுறுநாமமா மந்திரந்
தனையன்றிமற்றென்று மொருபோதுநவிலாத
சாதுக்க ளோடுசேர்ந்தே
சாற்றிடும்பணியெலாஞ் சன்மார்க்கசங்கமிச்
சகமுறத் தாபகஞ்செய்
யனையனையநினதுபய வடிமலர்த்தாமரைக்
கறிவுமனவாக் குடலமும்
அமைந்திலகநின்னன்பர் களிலொருவனுகவிவ்
வடியேனையாண் டருளுவாய்
தினையளவுமறவாது சிந்தனைசெய்மாதவர்கள்
சேர்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 19

எனதருமையன்னைநீ யென்றன்மெய்த்தந்தைநீ
யெனையாண்ட சற்குருவுநீ
என்றனியருட்பெருஞ் ஜோதியாண்டவனுநீ
யென்னுடைய நற்றுணையுநீ
எனதுடலுமுயிருநீ யென்னுயிர்க்குயிருநீ
யென்றவப் பேரின்புநீ
என்கண்ணின்மணியுநீ யென்கண்மணியொளியுநீ
யென்றனழி யாச்செல்வநீ
எனதுறவுறவுநீ யென்னுடையநேயனீ
யெனதுசௌ பாக்கியமுநீ

என்னுமநுபவமடைந் துன்னடிக்கேபணி
யியற்றிட வெனக்கருளுவாய்
தினமுமொருகணமேனு மறவாதசிட்டர்பலர் §
சேர்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 20

பாசமென்னும்பந்த நீங்கவிருவினையொப்பு
பற்றுமஞ் ஞானமொழியப்
பண்ணுமலபரிபாக நின்னருட்சத்தியைப்
பதியவைத் திடலென்னுமோர்
மாசகலவுற்றசத் தினிபாதமும்பெறவு
மனமொழி மெய்யோடுமொருவா
மகிழ்கொண்டுநின்னடிமை யாகவும்பெறலரிய
மைந்தனுகவு நினக்கே
நேசனுகிடவுமுயர் வொப்பிலாச்சீர்நிறையு
நினதடிக ளாகவுஞ்சொன்
னிலைபெறுபெறவேண்டி நினதுசந்நிதிதொழுது
நிற்குமெனை யாண்டருளுவாய்
தேசமரு † ஞானமுத் திரைபெற்றதவசீலர்
சேர்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 21

விசையற்றபம்பரம் போனயனமுளமுயிர்
விகற்பமில்லாத நிலையின்
மேவியெத்தொழிலினுஞ் சகசநெறிநின்றெந்த
வேளையு முறக்கமின்றி
நசையற்றமதிமண்ட லத்தமுதமுணவென்ன
நாளுமுண்டின்ப மொருவா

§ சிட்டர்-சிஷ்யர்.

† தேசு-பிரகாசம். ஞானமுத்திரை - சோதியாக உள்ளே பார்க்கிற பார்வை.

நடுநாட்ட ¶ முற்றநின் னல்லருட்புகழினை
நவின்றக வினத்தராக
இசைவுற்றநிலவுலகி லெங்குமுளயாவரையு
மெழில்பெறுஞ் சன்மார்க்கராய்
என்றும்வடற்சபைக் கன்பராயினையிக்க
வியலும்வர மெற்குதவுவாய்
திசைமுற்றுமிசைபெற்ற சீருற்றவளமெலாந்
திகழ்வடற் சிற்சபையில்வாழ்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 22

இடர்புரியுமனமாயை மூவகையிலீர்த்திட
விளைத்து மிகநொந்துவாடி
இனிவருகணத்தில்வினை யெவ்வணமிழுக்குமோ
வெண்ணமேதாய் முடியுமோ
படர்மூலவினை * யெவ ணிழுக்குமோவென்றே
பயந்தசிறியே னுயினேன்
பலகோடியண்டப் பரப்பிற்பெறற்கரிய
பண்புடைய விந்தவுடலைச்
சடமனித்தியதுக்க மெனவிகழ்ந்தேவிடச் ‡
சம்மதஞ் சிறிதுமில்லேன்
சமயங்கடந்தமெய்ஞ் ஞானமணிமன்றந் §
தனைத்தெரிந் தின்புறுவனோ
திடலான † வெளியிலுத் தரஞானசிற்சபை
திகழ்ந்தோங்க வருள்செய்மணியே
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 23

---

¶ நடுநாட்டம்-நினைப்புக்கும் மறப்புக்கும் மத்தியம்
" நடுநாடி நடுநாடி நடமாடுபதியே " நாமாவ

* மூலவினை - ஆணவம்.

‡ தேகலக்ஷணம் - சடம், அநித்தியம், துக்கம்.
ஆத்மலக்ஷணம் - சித்து, நித்தியம், இன்பம்.

§ சமயங்கடந்த மெய்ஞ்ஞான மணிமன்றம்—சடாந்த சமரச சுத்தசன் மார்க்க சத்தியஞான சபை.

† திடல் - மணல்மேடு.

நான்மறையினுலேழி னந்தமறியாதவா $
ஞுள்கழிவதற் கழுவெனே
நாவலிமைகொண்டுபெரி யோரைநிந்திக்கும்வெறி
நாய்களை நினைத்தழுவெனே
மான்விழிப்பெண்மயலு மண்பொருட்பன்மயலு
மாறுததற் கழுவெனே
மாபாவமுற்றகொலை யாளரைக்கண்டஞ்ச
வரும்வாதனைக் கழுவெனே
ஊன்றினுங்கொடியர்பாழ் மதமின்னுமிவ்வுலகி
லொழியாததற் கழுவெனே
உன்பேரருட்கருணை மொழிவழிநிலாதவென்
னுளமதை நினைத்தழுவெனே
தேன்மருவுமாறுமுறை யருளுநின்றிருமுகந்
தெரிசியாமைக் கழுவெனே
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 24

மனமானபாவியென் வசமாகநானுனது
வசமாக நிற்கவறியேன் ‡
மாறியொருவேறுவழி போகவழியின்றியம்
மாயைக்கு ளடிமையாகி
வனவேடரைவர்பின் சென்றுவாணுளெலா
மறலிநாளாக நின்றேன்
வலியவினையேசெய்த கொடியனென்றென்னைவிதி
வழியிலேவிடி லெளியனேன்
கனமானநினதுபய மலரடிநிழற்கண்
கலந்தாடி நிற்பதென்றே
கலையளந்தறியாத மேனிலைகடந்தமெய்க்
காட்சியே கருணைநிறைவே

---

$ நான் மறையினந்தம் - நான்கு வேதத்தின் முடிபு,
நாலேழினந்தம் - 28 ஆகமத்தின் முடிபு.

‡ தெய்வமணி மாலை, 22,
"மனமான ஒரு சிறுவன் மதித்திடான்' ... ... ...

சினமாதிகாமமய லற்றவருளத்திமலர்
சிற்சொருப மானபரமே
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 25

நிந்தையேவிரதமாக்கொண்ட வெறுவீணர்தமை
நேசித்திடாமை வேண்டும்
நினைவோடுமறதியுமி லாதுநடுநிலைநின்ற
நித்தர்தம துறவுவேண்டும்
வந்தவகையறியாத வம்பர்தமையென்ஞான்று
மருவாதிருத்தல் வேண்டும்
வலியவூழென்கின்ற வறியாமையைக்கொன்ற
மதியாள ருறவுவேண்டும்
சிந்தையினிலொன்றுமே லொன்றுமுறுபதகரைச்
சேராதிருத்தல் வேண்டும்
தினகரன்போலென்று மழியாதமுத்தேக §
சித்திபெற்றிடுதல் வேண்டும்
செந்தழன்மேனியுரு வாகியுமறைந்துமேற்
றிகழ்கின்ற வெளிவடிவனே
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவரு - பிரகாசனே. 26

பாமாலைகொண்டுபா டாதவாறுளெலாம்
பாழென்றுரைத்த படியாற்
பாதபங்கேருகங் கருதிநின்றிருவருட்
பாவையன்போடு பாடிற்
சாமாறொழித்தரிய சுத்தசிவசன்மார்க்க
சங்கத்தி லொருவனாகத்
தமியேனையேன்றுகொள் ளத்தகுமெனத்தினந்
தவறாது பாடுகின்றேன்
நாமாவளிப்புகல நாயினேற்கருள்செய்த
நாடகவிசித்ர மறியேன்

---

§ மூத்தேகஸித்தி - சுத்ததேகம், பிரணவ தேகம், ஞானதேகம்.

நான்கொண்டவிரதமிந் நாண்முடியவேண்டுமென
நாடியழு தலறுகின்றேன்
தேமாலைகொண்டப் புறப்புறத்தினினின்று
தேவர்களெ லாம்வணங்குந்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 27

சென்னையொற்றிக்கருங் குழியைக்கடந்துமேற்
சித்திபுர நாட்டிவடலிற்
செத்தாரெழுந்திடுவர் கைத்தாளமிடுமெனச்
செப்பிமறை வுற்றமகிமை
என்னையோவென்றறி தரஞ்சிறிதுமில்லாம
லெளியேன் மயங்குகின்றேன்
எனையீன்றவன்னையே யென்றனித்தந்தையே
யென்னையாட் கொண்டகுருவே
துன்னியபெருங்கருணை வடிவானதெய்வமே
தூயருள மேவுபரமே
சொன்னபடிசித்தெலா மென்றுவடலூரெனுந்
தூயபதியிற் செய்குவாய்
சின்னவயதினிலுத்தி யோகமீகுதுமென்ற
திருவார்த்தை யென்றுமறவேன்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 28

அரவணிந்தவனுமரி யயனுமிந்திரனாதி
யமரர்களு மறியவொண்ணா
வற்புதமுறுந்துரிய வெளிநிலைகடந்துமே
லந்தவெளி யுறுநிலைகடந்
திரவுபகலில்லாத பரநாதவெளிகடந்
தியல்பரம வெளிநடுவிலே
இலகினிலையாடிசிவ சத்தியருளமுதுண்
டினித்தபர ஞானகுருவே

தரமிகும்பக்குவ மிகுந்தவாரூடரைச் *
சார்ந்துபோகாப் புனலையுஞ்
சாகாததலையையும் வேகாதகாலையுந்
தமியனே னுணரவருள்வாய்
திரமானவொருமொழி தெரித்திடப்பெற்றுளோர்
தினமும் வணங்கியேத்துந்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 29

நாலாறினீரறு † னுருவ தெரிசனசுத்தி
நானறிய நாட்டியந்த
நாதவெளிமேலுறும் பரவிந்துபரநாத
நன்னிலை கடத்தியப்பான்
மேலானவெளிமூன்றி னனுபவமறிந்ததன்
மேல்விளங்கும் பெரியதோர்
வெளியினிறையானந்த வடிவாய்விளங்கநின்
விரைகழல் வணங்கிநின்றேன்
பாலாறெனுந்திரு வருட்பார்வையன்பராம்
பைங்கூழ் தழைத்தோங்கிடப்
பாரிலருளும்பெருங் கருணைநிறைமேகமே
பரஞான போதபரமே
சேலார்விழிச்சியர் தொடக்குண்டவென்னையுஞ்
சினமுறு தருள்புரிகுவாய்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 30

யான்படுந்துன்பமதை யாரிடத்திவ்வுலகில்
யாதென் றெடுத்துரைப்பேன்
யாவுநின்செயலென் றுணர்ந்திடற்கறிவிலேன்
யானெனுந் தாமதத்தில்

---

* ஆரூடர் பதம் - சிஷ்யர் பதம்.

† நாலாறு - 24, ஈராறு - 12, ஆக 36 தத்துவம்.

ஊன்றடிப்புற்றுமின் னுபயதிருவடிமறந்
துண்பதுமுறங்குவதுமாய்
உழவுக்குமுதவாத விருகாற்கடாவென
வுலாவுவேன் சத்துவத்தில்
வான்கலந்திடுமடியர் வாழ்வினைநினைந்துமிக
வாடிமன முருகிநிற்பேன்
வரல்வேண்டுமென்றுலகர் போன்றலறியழுமென்
வருத்தந் தவிர்த்தருளுவாய்
தேன்பால்கசக்கவரு திவ்யமதியமுதுண்ட
சித்தர்களெலாம்வணங்குந்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 31

உய்வகையிதென்றோ ரணுத்துணையுமறியாத
வொதியனே னின்பெருமையை
உரைத்திடநினைத்திட வுணர்ந்திடச்சிறிதேனு
மோர்கிலாக் கடையனெனினும்
பொய்வகையிலென்பா லடுத்ததுயர்மலைகணப்
போதினிற்றீப் பஞ்சுபோற்
போகவருமெனநினது திருநாமமந்திரம்
புகலுகின் றேனுயினேன்
மெய்வகைபுரிந்திடாப் பாவியிவனுக்கருளல்
விதியலவெனத் திருமுனே
மேவிமெய்யன்பர்பல கால்விளம்பிடினுமிவ்
வினையேற் கிரங்கியின்றே
செய்வகையுணர்த்தியந் நன்னெறியினின்றிடத்
திருவுளங் கொண்டருளுவாய்
திருவருட்புரவாச மருவுமுத்தமர்நேச
திருவருட் பிரகாசனே. 32

அருட்பிரகாசர் அற்புதமாலை முற்றிற்று.

திருவருட்பிரகாச வள்ளலார் திருவடிகளே சரணம்.



சிவமயம்.

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை.

## திருவருட்பிரகாச வள்ளலார் வருகை.

# நன்னிமித்தம் பராவல். *

◆◆◆◆◆◆◆◆◆

## பல்லி.

### குறள் வெண்பா.

நன்னிமித்தஞ் சொல்ல நயந்தருள்வான் சற்குரவன்
றன்னிமித்தந் தந்திமுகத் தான்.

கண்ணிகள்.

அருளாருஞ்சித்தரெனை யாளவருமாகில்
அன்புருவாயருளுயிரா யமரவருமாகில்
அருட்செங்கோற்செலுத்துதற்கென் னையன்வருமாகில்
அன்புடனே நல்லவுரை யாடுசிறுபல்லி. 1

அருணெறியையருளுவதற் கண்ணல்வருமாகில்
அண்டபகிரண்டவர சாக்ஷிவருமாகில்
அருவுருவவருவநிலை யறியவருமாகில்
அடைவுடனே நல்லதிசை யறைசெய்சிறுபல்லி. 2

ஆறந்தமுடிவுரைசெய் யத்தன்வருமாகில்
ஆவியுடல்பொருளீயு மாக்கம்வருமாகில் †
ஆருதாரமுமறியு மடைவுவருமாகில்
ஆசையுடனல்லவுரை யாடுசிறுபல்லி. 3

---

* பல்லிக்காதல் - பல்லியை நோக்கி வள்ளலார் வருவாரா அவரை நான் காண்பேனா என நல்ல நிமித்தம் பார்த்தல்.

பராவல் - ப்ரவுதல்.

தத்துவராயர் பல்லிக்காதல் பத்து பாட்டுப் பாடியிருக்கின்றார்.

† உடல்பொருள் ஆவி வள்ளலார்க்கு நான் ஈவேனே.

இன்பருளுஞ்சற்குருவே யிங்குவருமாகில்
இப்பிறவிதனில்முத்தி யிலகவருமாகில்
இக்கலியின்றுன்பமெலா மேகவருமாகில்
இகலில்லாநல்லதிசை யியம்புசிறுபல்லி. * 4

இராமலிங்கதேசிகனென் னெதிரில்வருமாகில்
இருவினையுமொப்பாக வெண்ணவருமாகில்
இரவுபகலில்லாத விடமமையுமாகில்
இன்புடனேநல்லதிசை யியம்புசிறுபல்லி. 5

ஈண்டெனதுசற்குருவை யேத்தவருமாகில்
ஈராறுமூன்றினந்த வியலறிவனாகில்
ஈயாதவரொடுபழகா திருக்கவருமாகில்
ஈனமறுதிசையினிலே யியம்புசிறுபல்லி. 6

உத்தரசிற்சித்திபுரத் தொருவன்வருமாகில்
உலகெலாமெனற்குரைசெய் துள்ளோன்வருமாகில்
உற்றமலபரிபாக முறவருவதாகில்
உவப்புடனேநல்லதிசை யோதுசிறுபல்லி. 7

ஊசலாடுமனமடக்கு மொருவன்வருமாகில்
ஊமையெழுத்துண்மைதனை யுணரவருமாகில் †
ஊனருந்தாதவர்க ளுறவுவருமாகில்
ஊதியமாகுந்திசையி லோதுசிறுபல்லி. 8

என்குருவேயினிவொருகா லிங்குவருமாகில்
என்னுடலினுற்றபிணி யேகவருமாகில்
என்னுயிர்போலெவ்வுயிரை யெண்ணவருமாகில்
எஞ்சலிலாத்திசையினிலே யியம்புசிறுபல்லி. 9

---

* பல்லி சாஸ்திரப்படி நல்லதிசையில் சொல்லு.

† ஊமை எழுத்து - பேசா ஓங்காரம் (உ) பேசும் ஓங்காரம் - ஓம்.

அ - உ - ம - பிரணவம்.

'ந' முதல் - ஸ்தூல பஞ்சாக்ஷரம்.

'சி' முதல் - சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம்.

காரணம் அல்லது முத்தி பஞ்சாக்ஷரம் அல்லது இருதலைக் கொள்ளி. (சிவயவசி) மஹாகாரண பஞ்சாக்ஷரம் - சிவ, அதற்குமேல் தனியே 'சி'.

ஏதமறுத்தெனையாளு மெந்தைவருமாகில்
ஏகாத * பெருநிலையி லேறவருமாகில்
ஏக்கமிலாதெஞ்ஞான்று மிருக்கவருமாகில்
ஏராருந்திசையினிலே யியம்புசிறுபல்லி. 10

ஐந்தெழுத்தினுண்மையரு ளையன்வருமாகில்
ஐம்மல † மைந்தாற்போக்கு மடைவுவருமாகில்
ஐந்துவழி ‡ செல்லாத வாண்மைவருமாகில்
ஐயமிலாநல்லதிசை யறைசெய்சிறுபல்லி. 11

ஒருவாதுசற்குருவை யுன்னவருமாகில்
ஒருதெய்வமென்றெண்ணு முறுதிவருமாகில்
ஒருவரிடமேற்காத வுடைமைவருமாகில்
ஒப்பவருநல்லதிசை யோதுசிறுபல்லி. 12

ஓங்காரவுருவகுரு வுலகில்வருமாகில்
ஓதாமலுணர்கின்ற வுண்மைவருமாகில்
ஓய்ந்தமனமுற்றிலகு முளவுவருமாகில்
ஓங்கவருநல்லதிசை யொலிசெய்சிறுபல்லி. 13

ஔடதமாதியவருளு மண்ணல்வருமாகில்
ஔதாரியத்தை § விடா வாக்கம்வருமாகில்
ஔவியமில்லாதகுண மமையவருமாகில்
ஔசித்யமான ¶ திசை யறைசெய்சிறுபல்லி. 14

---

* ஏகாத - ஏட்டாத.

† ஐம்மலம் - ஆணவம் கன்மம் மாயை திரோதானம் மாமாயை.

6-ந்திருமுறை. "வாரீர் சிதம்பரவல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்".

என்று தொடங்கும் வருகை, 82-ம் சரணம்:

"ஐந்துமலங்களும் வெந்துவிழ எழுத்தைந்துஞ் செய்யும் என்றீர் வாரீர்
இந்து சிகாமணி வாரீர்".

‡ ஐந்துவழி - ஐம்பொறி வழி.

§ ஔதாரியம் - ஈகை.

¶ ஔசித்யம் - தகுதி.

கற்பனைகடந்தகுரு காணவருமாகில்
கருவிலுருவகைபெறுநற் கதியருளுமாகில்
கலையாதிதத்துவத்தின் கணக்கறிவனாகில்
கத்தில்லா * துறதிசை கழறுசிறுபல்லி. 15

கண்ணுரச்சற்குருவைக் காணவருமாகில்
கருணையுடனேக்கவருங் கணக்குவருமாகில்
கரணமுறும்விடயமெலாங் கழலவருமாகில்
கடுமையிலாநல்லதிசை கழறுசிறுபல்லி. 16

காட்சியுறச்சற்குருவைக் காணவருமாகில்
காட்சிக்கண்ணியின்றரமுங் கலவவருமாகில் †
காரணமுங்காரியமுங் கருதவருமாகில்
காதலுடனல்லதிசை கழறுசிறுபல்லி. 17

கியாதியுறுங்குருநோக்கங் கிடைக்கவருமாகில்
கிருபைவண்ணமெங்கணுங் கேட்கவருமாகில்
கிஞ்சலிலாச் ‡ செல்வமுறுங் கிளர்ச்சிவருமாகில்
கிரமமுடனல்லதிசை கிளத்துசிறுபல்லி. 18

* கத்தில்லா: கத்து—பிதற்றுதல்,
களவும் கத்தும் மற - களவும் பொய்யும் மற.

'களவுங் கற்றுமற' என்று திரித்து வழங்குதல் சிறப்பன்று ஒவ்வொன்றையும் கற்று, பின் தீயதாயின் விலக்கவேண்டும் என்று கூறுவோர் நீதிநூலும் உலக அனுபவமும் ஆழ்ந்தறியாதவர். கொலையின் தீமை அறிய வேண்டுவோர் தாமே கொலைசெய்து அதனால் நேர்ந்த துன்பத்தைக் கண்டு பின் அதனை விலக்க வேண்டும் என்பதில்லை. இப்படித் தீயகுணங்களின் தன்மையைக் கண்டறிய வேண்டுமாயின் ஆயுள்வரையிலும் காலங் கழித்தும் பெரும் பயன் அடைய முடியாது. மெய்ந் நூல்களில் ஆராய்ச்சியும், உலக அனுபவத்தில் காணும் ஒழுக்க வழக்கபேதங்களில் ஊன்றிய ஆராய்ச்சியும், பெரியோர்கள் நட்பும் துணையாகக்கொண்டு தீமை ஈதெனவிலக்கி நல்லொழுக்கத்தில் பயிலுதலே அறிவாளிகள் கொண்டதாகும். பொய்சொல்லும்படி 'கற்றும்' என்பதற்கு 'கற்றுக் கொடுத்ததையும்' என்று கூறுவாரும் உளர்.

† காட்சிக் கண்ணி:
6-ந் திருமுறை, "ஆணிப்பொன்னம்பலத்தே
அற்புதக் காட்சியடி ... ... "

‡ கிஞ்சல் - சிறுமை.

கீர்த்திமான்வருங்காலங் கேட்கவருமாகில்
கீதவகை * யெலாமுணருங் கிளர்ச்சிவருமாகில்
கீதவேதவுண்மைநெறி கிடைக்கவருமாகில்
கீழ்மையிலாநல்லதிசை கிளத்துசிறுபல்லி. 19

குருவைவடற்சிற்சபையிற் கூடவருமாகில்
குணரகிதநிலையினிலே குலவவருமாகில்
குற்றமெலாங்குணமாகக் கொள்ளவருமாகில்
குறையில்லாத்திசையினிலே கூறுசிறுபல்லி. 20

கூடியமூவிதமருளுங் குருவருவதாகில்
கூறரியபெருநிலையைக் கூடவருமாகில்
கூடுமடியார்கள்பெருங் குணமமையுமாகில்
கூடிவருநல்லதிசை கூறுசிறுபல்லி. 21

கெடிபெற † வென்குருவரவைக் கேட்கவருமாகில்
கெடுதியெங்குமில்லையெனுங் கேள்விவருமாகில்
கெர்வமிலாநடையென்றுங் கிடைக்கவருமாகில்
கெட்டவிடம்விட்டொருகாற் கிளத்துசிறுபல்லி. 22

கேடுதராக்குருவரவு கிடைக்கவருமாகில்
கேட்போரெலாமுருகுங் கீதம்வருமாகில்
கேட்டவையெல்லாங்கொடுக்குங் கீர்த்திவருமாகில்
கேடில்லாத்திசையினிலே கிளத்துசிறுபல்லி. 23

கையறவெனுங்கலியின் கணக்குவருமாகில்
கைஞ்ஞான ‡ மெல்லாமுங் கழலவருமாகில்
கையாத § பேரின்பங் கலவவருமாகில்
கைநெல்லிக்கனியெனவே கழறுசிறுபல்லி. 24

---

* கீதவகை - பண்வகை.

(தோத்திரஞ்செய்ய உதவியாகும்.)

† கெடி - கீர்த்தி.

‡ கைஞ்ஞானம்: கை—வஞ்சகம்,

§ கையாத - கசக்காத.

கொடிகட்டிக் * கொண்டவருட் குருவருவதாகில்
கொல்லாமையுற்றபெருங் கோஷ்டியுறுமாகில்
கொடிதானபவ்வமெனுங் † குறைவொழியுமாகில்
கொடைபெறுநற்றிசையினிலே கூறுசிறுபல்லி. 25

கோணுதலில்தரவென் குருவருவதாகில்
கோபமொடுகாமமெலாங் குலையவருமாகில்
கோருமவைதருமருட்செங் கோல்வருவதாகில்
கோதில்லாத்திசையினிலே கூறுசிறுபல்லி. 26

கௌரவமார்சற்குருவைக் காணவருமாகில்
கௌவையில்லாதபெருங் கனமமருமாகில்
கௌப்புறுசன் ‡ மார்க்கநெறி கண்டடைவனாகில்
கௌதுவமார் § நல்லதிசை கழறுசிறுபல்லி. 27

சமரசசன்மார்க்கசங்கத் தலைவன்வருமாகில்
சகலகேவலமில்லாத் தலமமருமாகில்
சன்மார்க்கசங்கமெங்குந் தழைக்கவருமாகில்
சந்தோடமுற்றதிசை சாற்றுசிறுபல்லி. 28

சாகாதநெறியருளுஞ் சாமிவருமாகில்
சாக்ஷியதாயநுபவிக்குந் தன்மைவருமாகில்
சாகாததலையாதித் தரமறிவனாகில்
சாந்தமுடனல்லதிசை சாற்றுசிறுபல்லி. 29

சித்திபுரச்சிற்சபையின் றேவன்வருமாகில்
சித்திவளாகத்தொளிசெய் சித்தன்வருமாகில்
சித்திபெறுமுத்திநெறி சேரவருமாகில்
சித்தமகிழுந்திசையிற் செப்புசிறுபல்லி. 30

---

* சன்மார்க்கக் கொடி.

† பவ்வம் - எழ்பிறப்பு.

‡ கௌப்பு - பெருமை.

§ கௌதுவம் - மகிழ்ச்சி.

சீர்தருமிராமலிங்க தேசன்வருமாகில்
சிவான்மவொழுக்கமெலாஞ் சேரவருமாகில்
சிவர்கட்கெல்லாஞ்சுகமே செய்யவருமாகில்
சீக்கிரமாய்நல்லதிசை செப்புசிறுபல்லி. 31

சுத்தப்பிரணவஞான சொருபன்வருமாகில்
சுருதிசொலுஞ்சுத்தநிலை சொல்லவருமாகில்
சுத்தாத்விதானந்தந் தோயவருமாகில்
சுசமருவுந்திசையினிலே சொல்லுசிறுபல்லி. 32

சூதமணி * வேதைசெயுந் தோன்றல்வருமாகில்
சூட்சிபெறுங்காட்சியதிற் றுலங்கவருமாகில்
சூனியமகன்றருளின் றோற்றம்வருமாகில்
சூதில்லாநல்லதிசை சொல்லுசிறுபல்லி. 33

செங்காற்கு † ணக்கின்வடற் சித்தன்வருமாகில்
செத்தாரையெழுப்பவருஞ் சித்திவருமாகில்
செவ்வகையென் ‡ னுங்கவியின் றிறம்வருவதாகில்
செவ்வையுறுந்திசையினிலே செப்புசிறுபல்லி. 34

சேணுடர்போற்றுமகா தேவன்வருமாகில்
சேவைசெய்யநல்லவரஞ் சேரவருமாகில்
சேட்டையிலாப்பம்பரம்போற் றிகழவருமாகில்
சேதமிலாநல்லதிசை செப்புசிறுபல்லி. 35

சையமல்குவடற்குருவென் சாமிவருமாகில்
சைதன்யமுறுஞானஞ் § சாரவருமாகில்
சையெனவேயிகழ்ந்துரையாத் தன்மையுறுமாகில்
சைவமுறுநல்லதிசை சாற்றுசிறுபல்லி. 36

---

* சூதமணி - ரஸமணி.

† செங்கால். 64-ம் பக்கம் பார்க்க.

‡ 62-ம் பக்கம் பார்க்க.

§ சைதன்ய ஞானம் - ஐக்கியமுத்தியடையுஞ்ஞானம்.

சொப்பனத்தேனுங்குருவின் றோற்றம்வருமாகில்
சொல்லரியாநெறியதனைச் சொல்லவருமாகில்
சொற்சுவையோடுற்றகவி சொல்லவருமாகில்
சொலிப்பாகநல்லதிசை சொல்லுசிறுபல்லி. 37

சோதிமயமாய்விளங்குந் துரைவருவதாகில்
சோதனைசெய்யாதுபெருஞ் சுகமளிப்பனாகில்
சோத்தமொடு * சாத்திரமுஞ் சொல்லவருமாகில்
சோகமுறுநல்லதிசை சொல்லுசிறுபல்லி. 38

சௌசன்ய † முறுங்குருவைத் தரிசிப்பனாகில்
சௌகதிக ‡ மின்றியருட் சார்படைவனாகில்
சௌகமிலா ¶ திருக்கின்ற தரம்வருவதாகில்
சௌக்கியமாந்திசையினிலே சாற்றுசிறுபல்லி. 39

தவமெல்லாம்பெறவருளுந் தந்தைவருமாகில்
தப்பில்லாச்சகசநிலை தனையடைவனாகில்
தனுவாதிசுகமெல்லாந் தள்ளவருமாகில்
தக்கவொருதிசையினிலே சாற்றுசிறுபல்லி. 40

தாரதம்யமின்றியருள் சாமிவருமாகில்
தாசமார்க்கந்தனையே சார்ந்திருப்பனாகில்
தாக்ஷிணியப்பெருங்குணத்தின் றன்மைவருமாகில்
தாபமிலாத்திசையினிலே சாற்றுசிறுபல்லி. 41

திருவருட்பிரகாசவள்ளற் றேவன்வருமாகில்
திண்ணமுறுஞ்சஞ்சிதநோய் தீரவருமாகில்
திகழுஞானனுபவஞ் சேரவருமாகில்
திருமருவுந்திசையினிலே செப்புசிறுபல்லி. 42

---

* சோத்தம் - தோத்திரம்.

† சௌசன்யமுறுங்குரு - எல்லார்க்கும் எளியராய்த் தராதரம் பாராதகுரு.

‡ சௌகதிகம் - சந்தேகம்.

¶ சௌகம் - துக்கம்.

திருவருட்பாபுகன்றவொரு தீரன்வருமாகில்
திடஞானம்பெற்றுய்யுந் தீக்கை * வருமாகில்
திருமுறையின்பொருளுண்மை தெரியவருமாகில்
திகழுநல்லதிசையினிலே செப்புசிறுபல்லி. 43

தீபமுறுஞ்சித்திபுரச் சித்தன்வருமாகில்
தீராதவினையெல்லாந் தீர்க்கவருமாகில்
தீங்குசெய்வோர்க்குநலஞ் செய்யவருமாகில்
தீதில்லாத்திசையினிலே செப்புசிறுபல்லி. 44

துன்மார்க்கர்க்கறிவரிய துரியன்வருமாகில்
துரியநிலைகடந்தபெருஞ் சுகமமையுமாகில்
துன்பவின்பமுற்றறியாத் தூய்மைவருமாகில்
துகளில்லாத்திசையினிலே சொல்லுசிறுபல்லி. 45

தூய்மையுளார்சூழ்வடலின் சோதிவருமாகில்
தூறுதலில்லாதநிட்டை தோயவருமாகில்
தூக்கமுறுஞ்சோம்பனிலை தொலைக்கவருமாகில்
தூற்றுதலில்லாத்திசையிற் சொல்லுசிறுபல்லி. 46

தெற்றெனவேவடலிலருட் சித்தன்வருமாகில்
தெவிட்டாதபேரின்பந் திளைக்கவருமாகில்
தென்பாலிற்பஜனைமடந் திகழவருமாகில் †
தெளிவாகநல்லதிசை செப்புசிறுபல்லி. 47

தேவரெலாந்தொழுந்தலைமைத் தேவன்வருமாகில்
தேசுநிறைவண்ணவுடற் சேரவருமாகில்
தேசமெலாங்கொண்டாடுஞ் சித்திவருமாகில்
தேக்கலிலாநல்லதிசை செப்புசிறுபல்லி. 48

---

* தீக்கை - தீக்ஷை.

† வடலூரில் தென் பாகத்தில் ஓர் பஜனை மடம் கட்ட எண்ணம் கொண்டனர்.

தைப்பூசோற்சவமுளத்துந் தரிசிப்பனாகில்
தையற்பொன்மண்ணாசை தள்ளவருமாகில்
தைசதவாங்காரமெலாந் * தாழவருமாகில்
தைரியமாநல்லதிசை சாற்றுசிறுபல்லி. 49

தொட்டதெல்லாம்பொன்னாக்குந் தூயன்வருமாகில்
தொந்தத்தசியினுண்மை துலங்கவருமாகில்
தொன்மைபுறும்வினையெல்லாந் தொலையவருமாகில்
தொல்லையிலாத்திசையினிலே சொல்லுசிறுபல்லி. 50

தோன்றாதநிலையிருக்குந் தூரியன்வருமாகில்
தோற்றமிலாச்சகசநிலை தோயவருமாகில்
தோல்வியுறாச்சங்கமெங்குந் துலங்கவருமாகில்
தோடமிலாத்திசையினிலே சொல்லுசிறுபல்லி. 51

தௌவுதலில் † லாக்குருவைத் தரிசிப்பனாகில்
தௌத்தியநாளும்புகலுந் தரம்வருவதாகில்
தௌராத்மியம் ‡ போக்குந் தன்மைவருமாகில்
தௌர்பாக்யமற்றதிசை சாற்றுசிறுபல்லி. 52

நவநிலையுமுரைத்தகுரு நாதன்வருமாகில்
நத்தியவர்க்கன்புசெய்யு நாட்டம்வருமாகில்
நயமுடனேநாற்கவியு நவிலவருமாகில்
நல்லவொருதிசையினிலே நவிலுசிறுபல்லி. 53

நண்ணரியநல்லகுரு நாதன்வருமாகில்
நற்றவமெல்லாம்பொருந்து நாள்வருவதாகில்
நவிலரியவொழுக்கமுறை நடக்கவருமாகில்
நவையில்லாத்திசையினிலே நவிலுசிறுபல்லி. 54

* தைசதவாங்காரம் - ஆங்காரத்தில் ஒருவகை.

† தௌவுதல் - கெடுதல்.

கெடுதல் இல்லாக் குரு - ஞான குரு.

‡ தௌராத்மியம் - ஆகாமியம்.

நாற்றிசையும்போற்றுகுரு நாதன்வருமாகில்
நாதாந்தமோனநிலை நண்ணவருமாகில்
நானுமென்றேயறியு நாட்டம்வருமாகில்
நாசமுறுத்திசையினிலே நவிலுசிறுபல்லி. 55

நிமிடமுமென்சற்குருவை நினைக்கவருமாகில்
நித்தியமெய்ஞ்ஞானநிலை நிலைக்கவருமாகில்
நினையாதநினைவினிலே நிற்கவருமாகில்
நிமலமுறுந்திசையினிலே நிகழ்த்துசிறுபல்லி. 56

நீதிநெறியருள்குருவென் னேரில்வருமாகில்
நீடூழிவாழுமொரு நேர்மைவருமாகில்
நீக்கமிலாவானந்த நிலைவருவதாகில்
நீதமுறுந்திசையினிலே நிகழ்த்துசிறுபல்லி. 57

நுதனயனந் * திறக்குமொரு நுண்மைவருமாகில்
நுண்ணியர்கணன்னெறியை நுகாவருமாகில்
நுவலரியபொதுவிலுறை நோக்கம்வருமாகில்
நுணுக்கமறநல்லதிசை நுவலுசிறுபல்லி. 58

நூன்முறைசொற்குருநாம நுவலவருமாகில்
நூதனமில்லாதபொது நோக்கம்வருமாகில் †
நூலறிவின்பயனடைவு நொடியில்வருமாகில்
நூற்பகருநல்லதிசை நுவலுசிறுபல்லி. 59

நெற்றிநடுநிலையருளு நீதன்வருமாகில்
நெகிழ்ந்துகண்ணீர்பெருகியுட னிறையவருமாகில்
நெஞ்சறிவுறுத்தலிற்சொன் னிலைவருவதாகில்
நெறிமருவுநல்லதிசை நிகழ்த்துசிறுபல்லி. 60

---

* நுதல் நயனம் - நெற்றிக்கண்.

† நூதனமில்லாத பொது நோக்கம் - பழைய ஆன்மவுரிமை.

நேமமுரைசற்குருவென் னேரில்வருமாகில்
நேயவான்மவுரிமைநெறி நிலைக்கவருமாகில்
நேர்மையுறுந்தயாமூல * நெறியமையுமாகில்,
நேர்பெறுநற்றிசையினிலே நிகழ்த்துசிறுபல்லி. 61

நைமித்திகஞ்சபையி னூரும்வருமாகில்
நைதலிலாவின்பமரு நாடுறுதலாகில்
நைச்சிகமில் † லாதெவர்க்கு நலம்புரிவனாகில்
நைகரமில் ‡ லாததிசை நவிலுசிறுபல்லி. 62

நொய்யவுடலழியாத நுண்மைவருமாகில்
நொவ்வுதலில் § லாதநிலை நொடியில்வருமாகில்
நொய்யவரில்லாதெங்கு நோக்கவருமாகில்
நொய்மையிலாநல்லதிசை நுவலுசிறுபல்லி. 63

---

* தயாமூலநெறி:

ஆளுடையவரசுகள் தேவாரம்
திருநள்ளாற்றுத் திருத்தாண்டகத்தில்
"குலங்கெடுத்துக்கோள் நீக்கவல்லான்
... ... ...
சலங்கெடுத்துத் தயாமூலதன்மம் என்னும்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தார்க்கெல்லாம்
நலங்கொடுக்கு நம்பியை நள்ளாற்றானை
நானடியேன் நினைக்கப்பெற்றுய்ந்தவாறே".

என்றும்,

திருமழபாடித் திருத்தாண்டகத்தில்,
"சினந்திருத்துஞ் சிறுபெரியார் ... ...
பொறியிலியேன்றனைப் பொருளா ஆண்டுகொண்டு
தனந்திருத்துமவர் திறத்தை யொழியப்
பாற்றித் தயாமூலதன்மவழி யெனக்குநல்கி
மனந்திருத்து மழபாடி வயிரத்தூணே
என்றென்றே நான் அரற்றிநைகின்றேனே"

என்றும் கட்டளையிட்டிருப்பதை ஓர்ந்துணர்க.

† நைச்சிகம் - தாழ்வு.

‡ நைகரம் - வருத்தம்.

§ நொவ்வுதல் - வருந்துதல்.

நோய்மரணமில்லாத நோற்றலுறுமாகில்
நோயெவர்க்குநீக்கும்வகை நொடியில்வருமாகில்
நோன்பெனவையுநன்கறிந்து நோற்கவருமாகில்
நோதலிலாநல்லதிசை நுவலுசிறுபல்லி. 64

பதிநிலைசொற்சற்குருவிப் பாரில்வருமாகில்
பத்திமுத்திசித்தியுறும் பான்மைவருமாகில்
பண்ணூரத்திருவருட்பா பாடவருமாகில்
பலன்பெறுநற்றிசையினிலே பகருசிறுபல்லி. 65

பல்லாரும்வடற்குருவைப் பார்க்கவருமாகில்
பவமெல்லாமறவொழுகும் பான்மைவருமாகில்
பலபோகவைராக்யம் பலிக்கவருமாகில்
பகையில்லாத்திசையினிலே பகருசிறுபல்லி. 66

பலர்பரவுஞ்சித்திபுரப் பரமன்வருமாகில்
பற்றவரும்பந்தமெலாம் பாறவருமாகில்
பலகலையுமொருபகலிற் பயிலவருமாகில்
பரிவுடனேநல்லதிசை பகருசிறுபல்லி. 67

பாசமகற்றுங்குருவிப் பதியில்வருமாகில்
பார்வதிபுரத்திலென்றும் பதியவருமாகில்
பாடில்லா * மெய்யின்பம் பலிக்கவருமாகில்
பானுவுறுந்திசையினிலே பகருசிறுபல்லி. 68

பிணக்கில்லாநிலையருளும் பெம்மான்வருமாகில்
பிறப்பிறப்பில்லாதபெரும் பேறுவருமாகில்
பின்னமொடபின்னமறப் பிறங்கவருமாகில்
பிரியமுடனல்லதிசை பேசுசிறுபல்லி. 69

பீடையறக்குருவடலிற் பிறங்கவருமாகில்
பீஜாக்ஷரத்தினுண்மை பேசவருமாகில்
பீடுபெறவிவ்வுலகிற் பேர்பெறுவனாகில்
பீழையிலாத்திசையினிலே பேசுசிறுபல்லி. 70

---

* பாடு - கஷ்டம்.

புன்மையெலாநீக்குமொரு புனிதன்வருமாகில்
புராதனவினையெல்லாம் போக்கவருமாகில்
புருஷார்த்தமநுபவிக்கும் போதம்வருமாகில்
புகழ்தருமோர்திசையினிலே புகலுசிறுபல்லி. 71

பூதசித்தியாதியருள் புனிதன்வருமாகில்
பூதமுதனுதவரை போயுறுதலாகில்
பூமிபொருந்தும்பதியிற் போயொளிர்வனாகில்
நல்லதிசை புகலுசிறுபல்லி. 72

பெரியோரெல்லாம்போற்றும் பெம்மான்வருமாகில்
பெருமையொடுசிறுமையெனும் பேதொழியுமாகில்
பெருங்குணமேயெஞ்ஞான்றும் பிறங்கவருமாகில்
பெறுநன்மையுற்றதிசை பேசுசிறுபல்லி. 73

பேறுதரும்ராமலிங்க பெருமான்வருமாகில்
போதற்போதப் பெயர்ச்சிவருமாகில்
பேதமொடபேதமிலாப் பெற்றிவருமாகில்
பேர்பெறுநற்றிசையினிலே பேசுசிறுபல்லி. 74

பையவரும்பவமொழிக்கும் பகவன்வருமாகில்
பையுளிலாப் * பெருவாழ்வின் பற்றுவருமாகில்
பையரவம்போன்றவர்க்கும் பரிவுரைப்பனாகில்
பைதலிலாத் † திசையினிலே பகருசிறுபல்லி. 75

பொதுவினுரைராமலிங்க புனிதன்வருமாகில்
பொத்தியமலப்பிணியைப் போக்கவருமாகில்
பொற்சபைசிற்சபையுள்ளிற் பொருந்தவருமாகில்
பொருத்தமுறுநல்லதிசை புகலுசிறுபல்லி. 76

போதமுறப்பெரிதருளும் போதன்வருமாகில்
போக்குவரவற்றநிலை பொருந்தவருமாகில்
போதெல்லாம்பெருநெறியிற் போக்கவருமாகில்
போக்கில்லாநல்லதிசை புகலுசிறுபல்லி. 77

---

* சிறுமை.

† துன்பம்.

மன்னுமொருராமலிங்க வள்ளல்வருமாகில்
மதிநெறிவிளங்கவரும் வண்மைவருமாகில்
மறப்புநினைப்பற்றபெரு வாழ்வுவருமாகில்
மகிமையுறுந்திசையினிலே வழுத்துசிறுபல்லி. 78

மாதவரெல்லாம்வணங்கும் வள்ளல்வருமாகில்
மாமகஞ்செய்வண்ணமெலாம் வழங்கவருமாகில்
மாட்சிமைசேர்வரமெல்லாம் வாய்க்கவருமாகில்
மாற்றமிலாநல்லதிசை வழுத்துசிறுபல்லி. 79

மித்தையறும்வித்தைபுகல் விமலன்வருமாகில்
மிருத்தியுஞ்சயம்புகலும் * விளைவுவருமாகில்
மிக்கநலம்பெற்றுவுடன் மேவியுறவாகில்
மிகுநலஞ்செய்திசையினிலே விளம்புசிறுபல்லி. 80

மீனமதிலவதரித்த மேதாவருமாகில் †
மீதான ‡ மேற்றும்வடன் மேலோன்வருமாகில்
மீண்டழியாச்சாதகமேன் மேலும்வருமாகில்
மீமிசையாய்நல்லதிசை விளம்புசிறுபல்லி 81

முத்தரொம்பற்றுமொரு முதல்வன்வருமாகில்
முத்திசாதகமெனச்சொன் முறைவருவதாகில்
முக்காலமுறுஞான முற்றும்வருமாகில்
முறைமையுடனல்லதிசை மொழிசெய்சிறுபல்லி. 82

மூதறிவோர்துதிக்குமொரு மூர்த்திவருமாகில்
மூவிதமார்தேகசித்தி முறைவருவதாகில்
மூடவிருளகன்றருளின் முடிவுவருமாகில்
மூர்க்கமுறுநல்லதிசை மொழிசெய்சிறுபல்லி. 83

---

* மிருத்தியுஞ்சயம் - மிருத்தியுஞ்சயமந்திரம் (மரணம் ஒழிப்பது).

காக்கை இம்மந்திரம் கூறுகிறது என்றும் அதனால் 1000 வருடம் சீவித்திருக்கிறது என்றும் உலக வார்த்தை வழங்குகின்றது.

† வள்ளலார் மீனலக்கினத்தில் அவதரித்தனர்.

‡ மீதானம்: மீ - மேலான, தானம் - ஸ்தானம்.

மெச்சுகின்றகுருவடலின் வெளியில்வருமாகில் *
மெலிவடையாமுத்திரையை † மேவவருமாகில்
மெய்ம்மையறிவானந்தம் விளையவருமாகில்
மெய்யடையுந்திசையினிலே விளம்புசிறுபல்லி. 84

மேலோர்களேத்துகின்ற விமலன்வருமாகில்
மேனடுநடுநிலையை விரும்பவருமாகில்
மேதகவோர்கூட்டமதின் மேவவருமாகில்
மேலானதிசையினிலே விளம்புசிறுபல்லி. 85

மைதானமுறுவடலின் வள்ளல்வருமாகில்
மைத்திரியமாதியெலா மருவவருமாகில்
மையநிலை ‡ பெறுகின்ற வாழ்வடைவனாகில்
மைவகையில்லாததிசை வழுத்துசிறுபல்லி. 86

மொழிந்தவண்ணநடத்தவடன் மூர்த்திவருமாகில்
மொக்குண்மெய்யழியாத முறைவருவதாகில்
மொய்குழலார்மயக்கொழிக்கு முறைமைவருமாகில்
மொகுமொகெனநல்லதிசை மொழிசெய்சிறுபல்லி. 87

மோகமாந்தர்க்கில்லையெனு மூர்த்திவருமாகில் §
மோனஞானவெளியொளியை முன்னவருமாகில்
மோகமாதிநீக்குமொரு முறைவருவதாகில்
மோசமுறுந்திசையினிலே மொழிசெய்சிறுபல்லி. 88

வடற்சபையில்ராமலிங்க வள்ளல்வருமாகில்
வஞ்சமிலார்க்கருள்செய்யும் வல்லான்வருமாகில்
வயங்குசத்திநிபாதம் வாய்க்கவருமாகில்
வசையில்லாத்திசையினிலே வழுத்துசிறுபல்லி. 89

---

* வடலூர்ப் பெருவெளி.

† மெலிவடையா முத்திரை - புருவமத்தி (ஞான முத்திரை).

‡ மையநிலைः மையம் - நடு, நடுநிலை.

§ 6-ந் திருமுறை, உய்வகை கூறல், 5-ம் பாசுரம்ः

"ஆகமாந்தமும் வேதாந்தமுமறையும்
பாகமாம்பரவெளிநடம் பரவுவீர் உலகீர்
மோகமாந்தருக்குரைத்திலேன் இதுசுகமுன்னும்
யோகமாந்தர்க்குக் காலமுண்டாகவே உரைத்தேனே".

வான்பரவுந்தெய்வீக வள்ளல்வருமாகில்
வாதநெறிநடவாத வகைவருவதாகில்
வாசகவாச்சியங்கடந்த மௌனம்வருமாகில்
வாட்டமிலாநல்லதிசை வழுத்துசிறுபல்லி. 90

வித்தையெலாம் விளக்குமொரு மேதாவருமாகில்
விருத்தநல்லபருவமதாய் விளங்கவருமாகில்
விகற்பமிலைமுற்றும் * விடுக்கவருமாகில்
விளங்கவருநல்லதிசை விளம்புசிறுபல்லி. 91

விந்துநாதமாதியருள் விமலன்வருமாகில்
விதிவிலக்கிதென்றறியும் வித்தைவருமாகில்
வித்தில்லாவிளைவுவகை விளங்கவருமாகில்
விரைவுடனேநல்லதிசை விளம்புசிறுபல்லி. 92

வீடடையுமுளவருளு மேதாவருமாகில்
வீறில்லாவிதிவாதம் விலக்கவருமாகில்
வீணசெய்கையெலாம் விடுக்கவருமாகில்
வீதலிலாநல்லதிசை விளம்புசிறுபல்லி. 93

வெளிவடிவனுருக்கொண்டே விரைவில்வருமாகில்
வெட்டவெளிநட்டநடு மினிரவருமாகில்
வெருவுகின்றநடையெங்கும் விடுக்கவருமாகில்
வெறுப்புவராத்திசையினிலே விளம்புசிறுபல்லி. 94

வேண்டியவாறுடல்செய்ய விமலன்வருமாகில்
வேகாக்காலாதியெலாம் விளையவருமாகில்
வேதாகமஞ்சொனெறி விளங்கவருமாகில்
வேதனையில்லாததிசை விளம்புசிறுபல்லி. 95

வையமதிலருட்பிரகாச வள்ளல்வருமாகில்
வைகரையுள்ளுதயமில வாய்க்கவருமாகில்
வைராகமாதியெலா மருவவருமாகில்
வையம்வானமற்றும்வாழ்க வழுத்துசிறுபல்லி. 96

திருவருட்பிரகாச வள்ளலார் திருவடிகளே சரணம்.
நன்னிமித்தம் பராவல் முற்றிற்று.

---

* விகற்பமிலை - பேதமிலை.

உ

சிவமயம்.

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை.

## அருட்பிரகாச வள்ளலார்

# விபூதிப்பிரசாத மகிமை.

◆◆◆◆◆◆◆◆◆

வெண்பா.

சீராருஞ் செல்வவளச் சித்திபுரத் தேவிளங்குங்
காராரு முக்கட் கணபதியே—தீராக்
கருநீற்றோர் போற்றுங் கருணைக் குருவின்
திருநீற்றின் சீர்புகலச் செய்.

விருத்தம்.

இராகம் - பியாக்.

மண்ணில்விண்ணின் மற்றுளோர் வழுத்துமோர்வடற்சபை
யுண்ணிலாவுமுளவுகாண வுற்பவஞ்செய்யுத்தமன்
எண்ணிலாதபுகழுடையோ னீந்திடும்விபூதியாற்
புண்ணியஞ்செய்யாததீமை போகும்போகும்போகுமே. 1

அருளையடையவேண்டியூ னருந்திடாமைவிதியெனும்
பொருளையுடையபாக்களைப் புகன்றுளோன்விபூதியான்
மருளையுடையவன்மைகொண்டு வஞ்சகஞ்செய்தன்னியர்
பொருளைமோசஞ்செய்தபாவம் போகும்போகும்போகுமே. 2

பாசநீங்கவுண்மையருட் பாபுகன்றபாவலன்
காசகுன்மமழுகுநோய் கடத்தவல்லகாரணன்
மாசகன்றபூதியான் மகத்வமுற்றசித்தரைப்
பூசனைசெய்யாதபாவம் போகும்போகும்போகுமே. 3

மருளுணர்ந்தமாந்தர்தம்மை வலிதில்வந்துதோன்றிமெய்த்
தெருளுணர்த்திமெய்ம்மைவாழ்விற் சேர்ப்பவன்விபூதியால்
அருளுணர்த்துமறுமுறைக் கருத்தம்வேறுவேறதாய்ப்
பொருள்புரிந்தகொடியபாவம் போகும்போகும்போகுமே. 4

நிகழுமன்பர்மற்றவர்க்கு நியதியோதனந்தரும்*
இகழ்விலாததருமசாலை † இதமுடன்சமைத்துளோன்
திகழுமண்டபிண்டமுந் தெரித்துளோன்விபூதியாற்
புகழிலாதுசெய்ததீமை போகும்போகும்போகுமே. 5

தெரிந்தவர்க்கநுக்கிரகஞ் செய்தலேசிறப்பதாந்
திரிந்தசிறுவர்க்கருளல் சிறப்பினுஞ்சிறப்பதாம்
விரிந்தவந்தவேதவுண்மை விரித்துளோன்விபூதியாற்
புரிந்ததீயவினைகள்யாவும் போகும்போகும்போகுமே. 6

மாசகன்றமனமிலங்கு மாதவத்தபோதகன்
பாசமொன்றுமெம்மையும் பரிந்துளோன்விபூதியாற்
றாசரொன்றிலாதவறியர் தங்களுக்குமுரியநற் ‡
போசனந்தராதபாவம் போகும்போகும்போகுமே. 7

வெய்யமெய்யடுத்தெடுத்து வீணிலேசெலாவணுஞ்
செய்யவுளவுகண்டிடத் தெரித்தவெங்களாரியன்
செய்யவமலசித்தஞான தேசிகன்விபூதியாற்
பொய்யதால்விளைந்தபாவம் போகும்போகும்போகுமே. 8

ஓதியேயுணர்ந்திடாத வொப்பிலாதவுத்தமன்
நீதிசேர்சன்மார்க்கவுண்மை நிலவவந்தநியதியன்
கோதிலாதமெய்ம்மைஞானங் கூறுமெங்கள்குருபரன்
பூதியால்வல்வினையகன்று போகும்போகும்போகுமே. 9

ஏதுவரினுமீசன்செயலென் றெண்ணலாகுமியல்பினை
ஓதுமெங்கள்ராமலிங்க வுத்தமன்விபூதியால்
தீதுபுரியுந்தீரமுள்ள தீயரோடுசேர்ந்துநாட்
போதுவீண்கழித்தபாவம் போகும்போகும்போகுமே. 10

---

* நியதி ஓதனம் - நியதி ஆகாரம்.

† தருமசாலை வள்ளலார் வடலூர்க்குச் சென்றவுடன் குடிசை போட்டுக்கொண்டிருந்து அவ்வழியில் வந்தவர்களுக்குப் பசியாற்றிக்கொண்டிருந்தனர் என்பது சரிதம். உண்டிகொடுத்தோரே உயிர் கொடுத்தோரே என்பது என்றும் உள்ளபடியே யன்றோ.

‡ தாசர் - தொண்டர்; ஒன்றிலாத வறியர் - பொருள் ஒரு சிறிதும் இல்லாத தரித்திரர்.

ஆற்றுவெள்ள மணைவதன்முன் னணைசெய்தாளுவீரெனச் *
சாற்றுமெங்களருட்பிரகாச சத்தியன்விபூதியால்
மாற்றுயர்ந்தமன்றுளாடு மாதவன்மலர்ப்பதம்
போற்றுவோரைத்தூற்றும்பாவம் போகும்போகும்போகுமே. 11

திகழும்வெளியிலொளியைத்தெரிக்கத் திரையைத்தீர்க்குந்திறமதை
நிகழுமாறுநீடுவெட்டவெளி னிறுத்துவோன்விபூதியால்
இகழுமியலிலாதவின்ப மென்றுமெய்துவோர்களைப்
புகழுவோரையிகழும்பாவம் போகும்போகும்போகுமே. 12

கூற்றுதைத்தகுரைகழலிணைக் குலவிக்கூடுங்குணமதைச்
சாற்றுமோர்சன்மார்க்கசங்கத் தலைவனல்விபூதியால்
வேற்றுரைத்துவினையுறாத விமலவடியர்விரைகழற்
றாற்றுவோர்களேற்றபாவந் தொலையுந்தொலையுந்தொலையுமே. 13

அஞ்சுமலமுமைந்திறு லழிந்துபோமென்றருளினேன்
துஞ்சுவோரைத்தோற்றுவிக்குந் தூய்மையோன்விபூதியால்
வஞ்சமிலாவாய்மையோரை மதத்தினுன்மதிப்பிலா
நெஞ்சதானினைந்தபாவ நீங்குநீங்குநீங்குமே. 14

பித்தர்பாலர்பேயராய்ப் பிறங்குவோர்தம்பெருமையை
இத்தகையென்றிகத்தில்வந் தியம்பினேன்விபூதியாற்
சத்தசத்தறிந்தசாது சங்கத்தோர்தரம்பொறு
சித்தத்தாற்சிந்தித்தபாவந் தீருந்தீருந்தீருமே. 15

சார்வகாலஞ்சாதுசங்க சத்விசாரஞ்சாந்தமாய்
ஆர்வமோடுமன்பினோடு மருளினேன்விபூதியால்
ஓர்வதொன்றுமுணர்கிலா வுலோபர்தமதுபுத்தியின்
பூர்வமாகப்புரிந்தபாவம் போகும்போகும்போகுமே. 16

மகங்காணுமாதவத்தர் வந்துவந்துவணங்கவிவ்
விகங்காணவெண்முகச்சபை யியற்றினேன்விபூதியால்
உகங்காணும் § யோகருண்மை யுணர்கிலாதவட்டியே
அகங்காரத்தடைந்தபாவ மகலுமகலுமகலுமே. 17

---

* 138-ம் பக்கக் குறிப்பைப் பார்க்க.

§ உகம் காணும் - உள்ளே காணும்.

கூற்றுவன்வராவணங் குறித்தஞானபோதகன்
மாற்றிலாதமெய்யுளான் மகத்துவத்தவத்தன்வெண்
ணீற்றினற்சன்மார்க்க சங்கசித்தரன்பர்தங்களைப்
போற்றிடாதகுற்றம்யாவும் போகும்போகும்போகுமே. 18

தலையுநடுவுமுடியுஞ்ஜோதி தன்மைநன்குணர்த்துவோன் †
கலையுங்கலையினிலையுநெறியுங் கருத்திலமையக்கழறுவோன்
அலையுமனதையடக்குமுளவை யருள்செய்தோன்விபூதியாற்
புலையுங்கொலையுஞ்செய்தபாவம் போகும்போகும்போகுமே. 19

சத்திசத்தர்தோன்றும்விந்தை சாற்றுகின்றசதுருளோன்
முத்திசித்திசாதகமென மொழியுஞானநாயகன்
நித்தியமுத்தேகசித்தி நிகழ்த்துவோன்விபூதியாற்
புத்தியால்விளைந்ததுன்பம் போகும்போகும்போகுமே. 20

வெல்லவந்தமாயைதன்னை மிதித்தவெற்றிமாதவன்
கொல்லவந்தசெய்கையுலகிற் குலையச்செய்யவந்தவோர்
நல்லவன்விபூதியாலிந் நாட்டிலனியமாதரைப்
புல்லவந்ததோடம்யாவும் போகும்போகும்போகுமே. 21

மதமடைந்தவிதியின்வாத மாற்றுதற்கோர்வசனநூல் ‡
இதமுடன்புகன்றவெந்தை யெம்பிரான்விபூதியாற்
சதமதென்னவில்லறத்தின் சார்புளோர்தமக்குநற்
புதல்வரைப்பெறாதபாவம் போகும்போகும்போகுமே. 22

எல்லவர்க்குநல்லனென்றியம்பு மெங்களிறையவன்
அல்லலொழியநான்கொழுக்க மருளிச்செய்தவல்லவன் ¶
வெல்லவரியவினைகள்யாவும் வெல்லுவோன்விபூதியாற்
புல்லரோடுசேர்ந்தபாவம் போகும்போகும்போகுமே. 23

---

† அருட்பெருஞ்சோதி அகவல், அடிகள் 129-130.

"படியடி வான்முடி பற்றினுந் தோற்றா
அடிமுடி எனுமோர் அருட்பெருஞ் சோதி".

‡ 70-ம் பக்கக் குறிப்பைப் பார்க்க.

¶ நான்கு ஒழுக்கம்: இந்திரிய ஒழுக்கம், கரண ஒழுக்கம், ஜீவ ஒழுக்கம், ஆன்ம ஒழுக்கம்,

சகமுமுயிரும்பரமுமறியுஞ் சகசஞானமருளுவோன்
இகலிலடிமைமைந்தனேச னிணையடிநெறியியம்புவோன்
பகலிரவினும்பதிநிலைசொலும் பரிவுளோன்விபூதியாற்
புகலும்வறுமையாவுநீங்கிப் போகும்போகும்போகுமே. * 24

அவியுறுபலிவகையுநலனு மறிவுறநவிலந்தணன்
துவிதமத்துவிதவிதமுறு சுகநிலைசொலுமுதலவன்
கவிசொலும்வகைப்பயனருளிய கருணையோன்விபூதியாற்
புவியிலவமதிக்குந்தீமை போகும்போகும்போகுமே. 25

தண்ணிலங்குநயனங்கொண்டு சஞ்சிதந்தொலைப்பவன்
நண்ணிற்சகலகேவலங்க ளடிடாததலமதை
மண்ணினம்மவர்க்குநல்கு மாதவன்விபூதியாற்
புண்ணியர்தமைவைதபாவம் போகும்போகும்போகுமே. 26

அறங்கூறும்வகையெலா மரைக்கணத்திலுதவுவோன்
மறங்கூறுவோர்க்கெலா மறக்கருணைசெய்நீதியன்
திறங்கூறுமறையினுண்மை தெரித்துளோன்விபூதியாற்
புறங்கூறுந்தீமையாவும் போகும்போகும்போகுமே. 27

கல்லார்கற்றூர்தமக்கும்பொதுவிற் கதியுரைக்குங்கருணையோன்
சொல்லாநிலையைக்காட்சிக்கண்ணியிற் சுலபமாகச்சொற்றவன்
பல்லாயிரவர்சிலராகும் படிசெய்தோன்விபூதியாற்
பொல்லாங்கென்பவெல்லாநீங்கிப் போகும்போகும்போகுமே. 28

சுயமதாகப்பாடுந்தன்மை சுலபமாய்த்தெரித்துளோன்
மயமதாய்மனத்தைநம் வயப்படுத்தும்வல்லவன்
இயமனைத்தடுக்குமா றியற்றினோன்விபூதியால்
இயமநியமமாதியாவு மெளிதினேருநேருமே. 29

தானசீலங்கற்பகத்தின் றரமதாகத்தந்துளோன்
ஞானமுபயமோனவெளி நலந்தருமொருநாயகன்
தேனலர்பொழில்வடற்சபையுறு சித்தனல்விபூதியால்
வானமேன்மயூரங்குயிலாய் † வாய்க்கும்வாய்க்கும்வாய்க்குமே. 30

---

* அடிமைநெறி - தாசமார்க்கம், மைந்தன் நெறி - சத்புத்திரமார்க்கம், நேசன் நெறி - சகமார்க்கம், இணையடி நெறி - சன்மார்க்கம் (அடிநெறி: அடி - அருள், அருள் நெறி).

† "வானத்தின்மீது மயிலாடக் கண்டேன் மயில்குயிலாச்சுதடி - அக் கச்சி மயில்குயிலாச்சுதடி.

மண்டலங்களெங்குமாய் மறைந்துலாவுமந்தணன்
விண்டவர்க்குநேரில்வந்து மேற்பதம்விளக்குவோன்
கண்டவர்க்குச்சொப்பனத்துங் காணுவோன்விபூதியாற்
குண்டலிப்பாலுண்ணுமபோகங் கூடுங்கூடுங்கூடுமே. 31

மான்கலந்தவிழியர்தம் மயக்கொழிக்கும்வல்லுனன்
நான்கலந்தபோதநீக்கு நன்மைதரவுவந்துளோன்
தேன்கலந்தபொழில்வடலுறு தேசிகன்விபூதியால்
வான்கலந்தஞானசித்தி வாய்க்கும்வாய்க்கும்வாய்க்குமே. 32

பாசவிருளைநீக்கியருளைப் பதியவைக்கும்பகலவன்
நாசமகலுந்தேகசித்தி நாட்டுங்கருணைநாயகன்
வாசமருவும்வடற்பெருவெளி வாழுவோன்விபூதியாற்
றேசமெங்குஞ்செங்கோலாட்சி செல்லுஞ்செல்லுஞ்செல்லுமே. 33

கண்ணுமுளமுமுயிருநிற்கக் காணுநிலையைக்காட்டுவோன்
நண்ணுமகிலவுலகநோக்கு நாட்டமுடையபூரணன்
பண்ணும்பண்ணினயமும்பயனும் பகருவோன்விபூதியால்
விண்ணுளோர்வியக்கும்போகம் விளையும்விளையும்விளையுமே. 34

ஈடிலாததொந்தத்தசியி னியனமக்கியம்புவோன்
பாடிலாதபெறுமொருவழி பாலித்தருளும்பண்ணவன்
தேடிலாதுவலிதில்வந்த தேசிகன்விபூதியாற்
கேடிலாதசகசநிட்டை கிட்டுங்கிட்டுங்கிட்டுமே. 35

கரணமாதத்தத்துவங்களை காட்டிக்கடத்துங்கணக்குளோன்
திரணமாகபுவனபோகந் தெரிந்துவிடுத்தமேலவர்
சரணமடையும்வடலிலமருஞ் சபையுளோன்விபூதியான்
மரணமழியுமரியவுளவு வாய்க்கும்வாய்க்கும்வாய்க்குமே. 36

நாழிகையிரண்டரைக்குமே னடக்குஞ்சித்தியாவையும்
ஆழிசூழிவ்வுலகில்வடலி லருளினோன்விபூதியால்
ஊழினியலையறிந்தகன்ற வுத்தமர்மற்றெவருமே
ஊழியிலின்படைவரென்ப துண்மையுண்மையுண்மையே. 37

அருவுமுருவுமருவருவமு மடையும்வகையையருளுவோன்
மருவுறுவளநலமெலாமும் வளர்வடலுறுசபையில்வாழ்
திருவுருவுறும்ராமலிங்க தேசிகன்விபூதியாற்
றிருவுங்கல்விஞானம்யாவுஞ் சேருஞ்சேருஞ்சேருமே. 38

உலகெலாமென்மெய்ம்மொழிக்கோ ருரைவிரித்துச்சொற்றவன்*
இலகிரண்டுமெட்டுமைந் தெழுத்தினுண்மைபகருவோன்
அலகிற்சீர்த்தியுடையதிரு வருட்பிரகாசன்பூதியால்
உலகிற்பத்திமுத்திசித்தி யோங்குமோங்குமோங்குமே. 39

உரியஞானதீக்கையாலிவ் வுலகுளோர்மலங்களை
அரியபூதியாக்கியுள்ளி லநுபவிக்குமுளவினைத்
தெரியவருளுஞானசித்த தேசிகன்விபூதியால்
விரியநின்றபோதநீக்கம் விளையும்விளையும்விளையுமே. 40

பொற்பூவுநறுமணமும் பொருந்துவரோவென்னுமோர் †
சொற்பூவைத்தொடுத்தருளுந் தூயவெங்களாரியன்
நற்பூதியாலசுத்த நாற்றவுடலஞ்சுத்தமாய்
கற்பூரமேனியாகிக் கரையும்விரைவிற்கரையுமே. 41

பன்மார்க்கசமயம்யாவும் பாறுமிந்தப்பாரினில்
நன்மார்க்கமதியின்வாத நாளுமெங்குநடைபெறும்
துன்மார்க்கந்தொலையுமென்ற தூய்மையோன்விபூதியாற்
சன்மார்க்கசங்கமெங்குந் தழையுந்தழையுந்தழையுமே. 42

மையல்கொண்டவாழ்வனைத்து மாறுமென்றுணர்ந்துமின்
னையலாதியாசைநீக்குந் தரமுளோர்நிறைந்துசூழ்
சையமல்கு ‡ வடலிலங்குஞ் சபையுளோன்விபூதியால்
வையம்வானமற்றுமென்றும் வாழ்கவாழ்கவாழ்கவே 43

திருவருட்பிரகாச வள்ளலார் திருவடிகளே சரணம்.

விபூதிப்பிரசாத மகிமை முற்றிற்று.

---

* 'உலகெலாம் உணர்ந்தோதற்கு அரியவன்'
என்னும் பெரியபுராணத்து முதற்செய்யுளின் முதலடியில் 'உலகெலாம்' எனும் மெய்ம்மொழிக்குப் பொருள் வள்ளலார் (2202) உலகம் என ஒரு வாறு விரித்துக் கூறியும் முடித்தாரிலர். இவ்வனுபவவிசேடத்தை வள்ளலார் போன்ற மெய்ஞ்ஞானிகளே அறிவார் என்பது தெளிந்த சித்தமுடையோர் கொள்கை.

† 6-ந் திருமுறை, கைம்மாறின்மை,

"பொற்பங்கயத்தின் புதுநறவும் ... ... "

‡ சையம் - செல்வம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை.

திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம் இராமலிங்கசுவாமிகள்

# கிளிக்கண்ணிகள்.

காப்பு காபி.

சீராருங்கிளியை-முன்வைத்துரை-செந்தமிழ்ப்பாடலுக்கே
காரார்மாமுகங்கொள்-ஐந்துகரக்-கணபதிகாப்பாமே.

---

தேரோங்குஞ்சீர்வளரும்-கிளியே-செய்யவடலூரெனும்
பாரோங்குமாபுரத்தே-கிளியே-பரமகுருவைக்கண்டேன். 1

கண்டேன்சற்குருவைக்-கிளியே-காணேன்சஞ்சிதத்தைப்
பண்டேதவமிழைத்தேன்-கிளியே-பாரிலென்பாக்கியமே. 2

திருவருட்பாவென்னுங்-கிளியே-திவ்வியநூலதனைத்
திருவிருப்பாலெங்கணுங்-கிளியே-திகழவியற்றினனே. 3

விதிவாதமுழுவதையுங்-கிளியே-விலக்கவரும்விதமும்
மதிவாதமும்பெறவுங்-கிளியே-மனுமுறைவாசகத்தை. 4

விதியுறவெஞ்ஞான்றுங்-கிளியே-விளங்கிடமாந்தருக்கே
சுதியுறவேயியற்றி-கிளியே-சுருதச்செய்தனனே. 5

கண்டவடிவமனைத்தக்-கிளியே-கருதக்கூடாதென்றே
விண்டவரையெதிர்த்து-கிளியே-வென்றனன்பாரினிலே. 6

வருமன்பாளருக்குங்-கிளியே-மற்றும்வறுமையர்க்கும்
தருமச்சாலைவடலிற்-கிளியே-தாபகஞ்செய்தனனே. 7

தராதரமின்றிக்-கிளியே-சன்மார்க்கபோதகஞ்செய்
யிராமலிங்கப்பெருமான்-கிளியே-யெங்குருநாதனன்றோ. 8

உத்தாசிற்சபையுங்-கிளியே-ஓங்கும்வடலூரில்
ஒத்தவொளிவெளியுங்-கிளியே-உற்பவஞ்செய்தனனே. 9

கண்புருவநடுவின்-கிளியே-கதவைத்திறக்கவரும்
உண்முகக்கண்ணாலே-கிளியே-உற்றவநுபவத்தை. 10

கண்டிடவானத்திலே-கிளியே-கனகமயில்மர்தல்
விண்டிடுமோரொளியைக்-கிளியே-விளங்கவோர்கவியில். 11

கண்டுவரக்குயிலாய்க்-கிளியே-காணவருமெனவே
ஒண்டுமொருவெளியின்-கிளியே-வுளவையுரைத்தனனே. 12

புறவினத்தார்களுக்கே-கிளியே-புலைகொலைவிடுவரையும்
அறவினைகளொன்றுங்-கிளியே-அறைதலீதலாகா. 13

புறவினத்தார்பசியைக்-கிளியே-போக்கிடவேண்டுமெனும்
அறமதையோர்கவியில்-கிளியே-அன்போடுரைத்தனனே. 14

நெஞ்சத்தலைவதனைக்-கிளியே-நின்றிடச்செய்யுளவை
நெஞ்சறிவுறுத்தலிலே-கிளியே-நிறுத்திவைத்தனனே. 15

முத்தியேசித்திபெறக்-கிளியே-முன்னுறுசாதனமாம்
சத்தியநன்னெறியைக்-கிளியே-சாற்றியருளினனே. 16

சுத்தசன்மார்க்கமதைக்-கிளியே-சூழ்ந்தவர்க்கென்ஞான்றும்
இத்தரையிற்றேகங்-கிளியே-இறவாதென்றனனே. 17

ஓதியேவுணராத-கிளியே-உத்தமசற்குரவன்
நீதிசன்மார்க்கசங்கங்-கிளியே-நிலைக்கவைத்தனனே. 18

அருவுருவமுருவங்-கிளியே-அருவசித்திபெறும்
திருவுமுரைத்தருளுங்-கிளியே-தேசிகனுமவனே. 19

உலகெலாமென்பதற்கே-கிளியே-ஒருரையைவிரித்தே
அலகிலாமெய்ப்புகழைக்-கிளியே-அவனியிற்பெற்றனனே. 20

* துவிதமத்துவிதங்-கிளியே-சொல்விசிட்டாத்துவிதம்
நவிற்சுத்தாத்துவிதங்-கிளியே-நற்கேவலாத்துவிதம். 21

சமரசாத்துவிதங்-கிளியே-சாரும்வகையிலுறுஞ்
சமயவுண்மைதனைக்-கிளியே-சாற்றியருளினனே. 2[illegible]

ஞானயோகவொளியுங்-கிளியே-ஞானஞானவெளியும்
மோனமேலேழ்வெளியுங்-கிளியே-மொழிந்தருளினனே. 2[illegible]

---

* மகாதேவமாலை 5-ம் பாட்டு.

வானங்கண்டாடுங்-கிளியே-மயூரம்போலுந்தன்
தானங்கண்டாடுங்-கிளியே-தவமுந்தெரித்தனனே. 24

அன்பேவடிவமதாய்-கிளியே-அருளேவுயிரதுவாய்
இன்பேவுண்வதாங்-கிளியே-இயலுமிசைத்தனனே. 25

காணாதகாட்சிதனைக்-கிளியே-காட்சிக்கண்ணியிலே
கோணாதநிலையினர்க்கே-கிளியே-கூறியருளினனே. 26

சாகாத்தலையதுவுங்-கிளியே-சாரும்போகாப்புனலும்
வேகாக்காலதுவுங்-கிளியே-விளங்கவருளினனே. 27

இன்புளரைக்காணிற்-கிளியே-பிலகுமைத்திரியாம்
துன்புளரைநோக்கிற்-கிளியே-தூய்மையுறுங்கருணே. 28

அன்பர்தமைக்காணிற்-கிளியே-யறைந்திடுமுதிதை
வன்பர்தமைநோக்கிற்-கிளியே-மருவுமுபேட்சையும். 29

அருட்பிரகாசவள்ளல்-கிளியே-அருளினன்மாணவர்க்கே
இருட்பெறுமெனையுங்-கிளியே-யேற்றுவனந்நிலைக்கே. 30

என்னேவலிதினிலே-கிளியே-என்முன்னெழுந்தருளி
பொன்னேர்தங்கரத்தாற்-கிளியே-பூதியளித்தனனே. 31

அருள்வடிவாயிருந்தே-கிளியே-அருட்பாமுதன்முறையில்
திருவடிப்புகழ்ச்சிதனைக்-கிளியே-செப்பவருளினனே. 32

செப்பிடவுமகிழ்ந்தே-கிளியே-சிற்றடியேன்றனையே
இப்படிமீதினிலே-கிளியே-யேன்றுகொண்டனனே. 33

தேகமபக்கமதைக்-கிளியே-திருநீற்றையளித்தே
ஏகவருள்செய்தான்-கிளியே-யென்றன்குலகுருவே. 34

உத்தியோகம்பின்பே-கிளியே-உதவுவேனென்றுரைத்தான்
இத்தினம்வரையுங்-கிளியே-யேதொன்றுங்காணேனே. 35

சத்தியவான்மொழியுங்-கிளியே-தப்பிதமாகாதென்றே
நித்தியமுந்துதித்தே-கிளியே-நெகிழ்ந்துருகுகின்றேன். 36

§ தெரிந்தவர்க்கருளல்-கிளியே-சிறப்பதாமறியாத்
திரிந்தவர்க்கருளல்-கிளியே-சிறப்பிற்சிறப்பதாம். 37

புரிந்தவேதவுண்மை-கிளியே-புகன்றசற்குரவன்
விரிந்தநெஞ்சினனைக்-கிளியே-விடவுமெண்ணுவனோ. 38

---

§ திருவருட்பா 6-ந் திருமுறை. வாதனைக்கழிவு. 6-வது பாட்டு.

ஜோதியொன்றேதெய்வம்-கிளியே-தொல்லுலகிலழியா
நீதிகொண்டேயுரைத்தேன்-கிளியே-நீவிரேவுய்யவென்றான். 39

¶ யோகமாதவர்க்கே-கிளியே-யுரைத்ததல்லாமல்
மோகமாந்தருக்கே-கிளியே-மொழிந்ததன்றென்றான். 40

இன்னுமிரண்டரைமேற்-கிளியே-யிலகுஞ்சித்தியெல்லாம்
மன்னுங்கருணையின்வாய்-கிளியே-மலர்ந்துமறைந்தனனே. 41

இன்னும்பலவாய்மை-கிளியே-இவ்வுலகோருய்யப்
பன்னுமவற்றையெலாங்-கிளியே-பகரவென்றரமோ. 42

பற்பலசித்தியெல்லாங்-கிளியே-பாரினிற்செய்தவவை
அற்பனறைந்திடவே-கிளியே-யாகாதெனவிடுத்தேன். 43

ஆயினுஞ்சற்குருவின்-கிளியே-யரியசரித்திரத்தில்
நாயினுங்கடையேன்-கிளியே-நவின்றனன்சிலவே. 44

இவ்வண்ணமாருரைப்பார்-கிளியே-இந்தவுலகினிலே
செவ்வண்ணச்சற்குருவின்-கிளியே-திறத்தையாரறிவார். 45

சுத்தசன்மார்க்கமுழுங்-கிளியே-சுவாநுபூதிதன்னை
எத்தரையுள்ளோருங்-கிளியே-யெளிதினுணர்ந்திடவே. 46

சித்தமகிழ்ந்தருளி-கிளியே-செய்திருந்துஞ்சிறியேன்
பெத்தநடையாலே-கிளியே-பேறதைப்பெற்றிலனே. 47

திருக்கோவலூரினிலே-கிளியே-சிற்றடியேன்முன்றன்
னுருக்கொண்டோரிரவிற்-கிளியே-யுவந்துசொப்பனத்தில். 48

சமரசபஜனையெனுங்-கிளியே-சத்துவநாமம்பெற்றாய்
சமரசநாமாவளி-கிளியே-சாற்றென்றருளினனே. 49

கண்வலிகொண்டுநெடுங்-கிளியே-காலந்துன்புற்றிருந்தேன்
வண்மையாய்ச்சொப்பனத்திற்-கிளியே-வடலில்வாவென்றனன் 50

வடலிற்சென்றிடவுங்-கிளியே-வாழைப்பழத்தாலே
உடனேயந்நோயைக்-கிளியே-யோடச்செய்வித்தனனே. 51

பேர்பெறுங்கூடலூரிற்-கிளியே-பிளவையிற்முன்பமுற்றே
சீர்பெறுங்குருவின்பேர்-கிளியே-சிந்தனைசெய்திருந்தேன். 52

ஏருமுன்னுருவாய்க்-கிளியே-யேழையேன்சொப்பனத்தில்
ஏரகத்தேதிருங்-கிளியே-யென்றேயருளினனே. 53

---

¶ திருவருட்பா 6-ந்திருமுறை உய்வகைகூறல். 8-வது பாட்டு.

கூற்றுவனைத்தடுக்கக்-கிளியே-கூறியநன்மொழியைப்
போற்றுமுணர்வின்றிக்-கிளியே-பொய்யுடல்போற்றினனே. 54

மருட்பாலீந்துவரும்-கிளியே-மாயைதனை மாய்க்க
அருட்பாவையேதினமுங்-கிளியே-யன்பின்றிப்பாடுகின்றேன். 55

என்னேயிளவயதிற்-கிளியே-என்னைவந்தாண்டதுபோல்
பின்னேயின்றுவரை-கிளியே-பெம்மானைக்கண்டிலனே. 56

இப்பருவந்தனிலே-கிளியே-யெங்குருவைக்காணில்
செப்பருநன்னிலையைக்-கிளியே-சேர்குவன்றிண்ணமிதே. 57

கண்ணேறுவருமென்றோ-கிளியே-கனவினுங்காட்டாதே
விண்ணோர்தன்வடிவைக்-கிளியே-விளங்கவிடாதொளித்தான். 58

எந்தவிதஞ்செய்வேன்-கிளியே-என்குருவைக்காண
இந்தவிதமென்றே-கிளியே-யெண்ணுவதற்கறியேன். 59

கண்டவர்சிற்சபையைக்-கிளியே-காலெழமாட்டாதே
விண்டவர்சீர்பெறும்வாய்க்-கிளியே-வேறுரைசெய்யாதே. 60

வடலின்சிற்சபையைக்-கிளியே-மனமுவந்துதொழ
உடல்பொருளொன்றுங்-கிளியே-யுன்னிடவாராதே. 61

எக்காலுஞ்சிற்சபையைக்-கிளியே-யேத்துவர்தங்களுக்கே
முக்காலுறுஞானங்-கிளியே-முழுதும்வாய்த்திடுமே. 62

பொறுமையுடன்சபையைக்-கிளியே-போற்றிடுமன்புடையோர்
வறுமையெலாமுடனே-கிளியே-வறுமையதாய்விடுமே. 63

சரணஞ்செய்தவர்க்கே-கிளியே-சத்தியசிற்சபையை
மரணமெனும்பிணியே-கிளியே-மரணமதாய்விடுமே. 64

பீடுறுஞ்சற்குருவின்-கிளியே-பேரையுரைப்பாயேல்
நீடுலகத்தினினீ-கிளியே-நீடூழிவாழ்ந்திடுவாய். 65

திருவருட்பிரகாச வள்ளலார் திருவடிகளே சரணம்.

கிளிக் கண்ணிகள் முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி-தனிப்பெருங்கருணை.

குருவே துணை.

முதலெழுத்து வருக்கவண்ணச் சற்குருநாமமாலையென்னும்

# இயற்கையுண்மை.

# ஆனந்தக்கண்ணி.

◆◆◆◆◆◆◆◆◆◆

வெண்பா.

சீரோங்குஞ் சன்மார்க்கஞ் சேர்ந்துலகோ ருய்யவருட்
பேரோங்கும் ராமலிங்க பெம்மானை—நாரோங்க
வேத்தற் கிருநூற் றிருபத்து நான்குகண்ணி
யாத்தனெனக் குள்ளிசைவித் தான்.

இராகம்-யமுனை-தாளம்-ஆதி.

அன்பே வடிவருளுயிரின்புணவென-வமர்ந்தருள் ராமலிங்கம்
அற்புதத்திருவருட் பிரகாசவள்ள-லாரெனும் ராமலிங்கம். 1

அருளேமுடிநடுவடி யறிவிடம்பதி-யாமெனும் ராமலிங்கம்
அருள்பெறிற்றுரும்புமைந்தொழில்செயு-மெனவருளறமுரை ராமலிங்கம். 2

அருளல தணுவசை யாதெனவருட்டிற-மறிந்துரை ராமலிங்கம்
அருட்பெருஞ்ஜோதி யென்னுண்டவனம்பலத்-தானெனும்ராமலிங்கம். 3

அருவினுள்ளருவாமருவரு வருவெனு-மடைவருள் ராமலிங்கம்
அருள்வடிவழியாத் தனிவடிவருணிலை-யறமுரை ராமலிங்கம். 4

அண்டபிண்டமுதித்தொங்கு மிணையடிபொன்-றகத்துறை ராமலிங்கம்
அன்பொன்றின் பொன்றளித்திடு மடிபொனை-வருளிய ராமலிங்கம். 5

அண்டத்தங்கிலத்தூரி சடக்கிடும்வகை-யளித்திடும் ராமலிங்கம்
அங்கமிலிங்கமெனத் தெரியுருவரு-வடைவருள் ராமலிங்கம். 6

அகரத்துக்கருபத்து நான்கிலக்கணவகை-யருளிய ராமலிங்கம்
அடங்கன்முறை தெரிவாரடங்கலுமறி-வாரெனும் ராமலிங்கம். 7

ஈததுவென்றெணைதயுஞ்சுட்டவொணு-விடையருள்ராமலிங்கம்
ஈடறியாப்பெருங்கதிபெறுந்தவமீ-தென்றருள்ராமலிங்கம். 22

ஈரெண்ணிலைமேற்பூரணசுகமெனு-மியலருள்ராமலிங்கம்
ஈரெழுநூற்பொருளருமையின்றொகைவகை-யியம்பியராமலிங்கம். 23

ஈங்கிரண்டரைக்கடிகையின்மேல்வரும்விளை-விசைத்தருள்ராமலிங்கம்
ஈனமறுத்துமெய்ஞ்ஞானவிளக்கையுள்-ளேற்றெறனும்ராமலிங்கம். 24

ஈடுகெட்டிவருவீரெனிலெய்திடு-மின்பெனும்ராமலிங்கம்
ஈதேதருணநம்மிறையெழுந்தருள்வதென்-றியம்பியராமலிங்கம். 25

ஈகாதலுடையவர்க்காகாததிலையென-விசைத்திடும்ராமலிங்கம்
ஈசானமேலுண்டுபேசாதமந்திர-மெனவருள்ராமலிங்கம். 26

## இராகம் - தனுசரி.

உலகெங்குமருட்பெருஞ்ஜோதியென்றேத்திடற்-குளவுரைராமலிங்கம்
உண்மையிதென்றெதிர்முகத்தினுந்தோன்றச்செய்-தோங்கியராமலிங்கம்

உருவவருவவுருவருவோபாசனை-யுரைத்தருள்ராமலிங்கம்
உரைமனங்கடந்தவோர்பொதுநெறியிதுவென-வுணர்த்தியராமலிங்கம். 28

உலகுதியொளியின்புறவெளிநிலையடி-யுரைத்தருள்ராமலிங்கம்
உன்மனியுட்புறமொளிர்வதொன்றோங்குவ-தொன்றெனும்ராமலிங்கம். 29

உள்ளிரவிமதியாயுலகுஞற்றுமடியென்-றோதியராமலிங்கம்
உபரசவேதியினுபயமுமீதுவென-வுரைத்தருள்ராமலிங்கம். 30

உருள்சகடெனுமுளஞ்சலியாவகையெனக்-குதவியராமலிங்கம்
உயிர்க்கிதம்புரிபவரேமகிழ்வடைவரென்-றுரைத்தருள்ராமலிங்கம். 31

உடலுறுஞ்சித்திகளிரண்டாம்பிரிவினி-லுரைத்தருள்ராமலிங்கம்
உயிருறுமாயையினுறுவிரிவனைத்தையு-முணர்த்தியராமலிங்கம். 32

## இராகம் - காம்போதி.

ஊனருந்திடுவோருறவினரன்றென-வுரைத்தருள்ராமலிங்கம்
ஊழ்வினையாவுமொழித்திடுமதிநல-வுளவருள்ராமலிங்கம். 33

ஊமையெழுத்தினுளாமையெழுத்தென-வுணர்த்தியராமலிங்கம்
ஊன்றியவேகாக்கரப்பொருளநுபவ-முகந்தருள்ராமலிங்கம். 34

ஊனநடந்தவிர்த்தானநடம்பெற-வுவந்துரைராமலிங்கம்
ஊற்றையுடம்பினைமாற்றுயர்பொன்செய-வுளவருள்ராமலிங்கம். 35

ஊக்கம்பெறிற்பவவேக்கங்கெடுமென-வுரைத்தருள்ராமலிங்கம்
ஊன்றியசேவடிதோன்றிடுநிலையிதென்-றுவந்தருள்ராமலிங்கம். 36

---

† யாவும் திருவருட்பா அருட்பெருஞ்சோதி அகவல்.

ஊதியமொவ்வொருவகையினும்பெறும்வகை யுரைத்தருள்ராமலிங்கம்
ஊசலெனும்பவநாசமுறும்பல வுளவுரைராமலிங்கம். 37

ஊனம்பெறுமுலகோரினிப்படுந்துய-ருரைத்தருள்ராமலிங்கம்
ஊர்த்துவங்கொடுத்தென்றனூர்த்தியைக்கெடுத்தமு-துதவியராமலிங்கம்.

## இராகம்-தோடி.

என்னைப்பாடவென்னுள்ளங்கலந்துரை-யென்குருராமலிங்கம்
எல்லைகடந்தவோர்தில்லையின்மருதூ-ரிலங்கியராமலிங்கம். 39

என்னுயிருக்குத்தாய்தந்தைசற்குருதெய்வ-மெனத்தகும்ராமலிங்கம்
எங்கணுஞ்சிவசன்மார்க்கந்துலங்குமினி-யென்றருள்ராமலிங்கம். 40

எடுப்பதொன்றின்பங்கொடுப்பதொன்றிணையடி-யெனவருள்ராமலிங்கம்
எங்கிருந்தெதுவேண்டினுமருள்வதுசிவ-மென்றுரைராமலிங்கம். 41

எப்படியெண்ணியதென்கருத்தப்படி-யெனக்கருள்ராமலிங்கம்
எவ்வழிவேதாகமமுரைநிஜவழி-யியம்பியராமலிங்கம். 42

எட்டிரண்டென்பனமுற்படியென்றெனக்-கிசைத்திடும்ராமலிங்கம்
எழுவகைத்தோற்றத்திலுறுமுயிர்வினைவகை-யியலருள்ராமலிங்கம். 43

எங்கேகருணையுண்டங்கேசிவமமர்ந்-திடுமெனும்ராமலிங்கம்
எல்லாவுயிர்களுநல்லோரெனத்தொழு-மென்குருராமலிங்கம். 44

## இராகம்-செஞ்சுருட்டி.

ஏகனேகனென்றியம்பும்வேதாகம-வியலருள்ராமலிங்கம்
ஏமரசிதசபையகமகப்புறமென-வியம்பியராமலிங்கம். 45

ஏறியிறங்காநிலைதூக்கியகா-லியலருள்ராமலிங்கம்
ஏதமிலாப்பரநாதாந்தாந்தமி-தேயெனும்ராமலிங்கம். 46

ஏகசிற்சித்தியனேகமெனநிகழு-மென்றருள்ராமலிங்கம்
ஏமமிகுந்திருவாமசுகந்தரு-மிடமருள்ராமலிங்கம். 47

ஏகாந்தநன்னிலையோகாந்தத்துள்ளதென்-றியம்பியராமலிங்கம்
ஏகாதகல்வியேசாகாதகல்வியென்-றிசைத்தருள்ராமலிங்கம். 48

ஏசறுந்திருவருட்செங்கோலோங்கிடு-மினியெனும்ராமலிங்கம்
ஏகாக்கரப்பொற்பீடத்தினிலைக்கவோ-ரிதமருள்ராமலிங்கம். 49

ஏங்குதலடையாப்பாங்கிதிலிருவென-விருத்தியராமலிங்கம்
ஏரெழுகோடிமகாமந்திரப்பொரு-ளியம்பியராமலிங்கம். 50

இராகம்-மத்தியமாவதி.

ஐந்தக்கரநிலைநெறிவகையைந்தையு-மருளியராமலிங்கம்
ஐந்துமலங்களும்வெந்துறுமாறிது-வாமெனும்ராமலிங்கம். 51

ஐவணங்காட்டிடுமெய்வணமிதுவென-வறைதரும்ராமலிங்கம்
ஐவகைப்பூதவுடம்பழியாநல-வடைவருள்ராமலிங்கம். 52

ஐந்தொழிலளிப்பதுகளிப்பதொன்றுமிணை-யடியெனும்ராமலிங்கம்
ஐயந்திரியுமெய்யையமுமறுத்திடு-மடைவருள்ராமலிங்கம். 53

ஐவருங்காண்டற்கரும்பெரும்பொருளிதென்-றறைதரும்ராமலிங்கம்
ஐம்முகமாறுமுகத்தின்பொருளிதென்-றருளியராமலிங்கம். 54

ஐம்புலன்வென்றவுத்தமர்க்கேவாதனை-யறுமெனும்ராமலிங்கம்
ஐங்கரப்பெருமானிலையுனக்குள்ளிதென்-றருளியராமலிங்கம். 55

இராகம்-கமாஸ்.

ஒத்தவிடத்தினினித்திரைகொள்ளெனற்-குரைதரும்ராமலிங்கம்
ஒக்குமனத்தையுடன்பணிகொள்ளென-வுகந்துரைராமலிங்கம். 56

ஒன்றேசிவமதையொன்றுசன்மார்க்கமு-மொன்றெனும்ராமலிங்கம்
ஒன்றினிற்பலவும்விரிந்தவகைக்குள-வுணர்த்தியராமலிங்கம். 57

ஒன்றலவிரண்டலவொன்றிரண்டலவென-வுரைத்தருள்ராமலிங்கம்
ஒன்றினிலொன்றுளவொன்றிலவென்றத-னுளவுரைராமலிங்கம். 58

ஒருநாழிகையினில்யோகப்பயன்வருமென்-றுரைத்திடும்ராமலிங்கம்
ஒருமையினெல்லாவுலகமுமோங்குமென்-றுகந்தருள்ராமலிங்கம். 59

இராகம்-உசேனி.

ஓடாமாயையுள்ளூடாநிலைநெறி-யுதவியராமலிங்கம்
ஓங்கும்பிண்டாண்டங்கள்தாங்கிடும்பெருவெளி யுரனுரைராமலிங்கம். 60

ஓலக்கபாடத்தைச்சாலத்திறந்திடு-முளவருள்ராமலிங்கம்
ஓதாதுணரவுணர்த்திடுமுளவையு-கந்துரைராமலிங்கம். 61

ஓமென்பதற்குமுன்னுமென்றாமென்-றுரைத்தருள்ராமலிங்கம்
ஓங்காரத்துள்ளொளிக்குள்ளொளியிதென்-றுகந்தருள்ராமலிங்கம். 62

இராகம்-பைரவி.

ஔதாரியமருள்பெறுமொருவழியென-தகத்துரைராமலிங்கம்
ஔரிதமாதியவறநூற்பொருளிது-வாமெனும்ராமலிங்கம். 63

ஔவியமாதியவெவ்வினைநீக்குத-லறமெனும்ராமலிங்கம்
ஔடதமணிமந்திரதந்திரநிலை-யளவுரைராமலிங்கம். 64

இராகம்-காம்போதி.

கடல்கடந்தருட்கடற்படிந்துறுமூவகைக்-கதியருள்ராமலிங்கம்
கனகசிற்சபையினிற்கண்டிடலுண்டிடல்-கருதெனும்ராமலிங்கம். 65

கலக்கமில்லாநடுக்கண்ணிடையம்பலங்-காணெனும்ராமலிங்கம்
கருணையொன்றேகதிபெறுவருத்தமில்வழி-கருதெனும்ராமலிங்கம். 66

கற்பனைமுழுவதுங்கடந்தொளிதருமொன்றைக்-காணெனும்ராமலிங்கம்
கற்பகமெனவுலகுயிர்க்கிரங்கெழினிலை-காட்டியராமலிங்கம். 67

கரணேந்தியமகமகப்புறவொழுக்கங்கள்-கணித்தருள்ராமலிங்கம்.
கணநிலையவற்றின்கருநிலையனைத்துங்-கழறியராமலிங்கம். 68

கருவிகளுடன்சேர்ப்பதுதனிவைப்பது-கழலெனும்ராமலிங்கம்
கண்டபோதிரவிகொண்டபோதுமதி-காணெனும்ராமலிங்கம். 99

கமலக்கண்குறுகிக்கமலக்கண்விளங்குங்-கழலெனும்ராமலிங்கம்
கருமயோகஞானமுறுஞ்சித்திகள்-காட்டியராமலிங்கம். 70

கதிர்நலமென்னிருகண்களிற்கொடுத்தது-காணெனும்ராமலிங்கம்
கடவுளர்பலரென்பதைமறந்தொன்றெனக்-கருதெனும்ராமலிங்கம். 71

இராகம்-ஆனந்தபைரவி.

காரணத்துள்ளனவிலமுப்பொருளெனக்-கணித்துரைராமலிங்கம்
காமவெகுளிமயக்கமுற்றொலைத்திடும்வழி-காட்டியராமலிங்கம். 72

காரணகாரியமெட்டிரண்டெனக்-கருதெனும்ராமலிங்கம்
காலநியதிமுதலியநிலையனைத்தையுங்-காட்டியராமலிங்கம். 73

காண்பதுகாட்டுவதாமிணையடியெனக்-கலந்துரைராமலிங்கம்
காலொன்றுதூக்கியம்பலத்தினினடித்திடுங்-கணக்கருள்ராமலிங்கம் 74

காதரிப்பார்கட்குக்காட்டிக்கொடாமனற்-கதியருள்ராமலிங்கம்
காணாதுகாட்டியவமுதையுண்ணுதுண்ணுங்-கணக்கருள்ராமலிங்கம். 75

இராகம்-சாவேரி.

கிரியையுபாசனைஞானத்தின்விரிவகை-கிளத்தியராமலிங்கம்
கிரியைசரியைமுதலெண்மூன்றியலருள்-கிளரொளிராமலிங்கம். 76

கின்னரவொளியோர்நிலையிற்கேட்குமெனக்-கிளத்தியராமலிங்கம்
கிளக்கின்றயோகசிகோபநிடதநிலை-கிடைப்பிக்கும்ராமலிங்கம் 77

இராகம்-எமுனகல்யாணி.

கீழ்த்திசையாற்பெறுஞ்சித்திகள்பலவகை கிளத்தியராமலிங்கம்
கீழ்மேல்வத்தைகளொழித்திடும்வகைபல-கேட்பிக்கும்ராமலிங்கம். 78

கீழ்ப்பிறப்பெல்லாந் தண்டனைக்குரித்தெனக் கிளத்தியராமலிங்கம்
கீழ்நடுமேலமுதங்களினியல்பிது-கேளெனும்ராமலிங்கம். 79

## இராகம் - கேதாரகௌளம்.

கூலங்குறிகுணத்தினிற்பெருமைகொள்ளாநிலை-கூறியராமலிங்கம்
குறுகப்பயந்துகூற்றுவனையுமோடச்செய் குறிப்பருள்ராமலிங்கம். 80

குலவுபிண்டாண்டங்களறியவோரகவலைக்-குறித்தருள்ராமலிங்கம்
குற்றமெலாங்குணமாகக்கொண்டருள்செயுங்-கோமான்ராமலிங்கம். 81

## இராகம் - பூரிகல்யாணி.

கூட்டினிற்காற்றையடைத்திடும்வகைபல-குறித்தருள்ராமலிங்சம்
கூட்டுறுசித்திகள்கோடிபல்கோடியுங்-கோதெனும்ராமலிங்கம். 82

§ கூற்றுறுங்காமச்சேற்றாசையுள்ளார்க்கெனக்-கூறியராமலிம்கம்
கூகாவெனத்தமர்கூடியழாப்பதங்-கொடுத்தருள்ராமலிங்கம். 83

## இராகம்-கல்யாணி.

கெடும்வகையொழித்திடனீற்றின்பயனெனக்-கிளத்தியராமலிங்கம்
கெட்டவர்நேயம்விடாரடைவார்பெருங்-கேடெனும்ராமலிங்கம். 84

கெடிபெறுமுத்தாஞானமிதென்றருட்-கிளரொளிராமலிங்கம்
கெதியீதருட்பெரும்பதியீதறியெனக்-கிளத்தியராமலிங்கம். 85

## இராகம் - தன்னியாசி.

கேவலசகலமிலாநடுவீதுவெனக்-கிளத்தியராமலிங்கம்
கேளாதனவொருங்கேதெரிந்துணர்ந்திடக்-கேட்பிக்கும்ராமலிங்கம். 86

கேசதநிதங்கொளக்கேடிலையுடற்கெனக்-கிளத்தியராமலிங்கம்
கேதமறநடிக்கும்பாததரிசனமுட்-கிடைப்பிக்கும்ராமலிங்கம். 87

## ஸ்ரீராகம்.

கைதவர்கனவினுங்காண்டற்கரிதாங்-கதிதரும்ராமலிங்கம்
கைவளர்நெல்லிக்கனியெனமெய்யருட்-கலந்தருள்ராமலிங்கம். 88

கைஞ்ஞானந்தானதுநானெனலெனக்-கழறியராமலிங்கம்
கையுள்ளமுதினைவாயுட்கொண்டிடுங்-கணக்கருள்ராமலிங்கம். 89

## இராகம் - சாரங்கா.

கொலைபுலைதவிர்ப்பதுவேயருணெறியெனக்-கூறியராமலிங்கம்
கொடுங்கோலொழியுமிவ்வுலகிலினியறிந்து-கொள்ளெனும்ராமலிங்கம். 90

§ திருவருட்பா 6-ந் திருமுறை இரங்கல், 3-ம் பாட்டு.

கோதிலெழுமூன்றுவயதினிலெனையாட்-கொண்டருள்ராமலிங்கம்
கோரியவரமனைத்தையுமெளிதினிற்றருங்-குருபரராமலிங்கம். 91

இராகம் - எதுகுலகாம்போதி.

கௌதுவவிரண்டரைக்கடிகையில்வருமிதைக்-கருதெனும்ராமலிங்கம
கௌப்புறுமக்கமாமணிமுறைப்பயனையுங்-காட்டியராமலிங்கம். 92

சமரசசுத்தசன்மார்க்கசங்கந்தனைத்-தாபித்தராமலிங்கம்
சத்திநிபாதத்துத்தமராநுபவந்-தருமெனும்ராமலிங்கம். 93

சமயத்தெய்வம்பலவுஞ்சிறுதுரும்பெனத்-தள்ளெனும்ராமலிங்கம்
சத்துச்சித்தானந்தத்தனிப்பரவத்துவின்-றரமருள்ராமலிங்கம். 94

சத்தவுருவமறைச்சிலம்பணியடியெனச-சாற்றியராமலிங்கம்
சரவொளிமணிமுதன்மணிவகையனைத்தின்-றரமருள்ராமலிங்கம். 95

சந்தைப்படிப்பவையெல்லாந்தள்ளெனச்-சாற்றியராமலிங்கம்
சந்தானகுரவர்சாற்றியதமிழ்மறைத்-தரமருள்ராமலிங்கம். 96

இராகம் - பியாக்.

சாதியுஞ்சமயமுங்கடந்தமெய்ந்நெறிபுகல்-சற்குருராமலிங்கம்
சாகாக்கல்வியைச்சகலரும்பெறவருள்-சத்தியராமலிங்கம். 97

சாந்தோக்கியப்பெருநூலகப்பொருளியற்-சாற்றியராமலிங்கம்
சாக்கிரமாதியவவத்தைகள்சாகாத்-தகவருள்ராமலிங்கம். 98

சாட்டையிற்பம்பரம்போன்றசமாதியைத்-தந்தருள்ராமலிங்கம்
சாதுக்களிவரிவரெனத்தொழில்குணம்பல-சாற்றியராமலிங்கம். 99

இராகம்-பியாகடை.

சித்தர்களெல்லாஞ்சித்தம்வியந்திடச்-சித்திசெய்ராமலிங்கம்
சித்துருவானசிவானந்தலகரியிற்-சேர்த்தருள்ராமலிங்கம். 100

சித்தியுமுத்தியுமனுபவஞ்சாதகந்-தேரெனும்ராமலிங்கம்
சித்தியின்பொருட்டேமுத்தியையடைவது-திறமெனும்ராமலிங்கம். 101

சித்தியும்வியக்தியுந்தருந்திருவடியெனத்-தேர்ந்துரைராமலிங்கம்
சிற்பரசிகரவகரவுகரமகரந்-தெரித்தருள்ராமலிங்கம். 102

இராகம் - தேவகாந்தாரி.

சீரடியார்நிந்தைபெரும்பிணிதருமெனத்-தேற்றியராமலிங்கம்
சீகாழியர்முதனால்வர்க்கும்பதிகங்கள்-செப்பியராமலிங்கம். 103

சீதமும்வெம்மையும்பொருந்தாவகைபல-தெரித்தருள்ராமலிங்கம்
சீமையிற்புறம்வெளுத்தவர்திருந்துவரெனச்-செப்பியராமலிங்கம். 104

இராகம் - பிலகரி.

* சூத்தசாதகத்தினகப்பொருளநுபவத்-துணிபுரைராமலிங்கம்
சுத்தவேதாந்தசித்தாந்தசமரசமெய்ச்சுகமருள்ராமலிங்கம். 105

சுத்தசிவாநுபவாதீதானந்தந்-தோய்தரும்ராமலிங்கம்
சுருதியுக்தியனுபவமொருங்கேபெறுஞ்-சுசமருள்ராமலிங்கம். 106

சூதிதுவுண்மையிதெனமறைபுகல்வகை-தொகுத்திடும்ராமலிங்கம்
சூடமுப்பருண்மருளுடலெனுமநுபவந்-தோன்றச்செயராமலிங்கம். 107

இராகம் - வசந்தபைரவி.

செகமுயிர்பரத்தின்காரணகாரியந்-தெரித்தருள்ராமலிங்கம்
செய்வகையோர்காற்படுமதியளவெனச்-செப்பியராமலிங்கம். 108

சேய்மையணிமையுயிர்பரத்தினுக்குளவகை-தேற்றியராமலிங்கம்
சேட்படுத்தினர்கின்னரவொலியினையெனத்-தெரித்தருள்ராமலிங்கம். 109

இராகம் - காபி.

சைவநிலைத்திடவருட்டிருமேனியைத்-தாங்கியராமலிங்கம்
† சைசவத்தோடென்றுமழியாதிருக்குமோர்-தரமருள்ராமலிங்கம். 110

சொரூபசுபாவமுரூபமுமறிதரந்-தொகுத்துரைராமலிங்கம்
சொர்க்கநரகவியலீதெனவகத்தினிற்-றோன்றச்செய்ராமலிங்கம். 111

இராகம் - அடாணா.

சோதியுட்சோதியின்பரமடிமுடியெனச்-சொற்றிடும்ராமலிங்கம்
சோதனையென்னிடமியற்றாதழியாச்-சுகமருள்ராமலிங்கம். 112

சௌளமாதியசெய்தலங்கரித்திடுநிலை சாற்றியராமலிங்கம்
சௌபாக்கியம்பெறுஞ்சோபனமிதுவெனத்-தனித்துரைராமலிங்கம். 113

இராகம்-முகாரி.

ஞானவரத்தனைஞானபுரத்தனை-நாடெனும்ராமலிங்கம்
ஞானசபாபதிநாடுசெதாகதி-நலமெனும்ராமலிங்கம். 114

ஞானநடத்தனைஞானியிடத்தனை-நண்ணெனும்ராமலிங்கம்
ஞாயபராபரகாயபுராதரனை-நவிலெனும்ராமலிங்கம். 115

---

* குமாரதேவர் சாத்திரம்.

† சைசவம் - பதினாறு வயது.

இராகம் - சங்கராபரணம்.

தகரமெய்ஞ்ஞானத்தின் தனிப்பொருள்வெளிநிலை-சாற்றியராமலிங்கம்
தட்சணாமூர்த்தியினாற்பெறுமனுபவத்-தரமருள்ராமலிங்கம். 116

தந்தங்குலந்தொண்ணூற்றாறங்குலந்-தானெனும்ராமலிங்கம்
தன்னியலென்னியலாந்தண்ணமுதந்-தந்தருள்ராமலிங்கம். 117

தனக்குள்ளதுதன்றலைவருக்குளதெனச்-சாற்றியராமலிங்கம்
தருநெறியாவுமுள்வாங்குஞ்சன்மார்க்கஞ்-சாரெனும்ராமலிங்கம். 118

தத்துவமந்திரமுதலியவாறின்-றரமருள்ராமலிங்கம்
தம்மையுணரவறியாதாருள்ளந்-தரியாராமலிங்கம். 119

தற்போதமுறுத்தளத்துறுமடியெனச்-சாற்றியராமலிங்கம்
தம்பரமானசிதம்பரநடமிது-தானெனும்ராமலிங்கம். 120

இராகம்-நாதநாமக்கிரியை.

தாழ்ந்திடுமுயிர்மேலருளின்றாதான்மியத்-தரமருள்ராமலிங்கம்
தாரகப்பொருணிலைநெறிதருமநுபவந்-தனித்துரைராமலிங்கம். 121

† தாங்கல்விடுதலிரண்டையுஞ்சமமாக்கிடுஞ்-சதிரருள்ராமலிங்கம்
தாதாவெனவுலுத்தரைப்பாடாவொரு-தரமருள்ராமலிங்கம். 122

தாவென்பார்க்கிந்தாவெனநல்லருடந்திடும்ராமலிங்கம்
தாகங்கெடுத்தருட்போகங்கொடுத்தருள்-சற்குருராமலிங்கம். 123

இராகம்-தோடி.

திருமூலராருளுந்திருமந்திரப்பொருள்-தெரித்தருள்ராமலிங்கம்
திருநாவுக்கரசர்த்தந்தெய்வநிலையின்வகை-தேற்றியராமலிங்கம். 124

திருவிசயந்தருந்திருவருட்பாவெனுந்-திருவருள்ராமலிங்கம்
திருவருளொளிமுன்வெளிநிலைபின்னெனத்-தெளிவுரைராமலிங்கம். 125

திரயோதசநிலைசிவவெளிநடுவெனத்-தெரித்திடும்ராமலிங்கம்
திருச்சிற்றம்பலத்தினிற்றிரைதூக்கிக்காட்டுந்-திறமருள்ராமலிங்கம். 126

இராகம்-கல்யாணி.

தீயமனமொடுக்குந்தூயமதிகொடுக்குந்-திருவருள்ராமலிங்கம்
தீபத்தைப்புளத்தில்வைத்தாபத்தைத்தீர்த்திடுந்-திறமருள்ராமலிங்கம். 127

தீயிடைநடுநடுநடுநிலைமுதலிய-தெரித்தருள்ராமலிங்கம்
தீயினிலுயிர்பொருள்திருவருகருநிலை-திரமருள்ராமலிங்கம். 128

---

† திருவருட்பா 6-ந் திருமுறை, மெய்யருள்வியப்பு 63-வது பாடல்,

இராகம்-சாமா.

திரியநவிம்பரநாதநவிலெனத்-தொகுத்திடும்ராமலிங்கம்
துவந்துவந்தவிர்த்துறுசுகநிலையருள்செயத்-தோன்றியராமலிங்கம். 129

துருவிடும்பரசாக்கிரமுதலநுபவத்-துணிபுரைராமலிங்கம்
துகளிற்பரகுருதுரியமுங்கடந்தவோர்-துறையருள்ராமலிங்கம். 130

இராகம்-கமாஸ்.

தூயகலாந்தமுதன்மூவிருநிலைச்-சுகமருள்ராமலிங்கம்
தூசொழித்தவரிடங்காசொழிந்திடுமெனுந்-துறவருள்ராமலிங்கம். 131

தெய்வமொன்றெனத்தேர்ந்தவர்சபைசேரெனுந் தேசிகராமலிங்கம் [ம்.
தெருளாப்பருவத்தைத்தெருட்டியோர்பொதுநிலை-தெரித்திடும்ராமலிங்க

தேருலகஞ்சிவமயமெனுமோர்-தெளிவருள்ராமலிங்கம்
தேசுறத்திகழ்தருதிருநெறிப்பொருளியல்-தேர்ந்துரைராமலிங்கம். 133

† தையுமாசியும்வையகத்துறங்கெனற்குரை-சாற்றியராமலிங்கம்
¶ தையலைநீக்கிப்பின்னிருவரைக்கூடிடுந்-தரமருள்ராமலிங்கம். 134

தொன்றுதொட்டுவரும்பிறப்பிறப்பொழித்திடுந்-துணையருள்ராமலிங்கம்
தொம்பதவுருதற்பதவெளியசிபதச்-சுகமருள்ராமலிங்கம். 135

தோத்திரத்தினிற்சாத்திரநிலைபலவுந்-தொகுத்திடும்ராமலிங்கம்
தோன்றிடும்பிடதங்களின்றுணிபியற்-றுலக்கியராமலிங்கம். 136

தௌத்தியமும்பெருநிலைதருமெனச்சொலுந்-தரமருள்ராமலிங்கம்
தௌர்ப்பாக்கியமொழிவதற்குமோர்வழியிது-தருமெனும்ராமலிங்கம். 137

இராகம் - காம்போதி.

நவவெளிநவநிலைநவவடிவுறும்வகை-நாட்டியராமலிங்கம்
நவநிலையிசைநடுவுறுநடுவினிற்சிவ-நாடெனும்ராமலிங்கம். 138

நடத்தையுநடஞ்செயுமிடத்தையுமிதுவென-நன்கருள்ராமலிங்கம்
நடங்கண்டாரடிப்பொடிநடத்துமைந்தொழிலென-நவின்றிடும்ராமலிங்கம்

நனந்தலைவீதிநடந்திடுஜோதியுண்-ணுடெனும்ராமலிங்கம்
நனவினிற்சுழுத்தியைநாடுறுமாறு-நயந்தருள்ராமலிங்கம். 140

நடுவினுண்ணடுவுமந்நடுவதினடுவரு-ணலமெனும்ராமலிங்கம்
நரைதிரையிறப்பறியார்பெரியாரென-நவின்றருள்ராமலிங்கம். 141

நல்லமுதென்னொருநாவுளங்காட்டிய-நற்குருராமலிங்கம்
நம்பலமாகியவம்பலப்பாட்டே-நவிலெனும்ராமலிங்கம். 142

---

† வையகம் - பூமிசம்பந்தம்.

¶ இருவர் - கிரியாசத்தி, இச்சாசத்தி.

இராகம்-பைரவி.

நால்வகைநெறியினுநாட்டுகவெனப்பொது-நலந்தரும்ராமலிங்கம்
நாயினுங்கடையேனுயினுமெனக்கரு-ணண்ணியராமலிங்கம். 143

நாதபூதவெளிக்குளிப்பையுநடத்தையு-நன்கருள்ராமலிங்கம்
நாத்திகமிலையினிநமனிலையெனவரு-ணட்டியராமலிங்கம். 144

இராகம் - சாவேரி.

நிருத்தனைக்காணுவனையொருத்தருங்காணுரென-நிகழ்த்தியராமலிங்கம்
நினைக்கண்டவிடத்திறைவனைக்கண்டாரிலையென-நியமஞ்செய்ராமலிங்கம்

நிருவிகற்பமுஞ்சகசமுமிதுவிதுவெனு-நிறையருள்ராமலிங்கம்
நிரதிசயானந்தநிலைநெறியிதுவென-நிகழ்த்தியராமலிங்கம். 146

இராகம் - சாமா.

நீரினிற்சத்திசத்தர்களினிறைவகைபல-நிலையருள்ராமலிங்கம்
நீரிடையொளியியல்குணவியல்பலவென-நிகழ்த்தியராமலிங்கம். 147

நீர்மேனெருப்பதன்மேலுயிர்ப்பும்வகுத்த-நிறையருள்ராமலிங்கம்
நீடுமடிமைசேய்நேயனுன்ருனெனு-நெறியருள்ராமலிங்கம். 148

இராகம்-தேசிக தோடி.

நுண்ணியவறிவாலறிவினையறிதலை-நோக்கெனும்ராமலிங்கம்
நுதனடுநெடுவினிலமரநுபவநிலை-நுவன்றிடும்ராமலிங்கம். 149

நூனக்கண்ணுலொழியாதுசுட்டெனவுண்-ணோக்கருள்ராமலிங்கம்
நூதனமலவிதுநாளுங்காணுவதென-நுவன்றிடும்ராமலிங்கம். 150

நெறிநிலைவழிதுறைசுத்தசன்மார்க்கத்தி-னேருரைராமலிங்கம்
நெடுங்கடல்பருகியுணர்ந்திடத்தெரித்தவோர்-நெறியருள்ராமலிங்கம். 151

நேரங்கடந்தவரைநினைக்கக்காலிலையென-நியமித்தராமலிங்கம்
நேரிலாதுயர்தம்பத்தேறநூல்போன்றதோர் நிலையருள்ராமலிங்கம். 152

நைமித்தியநித்தியகன்மமிதெண-நவின்றருள்ராமலிங்கம்
நைவகைபலவுமொழித்தனையினியிதை-நாடெனும்ராமலிங்கம். 153

நொடியினிலண்டமெலாமறியும்வகை-நுவன்றிடும்ராமலிங்கம்
நொய்யநெறிபுகலுமவையொழித்தருணூ-ணோக்கெனும்ராமலிங்கம். 154

நோவாநோன்பினைநோற்கும்வகையிதுன்னுண்-ணோக்கெனும்ராமலிங்க
நோயற்றவாழ்வுநின்பமுந்தரும்பதமென-நுவன்றருள்ராமலிங்கம். [ம்

இராகம் - எமுன்.

படிநிலையாறின்விரிவகைபலவும்-பகுத்துரைராமலிங்கம்
படியடிவான்முடியேறினுந்தோன்றாப்-பதமருள்ராமலிங்கம். 156

பருவமிலார்க்கும்பரிவுடன்பொதுவினிற்-பயிற்றிடும்ராமலிங்கம்
பலகலைதேரினும்பத்திமையேவழி-பாரெனும்ராமலிங்கம். 157

பற்றுகளனைத்தையும்பற்றறவிடுத்திது-பற்றெனும்ராமலிங்கம்
படிமுடியறிந்தனைபாரிதுபாரெனப்-பரிந்துரைராமலிங்கம். 158

பரையொளியுன்மனப்பதியினில்வைத்திதைப்-படையெனும்ராமலிங்கம்
பரையொளிமனத்தினிலருளொளியறிவினிற்-பாரெனும்ராமலிங்கம். 159

பரத்தினிற்பரத்தின்மேற்பரத்தினுட்பரமெனப்-பரிந்தருள்ராமலிங்கம்
பரபரம்பரமுதற்பெருவெளியநுபவம்- பகர்ந்தருள்ராமலிங்கம். 160

பரமுடனபரமும்பகர்நிலையிவையெனப்- பகுத்துரைராமலிங்கம்
பரம்பெறும்பரந்தரும்பரம்பதம்பரமெனப்-பரிந்துரைராமலிங்கம். 161

பதிபசுபாசமுர்நிலைவிரிவனைத்தையும்-பகுத்தருள்ராமலிங்கம்
பசியாவமுதிதுபகராநிலையெனப்-பரிந்தருள்ராமலிங்கம். 162

இராகம - நாதநாமக்கிரியை.

பாம்பும்பாம்பாட்டியுமனமாயையென்றுணர்-பண்பருள்ராமலிங்கம்
பாசம்பெறாதுமெய்ப்பதியிலுறாதமர்-பதமுரைராமலிங்கம். 163

பார்முதனல்வகையோனியிலுயிர்பெறும்- படைப்பருள்ராமலிங்கம்
பார்முதனாதமுமேற்பலதத்துவப்-பண்புரைராமலிங்கம். 164

பாவலர்க்கரியமெய்ம்மொழிப்பொருள்விளக்கம்- பகர்ந்தருள்ராமலிங்கம்
பாடுவோர்க்கருளக்கூத்தாடுகின்றாரெனப்-பரிந்தருள்ராமலிங்கம். 165

இராகம் - கமாஸ்

பிரணவவடிமுடியினநடுவினுமடி-பேசியராமலிங்கம்
பிரகிருதிப்பெருநூற்பாராதவர்-பிச்செனும்ராமலிங்கம். 166

பிண்டத்துயிரின்றுரிசையடக்கிடும்-பீடுரைராமலிங்கம்
பின்னமபின்னமுமுபயமுமுறுநிலை-பேசியராமலிங்கம். 167

இராகம்-தோடி.

பீதாம்பரனயனரனெனத்தொழிலாற்-பிரிவெனும்ராமலிங்கம்
பீடுறும்பித்தருக்கெவையுமொப்பாமெனப்-பேசியராமலிங்கம். 168

பீரம்வற்றியும்பிள்ளைப்பல்லிடுமெனவன்பின்-பெருக்கருள்ராமலிங்கம்
பீடிக்கும்போதமிறந்திடலொருவகை-பேறெனும்ராமலிங்கம். 169.

§ திருவருட்பா 2-ந்திருமுறை, திருவருண்முறையீடு 92-ம் பாட்டு.

## இராகம் - பைரவி.

புறநடுவொடுகடைப்புணர்ப்பிக்குமுதலெனப்-புகன்றிடும்ராமலிங்கம்
புகலருமகண்டபூரணநடுவெகநடு-புரிந்தருள்ராமலிங்கம். 170

புறப்பூவகப்புறப்பூவுறுப்பியற்றிடும்-புணர்ப்புரைராமலிங்கம்
புண்ணியருளத்தினிற்பொருந்தியவடியெனப்-புகன்றருள்ராமலிங்கம். 171

## இராகம் - கல்யாணி.

பூரணமுறிவெலவையுந்தெரிந்திடுமெனப்-பகன்றிடும்ராமலிங்கம்
பூட்டியவிருவினைக்கடலொழித்திடும்வகை-புரிந்தருள்ராமலிங்கம். 172

பூதமெனும்பெயர்க்கிலக்கியமிலக்கணம்-புகன்றருள்ராமலிங்கம்
பூவொருமூன்றைந்தேழ்நவமுதலிய-பொருளருள்ராமலிங்கம். 173

## இராகம் - கேதாரகௌளம்.

பெண்ணிடைநான்கெனவாணிடைமூன்றெனப்-பேசியராமலிங்கம்
பெண்ணிடைமூன்றாணிடையிரண்டாமெனும்-பிரிவுரைராமலிங்கம். 174

பெண்ணியல்மனமாணியலறிவாமெனப்-பேசியராமலிங்கம்
பெண்ணினுள்ளாணுணுட்பெண்ணெனும்வகை-பிரித்தருள்ராமலிங்கம்.

## இராகம்-காம்போதி.

பேருரில்லாப்பெரும்பொருளிதுவெனப்-பிரித்தருள்ராமலிங்கம்
பேய்க்குணமறிந்துமிந்நாய்க்குமோர்-பெருவழிபேசியராமலிங்கம். 176

பையரவம்புனைந்தாடுமடைவிதெனப்-பகர்ந்திடும்ராமலிங்கம்
பைங்குழலுமையொருபாகமமர்ந்திடும்-பண்பருள்ராமலிங்கம். 177

பொருட்பதமெல்லாம்புரிந்துமேலருட்பதம்-பொருந்தெனும்ராமலிங்கம்
பொய்ந்நெறியனைத்தையும்போக்கியோர்பொதுநெறி-புகன்றருள்ராமலிங்கம்.

போதிக்குமென்மொழியாவுமரன்சொலெனப்-புரிந்தருள்ராமலிங்கம்
போகமதொழித்தருட்போகமுந்தரலருட்-புகழெனும்ராமலிங்கம். 179

## இராகம் - எதுகுலகாம்போதி.

மதியிரவியனலினிலையனைத்தையும்பெற-வழங்கியராமலிங்கம்
மனமுயிர்நெகிழ்வுபத்திமையன்பெனவாய்-மலர்ந்தருள்ராமலிங்கம். 180

மலையலையெனவுலமதங்களுக்கெட்டா-மதியுரைராமலிங்கம்
மதிநலந்தெரிமனுமுறைகண்டவாசகம்வகுத்துரைராமலிங்கம். 181

மனமென்வசமருள்வசநானுறவோர்-வழியருள்ராமலிங்கம்
மதிவிதிசஞ்சிதவினைவிரிவினைத்தையும்-வகுத்துரைராமலிங்கம். 182

மரணபயந்தவிர்வாழ்வுமெய்வாழ்வென-வழங்கியராமலிங்கம்
மணிவாசகர்பேறிதுவெனக்காட்டிட-மறைந்தொளிராமலிங்கம். 183

மந்தணமிதுமறுவில்லாமதியான்-மதியெனும்ராமலிங்கம்
மதியில்வினைந்தமருந்தையருந்தவோர்-வகையருள்ராமலிங்கம். 184

மண்ணினிலைம்பூவைந்திறல்பலபல-வகுத்துரைராமலிங்கம்
மண்ணியலுறுச்செயல்கலைநிலைமுதலிய வழுத்தியராமலிங்கம். 185

இராகம் - சங்கராபரணம்.

மாயச்சடிலமரித்திடினெழுமெனவாய்-மலர்ந்தருள்ராமலிங்கம்
மாபாதகர்சிவநிந்தைபுரிவரென-வழங்கியராமலிங்கம் 186

மாந்தரெளிதிற்கதியுறுஞ்ஜீவகாருண்யம்-மலர்ந்தருள்ராமலிங்கம்
மார்க்கமதறிந்துமுட்பொருளறியாருள-மருவாராமலிங்கம். 187

மாமாயையசையாதடித்திடுமெடியென-மலர்ந்துரைராமலிங்கம்
மாயையைமிதித்திடுந்திருவடிநிலைபெற-வழங்கியராமலிங்கம். 188

மாணிக்கவாசகர்க்கருளியசேவடி-மாண்பருள்ராமலிங்கம்
மாதேவனணியுமாலையிதென்றருள்-மகத்துவராமலிங்கம். 189

இராகம் - பூரிகல்யாணி.

‡ மிருகமுதலியவைக்கூழுணவேயென-விளக்கியராமலிங்கம்
மிகவருமாந்தர்க்குமதியுணவுமுண்டென-விளம்பியராமலிங்கம். 190

மிடைந்திருந்தனவண்டவகையடியணுவென-வியந்துரைராமலிங்கம்
மித்தையவித்தையநித்தியநித்திய-விளைவருள்ராமலிங்கம். 191

இராகம் - சாமா.

† மீதானத்தருளொளிவெளியடியென-விளக்கியராமலிங்கம்
மீலத்திற்பலநூதனந்தோன்றுமுன்னென-விளம்பியராமலிங்கம். 192

மீக்குணத்தோருமுணர்ந்திடற்கருநிலை-மிகவுரைராமலிங்கம்
மீட்பாரில்லாவெனையுமேலேற்றிட-விளக்குறும்ராமலிங்கம். 193

இராகம்-நாட்டைக்குறிஞ்சி.

மூந்துறுமைவர்க்குமைந்தொழிலியற்றிடு முடிபருள்ராமலிங்கம்
முத்தியுஞ்சித்தியும்வியக்தியுமடைவது-முறையெனும்ராமலிங்கம். 194

முத்திறல்வடிவவைமுடிந்திடுநிலைநெறி-முடிபருள்ராமலிங்கம்
முத்தமிழ்நாற்கவிதெரிந்துபுகன்றிடு-முறையருள்ராமலிங்கம். 195

---

‡ ஜீவகாருண்ய நூலிலுள்ளது.

† திருவருட்பா அருட்பிரகாசமாலை.

இராகம் - தன்யாசி.

மூவிருநிலையின்முடிநடுவடிமேன்-முடிபுரைராமலிங்கம்
மூவரையுஞ்சுவாமிகளெனமொழிவது-முறையெனும்ராமலிங்கம். 196

மெய்வழிமெய்யைவிடாவழிமேவெனு-விளக்கியராமலிங்கம்
மெய்கண்டார்மெய்யொடுமேவினரென-விளம்பியராமலிங்கம். 197

மேனிலைமேவநெஞ்சறிவுறுத்தலில்விதி-விளம்பியராமலிங்கம்
மேதாவியர்பெறுஞ்சுக்குமநெறியுறும்-விளைவருள்ராமலிங்கம். 198

மைத்திரியாதியுற்றவர்பெறுவார்மதி-வழியெனும்ராமலிங்கம்
மைவிழியார்மயலொழியாரடையார்-மதியெனும்ராமலிங்கம். 199

மொண்டுகொண்டருளமுதுண்டருளுதல்சித்தி-முறையெனும்ராமலிங்கம்
மொத்துறவாவென்றனுகார்அுதரென-மொழிந்திடும்ராமலிங்கம். 200

மோனவேழ்வெளிபராபரத்தடங்கிடு-முறையருள்ராமலிங்கம்
மோகமொழியசத்துவவுணவேவழி-முதலெனும்ராமலிங்கம். 201

இராகம் - தனுசரி.

யாவரான்மவுரிமையிலாரசுரரென்-றருளியராமலிங்கம்
யாதொருபற்றுமிலார்க்குதவுதனல்-லறமெனும்ராமலிங்கம். 202

யாதுங்கருதாதிம்மையிலாட்கொண்-டருளியராமலிங்கம்
யாவுஞ்சிவன்செயலெனுமோர்பெருநிலை-யமரெனும்ராமலிங்கம். 203

இராகம் - சஹானு.

யோகாந்தகலாந்தமிசைக்கழலிணை-யுளவெனும்ராமலிங்கம்
யோகமுறுருக்கருமனமாயை-யென்றுரைத்தருள்ராமலிங்கம். 204

இராகம் - அடாணு.

வம்புகள்பேசிடும்வண்டர்களுந்தமை-வணங்கச்செய்ராமலிங்கம்
§ வள்ளலெனுந்திருப்பாடலுக்கோருரை-வழங்கியராமலிங்கம். 205

வட்டமுஞ்சதுரமுங்கோணமுமற்றதின்-வகையருள்ராமலிங்கம்
வன்மையிலவ்வச்சக்கரத்தலைவர்சீர்-வழங்கியராமலிங்கம். 206

வயங்குந்தொண்டமண்டலமென்பதற்கிலக்கணம்-வகுத்துரைராமலிங்கம்
வளம்பெறுந்தமிழ்க்கடற்பெருக்கெனத்திருவாய்-மலர்ந்தருள்ராமலிங்கம்.

வளநிலைசத்தியின்வளர்நிலைவிரிவகை- வழுத்தியராமலிங்கம்
வடுவுறுபோக்கொடுவரவுறுநெறியின்-வகையருள்ராமலிங்கம். 208

§ ஒழிவிலொடுக்கம், முதற்பாடல்,

இராகம் - சாவேரி.

வான்கலந்திடப்புகன்றிடும்பெருநூல்விரி-வகையருள்ராமலிங்கம்
வான்முகிற்சத்திசத்தர்கள்விரிவகைபல-வகுத்துரைராமலிங்கம். 209

வாடுதனீக்கியமன்றிடையிறவா-வாழ்வெனும்ராமலிங்கம்
வாதவூரர்திருக்கோவையினுண்மெய் வழங்கியராமலிங்கம். 210

வாட்டந்தவிர்த்துன்மனவோட்டங்கெடுத்திடெனும்-வகையுரைராமலிங்க
வாழ்க்கையிலறம்புரிவாரும்பெரியரென-வழுத்தியராமலிங்கம். [ம்

இராகம் - உசேனி.

விண்ணினில்விண்ணுவிண்ணுறும்விண்ணென-விளம்பியராமலிங்கம்
விண்ணியல்சிவத்தின்வியனிலையளவிய-விரிவருள்ராமலிங்கம். 212

வித்தும்பதமும்விளையுபகரிப்பையும்-விளக்கியராமலிங்கம்
விதியைக்கொள்வார்மரணந்தருஞ்சமயம்-விடாரெனும்ராமலிங்கம். 213

வித்தினில்விளைவதில்வித்துறும்விளைவையும்-விளம்பியராமலிங்கம்
விந்துநாதவொளிவெளிகடந்ததன்மேல்-விளைவருள்ராமலிங்கம். 214

இராகம் - தேசி தோடி.

வீரனென்போனெவரைவென்றவனென-விளக்கியராமலிங்கம்
வீய்ந்தசிதாபாசத்துவம்போக்கவோர்-விளைவருள்ராமலிங்கம். 215

வீசிடுங்காற்றிடைப்பூதிறவியல்பல விரிவருள்ராமலிங்கம்
வீயாப்பெருநலமெல்லாமுவந்தருள்-வித்தகராமலிங்கம். 216

வீதியின்மேடைமேற்கூடமேலேழ்நிலை-விளம்பியராமலிங்கம்
வீறுமோர்தம்பத்தின்மேன்முதல்சந்நிதி-விளக்கியராமலிங்கம். 217

இராகம் - கல்யாணி.

வெண்மையிலைந்திறம்வண்ணவகையின்பல விளைவருள்ராமலிங்கம்
வெண்மைத்திரையான்மெய்ப்பதிமறைப்பென-விளம்பியராமலிங்கம். 218

வெளியினின்முடிநிலைமுதலியவகுத்திடும்-விதியருள்ராமலிங்கம்
வெளியிடைப்பகுதியின்விளைவியல்களவியல்-விரிவருள்ராமலிங்கம். 219

வெளியிடைச்சித்தியல்வித்தியலுயிரியல்-விரிவுரைராமலிங்கம்
வெளியிடையொன்றுல்விளைந்தனபலவென-விளக்கியராமலிங்கம். 220

இராகம் - சுருட்டி.

வேதாகமமுடிச்சுடரொளியடியென-விளம்பியராமலிங்கம்
வேதாந்தம்முதலாறந்தாந்தமும்-விரித்துரைராமலிங்கம். 221

வேகாக்கால்சாகாத்தலைமுதலிய-விளைவருள்ராமலிங்கம்
வேண்டியநல்விருப்பெல்லாமெனக்கருள்-வித்தகராமலிங்கம். 222

வையகத்தார்போன்மாண்டுழலாப்பல-வகையருள்ராமலிங்கம்
வைதிகசைவத்தின்மார்க்கமிதாமென-வழுத்தியராமலிங்கம். 223

வைகறையருடஜோதியினுளமலர்வகை-வகுத்துரைராமலிங்கம்
வையகம்வானமற்றவும்வாழ்ந்திடவருள்-வழங்கியராமலிங்கம். 224

ஆனந்தக்கண்ணி முற்றுப்பெற்றது.

---

வெண்பா.

சித்தகுரு ராமலிங்க தேசிகனர் கண்ணிகளைச்
சுத்தமிகும் பத்தியுடன் தோத்திரிப்போர்-முத்தர்குழாஞ்
சார்ந்தோங்கி வாழ்வரெனச் சாற்றியவோ ருண்மையெனுள்
ளார்ந்தோங்கு மீசரறி வார்.

திருவருட்பிரகாசவள்ளலார் திருவடியே சரணம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

ஸ்ரீமத் - திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம்

இராமலிங்க

# சற்குரு புலம்பற் கண்ணி.

காப்பு.

குறள் - வெண்பா.

சற்குருவின்பாற் புலம்பற் சாற்றுதற்குத் தந்திமுக
னெற்குவர மீவா னிசைந்து.

இராகம் - நீலாம்புரி.

அருளே வடிவா-யவனியிசைச் செல்வ
மருளா ரவதரித்த-மாத்தகைய சற்குருவே.

கருணீக நன்மரபிற்-காருண்யங் கொண்டே
யருணிடித் தோங்க-வவதரித்த சற்குருவே.

இராமலிந்த யாவரையு-மீடேற்றத் தோன்று
திராமலிங்கு வந்த-விராமலிங்க சற்குருவே. 3

அருட்பிர காசவள்ள-லாயுதித்தி யார்க்குந்
தெருட்பெருஞ்சித் தெல்லாந் தெரிக்கவந்த சற்குருவே. 4

தெருட்பெருஞ் சித்தெவையுந்-தேர்ந்துலகோ ருய்ய
வருட்சித்த ராக-வவதரித்த சற்குருவே. 5

அன்பே வடிவா-யருளே யுயிராக
வின்பே யுணவா-யிலகவந்த சற்குருவே. 6

பன்மார்க்க மெல்லாம்-பசையற் றொழிந்திடவுஞ்
சன்மார்க்க மோங்கிடவுஞ்-சாற்றவந்த சற்குருவே. 7

மதங்கடந்த வாய்மைநெறி-மாந்தர்பெற வென்றும்
பதங்கடந்த வுண்மெய்-பயிற்றவந்த சற்குருவே. 8

கல்லார்க்குங் கற்றார்க்குங்-காலங் கடந்தநிலை
எல்லா மெளிதி-லியம்பவந்த சற்குருவே. 9

ஆறுமுடி வின்முடிவி-ஞழ்ந்தபொருள் மன்பதைக்கே
கூறுதற்கிப் பாரிற்-குலவியவென் சற்குருவே. 10

பெறுநலத்தைத் தம்முட்-பிறங்கவம்ப லத்தே
சிறுநகையைம் மாதத்திற்-செய்தருளுஞ் சற்குருவே. 11

அச்சபையிற் றீக்ஷிதரா-மப்பைய ரிம்மதலை
இச்சபையோன் மைந்தனென-வெண்ணலுறுஞ் சற்குருவே. 12

பெருவிருப்பா லன்னைதன்-பீரங் கொடுத்தா
லருவெறுப்பா லுண்டுவந்த-வற்புதவென் சற்குருவே. 13

சபாபதிப் பிள்ளையெனுந்-தன்சோ தரரை
வுபாத்தியாய ராக-வுவந்தருளுஞ் சற்குருவே. 14

பகருஞ் சிறுவயதிற்-பள்ளிதனிற் சென்னை
நகரிற் படிக்கு-நடிப்பருளுஞ் சற்குருவே. 15

பொய்யுரையா வன்னோன்-புராணப்ர சங்கத்தின்
மெய்யேடு சொல்ல-விழைந்தருளுஞ் சற்குருவே. 16

ஒருநாளி லன்னோ னுரைசெய்த பாட்டிற்
பொருள்பல விரித்துப்-புகன்றருளுஞ் சற்குருவே. 17

பீடோன் கோர்ந்தே-பெரியோன் வியப்புற்றே
யேடுபடி யாம-லிசைக்கவுற்ற சற்குருவே. 18

திருத்தணிகைத் தேவனுக்குச்-செந்தமிழ்ப்பா மாலை
பொருத்தமா வொன்பதிலே-போற்றியருள் சற்குருவே. 19

பெரியகலா வல்லவரும்-பேசருநூல் கேட்டற்
குரியபொரு ளன்பா-லுரைத்தருளுஞ் சற்குருவே. 20

பற்றியே தர்க்கம்-பலவாய்ச்செய் தொர்ந்தரையா
லொற்றியிற் சென்றே யொளிக்கலுற்ற சற்குருவே. 21

பச்சையப்பன் பள்ளியினிற் பண்டிதச பாபதிமா
லிச்சையுற்றுக் கேட்டற்-கிணங்கியருள் சற்குருவே. 22

மறுமுறை கண்ட-வசனமதை யார்க்கு
மநுகூல மாக வளித்தருளுஞ் சற்குருவே. 23

வேலா யுதமாளின்-வித்தையறி யக்கொணர்ந்த
நூலார் பிழைகள்-நுவன்றருளுஞ் சற்குருவே. 24

சொன்னபிழை நன்கோர்ந்தே-சோர்வுற் றடிவணங்கி
நன்னயமாய்த் தான்படிக்க-நண்ணவருள் சற்குருவே. 25

கற்பாருபய கலாநிதி-வித்வா னென்னும்
பொற்பார் பெயரைப்-புகன்றருளுஞ் சற்குருவே. 26

படிப்புத் தொழிலிற்-பகர்சுந்த ரற்கே
யடிப்பதுநன் றல்லவென்மே-லாணையென்ற சற்குருவே. 27

தொண்டமண்ட லஞ்சரியாஞ்-சொல்லதற்கி லக்கணத்தை
விண்டவொரு நற்புலமை-மேதகவென் சற்குருவே. 28

குருபரம்ப ரப்ரபாவங்-கொள்ளுமொரு நூலை
யரும்மைண வர்க்கே-யருளியவென் சற்குருவே. 29

சமையகுரு மூவரையுஞ்-சாமிகளென் றேத
லமையுமே நாயனு-ரல்லவென்ற சற்குருவே. 30

திருவருட்பா நன்னூலைத்-தேசமெலா மேத்தி
மருவிருட்பா டேக-வழுத்தியருள் சற்குருவே. 31

ஒழிவி லொடுக்கநூ-லுற்றமுதற் பாட்டுக்
கழிவில் விருத்தி-யருளியவென் சற்குருவே. 32

ஒழிவி லொடுக்கநூற்-குற்றவுரை யோடே
யழிவிலெழு தாவெழுத்தா-மச்சிலிட்ட சற்குருவே. 33

செல்வநிறை சென்னைவிட்டுச்-சென்றே சிவதலங்கள்
பல்வகைய பாமாலை பாடியருள் சற்குருவே. 34

அவிமாறு வந்தணர்வா-ழம்பலத்திற் சென்று
கவிமாலை யுள்ளங்-கரையவருள் சற்குருவே. 35

தென்பாற் புலிவேளூர்-செல்வவா ரூரிற்சென்
றன்பா லருட்பா-வருளியவென் சற்குருவே. 36

கருக்குழிசே ராத-கருத்துடையோர் வாழுங்
கருங்குழியிற் சின்னாட்-களித்திருந்த சற்குருவே 37

பன்னியாற் சிற்றம்-பலஞானிக் கேபரிந்து
"நின்னிய" லென் னும்பா-நிகழ்த்தியவென் சற்குருவே. 38

கலக்கமுற்றே மாக்கக்-கணக்கிலவ தானிக்
கிலக்கணப் பத்திரிகை-யேகவிட்ட சற்குருவே. 39

பண்பாரு மன்னோன்-பகர்ந்த "தகரவரி"
வெண்பாவுக் கீருரைசெய்-விற்பனவென் சற்குருவே. 40

கணக்கிலவ தானி-கணக்கறிந்தச் சுற்றே
யிணக்கமொடுன் சந்நிதிவந்-தேத்தவருள் சற்குருவே. 41

கோதிற் கருங்குழியிற்-குட்டநோய் கொண்டவற்குப்
பூதியளித் தவ்வினையைப்-போக்கியருள் சற்குருவே. 42

ஆத்திகர்சூ ழத்தலத்தோ-ரன்பனுக்குப் பூதிதந்து
நேத்திரமா ருட்டமதை-நீக்கியருள் சற்குருவே. 43

நல்லவர்சூழ் கூடலூர்-நாரா யணசாமி
வல்லபெரு நாப்புற்றை-மாற்றியருள் சற்குருவே. 44

அப்பரையா ழிக்கரைசேர்த்-தாள்பா திரிப்புலியூர்
செப்பரிய வாற்றுவிழா-சேவித்த சற்குருவே. 45

திகழ்வடிவி னைப்பூசை-செய்யலாகா தென்ற
வகமுடையோர் கூற்றை-யடக்கியருள் சற்குருவே. 46

வேட்டவ்வையெல் லாமளிக்கும்-வேட்டவலச் சீமான்றன்
வேட்டமனை யார்தம்-வினையொழித்த சற்குருவே. 47

கோலமிகும் வேட்டவலக்-கோமானைச் சுத்தமுறுஞ்
சீலமிகுஞ் சீடனெனச்-செய்தருளுஞ் சற்குருவே. 48

பார்வதியுஞ் சீராய்ப்-பகர்வடலூ ரென்கின்ற
பார்வதிபு ரதினிலே-பற்றியமர் சற்குருவே. 49

வருமன்பர் மற்றையர்க்கும்-வந்துண் டிருக்கத்
தருமச்சா லையையன்பாற்-றாபகஞ்செய் சற்குருவே. 50

பாவகாரி யங்களெலாம்-பாறிடவிப் பாரினிலே
ஜீவகா ருண்ணியநூற்-செய்தருளுஞ் சற்குருவே. 51

அருயோகஞ் செய்கறபட்-டார்சங்கற் பம்போற்
றிருசாறுங்குன் றத்தவர்க்குத்-தீக்கைசெய்த சற்குருவே. 52.

திடஞானம் பெற்றுய்யத்-தீக்கைசெய்த பின்னர்
வடலூரில் வந்திருக்க-வாய்மலர்ந்த சற்குருவே. 53

எத்திசையுள் ளோரெவரு-மேத்துந் தாஞான
சித்திபுர மென்னும்பேர்-செப்பியருள் சற்குருவே. 54

பார்வதிப ரத்தினிலே-பானுசெயுந் தாபமற்றுச்
சீர்வதியு மாரிபெய்யச் செய்தருளுஞ் சற்குருவே. 55

மேனீர் மையுற்றோர்-விளங்குபுதுப் பேட்டையினன்
மேனீர் வதியவருள்-வித்தகவென் சற்குருவே. 56

பத்திமைசே ரங்ககரிற்-பல்கூறை பற்றியதீ
வத்திரத்தா னிற்கச்செய்-மாத்தகைய சற்குருவே. 57

பற்பலபேர் நோய்களைவெண்-பற்பமதாற் போக்கியதை
யற்பனென் றற்பகர-லாகுமோ சற்குருவே. 58

திருமுகத்தைக் கண்டோர்-திருவருட்பாக் கொண்டோர்
பெருமைபெறுஞ் சீலரென்ற-பேருறச்செய் சற்குருவே. 59

ஞாலமதிற் றம்முணரா-நல்குரவாற் றுன்பமுறுஞ்
சீலமதை மன்பதைக்குச்-செப்பியருள் சற்குருவே. 60

வஞ்சமிலார்க் குண்மைநெறி-வாய்க்கத் திருவருட்பா
நெஞ்சறிவு றுத்த-னிகழ்த்தியருள் சற்குருவே. 61

"உலகேலா" மென்றற்-குரைவிரித்துச் சொற்றே
உலகிற் பெரும்புகழை-யுற்றவென்றன் சற்குருவே. 62

அநித்தசட துக்கவுட-லாமெனுமப் போத
மநித்தமா மென்றே-யருளியவென் சற்குருவே. 63

அருளும் பரையு-மடி நடுவே யாகும்
பொருளுஞ் சிவமுடியாம்-போதமருள் சற்குருவே. 64

அண்டபிண்டந் தோன்றி-யடங்கு முறைமைநிலை
விண்ட பெருங்கருணை-வித்தகவென் சற்குருவே. 65

அகமு மகப்புறமு-மான்மாவுஞ் சீவன்
தகவுந் தெரித்தருளுந்-தற்பரனுஞ் சற்குருவே. 66

புறப்புற மும்புறமும்-பொய்மெய் காண
முறப்பெற்ற வுண்மை-யுரைத்தருளுஞ் சற்குருவே. 67

ஆவியீ ரைந்தை-யபரந் தனில்வைத்து
நாவினு லோத-நவின்றருளுஞ் சற்குருவே. 68

இறப்பும் பிறப்பு-மிரியவரும் வீட்டின்
திறப்பும் புகவுந்-தெரித்தருளுஞ் சற்குருவே. 69

கண்புருவ பூட்டின-கதவைத் திறப்பதற்கே
நண்புவைத் தோர்கவியி-னட்டியவென் சற்குருவே. 70

சாகாத் தலைநிலையுஞ்-சாற்றும்வே காக்காலும்
போகாப் புனலும்-புகன்றருளுஞ் சற்குருவே. 71

சாகாத கல்வித்-தரமதனை மன்பதைக்கே
மாகாத லோடே-வழுத்தியவென் சற்குருவே. 72

முத்தியென்னு நன்னிலையே-முன்னுமற சாதகமாய்ச்
சித்தி யநுபவமாச்-செப்பியருள் சற்குருவே. 73

புலைகொலைசெய் வோர்கள்-புறவினத்தா ரென்றே
நிலையுலகி லந்நன்-னெறியருளுஞ் சற்குருவே. 74

அகவினத் தாரவையில்-லாதவரென் றிந்தச்
சகமதனி லன்புடனே-சாற்றியவென் சற்குருவே. 75

புறவினத் தார்பசியைப்-போக்கவிடு மட்டு
மறமீத லாகாவென்-றுரைசெய்த சற்குருவே. 76

அகவினத்தார் கூழிடினு-மண்டரமு தாமென்
றிகமதனி லுள்ளோர்க்-கியம்பியவென் சற்குருவே. 77

புறவினத்தா ரின்னமுதும்-புல்லெனவே தள்ளென்
றறநிலையை யார்க்கு-மருளியவென் சற்குருவே. 78

கொல்லாதார்க் கின்பங்-கொடுப்பான் கடவுளென்றே
யெல்லார்க்கு மன்பா-லியம்பியவென் சற்குருவே. 79

புலாலை நுக ராதபெரும்-புண்ணியர்க்கெஞ் ஞான்று
மிலாததிலை யென்றே-யியம்பியவென் சற்குருவே. 80

அண்ணுக்கின் மேலே-யகண்ட வெளிகாட்டு
முண்ணாட்டந் தன்னை-யுரைத்தருளுஞ் சற்குருவே. 81

காலமெல் லாங்கடந்த-கர்த்தனையே காண்டற்குக்
காலமே னென்றுங்-கருதுமென்ற சற்குருவே. 82

நாம்பிரம மென்றே-நவின்றிடுவோர் தம்மையெலாஞ்
சாம்பிரமமா மென்றே-சாற்றியவென் சற்குருவே. 83

பரமுயிர்பார் தோன்றும்-பகர்காரி யத்தாற்
கரவிடுங் காரணத்தாற்-காணென்ற சற்குருவே. 84

கருதருமேழ் மௌனங்-கடந்தீ ரிரண்டா
மொருபெரிய வான்வரையி-னுண்மையருள் சற்குருவே. 85

ஏழ்திரையை நீக்கு-மியலறிந்த வஞ்ஞான்றே
பாழ்திரையு மாரகமும்-பாறுமென்ற சற்குருவே. 86

இருவே தனையொழித்தே-யீடுகெட்டு வீரேற்
கருவே தனையொழியக்-காணுமென்ற சற்குருவே. 87

ஆறுகோ டிச்சமய-மாயிற் புறத்தகத்துங்
கூறுமோர் தெய்வமெனக்-கூறியருள் சற்குருவே. 88

வேதாந்தாந் தத்தும் விளம்புமற்றுந் தந்தத்து
மாதாரத் தெய்வமொன்றே-யாமென்ற சற்குருவே. 89

மதவாத முற்றோர்-மதிவாத மற்றே
யிதவாத மற்றே-யிழிவரென்ற சற்குருவே. 9[illegible]

கருணையில் லாதார்-கடவுலகில் வானி
லருளையடை யாரென்-றருளியவென் சற்குருவே. 91

சாகாத கல்விமுதற்-சாற்றுகின்ற நால்வகையு
மாகாத லாலுறுஞ்சுன்-மார்க்கமென்ற சற்குருவே. 92

அருணிலையைப் பெற்றபொழு-தட்டமா சித்தி
மருவிக் கிடக்குமென்னும்-வாய்மையருள் சற்குருவே. 93

உடம்புவரும் வண்ணமெலா-மோர்விண்ணப் பத்திற்
றிடம்பெறவே வாசகமாச்-செப்பியருள் சற்குருவே. 94

உண்மைஞானி யின்றிறத்தை-யோர்விண்ணப் பத்தினிலே
வண்மையுறும் வாசகமாய்-வாய்மலர்ந்த சற்குருவே. 95

தமிழொன்றே யிவ்வுலகிற்-றந்தைபாஷை யென்றே
யமிழ்தமுறும் வாக்கா-லருளியவென் சற்குருவே. 96

ஈகாத லுள்ளோர்க்கே-யெவ்விடத்து மெந்நலமு
மாகாத தில்லையென்றே-யாய்ந்துரைத்த சற்குருவே. 97

எல்லா வறிவுமே-யெம்மறிவே யென்றுரைக்கும்
பொல்லார் குழாம்விடவும்-போதித்த சற்குருவே. 98

கன்மமே சன்மமாங்-கன்மமே மெய்க்கடவு
ளென்மரைச் சேராதீ-ரென்றருளுஞ் சற்குருவே. 99

சார்பலவா மாமாயா-சத்திகளே வத்துவென்போர்
சார்படையே லென்னுமுண்மை-சாற்றியருள் சற்குருவே. 100

கேசதமே சித்தமுண்ணிற்-கேடறமெய் நீடுமென்றே
வாசகமா யார்க்கும்-வழுத்தியவென் சற்குருவே. 101

செவ்வகையோர் காலென்று-செப்பியவோர் பாடலிலே
யிவ்வகையே கட்டமிலை-யென்றருளுஞ் சற்குருவே. 102

ஈடணைத விர்த்தநெஞ்ச-மேருங் கடவுளுக்கே
நாடவரு நன்னிலையை-நாட்டியருள் சற்குருவே. 103

ஆன்றுபத்மா சூரனுக்கா-வைவேலி யிற்புகுந்தா
னென்றுரைக்கு முண்மை-யியம்பியருள் சற்குருவே. 104

காரணத்தி ரண்டாகுங்-காரியத்தி லெட்டாகு
மாரணத்தி லவ்வுமவ்வு-மாமென்ற சற்குருவே. 105

ஆரணமு மாகமமு-மாய்ந்துரைத்த வுண்மையெலாம்
பூரணத்தைப் பெற்றாற்-பொருந்துமென்ற சற்குருவே. 106

மறப்புநினைப் பற்றநிலை-வந்தவிடத் தென்று
மிறப்பும் பிறப்புமிலை-யென்றருளுஞ் சற்குருவே. 107

சகலமுங் கேவலமுந்-தள்ளிநடு நின்று
விகலி லருணிலையே-யெய்துமென்ற சற்குருவே. 108

மனவாக்கு மெய்யான்-மனனமற்றுஞ் செய்யிற்
கனமாம் பொருளவையுங்-காணுமென்ற சற்குருவே. 109

ஆதார வாதேய-மாகும் பொருளறிந்தாற்
சூதான மாயை-தொலையுமென்ற சற்குருவே. 110

உருகிமனங் கண்ணீ-ருடனேயப் பெற்றால்
வருமரண நீங்குமென்று-வாய்மலர்ந்த சற்குருவே. 111

நாதாந்த மோன-நவநிலையைக் காணவரும்
போதாந்தாந் தத்தெளிவைப் போதித்த சற்குருவே. 112

காணும் புலாலுடம்பைக்-கற்பூர தீபமெனத்
தோணும் பதமருளுந்-தூயவென்றன் சற்குருவே. 113

எவ்வுயிருந் தம்முயிரென்-றெண்ணுகின்ற புண்ணியரை
யெவ்வுலகும் போற்றற்-கிசையுமென்ற சற்குருவே. 114

சுத்தம் பிரணவமுந்-துன்பமற்ற ஞானசித்தி
சித்த மகிழ்ந்தருளுஞ்-சிற்பரவென் சற்குருவே. 115

தொந்தத் தசியென்று-சொல்லுஞ் சுருதியுண்மை
பந்தநிலை நீங்கப்-பகர்ந்தருளுஞ் சற்குருவே. 116

காகூஷிக்கண் ணிக்கவியில்-காணுமீ தானநிலை
மாகூஷியுற வைத்தருளு-மாதவவென் சற்குருவே. 117

இருவினையொப் பென்னு-மெழினிலையுற் றுன்முன்
பெருவினைகள் பாறுமென்ற-பெற்றியருள் சற்குருவே. 118

மலபரி பாகமெனு-மாநிலையைப் பெற்றாற்
பலமுறுமஞ் ஞானமெலாம்-பாறுமென்ற சற்குருவே. 119

சத்தினிபா தப்பொருளாஞ்-சத்திபதி யப்பெற்றான்
முத்திசித்தி வாய்த்தன்-முறையென்ற சற்குருவே. 120

தற்போத நீத்தவர்க்குத்-தன்னருளைத் தந்தருளுஞ்
சிற்போத மெய்ஞ்ஞானச்-செல்வனெனுஞ் சற்குருவே. 121

குடும்ப விடும்பைக்-குவலயத்தோ ருக்கே
குடும்ப கோஷத்தினிலே-கூறியருள் சற்குருவே. 122

துன்மார்க்க சங்கந்-தொலைத்தருளைப் பெற்றுய்யுஞ்
சன்மார்க்க சங்கமதைத்-தாபகஞ்செய் சற்குருவே. 123

அனையுமா யப்பனுமா-யாரியனு மன்பா
லெனையெளிதி லாண்ட-விராமலிங்க சற்குருவே. 124

உபரஸ வேதியுற்ற-வுண்மையைநின் கையி
லபரமெனச் செய்தருளு-மற்புதவென் சற்குருவே. 125

எண்பதி னாயிரமு-மிங்கிரஸ வேதிசெய்து
வண்மையுறுஞ் சிற்சபைக்கே-வாய்க்கவருள் சற்குருவே. 126

தவலருஞ்சீர் சிற்சபையைத்-தாரணியோர் போற்றித்
தவநலமெல் லாம்பெறவே-தாபித்த சற்குருவே. 127

மருணலியச் செய்ய-வடற்சிற் சபையி
லருணடனங் காணற்கே-யன்புவைத்த சற்குருவே. 128

அருட்பெருஞ் ஜோதியென்ற-வாண்டவனைப் போற்றி
யிருட்பெரும் பாடொழியு-மென்றருளுஞ் சற்குருவே. 129

அருட்பெருஞ் ஜோதியென்ற-வாண்டவனென் றருந்
தெருட்பெருந் தெய்வமெனச்-செப்பியருள் சற்குருவே. 130

திருவருட் பாவிற்-றிருவடிப்பு கழ்ச்சி
பருவமில்லாக் காலம்-படிக்கவைத்த சற்குருவே. 131

பாடவகைக் கேற்ற-படிப்பில்லா நாயேனைப்
பாடவகை செய்தருளும்-பண்புடைய சற்குருவே. 132

உன்னருளாற் கீர்த்தனைக்-ளோதியதைப் பாடென்றே
நன்னயமாய்க் கேட்டருளு-நண்புடைய சற்குருவே. 133

சித்திபுரத் தென்பாற்-றிகழ்மேட்டுக் குப்பமதைச்
சித்தி வளாகமெனச்-செப்பவைத்த சற்குருவே. 134

தேக மயக்கமதைத்-தெண்ணீற்றி னாற்கணத்தி
லேகவருள் செய்த-விராமலிங்க சற்குருவே. 135

உன்றனக்குத் யோக-முதவுவேன் பின்பென்றே
யென்றனக் கன்போ-டியம்பியருள் சற்குருவே. 136

திருவாச கத்தின்-றிருவகவன் மூன்சொற்
கிருபா னிலக்கணங்க-ளீண்டருளுஞ் சற்குருவே. 137

தைப்பூச காலந்-தரிசனைசெய் வோர்க்கெல்லா
மைப்பூசுந் துன்னார்மயன்-மாறுமென்ற சற்குருவே. 138

மாசிமைத் திங்களிலே-வையகத்து நங்கெனற்கே
யாசிகலோ ருண்மை-யருளியவென் சற்குருவே. 139

முதற்பாக் குறளின்-முதற்றே யெனற்கே
முதற்கடவு ளென்று-மொழிந்தருளுஞ் சற்குருவே. 140

நூறவதா னஞ்செய்யு-நுண்ணறிவுள் ளந்தணர்க்குத்
தேறவரு முக்காலத்-தேர்ச்சியருள் சற்குருவே. 141

மூத்தரன்பாற் கொள்ளுகின்ற-மூவகையா ஞானசித்தி
யித்தகையென் றுன்னுருவி-லீடுதந்த சற்குருவே. 142

விடத்தை நடராசன்-விட்டுயவா னந்த
நடராஜ னீயென்னு-நாமமருள் சற்குருவே. 143

கண்கைக் ககப்படுதல்-கண்காண லின்மையுநின்
வண்கைக் கனியா-வடிவிலருள் சற்குருவே. 144

மாதவர்சேர் சித்தி-வளாகமதி லேமறைந்தா
யேதறிவே னுன்சித்த-மென்னுடைய சற்குருவே. 145

எந்நாளோ காண்பே-னெழிலார் திருமுகத்தை
யந்நாளே நன்னுளென்-றன்படைவேன் சற்குருவே. 146

கன்றுதன் றாய்ப்பசுவைக்-காணு தலமரல்போ
லின்றுமுனைக் காணும-லேங்குகின்றேன் சற்குருவே. 147

எந்தவகை செய்தா-லிணையடியைக் காணவரு
மந்தவகை யீதென்-றருள்செய்வாய் சற்குருவே. 148

பெருங்கருணை யாலே-பெறுநிலையைப் பெற்றும்
விரும்பிச்செய் யாது-மெலிவடைந்தேன் சற்குருவே. 149

சின்னஞ் சிறுவயதிற்-சிற்றடிய னென்றுண்டாய்க்
கென்னவெறுப் பின்றறியே-னென்னுடைய சற்குருவே. 150

எண்ணுத வெண்ணமெல்லா-மெண்ணியேங்கு கின்றவென்றன்
கண்ணரைக் காணவருங் காலமெதோ சற்குருவே. 151

எங்குநின் பூரணத்தை-யென்னுட்கண் டின்புற்றே
தங்குமசை யின்மைதனைச்-சார்வேனே சற்குருவே. 152

நித்தியமா மெய்ந்நிலையை-நின்னையன்றி யிவ்வுலகிற்
சத்தியமா யாருரைப்பார்-சாற்றியருள் சற்குருவே. 153

முன்செய் தவத்தான்-முகமலரைக் காணலுற்றும்
பின்செய்த தீமையினுற்-பேதுற்றேன் சற்குருவே. 154

பலவகைசெய் சித்திகளுட்-பண்புளநின் னன்பாற்
சிலவே சரித்திரத்திற்-செப்பியுள்ளேன் சற்குருவே. 155

சற்குருவைக் கண்டவர்க்குச்-சஞ்சிதமே யில்லையென்று
நற்குரவர் சொன்னபடி-நம்பியுள்ளேன் சற்குருவே 156

முன்பாடின் பாக-மொழிவார்பின் கற்றுணர்ந்தோ
ரென்பா டறிந்து-மிரங்கிலையே சற்குருவே. 157

கண்ணே றுண் டாகுங்-கனவினின்மெய் காட்டிலென்று
விண்ணே யெனுமருவாய்-மேவினையோ சற்குருவே. 158

தப்போ வனேகந்-தமியேன்செய் தேனெனினு
மெப்போது காண்பேனென்-றேங்குகின்றேன் சற்குருவே. 159

மாதர் வலையின்-மருவியே மாப்புற்றே
யாதரவில் லாதிங்-கலைகின்றேன் சற்குருவே. 160

வானங்கண் டாடு-மயில்போலே யென்றெனது
தானங்கண் டாடுந்-தரம்வருமோ சற்குருவே. 161

அருட்பாவி னுள்ள-வரும்பொருளை யோர்ந்தே
மருட்பாலை நீக்கும்-வகைவருமோ சற்குருவே. 162

துன்மார்க்க சங்கந்-தொலைத்துநினைப் போற்றுகின்ற
சன்மார்க்க சங்கமதைச்-சார்வேனே சற்குருவே. 163

உன்னு லெனக்காவ-தோரனந்தங் கோடியுண்டே
யென்னு லுனக்காவ-தேதுளது சற்குருவே. 164

முறையுண்டேற் கேட்கு-முறையுண்டா மென்னுந்
துறைவிட்டு வாணுள்-தொலைத்துவிட்டேன் சற்குருவே. 165

அலைகின்ற வென்னெஞ்-சடக்கநினை யன்றி
நிலையுலகி லுள்ளவரார்-நின்மலவென் சற்குருவே. 166

அன்னையுநீ யப்பனுநீ-யாரியனு யாண்டவனீ
யென்னையினிக் கைவிடவு-மெண்ணுவையோ சற்குருவே. 167

கண்வலியி னூலே-கவலைகொண்ட வென்கனவின்
மண்பரவு யாபுரத்தே-வாவென்ற சற்குருவே. 168

பணித்தபடி வாழைப்-பழத்தினு லன்பன்
குணித்தபடி யந்நோய்-குலையவைத்த சற்குருவே. 169

பருவினுற் றுன்படைய்ப்-பார்த்தே கனவிற்
றிருவோ கத்தினிலே-தீருமென்ற சற்குருவே. 170

கோவலூ ரின்கண்-குலவு நினதருக்கொண்
டாவலா யென்கனவி-லாளவந்த சற்குருவே. 171

சமரஸ மாம்பஜனை-தக்கபெயர் பெற்றாய்
சமரஸநா மாவளியைச்-சாற்றென்ற சற்குருவே. 172

சந்தைநுழை நாயென்னச்-சந்ததமு மூண்விழைந்தே
யெந்தைநினை யேத்தா-திடருழந்தேன் சற்குருவே. 173

ஒருகாலு நின்னடியார்க்-குற்றபணி செய்யா
திருகாற் கடாவென்-றிழைத்துழன்றேன் சற்குருவே. 174

காலமெலாம் வீணிற்-கழித்துழன்றே னுயிடினு
ஞாலமதி னீபொறுக்க-ஞாயமுண்டென் சற்குருவே. 175

கற்பனவுங் கற்றறியேன்-கற்றவர்பா லுற்றறியே
னற்பனைநீ யாண்ட-தருமையன்றோ சற்குருவே. 176

கேள்வியொன்றுங் கேளேன்-கெடுதிவிட்டு நல்வழியி
லாள்வினையில் லாவெனையென்-றாண்டுகொள்வாய் சற்குருவே. 177

தங்குமென் குற்றமெலாந்-தள்ளிவிடிற் கொள்வதற்கே
யெங்குமிட மில்லையென்றோ-வென்னைவிட்டாய் சற்குருவே. 178

பொற்பங்க யத்தின்-புதுநறவெ னுங்கவியி
னற்பயனை நாயேற்கு-நாட்டவருள் சற்குருவே. 179

கொண்டபின்புங் குற்றங்-கூறுவரோ வென்றான்றோர்
விண்டமொழி யெக்காலும்-வீணாமோ சற்குருவே. 180

கண்மணியே யென்றன்-கருத்தே கருத்திலுறும்
விண்மணியே விண்ணின்-வியனொளியே சற்குருவே. 181

அறிவே யறிவிலுறு-மானந்த மேநற்
செறிவும் பிறிவுமிலாச்-செம்பொருளாஞ் சற்குருவே. 182

பண்ணுரு நின்னருட்பா-பாடும் வகையருள
வெண்ணாயோ நாயேற்-கிராமலிங்க சற்குருவே 183

வாணாள்வீ ணாக்கழிக்கும்-வஞ்சமனத் தேனுக்குங்
கோணா நிலைசேர்-குணமுறுமோ சற்குருவே. 184

குற்றங் குணமாகக்-கொண்டருளு நின்றயவாற்
சொற்ற வருட்பாவின்-சூழ்ச்சியருள் சற்குருவே. 185

திரிகரணத் தான்மிக்கத்-தீவினைகள் செய்தே
யரியநின் பாதமலர்க்-கன்பில்லேன் சற்குருவே. 186

என்னேய மேற்காத-வென்னெஞ் சடங்குமா
றின்னே யருள்வா-யிராமலிங்க சற்குருவே. 187

தங்குகின்ற சீரருளுந்-தன்மையுள நின்னையன்றி
யெங்குமெனைக் கொண்டணைப்பார்-யாருமிலை சற்குருவே. 188.

நரைதிரையு மூப்புமுற்று-நாயேனா னுக்கே
கரைவுபெற வுள்ளங்-கலங்குகின்றேன் சற்குருவே. 189

கண்டோர் நகைக்குமிந்தக்-கன்மவுட லேமெனடுத்தே
னுண்டோவென் போலொருவ-ருத்தமவென் சற்குருவே. 190

விதிக்கும் விதியை-விலக்கெனவே-கொள்ளு
மதிக்கொருவ னாகி-மலைந்தொழிந்தேன் சற்குருவே. 191

மாதவத்தர் போற்றுமுன்றன்-மாணடியை யேத்தாது
தீதவத்தைப் பட்டுத்-திரிந்தொழிந்தேன் சற்குருவே. 192

கள்ளமுளே னென்றென்னைக்-கைவிட் டிடுவாயேல்
வள்ளலெனற் கெந்தவுரை-வாய்மலர்வாய் சற்குருவே. 193

காணாத காக்ஷியெல்லாங்-காட்டிவைத்துங் காணாதே
வூணாதிக் கேவீ-ணுழைத்துழன்றேன் சற்குருவே. 194

மனஞ்செல்லுந் தீய-வழிசென் றலைந்தே
யினஞ்சற்று மாறாம-லீடழிந்தேன் சற்குருவே. 195

மதியமுத முண்டு-மரணபய நீக்குங்
கதியைவிட்டு மூப்பிற்-கலங்குகின்றேன் சற்குருவே. 196

காலனையே நீக்குங்-கணக்குரைத்து மாமாயா
சாலந் தனிற்பட்டுச்-சஞ்சலித்தேன்-சற்குருவே. 197

எப்போ தொலையுமிந்த-வேழையேன் றுன்பமெலா
மிப்போ தெனவறியே-னென்செய்வேன் சற்குருவே. 198

மண்ணனற்சே ராதிம்-மலவுடலை நின்னருளால்
விண்ணடையச் செய்வதென்றோ-வித்தகவென் சற்குருவே. 199

பாராத பார்வையிலே-பற்றுவித்தும் பாராதே
பாராதி மூழ்கிப்-பலனொழிந்தேன் சற்குருவே. 200

உன்னைப் பிரிந்துமிந்த வூனுடம்பை வைத்துலவ
வென்னைப் பணித்தனையீ-தென்விதியோ சற்குருவே. 201

உன்முகத்தைக் காணாம-லுன்மத்தங் கொண்டலையு
மென்முகத்தைப் பாராத-தென்னறமோ சற்குருவே. 202

ஊன்புசிப்பை யுள்ளோ-ருடன்சேர வென்றென்னை
யேன்படைத்தா யிவ்வுலகி-லீதறமோ சற்குருவே. 203

கனவினினின் பொன்முகத்தைக்-கண்டபடி முன்போ
னனவினிலே கண்டுமகிழ்-நாளெதுவோ சற்குருவே. 204

தப்படியாற் றற்போதந்-தன்னாற் செருக்குமென்னை
யெப்படியில் வைப்பா-யிராமலிங்க சற்குருவே. 205

உன்னைத் தெரிசித்தோர்க்-கூழில்லை யென்னுஞ்சொ
லென்னைத்தள் ளிற்றோ-விராமலிங்க சற்குருவே. 206

உன்பே ரருட்கருணை-யுண்டென்பா லென்றறிந்து
மென்பேதை நெஞ்சகத்தா-லேக்கமுற்றேன் சற்குருவே. 207

உன்றுணை யுன்னைவிட-வோர்துணைநா யேற்கில்லை
நின்றுணை யென்றுமோ-நீதியுள்ள சற்குருவே. 208

அன்பாம் பொருள்கொண்-டணையவந்தா லவரதைத்
துன்பாரக் கொள்ளத்-துடித்தயர்ந்தேன் சற்குருவே. 209

இப்பிறவி தன்னில்வரா-தென்றுமழி யாதவின்ப
மெப்பிறவி தன்னில்வரு-மென்னுடைய சற்குருவே. 210

தோன்றாத் துணையாயித்-தொல்லுலகி லேயிருத்தற்
சான்றோமோ நின்கருணை-சாற்றியருள் சற்குருவே. 211

என்று தரவெனக்கிங்-கில்லையென நன்கறிந்திங்
குன்று தரவுகொண்டே வுய்கின்றேன் சற்குருவே. 212

எள்ளளவு நின்மகிமை-யெண்ணுதே னுயிடினும்
வள்ளனின் பேர்வழுத்தி-வாழ்கின்றேன் சற்குருவே. 213

எத்தனைநா ணின்வரவை-யெண்ணியெதிர் பார்ப்பேனின்
சித்தமதை நாயேற்குச்-செப்பியருள் சற்குருவே. 214

மூப்பாலே துன்பத்தின்-மூழ்கியிருக் கின்றவெனைக்
காப்பாரில் லாதே-கலங்குகின்றேன் சற்குருவே. 215

நீங்காத நோயா-னிலைகுலைந்து நிற்குமெனைத்
தாங்கா திருந்திடலுந்-தக்கதோ சற்குருவே 216

என்மேற் பராமுகமா-யின்னுமிவ ணீயிருந்தா
னின்மேற் பழிசுமத்த-நேருமென்றன் சற்குருவே. 217

வன்னிதியோர் பாற்சென்று-மாழாந்து துன்படைய
வுன்னிதய மென்பாலி-லொவ்வியதோ சற்குருவே. 218

உன்னைமறந் தாலென்-னுயிர்வாழா தென்றுணர்ந்தும்
பின்னையென் பாழ்நெஞ்சாற்-பேதுற்றேன் சற்குருவே. 219

எத்தனையோ குற்ற-மிழைத்திட்ட நாயேனை
அத்தனையு நோக்கா-தருள்பவரார் சற்குருவே. 220

ஒருவடிவுங் கொள்ளா-துனதுருவங் கொண்டுன்
றிருவடியே பற்றிநிற்கச்-செய்தருள்வாய் சற்குருவே. 221

நின்பாலி லென்னெஞ்சை-நிற்கச்செய் தாலுலகி
லென்பாலி ராதோடி-லென்செய்வேன் சற்குருவே. 222.

நினைப்புமறப் பற்றநிலை-நிற்கச்செய் தானெஞ்
செனைப்புறத்தி லீர்ப்பதிதற்-கென்செய்வேன் சற்குருவே 223

என்னு லடக்கும்வகை-யில்லையினி யென்மனதை
யுன்னு லடக்கு-முளவருள்வாய் சற்குருவே. 224

மனக்கேத மோர்கணத்தின்-மாற்றியெனைக் காப்ப
துனக்கே தகுமெனவென்-னுள்ளுணர்ந்தேன் சற்குருவே. 225

என்னேக்க மெல்லாமு-மென்னுள் ளறிந்திருந்து
மென்னேநின் னுள்ள-மிரங்கிலையே சற்குருவே. 226

மாத்தகையோர் தந்த-மனத்தை யடக்குதற்கே
ஆத்தனையே யேத்தி-யடைகின்றார் சற்குருவே. 227

விடாத்துன்பப் பாழ்ங்கடலில்-வீழாம லென்னைக்
கடாக்ஷஞ்செய் தாள்வாய்-கருணையுள்ள சற்குருவே. 228

பேதையுறு மென்னெஞ்சம்-பேரா திருக்குமொரு
சூதையறி வித்தாற்-சுகம்பெறுவேன் சற்குருவே. 229

ஆணவத்தைத் தீர்த்தென்னை-யாட்கொள்ள நின்னுருவைக்
காணவைத்தா லென்றன்-கலிதீருஞ் சற்குருவே. 230

உள்ளநய னஞ்சிவ-னுத்திருக்கச் செய்வித்தாற்
கள்ளமெலாந் தீரும்-கருணையுள்ள சற்குருவே. 231

பொன்புவிபெண் போற்றுகின்ற-புல்லர்கள்பாற் போகாதுன்
னன்புடையார் கூட்டஞ்சேர்த்-தாண்டருள்வாய் சற்குருவே. 232

கெடுவினைவைப் போக்கியருட்-கேள்வியைக்கேட் பித்து
நடுநிலையி னிற்குநெறி-நாட்டியருள் சற்குருவே. 233

கல்லான நெஞ்சக்-கலப்புள்ளோர் தம்முறவை
யெல்லா மொழித்திருக்கு-மெண்ணமருள் சற்குருவே. 234

புலைகொலையில் லார்கூட்டம்-பூவுலகி லோங்குந்
தலைநெறிசன் மார்க்கந்-தனையருளுஞ் சற்குருவே. 235

கனவி னனவிலுன்னைக்-காணக்கண் தந்தே
யுனதன்ப ரோடுமகிழ்ந்-தோன்றச்செய் சற்குருவே. 236

எத்தனைபேர் நோய்நொடியி-லேகவருள் செய்துமிந்த
மத்தனையே மாற்றிடுதென்-மாண்பாமோ சற்குருவே. 237

உன்னையொப்பா ரெந்த-வுலகினிலு மில்லைமேலோ
ரென்னையொப்பார் பாவிகளி-லில்லையென்றன் சற்குருவே. 238

உள்ளதனை யுள்ளபடி-யுன்றன்மா சந்நிதியிற்
கள்ளமின்றிச் சொல்லிக்-கலங்குகின்றேன் சற்குருவே. 239

கலங்கா வகையகத்தின்-கண்கொண்டு காணு
நலங்காட்டு வாளென்றோ-நன்கருள்வாய் சற்குருவே. 240

பாசமார்க்க நீக்கிப்-பரமகுரு நின்பதத்தின்
தாசமார்க்க மொன்றேனுந்-தந்தருள்வாய் சற்குருவே. 241

இதுதருணத் தாயினுமிவ்-வேழைமுனந் தோன்றி
பொதுவிலுப தேசம்-புரிந்தருள்வாய் சற்குருவே. 242

பொய்வாயுந் தீச்செயலும்-புன்னெஞ்சுங் கொண்டவெனை
யுய்வாயென் றென்பா-லுரைப்பவரார் சற்குருவே. 243

விதிசெய்கை மெய்வாய்-விடயமுறு நெஞ்சம்
வதியவெனக் கித்தருணம்-வந்தருள்வாய் சற்குருவே. 244

பெருங்கருணை யாளனெனும்-பெம்மானே யென்பால்
வருங்கருணை யின்றேனின்-வண்மையென்னே சற்குருவே. 245

எனையறியா நல்குரவை-யின்றுதொலைத் தென்னுள்
ளுனையறிந்தே யின்பமுற-வுன்னியருள் சற்குருவே. 246

பாவியெனை வாட்டும்-பவநோ யறவொழித்துக்
கூவியெனை யாளுங்-குறிப்பிலையோ சற்குருவே. 247

பகைசேரா வுள்வாயின்-பாங்கோர்தீ பத்தின்
தகைசேர வுன்னருளைத்-தந்தருள்வாய் சற்குருவே. 248

கண்ணார நின்றனையே-கண்டாற் கவலையெலாம்
விண்ணாரச் சென்றிடுமே-மேதகவென் சற்குருவே. 249

எனையாண்டு கொண்டதுண்மை-யென்னிலென் னெஞ்சந்
தனையாளா நின்கருணைத்-தன்மைநன்றே சற்குருவே. 250

சத்தியமா நின்மொழியைத்-தப்பாதென் றேயெண்ணி
நித்தியமுந் துன்பமுற-நீதியதோ சற்குருவே. 251

உலகநாட் டம்பலவா-யுற்றவிந்நா யேற்குக்
கலகமிலா மெய்வாழ்வு-காணுமோ சற்குருவே. 252

வீடுவிட்டுக் காடுசெல்லும்-வேளையினின் னோக்குமென்பா
னுடும் படியருளல்-ஞாயமன்றே சற்குருவே. 253

எல்லவரு மிவ்வுலகி-லெந்தைநின் மாணவரி
னல்லனென்பார் யானு-நடித்துள்ளேன் சற்குருவே. 254

செவ்வகையோர் காலென்ற-செய்யகவி யின்பொருளை
யிவ்வகையென் றென்பா-லிசைத்தருள்வாய் சற்குருவே. 255

தீக்கண்ட பஞ்சென்னத்-தீவினைக ளுருமென்றுன்
னோக்குண்டே னல்லோர்-நுவன்றிடுவார் சற்குருவே. 256

பற்றறுதல் வீடென்றும்-பற்றுவது பந்தமென்றுஞ்
சொற்றவவ் வண்ணர்-துறக்கவருள் சற்குருவே, 257

வடற்சிற் சபையை-வணங்குவோர்க் கென்று
முடற்சித்தி யுண்டென்- றுரைத்தருளுஞ் சற்குருவே. 258

உத்தரஞா னம்பெற்றுதற்-குத்தரசிற் சித்திபுரத்
தொத்தநெறி யுண்டென்-றுரைத்தருளுஞ் சற்குருவே. 259

வருநாளி லேதோ-வருமோவென் றேங்கா
தொருநா ளிருந்ததில்லை-யுத்தமவென் சற்குருவே. 260

ஏதிலார் போன்றென்னை-யெண்ணும விம்மையிலே
சூதிலா மெய்ந்நிலையிற்-றோயவருள் சற்குருவே. 261

எண்ணவரு மென்பிறவி-யெத்துணையு மென்பிழைக
ளெண்ணவரா தென்னினுமீ-டேற்றியருள் சற்குருவே. 262

இப்படியி லென்னைமுன-மேன்றுகொண்டு மின்படையா
திப்படியோ துன்புறுவே-னென்னுடைய சற்குருவே. 263

எந்தவினை செய்தாலு-மேதவத்தைப் பட்டாலுஞ்
சிந்தைநின் பாலிருக்கச் செய்தருள்வாய் சற்குருவே. 264

சீர்பரவுன் பாதநிழல்-சேரும்வரை யுன்றனடி
யார்பணியே செய்திடுமெய்-யன்பருள்வாய் சற்குருவே. 265

வாழ்கவிவ் வையகமும்-வானகமு மற்றவுமே
வாழ்க திருவருட்பா-வாய்மலர்ந்த சற்குருவே. 266

சற்குரு புலம்பற் கண்ணி முற்றுப்பெற்றது.

திருவருட்பிரகாசவள்ளலார் திருவடியே சரணம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி-தனிப்பெருங்கருணை.

திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம்

ஸ்ரீமத் - இராமலிங்க சுவாமிகள்

திவ்விய

# பாதார்ச்சனைக் கீர்த்தனைகள்.

வெண்பா.

சீராரும் ராமலிங்க தேசிகன்பா தார்ச்சனையை
யோராருங் கீர்த்தனையா யேத்தவரம்—பேராரு
நந்திமுத லோர்பணியு நாதனரு ளைந்துகரத்
தந்திமுகன் தந்தருள்வான் றன்.

1 - வெண்பா.

அருளே யிலக வடியே னஞ்ஞான
விருளேக வேத்துகின்றே னென்றுந்—தெருளே
விராவுடற் சிற்சபையில் வீற்றிருக்குந் திவ்ய
விராமலிங்க தேவனை யே.

1 - கீர்த்தனை. இராகம் - செஞ்சுருட்டி - ஆதிதாளம.

பல்லவி.

இராமலிங்கதேவா- இராமலிங்குவாவா

அனுபல்லவி.

தராதரம்பாராமலிரந்தத்-தராதலம்பராவவந்த இராம

சரணங்கள்.

1 ஈடணையற்றவிடை-யிடமரற்குற்றவிடை
நாடினர்தமக்கிருள்-நாடிலையெனவருள். இராம

2 மேலைப்பாலினிற்றலம்-மேவப்பாலினிற்பலம்
சாலப்பிறப்பைவெல்லும்-சாதகமெனச்செல்லும். இராம

3 திரயோதசநிலை-தெரிவேமருளிலை
திகழ்நவநலமன்னுந்-திருநடநிலமென்னும். இராம

4 மலப்பிணியுறுமாக்கை-மாளாதவகைதீக்கை
பலப்படநாயேமுய்யும்-படித்திருவருள்செய்யும். இராம

5 மருவிருவினையொன்றாய்-மலபரிபாகநன்றாய்
வரவருணலஞ்சேர-மரணசனனந்தீர. இராம

6 சாதிபேதமுன்னுஞ்-சழக்கைவிட்டிடப்பன்னும்
நீதியறிந்துமின்னும்-நெறிநிலாவெங்கண்முன்னும். இராம

7 வடல்வெளியினிற்சித்தி-வழங்கிடுமெனநத்தி
இடரின்றித்துதித்திரு-மென்றுரைசெய்சற்குரு. இராம

8 மூலமழியாச்சுத்த-ஜோதிநாதசித்த
கோலமடைந்துசூழ-கோதிலருளால்வாழ. இராம

---

## 2 - வெண்பா.

பார்க்கும் பருவமிலாப் பாவியெனக் கென்றுண்டாஞ்
சேர்க்கும் வகைதான் தெரியாதோ—வீர்க்கு
மருணலியச் செய்யாதோ வள்ளலே யார்க்குங்
கருணை புரிந்திடுநின் கண்.

கண்ணிகள்.

2 - வது கீர்த்தனை. இராகம் - சங்கராபரணம் - சாப்பு - தாளம்.

கருணைபுரிந்திடுங்கண்ணே-கலைநிலைமுடிவருள்வண்ணே
தருணமிதெமக்கருள்விண்ணே-சற்குருராமலிங்கவண்ணே. 1

இருவினையுலையதிகாரா-இணையிலொளிவளர்சிங்காரா
திருமருவாரவதாரா-திகழ்ராமலிங்கவுதாரா. 2

திருவருட்பிரகாசவுருவே-தெருளமுதந்தருதிருவே
திருவருட்பாவருள்தருவே-திவ்யவிராமலிங்ககுருவே. 3

வடற்சபைஸ்தாபகநாதா-வழிதுறைநிலைதெரிநீதா
கடற்புவிகடந்தப்ரக்யாதா-கதியருள்ராமலிங்கதாதா. 4

மநுமுறைகண்டவாசகமே-மதிநலமருளுஞ்சூசகமே
உனுமதமலவிமோசகமே-உரைராமலிங்கதேசகமே. 5

சன்மார்க்கத்தவருறையூரா-தத்வதாத்வீகஞ்சொல்வீரா
துன்மார்க்கர்க்கறிவருந்தூரா-தூயவிராமலிங்கதீரா. 6

சுகவருளமுதங்கொள்துய்யா-சுந்தரப்பிரணவமெய்யா
இகபரமுறுசுகநையா-தெமக்கருள்ராமலிங்கவய்யா. 7

ஆறந்தமுடிவருள்வானே-அன்பரிதயாம்பரத்தேனே
மாறந்தவினைதெறுவோனே-மதிநலராமலிங்கக்கோனே. 8

இக்கரைகடக்கிலக்கரையே-யிலகுஞ்சிதம்பரசர்க்கரையே
எக்கலைநிலைமுடிவுரையே-யெனவருள்ராமலிங்கதுரையே. 9

சத்தர்பராவும்பிரக்யாதா-சமரசஞானமெய்ப்போதா
வித்தகர்துதிக்கும்விநோதா-வீரியராமலிங்கவேதா. 10

போதங்கடந்தபுத்தகமே-புத்தமுதருந்துஞ்சித்தகமே
வாதமயலறுசத்தகமே-வயங்கும்ராமலிங்கவித்தகமே. 11

கண்டவருளங்கவர்காவே-களங்கறுமுளங்கிளர்பூவே
பண்டருபாவலர்கோவே-பலனருள்ராமலிங்கதேவே. 12

உலகெலாமென்பதன்பொருளே-உரைசெய்தத்துவத்தெருளே
உணராதமாந்தர்களிருளே- ஒழித்தருள்ராமலிங்கவருளே. 13

மருணெறியகற்றுந்தற்பரனே-மதமறுநிலையுரைதரனே
அருணெறிவிளங்குஞ்சிற்கரனே-அமலவிராமலிங்கவரனே. 14

எம்மையித்தருணத்திற்காவா-திருப்பதறமோவினிவாவா
இம்மையேயிவ்வுடற்சாவா-இயலருள்ராமலிங்கதேவா. 15

மாதவத்தர்போற்றுமநாதி-மதிநெறிவாழவருட்ஜோதி
போதகித்தமானநன்னீதி-புரியுமிராமலிங்கவாதி. 16

---

3 - வெண்பா.

:கத்தில் விளங்குஞ் சகல வுயிர்க
ாகத்தில் விளங்கு மரசே—யிகத்தி
புடற்சவம தாகா வுளவருளிச் செய்ய
வடற்சபை ஸ்தாபகவா வா.

3 - வது கீர்த்தனை.

இராகம் - இந்துஸ்தான் காபி - சாப்பு - தாளம்.

கண்ணிகள்.

வடற்சபைஸ்தாபகவய்யா-வளர்
மருதூரவதரித்தமெய்யா-மிகுதுய்யா
சடத்தோடடையுங்கதி- சாரவெம்மனோர்க்கருள்
தருவே-திருவே-இராமலிங்ககுருவே. 1

கற்றறிவாளரைச்சேரும்-வகை
கலியினிலெமக்கின்றுநேரும்-படிபாரும்
உற்றறிபொதுவினி-லுயிரெலாமொன்றென்ற
உரையே-வரையே-இராமலிங்கதுரையே. 2

கன்மனமெம்வசமாக-நங்கள்
கனத்தவைம்மலங்களும்போக-வருளாக
வன்மதங்கடந்தசன்-மார்க்கமுதவவிங்கு
வந்தாய்-தந்தாய்-இராமலிங்கவெந்தாய். 3

எந்திரத்தினிலிக்கைப்போலே-பவத்
திணைந்துநொந்தேன்துன்பத்தாலே-யிகமேலே
சந்திரனென்றங்கி யுந்துறுநிலையருள்
தரமே-திரமே-இராமலிங்கபரமே. 4

வயிறுவளர்க்கவுண்டிதேடி-மிக
வறுமையினுலெங்குமோடி-முகம்வாடி
உயிர்பரமுலகறி-யோமுக்காவெளிவந்த
உறவே-திறவே-இராமலிங்கநறவே. 5

கொலைபுலையொழித்திடுங்கூட்டம்-எங்கும்
கூடிவாழ்ந்திடவெங்களுட்டம்-செய்தேட்டம்
நிலைபெறவினிதருள்-நித்தியவான்வளர்
நேயா-தூயா-இராமலிங்கதேயா. 6

பகிர்முகப்பார்வையைப்பாற-இந்தப்
பாரினின்மேனிலையேற-விதிமாற
மகிமைநிறைநின்றிரு-வாய்மலர்ந்தருள்செய்யும்
வரனே-திரனே-இராமலிங்கபரனே. 7

சாதிபேதநிலைதாண்டும்-உயர்
சன்மார்க்கநெறிதனைத்தூண்டும்-மிகவேண்டும்
ஜோதிநாதபக்த-மாதவர்கூட்டமெத்
துறைவாய்-நிறைவாய்-பெறமகிழ்ந்தறைவாய். 8

4 - வெண்பா.

கடல்சூழிக் காசினியிற் காலமெது வென்றே
திடமின்றித் துன்புற்றேன் தீர்ப்பாய்—வடல்வெளியின்
மாமைநேர் சிற்சபைசெய் வள்ளலே முன்போல்வந்
தேழையேங் கட்கருள வே.

4 - வது கீர்த்தனை. இராகம் - தோடி - திசிர தாளம்.

பல்லவி.

ஏழையேங்கட் கருள்செய்துய்யனே-ஸ்ரீராமலிங்கையனே
ஏழையேங்கட் கருள்செய் மெய்யனே.

அநுபல்லவி.

மாழைப்பொதுவினி-னடஞ்செய்தீபக
மணியைவடலின் வெளியிற்றுபக ஏழை

சரணங்கள்.

1 தேனார்மணந் திகழ்மலர்ப்பதனே-அற்புதனே
திகழ்நவநிலை தெரிக்குஞ்சிற்பதனே
மானார்மயனீக்கும்யோகா-மதிசெய்யமுதந்தேக்கும்போகா
வானார்தவ-மருவிடும்வகையருள்தியாகா
ஊனார்மல-மொழிதர நிலவிடுமேகா. ஏழை

2 வேதாதிய வித்தகர்க்காரியனே-வீரியனே
விதிதெறுநல முதவுஞ்சீரியனே
ஓதாவுணர்வு தொகுத்தநீதா-உத்தரசபை வகுத்ததாதா
வேதாகம-விரிவுள வுரைதருமேதா
சூதானமெய்-வினைவுறு சுகநிலையோதா. ஏழை

3 கருணாகர காரண தன்மயனே-சின்மயனே
கருதுமெய்யன்பர்க் கருளுநன்மயனே
திருநாளளவை விரித்தசீலா-தெய்வநிலைமைபத்தெரித்தமேலா
அருணாடக-வடைவிட மிதுவெனுமூலா
இருணாடெம-திருவினையுலையனுகூலா. ஏழை

4 ஆறுமுடிவின் முடிவைச்சொற்றவனே-நற்றவனே
அகவிருளறு மவையத்துற்றவனே
நீறுநிறைய மிளிறுந்தாரா-நிர்விகற்பநிலை யொளிருந்தீரா
ஆறுமுகஞ்செய்-தனைவரை மருவுமுதாரா
வீறுமகந்தை- விளைவறவருமவதாரா. ஏழை

5 சன்மார்க்கமெய்ச் சாதனத்தின்பயனே-சொன்னயனே
தகரமெய்ஞ்ஞானத்-தனிவெளியின்வயனே
பன்மார்க்கத்தர் பரவுந்தூயா-பரையருளொளி விரவுந்தேயா
துன்மார்க்கத்தர்-துரிசற வுரைசெயுபாயா
துரியநடுவின்-சுகவெளி யுளவருணேயா. ஏழை

6 கொலைபுலைதவிர் குணமுறைதரனே-தற்பரனே
குலந்தொண்ணூற்றுறங்-குலமெனுந்திரனே
தலைநெறியிது வரமெனுந்தியாகா-சமரசநிறைமாவனுபோகா
மலையிலக்கென-மதிநிலை யுதவுவிவேகா
மரணந்தவிர்க்கும்-வணமருளுசிதவைபோகா. ஏழை

7 தோத்திரத்தினிற் சாத்திரஞ்சொன்னவனே-நன்னவனே
தொம்மசி தத்துரு சுகவெளிபன்னவனே
நேத்திரநடுவிற் சித்திக்கும்வானே-நிமலரறிவிற்றித்திக்குந்தேனே
சாத்தியஞான-சகசமிதெனவருள்வோனே
மாத்திரமோன-வரைவெளி யுறுதவர்கோனே. ஏழை

8 ஆலமமுது தாக்கிடும்வல்லவனே-நல்லவனே
அவிசொரிமக-வகையின் சொல்லவனே
ஞாலம்புகழுயர்-ஞானஜோதி-நாதபக்தர்க்குற வானநீதி
சாலவுரைக்குந்-தகவுறு தனிவருவேதி
சீலநிரைக்குந்-திருநிலை நெறிதருமாதி. ஏழை

5 - வது வெண்பா.

சங்குந் தரளமுஞ்செந் தாமரையுஞ் சார்செங்காற்
றங்கும் வடற்சபைவாழ் சற்குருவே—யெங்கும்
பொதுவிலுறு நின்கருணை பொய்யாமே வள்ளால்
இதுதருணம் வந்தருளா யேல்.

5-வது கீர்த்தனை. இராகம்-காம்போதி-சாப்பு தாளம்.

பல்லவி.

வள்ளால்-இதுதருணம் வந்தருள்வாய்
மகிமைநிறைதரு-மாதவத்தினர் மருவமகிழ்வுகொள்
வடலில்வளர்திரு வருட்பிரகாச வள்ளால்

அநுபல்லவி.

தெள்ளமுதமதி- யுணவுபெறுயோகா-சாகாத்
திருநெறியடையும்-வழிதுறைநிலையும்
செறிமனமடக்குந் திறமுமருள். வள்ளால்

சரணங்கள்.

1 மாதவ ருறையுமருதூரா-மதிமார்க்கியருமத
வாதியரும் வணங்கிடுமுதாரா-உயர்
வேத-முடிமிசையிலகு-பாத னரியவிலக்கணம்
ஓதக்கலியுகத்-தினில்விளங்குமெய்ப்
போதனெனப்பெரி-யோர்புகழும் வள்ளால்

2 சீலமு ளாருக்காரியனே-மிகுதீரஞானசிற்
கோல மருவுஞ்சீரியனே-யிரு
ஞாலம் பரவுதிருவருட்-பால தெனவிளங்கிடும்
நூலதனைப்பெருங்-கருணையாலருள்
மேலவனெனமெய்த்-தேவர்புகல். வள்ளால்

3 கோரசம் சாரவேதனையும்-பலகோடிப்பவஞ்செய்யுந்
தீர நிறையும்வேதனையும்-எமைச்
சேர விடாதுசிற்சுகம்-நேரநிலாவுநிறையதி
காரவமலவ-ரோதயமிகுகெம்
பீரசற்குரு-ராமலிங்க. வள்ளால்

4 ஜோதி பிறங்குசிற்சபையும்-விதிசோருமார்க்கமெய்ந்
நீதி நிறையுநற்சபையும்-அருள்
வேதி யெனவிரைந்தெம-ஞதி மலமெலாந்தெறுங்
கோதிலரியமெய்ஞ்-ஞானியென்னும்பிரக்
யாதியெங்கணும்-மோதவரும். வள்ளால்

5 வான முலாவுஜோதியனே-சன்மார்க்கசமரச
ஞான நிலாவுநீதியனே-பவ
தீன ரெமையுங்கடைக்கணித்-தூனமிலாதநயனப்ர
தானமருள்செய்-மகாதயாபர
னைசற்குரு-ராமலிங்க. வள்ளால்

6 ஞான விஞ்ஞைதற்பரனே-உறுநவநிலைகடந்த
மோன விலாசசிற்பரனே-உரு
வான தொம்பதமுமரு-வானதற்பதமுமின்
பானவசிபத-நடமுமவையமர்
தானவகையருள்-ராமலிங்க. வள்ளால்

7 வாரமு ளாரினத்தவனே-மலமைந்தும்வென்றிடு
வாரக மார்மனத்தவனே-கதி
சேர விரும்புவோர்க்குபகார-கனகமினிருரு
வார விளங்குஞ்சிங்-காரஞானவு
தார சற்குரு-ராமலிங்க. வள்ளால்

8 மாயையிகந்த மாதவனே-வெம்மரணமொழிக்குமு
பாயமுகந்த மாதவனே-மிகு
தூய சுகுணவான்மச-காய நிமலமுறையரு
வாய தகரா-காயமருவிய
தேய சற்குரு-ராமலிங்க. வள்ளால்

---

௶ - வெண்பா.

என்புந்தி யில்விளங்க வின்றே யிரங்கியருள்
வன்புந் திருகுஞ்செய் வன்மனத்தான்—முன்புஞ்செய்
தீதாமென் தீவினையைத் தீர்த்துய்ய ராமலிங்க
நாதாவென் றேயருள்செய் நாள்,

6-வது கீர்த்தனை. இராகம்-உசேனி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

நாதாவென்றேயருள்செய்வாய்-ஸ்ரீராமலிங்க
நாதாவின்றேயருள்செய்வாய்.

அநுபல்லவி.

மாதவர்நித-மேத்தும்வியாபக
வடல்வெளிச்சித்தி-புரத்தாபக. நாதா

சரணங்கள்.

1 நாத்திகமுதற் கேவலமதம்-நாங்கள்சென்றடையாதநல்விதம்
நடத்தவவதரித்தருணின்பதம்-நண்ணிடுந்தரமோ
ஆத்திகவை தீகசமயம்-அடைவித்ததில தீதவமயம்
அருளுமுபாயா-ஆன்மசகாயா-அகவினத்தர்நேய. நாதா

2 மரங்கன்மணவெனி லருச்சனைகோயில்-மாதவர்பதப்பரிசமாமாயில்
வான்பதமுறு மென்றுமாயில்-மகிதலமுறைக்கும் [னைச
திரமானிடமெடுத்து நின்னருளைத் - தெரிந்திடாததென்பாவமெம்மிரு
செகுத்திடலாமா-சிறியேமாலாமா-சிற்சுகப்பெருநாம நாதா

3 வேகாக்கால் சாகாத்தலை-போகாப்புன லெனுமுயர்கலை
விளம்பற்கரிய மிகுபெருநிலை-விளக்கியவிபுவே
தேகாதிமுப் பொருளையுநின்பால்-தெரிந்தளிக்குமுனவறியாவன்பால்
திடஞானம்வருமா-திருவுளந்தருமா-திகழ்பரமதரும. நாதா

4 தொம்பதவுரு தற்பதவெளி-தோன்றசிபத நடமும்முன்னொளி
துலங்குந்தலத்தி லுறும்பெருங்களி-தோயுமென்றுரைக்கும்
உம்பர்முனிவர் யோகர்க்கரிய-வுயர்நிலைதெரித்துமதற்குரிய
உளவறிவோமா-உண்மையறிவோமா-உணர்வரியவியோம. நாதா

5 காரணமிது காரியமிது-காரணகாரியப்பொதுவிது
கலைமறையா கமஞ்சொலுமது-கணிப்பதற்குறுமோ
பூரணவனு பவமுறிற்கனப்-பொருளவைகணத் தறிகுவையெனப்
புகன்றிடுமேலா-புகழ்தவசீலா-புலிக்கோரனுகூல. நாதா

6 உயிர்க்கொலைபுலைப் புசிப்புடையவர்-உறவினரல ரறக்கடையவர்
உரைபெரும்பாதக நடைய[illegible]க்-குறினுமெவ்விதத்தும்
பயிர்ப்புறுபசி மாத்ரநீக்கப்-பண்புரையுநண் புதவும்போக்கப்
பணித்திடுவேதா-பவநெறியோதா-பதிநிலைமெய்ப்போத. நாதா

7 நீதிதருசன் மார்க்கமென்று-நின்றிடார்க்குறு கதியிலையென்று
நிகழ்த்துஞ்ஜீவகா ருண்யக்கலையொன்று-நிலைமிகவறியும்
ஜோதிநாதபக்த பாலஸமாஜத்தர்-சுகநிலைநெறிபெறுஞ்சன்மார்க்கத்தர்
துதிபெறுநீதா-சுருதிமெய்ப்போதா-சொல்லரும்பிரக்யாத. நாதா

8 கந்தநாண்மலர்க் கழலிணைநிதம்-கருதுமிரக்கத் தவர்க்கரும்பதம்
காட்டியென்றுஞ் சாகாதமெய்விதம்-கருணையோடளிக்க [ரை
வந்தருள்காலங்கடிகையிரண்டரை - வகுத்தவுண்மையறியாததொண்ட
வாழ்விக்கவருவாய்-வடலினிற்றிருவாய்-மலர்ந்தபடிவருவாய். நாதா

சுரம் - சாகித்யம்.

ரீகாமாபாமகரிநிசா-கரீகாமப-காபமபகாரிசநிசா
மேலாருதாரமறிகுவார்-நினையல்லதோர்-மேலவரையாமறிகிலோம்
நிகமகரிகரிச-பமகமரிகரிச- ரிரிககமமபபததபம
மிளிர்மதியிரவிய னலினியலறிவரு-விதமுறவடலினிதமர்திரு
பதபகரிச-நிதபநிதம-பததநிநிச-ரிநீதபம
மிகுசபையுத-வொருகுருபர-விதிவழியினி-யுருதுமதி
பசா-பதா-மபமகரிச நா-தா-நீ
விடா-நிதா-னமதினிதுற. ரீ-கா-மா

---

## 7 - வெண்பா.

சத்தியவான் வார்த்தையிது தானுரைத்தே னென்றுநெஞ்சே
யித்திசையில் வந்தே யியம்பியவோர்—சித்திபெலா
மின்றே பெறலாமவ் வெம்பெருமான் பாதமலர்
நன்றே நினையனுதி னம்.

7 - வது கீர்த்தனை. இராகம்-பரசு-சாப்பு தாளம்.

பல்லவி.

நினையனுதினமே-நிலைபெறமனமே

அநுபல்லவி.

தனைநிகரருஞ்சித்தி-தருமொருகுருசத்தி. நினை

சரணங்கள்.

1 விதியைத்தடுப்போம்-மதியைத்தொடுப்போம்
பதியையடுப்போம்-கதியைக்கொடுப்போம்
• ததியிதெனுந்தனித்-தலைவனைமறவாமல். நினை

2 சாகாச்சத்தகம்-யோகாச்சித்தகம்
போகாச்சுத்தகம்-ஏகாவித்தகம்
மாகாதலொடுமகா-மந்திரமருள்வானை. நினை

3 ஆதிமெய்வேதம்-ஓதியகீதம்
நீதிலாப்போதம்-நீதிசெய்கீதம்
சோதியாதருள்செய்யுந்-தூயோனையன்பொடு. நினை

4 குன்றியவிருட்பா-லொன்றியமருட்பா
வென்றிசெய்தெருட்பா-நன்றியலருட்பா
நன்றியாச்செய்வடல்-மன்றருளெந்தையை. நினை

5 பொய்யாதவாரம்- நையாததீரம்
எய்யாவிசாரம்-கையாதசாரம்
செய்யாமற்செய்தநந்-தேசிகனிணையடி. நினை

6 சத்துவபத்தி-தத்துவசுத்தி
அத்துவசத்தி-தத்துவமுத்தி
நத்துவோர்க்கருள்குரு-நாதனடிவணங்கி நினை

7 கற்றவரின்பலம்-பற்றறுதனலம்
நற்றவரின்புலம்-அற்றமிலின்னிலம்
பெற்றதுபேறெனும்-பெருமானைமிகநம்பி. நினை

8 உருவருசத்தி-உருவருமுத்தி
அருவியல்சித்தி-மருவுவியத்தி
பெருநெறிபுகலருட்-பிரகாசன்றனை மலர். நினை

---

8 - வெண்பா.

சந்ததமும் பொய்வாழ்விற் சார்ந்தநமை நெஞ்சேபொய்ப்
பந்தமதி லாழாப் பதமருள—நந்தம்
மருணலியச் செய்யகுரு வள்ளலே வந்து
கருணைசெய நற்றருணங் காண்.

8-வது கீர்த்தனை. இராகம்-சாவேரி-ஏக தாளம்.

பல்லவி.

கருணைசெய்ய நல்லதருணம்வந்தருள்
கலாதர-சுகுணதர-சுகாதரனே.

அநுபல்லவி.

கருமமா தருமமா தவமோனக
கனமுமார்க்க நான்குமரியமெய்ஞ்ஞானக்
கதியின்சுத்தமாதி சித்தியுந்தரக்
கணித்த சித்தவருட்பிரகாசகுருபர கருணை

சரணங்கள்.

1 அருமறைப்பொரு ளறிந்தொழுகுநலமும்- அடையும்பலமும்
அகவினத்த ரெவர்களுக்கு மமர்நிலமும்
அருக்கனங்கி யம்புலிதருமலைவும்
அமையுமண்டபிண்ட மதறுமலைவும்
அகற்றவெட்டிரண் டாகியகாரண
மனைத்தையும்புகன் றேகியபூரண. கருணை

2 * சாகாத்தலை பதிவித்யாககலையே-சகசநிலையே
† வேகாக்கா லான்மசாந்திக்கலையே
‡ போகாப்புனல் ஜீவப்ரதிஷ்டாகலை
புகலுங்காரணுக்னி வாயுதகநிலை
ஏகாதவொன் றிரண்டின்காரிய
வியனவின்றமெய் யகண்டவாரிய. கருணை

3 தோன்றுபரசாக்கிரமுதலெழுவரையும்-சொல்லெழுதிரையும்
சோபானமா மூன்றுநான்குதரையும்
சோதியாதென் போன்றவர்க்குமோனத்தின்
சொரூபமும்பெரிய வெளிமீதானத்தின்
துலங்கதீதத்தின் றுரைகைவிரிமலைவற
தூயபோதத்தின் வகைசுகநிலையுற. கருணை

4 தண்ணீர்விளக் கெரித்ததவகதியே-தருணநிதியே
தாரணியிலெவ் வெவர்க்குமருள்மதியே
தவறிலாதசுக நிலாவவுறைந்த
சமரசானந்த ஷடாந்தநிறைந்த
தகமையெங்குமா யிலங்கதிருவே
தீரவுவந்த ராமலிங்க குருவே. கருணை

---

* சாகாத்தலை பதி-வித்யாகலை காரணுக்னி அருளானந்தம்.
† வேகாக்கால் ஆன்மா சாந்தியாகலை-அன்பு காரணவாயு.
‡ போகாப்புனல் ஜீவன்-பிரதிஷ்டாகலை, இரக்கம் காரணோதகம்.

## 9 - வெண்பா.

கோருகின்ற நல்லவரங் கூடுநெஞ்சே குற்றமெலாந்
தீருமென்றெத் தேசத்துஞ் சேர்ந்துள்ளார்—யாருந்
திருநாம மாய்த்யானஞ் செய்ராம லிங்க
குருநாதா வென்றேநீ கூறு.

9-வது கீர்த்தனை. இராகம்-கமாஸ்-திச்ர தாளம்.

பல்லவி.

இராமலிங்ககுருநாதா-சன்மார்க்கபோதா
இராமலிங்ககுருநாதா. இராம

அநுபல்லவி.

இராவுலைய-தராதலத்தில்-விராவுமன்பர்-பராவவந்த இராம

சரணங்கள்.

1 மதிநதியணிசடை-மறைத்தொளிர் தீரா
மதிநலமுறைதர வருமொரு வீரா
மதிசோராப்-பதியூரா-வதிகாரா-துதியார்க்குத்தூரா. இராம

2 நவநிலைமேல்வெளி-நவில்மரு தூரா
தவநெறிநடுவிது முளெனுமு தாரா
பவஞ்சாரா-வகைநேரா-யருள்தாரா-பிகமகிழாதாத. இராம

3 பலகலைநொடியறி விதமருள் புலவா
புலமிலியெமதிரு வினையுலை வலவா
பலகோலா-கலசீலா-தவமேலா-பரமானுகூல. இராம

4 சுரர்முனிவருலகர்-புகழும்பிரக் யாதா
பரவறிவறிய வியல்புரியு நீதா
திரமேதா-வியர்நாதா-கலையோதா-வுணர்வருள்சிற்போத. இ

5 நரைமரணமொழிதர-வருளு பாயா
வரையிலுயர்குல மிதுவெனச்சொல் வாயா
பரைதேயா-மிளிர்தூயா-வருணேயா-பக்தர்கள்சகாய. இராம

6 மோனமேலேழ்வெளி-வரைசொலு வந்தாய்
வானமேன்மயில்குயி லெனுநிலை தந்தாய்
முனமிந்தா-வெனவந்தா-யெமக்கெந்தா-யின்றேறங்குவதிந்தாய்

7 ஓதருவுருவுட-னிலையுரை வேதா
கோதறுமுளமுறை சுகுணவி நோதா
உயர்தாதா-சமபோதா-இரங்காதா-எளியேன்மேல்வாதா. இ

8 வடலினின்னுரைப்படி-யெமக்கென்று நேரும்
படமுடியாதினி யிடரெனக் கோரும்
வரமாருந்-திரந்தாரும்-பலரேரும்-பதஞ்சாரப்பாரும். இராம

---

10 - வெண்பா.

மந்தவுல கிற்பல்லோர் வந்தவகை யாயாமற்
பந்தமதி லாழ்ந்தே பலனிழந்தா—ரெந்த
நிதியுமெண்ணு தென்குருவை நெஞ்சே கருணை
நிதிநீ யெனக்கசிந்து நில்.

10-வது கீர்த்தனை. இராகம்-காப்பி-ஏகதாளம்.

பல்லவி.

கருணைநிதி நீயெனக் கசிந்துளோர் தமைக்
காதலிக்காதது ஞாயமா.

அநுபல்லவி.

காரணகாரியக் கலைதெரித்திடுமுனைக்
காணக்கருதுதலஞ் ஞாயமா. கருணை

சரணங்கள்.

1 மரணசனனமொழி-வகையருளியுலகில்
மறைந்திருப்பதுமொரு ஞாயமா
மரகதமயிலொளி-மணிக்குயிலெனுமொழி
மருவவிரும்புதலஞ்-ஞாயமா. கருணை

2 மதிநிலையெமக்குறும்-வழியுரைத்திடவிங்குன்
வரவைத்தாழ்த்திடுதல்-ஞாயமா
மனவலைவடக்கிடும் வணமருளெனநினை
மனனஞ்செய் திருப்பதஞ்-ஞாயமா. கருணை

3 ஆறத்துவாநிலை யகன்றவோரனுபவ
வடைவருளாததென்- ஞாயமா
ஆறந்தமுடிமுடி வாந்திருவருட்பாவின்
அகப்பொருள் விளக்கலஞ்-ஞாயமா. கருணை

4 அருட்பிரகாசவள்ள லெனவுதித்தமெம்வினை
அகலாதிருப்பது-ஞாயமா
அகிலமதிலுயிரோ டடைந்தவரெழுவரென்
றதன்பொருள்தெரித்தலஞ்-ஞாயமா. கருணை

5 நரைமரணந்தவிர் நல்லுடலெமக்கின்னு
நல்காதிருப்பது-ஞாயமா
நவநிலைகடந்தமே- னடுவெளிதனிலுற
நாடித்துதிப்பதுமஞ்-ஞாயமா. கருணை

6 நினையாநினைவினி- னிலைத்திடவடியோமை
நிறுத்தாதிருப்பது-ஞாயமா
நியமவியமாதி-நிலைமுழுவதுமுறு
நெறியெமக்கருளலஞ்-ஞாயமா. கருணை

7 எமையறியாநல்குர-வெனும்பேரவத்தையின்னு
மேகாதிருப்பது-ஞாயமா
இம்மையிலுறும்வறுமை-யெம்மிடஞ்சேராதவின்ப
வியல்பினையருளலஞ்-ஞாயமா. கருணை

8 பசுவேட்டெரிசெய்யும்-பான்மைநன்குரைத்துமிப்
பாரில்விளங்காததென்-ஞாயமா
பசுமலமங்கியிற்-படைத்தவிபூதியின்
பலனுறவருளலஞ்-ஞாயமா. கருணை

9 ஓங்காரமுதன்முப்பத்-தொருசத்தியனுபவம்
உணர்த்தாதிருப்பது-ஞாயமா
ஒழுக்கநான்குமெமக்-கொருப்படநினைந்தின்றும்
உமைவழிப்படுதலஞ் ஞாயமா. கருணை

10 அணுபரமாணுசம்-பரியவிபுப்ரகிருதி
அடைவறிவிக்காதது-ஞாயமா
அவ்வுமுவ்வுமெட்டிரண் டாகும்யவ்வகைவிரி
வனைத்துந்தெரிவித்தலஞ்-ஞாயமா. கருணை

11 தத்வரூபமுதற் றசகாரியமுறும்
தகைதெரிவிக்காதது-ஞாயமா
தத்வதாத்வீகங்கள்-சாற்றுமெய்ம்மொழிப்பொருள்
தரமெமக்கருளலஞ்-ஞாயமா. கருணை

12 ஷடாந்தசமரச-சன்மார்க்கமெய்ந்நெறி
சாரவருளாததென்-ஞாயமா
சத்துவயகன்றபர-தத்துவசதானந்த
சகசமடைவித்தலஞ்-ஞாயமா. கருணை

13 விந்துநாதம்பர-விந்துமற்றறுநிலை
விளைவருளாததென்-ஞாயமா
வியன்குண்டலியகண்ட-விருசத்திவழிவரும்
வீட்டினையருளலஞ்-ஞாயமா. கருணை

14 பலகலையொருகோடிப்-பகலினில்வருந்திறம்
பாலிக்காதிருப்பது-ஞாயமா
பரவபரமேலுறும்-பகருமனுபவம்
பரிந்தெமக்கருளலஞ்-ஞாயமா. கருணை

15 பொற்பங்கயத்தின்-புதுநறுமெனுங்கவிப்
பொருளறிவிக்காதது ஞாயமா
பூர்வோத்தரமுதற்-புகலும்லட்சியாதீதப்
பொருளெமக்கருளலஞ்-ஞாயமா. கருணை

16 சித்தியின்பொருட்டே-முத்தியடைவதெனுந்
திறமருளாததென்-ஞாயமா
சிற்சபைபொற்சபை-திகழ்வெளியொளியெமைச்
சேரவுளங்கொளலஞ்-ஞாயமா. கருணை

---

## 11 - வெண்பா.

"அங்கிங்கெ னாத"வென்ற வான்றோர்சொல் வண்ணநெஞ்சே
தங்கி வடலிருந்த சற்குருவே—எங்கு
மருபியா யுள்ள வருட்பிர காச
சொரூபனென் றேநிதமுஞ் சொல்.

11 - வது கீர்த்தனை. இராகம் - கேதாரம் - ஏக தாளம்.

கண்ணிகள்.

1 அருட்பிரகாசசொரூபனே-அருளானந்தப்ரதாபனே
அகலாதமெய்த்தீபனே-ஆர்க்குமோரனுதாபனே.

2 பரமகாரணவேதனே-பரமானந்தவிநோதனே
பரிபூர்ணசிற்போதனே-பாபநாசநன்னீதனே.

3 சகலலோகப்ரசித்தனே-சகுணாகாரவரமுத்தனே
சன்மார்க்கமருணித்தனே-சார்வகாலவிரத்தனே.

4 கருணையேவடிவானவா-கரணாதீதநிதானவா
கலையாதியுரைஞானவா-காரணாகரமோனவா.

5 தருணமீதருளையனே-தகராகாசசுகமெய்யனே
தவசீலர்பணிதுய்யனே-தானமோனசிற்கையனே.

6 நவவிலாசவதீதனே-நடுவானாருமபேதனே
நமன்வாதையொழிவாதனே-நாடுவோர்க்கருணாதனே.

7 பவமறும்படிபண்ணவா-பகர்மெய்யன்பரிருகண்ணவா
படியேறும்வகையெண்ணவா-பாவியேமின்பநண்ணவா.

8 இணையிலாவணிதாமனே-யிருமாவேதையறுநேமனே
இதமாருஞ்சிவகாமனே-இராமலிங்கநன்னாமனே.

---

12 - வெண்பா.

உத்தர ஞானசித்தி யோங்குநகரென்று நெஞ்சே
யெத்தரையோரும்வந் திறைஞ்சிடவுஞ்—செத்தவர்வந்
தின்புருவங் கொண்டெழவு மெண்ணியருள் சற்குருவே
யன்புருவா மென்றே யறி.

12-வது கீர்த்தனை. இராகம் - கானடா - திச்ர தாளம்.

பல்லவி.

குருவே-அன்புருவாம் சற்-குருவே

அநுபல்லவி.

மருசேர்பலதீர-மருதூரவதார குருவே

சரணங்கள்.

1 திருவருள்வியாபக-திகழ்தயாரூபக
மருளிருந்தீபக-வடற்சபைஸ்தாபக. குருவே

2 அருமறைக்கண்மணி-அகண்டிதவிண்மணி
திருவளர்தண்மணி-சிவங்கமழுண்மணி. குருவே

3 தீவினையோட்டிடும்-திருவடிகாட்டிடும்
மாவிதியாட்டிடும்-மதியமுதூட்டிடும். குருவே

4 மறைமுடிவிவகார- மறுமலபரிகார
நிறைவுறுமதிகார-நியமமாவுபகார. குருவே

5 யாதெனதெனுமிருள்- இரிந்திடவொருபொருள்
தானிதுவெனுந்தெருள்-தரவெமக்கினிதருள். குருவே

6 கருநாட்டினிற்றுன்னும்-கவிவாழெமக்குன்னும்
பொருணூட்டியமன்னும்-புண்ணியவானென்னும். குருவே

7 ஒழிவினில்வருமங்க-முரைப்பரியவுத்துங்க
எழில்சன்மார்க்கசங்க-மியற்றியராமலிங்க. குருவே

8 மகவருட்புரவாச-மருவுமுத்தமர்நேச
செகம்புகழ்நிறைதேச-திருவருட்பிரகாச. குருவே

---

## 13 - வெண்பா.

எள்ளவரு மெல்லவரு மென்போன்று ருள்ளகத்துங்
கள்ளமிலா ருள்ளூங் களித்துநிறைந்—துள்ள
வொருமையுறுந் தேவனிலு முண்மெய் யடியார்
பெருமையே மிக்கப் பெரிது.

## 13 - வது கீர்த்தனை. இராகம்-சாவேரி-ஆதி தாளம்.

### பல்லவி.

மெய்யடியார்பெருமை-அனந்தானந்தர்க்கும்
விளம்புதற்கே யருமை.

### அநுபல்லவி.

துய்யநனவினிடைச்-சுழுத்தியிலருளுடை
ஜோதியார்தம்பணி-தோய்ந்தவர்பதம்பணி. மெய்

### சரணங்கள்.

1 சரியைமேற் கிரியைபெற்றும்-சகசமார்க்கம்
சார்ந்தநல் யோகமுற்றும்
உரியசுத்தயாக்கையாதியெய்துபொய்
யுலகர்நத்ததீக்கைவேதிசெய்துமெய்
யுறையுமின்பம் யாருந்தேருந்ததிதெரி
புசிதவின்பர் சீரும்பேருந்துதிபுரி. மெய்

2 வானத்தின்மீதுமயிலே-மருவிடவம்
மயிலதுவே குயிலே
ஆனஜோதிநாதமுடிவினுருவரு
மோனமாதியோதவடிவில்வருமொரு
அமலசித்தர்துணைமருமலரடிபணி
அரியமுத்தரிணையருமலர்முடியணி. மெய்

3 சாகாததலைவேகாக்கால்-போகாப்புனல்
சாற்றுமுத்தலையோராக்கால்
ஏகாதபெருவரையெய்தலரிதெனும்
வாகாருமொருவுரைசெய்தகுருவெனும்
எங்கள்ராமலிங்கவள்ளலார்திருத்
துங்கநாமமெங்கும்விள்ளநேர்தரு. மெய்

4 மதியைக்கெடுக்கமதிக்கும்-மதமரணக்
கதியைக்கொடுக்கவிதிக்கும்
சதியைப்போக்குஞ் சமரசசன்மார்க்கநெறி
விதியைநீக்குமமைவுறுநன்மார்க்கமறி
ததியிதென்றவருட்பிரகாசவள்ள
லுதிநவின்றதெருட்புரவாசமுள்ள. மெய்

பாதார்ச்சனைக் கீர்த்தனைகள் முற்றுப்பெற்றது.

திருவருட்பிரகாசவள்ளலார் திருவடியே சரணம்.



சிவமயம்.

அருட்பெருஞ்ஜோதி-தனிப்பெருங்கருணை.

சண்மத சமரசாதீத

# சித்விலாச நாமாவளி.



## முகவுரை.

அநாதி முத்த சித்துருவாகிய பதியொருவனே, அநாதி பெத்தசித்துருவாகிய ஆன்மாக்களின் அநாதி கன்மவேறு பாட்டால், கருணை முன்னிட்டுத் தான்கொண்ட மூர்த்தங்கள் எண்ணிலவாம். அவையாவும் "நவந்தருபேதமாக நாதனே நடிப்ப" னென்ற சித்தியார் வாக்கியத்தின்படி முதல்வனது ஒன்பது பேதத்துளடங்கும். இப்பேதங் காரணமாகக் கர்த்தாவின் அவசர பேதங்களும் பலவாயின. இக்கர்த்தர்க்களைத் தனித்தனி யுபாசனை மூர்த்திகளாகக் கொண்ட சமயங்களும் பலவாயின. அங்ஙனம் பலவான வைதீக சமயங்கள் யாவுஞ் சண்மதத்துளடங்கும். அச்சண்மதத்தினரும், சமயாதீதமாகவிளங்கும் ஒரே தலைவன் அவ்வவ்வமயங்களில் வாய்ந்த அவசரமூர்த்திகளைப் போற்றி வருபவ ராயினமையின், அச்சமயர்கள் யாவருஞ் சமரசிகளேயாயினர் இவ்வுண்மையை நோக்கியன்றோ நமது "தாயுமானசுவாமிகளும்" "சமரசம்வகுத்தநீ" யென்று, "சண்மதஸ்தாபனமு" மென்றுங் கூறிப்போந்தனர். எமதாசிரியர் திருவருட்பிரகாச வள்ளலாரும், "ஒன்பான்வடிவாய்" "சமரசமெய்ந்நெறி" "உருநான்கும்" "விதியாகி" "இரவிமதி" "சமரசசன்மார்க்கம்" "எம்மதநிலையும்" என்ற வருட்பாக்களாற் கட்டளையிட்டிருக்கின்றனர். இவைபோன்ற பரமாப்தர்களது பிரமாணங்கள் எண்ணில. இவையாவும் வேதாகமங்களின் சம்மதமென்பது சர்வப்ரசித்தம். இவ்வுண்மையைக் கடைப்பிடித்தொழுகு மவ்வச்சமய வன்பர்கள் தங்கள் தங்

கள் மூர்த்திகளேயும், அம்மூர்த்திகளின் தாதான்மிய சத்திகளேயும், அன்பின் மிகுதியால் தோத்திரத்துய்யும் பொருட்டு திருவருட்பிர காசவள்ளலாம் எமது சற்குருமூர்த்திகள் அநுக்ஞையைச் சிரமேற் கொண்டு, ஆன்றோர் சற்சாம்பிரதாயத்தி னுடன்பாடாக "சண்மத சமரசாதீத சித்விலாசநாமாவளி" எனவோர் நூலியற்றினன். இந் நூலினிடத்தே சண்மதக்கடவுளர்க ளின்னுரென்பதூஉம், இவர்க ளெல்லாமாயு மல்லவுமாயு நின்றவதீதப்பொருளின்னதென்பதூ உம், சமயாதீதக்கொள்கையினே நுண்மையாயுலகின்கண்ணே தாபி த்துக்காட்டித் தோத்திரம் புரிந்துள்ள வடியார்களிற் சிலரின்னு ரென்பதூஉம் வகுத்துள்ளேன்.

சர்வ சாதாரணமா யாவருந் தோத்திரிப்பதற்குச் சுலபமாய் வகுத்த இந்நாமாவளிக்கு இராகதாளங்களமைதி யுள்ளன வேயா யினும், இராகங்கள் அவ்வக்காலங்களுக்குத் தக்கபடி சங்கீதப் புல மையோர் பாடிக்கொள்ளுந் திறத்தினையுடையராகலிற் பெரும்பா லுங் குறித்திலேன்.

இங்ஙனம்,

ச. மு. க.

சிவமயம்.

# சண்மத சமரசாதீத சித்விலாச

# நாமாவளி.



வெண்பா.

உலகிலுளார் யாவருக்கு முண்மையுரை வேதத்
திலகியலா மூலநிலை யெந்தாய் - பலவகையாஞ்
சற்சமய ருஞ்சுத்த தத்துவசிற் சித்திபெற
நற்சமநா மாவளியை நல்கு.

விருத்தம்.

நமபரதத்த யுண்மைதருஞ் சத்தநட முகக்குநந்தவ
சுத்தபர மாரிடர்க டுணிவிதென வோங்காரத் தொனியாற்சுட்டுஞ்
சத்துவ சிதாநந்த நிருத்தசித்திக் கணபதியுன் றனித்தாட்போற்றிப்
பத்திசெயச் சமரசமாம் பஜனநா மாவளியைப் பாலிப்பாயே.

## பரசிவம்.

வெண்பா.

ஆனந்தத் தாண்டவஞ்செ யம்பலவா வுன்னருளாற்
றானந்த மில்லாத் ததிபெறத்-தானுந்துஞ்
சண்மதத்து மொத்த சமரசா தீதமுறு
முண்மைகொணு மாவளியை யோது.

## திருவருட்பிரகாசவள்ளலார்.

வெண்பா.

நித்தியா நித்தியத்தை நிச்சயித்தா லுட்டோன்று
முத்தியோ கம்பஜனை யுண்மையென்றார் - சித்தர்
இருட்பெரு மாயைதரு மீனந் தவிர்க்கும்
அருட் பிர காசவள்ள லார்.

விருத்தம்.

திருவி ருந்திடு தெய்வத் தாமரை மலர்ச்செய்ய
வுருவி ருந்திடும் பதமல ருவப்பி னென்றலைக்கே
பெருவி ருந்திடு மருட்பிர காசனார்ப் பெருஞ்சீர்
வருவி ருந்திடும் வாயதே வாழிவாழி.

## கணேசர்.

இ - நாட்டை - தா - ஜம்பை.

அங்குச பாச வல்லபை தன்மணாளா
அறுமுகன் முனைவ சத்துவ சிற்குணாளா. 1

இ - ஆரபி - தா - ஆதி.

ஆகுவா கனன்கண பதியிறை மகனே
அம்பிகை தனையன் முக்கண்ணன் கஜமுகனே. 2

சங்கராபரணம்.

ஆலமுண்ட முக்கண்ண னருமகனே
ஞாலமுண்டிடுங் கண்ணன் மருமகனே. 3

தோடி - சாப்பு.

உண்முகவிமுதமா யொளிசெயோம்பிரகாச
மோங்குமெய்யின்பமே யுற்றதிருவுருவா
சண்மதசமரசா தீதசித்விலாசஞ்
சாருநாமாவளி சாற்றும்வகைபுரிவாய். 4

கமாஸ்.

உத்தரஞான சித்திபுரத்தமர் சித்திவிநாயகனே
உத்தரஞானசித்தியெனக்கருள் வித்தகதாயகனே. 5

பரசு - ஆதி.

எவன்முருகனுக்குமுன்னவன்மனமே
அவனுபய சரண நினைதினமே. 6

ஆனந்தபைரவி - ஜம்பை.

எவன்யாவுமுழுதுமுடித் திடுமிறைவன்மனமே
அவன்வேழ முகக்கடவு ளாகநினைதினமே. 7

கல்யாணி - ஆதி.

எவனெவைக்குமுதல்வ னநுதினமே
அவன்றிரு வடிகளை நினைமனமே. 8

சஹாநா - ஜம்பை.

கங்கைசுதனுல்வாயன் கதிர்வேலன்முன்னோன்
தங்குல்பக, லோயாது துதிசீலர்தன்னோன். 9

பியாகடை - சாப்பு.

கஜகர்ணிகா விலம்போ தரனே
கபிலேச சுக்லாம்பர தரனே. 10

பைரவி - ஜம்பை.

கந்தபூர்வஜ தூமகேதுவே நமவே
கணாத்யக்ஷா விக்னராஜாய நமவே. 11

சாவேரி.

காமன் மைத்துன சிந்திதார்த்த சித்தீசா
கருணை தருவாய் கணக்ரீட புத்தீசா. 12

நாதநாமக்ரியை - ரூபகம்.

சித்தரிதய கமலமமர் சித்தி விநாயகனே
சித்தியியல்விரிவகையருள்சித்திபுராதிகனே. 13

செஞ்சுருட்டி.

சித்தருமுத்தரும்பத்தரும்போற்றிடுஞ் சித்திவிநாயகனே
சித்தநிலைத்தொரு பற்றுமிலாதருள் முத்திவிதாயகனே. 14

காப்பி - ஆதி.

சித்திபுத்திமருவுஞ் சொரூபவாதியே
சுத்தபத்தியருளுஞ் சுபாவஜோதியே. 15

காம்போதி - ஜம்பை.

சித்திபுத்தி மருவும்வர சித்தி கணாதிபனே
சித்தமுத்தியெனக்கருளுஞ்சித்திபுராதிபனே. 16

பியாக்.

சித்திபுரத்தமர்கின்ற சித்திவிநாயகனே
சித்திநிலைத்திடவருளு நித்தியதாயகனே. 17

தன்னியாசி - ஆதி.

சித்திவல்லபைமகிழ் சித்திவிநாயக சித்தகணாதிபனே
சித்திவல்லமையுறு சித்தர்பராவிய சித்திபுராதிபனே. 18

கேதாரம்.

சித்திவிநாயக சத்தியனே
சித்திபுராதிப நித்தியனே. 19

தனாசரி.

சித்திவிநாயக சிற்குணனே
சித்திபுராதிப நிர்க்குணனே. 20

பூரிகல்யாணி - சாப்பு.

சித்தி விநாயகர் திருவடி தஞ்சம்
பத்தியுடன்பணி பவர்க்கிலேவஞ்சம். 21

கேதாரகௌளம் - ஆதி.

சித்தி விநாயகர் திருவடியே
சேவிக்குமவர்முடிக்கணிமுடியே. 22

சாரங்கா - சாப்பு.

சித்திவிநாயகர் தோத்திரமே
முத்தியையீகின்ற சாத்திரமே. 23

ஏதுதலகாம்போதி.

சித்திவிநாயகர் பொற்பதமே
சீவர்கள்வாழ்கின்ற நற்பதமே. 24

மோகனம் - ஆதி.

சித்தி விநாயக வள்ளல் நோக்கம்
சேர்வதுசெல்வநிறை வள்ளற்பாக்கம். 25

முகாரி - ஆதி.

சித்திவிநாயகரைப் பாடுவோரே
சித்தியெலாம்பெற நாடுவோரே. 26

ஹம்ஸத்வனி - சாப்பு.

சுமுகாயவக்ரதுண் டாயநமவே
சூர்ப்பகர்ணஹேரம் பாயநமவே. 27

உசேனி - ஆதி.

மகா கணாதிபதி வருவாயே
மரணமிலாதபதி தருவாயே. 28

செங்கலா - சாப்பு.

மஹோதர விக்னவர்த்தன தேவசிங்கமே
மஹோத்கட விக்கமாற்றறி யாகக்ங்கமே. 29

தேசிகதோடி.

மூவிரண்டாதார மூலவனே
மூஷிகவாகன மேலவனே. 30

எமுநாகல்யாணி - ஆதி.

விக்னவிநாயக வேகதந்தனே
விகடகஜாதிப பாலசந்த்ரனே. 31

சுருட்டி.

வேழமுக வைங்கர விக்னகரனே
வெண்பிறைக்கோடவெம்பவஹரனே. 32

---

## சுப்பிரமணியர்.

இ-தர்ப்பார்-ஜம்பை.

அதிபல பராக்ரநவ வீரர்பணி பாதா
அறிவறிபரார்த்தபர ஞானமணிநாதா. 1

சாப்பு.

அதுவிதெனவரியபொருளருளுமொருகுருவே
அடியவர்க ளிதயமதி லமரவரு மருவே. 2

அமராதி பதிதருகுஞ் சரிமோகனா
அகிலமொருநொடியில்வருமயில்வாகனா. 3

அமலஞான விசாக வேதசிரபாதா
அகிலலோகப்ரதாப தேவகுருநாதா. 4

அரியநற்கீரர்திரு முருகாற்றுப்படைக்குவந்
தவரொடாயிரவரின் சிறையைத்தீர்த்தவனே
அவுணர்குலநாசமுற மதிசூடிநுதற்கண்ணி
லாறுபொறியாய்வந்த சரவணோற்பவனே. 5

ஆதி.

அறுமீன்காதல கங்கைசுதனே
அடியார்க்காதர துங்கபதனே. 6

ஜம்பை.

அன்னவயனகமதற முன்னமருள் போதா
என்னதக்மலர்மிசையி னென்றுமொளிர்பாதா. 7

சாப்பு.

ஆண்டலைக்கொடியோன் செவ்வேள்வாகுலேயன்
அற்புதக் குழகன் பாவகி மாகதேயன். 8

ஜம்பை.

கணபதி தனக்கிளைய சுகுமாரதந்த்ரா
கருதுமடியார்க்குறுதி யுறுசீலமந்த்ரா. 9

சாப்பு.

கந்தகாங் கேயவர சத்திகரனே
கார்த்திகேயகுகேச சித்திபுரனே. 10

ரூபகம்.

கருவிகளைந்த வறிஞர்மனதைக் கவர்ந்தசுகுணதரனே
கலைகளறிந்த புலவன்சிறையைக்கடிந்தபுனிதவுரனே. 11

சாப்பு.

கலையுணர்புலவன்சூர்ப் பகைவன்சுரேசன்
கவுரி நந்தன னன்பர்க் கபயகரேசன். 12

ஆதி.

குருபர சரவண பவகுகனே
குறைவறுவரமருளறுமுகனே. 13

சாப்பு.

குறிஞ்சிக் கிழவனருட் கோமானே
குன்றமெறிந்தோன்வள்ளி சீமானே. 14

ரூபகம்.

சரவணபவ சாமிநாத சங்கரசுத சரணமே
சமரசசிவஞானபோத சண்முககுக சரணமே. 15

சாப்பு.

சாமிநாதா தீர வசுரகுலகாலா
சார்வபௌமாவீரவிஜயவடிவேலா 16

ரூபகம்.

சிவகுருவெனவேததேசமொளிர்பரனே
நவநவவடி வாகுஞான கரதரனே. 17

சிவசண் முககுக சின்மயனே
தவவுண்முகர்பணி தன்மயனே. 18

சாப்பு.

சினமிகுந்த சூராதி முனமிகந்த வேலஞான
சிற்குண மோனர் மனோகரனே
தனமிகுந்த மாகமாது வுரமடர்ந்த கானமாது
சார்ந்திடு தோளா குணாகரனே. 19

ஆதி.

சுரபாஸ் கரதிரி புரபவனே
சுகுணாலயதிக மொளிபவனே. 20

சாப்பு.

சேந்தன்சி லம்பன்கிரு பாகரனே
செங்கல்வ ராயன்ஞா னாகரனே. 21

ஆதி.

தணிகா சலபவ மொழிபவனே
பணிவார்கொடுவினை துணிபவனே. 22

ஆதி.

தத்துவச்சுக மேவுறவேயருள் சத்திபராதிபனே
தித்திமிப்புறு மாமயில்வேலவ சித்திபுராதிபனே. 23

சாப்பு.

தாருகனை வென்றவடி வேல்முருகா
தாலமுழு துண்டதிரு மால்மருகா. 24

ஜம்பை.

திரிபுராந் தகபால சுரவந்திதா
தீனஜன பரிபால வரசிந்திதா. 25

சாப்பு.

திருப்பரங் குன்றஞ்செந் தூராவி னன்குடி
திருவேர கஞ்சோலை மலையானே
பருப்பதந் தோறுஞ்சென் றுடனுஞ் செய்திடும்
பரிபூ ரணாநிலை கலையானே. 26

தினகரர் மழுங்கு கலபம தடங்கு
திகழ்ப்ரணவ வொளிமருவு தாளா
திடமலை நொறுங்க வவுணர்க ணடுங்க
செருவில்ஜெய முறுபனிரு தோளா. 27

ஜம்பை.

தெரிவைமுரு காவெனவொர் கரமுதவு தேவனெனுந்
திரிபுரையின் பாலவயி லிலகுகரனே
திருமருவு கூடலுறு சமணர்கழு வேறவுளந்
திகழ்கவுணி யோர்கள்குல திலகபரனே. 28

ஆதி.

தேஜோ மயசிவ தாயகனே
தேவகுஞ்சரிவள்ளி நாயகனே. 29

சாப்பு.

தேவராஜன்வணங்கு விப்ரகண்யனே
பாவநாச கடம்ப சுப்ரமண்யனே. 30

பன்னிருகரசயி லொளிபவனே
பால குமரபரி புரபவனே. 31

சாப்பு.

மரகத மயூரபுவ னேஸ்வரனே
மதிவதன சண்முக ஷடாக்ஷரனே. 32

ய

மலமதறுத்திடு சூரியனே. 33

ஜம்பை.

மறலியை யுதைத்த மகதேவ குருநாதா
மரண சனனக் கொடுமை மாயவருள் தாதா. 34
முன்னைவினை யொழிசெய்துயர் முத்திதரு வோனே
தன்னைநிகர் பரவுணர்வு தன்னிலொளிர் வானே. 35

ஆதி.

வடிவேலா மறைமுடிவா
லுக்தெமையாண்டருளுமைபாலா. 36

## அம்பிகை.

இ - ஆனந்தபைரவி - ஆதி.

அகிலாண்டநாயகி யாரணியே
அம்பிகை நாதனி நாரணியே. 1

அம்பிகை சுந்தரி யபயகரீ
அம்பரி யம்மை யமுதலகரீ. 2

ஜம்பை.

அரியேறி விகடை மங்கலை யமரியே
ஆனந்தி விசயை மாதரி சமரியே. 3

அற்புத விராட்டுருவ வசுர காதகியே
அகண்ட சித்ரூபி சிவஞான போதகியே. 4

அன்னையாதி வராகி யாதார முத்தியே
அம்பணத்தி பவானி பூதார சத்தியே. 5

ரூபகம்.

ஆயி சுலக்ஷணி யாரியை யமுதவல்லியே
ஐம்பத்தோ ரக்ஷரி பரை குமுதவல்லியே. 6

ஆதி.

ஆனந்தபைரவி யானந்தக் கொடியே
அமலசுகி மதங்கி மலர்க்கொடியே. 7

சாப்பு.

ஒண்டொடி க்ருபாகரி யுருத்ரி யோங்காரி
உத்தமி சடாக்கரி யொருத்தி ரீங்காரி. 8

ஜம்பை.

கருணை கடாக்ஷி யுமை யங்கயற் கண்ணியே
கலையூர்தி சூக்ஷி யரவிந்தை முக்கண்ணியே. 9

ஆதி.

கருணை புரிவாய் சிவகாம வல்லித் தாயே
தருணமிதென் முன்முளிற்முழ்ந்தநான்சேயே. 10

காத்யாயனி கருணாகரியே
தாமகோடி சுகுணாகரியே. 11

சாப்பு.

கார்த்திகையரசி கற்பக வல்லியே
கதிப்ராதை மாதினி மலைவல்லியே 12

ஜம்பை

சண்டியீசுவரி த்ரிபுரதகனி சுபகரியே
சர்வஜன பரிபாலி சதுரி தினகரியே. 13

சதாநந்தி த்யாகி சண்பகவல்லியே
தடாதகைச் செல்வி யம்பரவல்லியே. 14

சாப்பு.

சர்வ ரக்ஷகி த்ரியம்பகி ஜனார்த்தனியே
சக்ரபாணி சமர்த்தி மகிடமர்த்தனியே. 15

சவுந்தரி பூரணி சலக்ஷணியே
சாம்பவி காரணி விலக்ஷணியே. 16

சிவகாம வல்லியைப் பாடுங்கள்
சிவசிவ வென்றுகூத் தாடுங்கள். 17

சாப்பு.

சிவசத்தி குலதேவி சிற்சத்தி சீலி
சித்ரூபி கௌமாரி சிவையுக்ரி நீலி. 18

ஆதி.

சுதந்தரி விபுலை துரந்தரியே
சுமங்கலை விமலை நிரந்தரியே. 19

சாப்பு.

செம்மனச்செல்வி யந்தரி சிற்சொரூபி
சிவகாம வல்லி யம்பர மந்த்ர ரூபி. 20

தனுத்ரி மால்சோதரி தபோதகி த்ரிசூலி
தவமடந்தை யகோரி தற்பரை கபாலி. 21

ரூபகம்.

திரிபுரை குண்டலி பைரவி ஜீவ தயாபரியே
திகம்பரி சங்கரி பார்வதி தீன தயாபரியே. 22

சாப்பு.

திருவளர் சிவகாமவல்லி தெய்வமே
ஒருமையொ டுன்னை நாளும் பஜனை செய்வமே. 23

நல்லார்வாழ்சித்தி நகரி லிலக்குமி
நாராயணப் பெருமாள் சோதரியே
கொல்லாநெறிதனை யெல்லாரும் பெற்றுய்யக்
குணமருள் தந்தெனை யாதரியே. 24

ஆதி.

நாத நாயகி நாராயணியே
நார தாதியர் பாராயணி...யே. 25

சாப்பு.

நித்யகல்யாணி காமாட்சி நிர்க்குணியே
நிமலி மாதேவி மீனாட்சி சிற்குணியே. 26

ரூபகம்.

நீலகண்டி வேதமுதல்வி நேமிப் படையாளே
நிர்விகாரி வாமிபுவனை யேமக் கொடையாளே. 27

சாப்பு.

பகவதி சதாநந்தி பாலலோசனியே
பதிதபாவனி குமரி பவவிமோசனியே. 28

பராபரி சிவாயி பரநாத பரம்பரியே
பருப்பதி குகாயி யழியாத வரம்புரியே. 29

பரிபூரணி யகோசரி பராசக்தியே
பரமேசுவரி குகாரணி நிராசத்தியே. 30

ஆதி.

பர்வ தவர்த்தனி பண்கொடியே
பத்மையியற்சபை பெண்கொடியே. 31

சாப்பு.

பாசாங் குசத்தி ப்ரணவத்தி பரமாயி
பவநாசி துர்க்கி கேத்திரதை மகமாயி. 32

பிரியகரை சர்வாணி பெரிய நாயகியே
பிரகாசி யயிராணி யுரிய தாயகியே. 33

ஆதி.

பொற்கொடி கமலை புராதனியே
புங்கவி கௌரி நிராதனியே. 34

சாப்பு.

மலைமங்கை யமலை மரகத வல்லியே
மகதேவி பவஹாரி யிமய வல்லியே. 35

வனிதை புவனாயி சந்திரி மனோன்மணியே
வடிவி யெண்டோளி கந்தினி யருண்மணியே. 36

---

## சிவம்.

ஆதி.

அன்ப ரின்ப மேய வருளை யருளு நடன வமலனே
அதுல வகள வநக வசல வருண கிரண விமலனே. 1

சாப்பு.

அருண்மூர்த்தி நிகேதனன் சூலியனுமையனே
அருணாத னுமாபதிநந்தி சுகோதயனே. 2

அம்மையப்ப னகோர மூர்த்த னனந்த தினகரனே
அட்டமூர்த்த னபார கீர்த்தன மன்னுகுணகரனே. 3

அவிவர்த்தன வைம்முக பவஹரனே
அரிமர்த்தன பாண்டியற் கருளரனே. 4

சாப்பு.

அந்தகாரி கபாலி யழலேந்தி
அழலாடி யோகி மானிடமேந்தி. 5

அந்தணச் சிறுவர்க்கென்றும் பதினாறு கொடுத்தவனே
அம்பலத் துபமன்யர்க்குப் பாலாழி விடுத்தவனே. 6

ரூபகம்.

ஆகமாந்த வாரணாந்த வப்ரமேயனே
அலமண்ட நீலகண்ட வக்ரதேயனே. 7

சாப்பு.

ஆதார வாதேய மணிநீதனே
ஆரூரர் சொன்மாலை யணிபாதனே. 8

ஜம்பை

ஆருயிரைக் கொன்றருந்து மற்பர்தமை யழித்திடுவென்
றரியசித்தி யெனக்களிக்கி லடியரிகழ் வாரோ
ஆனையுரித் தார்புரத்தை யட்டகறை மிடற்றவரென்
றமரர்சித்தர் முனிவர்முத்த ரவர்கள்புக ழாரோ. 9

ஆலமர் கடவுளி றணிந்தோனே
அநந்தா நந்தனர வணிந்தோனே. 10

சாப்பு.

ஆழ்வாரி நஞ்சுண்ட வமரர்கோவே
ஐந்தானனங்கொண்ட வமலதேவே. 11

இன்பவடிவான வேகாந்த விறைவா
இடப வாகன சிதாகாச நிறைவா. 12

உமையவ ளொருபாக விடையவனே
உயர்வற வுயர்நல முடையவனே. 13

உயிர்க்குயி ரான்கறை மிடற்றவனே
உயர்ந்தவர் வெவ்வினை யடற்றவனே. 14

உலக மனைத்தையும் பெற்றிடு முத்தமி
யுடனிட பத்தினில் வருவாயே
உனதருள் பெற்றிடுஞ் சித்தர்கள் முத்தர்க
ளுடனுற வெற்கருள் தருவாயே. 15

உன்னத கடாசல வுரிப்போர்வை யானே
உற்பத்தி திதிநாச முப்பார்வை யானே. 16

ரூபகம்.

ஊனதாது போதமோவ வோதுயோக பூமனே
ஞானதாது மேவுவேத நாதகீத வோமனே. 17

ஐந்துமலமும் வெந்துவிழவோ ரைந்தையருள்செ யழகனே
ஐந்துமொன்று ளமையுநிலையு மளியினருள்செய் குழகனே. 18

ஒழுக்கநிரம்ப மழுக்கையேந்து முரகபூடணா
அழுக்கண்தொலைக்கக் குழக்கணோங்கி யமர்சுகோடணா. 19

கங்காதர சசிசேகர காமபுரவரா
சங்காதரி புரமேவுறு சாமசிரதரா. 20

சாப்பு.

காலகாலன் சுடலையாடி கங்காளன்
கண்ணுதற்றுணுவேறார்ந்த வெண்டோளன். 21

குணரகித விற்பன குபேரமித்திரனே
குருதுரிய நற்பத விநோதசித்திரனே. 22

சந்திரசேகரசதுர சைலவில்லவனே
சர்வகாரணசகுண சர்வவல்லவனே. 23

ஆதி.

சர்வேசுர சமரச சத்தியனே
சர்வாதர சசிதர நித்தியனே. 24

ஜம்பை.

சாமகீத ப்ரபாவ சடமகுட தரனே
சாமகண்ட ப்ரதான சகலகுண வரனே. 25

ஆதி.

சித்தர்பணி தூயா வித்தமருள் வாயா
சித்திபுர நேயா சித்தமிரங் காயா. 26

சாப்பு.

சித்தி புரத்தமர் சிவலோக நாதா
சித்தி கொடுத்தருள் சிவஞான போதா. 27

ரூபகம்.

சிந்தைகொண்டு தொண்டுமண்டு சிங்கதுங்க ரின்பனே
திங்களண்டு கங்கையங்க செங்கணென்று பன்பனே. 28

சாப்பு.

சிவகாம வல்லிமகிழ் சிவலோக நாதா
சிவயோகர் நாடுமெய்யர் சிவஞான போதா. 29

ஆதி.

சிவலோக நாதரை யணைந்தவரே
சிவகாமி யெனும்பே ரிணைந்தவரே. 30

சிவலோக நாதரைக் கண்டவரே
சிவகாமி யெனும்பேர் கொண்டவரே. 31

சிவலோக நாதர்வாழ் திருநகரம்
செல்வர்கள் சூழ்புவிக் கொருசிகரம். 32

சிவலோக நாயகர் பொருந்திடமே
தவயோகர் யாவரும் பெறுந்திடமே. 33

சிற்சபா நாதனைப் பாடுங்கள்
சிவசிவ வென்றுகூத் தாடுங்கள். 34

சாப்பு.

சுத்தருளத்தினி லொத்துளதத்துவ சுந்தரேசனே
நித்தவநித்திய மிற்றெனவுட்கொள நின்றநேசனே. 35

சூலபாணி சுயம்பு ஜோதிமயனே
சூக்மதரி சனமோன ஞானவயனே. 36

ஜம்பை.

தலைமாலை பூண்ட சங்கர சதாசிவனே
தனிமுதல்வ வாதிநடுமுடிவி லாதவனே. 37

சாப்பு.

திரிபுராந்தக த்ரியம்பக திகம்பரனே
திரிசூல வபயவொளிகர சிதம்பரனே. 38

திருநாவுக் கரையர்க்கை யாற்றினிற் கைலாச
தெரிசனங் காண வுகந்தவனே
திருநாவ லூரர்க்கா ரூரினிற் பரவையின்
தெருவினிற் றூது நடந்தவனே. 39

ஆதி.

நந்திகேசுவர நடநாயகனே
நம்பினவர்க் கிலவர தாயகனே. 40

சாப்பு.

நரிபரியாக் கியஞான நடனநாயகனே
நால்வர்க் கருளியமோன நல்கு தாயகனே. 41

ஜம்பை.

நாதாந்த பததுவாத சாந்தநடு நிலையா
நாவரசர் கவிவாய்ந்த பதரசித மலையா. 42

ரூபகம்.

நிர்விகார கங்காதர நீக்கமிலாதவனே
நிர்விகர்ப்ப நிருபாதிக நீக்கமிலாதவனே. 43

சாப்பு.

நிற்சல நிராதார நிரவயவதேஜா
நிஷ்கள நவாதீத நிமலநடராஜா. 44

பசுபதி புராந்தக பரானந்த புரணு
பகவதி மணுளபசு பாசாந்த சரணு. 45

ஆதி

பத்தர் நிறையும்வள்ளற் பாக்கத்தி லுறைவா
நித்திய சிவலோக நிமலவென் னிறைவா. 46

சாப்பு.

பரவெளியன் மூக்கண்ணன் பரவிந்தினொளியன்
பரப்பிரமன் முடிவிலான் பரமுத்த வெளியன். 47

பரோப ரீணன் யகாநலனே
பார்வதி கேள்வன் மகாநலனே. 48

ஆதி.

பாதக மறுமழுக் கரத்தோனே
பதிநிலை யுறுபஞ்சாக் கரத்தோனே. 49

பாம்பா பரணமாகப் பூண்டவனே
பன்றிக்குட்டித் தாயாக வாண்டவனே. 50

பார்வதி புரத்தமர் பரமேசா
பார்வதி புரத்தமர் பவநாசா. 51

சாப்பு.

பிஞ்ஞகன் விடையோன் பிநாகபாணி
பிறைசூடி காமாரி பரசுபாணி. 52

ரூபகம்.

புத்திநெறி யுற்றநிலை பத்திவழி முத்திதரு
புத்தமுத மொத்தவருட் பொன்னம்பல வாணா
சித்திநெறி சத்திபதி யுற்றவழி யொத்தருள்செய்
சிற்பரம நத்துமியற் சிற்றம்பல வாணா. 53

புத்திபத்தி முத்திசித்தி பொருத்துபூரணா
நித்தசுத்த சத்தசித்த நிருத்தகாரணா. 54

புரிசடை யோன்புராரி புண்யமூர்த்தனே
புனிதபிரான் பிறப்பிலான் பரார்த்தனே. 55

ஆதி.

பெருமான் வரன்கரியன் பேயோடாடி
பித்தனக்கன் கிரிசன் கொன்றைசூடி. 56

சாப்பு.

மங்கை பாகன்பூத நாதன்மஹேசன்
வாமதேவன் பாண்டரங்கன் கிரீசன். 57

ஆதி.

மதனதகனன் மாயை வென்றவனே
மதியணிபவன் தூய மன்றவனே. 58

ரூபகம்.

மழுவாளி யுருத்திர வாமபாகனே
மனமாயை யறுத்தவர் ஞானபோகனே. 59

ஜம்பை.

மறக்கருணையு முன்றனுக்குள தா
வழுத்துமறை பொய்யாமோ
மறப்புலையையொ ழிந்தருட்செயலே
வழக்கம்ஆகுதன் மெய்யாமோ. 60

ஜம்பை

மாசொழித்தவரிடங் காசழித்தவனே
மாவசந்தன றுடற்றீ விழித்தவனே. 61

சாப்பு.

மாயையை மிதித்த மணிகண்ட பெம்மானே
மறலியையுதைத்த சசிகண்ட வெம்மானே. 62

ஜம்பை

முச்சுடரன் வியோமன்முய லகன்மீதமர் பாதன்
முத்துச்சிவி கையைக்காழி முதல்வர்க்கருணீதன். 63

வைகையங்கரையில் விளையாடும்பதனே
வாதவூ ரடிகள்மொழி சூடும்பதனே. 64

---

## பிரமன்.

ஆரபி - சாப்பு

அன்னவாகனசதுர் வேதபாராயண
வனுவாதியகிலாண்ட சாயகனே
பின்னவேதனமன மாதிநாலாமுக
பிரமாண்டமகிதாண்டு நாயகனே. 1

ஆதி.

அன்னவூர்தி சன்மத னந்தணனே
அயன்சயம்பு பங்கய னெண்கணனே. 2

உலகெலாம்படைத்திடும் பண்ணவனே
ஓதிம முயர்த்திடும் விண்ணவனே. 3

ஜம்பை.

எனக்குடலை யருளவினியேனுஞ் சலியாதோ
இகத்திற்பரம சுகமதினும் பலியாதோ. 4

ஆதி.

கமலவூர்தி திசை முகபர விபுவே
கருவி லென்னைவிதி யாதருள் பிரபுவே. 5

சரோருகன் குரவன் மலரவனே
சரோஜி பிரமனென மிளிர்பவனே. 6

சித்திபுரத்தொளிர் சதுமுகதேவா
சத்திய தத்துவ வருடர வாவா. 7

நான்முகத் தேவனை நாடுவோரே
நாட்டிற் பிறவாவகை தேடுவோரே. 8

சாப்பு.

பகவனிரணிய கர்ப்ப னரவிந்தனே
பரமேட்டி தமரியன் சதானந்தனே. 9

பாரதி கொழுனன் பிதாமகன் தாதா
பார்தந்த நாதன் விரிஞ்சன் விதாதா. 10

ரூபகம்.

மகர கேதனனையருள் மாதவன்சுத வேதாவே
மலமுறு விதியையருள் மாதவர்பணி தாதாவே. 11

சாப்பு.

மண்பொருத்தந்தை மறையவனே
மாலுந்தி வந்தோ னிறையவனே. 12

ஆதி.

மானத சரசுறை மாதவனே
மாதவ சுதனெனு மாதவனே. 13

வானோர் முதுவன்விதி மான்மகனே
வாணி கேள்வன்வர ஞன்முகனே. 14

விரிஞ்சனை யுன்னித்தவஞ் செய்யுங்கள்
வேண்டிய வரங்கள்பெற் றுய்யுங்கள். 15

வேத ரஞ்சக கலைமகள்பதியே
விமல போத விப்பிரர் நிதியே. 16

## கலைமகள்.

பைரவி - சாப்பு.

அம்போருகிமறை யுரைபொருளே
அன்போடருளெனக் குனதருளே. 1

ஆதி.

அம்போருகியுன தருளான்முடியா
வருஞ்செயலிலையெனத் தெரிந்தோமே
அடியேங்கண்மனப் படியேயருளென்
ருயிரம்வந்தனம் புரிந்தோமே. 2

அருமையு மெளிமையு முனக்குரித்தே
அடியனுக் கருள்புரி பரவுரித்தே. 3

அழியா நிலைபெறுத லுனதருளே
அடையா தவமுறுதல் பெருமருளே. 4

ஜம்பை.

ஆரணப் பாவையுன தடியாருக் கீவார்
ஆசுமுதல் வித்தார கவிவாண ராவார். 5

சாப்பு.

உந்தியி லுதித்த கமலன்மனை யொருத்தியே
உம்பரறி வரியவெண் ணெண்கலை கருத்தியே. 6

ஜம்பை.

உம்பர்வான முதனைய படிகமலையே
உனதருள் பெறுர்க்கு நாவெழுதலிலையே. 7

ரூபகம்.

உரியஞான மூர்த்தியிசை மடந்தையுலக மாதாவே
உனதுகருணையின்றி சிருட்டிசெய்வ தருமைவேதாவே. 8

உரைமகளே யகிலாண்டமும் படைப்பவளே
உனதருளே பெறுவார்வினை துடைப்பவளே. 9

உரைமகளே யெளியவெனக் குறவருளும் வரமே
உனகமலா ரயபர்பதத் துகளணியுந் திரமே. 10

சண்மத சமரசாதீத சித்விலாச நாமாவளி.

ஆதி.

உலகி லெவர்க்குமுன்றன் றிருவடிதஞ்சம்
உனது புகழைத்துதிப் பவர்க்கிலைபஞ்சம். 11

ஜம்பை.

உலகிற்கொலை புலையிலாரோங்கிவா ழுதல்வேண்டும்
ஒருபெரிய வரமுதவெ னுயிர்க்காவியே
உசித சன்மார்க்க நெறியொன்றுமே நிலைபெறுக
உனதருள் செய்திடல்வேண்டு மொருதேவியே. 12

ரூபகம்.

உவண கேதனன் மருமக ளென்னும் பாரதியே
உனது பேரரு ளடைபவர்க் கெங்குஞ் சீரதியே. 13

சாப்பு.

ஓதிம முயர்ந்தோன்றனு வோங்குதேவியே
உன்றனை மறந்தா லிராதென்ற ஞவியே. 14

ஆதி.

கண்டவர் பலவகை புகலாதே
கருணைசெ யெனதுள மகலாதே. 15

ரூபகம்.

கமலாசனத்தி மறைமுடி மேவுபாவாய்
கருணைகரத்தி யறுபது நாலுமீவாய். 16

ஆதி.

கருணை கரியுன தருட்பொருளார்
கவலை வறுமையிடரி னின்மருளார். 17

கலாமயில்வல்லி சரோருகத்தாளே
கவீசுரருள்ளமர் சீரகத்தாளே. 18

சாப்பு.

கலைக்கடலே கனியே நறுந்தேனே
கனவமுதே யனமே மரைமானே. 19

கலைஞானத் தோகையைக் கருத்தில் வைப்பவரே
கைவல்ய பரஞானமிகுத்த மெய்த்தவரே. 20

கலைஞானத்தோகை யருட்குருவே
கலைவாணிதிங்க ளுதற்றிருவே. 21

கலைதெரிந் தவர்புகழ் கலைமுதலாளே
கவிபயின் றிடவருள் சிலைநுதலாளே. 22

சாப்பு.

கலைமங்கை பலருக்குங் காரணியே
கமலந் தனிலிருக்கும் பூரணியே. 23

ஜம்பை.

கலைமுழு துணர்ந்தவர் கருத்திலுறை பாவையே
கருணையுட னென்றனக் கருள்புரிநின் சேவையே. 24

சாப்பு.

கலையெலா முணரவருள் கற்பகத்தருவே
கமல வூர்தியைமருவு சிற்கலைக்குருவே. 25

கலைவிதிக்குந்தவள முளரிமின்னே
கருணை தந்தாளெமக் குரியவன்னே. 26

கற்றவர்க் குன்றனருள் வலிதாகுமே
கல்லாவென் போல்பவர்க் கெளிதாகுமே. 27

ஆதி.

காதக ருறவினி வையாதே
காலனென் னெதிர்வரச் செய்யாதே. 28

ரூபகம்.

காளமேகன் காளிதாசன் கம்பனௌவை வள்ளுவர்முதல்
கணக்கிலாத புலவர்களுக்குங் கருணைசெய்த தறமோ
காமமோகங் கோபதாபங் களவுவஞ்சம் பொய்முதலிய
கடுங்குணம்பல வுங்கொளுமெனைக் கைவிட்டிடுத லறமோ.' 29

ஜம்பை.

குலவு மாத்திகர் வாழக் குணம்பலவும் புரிந்தாய்
கொடிய நாத்திகர்சூழக் குறையெதுவுந் தெரிந்தாய். 30

சத்துவ ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்க
சங்கம்பெறு மவர்தெரிந்து சாற்றுவர்நின் றுதியே
தத்துவ கலாந்தநிலை யொருசற்று மறியாத
தன்மையனென் புகல்வதுவெண் சலசமுறு மதியே. 31

ஆதி.

சரசுவதி வெண்மரை நிறத்தவளே
சருவ ஜனுதர வறத்தவளே. 32

சாப்பு.

செந்திருவே யனமே கிளியே யென்றுந்
தெவிட்டாத தேனே மடப்பிடியே
செல்வமுங் கல்வியு ஞானமு மழியாத
சீர்தரல் வேண்டுந் தவக்கொடியே. 33

ஜம்பை.

தமிழ்க்கொடி கலைமகள் சாவித்ரியே
தண்டாச் சிறப்பினள் காயத்ரியே. 34

ரூபகம்.

துன்மார்க்கர் கொடுங்கோ லினியேனுங் கலங்காதோ
துகளற்றவர் செங்கோ லுல கெங்குந் துலங்காதோ. 35

சாப்பு.

நாம்பிரம மென்பவர்கண் மலைவிலக்கே
நாயடிமை யென்பவர்கண் மலையிலக்கே. 36

நிகிலவுலகும் படைத்தருள் சுகுணமலையே
நினதருளடைந்தவர்க் கெளிமையிட ரிலையே. 37

ஆதி.

நிமலசுகந்த கமலமுறைந்த கலைமாதே
நினதருளின்றி நிலைபெறுவாரிலை நிலமீதே. 38

நபகம்.

பலகலை தேர்ந்தவர்க ளிதய பதுமநறுந் தொடையாளே
பகர்மறை யாகம முடிவெனு முபநிடதப் படையாளே. 39

சாப்பு.

பனுவலாட்டி பிராமி வாணி பாமகளே
பாமுதல்வி சதுர்முகன் மனைவி நாமகளே. 40

பார்தந்த பங்கயன் பரிவுகொள் குயிலே
பழுதற்ற வர்க்குனருள் பாலிக்கு மயிலே. 41

நபகம்.

புலவர்மதி யெநாளு முலவு புதியமதியமே
பொறியின் வழிசெலா தருள்புரி புனிதமதியமே. 42

சாப்பு.

புனிதவிதி யெழுகுவோர்க் கருள லறமே
புலைகொலைசெய் பவர்க்குநீ புரிதல் மறமே. 43

பூங்கமலாசனி யார்பதமே
போற்றிடுவார்பெறு வார்பதமே. 44

பூரவாகினிதூய திருவடியே
புகலுமூவுலகவ ரணிமுடியே. 45

நபகம்.

பெருவாய்மையும் பொறைசீலமும் பெறும்பெரியவர் குருவே
பிரியாதென தகநாவிலு மிருந்தருள் பெருந் திருவே. 46

ஜம்பை.

மலர்க்கரத்தி லேடுமணி வடமுமுடை யாளே
மதத்திரத்தி னுடுமவர் மனதிலடை யாளே. 47

நபகம்.

மறைபயின்ற மலரோங்கிய பெண்தெய்வமே
மனமகிழ்ந்து கருணைபுரிந்தா லுய்வமே 48

ஜம்பை.

மாபாதக ருலகோம்புதல் மரபெனல் கலைமதியோ
மாதேவிநி னருளோர்ந்தவர் மறுகுதல் தலைவிதியோ. 49

சாப்பு.

மெய்ப்பொருளளித்த வாரணப்பாவையே
விற்பனற்கருளுங் காரணப்பூவையே. 50

ஆதி.

வண்டமிழறியா வகைபொறுத்திடுவாய்
வாணெடுங்கண்ணார் மயலறுத்திடுவாய். 51

---

## திருமால்.

இ - கமாஸ். தா - ஆதி.

அமரர்களதிபதி யயர்வறுகனனே
அவமறுசுடரடி தொழுதெழுமனனே. 1

சாப்பு.

அரங்கத்தெம் மானெம்மை யாண்டவனே
அகிலங் காக்குந்தன்மை பூண்டவனே. 2

ஆதி.

அறிதுயி லமர்ந்தவ னெடியவனே
அரிந்தம னடியவர்க் கடியவனே. 3

அனந்தசயன னுந்திபூத்தவனே
அச்சுதனமரரைக் காத்தவனே. 4

அயர்வறுமமரர்க ளதிபதியே
உயர்வற வுயர்நல மதிகதியே. 5

சாப்பு.

அண்டமெங்கு மொரடியதாக வளர்ந்தஸ்ரீஹரி கேசவா
தொண்டரைவரையன்று காத்தருள் துரியமா மலைவாசவா. 6

அடியார்க்குத் தொண்டுசெய் யன்பருள் வாவென்றுள்
 ளன்புடன் வேண்டினேன் ஸ்ரீராமா
படியாத பிள்ளை யானாலும் விடார்பெற்றோர்
 பான்மைநன் றென்பர் பரந்தாமா. 7

அன்பராம் பிரகலாத நார தாதிதாசர்க்
 கன்புடன் வைகுந்த மளித்தோனே
வன்ப னிராவணன் றம்பி சிரஞ்சீவி
 வாழ்வுபெற் றோங்கக் களித்தோனே. 8

ஆழ்வார்கள் பன்னிரு வோர்க்கு மருள்செய்த
 அடிநடு முடிவில்லா ஸ்ரீராமா
வாழ்வார்கள் வாழ்திருக் கோவலூரி னின்ற
 வாமன னெனநவி லோர்நாமா. 9

ஆதி.

இருஷிகேசவ கோவிந்த முராரி
இராகவ பஞ்சவர் தூத நராரி. 10

உயர்நல முடையவ னாரணனே
மயர்வற நலமருள் பூரணனே. 11

உலகளந் தவனுல குண்டவனே
உலைய பூதகிமுலை யுண்டவனே. 12

சாப்பு.

உனையன்றி வேறொரு தெய்வமுண் டென்கின்ற
 உணர்ச்சி யொருநாளு முற்றறியேன்
அனையன்றி சேய்க்கொன்று மாதார விலையெனும்
 அன்ப ரனுபவம் பெற்றறியேன். 13

கரிவரதன் சம்பு கமலக் கண்ணனே
காகுத்தன்சக்ரி கொண்டல் வண்ணனே. 14

கருடகேதன பத்மநாப கடல்வண்ணா
கரியகேசவ சன்மகில மணிவண்ணா. 15

கல்லாத நாயேனுக் கெல்லா நலமுங்
 கருணை செய்வாய் ஸ்ரீமந்நாராயணா
பல்லா யிரங்கோடி தேவர் முனிவர்
 பலரும் புகழ்வேத பாராயணா. 16

காராய வண்ண மணிவண்ண கமலாக்க
காரண விலக்குமி நாரணனே
சீராய பின்னை மனுமன்ன கமலத்தாய்
சேர்தரு லக்ஷண பூரணனே. 17

குவலய குருபஜ கோவிந்த மென்றார்
குணம்பெறுவோ ரன்புகொண்டு நவின்றார். 18

கொலைபுலை யறுக்குஞ் சக்கரத்தோனே
நிலைநெறி யுறுமெட் டக்கரத்தோனே. 19

ஜம்பை.

கொலைபுலைகள் செய்யுமவர் குறைநிறுவுவிபுவே
குவலயம் புரந்திடுசீர் குலவுமுர ரிபுவே. 20

சாப்பு.

கொலைபுலை யொருவிய குணத்தினர் சேர்திருக்
கோவலூர் வாழ்ந்திடுங் குணமலையே
மலைவுறு சமயங்கண் மதங்களென் றிடும்பெறு
மயர்வறச் சூழ்ந்திடு மணிநிலையே. 21

கொல்லா நெறியைக் கொடுக்கக் கரத்தினிற்
கோதண்டந் தாங்கிய கோமானே
எல்லா மிராம மயமென்று நல்லோர்க
ளேத்தும் பெருந்தேவி ஸ்ரீமானே. 22

கோதண்டாக் காங்கயற் கம்மானே
கோதண்டந் தாங்கிய பெம்மானே. 23

ஆதி.

கோதறு முளநிறை கோவிந்தா
குறிகுணங் கடந்தபே ரின்பந்தா. 24

சாப்பு.

கோன்கண்ட குடியாகக் குறிக்கொண்ட வென்றன்னைப் பரமேசா
கோன்கொண்ட குடியாகக் குறிக்கொள்ள வருள்புரி ஜகதீசா. 25

கோன்மறந்தகுடிக் கெல்லாநலமுங்
கொடுக்கப் படாவென்பர் ஸ்ரீராமா
பான்மறந்தறியாத பாலனுக்கவ்விதி
பாலித்த னன்றோ பரந்தாமா. 26

சலசலோசன தராதர சக்ரபாணி
சலசய துழாய்மௌலி சாரங்கபாணி. 27

ஆதி.

சித்தி புரத்தமர் நாரணனே
சித்தியெமக்கருள் பூரணனே. 28

ஸ்ரீமந் நாராயணனைக் கண்டவரே
திருவிலக்குமிபேர் கொண்டவரே. 29

ஸ்ரீமந் நாராயணனை யணைந்தவரே
ஸ்ரீபெருந்தேவியென் றிணைந்தவரே. 30

ஸ்ரீவரத ராஜரை நாடுங்கள்
திருவாய்மொழி ப்ரபந்தம் பாடுங்கள். 31

சாப்பு.

தன்னுயிா மன்னுயிா தனனுடல மனனுடல
தானென்போர் குறைதீர்க்குங் கோவிந்தா
பன்னுங் கொலைபுலை பாதக மாதிகள்
பண்ணுமாபாவர்க் கெட்டாமந்தா. 32

திதிகர்த்தன் சௌரி ஜனார்த்தனனே
திரிவிக்ரமன் வேத கீர்த்தனனே. 33

ஆதி.

திரிவிக்ரமர் சந்நிதி நேர்ந்தவரே
திவ்யமங்களதேகஞ் சேர்ந்தவரே. 34

திருக்கோவ லூரெனுந் திருநகரம்
ஜீவர்கள் வாழ்புவிக் கொருசிகரம். 35

திருநாதன் மாதவன் ஸ்ரீதரனே
தேவகி மைந்தன் தாமோதரனே. 36

சாப்பு.

திருப்பெயரா முன்னிரண் டெழுத்தன் றிச்
சிறுதேவர் நாமந் துதித்திலேன்
கருப்பிற் காலமெச்சிற் கையிற் காகமோட்டாக்
[illegible]ர்கள் கர்மமை மதித்திலேன். 37

திருப்பெருந் தேவி மணாள நினையன்றிச்
சிறுதேவர் தம்மைத் துதித்திலேன்
விருப்பொடு நற்பதி புண்ணியஞ் செய்யாத
வீணர்கள் தம்மை மதித்திலேன். 38

ஆதி.

திருமாலுக் கடிமைசெய் யென்றவரே
தீவினை யாவையும் வென்றவரே. 39

திருக்கோவ லூரனைப் பாடுங்கள்
கருக்கோடு தீருமென் றாடுங்கள். 40

சாப்பு.

தில்லைக் கோவிந்தா வெல்லைக் கோவிந்தா
நெல்லைக் கோவிந்தா வல்லற் றீரந்தாய். 41

தெருணெறியுளருறை திருக்கோவிலூரன்
வெருணெறி யறுதிரி விக்ரம தீரன். 42

நந்தநந்தன் மாயன்கூர்மன் பரசிராமனே
நாரசிங்கன் குண்டலன் பலபத்ர ராமனே. 43

நரவனு பூரண நாரணனே
கரவனு தாரண காரணனே. 44

நாரண காரண பூரணனே
ஆரண பாரண தோரணனே. 45

சாப்பு.

நீலமேகக் கோலங்கொண்டுயிர் நிகழக்கங்கணம் பூண்டவா
மூலமேயென்றோலஞ்செய்கரிமுன்வந்திடர் தொலைத்தாண்டவா.

பாரோங்கும் பெண்ணைத்தென் பாற்றிருக் கோவலூர்
ஏரோங்கும் பண்ணைக்கொண்டேற்றிருக் கோவலூர். 47

ஆதி.

பாமன றுதை பஞ்சாயுதனே
பின்னை கேள்வன் சக்ராயுதனே. 48

பீதாம்பரன் சலபுரதர சீலன்
பிரமர்ணுன் பெருமான் கோபாலன். 49

பூமிகொழுநன் பிறப்பிலி யாதவனே
புருஷோத்தமன் புகழ் சலியாதவனே. 5

சாப்பு.

மச்ச கூர்ம வராக நரசிம்ம வாமன மருவு மூவிதராம கோவிந்தா
அச்சுதாநந்த கோபால ஜனார்த்தன வட்டாக்கர நேத்ர வரவிந்தா.

மணிவண்ண கண்ணன் மகத்தவனே
மதிநல வண்ண மிகுத் தவனே. 5

ஆதி.

மாயா தீதன் மாயவனே
மாயா வகியா காயவனே. 5

சாப்பு.

மாலண்டாப் பரசிவன் மைத்துனனே
மேலண்டாக் கரிசற வைத்தனனே. 54

ஜம்பை.

முண்டகாசனைகேள்வன் முழுதுணர்ந்தவனே
முருக னம்மா னமுதகட லமர்ந்தவனே. 55

ஆதி.

முருகனைப் பெற்றவள் முன்னோனே
கருவினைச் செற்றவர் தன்னோனே. 56

சாப்பு.

மூடமதே பஜ கோவிந்த மன்பாய்
பாடமதேநமக் கோர்துணையென்பாய். 57

ஆதி.

வரதராஜப்பெருமாள் திருவடியே
நரசுரர்முனிவர்க ளணிமுடியே. 58

வரதராஜப்பெருமாள் தோத்திரமே
வாதனையற்றோர்பெறுஞ் சாத்திரமே. 59

வரதராஜர்சந்நிதி கண்டவரே
[illegible] கொண்டவரே. 60

சாப்பு.

வலவன் விபு விண்டு ஸ்ரீவைகுந்த நாதன்
வாசுதேவன் முகுந்த னரவிந்த பாதன். 61

வல்லா ரெல்லாருந் தொழும்பெருந் தேவி
மணாள னென்னையென் றுங் காப்போனே
சொல்லா நெறியையோர் சொல்லால் விளக்கிச்
சொரூப நிலையினிற் சேர்ப்போனே. 62

வள்ளற்பாக்கம் வாழ்ந்திடும்ஸ்ரீ வரதராஜரே
கள்ளமில்லா ருண்ணிறைந்த கரியதேஜரே. 63

வாமன ஹரிமது சூதனனே
வனமாலி யுவண கேதனனே. 64

---

## இலக்குமி.

இ - மனோகரம். தா - சாப்பு.

அறிதுயி லமர்ந்தமுர ஹரிமருவு பாவாய்
அடியரிட மகலாத வரியவர மீவாய். 1

ஆராம மனைபூமி தனதான்ய சந்தான
வங்கஜ பசுரூப வர்த்தனியே
தாராள மனமேவு குணசாந்த ரெஞ்சாத
சம்ப்ர மாதியதான வர்த்தனியே. 2

ரூபகம்.

அகிலவுயிர்கள் வறுமையிருளை யகற்றிடமன்னுங் கதிரே
அரியகினது கருணைசிறிது மடையாதவர்க்கென் சதுரே. 3

அகிலதேவர் வடிவமமரு மானினங்களைக் கொன்றருந்திடும்
அரசர்வாழ்வு முழுவதுங்கெட வருள்தந்திடுவாய் கமலையே
அரியவுன்ற னருளையடையு மன்பர்தமக்குத் தொண்டுபுரியும்
அவர்களசேவை யநுதினம்பெற வாசிதருவாய் விமலையே. 4

அவுணர் கொடுமையுலைத் தருள்செய் தாயே
அடிமை வறுமையொழித் தருள் செய்தாயே. 5

சாப்பு.

இருஷி கேசவனுளத் தமர்கின்ற பாவாய்
எற்பவர்க் கில்லை யென்றுதவ ரமீவாய். 6

ரூபகம்.

இலக்குமியே நினக்கிரக்க மில்லவர்பா னேசமோ
இலக்கணமேயெனத்தெரிக்கிலென்னநின்பான்மோசமோ. 7

சாப்பு.

உரகர்முத லும்பர்பணி யுரிபமணி யிழையே
உனதருள் பெறுருலகி லூறுதனனி பிழையே. 8

ஜம்பை.

உலக ரக்ஷகியுன்ற னருளடைந் தவர்கட்
குலோபமத குணமாதி சதமாகுமோ
உரியபொருட் செல்விபூ தேவி சிதேவியுன
தொருபெருங் கருணைசீர்க் கிதமாகுமோ. 9

ரூபகம்.

உனதருட் பொருளுடையவர் பரமுடையார்
உலகினைச் சதமுடையவ ரிகமிடையார். 10

கருணையிலா மாக்கள்வாழ்தல் கலிசுபாவமோ
கரியமால் தேவியுன்ற னருட்பிரபாவமோ. 11

சாப்பு.

கார்வண்ண னுலகெலாங் காக்கவருள சீதா
கடியபுலை கொலையிலார் கருத்தில்வளர் மாதா. 12

கொல்லா புரத்திலமர் குமுத மாமதியே
கொல்லா தவர்க்கருள்செய் குறைவிலா நிதியே. 13

ஜம்பை.

சிட்டர்மகிழ் நினைப்பூசை செய்கிறே னன்னையே
சித்தமொரு வழியாகத் தெரித்திடாய் பின்னையே. 14

சாப்பு.

சித்திபுரத் தமர்கின்ற சிதேவியே
புத்திநிலைத் திடவருளும் பூதேவியே. 15

சிதேவி நளினி யிந்திரை பின்னை திருவே
செல்வி பொன் கோகனகை மாகனக வுருவே. 16

ஆதி.

ஸ்ரீபெருந் தேவியின் றிருவடியே
தேவர் முனிவாரும் பெறுமுடியே. 17

ஸ்ரீபெருந் தேவியைக் கண்டவரே
திருவரங் கினிற்குடி கொண்டவரே. 18

ஜீவ தயாபரி நினதருளே
சேரலிலார்க்கிலை யுறுபொருளே. 19

சாப்பு.

செங்கமலை வெண்கமலை சேர்ந்தநடுநாடு
சித்திபுர முற்றவர்கள் பெற்றியரு ளீடு. 20

ஆதி.

செய்யா ளரிப்பிரியை யிலக்குமி யிளையாள்
திருமகள் பொருட்செல்வி யருடர விளையாள். 21

சாப்பு.

திருக்கண்ண மங்கைவளர் சிதேவியே
திருக்கெண்ண நீங்கவருள் மாதேவியே. 22

திருமடந்தை யுலகளிக்குஞ் செல்வியெழிற் குயிலே
செழுங்கமலப் பொகுட்டிலா சிருக்குமொரு மயிலே. 23

திருவரத ராஜர்மகிழ் ஸ்ரீபெருந் தேவி
இருவினையு மொருமையுற வினிதருள் சஞ்சீவி. 24

ஜம்பை.

நிகிலஜக ரக்ஷகன் மார்பமர் கமலையே
நினதருளை யின்றிநின் கணவர் தொழிலிலையே. 25

சாப்பு.

பசுங்கழைவில் வேனிலான் றனையீன்ற விந்தாய்
பதம்புகழு மன்பர்பவ வினைதீர்க்கு மெந்தாய். 26

ஜம்பை.

பசுவதைத் திடுவர்பிணி பசியொடலை யாரோ
பதுமையுத் தமமுடையர் பரவினிலை யாரோ. 27

ஆதி.

பவவினை தடுப்பதுன் னருட்பொருளே
பலவுடல் கொடுப்பது மருட்பொருளே. 28

சாப்பு.

பாற்கடலுதித்த பார்க்கவி யமலையே
பதுமைபொறி முண்டகாசனை விமலையே. 29

புகலரிய புகழுடைய புவிவளர் பிராட்டீ
பொன்றலறு பொருளுதவு புனித பெருமாட்டீ. 30

ஆதி.

புலவர் மனமகிழப் பொருடருவாயே
புவியி லெவர்க்குமரு டரவெருவாயே. 31

சாப்பு.

மருவளர் கைலாச மகதேவ னருள்சுப்ர
மண்யருக் கன்புள்ள மாமியம்மையே
கருவிலு மெமைக்காக்குங் காவல னுளமகிழ்
கருணை செய்யுபெருந் தேவியம்மையே. 32

---

## இ ர வி.

இ - காம்போதி - தா - ஆதி.

அண்டயோனி விஜய மார்ந்தவனே
அருக்கன்மாழை யிரத மூர்ந்தவனே. 1

சாப்பு.

அயமா வெயிற் கிரண மாலியினனே
அருண மார்த்தாண்ட விருள்வலி தபனனே. 2

ஆதி.

அலரி யாயிரஞ்சோதி யழலவனே
அனலி ஞாயிறு பானு கதிரவனே. 3

சாப்பு.

ஆதவன் மித்ரன் செங்கதிரோனே
ஆதித்தன் பற்கன் செஞ்சுடரோனே. 4

ஆதி.

உலக விருளகற்று மொளி நிலையே
உனைவணங்குவர்க்கென்றுங் குறைவிலையே. 5

எல்லை பங்கய னேழ்பரியோனே
என்றறி யென்றா மொளியோனே. 6

சண்டன் சவிதா தினமணியே
சான்றோன் கனலி நபோமணியே. 7

சித்திரபானுவைச் சேவை செய்வோமே
சிதையாத தேகம்பெற் றுய்வோமே. 8

சோதி யுதய னொளி சூரியனே
சூரன் பகலுலக காரியனே. 9

பகலோன் பனிப்பகை தினகரனே
பதங்க னெற்பரிதி திவாகரனே. 10

விருச்சிக பாஸ்கர வியன்மணியே
வேண்டு மெனக்கருள் வியன்மணியே. 11

வெய்யோ னிரவி விகர்த்தனனே
விண்மணி தரணி விரோசனனே. 12

---

பொது.

ஆதி.

அகணித மந்திர வாண்டவனே
அதுலித வம்பர தாண்டவனே.

ரூபகம்.

அகர வுகர மகர ப்ரணவ சிகர கர்த்தனே
அகில மறியு மடிய ரிதய தகர நிர்த்தனே. 2

சாப்பு.

அண்டாண்ட பிண்ட வகிலாண்ட பகிரண்ட
வனந்தகோடி சகத்காரணு
பிண்டாண்ட வண்ட பிரமாண்ட சருவாண்டம்
பிறங்குதேக மகத்பூரணு. 3

அந்தரங்க வனந்தமூர்த்தம தானவாதி யனுதியே
அந்திவண்ண சுயம்பிரகாச சமானபோத விபூதியே. 4

ஆதி.

அத்துவிதச் சிவமே - பர - தத்துவ தற்பவமே
நித்திய தத்துவமே - யுயர் - சத்திய சித்துவமே. 5

ஜம்பை.

அம்பராம் பர வபரிமித வகோசரனே
அம்பலம் பரவு பரபத சராசரனே. 6

ஆதி.

அயனரி யரன்றுதி நடத்தோனே
அவரவர் மதம்புக விடத்தோனே. 7

அரனரி ஞானயோக மானநலமே
அறிஞர்கள் தேறுநீத மோனபலமே. 8

சாப்பு.

அறுகோடி சமய்த்து ளானவனே
அவையவை யறியாத தானவனே. 9

ஆதி.

அற்புத சிற்கனமே - சுக - தற்பர விற்பனமே
சற்குண தத்துவமே - பர - சிற்குண சத்துவமே. 10

அற்புத சின்மய வந்தரனே
தற்பர தன்மய தந்திரனே. 11

அற்புத விமல வரோதயனே
அசஞ்சய வசல மகோதயனே. 12

சாப்பு.

அற்புத விராட்டுருவ வமலநாதா
விற்பன விநோதசுக விமலபோதா. 13

ஆனந்த நாடகனே - பர - மானந்த வீடகனே
மோனந்தவாதவனே - யருள் - வாஞென்று மாதவனே. 14

இருமூன்று முறைகொண்ட பொருள்கண்டு போற்றவரு
ளின்ப சிதம்பர நாயகனே
வருமூன்று மிகைவிண்டு துறைகண்டு ளோத்தவருள்
மங்கை யிடம்பெறு தாயகனே. 15

இறங்கி யிறங்கா திருக்கும ஞானநடம
இயற்றிடுஞ் சிவராமமே
உறங்கி யுறங்கா திருக்கும் யோகநிலை
யுஞற்று மரிசிவ நாமமே. 16

உபசாந்த வூர்த்த தாண்டவ நிரதிசயனே
ஓங்கார வுருவ சின்மய நிராமயனே. 17

ரூபகம்.

எண்ணெணேழு கோடிசித்தி யியக்கு மெந்தையே
கண்ணினேழு கோடிசத்தி கலந்த தந்தையே. 18

சாப்பு.

எல்லவரு நல்லவர்க ளென்றுமன மெண்ணவருள்
இன்ப சிதம்பர நாடகனே
வெல்லவரு தொல்லைவினை விண்டவர்கள் கண்டுதொழும்
விந்து பரம்பர வீடகனே. 19

ஒன்ருய்ப் பலவாய் விரிந்தவனே
ஒன்று நிலையிற் றிரிந்தவனே. 20

சாப்பு.

ஓடாத மாயையை நீடாத படிநல
மோவாது ஞற்றிட வருள்வோனே
வாடாத நீர்மையைக் கோடாத படியருள்
வாகா லரற்றிடத் தெருள்வானே. 21

கடையேன் குற்றங் குணங் கொண்டவனே
கவலை விட்டிரு வென விண்டவனே. 22

ரூபகம்.

கண்டமகண்ட மிரண்டுங் கடந்து கலந்த காட்சியே
அண்டமுகந்து திரண்டுங்கிடந்திங் கமர்ந்த சாட்சியே. 23

சாப்பு.

கருணாகர சங்கர நாரா யணனே
பொருணூலுறுடன் மறை பாராயணனே. 24

கற்பனாதீத கருணாம்பர வுலாசா
காலங்கடந்த கருணாகர விலாசா. 25

ஆதி.

காரிய காரண வாதரனே
கருணாகர ஹர சிதரனே. 26

சாப்பு.

காலங் கடந்தவனே - சக - சாலங்க டந்தவனே
கோலஞ் சிறந்தவனே - யருட் - சீலஞ் சிறந்தவனே. 27

கைலாச வைகுந்த கதிவாச தேவா
கருணைதர வடியேன்றன் கண்காண வாவா. 28

ஆதி.

சங்கு சக்ராயுத சூலதரனே
புங்கவி யுமைதிரி சூலிவரனே. 29

சச்சிதாநந்த சலக்ஷணனே
சத்துவானந்த விலக்ஷணனே. 30

சம்பு சாக்ஷாத்கார சர்வமூர்த்தனே
சம்ப வாதீதாக்ர சர்வதீர்த்தனே. 31

சாப்பு.

சர்வ சம்பிரம சத்தியோஜாதனே
சர்வ மங்கள சம்பவாதீதனே. 32

தத்துவ த்ரயங்கடந்த தம்பிரானே
அத்விதத் திரம்புரிந்த வெம்பிரானே. 33

தத்துவ மோன தயாநிதியே
சத்திய ஞான சபாபதியே. 34

சாப்பு.

தன்னிக ரிலாத வானந்த நடனு
தற்புருட வேத வேதாந்த படனு. 35

ஆதி.

தாமோதர சிவ சங்கரனே
தாமோதர பவ சங்கரனே. 36

திருவயிந்திர புர தேவ நாதனே
திரிமூர்த்திசொரூப மானநீதனே. 37

சாப்பு.

தேவர்க ளுயகமே - ஜக - ஜீவர்க ளுயகமே
மூவர்க ளுயகமே - யரு - ளோவறு நாயகமே. 38

ஆதி.

நாராயண சிவ சங்கரனே
நாராயண பவ சங்கரனே. 39

சாப்பு.

நான்செய்தேன் பிறர்செய்தா ரெனும்பேத நீங்கிட
ஞான சிதம்பர வருள்வாயே
ஊன்செய்தே யுறுமென்று வுனேயோதி மேம்பட
வோதி தரும்பரம் பொருணியே. 40

ஆதி.

பத்திகொள் யோகருரை துதியே
பக்குவ கால முறுகதியே. 41

ரூபகம்.

பரமேசுவர பரமார்ப்புத பரமபோகனே
பரமார்த்தனு பரிவேத்திய பரமயோகனே. 42

ஆதி.

மலைகடல் மலர்மிசை வாழு மொருவானே
மயர்வறு நலமதி சூழ வெருவானே. 43

மெய்த்தவர் பாவனைக் கெட்டானே
விளம்பு மக்கரமிரண் டெட்டானே. 44

வாமன கேசவ ஹரிஹரனே
சோம சுகாதித பரிபுரனே. 45

சாப்பு.

வேதாந்த வேத வேத்திய விமலனே
வேதாண்ட விசுவ வியாபக விபுலனே. 46

கணபதி சரவணன் கார்வண்ண னயனரன்
காரண னீசன்முச் சுடராதியே
கருதுறு மிவர்சத்தித் தொகைவகை பேதமுங்
காரிய மாய்த்தோற்று மொருநீதியே. 47

ஆதி.

சிதம்பர முந்திரு வரங்கமே
பதம்பெறு வர்க்கிது வொரங்கமே. 48

பரமபதம் பொன் னம்பலமே
திரமதறிந் தவர்தம் பலமே. 49

சாப்பு.

நீதிமன்றந் திருவரங்கம் நிர்விகாரமே
ஆதிபகவ னரியுமென்ப ரருளகாரமே. 50

ஆதி.

எவனவ னுயர்நல வாரணனே
அவனய னரியரன் காரணனே. 51

எவன்மதி நலமருள் வானவனே
அவன்பதி யடைவன் மீதானவனே. 52

எவனுயர் வுயாவற வினைந்தவனே
அவனிரு பசையறக் களைந்தவனே. 53.

மயர்வறு மாலயன் மாவரனே
மனமலை வறுநிலை சேர்வரனே. 54

மாலய னரர்க்கிறை மேலவனே
மாலயர் வறவருள் மூலவனே. 55

அமரர்கள் துயராறு சுடரடியே
அயனரியரன் கொளுந்திட முடியே. 56

சாப்பு

திருவளர் மார்பன் தேஜோமயனே
திகழ்பர மேசன் சதோதயனே. 57

உமைபாக னிலக்குமி நாயகனே
உயர்ஞான விலக்கண தாயகனே. 58

கரியமாற் கரியவன் காரணனே
உரிய தேஜோமய ஞரணனே. 59

காயாம் பூவண்ணன் காரணனே
காலா காலன் சம்பூரணனே. 60

ஆதி.

ஒன்றே பலவா யானதுவே
நன்றே யறிவார் வானதுவே. 61

சாப்பு.

நீலமேகன் சோதிநாத னெனுமிறையே
காலகாலன் தேவநாத னெனுமறையே. 62

வெண்மைசெம்மை யொன்றென்றுன்னும் வீததிரமே
வெண்மைதன்னி லேந்துண்டென்னும் வேதபரமே. 63

வெண்மை செம்மை வண்ணந்தோற்றும் வேதமொன்றிலே
வேத வுண்மை யாய்ந் தறிந்தோர் நீதமன்றிலே. 64

ஆதி.

அரியரன் சத்திசத்த ஞனவனே
அறிவறி நித்தமுத்த வானவனே. 65

சாப்பு.

[illegible]ம பெண்ணு மலியுமாகா வாதிசத்தியே
அயனு மாலு மரனுமேதா நீதி முத்தியே. 66

ஆதி.

பொதுவினி லுறைபவன் பூரணனே
பொதுசிறப் புரியவன் காரணனே. 67

தீன தயாபரன் றிருவடியே
திரிமூர்த்திகள் சிரம் பெறுமுடியே. 68

சாப்பு.

கொலைபுலை யொழித்தோர் குறையதனைத் தீர்ப்பார்
லைநிலை பழித்தோர் கவலையுறப் பார்ப்பார். 69

நானகப் பட்டே னவர்புறப் பட்டார்
நான்புறப் பட்டே னவரகப் பட்டார். 70

ஆதி.

அவரவர் பாவனை வந்தவரே
தவநிலை சேர்நெறி தந்தவரே. 71

சாப்பு.

பாவனை யிற்பேத மாய்விடுமே
பாவனா தீதத்திற் போய்விடுமே. 72

பாவ பாவாதீத மியனிசமே
ஜீவ வீசாபேதங் குருவசமே. 73

ஆதி.

காரியத்திற் பேதம் னேகவிதமே
காரணத்திற் போதம தேகவிதமே. 74

திரிபுடை.

காரிய காரணாதீதம் பரவசமே
சாரிய விலக்கணங்க ளியல்வசமே. 75

ஆதி.

நாத விந்து கலாதீதம்
சந்திர சுகாதீதம். 76

சாப்பு.

அறிவா ரறிகின்ற வண்ணங்க ளெல்லாம்
ஆகி யிலங்குவ தொன்றே
செறிவா லறிந்து பிறியா திருந்து
சித்திக ளூற்றிட னன்றே. 77

மறை துதிக்கும் பதன் மாதேவ நாதன்
மறையு மறியாப் பதன் மறைஞான போதன். 78

அன்ப ருள்ளந் திருவரங்கா யமரும் பரசிவ ராமமே
ஆதியந்த நடுவிலாத வரிய ஹரிசிவ நாமமே. 79

சிதம்பரத்தே மோன ஞானந் திகழும் பரசிவராமமே
பதம்பெறச் சீரோங்கும்யோகம் பரவும் ஹரிசிவநாமமே.

ரூபகம்.

அரிசிவ யோகஞானங் கொண்டவரே
பரமபத கைலாசங் கண்டவரே. 81

அன்பர்கள் சொற்பொருள் காண்பவரே
அரிசிவ யோகஞானம் பூண்பவரே. 82

உடலுக்கோ ருயிரல திரண்டலவே
உளவறி யார்க்கிது தெளிவலவே. 83

உயர்வுதொட் டுயர்வுமட் டோர்ந்தோரே
உண்மை யுணர்வுளின்பந் தேர்ந்தோரே. 84

அரியுஞ் சிவனுமொன்றென் றோர்ந்தவரே
அரிய வுத்தரஞானந் தேர்ந்தவரே. 85

சாப்பு

காளகண்டன் கேசவன்றன் கருணைசால நேர்ந்தார்
காளஹஸ்தி நாதீர்சதகங் கற்றநல்லோ ரோர்ந்தார். 86

ஆதீ.

எட்டைந் திரண்டிலிரண் டென்ற நாமமே
'சுட்டென் றறிந்தவர்க ணவின்ற ராமமே. 87

சாப்பு.

அன்னை தந்தை நமக்காரென் றுயாரே
அறியுமறிவி லுற்றபேத மோயாரே. 88

ஆதி.

அரியரன் சத்திசிவ மானவிதமே
அநுபவிக ளுணர்ந்த மோனபதமே 89

சாப்பு.

அன்னை தந்தை யொருவரென்றார் நல்லோரே
அரியசத்தி சிவமதென்பார் வல்லோரே. 90

ஆதி

மூவர்க்குங் காரண னெனுமொழியே
மூதறி வோர்சொலும் பெருவழியே. 91

பணிசய னரனென விதித்தவரே
பலகலை யுளவது தெரித்தவரே. 92

தெய்வ மொன்றேயெனுந் திறந் தேர்வார்
திகழ்தேக முறுஞ்சித்தித் திடஞ்சேர்வார். 93

சாப்பு.

வைகுந்த கைலாச மொருவழியென் றுறுவார்
வான்புவியுங் காணுத பெரியகதி பெறுவார். 94

ஆதி.

ஹரிஹர சமரச மறிபவரே
ஆறந்த சமரச முறுபவரே. 95

அகில மதிற்சகள வடிவி லுருரென்
றறைந்திடுஞ் சிலர்தம் மதம் பொய்யே
அவரவர் பாவனைப் படிவரு வாரென்
றடியவர் பெறுஞ்சம் மதம் மெய்யே 96.

தனையறி யார்தந் தலைவனை யறியார்
தரமறியார் சிந்தனை வகை யறியார். 97

அதிநிலை நெறிவழி யொரு கதியே
பதிநிலை யறிபவர் பெரு நிதியே. 98

சாப்பு.

நித்தப் பரம மோனங் கற்றவரே
சுத்த ப்ரணவ ஞானம் பெற்றவரே. 99

ரூபகம்.

புருவ நடுவிற் பொருளை யறியும் புண்ய வான்களே
கருவையொருவுந் திருவையுறையுங் சண்ய வான்களே. 100

உருவ சொரூப சுபாவகமே
உணரார் பெறுவது பாவகமே. 101

ஆதி.

வழிதுறை நிலைநெறி வகை யறியார்
பழியுறை பவநல மதுபறியார். 102

ஆணவ வலிகொண் டறம் புரியார்
ஆவரண மெனுந் திரை பிரியார். 103

சாப்பு.

பொருளுட னுலோபமுறு புருடரைச் சேரார்
புகழரிய நூல்தவிர புகல்வதைப் பாரார். 104

ஆதி.

தாராள முற்றவர்க்குத் தரித்திர மில்லை
ஏராள முற்றநிதி யிசைவதேன் றெல்லை. 105

எங்க ளிராமலிங்க வெழிற் குருவே
நங்க ளுளத்தமரு நலத்திருவே. 106

உத்தரகீதையை யோர்ந்தவரே
உத்தரஞானந் தேர்ந்தவரே. 107

சாப்பு.

மணிவண்ண கண்ணன்றிரு வாய்மலர் நிதியே
மதிநண்ணும் புண்ணியர்பெரு வாழ்வென மதியே. 108

வியாச சிற்சித்தியை விரித்தவரே
தயாரச சற்பத்தி தரித்தவரே. 109

ஆ தி.

அழுதாற் பெறலா மவன்கழ லென்றார்
அறிவாற் பவமே மறுவினை யென்றார். 110

திருவாய் மொழிதிரு வாசகமே
பெருவாய்மை யிதென்றார் தேசகமே. 111

சாப்பு.

குருகூர்ச் சடகோபன் கூறியதே
ஒருகூ றென்றன்புள் ளூறியதே. 112

முகில்வண்ணன் சடரென்று ராழ்வாரே
முதற்பாசுர மறிந்தார் வாழ்வாரே. 113

ஆ தி.

மூவரு மொன்றென்றார் நம்மாழ்வாரே
முதற்பாசுரந் தெரிந்தார் வாழ்வாரே. 114

முத்தொழி லொருவர்க்கென்று ராழ்வாரே
முறையறிந்தோர் நற்கதி சூழ்வாரே. 115

சாப்பு.

ஆதிபகவன் முதற்றேயென்ற வறிஞர்வாசகம்
சோதிசொரூபன் பதத்தேநின்ற சுகுணதேசகம். 116

தெய்வமிகமே லென்று சொற்றவரே
திரிபுர மெரிசெய்த நற்றவரே. 117

ரூபகம்.

சிவத்தைப்பேணிற் றவத்திற் கழகென்
றவத்தைத் தீர்வரே
பவத்தைப்போக்குந் தரத்தி லாக்கும்
பதத்திற் சேர்வரே. 118

ஆதி.

எவையு நீயென்றார் பட்டினத்தாரே
ஈதறிந்தவர் தொண்டர்க் கினத்தாரே. 119

ஆதி.

ஹரிஹர சமரச முறு பஜனம்
அறிவறி வறிபவர் பெறுவசனம். 120

சாப்பு.

சங்கர நாரணனை நாடுவோமே
நங்கள் குறைதீர வன்பாற் பாடுவோமே. 121

சங்கர நாராயண சயம்பு சிவாவெனச்
சந்ததந் துதிப்பவர் தமைப்புகழ் வோமே
சங்கட முறுங்கலி தனிற்றவ மேதெனுஞ்
சஞ்சலக் கசடர்கள் தமையிகழ் வோமே. 122

சாப்பு.

தன்னை யறிவிக்குமவர் தாளிணை நினைப்போம்
பின்னை யறிவிக்குமவர் பேரதை மறப்போம். 123

தன்னையு மாதாரத் தலைவனையுங் காண்போம்
பின்னையும் பிறவாத பெருமையையும் பூண்போம். 124

மயர்வற வெவனல மதியருளினனே
மனநிலை யுறவவ னடிநினை மனனே. 125

அதிபதி யுயர்வற வமர்முழு பதமே
அயர்வறு மொருநிலை பெறநினை நிதமே. 126

எவனுயர் வுடையவ னனுதினமே
அவன்றுய ரறுசுடர் நினைமனமே. 127

எவன்மதி யுயர்நல முழுவினனே
அவன் சுடரடி தொழுதெழு மனனே. 128

ஜெயதேவர் சரித்திரம் பாருங்கள்
தெய்வமொன்றே யெனத்தேருங்கள். 129

சண்மத சமரசாதீத சித்விலாச நாமாவளி

ஸம்பூர்ணம்.

---

சிவமயம்.

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

# உத்தரஞான சிதம்பர நாமாவளி.



ஆதி.

உத்தரஞான சிதம்பர தேவா
உத்தரஞான நலந்தர வாவா 1

உத்தரஞான சிதம்பரநாதா
உற்பவநோயை யொழித்தருணீதா. 2

சாப்பு.

உத்தர நேர்திசை யோனுதி யாதரு ளுத்தரஞான சிதம்பரனே
சத்துவ வாழ்வினர் தானுறு மேதகு சத்தியஞான பரம்பரனே. 3

சாப்பு.

என்று மழியாதசுக நிலைமூன்று மருள்புரிக
வின்ப சிதம்பர நாடகனே
துன்று மறுகோடி மயறனையூன்று பதநிழலுத்
துங்க விதந்தரு வீடகனே. 4

சாப்பு.

சத்துவ குணத்தர்நிறை சித்திபுரநாதா
செத்தவ ரிகத்தில்வர சித்திபுரிநீதா. 5

சித்தி நிலைக்கரசே-பர-முத்தி நிலைக்கரசே
பத்தி நிலைக்கரசே-யியற்-புத்திநெறிக்கரசே. 6

சித்தெலாம் வல்ல சிற்சபை நாதனே
சிற்பரா நந்த தத்துவ போதனே. 7

ஆதி.

சிற்பர தத்துவ சின்மயனே
தற்பர சத்துவ தன்மயனே. 8

ரூபகம்.

சுத்தசத்த வத்தனே துற்றமற்ற முத்தனே
மத்தமுற்ற நித்தனே மத்திநத்து மத்தனே. 9

சுத்தமனத்தைச் சத்தியாக்கித் தொழும்பு கொண்டவா
சித்தரினத்தை யொத்ததாக்கிச் செழும்பு கண்டவா. 10

ஐம்பை.

தற்பத சதாநந்த சர்வசத்தி தரனே
தத்துவ நிராலம்ப சர்வசித்தி புரனே. 11

சாப்பு.

துரியாதீதத் தப்பாவலனே
தெரியாது தெரிகின்ற மேலவனே. 12

நிலன்முதல் விசும்புமாய் நின்றோனே
புலன்பொறி யுணர்விலா மன்றோனே. 13

நிலன்விசும் பிடையுரு வருவோனே
மலமறு மலர்மிசை வருவோனே. 14

சாப்பு.

நிற்சல நிராதார நிரவயவ தேஜா
நிஷ்கள நவாதீத நிமல நடராஜா. 15

பரசிவ சிற்பர பரஹிதனே
பரசுக சிற்பத பரிகதனே. 16

ஐம்பை.

பரதுரிய பவவிமோசன பரம்பரனே
பரவெளியி லொளிபரோதய பராபரனே. 17

பரநாத வேதன வமல பகாதீதா
பசுபாச பாவன நிமல சுகாதீதா. 18

சாப்பு.

பரபூரண பராநந்த பரிமிதாதீதா
பரமபோத வகண்ட பாவனாதீதா. 19

பரமசாந்த மகத்வ பரம நிருத்தனனே
பரமமோக்ஷ பதித்வ பரம சமர்த்தனனே. 20

பரமசேதன பஞ்சகிர்த்திய பரமசத்துவனே
பரபுராதன பதிதபாவன பரமதத்துவனே. 21

பரமானுபவ பரம முத்தாந்தநாதா
பரமானுகுண பரம சித்தாந்தபோதா. 22

திரிபுடை.

பரிபூரண தயாகர பவநாசா
பரகாரண வியாபக பரமேசா. 23

சாப்பு.

பல்லாயிர நாமம் பதித்தவனே
கொல்லாதவர்க் கின்பம் விதித்தவனே. 24

விகாசன விசித்திர விநோத சிற்குணனே
விகோடண விலக்கண விசேட நிர்க்குணனே. 25

ரூபகம்.

வெளியுள்வெளியாய் வெளிமேல் வெளியாய் விளங்குங்காரணு
ஒளியுள் ளொளியா யொளிகு ழொளியா யுளங்கொள் பூரணு. 26

சாப்பு.

ஒளியிலொளியு மொளியில்வெளியு முடைய தன்மையே
உருவிலுருவு முருவிலருவு முரிய நன்மையே. 27

நவநிலந்தரு நயநடம்பெறு நகபதஞ்செறி நடுநிறைந்தியல்
திவநிரைந்திடு திருநலந்திகழ் சிவசிதம்பர சிவசிதம்பர. 28

தத்துவமோன நிறைந்திடுஞ் சத்துவஞான விதம்பெறுஞ்
சத்தியஞான பதந்தருஞ் சத்தியஞான நடந்திகழ்
உத்தமகான நிதந்தொனி யுத்தமயோக நிறைந்திடும்
உத்தரஞான சிதம்பர உத்தரஞான சிதம்பர. 29

பவசங்கட மறநெஞ்சுறு பரமந்திர மெனவிஞ்சுவ
சிவசங்கர சிவசங்கர சிவசங்கர சிவசங்கர. 30

ரூபகம்.

மந்தணபர ரஞ்சிதசுக மங்களகர லிங்கிதகுண
வங்கணநய குஞ்சிதபத வங்கிதநிலை தங்குறுநல
சந்ததமறை யந்தணர்நினை சந்தசுநிறை மந்திரநிலை
சங்கரசிவ சங்கரசிவ சங்கரசிவ சங்கரசிவ. 31

ஆதி.

அருணல முடையது அருணட மிடுவது
அருணிலை யருள்வது அருநெறி தருவது
அருளுற முயல்பவ ரதுதின நினைவது
ஹராஹர ஹராஹர ஹராஹர ஹராஹர. 32.

தெருள்வடி வுடையது தெருணெறி தருவது
தெருணிலை செறிவது தெருணல முறுவது
தெருள்வடி வடையவர் தினமன நினைவது
சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ. 33

சாப்பு.

தொண்டர்கள் பத்தர்கள் முத்தர்கள் சித்தர்கள்
சூழ்வது நால்வகை மந்திரமே
அண்டருங் காணற் கருந்தவ மில்லையேல்
அண்டுவ தின்றெனல் தந்திரமே. 34

மதநோக்கம் பற்றுத மதிகூட்டும் பாங்காக
மடலோங்கும் பார்வதிபுரமே
மடமாற்றுந் தட்டாத மலமோட்டு நீங்காத
வுடலோங்கும் பார்வதிபுரமே. 35

எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண் டுய்வதற்
கியலிடம் ஞான சிதம்பரமே
கட்டுக்கொண் டார்மலப் பற்றுக்கின் றெய்வுறக்
கனிவுசெய் மோன பதந்தருமே. 36

உலகெலாம் அருட்பெருஞ் ஜோதியென் றேத்திடும்
உத்தரஞான சிதம்பரமே
ஒருதெய்வ மேயென் றுலகி லெவருக்கும்
ஒப்பத் தெரிவிக்கு மம்பரமே. 37

[illegible]கள சத்தாகள காத்தாகள பணிவுற்ற
துத்தர ஞான சிதம்பரமே
தத்துவ தாத்வீக வுற்பவ நிலைமுற்றும்
இத்தகை யென்றரு ளும்பரமே. 38

சித்தரு முத்தரும் பத்தரு முற்றிடும் உத்தரஞான சிதம்பரமே
செத்தவர் மீளவு மித்தரை தன்னிலு தித்திடச்செய்வது வுந்திரமே.

ஒன்றுமறு கோடிசம யங்கடொழு திடநின்ற
துத்தரஞான சிதம்பரமே
ஒன்றலவி ரண்டுமல வொன்றிரண் டலவென்னும்
உத்தமஞானந் தருந்திரமே. 40

ஒத்தவறு சுத்தநிலை முடிநடுவின் முடிவிலமர்
உத்தரஞான சிதம்பரமே
உற்றதை மறைக்குமெழு திரைகண்முழு வதுநீக்கும்
உண்மை தெரிவித்த லுந்திரமே. 41

சுத்தவெளி நட்டநடு நித்தவொளி யுற்றிடுவ
துத்தரஞான சிதம்பரமே
முத்திவழி சித்திபெற வத்துநிலை யத்துவித
முற்றியமோன பரம்பரமே. 42

உலகநிலை யாவுமா யலவாகி யொளிர்கின்ற
துத்தரஞான சிதம்பரமே
உவமையுயர் வில்லாத வருளலதொன் றிலையென்னும்
உத்தரஞானந் தருந்திரமே. 43

உரைமனங் கடந்துநின்ற வொருநிலை விளங்குகின்ற
துத்தரஞான சிதம்பரமே
உயிரெனுஞ் சிறந்தமன்ற நிலையென விலங்குமென்ற
உத்தரஞானந் தருந்திரமே. 44

உனதவடிமுதலுபய நிலைவெளிக ளொன்றென்னும்
உத்தரஞான சிதம்பரமே
உடலுயிரின் வகையொளியின் வகைபல தெரிந்தின்பம்
உற்றிடுமோனந் தரும்பரமே. 45

உருவமதி லருவுமரு வதிலுருவு முறவைத்த
துத்தரஞான சிதம்பரமே
ஒருவெளியி லகிலவுலகவைநிறுவு பெருசித்தி
உண்மையறிவிப்ப துந்திரமே. 46

உருவவுரு வருவவரு வோபசனைக்குற்ற
துத்தரஞான சிதம்பரமே
உயிர்களரு ளொளியினதி லேசமென் றறிகின்ற
உண்மைவிளக்குவ துந்திரமே. 47

உரியவறி வாறுமுட லேழும்வினை வழியருளவ
துத்தரஞான சிதம்பரமே
உரையுமறை யாகமபு ராணவிதி ஹாசநிலை
உள்ளதறிவிக்கு மம்பரமே. 8

யுத்தி சுருதி யநுபவ மொத்துள துத்தரஞான சிதம்பரமே
சத்திய சிற்சபையொத்துளவுத்தர தத்துவஞான சிதம்பரமே. 49

சுத்ததலம்பெற வுத்தியை நத்தவ துத்தரஞான சிதம்பரமே
சத்துவ சுத்த சதோதய மங்கள தத்துவஞான சிதம்பரமே. 50

உன்னலுறு முன்னிலை யொழித்தக முகந்தருவ
துத்தரஞான சிதம்பரமே
பின்னமொ டபின்னமு மறத்துரிய மீதிலகு
பெற்றியடைகுவ துந்திரமே. 51

சுத்தமுறு மோனநிலை முற்றுமெளி திற்றருவ
துத்தரஞான சிதம்பரமே
எத்தரையு ளோருமொரு மித்துசுக முற்றிடும
கத்துவசீருந் தருந்திரமே. 52

அத்துவித சித்திநெறி யிற்றெனத் தெரிவிப்ப
துத்தரஞான சிதம்பரமே
தத்துவம தற்றவொரு சுத்தசத் துவநித்த
வித்தகஞானந் தருந்திரமே. 53

ஒளிதோன்ற வெளியாகு முனதுளே பாரென்ற
துத்தரஞான சிதம்பரமே
உரைமூன்று முனமேகுந் திரைபோகுந் தேரென்னும்
உத்தமபோதந் தருந்திரமே. 54

பித்த பால வுன்மத்த நிலைதரும் உத்தரஞான சிதம்பரமே
சித்த ஜால கன்மத்தள வையொழி வித்திடுநேயந் தருந்திரமே. 55

உள்ளதேயுள்ளதென் றுண்மை யுரைதரும்
உத்தரஞான சிதம்பரமே
துள்ளனீத் துன்னிடந் தொன்மைநிலைதரு
சுத்தமெய்ம்மோன பரம்பரமே. 56

உண்மை யுணர்வினி லுண்மை யநுபவம் உத்தரஞான சிதம்பரமே
கண்மை நிறைதவர் கண்டு கதியுறக் காட்டியசாதன முந்திரமே.

முத்தி பத்தியினுற் சித்தியுற் றிடுமென்ப
துத்தரஞான சிதம்பரமே
பத்தி யற்றவர்சேர் பெற்றி பெத்தமதென்னுஞ்
சுத்தியஞேயந் தருந்திரமே. 58

உலகிற்கொலை புலைபுரியுஞ் சமயமறச் செய்கின்ற
துத்தரஞான சிதம்பரமே
உரியசம ரசசுத்த சன்மார்க்க நன்னிலை
யுற்றிடச்செய்வது வுந்திரமே. 59

உலகிலரு ளரசாட்சி யோங்கச்செய் விக்கின்ற
துத்தரஞான சிதம்பரமே
உயிர்நிலையு மருணிலையு மொளிநிலையு மறிகின்ற
உத்தமஞானந் தருந்திரமே. 60

உத்தர ஞான சித்தியு மருளு முத்தர ஞான சிதம்பரமே
உற்பவஞ்சாதல்முற்றுமொழித்தொருமுத்தியைநல்குவதுந்திரமே.

ஒற்றைக் கணத்தினின் முப்பத முந்தரும்
உத்தரஞான சிதம்பரமே
ஒட்டையும் பொன்னையு மொன்றுகக் காண்டலுக்
குற்றநலந்தரலுந்திரமே. 62

உயிரெனக் கருணைகொண் டிதம்புரிகின் றவர்வாழ்வ
துத்தரஞான சிதம்பரமே
உரியவறு பத்துநான் கெழுகோடி சித்திகளும்
உத்தமர்க்கீவது வுந்திரமே. 63

இத்தரையிற் சாகா வித்தையைக் கற்பிப்ப
துத்தரஞான சிதம்பரமே
சுத்தமா மாயை யொழித்தரு ளைப்பெறுஞ்
சத்துவஞானந் தருந்திரமே. 64

உபரச வேதியி னுபயமு மறிவிப்ப
துத்தரஞான சிதம்பரமே
உலகுறு சித்தெலா மொருநொடி யிற்செய்யும்
உளவு தெரித்தலு மம்பரமே. 65

ஒருங்கே செம்பொன்னையும் வெண்பொன்னை யுஞ்செய்வ
துத்தரஞான சிதம்பரமே
வருங்கேத கேவல சகலந் தவிர்த்தின்ப
வாரிதி யாழ்த்துவ துந்திரமே. 66

உருவி லழியா மூவகை யளிக்கும் உத்தரஞான சிதம்பரமே
உறவும் பகையு நன்மையுந் தீமையும் ஒத்த நெறியரு ளுந்திரமே.

ஓதா துணர்ந்திடு முளவை யுணர்த்துவ
துத்தரஞான சிதம்பரமே
ஓவா துணர்ந்திடு நிலையை யளிப்பதற்
குற்றதென்றோர்வது வுந்திரமே. 68

உவமான முவமேயந் தானே தனக்காய
துத்தரஞான சிதம்பரமே
உயர்ந்தோரிழிந்தோரு மொன்றெனத் தோன்றற்
குளவறிவிப்பது வுந்திரமே. 69

எத்தனைக் கற்பங்கண் முற்றினு மழியாத
துத்தரஞான சிதம்பரமே
அத்துவா வாறையு மிற்றெனத் தெரிகின்ற
தத்துவஞானந் தருந்திரமே. 70

ஒத்து நினைத்தவை யத்தனை யுந்தரும்
உத்தரஞான சிதம்பரமே
சத்தினி பாதத் துத்தம ரோடுவாழ்
வித்தலைச் செய்வது வுந்திரமே. 71

உற்றசமயத்தி லுற்ற நலந்தரும்
உத்தரஞான சிதம்பரமே
ஒத்த நிலையத்தை யற்றவ ரன்பெற
வுற்றனர்ந்த பரம்பரமே. 72

உறறது கறறிட வுததமா நததுவ
துத்தரஞான சிதம்பரமே
உற்பவ மற்றிட நற்றவர் பற்றுவ
துத்தரஞான விதம்பரமே. 73

ஜம்பை

வடலூரென நவிலும்பார் வதிபுரஞ்சேர்வார்
வடலூசலென் றனிறயும்பார் வருபவந் தீர்வார். 74

ஆதி.

பார்வதி புரத்தொரு பகலிருந் தவரே
பார்நிதி வெறுத்தவர் பகரருந் தவரே. 75

சாப்பு.

உத்தரஞான சிதம்பரத் துற்றவர்
உற்பவநோயை யிடைந்தவரே
உத்தரஞான மனந்தற்குச் சொற்றிடும்
உத்தரஞான மடைந்தவரே. 76

ஆதி.

வடல்வித் தையினுண் மதியுற் றவரே
வழுவுற் றிடுமைம் மலமற் றவரே. 77

வடலினில் வேண்டிய வகை கற்றவரே
வடுவுறு போக்கொடு வரவற்றவரே. 78

கல்வி கேள்வி வடலினிற் றெரிவார்
கருணை யோடுயிருக் கிதம் புரிவார். 79

வடலில் வசிப்பவ ரிடஞ் சேர்வோம்
மதிவிதி பற்றிய மயல் தீர்வோம். 80

மதிபெரி தென்பர்தம் மலமறுவார்
விதிபெரி தென்பர்வெவ் வினையுறுவார். 81

சாப்பு.

மதிவழி விதியெனல் மாண்போதமே
விதிவழி மதியெனல் வீண்வாதமே. 82

மதியே விதியெனல் மெய்ப்படுமே
விதியே மதியெனல் பொய்ப்படுமே. 83

மதியினால் வருவது விதி பலவே
விதியினால் வருவது மதி யலவே. 84

ஆதி.

மதிநல முடையவ ரிறப்பறுவார்
விதிபல முடையவர் பிறப்புறுவார். 85

விதிப்படிச் செய்வர்மதி வழி விதியே
விலக்கினைச் செய்வர்விதி வழி மதியே. 86

மெய்த்தவப் போலியர்க்கு விதிபலமே
மெய்த்தவச் சிலருக்கு மதிநலமே. 87

காமிய முறுவதுப சாதகமே
காமிய மறுகைசுப சாதகமே. 88

ஔவை மொழிகொண்டவர்க்கு மதிநலமே
அவ்வழி யகன்றவர்க்கு விதிபலமே. 89

மனுமுறை கண்ட வாசகமே
மதிநலங் கொண்ட தேசகமே. 90

உதார முடையவர்க்கு விதி யதமே
உலோப முடையவர்க்கு விதி சதமே. 91

மயர்வற மதிநல மாழ்வாரே
மறலியின் விதிகெட வாழ்வாரே. 92

கொல்லா விரதம் பூண்டவரே
எல்லாருந் தொழும் ஆண்டவரே. 93

வள்ளன் மரபே மாமரபு
மற்றுள வெல்லா மாவிரவு. 94

சாப்பு.

அருட்பெருஞ் சித்த ருண் முறையே
தெருட்பெருஞ் சித்தி தருமறையே. 95

சிறந்தநோன்பது கொன்று தின்னாமை யென்றார்
செறிந்த வானவமாயை யின்னாமை வென்றார். 96

சமரச சன்மார்க்க சத்திய பஜனம்
சகத்தொடர் பிகந்துறை சற்சனர்வசனம். 97

ஆதி.

ஒன்றாகக் காண்பதே பெறுங் காட்சி
அன்றாகக் காண்பதே வெறுஞ் சூட்சி. 98

ஜீவகாருண்ய நூல் பாருங்கள்
பாவகாரியம்விடத் தேருங்கள். 99

சாப்பு.

வேத பாடிய மெல்லா மோருங்கள்
மெய்ம்மார்க்க மொன்றெனத் தேருங்கள். 100

ஆதி.

சன்மார்க்க சங்கமதிற் கூடுங்கள்
சற்குருநாராயணனைப் பாடுங்கள். 101

ஆண்டவ னொருவனென் றாடுங்கள்
அரிசிவ னவனெனப் பாடுங்கள். 102

சமரச பஜனையைச் செய்யுங்கள்
சன்மார்க்க நெறிதனி லுய்யுங்கள். 103

நடுநிலை நின்றவர் பெருமொழியே
நவவெளி நடுவெனு மொருவழியே. 104

வேத மியம்பும் பரிசிதுவே
நாதமும் விந்துந் தெரிவதுவே. 105

சாப்பு.

உற்றவர்க ளெல்லாரு மொத்துவாழ்ந் திடல்வேண்டும்
உத்தரஞான சிதம்பரனே
கற்றவர்கள் கல்லாருங் கண்டுகளி மண்டுமியற்
காரணஞான பரம்பரனே. 106

உற்றவென் குற்றங் குணமாகக் கொண்டருள்
உத்தரஞான சிதம்பரனே
கற்றவர் முற்றுங் கதிநலங் காணற்குக்
கர்த்துருவான பரம்பரனே. 107

நாதமுடி முடியின்மிசை மேவுபரம் பரவமல
நாதநிரந்தர வெளியானே
நாயடிமை சிறுபுன்கவி மாலைபுனைந் தருள்புரியு
ஞானசிதம்பர வொளியானே. 108

ஆதி.

நம்பி யழிந்தவர் நாட்டினி லில்லை
நம்பாதவர் பெறு நலமொன்று மில்லை. 109

ரூபகம்.

ஹரிஹரபத நினையடியா ரடியார் தமதடியே
அறுதினநினைபவரடியா ரடியே மணிமுடியே. 110

ஆதி.

போற்றிநின்முடி போற்றிநின்னடி
போற்றிநின்னடு போற்றியே
போற்றிநின்னிடம் போற்றிநின்வலம்
போற்றிநின்னலம் போற்றியே. 111

ரூபகம்.

நாதபோத வேதனே ஞானமோன நீதனே
வாதநீடு பாதனே வாழ்கவாழ்க நாதனே. 112

உத்தரஞான சிதம்பர நாமாவளி சம்பூர்ணம்.

---

கடவுள் துணை.

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

# ஆளுடைய பிள்ளையார் நாமாவளி.

இராகம் - சங்கராபரணம் - தாளம் - ஆதி.

சத்திய ஞான சம்பந்தா
தண்டமிழ் முத்துறை யின்பந்தா. 1

சண்பைப் பதிவளர் சம்பந்தா
சந்ததமுந் துதி யின்பந் தா. 2

சாப்பு.

திருஞான சம்பந்த தேவாதி தேவா
திகழ்பரம ஞானநிலை தெரிவிக்க வாவா. 3

சீகாழி சம்பந்த தேவாதி தேவா
சித்தமலை யாதவகை செய்விக்க வாவா. 4

சண்பைவளர் திருஞான சம்பந்த நாதா
சன்மார்க்க சங்கந் தழைக்கவருள் தாதா. 5

அடியேங்கள் பவப்பிணி யகற்றச் சீகாழியில்
அவதாரஞ் செய்த சற்குரு நாதா,
ஆதர வுன்றிரு வடியன்றி யறிந்திலோம்
அற்புத மெய்ஞ்ஞான மருள் போதா. 6

திருஞான சம்பந்தர் தேவாரம்
திருஞான சபைவளர் தேவாரம். 7

ஆளுடைய பிள்ளையா ரரிய திருவடியே
அம்பலவ ரருளடையு மடியர் பெறுமுடியே. 8

திருஞான சம்பந்த தேவனையே
தெரிசிக்கத் தீர்ந்திடுந் தீவினையே. 9

மறைஞான சமபநத மகதேவன பாதம்
மறவாது பணிவோர்க்கு வருமே மெய்ப்போதம். 10

திருஞான சம்பந்த தேசிகன் பாதம்
சேவிக்குமவர் பெறுவர் தேவ ப்ரசாதம். 11

நலமருள் சம்பந்த நாதனையே
வலம்வரு வார்க்கறும் வாதனையே. 12

சீகாழிப் பதிமேவுந் திருஞான சம்பந்த
தேசிகர் தேவாரந் தினந் துதிப்போம்
தேனுறும் பூங்கழல் சேவிக்கு மெய்யன்பர்
திருவடித் துகளை யென்சிரம் பதிப்போம். 13

அற்புதத் திருஞான சம்பந்தரே நமக்
காரியராக வறிந்துகொண்டோம்
அருந்தமிழ் வேதப் பனுவலையே நிதம்
அன்புடனோதை வானந்தங் கொண்டோம். 14

ஓதாதுணர்ந்தவர் ஞானசம்பந்தரென்
றுள்ளபடியே யுணரப்பெற்றோம்
ஓங்குஞ்சமரச சுத்தசன்மார்க்கருக்
குள்ளபணிசெய்ய வுள்ளமுற்றோம். 15

திருஞான சம்பந்தர் திருநாமஞ் சொல்வோம்
உருநாமம் பலபேத முறுமாயை வெல்வோம். 16

ஆளுடைய பிள்ளையார் நாமாவளி சம்பூர்ணம்.



கடவுள் துணை.

'அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

# சடகோபர் நாமாவளி.



திரிபுடை.

சத்திய ஞான சடகோபா
தத்துவபத்திப் பிரதாபா. 1

சாப்பு.

உயர்வறவென்றநம் மாழ்வாரே
உணைமறந் தவர்பவ மாழ்வாரே. 2

சத்தியச்சடகோபர் சொற்றமிழ் மறையே
முத்தியைப்பெறுவார்க்கு நித்திய முறையே. 3

சத்தியஞான சடகோபர் மொழியே
தத்துவஞான சமபோத வழியே. 4

ஆதி.

சடகோபர் பாசுரங் கற்றவரே
சடமாறுமா நலம் பெற்றவரே. 5

சாப்பு.

சத்தியச் சடகோபர் சொற்றிடமே
பத்தர்கள் முத்தர்கள் பற்றிடமே. 6

குருகூர்ச் சடகோபர் கோலத்தைக் காண்பார்
வருகூற் றொழித்திடும் வல்லபம் பூண்பார். 7

சடகோபர் பதப்பணி வாய்ந்தவரே
சமமாரும் பதச்சுகந் தோய்ந்தவரே. 8

சத்திய சடகோபர் சந்நிதிசூழ்வார்
நித்திய பரலோக நின்மலவாழ்வார். 9

சடகோபர் நாமாவளி சம்பூர்ணம்.



உ

கடவுள் துணை.

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

# திருவருட்பிரகாசவள்ளலார் நாமாவளி.

இ - சங்கராபரணம் - தா - சாப்பு.

மருதூரவதார மாணிக்கமணியே
மதிசேரௌடத மாமந்திரமணியே. 1

கருணாகர காரணபோதா
தருணாதர தாமரைபாதா. 2

ஆதி.

அருட்பிரகாச வம்பரபோதா
இருட்பவநாச நம்பரநாதா. 3

அலைவறுமொருநிலை யருள்போதா
கொலைபுலையறவரு குருநாதா. 4

சிற்பரகாரண சின்மயகரனே
தற்பரபூரண தன்மயவரனே. 5

சாப்பு.

பரிபூரண சதானந்த பரபோதா
பரகாரண நிஜானந்த புரநாதா. 6

ஆதி.

தீனதயாபர சிற்பரனே
ஞானதிவாகர நற்பரனே. 7

சாப்பு.

பூமிபொருந்தும்பதியிற் பொற்சபைசெய்நாதா
பூவுலகும்பொன்னுலகும் பொற்புறுமெய்ப்போதா. 8

புலைகொலைசெய்வோர் புறவினத்தாரெனப்
புகன்றருளிய சற்குருநாதா
தலையறமாமிது தருணம்விடுமினெனச்
சகந்தனிலுரை தற்பரபோதா. 9.

புறவினத்தார்கட்குப் பசிதவிர்த்திடுமெனப்
புகன்றருளிய சற்குருநாதா
புவியினின்மற்றொரு பண்புரையேல்நண்
புதவேலென்றுரை தருநீதா. 10

புலைகொலைவிடும்வரை புகன்றிடுமறமெனப்
போதிக்கவந்த சற்குருநாதா
தலையறமிதுநம்மாணை யென்றருணிலை
சாதிக்கவந்த சிற்பரபோதா. 11

வன்புலாலுண்கின்ற மனிதரைக்கண்டே
மயங்கினேனென்றருள் குருநாதா
என்பெலாங்கருகிட வுள்ளுடைந்தாற்று
திளைத்தனனென்றருள் தருபோதா. 12

கலியுற்றசிறுதெய்வக் கோயிலைக்கண்டே
கலங்கினேனென்றருள் குருநாதா
பலியுறவாடுக்குடமுதற் சென்றிடப்
பயந்தனனென்ற சிற்பரபோதா. 13

கொல்லாவிரதத்தைக் கொள்ளாரைக்காணிலோர்
புல்லாகத்தள்ளென்ற குருநாதா
நல்லாரைக்கண்டிடி னல்லதெல்லாஞ்செய்ய
வல்லாரென்றெண்ணென்ற வரபோதா. 14

நரைமூப்புமரணமிந் நானிலத்தடையாதார்
நற்குலத்தாரென்ற குருநாதா
புரையுறும் பொன்றலுற்றோர் குலமெல்லாம்
புழுக்குலமென்றருள் தருவேதா. 15

தங்குலந்தங்குலமென்ப தொண்ணூற்று
றங்குலமென்றுரை தருநீதா
எங்குஞ்சுத்தசிவ சன்மார்க்கமொன்றே
இலங்குமென்றருளிய குருநாதா. 16

சாதிசமயச் சழக்கைவிட்டேயருட்
ஜோதியைக்காணென்ற குருநாதா
ஆதியிலுற்ற சமரசசன்மார்க்க
நீதியிதென்றருள்தரு நீதா. 17

பாதிமதிநதி பகர்மழுமான்விட்டிப்
பாரில்வந்தருளிய குருநாதா
ஜோதியொன்றேதெய்வந் தொல்லுலகினிலெங்கும்
நீதிநெறியென்றே யருள்நீதா. 18

ஆதி.

தெருட்பதவாசா இருட்பவநாசா
அருட்பிரகாசா அருட்பிரகாசா. 19

ஜம்பை.

திருவருட்பிரகாச வள்ளனீயே
குருவருட்பிரகாச வுள்ளமீயே. 20

ரூபகம்.

குருவாயுகந்தெனதொருமுடி குலவியமகதேவா
திருவாய்மலர்ந்தருளியபடி தெரிசனைதரவாவா. 21

ஜம்பை.

திருவருட்பிரகாசர் சேவடியைத்தொழுவார்
திரிபுணர்ச்சிவிடா வசேதனரைத் தழுவார். 22

திருவருட்பிரகாசர் திவ்ய திருமுறையே
திருவருட்பெறவோதுந் தெய்வதிருமறையே. 23

ரூபகம்.

திருவருட்பா முறையைத் தினமுந்துதிசெய்வார்
கருவிருட்பா டொழித்துக் கனவம்பலமுய்வார். 24

சாப்பு.

ஒருநிலை யருளுஞ் சீர் வாழியவே
பெருநெறி யுலகெங்குஞ் சூழியவே. 25

திருவருட்பிரகாச வள்ளலார் நாமாவளி சம்பூர்ணம்.

ஆக நாமாவளி 634.

---

நேரிசை வெண்பா.

சற்சமய மாயோங்குஞ் சண்மதமு மப்பாலா
நற்சமர சாதீத நாயகமும் - பொற்சகத்தி
லின்னவகை யென்ற வெமதுகுரு ராமலிங்க
முன்னவன்றாள் வாழ்க முறை.

---

## நாமாவளிகளின் விவரம்.



அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

# கற்பிலாப் பெண்டிர்.

காப்பு வெண்பா.

கற்புங்கற் பில்லாத காரிகையார் தங்குணங்க
ணற்புவியிற் பாட நயந்தருளு—மற்புதமெய்ச்
சித்திமுடிக் குந்திருவார் சித்தருறை சித்திநக
ரத்திமுகத் தோன்றண் ணருள்.

விருத்தம்.

ஆவியாயருதினீன்ற வன்னை தந்தையராற்சொந்தத்
தேவியாயாக்கப்பெற்றுந் திகழ்கொழுநனையேமாற்றிச்
சாவியார்புன்செய்போன்றத் தாயராதியரையெண்ணும்
பாவியாமவளைக்காலன் படுநரகிறுத்துவானே. 1

மணப்பெண்ணுச்செய்தமாமன் மாமியார்தமைவஞ்சித்தே
கணப்பெண்ணுய்முகமலர்ச்சி காட்டிநாயகனைவாட்டிப்
பணப்பெண்ணுப்பலருந்தூற்றப் படுமவள்மலடியாகிப்
பிணப்பெண்ணுயாவளென்று பேசுவார்பெரியோரம்மா. 2

வாய்வாழைப்பழமேபாக்கி மரைமலர்வதனமாக்கிக்
காய்வாகமனதையாக்கிக் கணவனைக்கரவினிற்றன்
சாய்வாக்குங்கொடுஞ்சண்டாளச் சதிகாரிதன்னைத்தக்கோர்
மாய்வாக்கமறலிசற்று மறந்திடானென்பர்மாதோ 3

புண்ணையேகட்டிக்கேள்வன் புணர்ச்சியையுபரியாக்கிக்
கண்ணையேகட்டியாடுங் கருத்தினைக்கரவில்வைக்கும்
பெண்ணையேகட்டிக்கொண்டு பேதையாவதினும்வீதி
மண்ணையேகொட்டிவாயின் மரண்டிடன்மாண்பதாமே. 4

வெண்பா.

மாதா வயிறெரிய வாழா ரொருநாளு
மேதா வியர்புகன்ற மேன்மொழியைச்—சூதாக
வெண்ணுத நாயகனை யேமாற்ற வந்தவளோர்
பெண்ணு நமனுகப் பேசு. 5

பணங்கணவ னுக்கொண்ட பாதகியின் றுட்டக்
குணங்களைய யாவராற் கூடுஞ்—சுணங்கன்
முடக்குவா லீட்ட முடியுமோ வென்பா
ரடக்குமா றுயா தவர். 6

மணமகனைச் சற்று மதியாதாள் மாயக்
கணமகளாங் காதகத்தீங் காட்டின்—பிணமகளா

முன்னுறங்கிப் பின்விழிக்கு மூதேவியா மவள்பேர்
பன்னுசிறு வர்க்காம் பயம். 7

கொழுந்தனூர் நாத்திமார் குற்றமிலா ரேனும்
வழுமொழியே சொல்வதற்கு மாறாள்—பழுதாம்
பணமே கணவனெனும் பாதகிக்குச் சாகாப்
பிணமே யுரிய பெயர். 8

நாயகனல் வார்த்தை நவின்றவுடன் றீமொழிக
ணேயமிலா மற்றாற்று நேர்மையுள்ள—நாயவளைத்
தென்புலத்தான் றாதர்வந்து தீயிருப்புத் தண்டமதை
வன்புறவா யிற்றுறுத்து வார். 9

மணமகனை வைதவடன் வாய்புழுக்க ளாரந்து
நிணமுருகி நாற்றமிக நேர்ந்தே—பிணமயமா
வூரிலுள்ளோர் தூற்ற வுடனே யமதூதர்
காரிருப்பாற் குத்திடுவர் காண். 10

மனத்தால் வதனத்தால் வாக்காற் கரத்தாற்
றனத்தா னயனத்தாற் சாலத்—தனத்தாற்
சிலரைப்பூண் மெய்யுடையாற் றோராக் கரவிற்
பலரை மயக்கிடுவாள் பார். 11

கண்ணுவா ராணுலுங் கையிற்கா யத்திற்குச்
சுண்ணும்பு மீதலிலாள் சோபனத்திற்—கண்ணூர
நீர்விட் டழுவா ணிகழ்கரும காரியத்தி
னேர்வதுவு மேதோ நிசம். 12

கணவன் கடனுற் கலங்கியவக் காலுங்
கணமுங் கவலை கருதாள்—கணவன்
வரவுக்குத் தக்கவகை வாழாது சொத்தைக்
கரவிற் கழிப்பாள் களித்து. 13

கணவன் வசிக்காத காடே நகரங்
கணவன்வா ழுந்தலமே காடாங்—கணவன்
சுற்றம் பகையாந்தன் சொந்தவுற வோர்செய்யுங்
குற்றம் பலவுங் குணம். 14

நெஞ்சகத்திற் சற்று நெகிழ்வில்லாப் பாதகியாம்
வஞ்சகப்ப கட்டியுர்தம் மாயையிலே—துஞ்சத்தன்
னாயகனைச் செய்யு நடைமினுக்கி யாரைவிரை
வாயகற்ற னல்ல மதி. 15

விருத்தம்.

மாமியார்கொழுந்தன்மார்கள் மாமனூர்க்குபசரிக்காத்
தாழ்மியாமனைவிதன்னைக் கலந்துவாழ்தலினுமேலோர்

வேமியாமத்திற்காட்டின் மேவியபிணத்தைக்கூட
லேமிகநன்றென்றக்கே ளிணங்கிடலாகாதென்பார். 16

மைப்படிநயனத்தாளை மணக்கொழுக்கட்டைவேண்ட
வொப்பச்செய்பனிரண்டாறி லுடனெழுபதையுந்தின்பா
ளெப்படித்தின்றுயந்த வெழுபதுமென்றுற்கேள்வ
னிப்படித்தின்றேனென்றவ் விரண்டையுமுட்கொள்வாளே.

வெண்பா.

பெண்ணொருத்தி பேசிற் பெரும்பூமி தானதிரும்
பெண்ணிருவர் பேசில்விழும் பேருடுக்கள்—பெண்மூவர்
பேசி லலைசுவரும் பெண்பலர்தா மேகூடிப்
பேசிலுல கென்னுமோ பின். 18

கணவன் பிணியாற் கரைந்திருக்கும் போது
மணமாய்ப் புசித்தே மகிழ்வாள்—கணவ
னிறக்குஞ் சமயமறிந் தெல்லாம்பூட் டிட்டே
சிறக்கும் படியழுவாள் சேர்ந்து. 19

குணவதியே யிவ்வடியர்க் கோரனந்தா வென்றுற்
பிணமகனே நாணமிலாப் பேயே—குணமாகச்
சொல்லவந்தா யுன்றனக்குஞ் சோறிலைபோ வென்பவளைக்
கொல்லவந்த வேமனெனக் கூறு. 20

நாதனெந் நாளொழிவா னுதனை யென்றுகித
மாதவமே செய்திடுவாள் மாபாவி—தீதவனுக்
கெப்போதுஞ் செய்வோர்க் கிதமேசெய் தன்புளர்க்குத்
தப்போ மிகப்புரிவா டான். 21

கொழுநனே தன்னுடைய குற்றேவற் செய்யப்
பழுதுவரா வண்ணம் பணிப்பாள்—வழுவினனேற்
புற்றுடைப்பங் கொண்டு புடைப்பாள் பலபுருடர்
பற்றுடையாள் வன்சுமையிப் பார்க்கு. 22

உருவிற் பெரியா ளூணவிற் பெரியாள்
மருவுவதிற் செல்கரமே மண்ணிற்—கருவமதிற்
போரினிற் றூற்றுவதிற் பொய்யிற் றலைவியெனும்
பேரினிலெங் குண்டிவள்போற் பெண். 23

தனமுந் தருங்கல்வித் தன்மையுநற் சாந்தத்
தனமுந் தனியழகுஞ் சார்ந்த—கனமுடைய
நாயகனைச் சீறி நலமிலரைக் கைப்பற்று
நாயவளே வீட்டு நமன். 24

பசியா லொருவர்வழிற் பாய்ப்புலிநா யென்னக்
கசியா மனத்தாற் கடுத்தே—வசைசொல்லிக்
காரியுமிழ்ந் தேதுடைப்பக் கட்டைதனைக் காண்பிப்பாள்
பாரிலிவள் வாசமனை பாழ். 25

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை.

# கற்புடைப்பெண்டிர்.

## வெண்பா.

கணவன் வசிக்கின்ற காடே நகரங்
கணவனில் லாநகரங் காடாங்—கணவன்றன்
சொல்லைமறு வாக்கொள்ளுந் தோகையர்வாழ் கின்றவிடத்
தில்லையெனுஞ் சொல்லே யிலை. 1

கணவன்றன் முன்னே கனகப்பூ ணாடை
மணமா யணிவாள் மகிழ்ந்தே—கணவனிலாக்
காலத்திற் றன்னெழிலைக் காட்டா தொடுங்கிநிற்பாள்
ஞாலத்திற் கற்புடையா டான். 2

கணவனே யன்னை கணவனே தந்தை
கணவனே யுண்மைக் கடவுள்—கணவனே
சுற்றமெலா மென்றே சுகமாக்கொண் டுற்றவெலா
மற்றவையாக் கொள்வா ளறிந்து. 3

பின்னு றங்கிப் பிரியமுடன் முன்னெழுந்து
தன்னு றுஞ்செயலைத் தான்புரிந்தே—நன்னாளுந்
தன்னாதன் பாதந் தரிசிப்பாள் பேரொன்றை
யுன்னானன் கெல்லா முறும். 4

செண்பகத்தைப் போன்ற திருமே னியினழகும்
வண்மைபெறு நற்பூ மணவழகும்—பெண்ணணிக்கு
வாய்மதுரச் சொல்லழகு மாதவர்க்குத் தொண்டுசெய்யுந்
தூய்மை யழகுந் துணை. 5

அருமைக் கணவ னணுப்பொருளை யேனும்
பெருமைப் பொருளாகப் பேணி—யொருமையுடன்
போற்றியடி யார்பணிநற் புண்ணியஞ்செய் கற்புடைமை
நாற்றிசையுங் கொள்வார் நயந்து. 6

கணவனறி யாதவொரு காரியமு மில்லை
கணவனறி யாக்கரவுங் காணாள்—கணவன்
விருப்பே யவள்விருப்பாம் வேண்டாமை வேண்டாள்
கருப்பே தவளிருக்குங் கால். 7

கணவன்றன் னாருயிரே கற்புடையாள் சீவன்
கணவ னிறக்குங் கணத்தே—குணவதியின்
சீவனுஞ் சென்றுவிடுந் தேசமெலாங் கொண்டாடுந்
தேவனுமாட் கொள்வான் றெரிந்து. 8

கணவன்றன் காலைக் கழுவியநீ ருண்டு
மணநற்பூ வர்ச்சித்து மற்றுங்—குணமுடனே
செய்தவனுச் சிட்டத்தைச் சிற்றாணுக் குங்கற்பின்
மெய்தவறு ளென்றும் விழைந்து.

கணவன்றன் காலினாற் காட்டும் பணியைக்
குணமாகச் செய்வாள் குறிக்கும்—வணமாக
நிற்பளெதிர் பேசா ணெறியுடைய பெண்ணமுதைக்
கற்பமைய வந்தவளாய்க் காண். 10

தன்புருடன் மெய்ப்பணியைத் தானேசெய் வாளன்றிப்
பின்பொருவர் செய்யப் பிரியமுறு—ளன்புடனே
யெப்போதுந் தன்கொழுந னேர்வடிவைச் சிந்திப்பா
ளொப்போ அருந்ததிதா னோர். 11

தன்னு யகனைவிட்டுத் தானெங்குஞ் செல்லாநா
ணன்னுளா வெண்ணு நலமுடையாள்—பன்னாளும்
பத்தாவி னெண்ணம் பகராமுன் செய்பவளை
யித்தா ரணிவணங்கு மே. 12

உருவிற் றிருவா முழைப்பி லடியாள்
மருவுவதில் வேசி மதியிற்—பெருவமைச்சு
தாயா முபசரிப்பிற் றன்மைபெறுங் கற்புடைமை
யாயாதா ராரறிகு வார். 13

கற்றுமிரான் கேட்டுமிரான் கற்றோர் கழகமுறான்
சற்றுமழ கில்லான் றனமில்லான்—மற்றுமொரு
நற்குணமு மில்லாத நாயகனா னாலுமவன்
சொற்குறியே செய்வாள் சுகம். 14

மணமகன் சென்றுவெளி வந்தவுட னன்பான்
மணநீராற் பாதமலர் மாசக்—கணமே
கழுவி விசிறிக் களைதீரச் செய்தல்
வழுவிற் பதிவிரதை மாண்பு. 15

பசியாற் கலங்கிப் பலர்மனைவந் தானுங்
கசியாரு நன்மனத்தாற் கண்டே—பசியாற்றிக்
கோரிற் பலவுங் குணமாக வேகொடுப்பாள்
பாரிற் பதிவிரதை பண்பு. 16

கணவன் வரவின் கணக்கறிந்தெக் காலுங்
குணவதியாய் நாதன் குறிப்பின்—வணமாகச்
செய்யுங் குடும்பவகை செப்பரிதாங் கற்பதனை
பெய்யுமழை பேசவவள் பேர். 17

ஊரினிற் றோழ னொருவனே யாமென்று
மாருமற்ற தேதார மாமென்றும்—பாரில்

விதிசெய்த வாறொழுகு மெல்லியளை மேலோர்
பதிவிரதை யாகவுரைப் பார். 18

வாய்மையடக் கம்பொறுமை வண்மை யிரக்கமன்பு
தூய்மைநா ணம்பயமுஞ் சொல்லரிய—தாய்விளங்கு
மற்புதகு ணங்களெலா மார்ந்தவளை யெல்லவருங்
கற்புடையா ளென்றுரைப்பர் காண். 19

கட்டிளுற் றன்வயிற்றைக் காத்தலுறு நாயகனைக்
கட்டிளுற் றன்வாயைக் காத்தலுறு—மிட்டமுடன்
புத்திரனை யென்றபடிப் பூவுலகில் வாழ்பவளை
யுத்தமியென் பார்பெரிய ரோர்ந்து. 20

பிடிசோற்றை யுண்ணுப் பிணியாள ரேனும்
படிசோற்றை யுண்பார் பரிந்தே—படிமீதி
லொப்பியிடு வாளாளு ளுத்தமிதன் மென்கரத்தா
லெப்பிணியு மேகிவிடு மே. 21

தன்புருடன் றுன்பமுறிற் றுனுந் துயருறுவா
ளின்புரிலோ தானுமிக வின்புறுவா—ளன்புடையாள்
பாதமே வைத்தவிடம் பாரினல்லோர் சாற்றிடுவா
ரேதமிலா நற்றலமென் றே. 22

விருந்தினரைக் காணில் வியத்த லெழுத
லருந்தயவாற் போற்றி யழைத்த—லிருந்திடவே
நல்லா சனத்திருத்தி நாடியவெல் லாந்தருத
லெல்லாங்கற் புற்று ளியல்பு. 23

விருத்தம்.

கணவன்மாத்திரங்களிக்கக் கனமிகும்வீணை தன்னை
மணவெண்பூச்சத்தியென்ன வாசித்துப்பேதங்தோன்று
வணமுறப்பாடுமந்த மகிமைசேர்மனையாளைப்போற்
குணமுளாளெங்குண்டென்றே கூறுவார்பெரியோர்தாமே.

மாமனார்மாமியார்தன் மணவாளனிவரைச்சாற்று
நேமமாய்ப்பூசைசெய்து நித்தியம்விருந்துமோம்பித்
தாமதமின்றிச்சாந்தத் தகவுடனுபசரிப்பாள்
காமயாத்திரமுரைக்கி னலமெலாம்பெறுவர்மாதோ. 25

கணவனுருரைத்தமுன்சொற் கருத்திற்குப்பின்சொன்மாறுங்
குணமதாயிருந்தபோதுங் குற்றமேகுறித்திடாதவ்
வணமதாய்மனமுவந்து வழுவறச்செய்யுங்கற்பின்
மண்முளாளவளேநல்ல மனையாட்டியாகவாழ்வாள். 26

வெண்பா.

அடியாரைக் கண்டா லவருண்ணு மெண்ணப்
படியாகச் செய்து பரிந்தே—முடியாரத்
தாழ்ந்துமற்றும் வேண்டியவை தந்துதுதி செய்தென்றும
வாழ்ந்திருப்பாள் கற்புடைய மாது. 27

என்றுங் கணவ னெழிலுருவை யன்றியுள்ளத்
தொன்றுங்கொள் ளாத வுயர்நெறியி—னின்று
கதிரவன்போன் றெவ்வுயிருங் காண்பா ளவளைப்
பதிவிரதை யேயென்னும் பார். 28

விருந்தோம்ப லென்றும் விரதமாக் கொண்டும்
விருந்திலா வுண்டி விடமா—மருந்தென்று
மெண்ணியெந் நாளு மெதிர்பார்த் திருப்பதுவே
மண்ணிற் பதிவிரதை மாண்பு. 29

அடியவரே யாண்டவரென் றன்புடனே யெண்ணி
யடியவரைத் தேடி யழைத்திப்—படிமே
லவர்க்குணவே திக்கா வமுதுபுழு வென்றே
தவறிழையாள் கற்புடையாள் தான். 30

தன்பொருளெல் லாமுந் தந்தான் கடவுளென்றே
யன்பொடடி யார்க்கே யனுதினமு—மின்பொடுநன்
னேயமுட னர்ப்பித்த னீதியெனக் கொள்ளுதலே
தேயமதிற் கற்பின் செயல். 31

கண்டால்மெய் யன்பர்களைக் காதலுடன் சென்றவர்தந்
தண்டா மரைப்பாதந் தான்வணங்கிக்—கொண்டார்வந்
தன்னில்லஞ் சேர்த்துத் தனியுபச ரிப்புடைமை
யுன்னிற் பதிவிரதைக் குண்டு. 32

எப்போ தரும்பசியோ டிங்குவரு வாரென்றே
முப்போது பார்த்திருந்து முன்னவரக்—கப்போது
வேண்டுமவை யெல்லாம் விரும்பிச்செய் கின்றவளை
யாண்டுங் கடவுள்விடா ரே. 33

வறுமையினு மன்பர்களை மாறுமலன் பாற்
பொறுமையுடன் தக்கவணம் போற்றிப்—பெறுவிருப்பம்
பொதுவுபச ரித்துமிகப் பூரிக்கின் றுளையெந்தக்
நாளும் கடவுள்விடார் காண். 34

ஏழையர்கள் துன்புற் றிருத்தலைக் கொண்டவர்க
ளேழையெண் ணம வுடனிரங்கிக்—கோழைமனம்
போக்கியவர் வேண்டும் பொருளளித்தல் கற்புடைய
பாக்கியமென் றுன்னப் படும். 35

தக்கார் தகாரென்று சற்றேனுங் கொள்ளாமல்
மிக்காவ லோடு மிகமகிழ்ந்தே—யெக்காலு
நன்மைப் பொதுநோக்காய் நாடியுபசரிக்குந்
தன்மையுளாள் கற்புடையாள் தான். 36

என்றே பவக்கடல்விட் டேறவைப்பார் நங்கடவு
ளென்றே யடியா ரிருக்குமிடஞ்—சென்றேத்திச்
சிந்தித்துச் சேவிக்குஞ் செல்வியரை மண்ணோரும்
வந்திப்பர் வானோரும் வந்து. 37

நோயால் வறுமையினு ணொந்திரப்போர் தங்களைக்கண்
டாயாசங் கொண்டுமிக வாதரிப்பாள்—தாயாருஞ்
செய்யா வுபசரிப்பைச் செய்துமகிழ் கொள்பவளுக்
கெய்யாத வாழ்வுவரு மே. 38

அனமே சிறிதுஞ்செல் லாதவரைக் கண்ணுற்றால்
மனமே யிரங்கி மகிழ்ந்தத்—தினமேதன்
னின்பக் கரத்தினன்ன மேன்றுகொளச் செய்வாள்முன்
துன்பப் பிணிபோந் தொலைந்து. 39

யாவரெது செய்தாலு மென்னுயிருக் கோருயிராந்
தேவர்திருச் செய்கையென்று சிந்தித்துக்—கோவமின்றி
யின்பமுற வெண்ணி யிருப்பவளை யன்பர்களும்
வன்பர்களும் போற்றுதல்செய் வார். 40

முக்கா லரன்பூசை மூதுணர்ந்தோரைப்பணித
லெக்காலுந் தன்கேள்வ னெண்ணம்போற்—றக்கார்
தகார்க்குந் தருவண்ணந் தாரணியிற் செய்வாள்
மகாகற் புடையவளா வாள். 41

ஏழைகளைக் காணி லிறுமாப்பி லாதவர்க
ளேழைமினை யாம லுதவுவாள்—கோழைமனங்
கொள்ளலின்றிச் செய்யுங் குணவதிக்கி ராமலிங்க
வள்ளலருள் செய்வார் மகிழ்ந்து. 42

திருவருட்பிரகாசவள்ளலார் திருவடிகளேசரணம்.